*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# பதினொன்றாந் திருமுறை

**( முதல் தொகுதி )**


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

நிறுவன வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

**கற்பகம் பல்கலைக்கழகம்**

ஈச்சநாரி, கோவை - 21

# நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **பதினொன்றாந் திருமுறை (முதல் தொகுதி)** |
| ஆசிரியர் | : | **திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவ நாயனார் என்ற ஐவர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் – **16** நூல்களை உள்ளடக்கியது |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **51** |
| முதற்பதிப்பு | : | **2016** டிசம்பர் |
| பக்கங்கள் | : | 680 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | டெமி 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>அலைபேசி : 98431 74238 |




# பதினொன்றாந் திருமுறை (முதல் தொகுதி)

## பொருளடக்கம்

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# பதினொன்றாந் திருமுறை (முதல் தொகுதி)

## வழிபாட்டுக் கருத்தரங்கம்

## (24.12.2016, 25.12.2016 சனி, ஞாயிறு)

இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான்; தோற்றி
இறைவனே ஈண்டிறக்கஞ் செய்வான்; இறைவனே
"எந்தாய்" என இரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அது மாற்றுவான். **– காரைக்காலம்மையார்**

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள் (10)

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) சிவபெருமானைத் தவிர மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்.

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

சிந்தனை செய்ய மனமமைத்தேன்; செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத்தேன்; கை தொழவமைத்தேன்;

பந்தனை செய்வதற் கன்பமைத்தேன்; மெய் அரும்ப வைத்தேன்;
வெந்தவெண் ணீறணி ஈசற் கிவையான் விதித்தனவே.

– சேரமான் பெருமாள் நாயனார்

அன்புடையீர், வணக்கம்.

பத்தாம் திருமுறை நூலின் மூன்றாவது தொகுதி வெளியீடு மற்றும் இரண்டு நாள் கருத்தரங்கை நிறைவு செய்துவிட்டு முதுமுனைவர் ந.இரா. சென்னியப்பனாருடன் அரங்கை விட்டு வெளியேறிப் பல்கலைக்கழக வளாகத்தில் 23.08.2016 அன்று நடந்து வந்து கொண்டிருந்தபோது மாலை 6.00 மணிக்கு மரக்கிளைகளில் தஞ்சம் அடைந்த பறவைகளின் ஆரவார இரைச்சல் மிக அதிகமாக இருந்தது. பலரும் அவ்வோசைகளை இரசித்தார்கள். எல்லா நேரங்களிலும் எல்லா இடங்களிலும் கிடைக்காத பேரின்பமாக அது இருந்தது. "எதுவும் பேசாமல் ஓய்வெடுக்க வேண்டிய அவை, அதைச் செய்யாமல் ஏன் இரைச்சலை எழுப்புகின்றன?" என்று அவரிடம் கேட்டேன். நாள் முழுவதும் பல பறவைகளும் பல திசைகளில் சென்று இரை தேடிவிட்டு, நீர் அருந்திவிட்டு இரவு தமது கூடுகளுக்குத் திரும்புகின்றன. அப்போது "தானும் தன் தையலும் என்பதுபோல" தத்தம் உறவுகள் எல்லாம் வந்து சேர்ந்துவிட்டனவா? எல்லாம் சரியாக உள்ளதா? சற்று நேரத்தில் முழு இருளும் வந்தபின் ஒலிகளையெல்லாம் அடக்கிவிட்டு உறங்கப் போகலாமா? என்று ஒன்றுக்கொன்று கேட்பது போல உள்ளது. அது ஆயிரக்கணக்கான எண்ணிக்கையில் இருப்பதால்தான் அவ்வளவு இரைச்சலாக உள்ளது. அதற்குமேல் அவை பேசும் மொழிகளுக்குப் பொருள் கண்டுபிடிக்குமளவுக்கு நம்மில் "கழறிற்றறிவார் யாருமில்லை" என்று சொன்னார்.

### யார் இந்த "கழறிற்றறிவார்"?

கழறுதல் என்றால் பேசுதல், சொல்லுதல் என்று தமிழ்ப் பேரகராதி கூறுகிறது. ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக உள்ள அனைத்து உயிர்களும் பேசும் மொழிகளுக்குப் பொருள் புரியும் பேராற்றலைச் சிவபெருமான் ஓர் உயிருக்குக் கொடுக்கிறார் என்றால், அந்த உயிர் எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்? அந்த உயிருக்கு எப்படிப்பட்ட மூளையைச் சங்கற்ப மாத்திரையிலே அமைத்திருக்க வேண்டும்? தாய்மொழி உட்பட ஓரிரு மொழிகளைத் தவிர பிற மொழிகளைப் படித்துத் தெரிந்து ஆறறிவு பெற்ற மானுட வர்க்கத்துடன் பேசி உறவாடவே கடினமாக உள்ளது. தலைநகர் டெல்லி போன்ற வடதேச ஊர்களுக்குச் சென்று இந்தி மொழி தெரியாமல் எவ்வளவு இடர்ப்படுகிறோம்? சிவாசாரியார்களின் வடமொழிப் பிரயோகங்களுக்குப் பொருள் தெரியாமல் படும் இன்னல்களுக்கு அளவுண்டா? ஆறறிவு உள்ள மானுடன் பேசும் மொழிகளே ஆயிரக்கணக்கில் உள்ளன என்று சொல்கிறார்கள். அதே தெரியாதபோது ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்று வினைவயத்தால் அறிவு பெற்றுப் பிறந்த உயிர்கள் பேசும் மொழிகள் எல்லாம் புரியும்படி ஒரு மானுடன் கலியுகத்தில் வாழ்ந்து அடியாராகிச் சிவபதம் பெற்றுள்ளார். இது மிகப்பெரிய வியப்பல்லவா? செயற்கரிய செயல் அல்லவா? இதைவிட ஆச்சரியம்! அற்புதம்! வேறெதுவும் உண்டா? இதற்கெல்லாம் பரிசு கொடுக்கமுடியுமா? அவர்தான் ஏற்பாரா? வீடுபேற்றை விடச் சிறந்த

பரிசொன்றுண்டா ? அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரும், சேரநாட்டின் முடியுடை வேந்தரும், பதினொராந் திருமுறையின் மூன்று நூல்களுக்கு ஆசிரியரும், குதிரையேறி ஐந்தெழுத்தோதி கயிலை சென்றவரும், நித்யபூசை செய்து நாளும் பாதச்சிலம்பொலி கேட்டவருமான சேரமான் பெருமாள் எனப்படும் பெருமாக் கோதையாரே கழறிற்றறிவார் ஆவார்.

### அவர் யுக புருடர்

இக் கலியுகத்தில் இது வரை ஐன்ஸ்டீன் என்ற விஞ்ஞானி ஒருவர்தான் தம் மூளையின் 5 விழுக்காட்டை மிக அதிகமாக உபயோகித்திருக்கிறார் என்றும், மற்ற நாமெல்லாம் (ஆயிரம் கோடிக்கணக்கான மக்கள்) இதுவரை அந்த அளவுகூட உபயோகிக்கவில்லை என்றும் ஒரு புள்ளி விவரம் கூறுகிறது. இது எப்பேர்ப்பட்ட பேராற்றல் ? அதற்கு மேம்பட்ட பேரறிவு – பேரருளானாக விளங்கிய கழறிற்றறிவாராம், பேருயிர் அப்பேற்றினைத் திருப்பணிக்குப் பயன்படுத்தித் தமிழ்ச்சைவனாக வாழ்ந்து குருஇலிங்க சங்கம வழிபாடுகளை முறையாகச் செய்து, நமக்கெல்லாம் வழிகாட்டியாக வாழ்ந்து, இப்பூதவுடலோடே கயிலாயம் சென்று நம்மவரில் யாரும் செய்ய முடியுமா ? என்று கனவிலும் கூட நினைக்கமுடியாத அளவில் தமிழைக் கயிலைத் தாழ்வறையில் பரப்பியது.

இக்கலியுகத்தில் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் மனிதர்களுக்கு வழங்கப்படும் மிகப் பெரிய பரிசாக நோபல் பரிசு கருதப்படுகிறது. ஆயிரக்கணக்கான நோபல் பரிசுகள் கொடுத்தாலும் ஒப்பாகாத அளவு உயர்ந்த நிலையில் கழறிற்றறிவார் விளங்கினார். அவர் ஏழாம் நூற்றாண்டில் நம்மைப்போல் சீவகருவி கரணங்களுடன் தான் வாழ்ந்தார். நம் ஒருவரிடமும் இல்லாத சிறப்பம்சங்களாகக் கீழ்க்கண்டவைகள் அவரிடம் விளங்கின. அதனால்தான் அவரால் சிவகரணங்கள் பெற்றுக் கயிலைக்குச் செல்ல முடிந்தது.

### சிவகரணங்கள் என்று நாம் யூகிப்பவை

1. உடலுறுப்புக்கள் நம்மைப் போன்றே இருந்தாலும் குணம், செயல்களால் அவை வேறுபட்டன.
2. பசி, நரை, மூப்பு இவையெல்லாம் இருக்காது.
3. வியர்வைக் கழிவுகளும், நாற்றமும் இல்லா உடல்.
4. இமையாத கண்கள்
5. தரையில் நடந்தால் கால்கள் தரையைத் தொடாமலே நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் செல்லுதல்.
6. "மலக்கிடங்கு" ஆகாத வயிறு. சுவாசக்காற்றிலேயே உடல் சத்தி பெற்று இயங்கும்.
7. முக்காலமும் தெரியும்.
8. சிவத்தைத் தவிர மறு தெய்வத்தைக் கனவிலும் நினையாத நிலை.

9. இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் நிகழ்தல்.

1. பரம்பரை அரச குடும்பத்தில் பிறந்தாலும் இளவரசராக அரச போகங்களை அனுபவிக்காமல் சிவச் சிந்தனைகளிலே காலத்தைச் செலுத்தினார்.
2. முடியுடை வேந்தராகப் பதவியிலிருந்த தமையனார், பதவியைத் துறந்துத் தவக்கோலம் மேற்கொண்ட நிலையில், பாரோர் வேண்டுகோளைக் கேட்டுச் சிவ அனுமதி பெற்று வேந்தராகப் பதவி ஏற்றார்.
3. வேந்தராக இருந்தாலும் நந்தவனம் அமைத்து நாளும் தம் கைப்பட பூக்கொய்து சிவபூசனைச் செய்துவந்தார்.
4. குரு இலிங்க வழிபாடுகளுக்கு மட்டுமின்றி சங்கம வழிபாடாம் அடியார் வழிபாடுகளுக்கும் 100% முக்கியத்துவம் கொடுத்து வாழ்ந்தார்.
5. இவ்வழிபாட்டை உணர்ந்த சிவப்பரம்பொருள் அதற்குப் பரிசாகத் தினமும் சிவபூசை முடிந்தபின் தம் பாதச் சிலம்பொலியைக் கேட்பித்தார்.
6. நாம் அறிந்த அளவில் கலியுகத்தில் இதுவரை மாணிக்கவாசகர், பதஞ்சலி முனிவர், ஒரு சோழமன்னன், சேக்கிழார் சுவாமிகள் போன்றோர் ஓரிரு முறை பாதச் சிலம்பொலி கேட்டதாக வரலாறு உண்டு. ஆனால் தினமும் பூ நீரோடு பூசை செய்தபின் பாதச் சிலம்பொலி இவரைத் தவிர யாரும் கேட்டதாக வரலாறு இல்லை.
7. பக்கத்து வீட்டில் வாழ்ந்து வரும் வடஇந்திய நண்பர் பேசும் மொழியையே புரிந்து கொள்ள முடியாமல் நானும் வாழ்கின்றேன் என்று வாழும் நாளில் ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக ஊர்வன, பறப்பன, நடப்பன என்று எல்லாத் தாவரங்கள், பூச்சிகள், பறவைகள், விலங்குகள், மனிதர்கள், தேவர்கள் பேசும் மொழிகளைப் புரியும் வண்ணம் ஒருவர் வாழ்ந்துள்ளார்.
8. நாடாளும் மன்னனாக நல்லவற்றுக்கே அப்பேரறிவைப் பயன்படுத்தியுள்ளார். மக்களின் குறையறிந்து அவற்றுக்கு நன்மை செய்ய அவருக்கு அந்த ஆற்றல் உதவியுள்ளது.
9. புறப்பூசைகள் மட்டும் போதாது என்று ஞான நூல்களைக் கற்றுத் தேர்ந்து ஓதுதல், ஓதுவித்தலாம் எழில் ஞானபூசை செய்துள்ளார்.
10. தில்லையில் கூத்தப்பெருமான் முன் பொன் வண்ணத்தந்தாதி, திருவாரூர்த் தியாகேசர் முன் திருவாரூர் மும்மணிக்கோவை, கயிலையில் சிவபரம்பொருளின் முன் திருக்கயிலாய ஞான உலா பாடி அருளினார். எவ்வளவு பெரிய பாக்கியம் ? நால்வர் கூட, கயிலையில் பதிகம் பாடியதாக வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை.
11. மேற்காண் பணிகளுக்காகச் சிறப்புச் செய்யப்பட்டு அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகிறார்.
12. குதிரையில் ஏறி ஐந்தெழுத்தோதி, திருக்கயிலைக்குச் செல்கிறார்.

இவ்வாறாக யாரும் நினைத்துப் பார்க்க முடியாத அளவு பெரும் பேறுகளைப் பெற்றுக் கழறிற்றறிவாராகப் பெரு வாழ்வு வாழ்ந்தவர்தான் சேரமான் பெருமாள் நாயனார். நூறு, ஆயிரம், பல்லாயிரம் ஆண்டுகளல்ல, ஒரு யுகத்துக்கே ஒருவர்தான் இப்படி வாழமுடியும்.

சில ஆண்டுகளுக்கு முன் முதுமுனைவர் ந.இரா. சென்னியப்பனார் அய்யா அவர்கள் ஒத்தக்கால்மண்டபம் பூங்கோதை நாயகி அம்மன் மேல் ஒரு பிள்ளைத்தமிழ் பாடி அரங்கேற்றம் செய்துள்ளார். ஆண்டுக்கொரு முறை கோவை மணிவாசகர் மன்ற அன்பர்கள் அம்பாளின் திருமுன் ஆறுகால் மண்டபத்தில் அந்நூலை முற்றோதல் செய்து வருகிறார்கள். இந்நூலைப் போலவே திருமுருகன் பூண்டி உட்பட பல தலங்களில் இறைவர், இறைவி மேல் அய்யா பாடல்கள் இயற்றியுள்ளார். அவரைப் போலவே வேறு சில சிவனடியார்களும் பாமாலைகள் புனைந்துத் திருவடியைப் போற்றி வருகிறார்கள். இது தேவைதானா ? ஏற்கனவே ஒரு பிறவியில் படித்து முடிக்க முடியாத அளவு சாத்திர தோத்திர நூல்கள் இருக்கும்போது இன்னும் நூல்கள் தேவையா ? யார் படிப்பது என்று பல நாள் யோசித்த பின்புதான் தெரிந்தது அவற்றையெல்லாம் சிவபெருமான் படிக்கிறார் என்பது. அதை அவர் விரும்பி ஏற்கிறார் என்ற கருத்தைச் சேரமான் பெருமாள் நாயனாரின் கீழ்க்காண் பொன்வண்ணத்தந்தாதிப் பாடலைப் பதினொராந் திருமுறையில் படித்துத் தட்டச்சுச் செய்து மெய்ப்பொப்புப் பணியில் ஈடுபட்டபோது தான் தெரிந்தது.

நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் அரும்ப முகம்மலர
அஞ்செங் கரதலங்கூம்பஅட் டாங்கம் அடிபணிந்து
<u>தஞ்சொல் மலரால் அணிய வல்லோர்கட்குத்</u> தாழ்சடையான்
வஞ்சங் கடிந்து திருத்தி வைத்தான் பெருவானகமே.

பொன்வண்ணத்தந்தாதி–11

பத்துத் திருமுறைகள் தொகுக்கப்பட்டபின் சிவபெருமான் நம்பியாண்டார் நம்பி மூலம் இத்தகைய அடியார்கள் மேலும் பலர் இருப்பதால் அவர்தம் நூல்களையும் அடியார்கள் படித்துணர்ந்து தத்தம் வினை நீக்கத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்னும் பெருங்கருணை காரணமாகப் பதினொராம் திருமுறையை வகுத்தருளினார். இதுவரை பத்துத் திருமுறைகளைப் பேரிலக்கியமாக வழிகாட்டி அருளிவிட்டோம். இது பிரபந்தம், கலம்பகம், உலா, அந்தாதி, தொகை, பாசுரம் என்ற சிற்றிலக்கியத் தொகுப்பாக இருக்கட்டும் என்று அத்தமிழ்ச்சங்கப் புலவர் கருதினார். அவரளித்த ஞானப்பிச்சையாகிய அத்தகைய அரிய பாடல்களை உள்ளடக்கிய பதினொராந்திருமுறையைச் சிந்திப்போமாக.

செயற்கரிய செயல்களைச் செய்த காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரர், ஆளுடைய பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி போன்றோர் வரலாறுகளும் பதியப்படவேண்டும் என்ற பெருநோக்கில் நம்பியாண்டார் நம்பிக்கு ஆணையிட, அது பதினொராந் திருமுறையாக மலர்ந்தது. அதற்கு முகமனாக, முதல் நூலாகத் தமது திருமுகப் பாசுர நூலைக் கொடுத்துச் சிறப்பு செய்தார்.

ஒரு பேராசிரியர் / பெருமகனார் / புலவர் தமது சிறந்த மாணாக்கனை அழைத்துத் தலைப்பைக் கொடுத்து நூலை இயற்றச்சொல்லி அதற்கு முகவுரையாகத் தமது நூலையும் கொடுத்து எழுதச் சொன்னால் அதைவிடப் பெரும்பேறு அந்த நூலாசிரியருக்கும், பின்னாளில் மறுபதிப்பு செய்வோருக்கும், படித்துணர்ந்து மகிழ்வோருக்கும் உண்டா?

## பதினொராந் திருமுறை

திருவாலவாயுடையார் திருவாய் மலர்ந்தருளிய திருமுகப் பாசுரம் முதலாக நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருநாவுக்கரசுதேவர் திருவேகாதச மாலை யீறாக உள்ள நாற்பது பிரபந்தங்களின் தொகுதியே பதினொராந் திருமுறையென வழங்கப்பெறுகின்றது.

தமிழ் இலக்கியத்தில் சிற்றிலக்கியம் என்பது கீழ்காணும் அடிப்படைகளைக் கொண்டுள்ளது.

★ சிற்றிலக்கியம் அளவில் (பாடல் எண்ணிக்கை அல்லது அடிகள்) சுருங்கியதாக அமைவது.

★ அகப்பொருள் அல்லது புறப்பொருளில் ஏதேனும் ஒரு துறையைப் பற்றியதாக அமையும். கோவை போன்ற சில சிற்றிலக்கியங்கள் பல துறைகளைக் கொண்டு அமைவதும் உண்டு.

★ பாடப்பெறும் கடவுள் அல்லது மன்னன் அல்லது வள்ளல் ஆகியோருடைய வாழ்வின் ஒரு சிறு கூறு மட்டுமே விளக்கப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாக, உலா இலக்கியம், தலைவன் உலாவரும் காட்சியை மட்டுமே சிறப்பித்துப் பாடப்படுவது.

★ அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு உறுதிப் பொருள்களுள் ஏதேனும் ஒன்றைத் தருவதாக அமைவது சிற்றிலக்கியம்.

இவ்வகையில் தூது, உலா, பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை, குறவஞ்சி போன்ற பலவகை இலக்கியங்கள் சிற்றிலக்கியம் என்ற வகைமையுள் அடங்கும். 96 சிற்றிலக்கியங்கள் வடமொழியில் பிரபந்தங்கள் எனப்படுகின்றன. பிரபந்தம் என்பது இலக்கிய வகைகள் பலவற்றைக் குறிக்கும் ஒரு பொதுப்பெயர் ஆகும். சமக்கிருதத்தில் பிரபந்தம் என்னும் சொல், "கட்டப்பட்டது" எனப் பொருள்படும். 96 வகையாகக் கீழ்க்கண்டவாறு நமது முன்னோர்கள் பிரபந்தங்களை வகைப்படுத்தியுள்ளார்கள்.

**சிற்றிலக்கிய வகைகள்**

| | |
|---|---|
| 1. அகப்பொருட்கோவை | 7. ஆற்றுப்படை |
| 2. அங்கமாலை | 8. இணைமணி மாலை |
| 3. அட்டமங்கலம் | 9. இயன்மொழி வாழ்த்து |
| 4. அரசன்விருத்தம் | 10. இரட்டைமணிமாலை |
| 5. அலங்காரபஞ்சகம் | 11. இருபா இருபது |
| 6. அனுராகமாலை | 12. உலா |

| | |
|---|---|
| 13. பவனிக்காதல் | 42. தசாங்கத்தயல் |
| 14. உலாமடல் | 43. தசாங்கப்பத்து |
| 15. உழத்திப்பாட்டு | 44. தண்டகமாலை |
| 16. உழிஞைமாலை | 45. தாண்டகம் |
| 17. உற்பவமாலை | 46. தாரகைமாலை |
| 18. ஊசல் | 47. தானைமாலை |
| 19. ஊர் நேரிசை | 48. எழுகூற்றிருக்கை |
| 20. ஊர்வெண்பா | 49. தும்பைமாலை |
| 21. ஊரின்னிசை | 50. துயிலெடை நிலை |
| 22. எண்செய்யுள் | 51. தூது |
| 23. ஐந்திணைச் செய்யுள் | 52. தொகைநிலைச்செய்யுள் |
| 24. ஒருபா ஒருபது | 53. நயனப்பத்து |
| 25. ஒலியலந்தாதி | 54. நவமணிமாலை |
| 26. கடைநிலை | 55. நாமமாலை |
| 27. கண்படைநிலை | 56. நாழிகைவெண்பா |
| 28. கலம்பகம் | 57. நான்மணிமாலை |
| 29. காஞ்சிமாலை | 58. நானாற்பது |
| 30. காப்புமாலை | 59. நூற்றந்தாதி |
| 31. குழமகன் | 60. நொச்சிமாலை |
| 32. குறத்திப்பாட்டு | 61. பதிகம் |
| 33. கேசாதிபாதம் | 62. பதிற்றந்தாதி |
| 34. கைக்கிளை | 63. பரணி |
| 35. கையறுநிலை | 64. பல்சந்தமாலை |
| 36. சதகம் | 65. பன்மணிமாலை |
| 37. சாதகம் | 66. பாதாதிகேசம் |
| 38. சிறுகாப்பியம் | 67. பிள்ளைக்கவி |
| 39. சின்னப்பூ | 68. புகழ்ச்சி மாலை |
| 40. செருக்களவஞ்சி | 69. புறநிலை |
| 41. செவியறிவுறூஉ | 70. புறநிலைவாழ்த்து |

| | |
|---|---|
| 71. பெயர் நேரிசை | 84. வசந்தமாலை |
| 72. பெயரின்னிசை | 85. வரலாற்று வஞ்சி |
| 73. பெருங்காப்பியம் | 86. வருக்கக் கோவை |
| 74. பெருமகிழ்ச்சிமாலை | 87. வருக்கமாலை |
| 75. பெருமங்கலம் | 88. வளமடல் |
| 76. போர்க்கெழு வஞ்சி | 89. வாகைமாலை |
| 77. மங்கலவள்ளை | 90. வாதோரணமஞ்சரி |
| 78. மணிமாலை | 91. வாயுறைவாழ்த்து |
| 79. முதுகாஞ்சி | 92. விருத்தவிலக்கணம் |
| 80. மும்மணிக்கோவை | 93. விளக்குநிலை |
| 81. மும்மணிமாலை | 94. வீரவெட்சிமாலை |
| 82. முலைப்பத்து | 95. வெட்சிக்கரந்தை மஞ்சரி |
| 83. மெய்க்கீர்த்திமாலை | 96. வேனில் மாலை |

இத்திருமுறையிற் சேர்க்கப்பெற்ற பிரபந்தங்களைப் பாடிய அருளாசிரியர்கள் திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரதேவர், கல்லாட தேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி எனப் பன்னிருவராவர். இவர்களுள் திருவாலவாயுடையாரென்பவர், சிவநெறிச் செல்வர்களாகிய திருவருட் பெரியோர்களால் வழிபடப் பெறும் முழுமுதற்பொருளாய், மதுரைத் திருவாலவாய்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளாவர். ஏனைய ஆசிரியர்கள் அனைவரும் அப்பெருமானது திருவருள் பெற்ற மெய்யடியார்களாவர். எனவே வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனாகிய சிவபெருமானாலும் அம்முழுமுதற் பொருளது திருவருளை நிரம்பப் பெற்ற மெய்யடியார் பதினொருவராலும் அருளிச் செய்யப் பெற்ற செழும்பாடல்களைத் தன்னகத்துக் கொண்டு திகழ்வது இப்பதினொராந்திருமுறையென்பது பெறப்படும்.

செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தலைநகராகிய கூடலம் பதியிலே சங்கப்புலவர்களுடன் தானும் ஒரு புலவனாக வீற்றிருந்து தமிழாராய்ந்து ‘கொங்குதேர் வாழ்க்கை’யென்ற செழும்பாடலையும் அன்பினைந்திணையின் இயல்பினை விளக்கும் அறுபது சூத்திரங்களால் இயன்ற களவியலென்னும் அகப்பொருளிலக்கண நூலையும் இயற்றியருளிய திருவாலவாயுடைய சிவபெருமானே, தன்னை இன்னிசைத் தமிழாற் பரவிப் போற்றிய பாணபத்திரர் பொருட்டுப் பாடித்தந்த திருப்பாட்டு, ‘மதிமலிபுரிசையென’த் தொடங்கும் திருமுகப்பாசுரமாகும். இறைவனது திருவருள் மொழியாகிய இத்திருமுகப் பாசுரத்தை

முதற்கண் பெற்று விளங்குதல் பதினொராந் திருமுறைக்கமைந்த தனிச்சிறப்பாகும். கடைச்சங்கப் புலவராகிய நக்கீரர், முருகப் பெருமான்பால் அன்பர்களை ஆற்றுப்படுத்திப் பாடியதும் பத்துப்பாட்டுள் முதலாவதாக விளங்குவதுமாகிய திருமுருகாற்றுப்படை இத்திருமுறையில் இடம்பெற்றுள்ளது.

பதினொராந் திருமுறை ஆசிரியர்களுள் காலங்கடந்து என்றுமுள்ளவர் திருவாலவாயுடையாராகிய சிவபெருமானாவார். காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய இம்மூவரும் சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்திற் போற்றப் பெற்ற அடியார்களாவர். இவர்களுள் காரைக்காலம்மையாரென்பவர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவர். ஐயடிகள் காடவர்கோன் நாயனார், நாவுக்கரசர், சம்பந்தராகிய இருவர் காலத்திற்கும் சுந்தரர் காலத்திற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் வாழ்ந்தவர். சேரமான் பெருமாள் நாயனார் நம்பியாரூரராகிய சுந்தரர்க்குத் தோழராய் அவரோடு திருக்கயிலை சார்ந்தவர், ஏனை எண்மரும் சுந்தரர் காலத்திற்குப்பின் கி.பி. பத்தாம் நூற்றாண்டு முடிய அமைந்த காலப்பகுதியில் வாழ்ந்தோராவர். ஆகவே இப்பெருமக்கள் பாடிய திருப்பாடல்களைத் தன் பாற்கொண்டு திகழும் இப்பதினொராந்திருமுறை கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பத்தாம் நூற்றாண்டு முடியவுள்ள காலப்பகுதியிற் சிவநெறியும் செந்தமிழும் பெற்ற வளர்ச்சியை அறிந்துகொள்ளுதற்குப் பெரிதும் துணைபுரியுமென்பது திண்ணம்.

இத்திருமுறையிலமைந்த நாற்பது பிரபந்தங்களில் முழுமுதற்பொருளாகிய சிவபெருமானைப் போற்றிய பிரபந்தங்கள் இருபத்தைந்தாகும். சிவபெருமான் அருளிய இளைய பிள்ளையாராகிய முருகப்பெருமானைப் போற்றுவது திருமுருகாற்றுப்படையென்ற பாடல். தன்னை வழிபடும் அடியார்களின் இடர் தீர்த்தல் கருதிச் சிவபெருமான் தோற்றுவித்தருளிய மூத்த பிள்ளையாராகிய யானைமுகக் கடவுளைப் போற்றுவன மூத்தநாயனர் திருவிரட்டை மணிமாலை, மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, விநாயகர் திருவிரட்டை மணிமாலை என்ற மூன்று பிரபந்தங்களும். ஏனைப் பதினொரு பிரபந்தங்களும் இறைவனது திருவருள் பெற்ற திருத்தொண்டர்களாகிய சிவனடியார்களின் சிறப்பினை விரித்துரைப்பனவாகும். இறைவனுக்கு ஆட்பட்டதன் பயன் அவனடியார்களுக்குத் தொண்டுபட்டுய்தலேயென்பது நம்பியாரூரர் முதலிய திருவருட்செல்வர்களின் துணிபாகும். இத்துணிபினை விளக்குதற் பொருட்டே சிவனடியார் பெருமையினை விரித்துரைக்கும் இப்பதினொரு பிரபந்தங்களும் இத்திருமுறையிற் சேர்க்கப்பெற்றுள்ளன. 2017, 18 ஆம் ஆண்டுகளில் ஏழு அமர்வுகளில் சிவனருளாற் நாம் விரிவாகச் சிந்திக்க இருக்கும் சிவனருளாற் செயற்கரிய செய்து சிவநெறி வளர்த்த திருத்தொண்டர்களின் வரலாற்றினை விரித்துரைக்கும் பெரிய புராணமாகிய திருத்தொண்டர் புராணத்திற்கு இன்றியமையாத வரலாற்றுச் செய்திகள் இப்பதினொரு நூல்களிலும் வகைபெற விளக்கப்பெற்றுள்ளன. அடியார் பெருமையினை விளக்கும் இப்பிரபந்தங்களைப் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்திற்கு முன் பதினொராந் திருமுறையின்கண் தொகுத்துதவிய சான்றோரது உளக்குறிப்பு உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.

## பதினொன்றாம் திருமுறை

அந்தாதி, இரட்டை மணிமாலை, உலா, கலம்பகம், மும்மணிக்கோவை, நான்மணி மாலை, எழுகூற்றிருக்கை எனப் புதுவது புனைந்த யாப்புப் பற்றியும், வெண்பா, விருத்தம், கலிவெண்பா எனச் செய்யுள் வகை பற்றியும், காரெட்டு, ஒருபா ஒருபது, ஏகாதச மாலை, திருவீங்கோய் மலையெழுபது என எண் பற்றியும், ஆற்றுப்படை, கோபப் பிரசாதம், கண்ணப்ப தேவர் திருமறம், திருமுகப் பாசுரம், திருத்தொகை எனப் பொருள் வகை பற்றியும், பெருந்தேவ பாணி என இயலிசை பற்றியும் பெயரெய்திய பிரபந்தங்கள் இத்திருமுறையில் இடம் பெற்றுள்ளன. இங்கெடுத்துக் காட்டிய பிரபந்த வகைகள் சிலவற்றுக்குரிய மூல இலக்கியமாக இப்பதினொராந்திருமுறை விளங்குகின்றது. இதன்கண் தொகுக்கப்பெற்ற நாற்பது நூல்களிலும் உள்ள பாடல்களிற் சிதைவுற்றனபோக இப்பொழுது கிடைத்துள்ளவை ஆயிரத்து முன்னூற்று எண்பத்தைந்து திருப்பாடல்களாகும்.

| | | பாடல் எண்கள் | பாடல்களின் எண் ணிக்கை | அடிகள் |
|---|---|---|---|---|
| 1. | திருமுகப்பாசுரம் | 1 | 1 | 12 |
| 2. | மூத்ததிருப்பதிகம் - 1<br>மூத்ததிருப்பதிகம் - 2 | 2 - 12<br>13 - 23 | 11<br>11 | 88<br>44 |
| 3. | திருஇரட்டைமணிமாலை | 24 - 43 | 20 | 80 |
| 4. | அற்புதத்திருவந்தாதி | 44 - 144 | 101 | 404 |
| 5. | சேத்திரத்திருவெண்பா | 145 - 168 | 24 | 96 |
| 6. | பொன்வண்ணத்தந்தாதி | 169 - 268 | 100 | 400 |
| 7. | திருவாரூர்மும்மணிக்கோவை | 269 - 298 | 30 | 259 |
| 8. | திருக்கைலாய ஞான உலா | 299 | 1 | 398 |
| 9. | கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி | 300 - 399 | 100 | 400 |
| 10. | திருஈங்கோய்மலை எழுபது | 400 - 469 | 70 | 280 |
| 11. | திருவலஞ்சுழி மும்மணிக்கோவை | 470 - 484 | 15 | 92 |
| 12. | திருஎழுகூற்றிருக்கை | 485 | 1 | 59 |
| 13. | பெருந்தேவபாணி | 486 | 1 | 71 |
| 14. | கோபப்பிரசாதம் | 487 | 1 | 100 |
| 15. | கார்எட்டு | 488 - 495 | 8 | 32 |
| 16. | போற்றித் திருக்கலிவெண்பா | 496 | 1 | 90 |

| | | | | |
|---|---|---|---|---|
| 17 | திருமுருகாற்றுப்படை | 497 | 1 | 363 |
| 18. | திருக்கண்ணப்பத்தேவர் திருமறம் | 498 | 1 | 162 |
| 19. | திருக்கண்ணப்பதேவர் திருமறம் | 499 | 1 | 38 |
| 20. | மூத்தநாயனார் திருஇரட்டை மணிமாலை | 500 - 519 | 20 | 80 |
| 21. | சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை | 520 - 556 | 37 | 148 |
| 22. | சிவபெருமான் திருவந்தாதி | 557 - 656 | 100 | 400 |
| 23. | சிவபெருமான் திருவந்தாதி | 657 - 756 | 101 | 404 |
| 24. | சிவபெருமான் திருமும்மணிக்கோவை | 757 - 786 | 30 | 155 |
| 25. | மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை | 787 - 809 | 23 | 120 |
| 26. | கோயில்நான்மணிமாலை | 810 - 849 | 40 | 521 |
| 27. | திருக்கழுமல மும்மணிக்கோவை | 850 - 861 | 12 | 160 |
| 28. | திருதுவிடைமருதூர் மும்மணிக்கோவை | 862 - 891 | 30 | 567 |
| 29. | திருஏகம்பமுடையார் திருவந்தாதி | 892 - 991 | 100 | 400 |
| 30. | திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது | 992 - 1001 | 10 | 234 |
| 31. | திருநாரையூர் விநாயகர் இரட்டை மணிமாலை | 1002 - 1021 | 20 | 80 |
| 32. | கோயில் திருப்பண்ணியர் விருத்தம் | 1022 - 1091 | 70 | 280 |
| 33. | திருத்தொண்டர் திருவந்தாதி | 1092 - 1181 | 89 | 356 |
| 34. | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | 1182 - 1282 | 101 | 404 |
| 35. | ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் | 1283 - 1293 | 11 | 44 |
| 36. | ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை | 1294 - 1323 | 30 | 248 |
| 37 | ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை | 1324 | 1 | 286 |

| 38. | ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் | 1325 - 1373 | 49 | 371 |
|---|---|---|---|---|
| 39. | ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை | 1374 | 1 | 64 |
| 40. | திருநாவுக்கரசு தேவர் திருஏகாதசமாலை | 1375 - 1385 | 11 | 112 |

**பதினொராந் திருமுறை – நூல் ஆய்வு**

பதினொராம் திருமுறையில் அமைந்த நூல்கள் மேற்கண்ட நாற்பது ஆகும். பன்னிரு புலவர்கள் பாடிய நூலின் தொகுப்பே 11–ஆம் திருமுறை.

இப்பன்னிரு புலவர்களை அவர்கள் தாம் பாடிய பாடல்களால் (எண்ணிக்கையால்) நிரற்படுத்துகின்றோம்.

| 1. | நக்கீர தேவ நாயனார் | 10 நூல்கள் |
|---|---|---|
| 2. | நம்பியாண்டார் நம்பி | 10 நூல்கள் |
| 3. | பட்டினத்துப் பிள்ளையார் | 5 நூல்கள் |
| 4. | காரைக்கால் அம்மையார் | 3 நூல்கள் |
| 5. | சேரமான் பெருமான் | 3 நூல்கள் |
| 6. | கபில தேவர் | 3 நூல்கள் |
| 7. | திருவாலவாயுடையார் (இறைவன்) | 1 ஒன்று மட்டும் |
| 8. | ஐயடிகள் காடவர்கோன் | 1 ஒன்று மட்டும் |
| 9. | கல்லாட தேவ நாயனார் | 1 ஒன்று மட்டும் |
| 10. | பரண தேவ நாயனார் | 1 ஒன்று மட்டும் |
| 11. | இளம் பெருமான் அடிகள் | 1 ஒன்று மட்டும் |
| 12. | அதிராவடிகள் | 1 ஒன்று மட்டும் |
| | | 40 |

மதுரை ஆலவாய்ச் சொக்கேசனே திருவாலவுடையார் ஆவர். இறைவனின் திருமுகப்பாசுரம் 11ஆம் திருமுறையின் முதலில் நின்று திருமுறைத் தொடங்கி வைக்கின்றது. (பத்துப்பாட்டில் முதல் பாட்டாக திருமுருகாற்றுப்படை அமைந்தது போல் பெருமானின் திருமுகப்பாசுரம் இத்திருமுறைக்கு அமைந்துள்ளமை சிறப்பு என்க).

| | |
|---|---|
| இத்திருமுறையில் சிவனைப் பற்றி நுவலும் நூல்கள் | 25 |
| விநாயகர் பெருமை பேசும் நூல் | 3 |
| முருகன் பெருமை பேசும் நூல் | 1 |
| அடியார்களின் பெருமைகளைப் பேசும் நூல்கள் | 11 |
| | 40 |

**1. ஒரே தலைப்பில் அமைந்த நூல்கள்**

**1. அ**

1. திருக்கண்ணப்பதேவர் திருமறம் – நக்கீர தேவ நாயனார்
2. திருக்கண்ணப்பதேவர் திருமறம் – கல்லாட தேவ நாயனார்

**1. ஆ**

1. சிவபெருமான் திருவந்தாதி – கபில தேவ நாயனார்
2. சிவபெருமான் திருவந்தாதி – பரண தேவ நாயனார்

**2. அந்தாதி நூல்கள்**

1. அற்புதத் திருவந்தாதி
2. பொன் வண்ணத் திருவந்தாதி
3. கயிலை பாதி காளத்தி பாதித் திருவந்தாதி
4. சிவபெருமான் திருவந்தாதி
5. சிவபெருமான் திருவந்தாதி
6. திருஏகம்பமுடையார் திருவந்தாதி
7. திருத்தொண்டார் திருவந்தாதி
8. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி

**3. மணிமாலை**

1. திருஇரட்டை மணிமாலை
2. மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை
3. சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை
4. கோயில் நான்மணி மாலை
5. திருநாரையூர் விநாயகர் திருஇரட்டை மணிமாலை

**4. மும்மணிக்கோவை**

1. திருவாரூர் மும்மணிக்கோவை
2. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை
3. சிவபெருமான் மும்மணிக்கோவை
4. மூத்த பிள்ளையார் மும்மணிக்கோவை
5. திருக்கழுமல மும்மணிக்கோவை
6. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
7. ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை

**5. உலா**

1. திருக்கைலாய ஞான உலா
2. ஆளுடைய பிள்ளையார் திருஉலா மாலை

**6. விருத்தம்**

1. கோயில் திருப்பண்ணியர் விருத்தம்
2. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

**7. மறம்**

1. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்
2. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்

இத்திருமுறையைத் தொகுத்துதவியவர், இதன் இறுதிக்கண் அமைந்த திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணிமாலை முதலாகத் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை யீறாகவுள்ள பத்துப் பிரபந்தங்களையும் பாடிய நம்பியாண்டார் நம்பியே யாவரென்பது முன்னோர் கருத்தாகும். திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவற்றை ஒன்பதாந்திருமுறையென எண்ணிய பின்னரே, திருமந்திரம் பத்தாந் திருமுறையென்ற பெயரையும், திருமுகப்பாசுரம் முதலிய இப்பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையென்ற பெயரையும் எய்தியிருத்தல் வேண்டுமென்பது இவை தோன்றிய காலத்தை ஆராய்வார்க்கு நன்கு புலனாம். ஆகவே நம்பியாண்டார் நம்பியால் இத்திருமுறை தொகுக்கப்பெற்றதென்பதை விட அவர்க்கு நெடுங்காலம் பிற்பட்டுத் தோன்றிய பெரியோர்களாற் பதினோராந் திருமுறையென்ற பெயருடன் தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டுமெனக் கருதுதல் பொருத்தமுடையதாகும்.

இவை போன்ற ஏராளமான நுட்பங்களைத் தொகுத்து, நூலாக வெளியிட்டு, வழிபாட்டுக் கருத்தரங்கம் நடத்துவதற்குத் திருவருள் கூட்டுவித்த நிலையில் ஏற்கனவே இரண்டு

திங்களுக்கொருமுறை நிகழ்ந்த பன்னிரு திருமுறை ஆய்வுக் கருத்தரங்குகளைக் கீழ்க்கண்டவாறு நினைவு கூர்வோம்.

| | |
|---|---|
| முதல் திருமுறை | டிசம்பர் 27, 28.2014 |
| இரண்டாவது திருமுறை | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | ஜீன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | ஆகஸ்டு 29, 30.2015 |
| ஆறாம் திருமுறை | அக்டோபர் 24, 25-2015 |
| ஏழாம் திருமுறை | டிசம்பர் 26, 27-2015 |
| எட்டாம் திருமுறை - I | பிப்ரவரி 27, 28 - 2016 |
| எட்டாம் திருமுறை - II | ஏப்ரல் 23 - 2016 |
| ஒன்பதாம் திருமுறை | ஏப்ரல் 24 - 2016 |
| பத்தாம் திருமுறை - I | ஜீன் 26, 27, 2016 |
| பத்தாம் திருமுறை - II | ஆகஸ்ட் 27, 28, 2016 |
| பத்தாம் திருமுறை - III | அக்டோபர் 22, 23, 2016 |

அதன் வரிசையில், வரும் டிசம்பர் மாதத்தில் பதினோராம் திருமுறையின் முதல் தொகுதிக் கருத்தரங்கமானது கீழ்க்கண்ட அட்டவணைப்படி நடைபெறும்.

## நிகழ்ச்சி நிரல்

| சொற்பொழிவாளர் நாள் / நேரம் | | பாடல் எண்கள் | பாடல்களின் எண்ணிக்கை | அடிகள் |
|---|---|---|---|---|
| மகாவித்துவான் மயிலம் **வே. சிவசுப்பிரமணியம்** அவர்கள்<br>24.12.2016 சனி<br>காலை 09.00-11.00 | **திருவாலவாயுடையார் அருளிய**<br>1. திருமுகப்பாசுரம் | 1 | 1 | 12 |
| | **காரைக்காலம்மையார் அருளிய**<br>2. மூத்த திருப்பதிகம் - 1<br>மூத்த திருப்பதிகம் - 2 | 2 - 12<br>13 - 23 | 11<br>11 | 88<br>44 |
| | 3. திருஇரட்டைமணிமாலை | 24 - 43 | 20 | 80 |
| பேரா. **ம.வே. பசுபதி** அவர்கள்<br>24.12.2016 சனி<br>நண்பகல் 11.00-01.00 | 4. அற்புதத் திருவந்தாதி | 44 - 144 | 101 | 404 |
| பேரா. **புரிசை நடராசன்** அவர்கள்<br>24.12.2016 சனி<br>பிற்பகல் 02.00-04.00 | **ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அருளிய**<br>5. சேத்திரத் திருவெண்பா | 145 - 168 | 24 | 96 |
| | **சேரமான் பெருமாள் நாயனார் அருளிய**<br>6. திருவாரூர் மும்மணிக்கோவை | 269 - 298 | 30 | 259 |
| சிவத்திரு **செல்வநாதன்** அவர்கள்<br>24.12.2016 சனி<br>மாலை 04.00-06.00 | **சேரமான் பெருமாள் நாயனார் அருளிய**<br>7. பொன்வண்ணத்தந்தாதி | 169 - 268 | 100 | 400 |

| சொற்பொழிவாளர் நாள் / நேரம் | | பாடல் எண்கள் | பாடல்களின் எண்ணிக்கை | அடிகள் |
|---|---|---|---|---|
| சிவத்திரு **சு. குஞ்சிதபாதம்** அவர்கள்<br>25.12.2016 ஞாயிறு<br>காலை 09.00-11.00 | **சேரமான் பெருமாள் நாயனார் அருளிய**<br>8. திருக்கைலாய ஞான உலா | 299 | 1 | 398 |
| சிவத்திரு **சிவ. காந்தி** அவர்கள்<br>25.12.2016 ஞாயிறு<br>நண்பகல் 11.00-01.00 | **நக்கீர தேவ நாயனார் அருளிய**<br>9. கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி | 300-399 | 100 | 400 |
| சிவத்திரு **ப. குமரலிங்கம்** அவர்கள்<br>25.12.2016 ஞாயிறு<br>பிற்பகல் 02.00-04.00 | 10. திருஈங்கோய்மலை எழுபது | 400-469 | 70 | 280 |
| | 11. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை | 470-484 | 15 | 92 |
| முதுமுனைவர்<br>**ந.இரா. சென்னியப்பனார்** அவர்கள்<br>25.12.2016 ஞாயிறு<br>மாலை 04.00-06.00 | 12. திருஎழுகூற்றிருக்கை | 485 | 1 | 59 |
| | 13. பெருந்தேவபாணி | 486 | 1 | 71 |
| | 14. கோபப்பிரசாதம் | 487 | 1 | 100 |
| | 15. கார்எட்டு | 488-495 | 8 | 32 |
| | 16. போற்றித் திருக்கலிவெண்பா | 496 | 1 | 90 |

இரண்டு திங்களுக்கு ஒருமுறை சுமார் பன்னூறு பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், முனைவர் ப. தமிழரசியைத் தலைவராகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், முனைவர் இரா. மதன்குமார், முனைவர் ச. கவிதா, முனைவர் செ. ஆறுச்சாமி உள்ளிட்ட தமிழ்த்துறையினருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. வெள்ளிங்கிரி அவர்களுக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் www.panniruthirumurai.org என்ற இணையமுகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.

அனைவரும் வருக.

நன்றி.

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்

21.11.2016

கோவை – 21

## பதினொன்றாந் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்பதிப்புகள்

| வ.எண் | ஆண்டு | நூலின்பெயர் | ஆசிரியர்/வெளியீட்டாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|
| 1. | 1853 | திருமுருகாற்றுப்படை மூலமும் ஆறுமுகநாவலர் புத்துரையும் | பதினெட்டாம் பதிப்பு 1955-ல் வெளிவந்தது | நச்சினார்க்கினியார் உரையைத் தழுவிச்செய்தது |
| 2. | 1933 | பதினொராந் திருமுறை | சைவசித்தாந்த மகா சமாஜம் வெளியீடு | மூலம் மட்டும் |
| 3. | 1949 | காரைக்கால் அம்மையார் அருளிச்செய்த அற்புதத் திருவந்தாதி | ஆசிரியர் வித்துவான் கா.ம. வேங்கடராமையா வெளியீடு காசிமடம் | மூலமும் குறிப்புரைகளும் |
| 4. | 1955 | பத்துப்பாட்டு வரிசை - மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படை | பெருமழைப்புலவர் பொ.வே. சோமசுந்தரனார் எழுதிய விளக்கவுரையுடன் வெளியிட்டது. திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் | ஒரு நூல் மட்டும் மறுபதிப்பு 1960, 1964, 1969, 1973, 1978 |
| 5. | 1959 | திருமுருகாற்றுப்படை உரைக் கொத்து | காசிமடம் - அதிபர் அருள் நந்தித்தம்பிரான் வெளியீடு, ஆசிரியர்கள் கா.ம. வேங்கட ராமையா, வித்துவான் தெய்வசிகாமணிக்கவுண்டர் | ஐந்து ஆசிரியர்கள் உரைகளும்/ ஆங்கில மொழி பெயர்ப்பும் ஒரு நூலுக்கு மட்டும் |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | 1959 | நக்கீர தேவ நாயனார் அருளிச்செய்த கோபப்பிரசாத மூலமும் உரையும் | ஆசிரியர் சிதம்பரத்தம்பிரான் | மூலமும் உரையும் ஒரு நூல் மட்டும் |
| 7. | 1959 | நக்கீர தேவர் அருளிய திருமுருகாற்றுப்படை | பெ.கா. சண்முகநாதன், திண்டுக்கல் | திருச்செந்தூர் தேவஸ்தான வெளியீடு |
| 8. | 1960 | அற்புதத்திருவந்தாதியும், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகமும், திருவிரட்டை மணிமாலையும் | காரைக்கால் அம்மையார் பெண்கள் வைதிக வித்யாலயம், விருதுநகர் | குறிப்புரைகளுடன் |
| 9. | 1980 | பன்னிரு திருமுறை வரலாறு | ஆசிரியர் வித்துவான் க. வெள்ளைவாரணன், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு | இரண்டு தொகுதிகள் மறுபதிப்பு 1997, 2010 |
| 10. | 1987 | திருமுருகாற்றுப்படை உரைத்திறன் | இரத்தினகிரி பாலமுருகன் திருக்கோயில் சார்பில் வெளியீடு | மூலமும் ஐவர் உரையும் |
| 11. | 1990 | நக்கீரதேவ நாயனார் அருளிய திருவலஞ்சுழி மும்மணிக் கோவை | ஆசிரியர் அம்பை சங்கரனார் வெளியீடு, சைவ சித்தாந்தப் பெருமன்ற தஞ்சை மாவட்டக் கிளை | சொற்பொருள், விளக்கம், கருத்துரையுடன் 40 நூல்களில் இந்த ஒரு நூல் மட்டும் |
| 12. | 1995 | பதினொன்றாந் திருமுறை (தெளிவுரைக் குறிப்புரைகளுடன்) | ஆசிரியர் முனைவர். அருணைவடிவேல் முதலியார் தருமை ஆதீன வெளியீடு | மறுபதிப்பு 2007 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | 1996 | பன்னிரு திருமுறைகள்<br>தொகுதி 17, 18<br>பதினோராம் திருமுறை | வர்த்தமானன்<br>பதிப்பக வெளியீடு | அருட்செல்வர்<br>டாக்டர் மகாலிங்கத்தின்<br>மலிவு விலைப் பதிப்பு |
| 14. | 2001 | திருமுருகாற்றுப்படை<br>விளக்கம் | ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன்<br>வெளியீடு, அமுதநிலையம். | மூலம், நூல் உரை விளக்கம் |
| 15. | 2002 | பதினோராம் திருமுறை<br>(மூலம்) | திருப்பனந்தாள்<br>காசித்திருமடம், அதிபர்<br>முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் | இது ஆறாம் பதிப்பு,<br>3000 படிகள் |
| 16. | 2005 | பதினொன்றாந் திருமுறை<br>மூலமும் உரையும் | உரை புலவர் பி.ரா. நடராசன்<br>வெளியீடு – உமா பதிப்பகம் | முதல் பதிப்பு |
| 17. | 2008 | பதினோராந் திருமுறை<br>(மூலம்) | திருப்பனந்தாள் காசித்திருமடம்,<br>அதிபர் முத்துக்குமாரசுவாமித்<br>தம்பிரான். | எட்டாம் பதிப்பு,<br>2000 படிகள் |
| 18. | 2010 | நக்கீர தேவர் இயற்றிய<br>திருஈங்கோய்மலை எழுபது<br>மூலமும் உரையும் | ஆசிரியர், வித்துவான் பாலூர்<br>கண்ணப்ப முதலியார்,<br>சாரதா பதிப்பக வெளியீடு. | 70 பாடல்கள் உரையுடன் |
| 19. | 2010 | காரைக்கால் அம்மையார்<br>பாடல்கள் ஓர் ஆய்வு | முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன்<br>உலகத்தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு. | மு.வ. அறக்கட்டளைச்<br>சொற்பொழிவு |
| 20. | 2015 | பதினோராந் திருமுறை | தமிழகச் சைவநெறிக் கழகம் | பதிப்பாசிரியர்<br>சரவணபவானந்த தேசிகர் |
| 21. | 2016 | பதினொன்றாந் திருமுறை<br>முதல் தொகுதி –<br>மூலமும் உரையும் | பன்னிரு திருமுறை<br>ஆய்வுமையம்,<br>கற்பகம் பல்கலைக்கழகம் | முதல் 16 நூல்கள் |

நமது பதினொன்றாம் திருமுறை நூலின் முதல் பகுதியை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குருமகாசந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மனமுவந்த நன்றிகள்.

# பதினொராந் திருமுறையின் தனிச்சிறப்புக்கள்

பதிப்பாசிரியரின் பதினொன்றாந் திருமுறை ஆசிரியர்
**முனைவர் கு. சுந்தரமூர்த்தி** அவர்கள் எழுதிய கட்டுரை

திருமுறை ஆசிரியன்மார்கள் அனைவரும் இறைவன் திருவருள் உள்நின்று உணர்த்தத் திருவாய் மலர்ந்தவர்கள் ஆவர். 'எனதுரை தனதுரையாக', 'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை' என்றல் தொடக்கத்தனவாய திருவாக்குகள் இம்மெய்ம்மையை உணர்த்தும். இவ்வகையில் அமைந்த பதினோராம் திருமுறை, சங்க கால நக்கீரர் முதல் சோழர் கால நம்பியாண்டார் நம்பிகள் வரையுள்ள அருளாளர்களின் திருவாக்குகளைக் கொண்டதாகும். இதற்கெனச் சில தனித்தன்மைகள் அமைந்துள்ளன.

(1) பன்னிரு திருமுறைகளுள் ஏழாம் திருமுறை ஈரிடங்களிலும், பன்னிரண்டாம் திருமுறை ஓரிடத்தும் இறைவனால் அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற சிறப்புடையனவாம். இப்பதினோராம் திருமுறையின் கண்ணோ, இறைவனால் அருளிச் செய்யப் பெற்ற திருமுகப்பாசுரம் எனும் பாடலே அமைந்துள்ளது. இத்திருப்பாடலை முதலாகக் கொண்ட மாண்புடையதும் ஆகும்.

(2) முதல் எட்டுத் திருமுறைகளிலும், பத்து, பன்னிரண்டாவது திருமுறைகளிலும், மூத்த பிள்ளையாரும் (கணபதி) பிள்ளையாரும் (முருகன்) இறைவனொடு சார்த்தியே புகழப் பெற்றுள்ளனர். ஒன்பதாம் திருமுறையில் திருவிடைக்கழித் திருவிசைப்பாவில் மட்டும் முருகப் பெருமான் தனித்துப் போற்றப் பெற்றுள்ளார். இத்திருமுறையிலோ, கணபதி, முருகன் ஆகிய இருவரும் தனித்தனியே போற்றப் பெறுகின்றனர். மூத்த நாயனார் திரு இரட்டை மணிமாலை, மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவை, திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை, திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்களைக் காண்க.

(3) முதல் ஆறு திருமுறைகளிலும் எட்டு, ஒன்பது, பத்து ஆகிய திருமுறைகளிலும் அடியவர் வரலாறுகளும், அவர்களைப் போற்றுதலும் ஆங்காங்கு இயைபுபட்ட வகையிலேயே பேசப்படுகின்றன. ஏழாம் திருமுறையிலேயே அடியவர்களைத் தொகுத்துப் போற்றும் பாங்கு முதன் முதலாகக் காணப்படுகின்றது. இப்பதினோராம் திருமுறையிலோ அவ்வடியவர்களை மேலும் போற்றி உரைக்கும் பாங்கினில் தனித் தனியாக நூல்கள் பல அமைந்துள்ளன. திருத்தொண்டர் திருவந்தாதி, திருக்கண்ணப்பதேவர் திருமறம் (இருநூல்கள்), ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலைஆகிய நூல்களைக் காண்க.

(4) பன்னிரு திருமுறைகளில் ஏழாம் திருமுறை நீங்கலாக எஞ்சிய திருமுறைகள் யாவும் மண்ணுலகத்திலுள்ள திருத்தலங்களிலேயே நின்றும், இருந்தும், நடந்தும் பாடப் பெற்றவையாகும். ஏழாம் திருமுறையில் வரும், 'தான் எனை முன்படைத்தான்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தில், 'இந்திரன் மால் பிரமன்' என வரும் திருப்பாடல் ஒன்றே திருக்கயிலையிலிருந்து பாடப் பெற்றதாகும். ஆனால் இத்திருமுறையிலோ திருக்கயிலாய ஞான உலா, திருக்கயிலையிலிருந்தே அருளிய முழு நூல் ஆகும்.

(5) பிற திருமுறைகள் பதிகப்பாங்கிலேயே அமைந்துள்ளன. ஆனால் இத்திருமுறையிலோ சிறு பிரபந்தங்களாக அமைந்த நூல்கள் பல இடம் பெற்றுள்ளன. அந்தாதி, கோவை, மாலை, உலா, ஆற்றுப்படை போல்வனவாய நூல்கள் இருத்தல் காண்க.

(6) ஏனைய திருமுறைகளில் சங்க இலக்கியச் சொல் அமைவும், பொருள் அமைவுமான பகுதிகள் சில இடம் பெற்றுள்ளன. ஆனால் இத்திருமுறையிலோ சங்க இலக்கியங்களில் ஒன்றாய திருமுருகாற்றுப் படையே முழுமையாக அமைந்துள்ளது. திரு ஈங்கோய்மலை எழுபது, கார் எட்டு எனப்படும் நூல்கள் முறையே திணைமாலை எழுபது, கார் நாற்பது எனும் நூல்களின் அமைப்பில் உள்ளன. திருமுருகாற்றுப்படையை இயற்றியவர் மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரர். ஏனைய ஒன்பது நூல்களைப் பதினொன்றாம் திருமுறையில் இயற்றியருளிய நக்கீர தேவநாயனார் சங்க காலத்தைச் சார்ந்தவர் அல்லர்.

(7) மற்ற திருமுறைகளின் ஆசிரியன்மார்கள் அனைவரும் ஆடவரே. இத்திரு முறையிலோ பெண்பால் அடியவரும் ஆசிரியராக இணைந்துள்ளனர்.

# பதினொன்றாந் திருமுறை - முதல் தொகுதி 16 நூல்களின் நூலமைப்பு

பதினொன்றாந் திருமுறையின் முதல் தொகுதியில் திருவாலவாயுடையார் உள்ளிட்ட ஐந்து அருளாசிரியப் பெருமக்கள் இயற்றிய **16** நூல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றின் நூலமைப்புச் சுருக்கத்தை இப்போது காணலாம்.

### திருவாலவாயுடையார்

இப்பெயர் மதுரைச் சொக்கநாதப் பெருமானைக் குறிக்கும். 'ஆலவாயில் மன்னிய சிவன்யான்' என இப்பாசுரத்தில் வருவதால் இவ்வுண்மை அறியலாம். இப்பெருமான் நன்பாட்டுப்புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக்கிழி தருமிக்கு அருளியவன். அதுபொழுது பாடியது 'கொங்குதேர் வாழ்க்கை' என வரும் பாடலாகும். இதனையடுத்து அருளிய பாசுரமே இப்பாசுரமாகும். பெற்றான் சாம்பான் பொருட்டு உமாபதி சிவத்திற்கு வழங்கிய பாடல் இதனையடுத்து அருளியதாகும். இது 'அடியார்க்கு எளியன்' எனத் தொடங்கும் திருவெண்பாவாகும். 'ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகின் அளப்பில'. அவ்வகையில் இவ்வாற்றான் அருளியிருக்கும் பாங்கு எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

### திருமுகப் பாசுரம்

உயர்ந்தவர்கள் தங்கள் கருத்துக்களை நேரிடையாகவோ அல்லது தக்கவர் வழியோ தெரிவித்துக்கொள்வதன்றி, ஓலை வழியும் தெரிவித்துக் கொண்டிருந்தனர். இவ் ஓலையைத் திருமுகம் என்பர். 'மணித்தோட்டுத் திருமுகம் மறுத்ததற்கு இரங்கி' என்னும் சிலப்பதிகாரமும் இதனைக் கூறும். இறைவன் வழங்கியருளிய திருமுகம் இரண்டாம். ஒன்று இத்திருமுகமாகும். இது பொருள் பெற அருளியதாகும். பிறிதொன்று மேற்கூறியவாறு உமாபதி சிவத்திற்கு வழங்கிய திருமுகமாகும். இது அருள்பெற அருளியதாகும். இறைவன் இம்மைக்கும் அம்மைக்கும் துணையாதல், இவ்விரு அருள் நிகழ்ச்சியாலும் அறியலாம். பாசுரம் என்பது பாடல், பதிகம் ஆகிய இருபொருள்களையும் குறிக்கும். இங்குத் தனியே வரும் ஒரு பாடலைக் குறித்து நிற்கின்றது. இவ்வகையில் திருப்பாசுரம் என்றும், திருமுகப்பாசுரம் என்றும் குறித்துப் போற்றிவரும் இருபாசுரங்கள் உள்ளன. இவற்றுள் திருப்பாசுரம் என்பது திருஞான சம்பந்தப் பெருமான் பாண்டி மன்னனாகிய நின்றசீர் நெடுமாறனாருக்குக் கேட்பக்கிளந்த மெய்ஞ்ஞானமாகிய 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் திருப்பதிகமாகும். இதனை,

''வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பாசுரம்'' எனச் சேக்கிழார் குறித்தருளுமாற்றான் அறியலாம். அடுத்துத் திருமுகப்பாசுரம் எனக் குறிப்பது, 'மதிமலிபுரிசை' எனத் தொடங்கும் இத்திருப்பதிகம் ஆகும். சேக்கிழார் இதனைக் கொண்டெடுத்து மொழியுங்கால் 'திருமுகம்' என்று அருளுகின்றார். இது பாடலாக அமைந்த திருமுகம் ஆதலின், திருமுகப் பாசுரம் என அழைக்கப் பெறலாயிற்று.

### திருமுகப் பொருள்

இத்திருமுகத்தில் அருளப் பெற்றிருக்கும் பொருள்முறை இக்காலத்துக்கும் ஏற்புடையதாக அமைந்திருப்பது அறியத்தக்கதாம். இக்காலத்துக் கடிதம் எழுதுவோர் அனுப்புநர், பெறுநர், பொருள் எனப் பகுத்துக் கொண்டே எழுதுவதைக் காண்கிறோம். பார்வை எண் என இடம் பெறுவது தொடர்ந்து போக்குவரத்து நிகழ்வதும், அலுவலக அமைப்பாக அமைவதுமான கடிதங்களிலேயே காணப்படுகின்றன. இவ்வகையில் அனுப்புநராக இருப்பவர் ஆலவாய்ப் பெருமான் ஆவர். இதனை;

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில் பொழில் ஆலவாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்".

என வரும் முதற்பகுதி குறித்துக் காட்டுகிறது. இதனைப் பெறுபவர் சேரமான் பெருமாள் நாயனார் ஆவர். இதனை;

"பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க".

என வரும் இரண்டாம் பகுதி குறிக்கிறது. இனிப் பொருளாக அமைவது;

"பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண் பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே".

என வரும் மூன்றாம் பகுதியாகும். இதன் முற்பகுதியில், கூடல் என்பது நகரையும், ஆலவாய் என்பது அதன்கண் உள்ள திருக்கோயிலையும் குறிக்கின்றது. இத்திருமுகம் அருளும் நிலையில் ஆலவாயில் அப்பெருமான் மன்னி (பொருந்தி) இருப்பினும், அவன் யாண்டும் எக்காலத்தும் எப்பொருள்களிடத்தும் மன்னியிருப்பவன் என்பது உணரத்தக்கதாம். இனிப் பெறுநராம் சேரமானைக் குறிக்கும் பொழுது அப்பெருமகனாரின் வள்ளன்மையை முன்பும், அரசியல் சிறப்பைப் பின்புமாகக் குறித்தருளுகின்றார். கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டுடன் தம்பால் வருவோருக்குத் தாம் கொடுத்தலன்றி, அவரவரும் தாம் தாமும் வேண்டியவாறு எடுத்துக்கொள்ளும் உரிமை பெறுதலை 'உரிமையின் உரிமையின் உதவி' என்றார்.

"பூதலத்துள் எல்லாப் பொருளும் வறியராய்க்
காதலித்தார் தாமே கவர்தலால் – நீதி

அடுத்து உயர்ந்த சீர்த்தி அனபாயா யார்க்கும்
கொடுத்திளனக் கொள்கின்றி லேம்".

என வரும் தண்டியலங்காரப் பாடலும் இவ்வுரிமையை அறிவித்து நிற்கும். 'குருமாமதிபுரை குலவியகுடை' என்பது அப்பெருமகனாரின் நிறைந்த தண்ணளி யைக் காட்டுவதாகும்.

"கண் பொர விளங்கும் நின் விண்பொரு வியன் குடை
வெயில் மறைக் கொண்டன்றோ அன்று
வருந்திய குடிமறைப்பதுவே கூர்வேல் வளவ".

என வரும் சங்கப்பாட்டால் இவ்வுண்மை அறியப்படும். அடுத்துவரும் பொருண்மை பரிந்துரையாக அமைகின்றது. ஒருவர் ஒருவருக்கு உதவுதற் பொருட்டுப் பரிந்துரை செய்யுங்கால் பன்னிப்பன்னிப் பலபட எழுதுவதைக் காண்கிறோம். ஆனால் இத்திருமுகத்தோ மூன்று சீர்களால் பரிந்துரை அமைகின்றது அது;

"தன்போல் என்பால் அன்பன்"

என்பதாகும். இதன் அருமை நினைந்து நினைந்து இன்புறத்தக்கதாம். உலகில் இதற்கு மேலாகப் பரிந்துரை வழங்குதற்கு வேறு எச்சொற்களும் அமையா. தன்பால் காண்பது கருதிப் போந்தனன் என்பது, இன்றும் உலகினில் கூறும் கூற்றேயாம். ஒருவர் பிறர் இல்லத்துக்குச் சென்றால் தம் உள்ளத்தில் எத்துணை வேண்டுகோள் இருப்பினும், முதற்கண் எங்கு வந்தீர் என வினவும் போது, தங்களைப் பார்க்க வந்தேன் என்று கூறுவதுதான் மரபாக உள்ளது. பின்னர் தான், தம் வேண்டுகோளைச் சிறிது சிறிதாக வெளிப்படுத்துவர். இவ்வகையிலேயே 'தன்பால் காண்பது கருதிப் போந்தனன்' என முதற்கண் கூறிப் பின் 'மாண் பொருள் கொடுக்க' என்றும், 'கொடுத்த பின் இங்கு வரவிடுக்க' என்றும் அருளுகின்றார். ஆலவாய்ப் பெருமான் பாணருக்கு வேண்டும் பொருளைத் தாமே வழங்காது, சேரமானாரிடத்து ஆற்றுப்படுத்தியது ஏன் என்று ஒரு ஐயம் எழலாம். சேரமானாரிடத்து உள்ள பொருள்கள் அனைத்தும் அறத்தின்வழிப்பட்ட பொருளாகும். அத்தகைய பொருள்களைத் தக்கதொரு இசைப்பாணருக்கு வழங்குவதன் மூலம், ஏற்பார்க்கும், கொடுப்பார்க்கும், கொடுக்கப்படும் பொருட்கும் இனிதாம். இவ்வுண்மையை உயிர்கள் உணரவும், தம் வாழ்வில் ஏற்றுக் கடைப்பிடிக்கவும், இறைவன் இவ்வாறு ஆற்றுப்படுத்தினன் என்பது அறியத்தக்க தாம். இதனை 'மாண் பொருள்' எனக் குறிப்பதால் உய்த்துணரலாம். 'வரவிடுப்பதுவே' என்றது அவ்விசைப் பாணர் கடமை உணர்வு தவறாது இசைத்து வரும் இசைத்திறனின் நுகர்வை விடுத்தற்கு அரிதாதல் பற்றியாம்.

'அடியார்க்கு எளியன் சிற்றம்பலவன்' எனத் தொடங்கும் பாடலும் அனுப்புநர், பெறுநர், பொருள்திறன் என முறைப்படுத்திக் கூறும் அமைப்பில் பிறழாது விளங்குதலை அப்பாடலால் அறியலாம்.

**காரைக்கால் அம்மையார்**

புனிதவதியார் என்னும் இயற்பெயருடன் வாழ்ந்த இவருக்கு, இறைவன் தந்த

அருட்கொடை நான்காம். ஒன்று, இறைவனே அடியவராக வந்து அமுது உண்டது. இரண்டு, இதன் வாயிலாக மாங்கனிகள் இரண்டை ஒன்றன் பின் ஒன்றாக வழங்கி அருளியது. மூன்றாவது, இவருக்குப் பேய்வடிவு வழங்கியது. நான்காவது, 'வரும் இவள் நம்மைப்பேணும் அம்மைகாண்' என அருளி, அவர் வேண்டும் விருப்பை வழங்கி அருளியது. இறைவன் அம்மையே! என அழைத்த அழைப்பைச் சேக்கிழார்,

"அருகுவந் தனைய நோக்கியம்மையே யென்னுஞ் செம்மை
ஒருமொழி யுலக மெல்லா முய்யவே யருளிச் செய்தார்".

எனப் போற்றி மகிழ்வர்.

**அருளிய நூல்கள்**

இப்பெருமாட்டியார் அருளியவை இருநூல்களும் இருபதிகங்களும் ஆம். இவற்றுள் அற்புதத்திருவந்தாதி இம் மண்ணுலகில் தம் கணவன் தம்மைத் தெய்வம் என்று துறந்ததை அறிந்து, திருவருளால் பேய்வடிவு ஆகியதும் பாடிய முதற் பெரும் நூலாகும்.

"உற்பவித் தெழுந்த ஞானத் தொருமையி னுமைகோன் தன்னை
அற்புதத் திருவந்தாதி அப்பொழு தருளிச் செய்வார்
பொற்புடைச் செய்ய பாதபுண்டரி கங்கள் போற்றும்
நற்கணத் தினில்ஒன்றானேன் நானேன்று நயந்து பாடி".

என்பது சேக்கிழார் வாக்காகும். திருவருளால் தோன்றிய ஞான ஒருமையால் இவ்வந்தாதி அருளப்பெற்றது என்பதும், அதனால் இறைவன் திருவடிகளைப் போற்றும் நற்கணங்களுள் ஒன்றாகும் பேறு கிடைத்தது என்பதும் இதனால் தெரிய வருகிறது. இங்குக் குறிக்கப்படும் ஞான ஒருமை என்பது ஒருநெறிய மனமாய், உறைப்புடையமனமாய் நிற்கும் அம்மையாரின் திருவுள்ளத்தைக் குறிக்கும். இவ்வரிய குறிப்பை அருளுதற்கு;

"அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம் என்றும்
அவர்க்கே நாம் அன்பாவ தல்லால் – பவர்ச்சடைமேற்
பாகாப்போழ் சூடும் அவர்க்கல்லால் மற்றொருவர்க்கு
ஆகாப்போம் எஞ்ஞான்றும் ஆள்".

"ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத் தேன் – ஒன்றேகாண்
கங்கைமால் திங்கட் கதிர் முடியான் பொங்கொளிசேர்
அங்கையாற் காளாம் அது".

எனவரும் திருவந்தாதிப் பாடல்களே நிலைக்களனாகும். இனி 'புண்டரிகங்கள் போற்றும் நற்கணத் தினிலொன் றானேன் நான்' என்று நயந்து பாடியருளுதற்கு;

"பெறினும் பிறிதியாதும் வேண்டேம் நமக்கு ஈது
உறினும் உறாதொழியு மேனும் – சிறிதுணர்த்தி

மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்தன் பேயாய
நற்கணத்தில் ஒன்றாய நாம்".

என வரும் பாடல் அடித்தளமாயுள்ளது. 'காரைக்கால் பேய்ச்சொல்' (அற்புத–107), 'செடிதலைக் காரைக்கால் பேய்' (திருவாலங்காட்டு–11), 'காரைக்கால் பேய் நன்பாடல்' (மூத்ததிருப்.–11) என அம்மையார் தம் திருவாக்கால் குறிக்குமாற்றான் இப்பேய்வடிவம் பெற்றமையையே பெரும் பேறாகக் கருதியமை தெரியவருகிறது. நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகையில் அம்மையாரின் இயற்பெயரையோ, இறைவனே அழைத்த அம்மை என்னும் பெயரையோ குறியாது, 'பேயார்க்கும் அடியேன்' எனக் குறித்ததும் அம்மையாரின் திருவுளம் பற்றியேயாம் என்பதும் அறியத்தக்கது.

**திருவிரட்டை மணிமாலை**

"ஆய்ந்தசீ ரிரட்டை மாலை அந்தாதி யெடுத்துப் பாடி
ஏய்ந்தபே ருணர்வு பொங்க எயிலொரு மூன்று முன்னாள்
காய்ந்தவ ரிருந்த வெள்ளிக் கயிலைமால் வரையை நண்ண
வாய்ந்தபே ரருண்முன் கூர வழிபடும் வழியால் வந்தார்".

எனச் சேக்கிழார் அருளுவதால் அற்புதத் திருவந்தாதியை அடுத்துத் திருவிரட்டை மணிமாலையை அம்மையார் அருளியமை தெரியவருகிறது. ஆசிரியமும் வெண்பாவுமாகிய பாடல்கள் மாறி மாறி வர இருபது பாடல்களைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளமையின் இப்பெயர் பெற்றது. இறைவனை மறவாது வாழ்வாரை மண்ணுலகத்து என்றும் பிறவாமை காப்பன் என அருளும் அம்மையார், இறைவனை 'ஆதிரை நன் னாளானை' (8) என்றும், ஆதிரையான் (10) என்றும் குறித்தருளுகின்றார். திருவைந்தெழுத்தைத் தலையாய ஐந்து எனக் குறித்துப் போற்றுவர். தலையில் இருக்கும் கங்கையை, இட மருங்கில் அமர்ந்து இருக்கும் உமை காணின், என் செய்வாய் என நகைச்சுவையாக இறைவனைக் கேட்டும் மகிழ்வர் (5). இக்கருத்து இவருக்குப் பின்தோன்றிய நாவரசர் திருவாக்கிலும் இடம் பெற்றுள்ளது.

"வங்கமலி கடல் நானாக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானோர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ள உமை
நங்கை யறியிற் பொல்லாது கண்டாய் எங்கள் நாயகனே".

என்பது அப்பாடலாகும்.

நெஞ்சே! 'உற்றார்கள், செத்த மரம் அடுக்கித் தீயாமுன், நெய்யாடி தந்திறமே கேள்' எனத்தம் நெஞ்சறிவுறுத்தலாகக் கூறி நிறைவு செய்திருப்பது அம்மையார் நம்மனோரை நோக்கி ஆற்றுப்படுத்துவதேயாம்.

**பதிகங்கள்**

திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் என்றும், மூத்த திருப்பதிகம் என்றும் அருளப்பெற்ற இருபதிகங்களும், கயிலை சென்று வந்த அம்மையார், தம் தலையினால் நடந்து திருவாலங்காடு அடைந்தவுடன் அருளியவையாகும். இவற்றுள்ளும் முதற்கண் பாடியது 'கொங்கை திரங்கி' எனத் தொடங்கும் திருப்பதிகமாகும்.

அறவா! நீ ஆடும் போது உன் அடியின் கீழ் இருக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்ட அம்மையாருக்கு, அவ்விருப்பை ஆலங்காட்டில் பெறுவாய், என இறைவன் அருளினன், அவ்வாறு அருளியதற்கேற்ப, அம்மையார் இறைவனின் ஆடலைக் கண்டு மகிழ்ந்துகொண்டிருக்கும் நிலையை இப்பதிகத்தால் அறியலாம். "ஆடும் எங்கள் அப்பன் இடம் திருவாலங்காடே" எனப் பாடல்தோறும் கூறி மகிழும் அம்மையார், அவ்வாடற்சிறப்பைப் பலபட எடுத்துக்கூறி மகிழ்கின்றார். இப்பதிகத்தில் வரும் பேய் வருணனை, பிற்காலத்து எழுந்த பரணி நூல்களில் வரும் பேய் வருணனைக்கு முன்னோடியாக அமைந்துள்ளது.

"துத்தங்கைக் கிள்ளை விளரிதாரம்
உழைஇளி ஓசைபண் கெழுமப்பாடிச்
சச்சரி கொக்கரை தக்கையோடு
தகுணிதந் துந்துபி தாளம்வீணை
மத்தளங் கரடிகை வன்கைமென்றால்
தமருகங்கு டமுழா மொந்தை வாசித்து
அத்தனை விரவினோ டாடும் எங்கள்
அப்பன் இடந்திரு வாலங்காடே".

என வரும் பாடல் பண்டைக்காலத்தில் இருந்த பண் அமைப்பையும் இசைக் கருவிகளையும் அறிதற்குக் கருவியாக உள்ளது.

இதனை அடுத்து வரும் 'எட்டி இலவம்' எனத் தொடங்கும் பதிகம், இறைவன் ஆடும் ஆடலைக் கண்டு மகிழ்ந்து, போற்றி வரும் நாட்களில் பாடியதாகும். இப்பதிகத்தில் வரும், காடு வருணனையே பின் எழுந்த பரணி நூல்களில் வரும் காடு பாடியது என வரும் பகுதிக்கு முன்னோடியாகும்.

இவ்வாறு பாடிய நான்கு பதிகங்களில் இரட்டை மணிமாலை நீங்கலாக உள்ள ஏனைய மூன்று பதிகங்களிலும் உள்ள இறுதிப் பாடல்களில், பாடிய தம்மையும் இப்பதிகத்தால் வரும் பயனையும் கூறி அருளுகின்றார். இவ்வமைப்பு முறை, பின் வந்த திருஞானசம்பந்தர் தம் திருக்கடைக்காப்பை அருளுதற்கு முன்னோடியாக உள்ளது.

**ஐயடிகள் காடவர்கோன் நாயனார்**

இரண்டாம் மகேந்திரனின் மகனும், இராசசிம்மப் பல்லவனின் தந்தையும் ஆன பரமேசுவரவர்மன் என்னும் மன்னர் பெருமானே பக்குவ முதிர்ச்சி பெற்ற அளவில் ஐயடிகள்

காடவர்கோன் எனப் பெயர் பெற்று விளங்குகின்றார். அரசியல் நிலையில் ஆட்சியை மேற்கொண்டு நிற்கும் வேந்தனின் தந்தையை 'ஐயன்' எனக் குறிப்பிடுவர். இக்காடவர்கோன் இன்பம் பெருகும் திருத்தொண்டிற்கு அரசியல் தடையாம் எனக் கருதித் தம் மைந்தன்பால் தம் அரசுரிமையை ஒப்புவித்து, நெடுநாள் சிவத்தொண்டு புரிந்திருந்தார். இந்நிலையில் இவர்தம் மைந்தன் காலத்து 'ஐயடிகள்' எனவும் 'ஐயன்னடிகள்' எனவும் அழைக்கப்பெற்றார். இவர் காலம் கி.பி. **670** முதல் **685** வரை என்பர்.

அரசியலை விடுத்து அருளியலில் தலைப்பட்ட இவர், சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடங்களைப் போற்றி மகிழ்ந்தனர். அவ்வகையில் எழுந்த நூல் 'ஊர் வெண்பா' என்பதாகும். இதுவே காலப்போக்கில் 'க்ஷேத்திரத் திருவெண்பா' என அழைக்கப்பெறுவதாயிற்று. சிற்றிலக்கியங்களில் ஊர் வெண்பா என அழைக்கப்பெறுவது இவ்வகையதேயாம். இவர் சென்ற திருப்பதிகள் பலவாக இருப்பினும், இற்றைக்குக் கிடைத்திருக்கும் பாடல்கள் இருபத்து நான்கு திருப்பதிகளைப் பற்றியேயாகும். இவ்விருபத்து நான்கு திருப்பதிகளுள் சோழ நாட்டைச் சார்ந்தன பதினேழாம். தொண்டை நாட்டைச் சார்ந்தன மூன்றாம். நடுநாட்டையும், வட நாட்டையும் சார்ந்தன ஒவ்வொன்றாம். பாடல் பெற்ற திருப்பதி குறியாது இருப்பன இருபாடல்களாம். அவை பத்தும், இருபத்து மூன்றுமாய எண்ணுடையனவாம். "பாங்கரும் சிறப்பின் பல்லாற்றானும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே" என்னும் தொல்காப்பியம். இந்நிலையாமை கூறுவார் அனைவரும், இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை என மூவகைப் படுத்துக் கூறுவர். இவர் அவற்றுள் ஒன்றான யாக்கை நிலையாமையைப் பெரிதும் எடுத்துக் கூறியுள்ளார். வெண்பா யாப்பினவாய இப்பாடல்களுள், முன்னிரண்டு அடிகளும் நிலையாமையையும், பின்னிரண்டு அடிகளும் அவ்வுணர்வின் பயனாக இறையடி சார்ந்து இன்புற வேண்டும் என்பதையும் கூறுவனவாய் உள்ளன.

> "........................................................................ நாடுகின்ற
> நல்லச்சிற்றம் பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
> தில்லைச்சிற் றம்பலமே சேர்".

என்பது முதற்பாடலாகும். "நல், அச்சு, இற்று அம்பலமே நண்ணாமுன் தில்லைச் சிற்றம்பலமே சேர்" எனப் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும். உடலை நல் அச்சு என்றார், அது உயிர் வளர்தற்கு உறுதுணையாய் நிற்றலின்,

> "........................................................................ வந்துந்தி
> ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
> ஐயாறு வாயால் அழை".

என்பது மூன்றாவது பாடல் ஆகும். ஐ, ஆறு, வாய் ஆறு பாயாமுன் – தொண்டையிலிருந்து வெளிவரும் கபநீர், வாய் வழி வந்து துன்புறுத்தாமுன், திருவையாற்றை வாயால் அழைத்து

மகிழ்வாயாக என்பது இதன் பொருளாம். இவ்வாறு நயம்பட உரைக்கும் திருப்பாடல்கள் பலவாம்.

### சேரமான் பெருமாள் நாயனார்

சேர மன்னனாகிய இவர், நாளும் செய்து வரும் சிவவழிபாட்டின் நிறைவில், இறைவனின் திருச்சிலம்பு ஓசை கேட்டு மகிழும் பெரும்புண்ணியம் உடையவர். ஒரு நாள் அவ்வோசை கேளாத நிலையில், இனி வாழ்தல் தக்கதன்று என்று கருதித் தம் உடைவாள் கொண்டு இறக்கத்துணிய, இறைவன் விரைந்து திருச்சிலம்பு ஓசை கேட்கச் செய்தான். திருவாரூரில் நம்பியாரூரர் பதிகம் பாட அதனைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தமையால் சிலம்பு ஒலி இசைக்கக் காலம் தாழ்த்தது எனக் கூறி அப்பெருமகனாராகிய நம்பியாரூரரை நினைப்பித்தார். அவரைக் காணச் சென்ற சேரர் பெருமகனாரும், தில்லை சென்று கூத்தப்பெருமானை வணங்கி, அவர் திருவடியின் கீழ்ப் "பொன் வண்ணத் தந்தாதி" என்னும் அரிய பனுவலை விண்ணப்பித்துக் கொண்டார் என்பது வரலாறு.

### பொன்வண்ணத் தந்தாதி

'பொன் வண்ணம்' என்னும் முதற்குறிப்புடையதாய், அந்தாதித் தொடையில் இப்பனுவல் அமைந்துள்ளமையின் இப்பெயர் பெற்றது. நூறு பாடல்களை உடையது. 101–ஆவது பாடலில் இந்நூலை இவர் பாடிய குறிப்பு உள்ளது. பொன்னின் நிறம் எந்நிறமோ அந்நிறம் அவன்தன் திருமேனியின் நிறமாகும். மின்னின் நிறம் எந்நிறமோ அந்நிறமே அவன் திருச்சடையின் நிறமாகும். வெள்ளி மலையின் நிறம் எந்நிறமோ அந்நிறமே அவன் இவர்ந்தருளும் ஆனேற்று ஊர்தியின் நிறமாகும். அவனைக் கண்ட என்னிறம் எந்நிறமோ, அந்நிறமே அப்பெருமானின் நிறமாகும் எனத் தலைவி கூற்றாக வரும் கூற்றே முதல் திருப்பாடலாக அமைந்துள்ளது. 'துளியின்மை ஞாலத்திற்கு எற்று அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு' எனவரும் திருக்குறள் போல, வினா விடையுள்ளுறுத்தி வரும் அமைப்பில் இப்பாடல் அமைந்துள்ளது. இந்நூலில் அகச்சுவைபட வருவனவும், நெஞ்சிற்கு அறிவுறுத்தி வருவனவுமாய பாடல்கள் பல உள்ளன. வினா உரையாக இலக்கிய நயம் பட அமைந்த பாடல்களும் பல உள.

### அவற்றுட் சில

பூதப்படைகளை உடைய புண்ணியரே! நும் மீது புறங்கூற்றாகக் கூறப்படும் சொற்கள் பல உள. அவை நும்மீது ஏதம்பட எழுந்தன. அவ்வாறு எழுவது அறமன்றே. உமையம்மையாம் இளையாளொடும் பிரிந்து இருந்த உம்மை, ஒருமைப் படுத்தவே காமன் கணை தொடுத்தான். அன்னோனை நும் கண் மலரால் சேதப்படுத்தியது என்னோ? செப்புமின் என வருவது ஒன்று.

'இறைவனே! நீரும் நெருப்பும், மதியும் பாம்பும், யோகும் உமையுடனிருக்கையும், உருவும் அருவும், வேங்கையும் மானும், பகலும் இரவும், ஆக நீர் முரண்பட்ட பொருள்களுடன்

இருக்கின்றீர். இவ்வகையில் இருப்பது, பகை தீர்த்த பண்பன் என உயிர்கள் போற்றி மகிழவோ ?' என ஒரு பாடலில் வினவி மகிழ்கின்றார்.

> "பல் உயிர் பாகம் உடல்தலை
> தொல்பக லோன் மறல்பெண்
> வில்லிஓர் வேதியன் வேழம்
> நிரையே பதித் துதைத்துப்
> புல்லியுஞ் சுட்டும் அறுத்தும்
> உரித்துங் கொண்டான் புகழே
> சொல்லியும் பாடியும் ஏத்தக்
> கெடும் நங்கள் சூழ்துயரே".

என வரும் பாடல் ஒன்று **(36).** இப்பாடலில் பல் முதல் தோல் வரை உள்ளன ஆறு பொருள்களாம். அடுத்துப் பகலோன் முதல் வேழம் வரை உள்ள பொருள்களும் ஆறாம். இவற்றை இறைவன் அழித்தும் ஆட்கொண்டும் செய்த அருளிச் செயல்களும் ஆறாம். அவை பறித்து என்பது முதல் உரித்து என்பது வரை உள்ள ஆறுமாம். இவற்றை நிரல் நிறைப்படுத்தி எண்ணும்போது, இடையில் உள்ள பகலோன் முதலியவர்களை முன்னும், முன்னர் உள் பல் முதல் தோல் வரை உள்ள பொருள்களை இடைப்படுத்தியும், மூன்றாவதாக உள்ள பறித்து என்பது முதல் உரித்து என்பது வரை உள்ளனவற்றை வினை முதற்குரிய வினையாகக் கொண்டும் பொருள்கொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொள்ளில் பல் பறித்தும், மறலிஉயிர் உதைத்தும், பெண் பாகம் கொண்டு புல்லியும், வில்லி (மன்மதன்) உடல் சுட்டும், வேதியன் (நான்முகன்) தலை அறுத்தும், வேழம் தோல் உரித்தும் புகழ் கொண்டான் என வரும். அப்புகழைச் சொல்லியும் பாடியும் ஏத்த நம் துயர் கெடும் எனக் கூறிப் பாடலை நிறைவு செய்கின்றார். பறித்தலும், உதைத்தலும், புல்லலும், சுடுதலும், அறுத்தலும், உரித்தலும் கொடுஞ்செயல்களாயினும் அவை அனைத்தும் அவ்வவ்வுயிர்களையும் நல்லாற்றுப் படுத்துவதற்கே ஆதலின் அவையனைத்தும் இறைவன் புகழேயாம் என்பது கருத்து. இவ்வகையில் அமைந்த நிரல் நிறைப் பாடல் இலக்கிய உலகில் காண்டல் அரிதேயாம்.

**ஒப்புமைப்பகுதிகள்**

1. இறைவனின் மேனி, உடை, கண்டம், அணிந்த திருநீறு ஆகியவற்றை,

> "விரிகின்ற ஞாயிறு போன்றது
> மேனி, அஞ் ஞாயிறு சூழ்ந்து
> எரிகின்ற வெங்கதிர் ஒத்தது
> செஞ்சடை, அச்சடைக்கீழ்ச்
> சரிகின்ற காரிருள் போன்றது
> கண்டம், ஆக காரிருட்கீழ்ப்
> புரிகின்ற வெண்முகில் போன்றுள
> தால் எந்தை ஒண்பொடியே".

என உவமித்துக்காட்டுகின்றார் இவர். இதனோடு;

> "காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
> வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு – மாலையின்
> தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை, மற்றவற்கு
> வீங்கி ளே போலும் மிடறு".

எனவரும் காரைக்கால் அம்மையாரின் திருவாக்கு ஒப்பிட்டு மகிழ்தற்குரியதாய் உள்ளது.

2. இறைவற்கு அடிமையாகிய தொண்டர் துறக்கம் பெறுவது உறுதியாம் எனக்கூறும் நாயனார்,

> "காய்சின ஆனை வளரும்
> கனக மலையருகே
> போயின காக்கையும் அன்றே
> படைத்தது பொன் வண்ணமே".

என வரும் உவமைகொண்டு விளக்குகின்றார். இக்கூற்று,

> "இமயப்பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும்
> பொன்னிறமாய் இருக்கும் என்று இவ்வாறு உரைக்குமன்றோ இவ்விருநிலமே"

என வரும் யாப்பருங்கலக் காரிகையார் கூற்றோடு ஒப்பிட்டு மகிழ்தற்குரியதாய் உள்ளது.

**ஐயம் ஏற்றல்**

இறைவன் ஐயம் ஏற்றலை அருளாளர்கள் பலரும் கூறி மகிழ்வர் எனினும் இவர் கூறிமகிழும் திறம் பெரிதும் சுவைத்தற்குரியதாய் உள்ளது. பிச்சை ஏற்க வரும் பரமன் ஓர் இல்லத்திற்குச் சென்று பலிதா (பிச்சைக் கொடு) என்றானாம். அதற்கு அவ்வம்மையார் அதனைச் சூரியனுக்குக் கொடு என்றாளாம். பலிதா என்பதைப் பல் இதா எனப் பிரித்துத் தக்கன் வேள்வியில் கதிரவன் பல் உடைந்து இருப்பதால், அவனுக்கு அதைக் கொடு என்ற பொருளில் இவ்வாறு கூறினாள். அதைக் கேட்ட பரமன், அன்னம் (சோறு) கொடு என்றானாம். அதற்கு அவ்வம்மையார் அது (அன்னப்பறவை) அயன் ஊர்தியாதலின் அவனிடம் கேட்க என்றாளாம். அடுத்து அப்பரமன், ஐயம் பெய் (பிச்சை கொடு) என்றானாம். அதற்கு அவ்வம்மையார், ஐ அம்பு எய் எனப் பொருள்கொண்டு அவ்வாறு எய்பவன் மன்மதன் அல்லவோ என்றாளாம். மேலும் பரமன் உண்டி இங்கு அமைந்தது (யாம் விரும்பியது சோறு) என்றானாம். அதுபொழுது தான் அவ்வம்மையார் தம்மிடம் வந்து கேட்டவரது உள்ளத்தைத் தெரிந்து கொண்டாளாம். இக்கருத்து அமைந்த பாடல்,

> "பண்டங்கன் வந்து பலிதா என்
> றான்பக லோற்கிடேன் றேன்;
> அண்டங் கடந்தவன் அன்னம்என்
> றான் அயன் ஊர்தி என்றேன்;

கொண்டிங் குனையம் பெய் என்றான்
    கொடித்தேர் அநங்கன் என்றேன்;
உண்டிங் கமைந்ததென் றாற்குஅது
    சொல்ல உணர்வுற்றதே".

என்பதாம். இவ்வாறு அமைந்த பாடல்கள் பலவாம். தில்லையிலிருந்து திருவாரூர் சென்ற சேரர் பெருமகனார் அங்கு இருந்த நம்பியாரூரருடன் ஒருவர் ஒருவரில் கலந்த உணர்வுடன் பழகி வந்தனர். ஒரு நாள் இறைவன் திருமுன் சென்று திருமும்மணிக்கோவையை அருளினார்.

### திருவாரூர் மும்மணிக்கோவை

அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை ஆகிய மூவகைப் பாக்களாலும் நாற்பது பாடல்களைக் கொண்டு அமைந்தது இந்நூலாகும். அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது. திருவருள் சுவையை அகப்பொருள் சுவையோடு கூட்டித் தருவது. ஆரூரேயன்றி, திருச்சிராப்பள்ளி (10,12), திருக்கடவூர், திருமறைக்காடு (26) ஆகிய திருப்பதிகளும் இந்நூலில் குறிக்கப்பெற்றுள்ளன. அர்ச்சுனன் (4), குமரவேள் (19) ஆகியோர்கள் இடம்பெற்றுள்ளனர். தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் செல்லும் இடமும், அவன் சென்ற பருவமும், தலைவியின் உடலோடு பொருந்த உவமித்திருக்கும் திறன் முதற்பாடலில் கண்டு இன்புறலாம். தலைவன் களிறு வினாவி வருதல் (8), தழை கொண்டு வருதல் (12), செவிலி பின் தேடிச்சேறல் (18), தலைவி பாணனை மறத்தல் (20), தலைவனின் தேர்வரக்கண்டு மகிழ்தல் (27) முதலிய அகப்பொருள் துறைகள் இடம்பெற்றுள்ளன. தலைவி தோழியருடன் சிற்றில் இழைத்து, அடாஅதுஅட்ட அமுதம் வாய்மடுத்து இடா ஆயமோ டுண்ணும் பொழுதில் வந்த தலைவன் தன்னையும் விருந்தாக ஏற்று அருளுதியோ என்னத் தலைவி முலைமுகம் நோக்கி இறைஞ்சினளாய் அந்நிலையில் தலைவியின் உடம்பெல்லாம் அத்தலைமகனாக நிலைபெற்ற தன்மைக்குத் தண்ணீரில் பட்ட எண்ணெய்ச் சிறு துளி, தண்ணீர் முழுவதும் ஆனால் போன்றது எனக் காட்டியிருக்கும் உவமை அறிதற்குரியதாம்.

"நறைகமழ் எண்ணெய்ச் சிறுநுண் துள்ளி
பொங்கு புனல் உற்றது போலென்
அங்கம் எல்லாந் தானா யினளே". (28)

என்பது அப்பகுதியாகும்.

"தண்ணந் துறைவன் தடவரை அகலம்
கண்ணுறக் கண்டது முதலா ஒண்ணிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோள் இழைத் திருக்குங் கொள்கை போல
கனைதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிகழ் அகலத் தண்ண லாரூர்

ஆர்கலி விழவின் அன்ன தோர்
பேரலர் சிறந்தது சிறுநல் லூரே". ( 25)

என வரும் பகுதி, 'கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும் திங்களைப் பாம்பு கொண்டற்று' என வரும் திருக்குறள் பகுதியின் விளக்கமாக அமைந்துள்ளமை அறியத்தக்கது.

இவ்வரிய பனுவலைப் பாடிய சேரமானார், ஆரூரருடன் பல பதிகளையும் வணங்கவும், ஒருமுறைக்கு இருமுறையாகத் தம் அரண்மனைக்கு நம்பியாரூரர் வர, இருந்து மகிழவும் புண்ணியம் பெற்றவர். நிறைவாக, ஆரூரர் வெள்ளை யானை மீது கயிலை செல்லுதலை உணர்ந்து, தாமும் கயிலை சென்று, அங்கு இருந்தருளும் கயிலைப் பெருமானைக் கண்டு மகிழ்ந்த அளவில், விண்ணப்பித்த பனுவல் திருக்கயிலாய ஞானவுலாவாகும்.

**திருக்கயிலாய ஞானவுலா**

இவ்வுலா 97 கண்ணிகளை உடையது. உலாவாக அமைந்தது. இனிய அழகிய இவ்வுலாவில் அறியத்தகும் செய்திகள் பலவாம். சில குறிக்கத்தக்கன:

1. சிவலோகம், சிவபுரம் என்பன திருமுறைகளில் இடம் பெற்றிருப்பனவே. சிவலோகம் இறைவன் இருந்தருளும் உலகாகும் என்பதும், சிவபுரம் அதனுள் இறைவன் எழுந்தருளியிருக்கும் கோயிலாகும் என்பதும் 'சீரார் சிவலோகந் தன்னுட் சிவபுரத்தில் ஏரார் திருக்கோயிலுள்ளிருப்ப' என இந்நூலில் வரும் பகுதியால் அறிய இயலுகின்றது.

2. முருகன் செருக்குடைய சேனாபதி எனக் குறிக்கப் பெறுகிறார் (35, 36).

3. "இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
   எல்லாரும் செய்வர் சிறப்பு". (குறள். 752)

   "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
   ஒண்டொடி கண்ணே உள". (குறள். 1101)

எனவரும் திருக்குறள்கள் முறையே அரிவையையும், பேரிளம் பெண்ணையும் நலம்புனைந்துரைக்குங்கால் இடம்பெற்றுள்ளன.

4. மகளிரை அடி முதல் முடி வரை நலம்புனைந்துரைப்பதைப் பாதாதி கேசம் என்பர். இத்தொடர் 186–வது கண்ணியில் இடம் பெற்றுள்ளது.

5. மடந்தையை 'ஒள்ளிய தீந்தமிழின் தெய்வ வடிவாள்' எனக் குறிப்பதால் தெய்வத் தமிழ்த் திறனைப்போற்றும் இவர் திருவுள்ளம் தெரிகிறது.

**நக்கீரதேவ நாயனார்**

இப்பெயர் உடையார் அருளியனவாக 10 நூல்கள் உள்ளன. எனினும் திருமுருகாற்றுப்படையை அருளிய நக்கீரர் இவரின் வேறாவர் என்பது முன்னரும் கூறப்பட்டது.

ஆதலின் இப்பெயர் உடையார் அருளிய நூல்கள் ஒன்பது என்றலே பொருந்துவதாம்.

1. கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி

இந்நூல் 100 பாடல்களை உடையது. கயிலையையும் காளத்தியையும் மாறி மாறிப் பாடியிருக்கும் வகையில் ஒற்றைப்படை எண்களில் உள்ள பாடல்கள் திருக்கயிலையைப் பற்றியனவாயும், இரட்டைப் படை எண்களில் அமைந்தன திருக்காளத்தியைப் பற்றியனவாயும் உள்ளன.

நக்கீரதேவர் காளத்தியைக் கண்டு வணங்கிய நிலையில் கயிலை நினைவிற்கு வர, அதனையும் இணைத்துப் பாடியுள்ளார். இவ்வனுபவம், 'கயிலாயத்துச்சியுள்ளான் காளத்தியான் அவன் என் கண்ணுளானே' எனவரும் நாவரசரின் அனுபவத்தோடு ஒத்துள்ளது.

சொல் திரியாகப் பொருள் நெய்யாக, நா அகலாக, வெண்பா விளக்காக வியன் கயிலைப்பெருமாற்கு ஏற்றினன் என முதற்பாடலில் இந்நூலை விளக்காக உருவகித்துக் காட்டுகிறார். எட்டாவது பாடலில், காளத்தி ஆள்வார் நஞ்சு உண்டமையால், இவ்வுலகு உண்டு என்று கூறுகின்றார். 'பண்புடையார்ப் பட்டு உண்டு உலகம்', 'உண்டால் அம்ம இவ்வுலகம்' எனவரும் கூற்றுக்களை இக்கருத்து நினைக்க வைக்கின்றது. இதனுள் அகப்பொருள் சுவை அமைந்த பாடல்கள் பல. அவை 34, 35, 36, 58, 63, 64, 78, 90 முதலியனவாகும். கண்ணப்பர் (12), சிலந்தி (32), மார்க்கண்டேயர் (33), விசயன் (70), உபமன்யு (81) ஆகியோர்களை இந்நூற்கண் இயைபுபடுத்திக் கூறுகின்றார். இவையன்றி ஒப்பீடாகக் காண்டற் குரியனவும் சில உள.

அ. "கருத்துக்குச் சேயையாய்க் காண்டக்கோர் காண
இருத்தி திருக்கயிலை என்றால் – ஒருத்தர்
அறிவான் உறுவார்க் கறியுமா றுண்டோ
நெறிவார் சடையாய் நிலை". (15)

என வரும் பாடல் 'அருத்தி செய்த அன்பரை முன் ஆண்டதுவும் அவர்தம் கருத்துக்குச் சேயனாய்க் காண்' எனவரும் திருக்களிற்றுப் பாடியாரோடும்,

ஆ. "சார்ந்தாரை எவ்விடத்துங் காப்பனவும்
..............................................................................
காளத்தி யார்தம் கழல்". (60)

என வரும் பகுதி, "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதலால்" என வரும் சிவஞானபோதப் பகுதியோடும்,

இ. "கவராதே காதலித்தின் றேத்துதிரேற் காளத்தி ஆள்வார்நீர்
..............................................................................
ஆதரித்த தெய்வமே ஆம்". (72)

என வரும் பகுதி, "கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக்

காணலாமே" என வரும் நாவரசரின் திருத்தாண்டகத்தோடும்,

ஈ. "தாளொன்றாற் பாதாளம் ஊடுருவத் தண்விசும்பில்
தாளொன்றால் அண்டங் கடந்துருவித் தோளொன்றால்
திக்கனைத்தும் போர்க்கும் திறற்காளி காளத்தி
நக்கனைத்தான் கண்ட நடம்". (88)

என வரும் பாடல்,

"அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும் – கடகம்
மறிந்தாடு கைபேரின் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் அற்றா தாங்கு".

என வரும் அற்புதத்திருவந்தாதியோடும்,

உ. "காட்மேற் காட்டித் கலந்தென்னைத் தன்னொடும்
கூட்டுமேற் கூடலே கூடு".
(20)

என வரும் பகுதி,

"கூடற் பெருமானைக்
கூடலார் கோமானைக்
கூடப் பெறுவனேல்
கூடு". (82)

என வரும் முத்தொள்ளாயிரப் பாடலோடும்,

2. "பிழைப்புவாய்ப் பொன்றறியேன் பித்தேறி னாற்போல்
அழைப்பதே கண்டாய் அடியேன்". (98)

என வரும் பகுதி,

"பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியாநாயேன்
குழைத்த சொல் மாலைக்கொண்டருள் போற்றி".

என வரும் திருவாசகத்தோடும்,

3. "தொழுது நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவில்சீர்க் காளத்தி மன்னன் – பழுதிலாப்
பத்தர்களைக் கண்டாற் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக என்று". (86)

என வரும் பாடல்,

"படையும் பாசமும், பற்றிய கையினீர்!
அடையன் மின், நமது ஈசன் அடியரை!
விடைகொள் ஊர்தியினான் அடியார் குழாம்
புடைபுகாது, நீர், போற்றியே போமினே!".

என வரும் நாவரசர் அருளிய காலபாசத் திருக்குறுந்தொகையோடும்,

4. "செய்ய சடைமுடியென் செல்வனையான் கண்டெனது
கையறவும் உண்மெலிவும் யான்காட்டப் – பையவே
காரேறு பூஞ்சோ லைக் காளத்தி யாள்வார்தம்
போரேறே இத்தெருவே போது". (78)

என வரும் பாடல்,

"துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்
பிடியேயான் நின்னை யிரப்பல் – கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரிபுகுதலுமெஞ்
சாலேகஞ் சார நட".

என வரும் முத்தொள்ளாயிரப் பாடலோடும், ஒப்பிட்டு உணர்தற்குரியவாயுள்ளன. திருவைந்தெழுத்தின் பெருமையைக் கூறுவார், அதனை மூன்று பாடல்களில் கூறி, (39,40,100) அதன் அரும்பயனை,

"வாயிலே வைக்கும் அளவில் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்கும் – தூயவே
கம்பெருமா தேவியொரு மன்னு கயிலாயத்து
எம்பெருமான் ஓரஞ் செழுத்து". (39)

எனக் கூறியிருப்பதும் அறிதற்குரியதாம்.

### திருஈங்கோய்மலை எழுபது

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது என வருவன போல, இதுவும் எண்ணொடு பட்டபெயரால் அமைந்துள்ளது. எழுபது பாடல்களை உடைய இந்நூலில், மலைநிலக் கருப்பொருள்கள் பலவும் இடம்பெற்றுள்ளன. 'சேயோன் மேய மைவரை உலகம்' என்னும் தொல்காப்பியம். இதனால் மலைநிலத் தெய்வம் முருகன் என்பது பெறப்படினும், கயிலையைப் பொறுத்தமட்டில், அது இறைவற்கே உரியதாம். "ஒலி கெழு கயிலை மலைகிழவோனே" எனத் திருவாசகம் சாற்றுவதும் காண்க. இது பற்றியே இந்நூற் கண்ணும், முருகப் பெருமானைக் குறிக்கும் நக்கீரர், பூமயிலி தாதை பொருப்பு (10), இன்பக் குமரன் முதுதாதையார்குன்று (40) எனக் கயிலையைப் பெருமானுக்கே உரியதாகக் குறித்துப் போற்றுகின்றார். மலைக்குரிய பெயர்களான சிலம்பு, குன்று, பொருப்பு, வெற்பு, வரை ஆகிய

சொற்கள் இந்நூற்கண் அமைந்துள்ளன. குறவர், குற மகளிர்க்குரிய திணைநிலைப் பெயர்களும், தினை, தேன் ஆகிய உணவுப் பொருள்களும், சந்தனமரம், வேங்கைமரம் முதலிய மரங்களும், குரங்கு, களிறு, புலி, பன்றி முதலிய மலை, நில, விலங்குகளும், மயில், கிளி போன்ற பறவை இனங்களும் இடம்பெற்றுள்ளன.

மானைப் பிடித்ததற்கு என அம்பு எய்யும் குறவர், அம்மானின் நோக்குத் தம் குறத்தியரின் நோக்கிற்கு ஒப்புமையாக இருப்பதைக் கண்டு அம்பு எய்தலை விடுத்து, அம்மானை, பையப் போ என்கிறார்களாம் **(12)**. தன்னொடு ஊடிய பெண் யானை வருந்தக் கண்டு, ஆண்யானை வாழைக்கனிகளைத் தேர்ந்து எடுத்துக் கொடுத்து, அதன் குணத்தைப் பாராட்டி அதன் ஊடலை மாற்றுகின்றதாம் **(11)**. ஓர் ஆண் குரங்கு தன் குழந்தைக்குத் தன் விரலால் தேன் தோய்த்து ஊட்டுமாம் **(9)**. வண்டுகள் தாமரையின் தாது அளைந்தமையால் பொன்னிறத்தனவாய், மனைநீடி மன்னி மணம் புணருமாம் **(43)**. குறத்தியர் தினைமாவைத் தேனில் குழைத்துத் தேக்கு இலையில் வைத்து, வந்த விருந்தை ஊட்டுவாராம் **(44)**. இனைய பல காட்சிகளை இந்நூற்கண் நக்கீரர் சுவைததும்பக் காட்டியுள்ளார்.

> "வழகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்தீ
> முழுகிய தென் றஞ்சி முதுமந்தி – பழகி
> எழுந்தெழுந்த கைநெறிக்கும் ஈங்கோயே திங்கட்
> கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று".

என வரும் பாடல்,

> "குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தள் – குலைமேற்பாய
> அழலெரியின் மூழ்கினவால் அந்தோ அளியவென் றயல்வாழ்மந்தி
> கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து  கல்லருவி தூஉம்
> நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்".

என வரும் யாப்பருங்கல விருத்தி மேற்கோள் செய்யுட்கு அடித்தளமாயுள்ளது. 'மக்கள் தாமே ஆறறி உயிரே, பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' என்னும் தொல்காப்பியர், மக்கட்கு இருக்கும் ஆறறிவு போல விலங்குகள் சிலவற்றிற்கும் ஆறறிவு உண்டு என்பர். அவ்விலங்குகளுள் குரங்கும் ஒன்றாம். இக்குரங்குகள் ஈங்கோய் மலையில் இருக்கும் இறைவனை மஞ்சன மாட்டியும், மலர் இட்டும் போற்றும் எனக் கூறுகின்றார் **(34)**.

**ஒப்பீடு**

> "முள்ளார்ந்த வெள்ளிலவ மேறி வெறியாது
> கள்ளார்ந்த பூப்படியுங்கார் மயில்தான் – ஒள்ளார்
> எரிநடுவுட் பெண்கொடியா ரேய்க்கும் ஈங்கோயே
> பரிநெடுநூல் மார்பன் பொருப்பு".

என வரும் பாடல்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
இலவ மேறிய கலவ மஞ்ஞை
எரிபுகு மகளி ரேய்க்கும்
அரில்படு கள்ளியங் காடிறந் தோரே".

என வரும் ஐங்குறுநூற்றுப் பாடலோடு ஒப்பிட்டுணர்தற்குரியதாயுள்ளது.

### திருவலஞ்சுழி மும்மணிக்கோவை

பிற்காலப்பாட்டியல் இலக்கணப்படி அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூவகைப் பாடல்களாலும், 30 பாடல்களைக் கொண்டு இயலுவது மும்மணிக்கோவையாகும். எனினும் இந்நூல் 15 பாடல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. இதனால் மூவகைப் பாக்களைக் கொண்டு அமைதல் மும்மணிக் கோவைக்கு இயல்பே அன்றி, 30 பாடல்களைக் கொண்டு இலங்க வேண்டும் என்ற நியதி இல்லை எனத் தெரிகிறது.

அகப்பொருள் ததும்பப் பாடல்கள் பலவும் அமைந்துள்ளன. தலைவனிடம் இருந்து வந்த பாணனை நோக்கிக் கடிந்து கூறும் தலைவி ஒருத்தி, நாம் (தான், தலைவன், பாணன்) மூவரும் மூன்று பயன்களைப் பெற்றோம் என்று கூறுகின்றாள். பாணனே! நீ இல்லதும் உள்ளதும் சொல்லிப் பரத்தையிடம் பொருள் பெறுகின்றாய். தலைவரோ அப்பரத்தையரைத் தழீஇ இன்பம் பெறுகின்றார். யானோ மகப் பெற்றவகையில் மகிழ்ந்து வாழ்கின்றேன். இவ்வகையில் நாம் மூவரும் அவரவர் நிலையில் அமைவு பெற்று வாழ, நீ இங்கு வருவதற்குக் காரணமில்லையே என வெகுடற் குறிப்புப்படக் கூறுகின்றாள். தலைவி பாணனிடம் கூறும் வகையில் ஈதோர் புதுமைக் கூற்றாகவுள்ளது.

### திருவெழு கூற்றிருக்கை

ஒன்று முதல் ஒவ்வொரு எண்ணாகப் படிப்படியாகக் கூட்டியும் குறைத்தும் வர, இவ்வகையில் ஏழு எண்கள் வரை அமையும் பாடல் எழு கூற்றிருக்கையாம். இறைவனின் அருட்பெருஞ்செயல்கள் பலவும் இவ்வகையில் அமைத்துக் கூறியிருப்பது படித்து இன்புறத்தக்கதாம். இது ஞானசம்பந்தரின் திருவெழு கூற்றிருக்கையை அடியொட்டியமைந்துள்ளது[1].

'சிறியேன் சொன்ன அறிவில் வாசகம்' என இப்பாடலிலும், 'தணிந்து என் மேல் மெய் எரிவு தீரப் பணித்தருளும்' என இதனை அடுத்து வரும் வெண்பாவிலும் வருவன இவர் இறைவனோடு மாறுபட்டு வாதாடிய வரலாற்றினுக்கு அடிப்படையாய் உள்ளன.

### பெருந்தேவபாணி

தெய்வத்தை முன்னிலைப்படுத்திப் பரவும் பாடல் தேவபாணி எனப்படும். பாணி – பண்ணொடுங் கூடியது. இறைவனின் குணநலன்களும் செயல் நலன்களும் இதன்கண் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இப்பாடலில் வரும் வடிவன், கண்ணன் என்பனவாகிய

படர்க்கைப் பெயர்கள், ஐவிகுதி பெற்று முன்னிலைச் சொற்களாய் வடிவினை கண்ணனை என வந்துள்ளன. இத்தகைய சொல் வழக்குச் சங்க நூல்களில் காணப்படாத புதுமையுடையதாகும். 'கூடல் ஆலவாய்க் குழகன் ஆவது அறியாது அருந்தமிழ் பழித்தனன்' என இந்நூலகத்தும்,

> "விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டாது
> இகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன் – விரைந்தென்மேற்
> சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே
> ஆற்றவும் நீ செய்யும் அருள்".

என இதனையடுத்து வரும் இறுதி வெண்பாவிலும் வருவன நக்கீரர் இறைவனோடு மாறுபட்ட வரலாற்றினுக்கு அரணாகின்றன.

**கோபப் பிரசாதம்**

நன்னெறியில் நின்று தன்னை நினைந்தார்க்கு இறைவன் நலம் அருளுவன். தீயநெறியில் நின்று தன்னை நினைப்பினும் அல்லது மறப்பினும் அவர்கள் அத்தீய நெறியில் நிற்கு மாற்றினைத் திருத்த; ஒறுத்துப் பின்னரே அருளுவன். இவற்றுள் முன்னையதை அறக்கருணை என்றும், பின்னையதை மறக்கருணை என்றும் கூறுவர். இவ்வகையில் இறைவன் மன்னுயிர்களை ஒறுப்பதும் அவன் அருளினாலேயாம். 'நிக்கிரகங்கள் தாமும் நேசத்தால் ஈசன் செய்வது' என்னும் ஞானநூலும். இந்நூற் பெயரில் வரும் கோபம் என்பது இறைவனின் மறக்கருணையையும், பிரசாதம் என்பது அறக்கருணையையும் குறிக்கும்.

> "இன்னவை பிறவும் எங்கள் ஈசன்
> கோபப் பிரசாதங் கூறுங்காலை".

என வருவதால், இந்நூற்பெயர் ஆசிரியரால் இடப்பட்ட பெயர் எனத் தெரிகிறது. இப்பெயரை அருந்தமிழ்ப் படுத்தின் 'அளியும் தெறலும்' எனக் குறிக்கலாம். மால், கண்ணப்பர், சண்டியார், சாக்கியர், நந்திதேவர், பிருங்கியார், அர்ச்சுனன், குருபரன், மார்க்கண்டேயர், சிலந்தியார், சனகர் முதலிய நால்வர், ஆகியோருக்கு அருளியது அறக்கருணையாம். அயன், மன்மதன், இயமன், முப்புரத்தவர், கதிரவன், தக்கன், தீக்கடவுள், சந்திரன், சலந்தரன், தாரகன் முதலியோர்க்கு அருளியது மறக்கருணையாம். எத்திறத்தாலும் அவன் அருளுவது அருளேயாக, அப்பெருமானை விடுத்துப் பிறரை நினைப்போர், முயல்விட்டுக் காக்கைபின் செல்வாரையும், விளக்கு இருக்க மின்மினியைக் கொள்வாரையும் போல்வர். அருட்கருணையுடைய பெருமானைப் போற்றாது திரியும் மூர்க்கர்களை உடனே மறிக்காத கூற்றம் மிகத் தவறு உடையது என இந்நூற் பொருண்மை அமைகின்றது. இதனகத்துக் குறிக்கப்பெற்ற உவமைகள், நாவரசர் திருப்பதிகத்தும் குறிக்கப் பெற்றவைகளாம்.

---

1. இவ்வெழு கூற்றிருக்கையை அடியொற்றி யாப்பருங்கல விருத்தியுரையுள் பலபாட வேறுபாடுகளுடன் ஒரு பாடலும் உள்ளது. எனினும் திருமுறையில் காணும் பாடமே சிறந்துள்ளது.

**கார் எட்டு**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் கார் நாற்பது என்று ஒரு நூல் இடம் பெற்றுள்ளது. அதனை நினைவு கூர்மாறு இந்நூற் பெயர் உள்ளது. எனினும் அந்நூல் உலகியல்வழி நின்று கார்கால வருணனையைக் கூறுவதாக உள்ளது. இந்நூல் இறைவனின் அருள்வழி நின்று, பெருமானின் சடை, மிடறு ஆகிய ஈருறுப்புக்களையும் வருணிப்பதாக உள்ளது. கார் காலத்தில் தோன்றும் மின்னல்களுக்குப் பெருமானின் சடை உவமையாம் திறம் பாடல் தோறும் குறிக்கப்படுகிறது. கழுத்தின் நிறம் கார் நிறத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. தலைவியைப் பிரிந்த தலைவன் மீள வருங்காலம் கார்காலமாம். ஆதலின் அதுவரை கற்பும், அன்பும் மீதூர ஆற்றியிருந்த தலைவியின் சிறப்பைக்,

"கற்பகலங் காண்புற்ற கார்" (5)

"ஆவிசோர் நெஞ்சினரை அன்பளக்க உற்றதே
காவிசேர் கண்ணாய்அக் கார்" (7)

என்று பாராட்டிக் கூறப்பட்டுள்ளமை கண்டு மகிழ்தற்குரியதாம். இந்நூல் நான்காவது பாடலில் வரும் நான்காவது அடி 'காம்பினங் கொள்தோளீ அக் கார்' என்றிருப்பதே பொருத்தமாகும். இதற்கு மாறாகக்கொள்ளும் பாடங்கள் சிறவா.

**போற்றித் திருக்கலி வெண்பா**

இது கலிவெண்பா யாப்பில் அமைந்தது. இறைவனைப் போற்றும் நிலையில் 'போற்றி' எனப் பன் முறையும் எடுத்தாளப் பெற்றிருத்தலின், இந்நூல் இப்பெயர் பெறுவதாயிற்று. 45 கண்ணிகளை உடைய இச்சிறு நூலில், 22 முறை போற்றி என்னும் சொல் வந்துள்ளமை அறியத்தக்கது. இறைவனைப் போற்றியுரைத்தலின் இப்பெயர் பெற்றது எனில், அது ஏனைய நூற்கும் பொருந்துதலுடைமையான் அங்ஙனம் கூறல் பொருந்தாதாம். மால், அயன், மார்க்கண்டேயர், மன்மதன், முயலகன், இராவணன், சண்டியார், முருகன், அந்தகன், அருச்சுனன், கண்ணப்பர் ஆகிய அடியவர்களுக்கு அருள் புரிந்தமையைப் போற்றுகின்றார் ஆசிரியர். யானை உரித்தது, நஞ்சு உண்டது, நால்வர்க்கு அருளியது போன்ற அருள் வரலாறுகளும் இடையிடையே இடம்பெற்றுள்ளன. இவ்வாறெல்லாம் இறைவனைப் போற்றி மகிழ்வார், இமையோர் போற்ற இறையடி சேர்வர் என இந்நூற் பயன் கூறி நூல் நிறைவு பெறுகின்றது.

உ
*சிவமயம்*

# பதினொன்றாந் திருமுறை

## திருவாலவாயுடையார்

*அருளிச்செய்த*

## 1. திருமுகப் பாசுரம்

*நேரிசை யாசிரியப்பா*

*திருச்சிற்றம்பலம்*

1. மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
5. பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)

கொருமையின் உரிமையின் உதவி, ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க;
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
10. தன்போல் என்பால் அன்பன்; தன்பாற்

காண்பது கருதிப் போந்தனன்;
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

*திருச்சிற்றம்பலம்*

---

*இத்திருப்பாடல் தோன்றிய வரலாறு.*

*திருவாலவாயென்பது செந்தமிழ்ப் பாண்டிநாட்டின் தலைநகராகிய மதுரையிற் சிவபெருமானுக்கமைந்த திருக்கோயிலாகும். எல்லாம் வல்ல இறைவன் அத்திருக்கோயிலில் என்றும் விளக்கமுற வீற்றிருந்து அடியார்களுக்கு அருள் சுரத்தல் பற்றி அப்பெருமானுக்குத் திருவாலவாயுடையாரென்பது பெயராயிற்று. மதுரைத் திருவாலவாயின்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமான் அருளிச் செய்ததாகப் பதினொராந் திருமுறையின் முதற்கண் அமைந்த செய்யுள் திருமுகப்பாசுரம் என்று கூறப்படுகிறது. அறிவாற்றல்களிற் சிறந்த பெரியோர்கள் எழுதியனுப்பும் ஓலையை திருமுகம் என வழங்குதல் நம் நாட்டிற் பண்டுதொட்டு*

வழங்கிவரும் வழக்கமாகும். தனக்குவமையில்லாத தனிமுதல்வனாகிய சிவபெருமான் தன்பால் அன்புடைய தமிழ் வேந்தராகிய சேரமான் பெருமாளுக்கு எழுதிய திருமுகமாக இசை நலம் பொருந்த இச்செய்யுள் அமைந்தமையால் இது திருமுகப் பாசுரம் என வழங்கப் பெற்றது. சில ஏடுகளில் இது திருமுகப்பாயிரம் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. இங்ஙனம் ஒருவர்க்கு ஓலையிற் செய்தியை வரைந்து தெரிவிக்கும் நிலையில் அமைந்த செய்யுட்களை ஓலைத்தூக்கு[1] என்று முன்னோர் வழங்கியுள்ளார்கள். இக்காலத்தார் சீட்டுக்கவியென வழங்குவர்.

**திருமுகப்பாசுரம்**

கழறிற்றறிவாராகிய சேரமான் பெருமாள் நாயனார் கொடுங்கோளூராகிய வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சேரநாட்டை ஆட்சி புரியும் காலத்திற் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரையம்பதியிற் பாணபத்திரனென்னும் பெயருடைய இசைப்பாணரொருவர் வாழ்ந்திருந்தார். அவர் பாண்டிய மன்னனால் நன்கு மதிக்கப்பெற்றவர்; திருவாலவாயிறைவற்கே இசைத்தொண்டு புரியுங் கடமை பூண்டவர். அரசர் முதலியோரை யணுகாது பரமனையே பாடுவாராகிய அப்பாணர்க்கு வறுமை நிலையுண்டாகியது. பாடுவார் பசி தீர்ப்பாராகிய திருவாலயிறைவர், பாணபத்திரரது வறுமையை நீக்கத் திருவுளங் கொண்டார். வேண்டுவார் வேண்டுவதேயீந்தருள்புரியுந் தாமே எல்லாங் கொடுக்க வல்லராயினும் தம்பாற் பேரன்புடைய சேரமான் பெருமாளைக் கொண்டு பாணபத்திரரது வறுமையைத் தீர்த்து உதவி புரிய வேண்டுமென்பது இறைவரது பெருவேட்கையாயிற்று. திருவாலவாயிறைவர் ஒரு நாள் இரவு பாணபத்திரரது கனவிலே தோன்றினார். "அன்பனே, என்பால் நிலைபெற்ற பேரன்புடையவன் சேரமான் பெருமாளென்னும் வேந்தன். அவன் உனக்குப் பொன், பட்டாடை, நவமணி பதிக்கப்பெற்ற அணிகலன்கள் முதலாக நீ வேண்டியவெல்லாங் குறைவறக் கொடுப்பான். அதன் பொருட்டு அவனுக்கு ஒரு திருமுகம் எழுதித் தருகின்றோம். நீ அதனை கொண்டு விரைந்து மலைநாடு சென்று பொருள் பெற்று வருக" என்று கூறி,

"மதிமலி புரிசை மாடக் கூடற்"

எனத் துவங்கும் அழகிய திருப்பாடலையெழுதிய திருமுகத்தைக் கொடுத்தருளினார்.

**சேரமான் பெருமாள் நாயனார் கொடைத்திறம்**

இவ்வாறு திருவாலவாயிறைவர் தந்த திருமுகத்தைப் பெற்றுத் தலைமேற் கொண்டு போற்றிய பாணபத்திரர், அப்பொழுதே மலைநாட்டிற்குப் புறப்பட்டுச் சென்று சேரர் தலைநகராகிய கொடுங்கோளூரையடைந்தார். சேரமான்

---

1. 'மன்னுடைமன்றத்து ஓலைத்தூக்கினும்' நன்னூல், பாயிரம் 52-ம் சூத்திரம்.

*பெருமாள் அரசு வீற்றிருக்குந் திருமாளிகையின் முன் சென்று தமது வருகையை வாயிற்காவலர் மூலம் வேந்தர் பெருமானுக்கு அறிவித்தார். பரமனையே பாடுவாராகிய பாணபாத்திரரது வருகையை அறிந்த சேரமான் பெருமாள் விரைந்து வந்து அவரை வணங்கினார். அடியேனையும் பொருளாக மதித்துத் திருமுகங் கொண்டு தாங்கள் இங்கு எழுந்தருளியது யான் செய்த தவப்பேறாம் எனக் கூறி அன்போடு வரவேற்று இருக்கை நல்கி உபசரித்தார். பாணபத்திரர் தாம் கொணர்ந்த திருமுகத்தை வேந்தர்பெருமான் கையிற் கொடுத்தார். பாணர் தந்த திருமுகத்தை ஆர்வமுற வாங்கி முடிமேற்கொண்ட சேரர் பெருமான், ஆனந்தக் கூத்தாடி மொழி குழறக் கண்ணீர் சொரியப் பலமுறை நிலமுறப் பணிந்தார். தமக்கு இறைவர் தந்த திருமுகப் பாசுரத்தைப் பலமுறை படித்து உளமுருகினார். அப்பாசுரத்தைப் படியெடுத்துக் கொள்ளும்படி உரிய வகையால் எடுத்துரைத்து இறைவனது திருவருளை நினைந்து மகிழ்ந்து உரிமைச் சுற்றத்தாரையும் அமைச்சரையும் அழைத்துத் தமது நிதியறையிலுள்ள பலவகைப் பொருள்களையும் பொதிசெய்து கொணரும்படி கட்டளையிட்டார். அங்ஙனமே அவர்களும் நிதியறையுட் புகுந்து எண்ணிறந்த பெரும் பொருளைப் பொதி செய்து கொணர்ந்தனர். அங்குக் கொண்டு வரப்பட்ட பொருளின் பரப்பையெல்லாம் சேரமான் பெருமாள் பாணபத்திரர்க்குக் காட்டினார். 'இப்பெரும் பொருளையும் யானை குதிரை முதலிய சேனைகளையும் இச்சேரநாட்டு ஆட்சியுரிமையையும் தாங்களே ஏற்றருள வேண்டும்' என வேண்டி நின்றார். சேரமான் பெருமாளது அளவிலாப் பேரன்பின் கொடைத் திறத்தைக் கண்டு வியந்த பாணபத்திரர், 'வேந்தர் பெருமானே என்னுடைய சுற்றத் தாரைப் பேணுதற்குப் போதுமான பொருள்களை மட்டும் அடியேன்' தங்கள்பால் பெற்றுக்கொள்ள வேண்டுமென்பது திருவாலவாய்ப் பெருமானது ஆணை. ஆதலால் அரசாட்சியும் அதற்கு இன்றியமையாத உறுப்புக்களாகிய படை முதலிய அங்கங்களும் ஆகிய இவற்றைத் தாங்களே கைக்கொண்டருளுதல் வேண்டும்' என்று கூறிச் சேரர் பெருமானை வணங்கினார். இறைவரது ஆணையெனப் பாணபத்திரர் கூறியதனைக் கேட்ட சேரமான் பெருமாள் அவ்வாணையை மறுத்தற்கு அஞ்சிப் பத்திரரது வேண்டுகோளுக்கு உடன்படுவாராயினர். பாணபத்திரரும் தமக்கு வேண்டிய பெரும் பொருளையேற்றுக் கொண்டு சேர மன்னர்பால் விடைபெற்று யானை மீதமர்ந்து மதுரையையடைந்து இறைவனை இன்னிசையாற் பரவிப் போற்றியிருந்தார் என்பது வரலாறு.*

***புராண விளக்கங்கள்***

***இதனைச் சேக்கிழார் சுவாமிகள் கழறிற்றறிவார் நாயனார் புராணத்துள் 26 முதல் 38 வரையுள்ள செய்யுட்களில் விரித்துக் கூறியுள்ளார். பெரும்பற்றப்புலியூர்நம்பி பாடிய திருவிளையாடற் புராணத்தில் திருமுகங் கொடுத்த திருவிளையாடல் என்ற படலத்திலும், பரஞ்சோதி முனிவர் பாடிய***

*திருவிளையாடற் புராணத்தில் திருமுகங் கொடுத்த படலத்திலும் இவ்வரலாறு புனைந்து கூறப் பெற்றுள்ளது. பாணபத்திரர் பொருட்டு இறைவனே விறகாளாய்ச் சென்று மதுரைத் திருவீதியில் விறகு விற்றுழன்று சாதாரிபாடி வடபுலத்துப்பாணனைத் தோற்றோடச் செய்தனனென்றும், ஒரு நாளிரவு பெருமழை பெய்யவும் அதனைப் பொருட்படுத்தாது ஆலவாய்ப் பெருமானைப் பாணபத்திரர் பாடி நின்றாராக, அவர் கையிலேந்திய யாழ்க் கருவியின் நரம்பு மழைநீரால் நெகிழ்ந்து கட்டழியாதபடி ஆலவாயிறைவன் அவர்க்குப் பொற்பலகையிட்டருளினனென்றும், பாணபத்திரருடைய கற்பிற் சிறந்த மனைவியார் பாடினியார்க்கும் பாண்டியனது ஆதரவு பெற்ற பாடினியொருத்திக்கும் நிகழ்ந்த இசைவாது நிகழ்ச்சியில் இசைநலந்தெரிந்து கூறும் நடுவானாக ஆலவாயிறைவனே அமர்ந்து உண்மை கூறினானென்றும் பெரும்பற்றப்புலியூர் நம்பியும் பரஞ்சோதி முனிவரும் தாம் பாடிய நூல்களில் விரித்துக் கூறியுள்ளார்கள்.*

***திருவாலவாயிறைவர் பாடிக் கொடுத்தருளிய திருமுகப் பாசுரத்தின் பொருள்***

*ஒரு சிறிது நோக்குவோமாக. "**திங்கள் தங்கிய மதிலாற் சூழப்பட்ட மாடங்களையுடைய கூடல் நகரத்திலே நிலைபெற்ற பால்போலும் வெண்ணிறச் சிறகுகளையுடைய அன்னங்கள் பயின்று வாழும் நீர்நிலையோடு கூடிய சோலைசூழ்ந்த திருவாலவாயென்னுந் திருக்கோயிலிலே நிலைபெற வீற்றிருக்கும் இறைவனாகிய யான் வரைந்த இம்மொழியினைப், பருவ காலத்து மேகத்தை யொப்பப் பாவன்மையுடைய பெரும் புலவர்களுக்கு அன்புரிமையினால் தன்பாலுள்ள பெரும் பொருளை அவர்கள் போதுமென மறுக்கவும் உரிமையோடு நிறையக் கொடுத்துப் புகழொளி பரவ நிறந்தங்கிய திங்களை யொத்து விளங்கும் வெண்கொற்றக் குடை நிழற்கீழ்ப் போர்ப்பரி செலுத்தும் ஆற்றல் மிக்க சேரலன் காண்பாயாக. பக்கத்தாரியல்பறிந்து பழகும் இனிய பண்பினோடு யாழினை வாசிக்க வல்ல பாணபத்திரனென்பான், சேரமானாகிய தன்னைப்போல என்பாற் பெருகிய அன்புடையான். வேந்தர் பெருமானாகிய தன்னைக் காணவேண்டுமென்னும் பேரார்வத்தால் அங்கு வருகின்றான். ஈவோனும் ஏற்போனுமாகிய நும்மிருவர் மாண்பினையும் நோக்கி அம்மாண்புக்குத்தக்க பெரும்பொருளைக் கொடுத்து அவனை என்பால் வரும்படி விடுத்தல் செய்யத் தகுவதாம்**" என்பது இதன் பொருளாகும்.*

***பன்னிரண்டடிகளால் இயன்ற நேரிசை ஆசிரியப் பாவாகிய இப்பாடலில்,*** *முதல் நான்கடிகளில் இதனைப் பாடிய தலைவனாகிய சிவபெருமானது சிறப்பும், அடுத்துள்ள நான்கடிகளில் அவ்விறைவனாற் பாடப் பெறும் புகழமைந்த பாட்டுடைத் தலைவராகிய சேரமான் பெருமாளது கீர்த்தியும், பின்னுள்ள நான்கடிகளில் இதனைப் பாடுதற்குக் காரணராகிய பாணபத்திரனென்னும் அடியவரது அன்புரிமைச் சிறப்பும் அவருக்குப் பொருளைக் கொடுத்தனுப்புக*

என்னும் ஆணையும் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

மதிமுடிக் கடவுளாகிய தன்னைப்போன்று மதிதவழும் மாடங்களோடு கூடி விளங்குவது கூடல் நகரமாகிய மதுரையென்றும், நிலனாவிற்றிரிதரும் நீண்மாடக் கூடலாராகிய அந்நகர் வாழ்வார் புலனாவிற் பிறந்த சொற் புதிதுண்ணும் மதி நலமுடையாரென்றும் விளக்குவார், 'மதிமலிபுரிசை மாடக் கூடற் பதி' எனச் சிறப்பித்தார். குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு பாராட்டுதலாலும், வெண்ணீறணிதலாலும், அன்னப்பறவையைப் போன்று உள்ளும் புறமும் பால்போலுந் தூய்மையாளராகிய மெய்யடியார்கள் இடைவிடாது குழுமி இறைவனை வழிபாடு செய்து போற்றுமிடமாக விளங்குவது மதுரையிலுள்ள திருவாலவாய்த் திருக்கோயிலாதலின், அங்கு என்றும் நீங்காது நிலை பெற்றிருப்பது எனது குடிவாழ்க்கை யென்பார், "பால்நிற வரிச்சிறகு அன்னம் பயில்பொழில் ஆலவாயின் மன்னிய சிவன்யான்" என்றார். 'சிவன்யான் மொழிதரு மாற்றம்' என்றது, சொல் நிகழ்ச்சிக்கு இடனாகிய தன்மை முன்னிலை படர்க்கையென்னும் இடவரம்பின்றி உயிர்க்குயிராய் யாண்டும் நீக்க மறக்கலந்து விளங்கும் இறைவன் சிவனாகிய யான் என்று தன்னைத் தன்மையிடத்தில் வைத்துக் கூறிப் புறத்தே தோன்றிப் படர்க்கையிலுள்ளாரோடு உரையாடுமளவுக்குத் தன்னடியார் பொருட்டு எளிவந்தருளிய அருட் பண்பினைப் புலப்படுத்துவதாகும்.

கைம்மாறு கருதாது பொழிதல் மாரியின் இயல்பாயினும் அவ்வியல்பு பருவகாலமாகிய கார்காலத்திலன்றி ஏனைக் காலங்களில் மாரியின்பால் மாறாது காணப்படுவதில்லை. சேரமான் பெருமாளாகிய வேந்தர் பெருமானே பருவ காலத்து மழைமேகத்தைப் போன்று பாவலர்க்கு உரிய காலத்தில் வேண்டும் பொருள்களை அவர்கள் கேளாமுன் உரிமையுடன் வரையாது வழங்கும் பெருங் கொடையாளராய் மன்னுயிர்க்கு நிழல்தரும் அளியும் இகல் தீர்க்கும் சேனையுமுடையராய்த் திகழ்கின்றாரென்பார், 'பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு, உரிமையின் உதவி ஒளிதிகழ், குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச் செருமா உகைக்குஞ் சேரலன்' என அவ்வேந்தர் பெருமானுடைய கொடையும் அளியும் தெறலும் முதலிய புகழ்த்திறத்தை விரித்துப் பாராட்டினார். மக்களும் மற்றைய அஃறிணையுயிர்களும் தம்முள் உரையாடுங்கால் அவ்வுயிர்கள் கூறிய குறைகளையெல்லாவற்றையும் நன்குணர்ந்து எவ்வுயிர்க்கும் இடரகற்றி இன்பஞ் செய்யும் சேரமான் பெருமாளது அரசியல் மாண்பினை அவரது குடைமேலேற்றி 'ஒளிதிகழ் குருமா மதிபுரை குலவியகுடை'யென அதற்குக் குளிர்ந்த நிலவொளி வீசுந் திங்களை உவமை கூறிச் சிறப்பித்தார். பகைவரொடு பெரும் போரிலே மாற்றாரது முடிமேல் அடிவைத்துப் பாயும் ஆற்றல் பெற்ற பரியைச் செலுத்தும் சேர வேந்தரது போர்வன்மையைப் புகழ்வார் 'செருமா உகைக்குஞ் சேரலன்' என்றார். போர்க் களத்திலே தொழில் புரிதற்குரிய பேராற்றல் பெற்ற தமது குதிரைக்கு எதிர்காலத்தில் நல்லக விளக்காகிய நமச்சிவாய மந்திரத்தை

*உபதேசித்துத் திருக்கயிலைக்குச் செலுத்த வல்ல உரவோன் என்பார், 'ஒளிதிகழ்....... செலுமாவுகைக்குஞ் சேரலன்' என்றாரெனினும் அமையும். இவ்வாறு திருவாலவாயிறைவர் சேரமான் பெருமாளது புகழ்த் திறத்தை விளக்கிப் பாடிய இத்திருமுகப் பாசுரப் பொருளை யுளங் கொண்ட நம்பியாரூரர், 'கார்கொண்ட கொடைக் கழறிற் றறிவார்க்கும் அடியேன்' எனச் சேரமான் பெருமாளைத் திருத்தொண்டத் தொகையிற் பரவிப் போற்றினமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும்.*

*உலகத்தாரோடு அன்பாற் பழகி யாழிசைத்து இசை வளர்க்கும் பெருமை மிக்க பாணனாக விளங்குபவன் இப்பாணபத்திரன் ஆதலானும், வேந்தர் பெருமானாகிய தன்னைப்போல் என்பாற் பெருகிய அன்புடையனாதலானும், என்பாலன்புடைய நீவிர் இருவீரும் ஒருவரொருவரைக் கண்டு உரையாடி அளவளாவி மகிழ்தல் வேண்டுமாதலானும், அவன் எனது ஆணையால் வேந்தனாகிய நின்னைக் காண வருகின்றானென்பார், 'பண்பால் யாழ்பயில் பாணபத்திரன், தன்போல் என்பால் அன்பன், தன்பால் காண்பது கருதிப் போந்தனன்' என்றார். அறநெறியை முதலாகக் கொண்ட அரசியல் விளைவாலுண்டாகிய மாண்புடையது சேரமான் பெருமாள் பொருளாதலின், அதனை 'மாண்பொருள்' என்றும், தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால் வான் சிறிதாக வளர்ந்தோங்குதல் பொருளினியல்பு ஆதலின், அப்பொருள் மேன்மேலும் பெருகி மாட்சிமைப்பட அதனைப் பெறுவதற்குரிய தகுதியுடையவன் என்பால் அன்புடைய பாணபத்திரனாதலின் அவனுக்குக் கொடுத்தல் வேண்டுமென்பார். 'மாண்பொருள் கொடுத்து' என்றும், மாண்பொருளெனவே உலகிற் பெரிதும் மாட்சியமையுடைய அரசாட்சியை அவனுக்குக் கொடுக்கச் சொல்வதாக எண்ணிப் பாணபத்திரனுக்கு நினது அரசாட்சியை வழங்கி அவனை நின்னாட்டிலேயே இருத்தி விடுதல் கூடாது என அறிவுறுத்துவார், மாண்பொருள் கொடுத்து என்ற அளவிலமையாது* ***'மாண்பொருள் கொடுத்து வர விடுப்பதுவே'*** *என்றும் பணித்தருளினார். வேந்தர் பெருமானாகிய நின்பாலமைந்த உயர்ந்த குண நலங்களில் ஈடுபட்ட பாணபத்திரன் நின்னைப் பிரிந்து மீண்டும் என்பால் திரும்பி வருதலை மறந்து ஆண்டுத் தங்கினும் தங்கி விடுவான்.* ***அவனது யாழிசையிலும் பேரன்பிலும் ஈடுபட்ட யான் அவனைக் கணப்பொழுதும் பிரிந்துறைதல் இயலாது.*** *ஆகவே அவன் வேண்டிய பொருளை அவனுக்குக் கொடுத்து அவனை உடனே மதுரைக்கு மீளும்படி செய்வதும் நினது கடமையாமென்பார் 'கொடுத்து விடுப்பது' என்ற அளவிலமையாது* ***'கொடுத்து வரவிடுப்பதுவே'*** *என அறிவுறுத்தருளினமை உய்த்துணர்வார்க்குப் பெரிதும் சுவை பயப்பதாகும்.*

*இன்ன தன்மையன் என யாவராலும் உணர முடியாத இறைவன், தன்னை இன்னிசையாற் போற்றிய பாணபத்திரரது வறுமைத் துயரை நீக்கிப்*

*பெருஞ்செல்வம் வழங்குதற் பொருட்டுத் தன்னை இடைவிடாது வழிபடும் சேரமான் பெருமாளாகிய வேந்தர் பெருமானுடைய வரையா ஈகையினையும் சிவபத்தியினையும் விளக்குதற் பொருட்டும் தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் தானும் ஒரு தமிழ்ப் புலவனாகத் திருமேனிகொண்டு தோன்றி, மதிமலிபுரிசையென்ற இத்திருமுகப் பாசுரத்தைப் பாடிக் கொடுத்தான் என்ற வரலாறு, அடியார்க்கெளிய பெருமானாகிய அவ்விறைவனது அருமையிலெளிய அழகினை இனிது விளக்குவதாகும்.* ***நாடு மொழி முதலிய கட்டுப்பாடு எல்லா வுலகத்துக்குந் தலைவனாகிய இறைவனுக்கு என்றும் இல்லை. எனினும் ஆட்கொள்ளுதற்குரிய மக்கள் அப்பிரிவின் வழியுள்ளார்கள். அவர்களை உய்வித்தற் பொருட்டு அருளே திருமேனியாகக் கொண்டு எழுந்தருளும் இறைவனும் அவர்களுள் ஒருவனாக நடித்து அவர்கள் பேசும் மொழியிற் பேசியும் எழுதியும் செய்யுள் முதலியவை இயற்றியும் நட்புக்கொண்டு உறவாடி உலக மக்களுக்கு ஞானம் உண்டாக்கி நலம் புரிகின்றான். இவ்வுண்மையை விளக்கும் சிறந்த இலக்கியமாக இத்திருமுகப்பாசுரம் விளங்குகின்றது.*** *'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்', என நம்பியாரூரர்க்கு அடியெடுத்துக் கொடுத்து அடியார் பெருமையினைக் கூறப்பணித்த சிவபெருமான் இத்திருமுகப் பாசுரத்தால் சேரமான் பெருமாள் நாயனாரது பெருமையினை விரித்துக் கூறியமையால், இப்பாசுரத்தாற் போற்றப் பெற்ற பாட்டுடைத் தலைவர் சேரமான் பெருமாளென்பதும், அவரைப் பாடிய புலவர் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளென்பதும் நன்கு புலனாதல் காணலாம்.*

### சேரமான் பெருமாள் நாயனார் சிறந்த சிவனடியார் எனச் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டு திருமுகங் கொடுக்கக் காரணங்கள்

1. *"மாநிலங்காவலாவான் மன்னுயிர்க் காக்குங்காலை" என்ற சேக்கிழார் பாடலுக்கேற்ப சிறந்த நீதிமானாக, மன்னனாக மக்களை வழிநடத்தி நாட்டை ஆண்டார்.*
2. *பெறற்கரிய பேறான ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாகவுள்ள அனைத்து உயிரினங்களும் பேசும் மொழிகளை அறியும் அறிவாற்றல் பெற்றிருந்தார்.*
3. *மன்னனாயிருந்தாலும் தினமும் நந்தவனத்தைப் பராமரித்து, பூக்கொய்து சிவபூசை புரிந்து வந்தார்.*
4. *புறப்பூசை மட்டுமின்றி சிவபெருமான் மீது பல நூல்களை இயற்றி எழில் ஞான பூசையும் நடத்தி அவர் புகழை உலகறியச் செய்தார்.*
5. *சிவனடியார்களை குல கோத்திர பாகுபாடின்றிச் சிவனாகவே பாவித்து வழிபட்டு வந்தார்.*
6. *குருலிங்க சங்கம வழிபாடுகளை முறையாகச் செய்ததால் இருவினையொப்பு,*

*மலபரிபாகம், சத்தினிபாதம் நிகழப்பெற்று இப்பிறப்பிலேயே நாளும் சிவபூசையின் நிறைவாகப் பாதச்சிலம்பொலி கேட்கும் பெறு பெற்றிருந்தார்.*

***அருஞ்சொற் பொருள் :-*** *ஓலையைத் 'திருமுகம்' என்றல் அதனை விடுத்தோரது உயர்வு பற்றி. பாசுரம் - மிகுத்துரை பாட்டு. மதி - சந்திரன். மலிதல் - மகிழ்தல். முதனிலைத் தொழிற்பெயர். இது மகிழ்ந்து தவழ்தலாகிய தன் காரணம் தோற்றி நின்றது. இனி 'மலி மதி' என மொழிமாற்றி, 'நிறைந்த திங்கள்' என உரைப்பினும் ஆம். புரிசை - மதில். "மாடக் கூடல்" என்பதற்குப் பொதுப் பொருள் கொள்ளாது, திருவிளையாடற் புராணத்தின் வழி, 'நான்மாடக் கூடல்' எனப் பொருள் கொள்ளுதல் சிறப்பு. 'கூடற் பதிமிசை நிலவு ஆலவாய்' என இயைக்க. மிசை, ஏழனுருபு. கூடல், தலப்பெயர். ஆலவாய், அத்தலத்தில் உள்ள கோயிலின் பெயர். 'அருட்டுறை, பூங்கோயில்' என்பன போலச் சில தலங்களில் கோயிலுக்குத் தனிப்பெயர் இருத்தல் அறியத் தக்கது. 'பால் நிறச் சிறகு, வரிச் சிறகு' எனத் தனித்தனி முடிக்க. பால் நிறம் - பாலினது நிறம் போலும். பால், அதன் நிறத்தை உணர்த்தலின் ஆகுபெயர், வரி - அழகு. 'கீற்று' எனினும் ஆம், மன்னிய - நிலைப்பெற்றுள்ள, மாற்றம் - சொல், இதுவும் ஆகுபெயர், திருமுகத்தில் எழுதப்பட்ட வரிவடிவங்களைக் குறித்தது. பருவம் - உரிய காலம்; கார் காலம். கொண்மூ - மேகம். படி - ஒப்பு. ஒருமையின் உரிமையின் - 'உதவுதல் தனக்குக் கடன் என ஒருப்பட்ட மனத்தினாலே கொண்ட உரிமையினால்'. குரு - நிறம்; அழகு. மா மதி - பெரிய சந்திரன்; பூரணச் சந்திரன். 'புரை குடை; குலவிய குடை' எனத் தனித் தனி இயைக்க. புரை - ஒத்த. குலவிய - விளங்குகின்ற. 'குடைக் கீழ்ச் சேரலன்' எனவும், 'உகைக்கும் சேரலன்' எனவும் தனித்தனிச் சென்று இயையும். செரு மா - போர்க்கு ஏற்ற நடைகளைக் கற்ற குதிரை. உகைத்தல் - ஏறிச் செல்லுதல். பண்பால் - யாழ் இசைக்கும் தன்மை நிறைந்த நிலைமையினால். தன் போல் - தன்னை (அந்தச் சேரலனை)ப் போலவே, போந்தனன் - தன்பால் புகுந்தனன். மாண் பொருள் - மிகுந்த பொருள். வர விடுப்பது - மீண்டு வர விடை கொடுத்து அனுப்புதல்.*

## காரைக்கால் அம்மையார் வரலாறு

*காரைக்காலிலே வணிகர் குலத் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் தனதத்தன் என்பது. அவனது தவப் பயனால், அவனிடம் திருமகள் தோன்றினாலென்ன ஒரு பெண் மகவு பிறந்தது. அம் மகவுக்குப் புனிதவதியார் என்னும் பெயர் சூட்டப்பட்டது.*

*புனிதவதியார் குழந்தைப் பருவத்திலேயே இயல்பாகச் சிவநேசமுடையவரானார். விளையாட்டுக் காலங்களிலும் அவர் சிவநாமத்தை முழக்குவார்; தொண்டர்கள் வரின் அவர்களைத் தொழுவார். இவ்வாறு அவர் ஒழுகி, அழகு ஒளி விடுவதுபோல வளர்ந்து, திருமணப் பருவமடைந்தார்.*

*நாகப்பட்டினத்திலே நிதிபதி என்றொரு வணிகத் தலைவன் இருந்தான். அவன் தன்மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணஞ்செய்விக்க விரும்பினான். விரும்பியவாறு சில முதியோர்களைத் தனதத்தனிடம் அனுப்பினான். முதியோர்கள் காரைக்கால் போந்து, தனதத்தனிடம் நிதிபதியின் கருத்தை வெளியிட்டார்கள். தனதத்தன் நிதிபதியின் விருப்பத்துக்கு உடன்பட்டான். இதை முதியோர்கள் நாகைக்கேகி நிதிபதியினிடம் தெரிவித்தார்கள். இரு சார்பிலும் மணவினைக்குரிய செயல்கள் நிகழ்ந்து வந்தன. திருமணம் காரைக்காலில் நடைபெற்றது.*

*தனதத்தனுக்குப் புனிதவதியார் ஒரு பெருந்தவப் புதல்வியாராதலின், அவன், தன் மகளையும் மருமகனையும் நாகைக்கு அனுப்ப விரும்பினானில்லை. அவன், தன் வீட்டருகே ஒரு தனி வீடுகட்டி, அதில் இருவரையும் வதியுமாறு செய்து பெரும் பொருளும் உதவினான். பரமதத்தன் வணிகத் துறையைப் பெருக்கி வாழலானான். புனிதவதியார், பரமதத்தனுக்கு வாழ்க்கைத் துணையாகி, இல்லறத்தை இனிது நடாத்தி வந்தார்.*

*புனிதவதியார்பால் சிவநேயம் நாளுக்குநாள் முருகிப் பெருகி ஓங்கி வளரலாயிற்று. மனைக்கு வருஞ் சிவனடியார்களுக்கு அம்மை அமுதூட்டிப் பொன்னும் பொருளும் கொடுத்து வந்தார்.*

*ஒருநாள் பரமதத்தனைக் காணவந்தவர்களில் சிலர், அவனுக்கு இரண்டு மாங்கனிகள் கொடுத்தார்கள். அவன் அவைகளை வாங்கி, அவர்கள் குறை முடித்து அவைகளை இல்லிற்கு அனுப்பினான். அம்மையார் அப்பழங்களை வாங்கி வைத்தார். அவ்வேளையில் அங்கே ஒரு சிவனடியார் பசியால் வாடி இளைப்புற்றவராய் வந்தார். புனிதவதியார் அவர்தம் நிலையைக் கண்டு, "அடியவர் பசி தீர்ப்பேன்" என்று கால் கழுவ நீர் கொடுத்தார்; கலத்திலே*

*திருவமுது படைத்தார். அப்பொழுது கறியமுது சமைக்கப்படாமலிருந்தது. "சிவனடியாரே விருந்தினராய் வந்துள்ளார் இப்பேற்றினுஞ் சிறந்ததொன்றில்லை" என அம்மையார் கருதிக் கணவன் அனுப்பிய இரண்டு பழங்களில் ஒன்றைக் கொண்டு வந்து படைத்தார். சிவனடியார் மாங்கனியுடன் அமுதுண்டு அம்மையார் செயலைப் பாராட்டிப் போனார்.*

*பரமதத்தன் பகலிலே இல்லிற்கு வந்தான். அவன் வழக்கம்போல் நீராடினான்; பின்னே அமுதுண்ண அமர்ந்தான். அம்மையார் திருவமுது கறியமுது முதலியவற்றைப் படைத்தார். அவர், தம்பாலுள்ள மாங்கனியையுங் கொண்டு வந்து வைத்தார். பரமதத்தன் கனியை உண்டான். அஃது அதிகச் சுவையாயிருத்தல் கண்டு, அவன் மற்றுமொரு கனியையுங் கேட்டான். அம்மையார் கனியைக்கொண்டு வருவார்போல அகன்றார்; அகன்று, மெய்ம்மறந்து, உணர்வினால் "உற்றவிடத்து உதவும் பெருமானே!" என்று ஆண்டவனை நினைந்தார். ஆண்டவனருளால் ஒரு மாங்கனி அம்மையார் கையில் வந்து நின்றது. அம்மையார், அப்பழத்தைக் கொண்டு வந்து கணவனுக்கு இட்டார். அவன் அதை உண்டான்; உண்டு, "என்னே இதன் சுவை! இது நான் அனுப்பிய மாங்கனியாயிருக்குமோ? இராது. இதைப் போன்றதொரு கனியை மூன்று உலகங்களிலும் பெறுதல் அரிது. இத்தகைய ஒன்றை நீ எங்கே பெற்றாய்?" என்று அம்மையாரைக் கேட்டான். புனிதவதியார், 'திருவருள் உதவிய திறத்தை வெளியிடலாமோ' என்று கருதுகிறார்; 'கணவனுக்கு உண்மையை மறைத்தலுந் தவறன்றோ' என்றும் எண்ணுகிறார். இரு வழியிலும் அம்மையார் நெஞ்சஞ் சுழன்றது. பின்னே அம்மையார் தெளிவுற்று நிகழ்ந்ததைக் கூறினார்.*

*பரமதத்தனுக்கு உண்மை விளங்கவில்லை. அவன் அம்மையாரைப் பார்த்துச் "சிவனருளா! சிவனருளாயின், அவனருளால் இன்னுமொரு கனி கொண்டுவா பார்ப்போம்" என்றான். கற்பரசியார் அவ்விடத்தை விட்டு நீங்கி, அடியார்க் கெளியனாகிய ஆண்டவனைச் சிந்தித்து, "இன்னும் ஒரு பழம் அருளல் வேண்டும்; இல்லையேல் என்னுரை பொய்யாகும்" என்று வேண்டினார். எங்குமுள்ள சங்கரன் அருளால் மாங்கனியொன்று அம்மையார் கையில் வந்து சேர்ந்தது. அம்மையார் அதைக் கொண்டுவந்து நாயகனிடம் தந்தார். அவன் அதிசயித்து அதை வாங்கினான்; உடனே அது மறைந்தது. பரமதத்தன் நெஞ்சம் சுழல்கிறது; அவன் அம்மையாரைப் பார்க்கிறான்; பார்த்துப் பார்த்து? "இவள் தெய்வம்; இவளை விட்டு நீங்குதல் வேண்டும்" என்று கருதலானான். அவன், தன் கருத்தை வெளியிடாது, அம்மையாரோடு தொடர்பின்றி வாழ்ந்து வந்தான்.*

*சின்னாள் கழித்துப் பின்னர்ப் பரமதத்தன், "கடல் மீது சென்று வாணிபஞ் செய்து பொருள் திரட்டி வருவேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தான். சுற்றத்தவர்கள் சேர்ந்து மரக்கலஞ் சமைத்துத் தந்தார்கள். அம் மரக்கலத்தில் பல பண்டங்களை ஏற்றிப் பரமதத்தன் சிலருடன் புறப்பட்டான். அவன்*

*வாணிபஞ் செய்துகொண்டே பாண்டி நாட்டிலுள்ள ஒரு துறைமுகப் பட்டினத்தைச் சேர்ந்தான். அங்கே அவன் ஒரு வாணிபப் பெண்ணை மணஞ்செய்து கொண்டான். அவளுக்கு ஒரு பெண் குழவி பிறந்தது. அக்குழவிக்குப் பரமதத்தன், தான் தெய்வமாகக்கொண்டு வழிபட்டு வரும் முதன் மனைவியின் பெயரை இட்டுச் சிறப்பாக வாழ்ந்து கொண்டிருந்தான்.*

*பரமதத்தன் பாண்டி நாட்டிலிருப்பதைக் காரைக்காலிலுள்ள புனிதவதியார் சுற்றத்தவர்கள் கேள்வியுற்றார்கள். அவர்கள் சிலரை அனுப்பிப் பரமதத்தன் நிலையை உணர்ந்துகொண்டார்கள். அவர்கள் "புனிதவதியாரைப் பரமதத்தனிடஞ் சேர்க்க வேண்டும்" என்று தீர்மானித்து. ஒரு சிவிகையிலே அம்மையாரை ஏற்றிப் பரமதத்தன் வாழும் பட்டினத்தை அணைந்தார்கள்; அணைந்து தங்கள் வரவைப் பரமதத்தனுக்குத் தெரிவித்தார்கள். பரமதத்தன் அதைக் கேட்டதும் மனைவி மக்களுடன் விரைந்து வந்து புனிதவதியாரைத் தொழுதான்; தொழுது, "உம்முடைய திருவருளால் இனிது வாழ்கிறேன்; இக் குழந்தைக்கும் உமது திருநாமத்தையே சூட்டியுள்ளேன்" என்கிறான்; அம்மையார் காலில் விழுகிறான்; எழுகிறான். இக்காட்சி கண்ட புனிதவதியார்க்கு அச்சமுண்டாயிற்று. அவர் சுற்றத்தவர் பால் ஒதுங்கி நின்றார். சுற்றத்தவர்கள் நாணிப் பரமதத்தனைப் பார்த்து. 'பரமதத்தா! என்ன இது! உன் மனைவியை ஏன் வணங்கினாய்?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "என்ன சொல்கிறீர்கள்! இவர் மானிடர் அல்லர்; இவர் தெய்வம்; இவ்வாறு கருதியே இவரை விட்டுப் பிரிந்தேன்; பின்பு பெற்ற இக்குழவியை இவர் பெயரையே அணிந்தேன்; இப்பொழுது இவர் திருவடிகளிலும் பணிந்தேன்; நீங்களும் பணியுங்கள்" என்றான். அவர்கள் "இஃதென்ன மாயம்!" என்று திகைத்தார்கள்.*

*புனிதவதியார் சிவபெருமான் திருவடியைப் போற்றி, ஒன்றிய சிந்தையராய், "ஈசனே! இவன் குறித்த கொள்கை இது. இவனுக்காகத் தாங்கி அழகு நிரம்பிய தசைப்பொதியைக் கழித்து, உன்னைச் சூழ்ந்து, உன் தாள்கள் போற்றும் பேய் வடிவை அடியேனுக்கு அளித்தருளல் வேண்டும்" என்று இறைஞ்சினார். ஆண்டவன் திருவருள் அவ்வாறே கூடிற்று. அம்மையார் திருவருளை முன்னிட்டு ஊன் நிறைந்த அழகை உதறினார். எற்புடம்பானார். மண்ணும் விண்ணும் வணங்கும் பேய் வடிவம் பெற்றார். மலர் மாரி பொழிந்தது; வானதுந்துபிகள் முழங்கின; தேவர்களும் முனிவர்களும் ஆரவாரித்தார்கள்; சிவ கணங்கள் கூத்தாடின. சுற்றத்தவர்கள் அச்சமுற்று அம்மையாரைத் தொழுது போய்விட்டார்கள்.*

*பேய் வடிவாகிய அம்மையார், திருவருளால் **அற்புதத் திருவந்தாதியும், திருஇரட்டை மணிமாலையையும்** திருவாய் மலர்ந்தார். அம்மையார் உருவைக் காண்பவர்கள் ஓடுவார்கள்; அதன் தன்மையைப் பேசுவார்கள். அதைக் கேட்ட*

*அம்மையார், "அண்டர் நாயகர் என்னை அறிவாராயின், வாய்மை அறியா மக்களுக்கு எவ்வுருவா விளங்கினாலென்ன" என்று சொல்வார்.*

*''திருக்கயிலாயத்தைக் காணுதல் வேண்டும்'' என்னும் விருப்பம் அம்மையாருக்கு எழுந்தது. அம்மையார், மனோவேகத்திலும் அதிவேகமாக நடந்து சென்றார். திருக்கயிலையை அணுகினார்; காலால் நடத்தலைத் தவிர்த்தார்; தலையால் நடந்தார்; மலை மீதேறினார். அப்பொழுது, உமாதேவியார் அதிசயித்துச் சிவபெருமானைப் பார்த்து, "இங்கே தலையினால் நடந்து வரும் என்புடலின் அன்பு என்னே! என்றார். சிவபிரான், "உமையே! இவள் நம்மைத் துதிக்கும் அம்மை. இப்பெருமை வாய்ந்த வடிவத்தையும் நம்மை வேண்டிப் பெற்றாள்" என்று அருளினார். பின்னர்ப் பேயார் சிவபெருமான் திருமுன்னே நெருங்கி வந்தார். சிவபெருமான் அவரைத் திரு நோக்கஞ் செய்து, "அம்மையே" என்று அழைத்தார். அம்மையாரும் "அப்பா" என்று சொல்லி, ஆண்டவன் அடியில் விழுந்து வணங்கினார்.*

*கயிலாயபதி, பேயாரைப் பார்த்து, "நம்பால் இங்கு வேண்டுவது என்ன?" என்று கேட்டார்.*

*அம்மையார், ''ஆண்டவனே! அடியேனுக்கு இறவாத இன்ப அன்பு வேண்டும்; பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல், என்றும் உம்மை மறவாமை வேண்டும்; ஐயன் நடம் புரியும்போது அடியேன் மகிழ்ந்து பாடி, ஐயன் திருவடியின் கீழ் இருக்க வேண்டும்'' என்று கீழ்க்காண் பாடலில் முறையிட்டார்.*

> *இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்*
> *பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்*
> *மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்துபாடி*
> *அறவா! நீ ஆடும்போது உன்அடியின்கீழ் இருக்க என்றார்.*

*சிவபெருமான் திருவருள் சுரந்து, "அம்மையே! தென்திசையில் திருவாலங் காடென்றொரு பதி இருக்கிறது. அங்கே நாம் நடம்புரிகிறோம். அதைக் கண்டு இன்புற்று நம்மைப் பாடிக் கொண்டிருப்பாயாக" என்றருளினார்.*

*பேயார், பெருமானைப் பணிந்து, விடைபெற்றுத் திருக்கயிலையை விடுத்துத் தலையினால் நடந்து, திருவாலங்காட்டை அடைந்தார்; அங்கே ஆண்டவன் புரியுந் திருக்கூத்தைக் கண்டு தொழுதார்; "கொங்கை திரங்கி", "எட்டி இலவம்'' என்னும் இரண்டு மூத்த திருப்பதிகங்கள் பாடினார். பின்னர்க் காரைக்காலம்மையார் ஆண்டவன் திருவடிக்கீழ் என்றும் சிவானந்தத்தை நுகரும் பெரும் பேற்றை அடைந்தார்.*

## காரைக்காலம்மையார் (பேயார்) நூல்கள்

| | |
|---|---|
| அற்புதத் திருவந்தாதி | திருவருளை வேண்டிப் பேய் வடிவம் பெற்றவுடன் முதலிற் பாடியது. பேய் வடிவம் பெற்றவுடன் அத்தன்மையின் திறத்தினைப் புகழ்ந்து அந்தாதி பாடினார். |
| திருவிரட்டை மணிமாலை | அந்தாதி பாடியபின் அத்தன்மை ஆக்கிய இறைவனுடைய சிறப்புக்களைப் புகழ்ந்து திரு இரட்டை மணி மாலை அருளினார். இவையிரண்டும் வணிகனைச் சென்று கண்டபின் பாண்டி நாட்டுப் பட்டினத்தின் மருங்கிற் கயிலையை நோக்கிப் பயணம் தொடங்கும்போது பாடப்பட்டன. |
| திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் (இரண்டு) | மேற்காண் அந்தாதி, இரட்டைமணி மாலை பாடிப் பின் கயிலை சென்று அங்கு பெற்ற அருளாணையின்படி திருக்கூத்துக் கண்டு கொண்டு திருவடிக்கீழ்ப்பாடிக்கொண்டு இருக்கும் பொருட்டு அம்மையார் திருவாலங் காட்டில் தலையால் நடந்து சென்று சேர்ந்து திருக்கூத்து கண்டு காணப்பெற்ற பொழுது ''கொங்கை திரங்கி'' என்ற முதல் மூத்த திருப்பதிகம் பாடியருளினார். |
| | திருக்கூத்தினை நேரே வணங்கப்பெற்ற விருப்பம் மிகும் பேராசையானது மேன்மேலும் பொங்கி மிக்கதாக வியப்பு யெய்தி ஆனந்த வெளிப்பாட்டில் பாடியது "எட்டி இலவம்" என்று தொடங்கும் இரண்டாவது மூத்த திருப்பதிகமாகும். |

## 1. காரைக்கால் அம்மை - ஒரு முன்னோடி

*தமிழ் இசையின் தாய் என்றழைக்கப்படும் காரைக்கால் அம்மையார் முதன் முதலில் நமக்குப் பண் தந்தவர். நடராசப் பெருமானின் திருக்கூத்தை நேரே தரிசனம் செய்தவர். எனவே அவர்தம் பாடல்களில் பலவகை இசைக்கருவிகள், ஆடல்கள், தாண்டவங்களை நேரில் கண்டவர் கூற்றாகக் காண்கிறோம். அச்செய்திகளை, "காரைக்காலம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு" என்ற நூலாக தமிழ்நாடு இசைக்கல்லூரி பேராசிரியை முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது. அந்த நூலின் சில பகுதிகள் இக்கட்டுரையாக அமைந்துள்ளன.*

*"தென்னிந்திய இசையின் தாய்" என்று அழைக்கப்படும் காரைக்கால் அம்மையார் கி.பி. 5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். பக்தி இலக்கிய வளர்ச்சிக்கும் இசை வளர்ச்சிக்கும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் வித்திட்ட பெருமை இவரையே சாரும். இவருக்குப்பின் தோன்றிய தேவார மூவரும் எண்ணிக்கை அளவில் அதிகமான பாடல்களைப் பாடி இருந்தாலும், அவர்களுக்குப் பாடும்முறை, பதிக அமைப்பு, கருத்து அமைப்பு பண் முதலியவற்றிற்கு வழிகாட்டியாக இருந்துள்ளவர் இவரே. ஒரு சிறந்த இயல் அறிவும், இசை அறிவும் கொண்ட இயல் இசைப்புலவராக உள்ள காரைக்கால் அம்மை ஒரு பெண்பால் புலவர் என்பது குறிப்பிடத்தக்கது.*

*உமாபதி சிவாச்சாரியார் தனது சேக்கிழார் புராணத்தில்*

> *கவுணியர் நாவுக்கரசர் பேயார் இவர்*
> *மூவர் கற்கும் இயல் இசை வல்லோர்*

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

*காரைக்கால் அம்மையார் இயற்றியுள்ளவை மொத்தம் 143 பாடல்கள்.*

1. *அற்புதத் திருஅந்தாதி - 101 பாடல்கள்*
2. *திரு இரட்டை மணிமாலை - 20 பாடல்கள்*
3. *மூத்த திருப்பதிகங்கள் - 22 பாடல்கள்*

*இதில் மூத்த திருப்பதிகம் திரு ஆலங்காட்டில் பாடப்பட்டது. பதிக அமைப்பில் முதன் முதலில் பாடப்பட்டமையால் மூத்த திருப்பதிகம் என அழைக்கப்படுகிறது.*

### *இயல்வழி இவர் பாடல்கள் சிறப்பு*

***இவர் இயற்றியுள்ள அற்புதத் திரு அந்தாதியும், திரு இரட்டை***

மணிமாலையும் இயல்வழி சிறப்பு வாய்ந்தவை. இவை இரண்டும் அந்தந்த வழியில் தோன்றியுள்ள முதல் நூல்கள். நீதிநூல் காலத்தில் தோன்றியுள்ள வெண்பா என்ற யாப்பினை முதன்முதலில் பக்தி இலக்கியத்தில் பயன்படுத்தியவர் இவரே. இவரைப் பின்பற்றியே முதல் ஆழ்வார்களும், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார் முதலியோரும் வெண்பா யாப்பில் பக்திப் பனுவல் இயற்றியுள்ளனர்.

## அற்புதத் திரு அந்தாதி

அந்தாதி என்பது ஒரு பாடலின் இறுதியை (அந்தம்) அடுத்த பாடலின் ஆதியாக (முதலாக) வைத்துப் பாடுவது. இந்த அமைப்பை முதன் முதலில் இயற்றியவர் அம்மையே. இலக்கிய வரலாற்றில் அந்தாதி பற்றித் தொல்காப்பியர் எதுவும் கூறவில்லை. ஆயினும் சங்க நூல்களில் அந்தாதி அமைப்பு காணப்படுகிறது. ஐங்குறுநூற்றில் அம்மூவனார் இயற்றிய நெய்தல் திணையில் தொண்டிப் பத்து முழுவதும் 'அடிசீர் அந்தாதியாக' வருகிறது. பதிற்றுப்பத்தில் காப்பியாற்றுக் காப்பியனாரின் நான்காம் பத்து முழுவதும் அடிசீர் அந்தாதியாக உள்ளது. அந்தாதி என்பது வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆதி மண்டலித்து முடியும். காரைக்கால் அம்மையார் இயற்றியுள்ள அற்புதத் திருவந்தாதி அந்தாதித் தொடை அமையப்பெற்று 101 வெண்பாக்களால் ஆனது.

## திரு இரட்டை மணிமாலை

இருவேறுபட்ட யாப்பு வடிவங்களால் ஒரு பொருள் குறித்த இருபது பாடல்களால் பாடப்பெறும் நூல் இரட்டை மணிமாலை ஆகும். இது இரு வேறுபட்ட மணிகளால் தொடுக்கப்பட்ட மாலை போல அழகு தரும். காரைக்கால் அம்மையார் இயற்றியுள்ள திரு இரட்டை மணி மாலையில் உள்ள 20 பாடல்களும் கட்டளைக் கலித்துறையும், வெண்பாவும் விரவி அந்தாதியாகப் பாடப்பட்டுள்ளன.

''பன்னிரு பாட்டியல்'' என்ற நூல் இரட்டைமணி மாலையின் இலக்கணத்தைக் கூறும்போது

> வெண்பா முதலாகக் கலித்துறை பின்வரும்
> இந்த இருபதிரட்டை மணிமாலை

என்கிறது. இதிலும் காரைக்கால் அம்மையார் ஒரு மாறுதலுடன் முதலில் வெண்பா வராமல் கலித்துறை முதலிலும் வெண்பா அடுத்தும் வருமாறு அமைத்துள்ளார். பிற்காலத்தில் இரட்டைமணிமாலை என்ற சிற்றிலக்கியத்திற்கு இவர் நூலே முதல் நூல் ஆகிறது.

## கட்டளைக் கலித்துறை

காரைக்கால் அம்மையாரே முதன் முதலில் கட்டளைக் கலித்துறை

அமைப்பைப் பயன்படுத்தியுள்ளார். ஏனெனில் இந்த யாப்பில் சங்கப் பாடல்கள் இல்லை. தொல்காப்பியரும் கலிப்பாவின் வகைகளைக் கூறும்போது இதனைக் கூறவில்லை. அம்மையாருக்குப்பின் வந்த தேவார ஆசிரியர்களில் ஒருவரான திருநாவுக்கரசர் இந்த யாப்பைக் கையாண்டு இருப்பினும் அது அவர் காலத்தில் 'திருவிருத்தம்' என்று அழைக்கப்பட்டுள்ளது. இவர்களுக்குப்பின் கட்டளைக் கலித்துறையில் முழுநூலாகச் செய்துள்ளவர் மாணிக்கவாசகர் ஆவார். இவரின் 'திருக்கோவையார்' என்ற நூல் முழுதும் இந்த யாப்பில்தான் அமைந்துள்ளது.

## மூத்த திருப்பதிகம்

பதிகம் என்பது பத்துப் பாடல்கள் கொண்டது. பதிகம் என்ற அமைப்பிற்குக் காரைக்கால் அம்மையாரே முன்னோடி ஆதலால் இவர் இயற்றியது 'மூத்த திருப்பதிகம்' என்று அழைக்கப்படுகிறது. இவரைப் பின்பற்றியே தேவார மூவர், ஆழ்வார்கள், மாணிக்கவாசகர் பதிக அமைப்பில் இயற்றியுள்ளார்கள். இவருக்கு முன் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, திருக்குறள், நாலடியார் போன்ற நூல்கள் பத்துப் பத்துப்பாடல்களைக் கொண்டு விளங்கினாலும் தெய்வத்தைப் பாடுபொருளாகக் கொண்டு பக்தி நெறியில் பாடப்பட்ட பத்துப் பாடல்களே 'பதிகம்' எனப் பெயர் பெற்றுள்ளன.

மூத்த திருப்பதிகத்தில் முதல் திருப்பதிகம் எண்சீர் விருத்தத்தால் ஆகிய எண்சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம் ஆகும். இரண்டாம் பதிகம் அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம் ஆகும்.

## இசைவழி இவர் பாடல்களின் சிறப்பு

செயற்கரும் செயல்கள் செய்த 63 நாயன்மார்களில் மூவர் பெண்கள். இம்மூவருமே இசைத் தொடர்பு உடையவர்கள்.

1. மங்கையர்க்கரசியார் - "கானத்தின் எழுபிறப்பு" என்று அழைக்கப்படும் திருஞானசம்பந்தரால் புகழ்ந்து பாடப்பெற்றவர்.
2. இசைஞானியார் தேவார மூவரில் ஒருவரான சுந்தரரின் தாயார் ஆவார். பெயரிலேயே இசையைக் கொண்டிருப்பவர்.
3. காரைக்கால் அம்மையார் - முதன்முதலில் 'பண்' பாடி 'தமிழ் இசையின் தாய்' என்று அழைக்கப்படுபவர்.

மேலும் 63 நாயன்மார்களில் அமர்ந்த கோலத்தில் இருப்பவர். சிவனால் 'அம்மையே' என்று அழைக்கப்பெற்றவர். இவர் கையில் தாளம் உள்ளது. இசை வல்லவர்கள் அனைவருமே கையில் இசைக்கருவியோ அல்லது தாளமோ வைத்திருப்பது வழக்கம். உதாரணமாக, திருஞானசம்பந்தர் கையில் தாளமும், நாரதர் கையில் தம்புராவும் கூறலாம். கடைசியாக இவர் இறைவனிடம் வேண்டிக் கேட்ட வரம்

*இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்*
*பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்புண்டேல்உன்னை என்றும்*
*மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி*
*அறவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க என்றார்.*

*(பெரியபுராணம் - காரை. புராணம்)*

*இறைவன் ஆடும்போது அவர் அடியின் கீழ் மகிழ்ந்து பாடவேண்டும் என்று கேட்டுள்ளார். காரைக்கால் அம்மை வாழ்க்கையில் இருமுறை அவர் கேட்டதைக் கொடுத்த இறைவன் (மாம்பழம், பேய்வடிவம்) இந்த வரமும் நிச்சயமாகக் கொடுத்துள்ளான் என்று அவர் பாடல்வழி நமக்குத் தெரிய வருகிறது.*

*நாளும் இன்னிசையால் தமிழ்ப் பரப்பிய ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும், பின் சுந்தரரும் காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து வழிபட்ட திருஆலங்காட்டில் கால் வைக்க மனம் ஒப்பாது, ஊரின் புறத்தே உள்ள பழையனூர் ஆலங்காட்டில் இருந்து பதிகம் பாடிச் சென்றுள்ளதால் இவர் தம் பெருமை நமக்கு மேலும் விளங்குகிறது.*

### காரைக்கால் அம்மையும் பண்களும்

***காரைக்கால் அம்மையார் தம் மூத்த திருப்பதிகத்தில் முதல் முதலில் இரு பண்களைப் பயன்படுத்தியுள்ளார். முதன்முதலில் பண்பாடிய இசைப்புலவர் இவர் ஆகையால் இவர் 'தமிழ் இசையின் தாய்' என்று அழைக்கப்படுகிறார். இவர் பயன்படுத்தியுள்ள பண்கள் நட்டபாடைப் பண்ணும், இந்தளப் பண்ணும் ஆகும்.***

#### நட்டபாடை பண்ணில் அமைந்த பாடல்

*மூத்த திருப்பதிகத்தில் முதல் பதிகம் நட்டபாடைப் பண்ணில் பாடப்பட்டுள்ளது. இப்பதிகத்தின் முதல் பாடல்.*

*பண் : **நட்டபாடை***
*பாடியுள்ள தலம் : **திரு ஆலங்காடு***

***கொங்கை திரங்கி நரம்பெழுந்து***
***குண்டுக்கண் வெண்பற் குழிவயிற்றுப்***
***பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு***
***பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்***
***தங்கி அலறி உலறு காட்டில்***
***தாழ்சடை எட்டுத் திசையும் வீசி***
***அங்கம் குளிர்ந்தன லாடும் எங்கள்***
***அப்பனிடம் திரு ஆலங்காடே.*** ***(11.1.1)***

*சுரதாளக்குறிப்புடன் இப்பாடல் :*

*இராகம் : கம்பீரநாட்டை (36ஆம் மேளமாகிய சலநாட்டையில் ஜன்யம்)*

*தாளம் : ரூபகம்* | *ஆரோசை : சக$_2$ம$_1$ பநி$_2$ச்*

*அமரோசை : சநி$_2$பம, க$_2$ச*

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா, | கமா | பா, | பபா | மகா | ம | பா$_1$ | மபா$_1$ |
| கொங் | கைதி | ர | ங்கி | நரம் | பெ | ழு | ந்து |
| பமநிப | பமகப | மகசா | | சகா | மபா$_1$ | ம | பா$_1$ |
| குண்டுக் | கண் | வெ ண் | பற் | குழி | வயி | ற் | றுப் |
| பா$_1$ | மா$_1$ | மபா | நிச்ா | ச்ா | ச்ா | நிச்ச் | நி பா |
| பங் | கி | சிவந் | திரு | பற் | கள் | நீ | ண்டு |
| பநி | சா; | நிசா | நிபா | கமபா$_1$ | | கபமக | கா$_1$ |
| பர | டுயர் | நீள் | கணைக் | காலோர் | | பெண் | பேய் |
| சா$_1$ | கமா | பா$_1$ | மபா | மகாம | | பா$_1$ | நிபா; |
| தங் | கியல | | றி | யுலறு | | கா | ட்டில் |
| பநிச்நி | பம | கபமகசா | | சகா | | மபா$_1$நி | பா |
| தாழ்ச | டை | எட்டுத் | | திசை | | யும் வீ | சி |
| பா$_1$மா$_1$ | மபா | நிச்ா | | ச்ா$_1$ ச்ா$_1$ | | நிச்க்ச் | நிப |
| அங் | கங்குளிர்ந் தன | | | லா | டு | மெங் | கள் |
| பநி | ச்ா;நிச்ா | நிபா | | கம | பா மா | கப | மகசா |
| அப் பனி | டந் | திரு | | ஆ | லங் கா | | டே |

## பண் - நட்டபாடை

***இப்பண் தற்போது பாடப்படும் கம்பீரநாட்டை இராகத்தை ஒத்தது. இது ஒரு சேய்ராகம். 36வது மேளமாகிய (தாய்ராகமாகிய) சல நாட்டையிலிருந்து பிறந்தது. இதன் சுரஸ்தானங்கள் குரல் (ச) வன்கைக்கிளை (க$_2$) மென் உழை (ம$_1$) இளி(ப) வன்தாரம் (நி$_2$). இது ஒரு ஐந்திசைப் பண். இதில் துத்தம் மற்றும் விளரி என்ற இரு சுரங்கள் இல்லை. இப்பண்ணில்தான் திருஞானசம்பந்தர் தன் முதல் பதிகத்தை (தோடுடைய செவியன்) இயற்றியுள்ளார். மேலும் கோயிலில் சுவாமி புறப்பாட்டின்போது பயன்படுத்தப்படும் 'மல்லாரி' என்ற இசை வடிவம் இந்த இராகத்தில் அமைக்கப்பட்டுள்ளது.***

## இந்தளப்பண்ணில் அமைந்த பாடல்

*அம்மை பயன்படுத்தியுள்ள மற்றொரு பண் இந்தளம். மூத்த திருப்பதிகத்தின் இரண்டாம் பதிகம் இப்பண்ணில் பாடப்பட்டுள்ளது.*

*பண் :* **இந்தளம்**

*பாடல் பாடியுள்ள தலம் -* **திரு ஆலங்காடு**

*எட்டி இலவம் ஈகை சூரை காரை படர்ந்தெங்கும்*
*சுட்ட சுடலை சூழ்ந்த கன்னி சோர்ந்த குடர் கௌவப்*
*பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்*
*கொட்ட முழவங் கூளி பாடக்குழகன் ஆடுமே.* *(11.2.1)*

## சுரதாளக் குறிப்புடன் பாடல் :

*இராகம் : மாயாமாளவகௌளை*

*தாளம் : ரூபகம்*

*ஆரோசை : சரி$_1$க$_2$ம$_1$ பத$_1$நி$_2$ச்*

*அமரோசை : ச்நி$_2$த$_1$பம$_1$க$_2$ரி$_1$ச*

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சரி | கா | மா | ; $_1$மமா | ; மா | மா | மத | பமகா |
| எட் | டி | இல | வம் | ஈ | கை | சூ | ரை |
| சரி | கம | பா | $_1$தப | பமதா | பா$_1$ம | கமகரி | |
| கா | ரை | ப | டர்ந் | தெ | ங் | கும் | |
| சரி | கா | மாதப | தாதா | தநிச்ரி | ச்நிதா | பா | பா |
| சுட் | டசு | ட | லை | சூழ்ந்த | க | ன்னி | |
| தநிச்நி | ச்நிதா | பாபம | | கமபத | நிச்நித | பமகரி | |
| சோர் | ந்த | குடர் | | கௌ | வப் | | |

*(மற்ற இரண்டு வரிகள் இதே சுர அமைப்பில் பாடவும்)*

***பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்***
***கொட்ட முழவங் கூளி பாடக் குழகன் ஆடுமே.***

## இந்தளப்பண்

*இப்பண் தற்போது பாடப்படும் மாயா மாளவ கௌளை இராகத்தை ஒத்தது. இது ஒரு தாய்ராகம். ஏழு சுரங்களைக் கொண்ட பண். இதன் சுரஸ்தானங்களாவன : குரல் (ஸ) மென்துத்தம் (ரி$_1$) வன்ளகக்கிளை (க$_2$) மென் உழை (ம$_1$) இனி (ப) மென் விளரி (த$_1$) வன் தாரம் (நி$_2$).*

*இப்பண்ணில்தான் தேவார மூவர்களில் ஒருவரான சுந்தரர் தன் முதல் பதிகத்தைப் (பித்தா பிறை சூடி) பாடியுள்ளார்.*

*அற்புதப் பதிகங்கள் என்று அழைக்கப்படும் உயிர் எழுப்பிய பதிகங்கள் இந்தப் பண்ணில் தான் பாடப்பட்டுள்ளன.*

1. *திருஞானசம்பந்தர் - திருமயிலாப்பூர் - 'மட்டிட்ட புன்னை' என்ற பதிகம்*
2. *திருஞானசம்பந்தர் - திருமருகல் - 'சடையாய் எனுமால்' எனும் பதிகம்*
3. *திருநாவுக்கரசர் - 'ஒன்று கொலாம்' எனும் பதிகம்*

*இன்றைய கர்நாடக இசையில் 'சங்கீதப் பிதாமகர்' என்று அழைக்கப்படும் புரந்தரதாசர் இசை பயில்வோருக்குத் தொடக்க இசைப்பயிற்சிப் பாடங்களை அமைத்துக் கொடுக்க இந்தப் பண்ணையே (மாய மாளகௌளம்) தேர்ந்தெடுத்துள்ளார்.*

*சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான 'முத்துஸ்வாமி தீட்சிதர்' திருத்தணி முருகன் அருள் பெற்ற பின் பாடிய முதல் பாடல் இப்பண்ணில் தான் அமைந்துள்ளது. இவ்வாறு இசை வடிவங்கள் இப்பண்ணில் இயற்றப்பட்டுள்ளன. ஏராளமான பண்கள் இருக்கப் பிற்கால இசைவாணர்கள் இவ்விரு பண்களுக்கு முதன்மையும் முன்னுரிமையும் கொடுத்தமை தென்னிந்திய இசை வரலாற்றில் காரைக்கால் அம்மையார் பெற்ற செல்வாக்கைக் காட்டுகிறது எனலாம்.*

### முத்திரை

***முதன்முதலில் காரைக்கால் அம்மையாரே தன் பாடல்களில் முத்திரை (பாடியவர் பாடலைப் பாடியதற்கான அத்தாட்சி) பயன்படுத்தியுள்ளார். அம்மை தன்னைக் 'காரைக்கால் பேய்' என்று பதிக இறுதியில் முத்திரையாகக் கொடுத்துள்ளார். இவரைப் பின்பற்றியே பிற்கால இசைப் புலவர்கள் தம் பெயரையோ அல்லது புனைபெயரையோ முத்திரையாகக் கொடுத்துள்ளனர்.***

***முதல் பதிகம் (கடைசிப் பாடல்)***

*............. காரைக்கால் பேய்*
*செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்*
*சிவகதி சேர்ந்தின்பம் எய்துவாரே.* *(11.1.11)*

***இரண்டாம் பதிகம் பாடல் (கடைசிப் பாடல்)***

*............. காரைக்கால் பேய் தன்*
*பாடல்பத்தும் பாடி ஆடப் பாவம் நாசமே.* *(11.2.11)*

*மேலும் பதிகத்தில் அப்பதிகம் எந்தத்தலத்தில் பாடப்பட்டது என்ற தல முத்திரையும் (ஆலங்காடு) காணப்படுகிறது.*

## 2. காரைக்கால் அம்மையும் ஏழிசையும்

***துத்தம் கைக்கிள்ளை விளரி தாரம்***
***உழை இளி யோசை பண் கெழுமப்பாடி*** *(11.1.9)*

*மூத்த திருப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலில் ஏழிசையின் தமிழ்ப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் துத்தம் கைக்கிளை விளரி தாரம் உழை இளி என்ற முறையில் நரம்பின் (சுரங்களின்) பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மேற்கூறிய அடியில் ஆறு இசை நரம்புகளின் பெயர்களையே தந்துள்ளார். இதில் குரல் நரம்பைக் குறிப்பாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த ஏழு நரம்புகளுள் ஒன்றை ஒன்று முதலாகக் கொண்டு பல பண்கள் பிறக்கும் என்று 'ஓசை பண் கெழுமப்பாடி' என்று குறிப்பால் காட்டியுள்ளார். இவ்வடியின் வழிப்பண் அமைப்பும், அவர் பண்ணோடு பாடிய குறிப்பும் நமக்குக் கிடைக்கின்றன.*

### ஏழிசைகளின் விளக்கம்

*குரல் குறிப்பாகக் கொள்ளப்பட்டதால் அடுத்த நரம்பான துத்தம் என்ற சுரம்.*

#### துத்தம்

*இது ஏழிசையில் இரண்டாம் நரம்பு (சுரம்) தற்போது ரிஷபம் என்று அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'ரி'. குரலைக் காட்டிலும் சற்று உயர்ந்த ஒலி துத்தம் ஆகும். துத்தம் என்ற சொல்லுக்கு வேர்ச்சொல்வழி அதன் பொருள் சற்று உயர்ந்தது என்பது (துதி உயர்த்திப் போற்று) குரலைக் காட்டிலும் சற்று உயர்ந்து ஒலிக்கும் காரணம் பற்றியே இப்பெயர் பெற்றது. இது மென் துத்தம் (ரி$_1$) வன்துத்தம் (ரி$_2$) என இருவகைப்படும். காரைக்கால் அம்மை தன் பதிகத்தில் இந்தளப்பண்ணில் மென் துத்தத்தையே பயன்படுத்தி உள்ளார். திவாகரம் என்ற நூல் துத்தத்தின் பிறப்பிடம் நாக்கு என்கிறது.*

#### கைக்கிளை

*இது ஏழிசையில் மூன்றாவது நரம்பு. இது தற்போது காந்தாரம் என்று அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'க$_1$' என்பது. கை + கிளை - கைக்கிளை. கை என்பது சிறுமை. கிளை என்பது உறவு. குரலுடன் சிறிய உறவு கொண்டுள்ள நரம்பு (சுரம்). குரல் நரம்புடன் ஒருவாறு, சிறிது ஒத்திசைக்கும் காரணத்தால் இது கைக்கிளை எனப்படுகிறது என்கிறது ஆபிரகாம் பண்டிதரின் கருணாமிருத சாகரம். இதுவும் மென் கைக்கிளை (க$_1$)வன் கைக்கிளை (க$_2$) என இரு வகைப்படும். காரைக்கால் அம்மை இரு பண்களிலும் (நட்டபாடை, இந்தளம்) வன் கைக்கிளையையே பயன்படுத்தி உள்ளார். திவாகரம் கைக்கிளையின் பிறப்பிடம் அண்ணம் என்கிறது.*

**உழை**

*இது ஏழிசையில் நான்காம் நரம்பு. இது தற்போது மத்யமம் என்று அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'ம' என்பது. உழை என்றால் பக்கம் என்று பொருள். உழையர் என்பது பக்கத்தில் இருப்பவர். இந்த நரம்பு சுற்றம் போலக் குரலுடன் ஒத்திசைக்கும் காரணத்தால் உழை எனப்படுகிறது. குரல் - உழை உறவு கொண்ட சுரங்களைக் கிளைச் சுரங்கள் என்று அழைக்கிறோம். இதுவும் மென் உழை (ம$_1$) வன் உழை (ம$_2$) என இரு வகைப்படும். காரைக்கால் அம்மை இரு பண்களிலும் (நட்டபாடை, இந்தளம்) மென் உழையையே பயன்படுத்தி உள்ளார். திவாகரம் உழையின் பிறப்பிடம் தலை என்கிறது.*

**இளி**

*இது ஏழிசையில் ஐந்தாம் நரம்பு (சுரம்). தற்போது பஞ்சமம் என்று அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'ப' என்பது. இந்த நரம்பு குரலைப் போலப் பேதமற்றது. ஆகையால் இதில் வன்சுரங்கள் மென் சுரங்கள் கிடையா. இந்தச் சுரம் குரலுடன் இணையாக ஒத்திசைப்பதால் குரல் - இளி உறவு கொண்டுள்ள சுரங்கள் இணைச்சுரங்கள் என்று அழைக்கப்படும். திவாகரம் இளியின் பிறப்பிடம் நெற்றி என்கிறது.*

**விளரி**

*இது ஏழிசையில் ஆறாம் நரம்பு. தற்போது தைவதம் என்று அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'த' என்பது. இது மென்மையான ஒலியாகும். இது இளியை அடுத்து சற்று உயர்ந்த ஒலி. இரங்கற்குரிய மென்மையான நெய்தல் பண் விளரிப்பண் என அழைக்கப்படுகிறது. இதுவும் மென்விளரி (த$_1$) வன்விளரி (த$_2$) என இரு வகைப்படும். காரைக்கால் அம்மையார் இந்தளப்பண்ணில் மென் விளரியையே பயன்படுத்தியுள்ளார். திவாகரம் விளரியின் பிறப்பிடம் நெஞ்சு என்கிறது.*

**தாரம்**

*இது ஏழிசைகளில் ஏழாம் நரம்பாகும். தற்போது நிஷாதம் என அழைக்கப்படுகிறது. இதன் குறியீடு 'நி' என்பது. தாரத்தை எடுத்த ஓசை என்று கழகக் கைஅகராதி கூறுகிறது. 'உச்ச இசையின் பெயரே தாரம்' என்று வீரமாமுனிவர் கூறுகிறார். தார் என்பது முன்னோங்கி, நீண்டு உயர்ந்திருப்பது எனப் பொருள்படும். தமிழ் மரபின்படி முன்தோன்றியது இது. இதுவும் மென்தாரம் (நி$_1$) வன்தாரம் (நி$_2$) என இருவகைப்படும். காரைக்கால் அம்மையார் இரண்டு பண்களிலும் (நட்டபாடை, இந்தளம்) வன்தாரத்தையே (நி$_2$) பயன்படுத்தியுள்ளார். திவாகரம் தாரத்தின் பிறப்பிடம் மூக்கு என்கிறது.*

***கீர்த்தனை மரபு***

*ஒரு பக்கத்தில் உள்ள முதல் பாடல் போன்றே (அதே இசை அமைப்பில்) பதிகத்தின் பத்துப் பாடல்களையும் பாடுவது மரபு. இதேபோல் பிற்காலத்தில் இயற்றப்பட்ட கீர்த்தனை என்னும் இசை வடிவத்தில் பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற அமைப்பில் ஒன்றுக்கு மேற்பட்ட பல சரணங்கள் இருக்கும். முதல் சரணத்தின் இசை அமைப்பே பிற சரணங்களுக்கும் பின்பற்றப்படும். எனவே பதிகத்திலிருந்து கீர்த்தனை என்ற நீண்டதோர் இசை மரபிற்கு வித்திட்டவர் காரைக்கால் அம்மையே.*

*மேலும் கீர்த்தனையில் கீர்த்தனை பாடப்பட்ட தலத்தின் பெயர், அத்தலத்தின் அமைப்பு, அத்தலம் அமைந்துள்ள ஊர், அங்குள்ள மரங்கள், விலங்குகள் பெயர் முதலிய செய்திகள் பதிகங்களிலிருந்தே பெறப்பட்டுள்ளன. காரைக்கால் அம்மை பதிகத்தின் பத்துப் பாடல்களில் மேற்கூறிய செய்திகளைத் தந்துள்ளார். உதாரணமாக இந்தளப் பண்ணில் உள்ள பதிகத்தில் எட்டி, இலவம், ஈகை, சூரை, காரை, கள்ளி என்ற சுடுகாட்டில் உள்ள தாவரங்களையும், ஆந்தை, நரி, கடுவன், கழுகு போன்ற விலங்குகள் பற்றியும் செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.*

## ***காரைக்கால் அம்மையும் ஆண்டாளும்***

*பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான ஆண்டாள் காரைக்கால் அம்மையாரைப் பின்பற்றி உள்ளார். அம்மையார் இயற்றியுள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 143. இதைப்பின்பற்றி இதே எண்ணிக்கையில் ஆண்டாளும் பாசுரங்கள் பாடி உள்ளார். இது பற்றித் திருப்பாவையில் ஆண்டாள் வாழ்த்துப்பா கூறுவது*

*திரு ஆடிப் பூரத்து ஜெகத்துதித்தாள் வாழியே*
*திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே*
*ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே*
*உயர் அரங்கர்க்கே தன்னை உகந்தளித்தாள் வாழியே*

*என்று ஆண்டாள் ஒரு நூற்று நாற்பத்து மூன்று (143) பாடல்கள் பாடியுள்ளது சிந்திக்கத்தக்கது.*

## 3. காரைக்கால் அம்மையும் இசைக்கருவிகளும்

*காரைக்கால் அம்மை இறைவன் நடனத்தை நேரடியாகத் தரிசித்தார் என்று பாடல்வழி அறிகிறோம். அவ்வாறு இறைவன் ஆடும்போது எத்தனை கருவிகள் முழங்கத் திருநடனம் ஆடினார் என்று தனது மூத்த திருப்பதிகத்தில் கூறுகிறார்.*

*சச்சரி கொக்கரை தக்கை யோடு*
*தகுணிதம் துந்துபி தாளம் வீணை*
*மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்*
*தமருகம் குடமுழா மொந்தை வாசித்து*
*அத்தனை விரவினோடு ஆடுமெங்கள்*
*அப்பனிடம் திருஆலங் காடே.* *(11.1.9)*

*இப்பாடலில் பன்னிரெண்டு (12) வகையான இசைக்கருவிகள் பற்றிக் கூறுகிறார். இவை தவிர முழவு, யாழ், குழல், துடி, பறை போன்ற இசைக் கருவிகள் பதிகத்தின் பல்வேறு இடங்களில் கூறப்படுகின்றன.*

### காரைக்கால் அம்மை கூறும் 17 இசைக்கருவிகள்

***இசைக்கருவிகளில் 4 வகையான இசைக் கருவிகள் அம்மையாரால் கூறப்பட்டுள்ளன. அவை காற்றுக் கருவிகள், நரம்புக் கருவிகள், தோல் கருவிகள், கனக்கருவிகள் ஆகும்.***

1. *காற்றுக்கருவிகள் (2)* - *குழல், கொக்கரை*
2. *நரம்புக் கருவிகள் (2)* - *வீணை, யாழ்*
3. *தோல்கருவிகள் (12)* - *சச்சரி, தக்கை, தகுணிதம், துந்துபி, மத்தளம், கரடிகை, தமருகம், குடமுழா, மொந்தை, பறை, துடி, முழவு*
4. *கனக்கருவி (1)* - *தாளம்*

### 1. குழல்

***கூளிக் கணங்கள் குழலோடு இயம்பக் குழகன் ஆடுமே. (11.2.6)***

***இது ஒரு காற்றுக்கருவி. துளைக்கருவி என்றும் அழைக்கப்படும். அகநானூற்றுப்பாடல் முதன் முதலில் தோன்றிய இசைக்கருவி என்று குழல் பிறந்த வரலாற்றைக் கூறுகிறது. (அகம். 225) சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதையில் மாதவியின் நடனத்திற்கு மூன்றுவகையான இசைக் கருவிகளும் துணைக் கருவிகளும் பயன்படுத்தப்பட்டன என்கிறது. இதில் குழல் அமைப்பு, குழல் ஆசிரியன் அமைதி, குழல் வகைகள் போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன. சங்கப் பாடல்களில் குறிஞ்சிப்பாட்டு ஆம்பற்குழல் பற்றியும், மலைபடுகடாம்***

*பெருவங்கியம் பற்றியும், நற்றிணை ஆம்பற்குழல், கொன்றைக்குழல் பற்றியும், பதிற்றுப்பத்து பெருவங்கியம் பற்றியும், பரிபாடல் குழல்களில் ஏழ்புழைக்குழல், ஐம்புழைக்குழல் பற்றியும், கலித்தொகை கொன்றைத் தீங்குழல், கோவலர் தீங்குழல் பற்றியும் கூறுகின்ற செய்திகள் குழல் மிகப் பழமையான இசைக்கருவி என்பதைக் காட்டுகின்றன.*

***2. கொக்கரை***

> ***சச்சரி கொக்கரை தக்கை யோடு*** *(11.1.9)*

*கொக்கரை என்பது வலம்புரிச்சங்கு. ஊது கருவி வகையைச் சார்ந்தது என்று தமிழிசைக் கலைக் களஞ்சியம் (தொகுதி-2) கூறுகிறது. இக்கருவி எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் இடம் பெறவில்லை. தேவாரம் கொக்கரையைப் பற்றிக் கூறுகிறது.*

1. *கொக்கரையோடு பாடல் உடையான் (சம். 3.59.4)*
2. *விச்சிசைப்பன கொக்கரை (7.49.6)*
3. *குடமுழவம் கொக்கரை வீணை குழல் யாழ்*
   *திருக்கைலாய ஞான உலா திருமுறை (11.3.46)*

***3. வீணை***

> ***தகுணிதம் துந்துபி தாளம் வீணை*** *(11.1.9)*

*இது ஒரு நரம்புக்கருவி. வீணை பற்றிய குறிப்பு சங்க நூல்களில் கிடையாது. சிலப்பதிகாரத்தில் வீணை பற்றிக் கூறப்பட்டுள்ளது.*

> ***நாரதன் வீணை நயந்தென பாடலும்*** *(சிலப். 6.18.29)*

*தேவாரப் பதிகங்களில் வீணையைப் பற்றிப் பல இடங்களில் குறிப்புகள் உள்ளன.*

> ***கின்னரம் முழவம் மழலை யாழ் வீணை***
> ***கெழவுகம் பாலை செய் கீழ்க் கோட்டூர்*** *(3.8.3)*

*இந்தக் காலக் கட்டத்தில் வீணை, யாழ் இரண்டும் வழக்கில் இருந்தன எனத் தெரிய வருகிறது. திருவாசகம் 'இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்' என்று திருப்பள்ளி எழுச்சிவழி கூறுகிறது. திவ்யப் பிரபந்தத்தில் தும்புரு, வீணை போன்ற நரம்புக் கருவிகள் பற்றிய குறிப்புகள் உள்ளன.*

> ***நன்னரம்புடைய தும்புரு வோடு***
> ***நாரதனும் தம்தம் வீணை மறந்து***

*என்ற பிரபந்தப் பாடலில் வீணை பற்றிக் குறிப்பு உள்ளது.*

**4. யாழ்**

*பழந்தமிழரால் பயன்படுத்தப்பட்ட இசைக்கருவிகளில் மிக முக்கியமானது யாழ். இது ஒரு நரம்புக்கருவி. யாழ் பற்றிய குறிப்புகள் சங்ககால நூல்களில் கிடைக்கின்றன. நரம்புக் கருவிகளில் முதலிடம் வகிப்பது யாழ்தான். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற இலக்கிய நூல்களில் இக்கருவி பற்றிய விவரம் விரிவாகக் கிடைக்கிறது. யாழின் பெயர்கள் குறிஞ்சியாழ், பாலையாழ், மருதயாழ், நெய்தல் யாழ் என நிலங்களின் பெயரோடு இணைத்துக் கூறப்பட்டுள்ளன. ஆற்றுப்படை நூல்கள் யாழின் அமைப்பு, மற்றும் யாழின் வகைகள் பற்றிக் கூறுகின்றன. சிலம்பில் மாதவியும், கோவலனும் சிறந்த யாழிசை வல்லவர்களாகக் கூறப்பட்டுள்ளனர்.*

**பாடியிருந் தந்நரி யாழமைப்ப** *(11.1.11)*

**5. சச்சரி**

**சச்சரி கொக்கரை தக்கையோடு** *(11.1.9)*

*இது ஒரு வகை முழக்குக்கருவி. சச்சு + அரி - சச்சரி. சச்சு என்பது சிறுமை. அரி என்பது நுண்மை. சிறிய நுட்பமான ஒலி உடைய கருவி. இது அரிப்பறை வகையைச் சேர்ந்த ஒரு சிறிய தோல் கருவி. இக்கருவி பற்றிச் சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் குறிப்பு இல்லை. தேவாரங்களில் சச்சரி பற்றிக் குறிப்பு உள்ளது. திருநாவுக்கரசர் தேவாரம் :*

**சச்சரி கொள் கை கண்டேன்** *(6.77.7, 6.29.1)*

**6. தக்கை**

**சச்சரி கொக்கரை தக்கை யோடு** *(11.1.9)*

*இது ஒரு வகை தோற் கருவி.*

**பேரிகை படகம் ...................... தக்கை (சிலப். 3.27)**

*இது தாழ்குரல் தண்ணுமை எனும் பகுதியில் அடியார்க்கு நல்லாரின் மேற்கோளில் வருகிறது. மிகத் தாழ்ந்து ஒலிப்பதனால் இதற்குத் தக்கை எனப் பெயர் ஏற்பட்டு இருக்கலாம். இது கோயிலில் நாள் பூசை நிகழ்ச்சிக்குப் பயன்படுத்தப்பட்ட ஒரு கருவி.*

**தக்கை தண்ணுமை தாளம் வீணை** *(7.36.9)*

*தக்கையை வைத்துக் கொண்டு இராமாயணத்தைப் பாடும் வழக்கம் நம்மிடையே இருந்திருக்கிறது. "தக்கை இராமாயணம்" என்னும் நூல் இக்கருவியை இசைத்துக் கொண்டு பாடுவதற்காகவே பாடப்பட்டது என்பர். பஞ்சமரபு வயிரவன், முருகன், துர்க்கை ஆகிய கடவுளர் முன் இசைக்கப்படும் கருவிகளில் தக்கை ஒன்று என்கிறது (பஞ்சமரபு உரை).*

### 7. தகுணிதம்

**சச்சரி கொக்கரை தக்கையொடு தகுணிதம்** *(11.1.9)*

*இது ஒரு தோல் கருவி. இது தகுணிச்சம், தகுணிதம் என்ற பெயர்களில் வழங்கப் பெற்றுள்ளது.*

**தக்கை தண்ணும்மை தாளம் வீணை தகுணிச்சம்** *(7.36.9)*

*இந்தத் தோற்கருவி 'தாகுதணம், தரிதா தகுதணம்தரிதா' என்று நட்டுவனார்களின் நட்டுவாங்கச் சதி சொற்கட்டுகளில் தகுதணம், தாகுதணம் என்ற வடிவுகளில் காணப்படுகின்றது. அரங்கேற்று காதையுள் 'பேரிகை படகம்' என்று காட்டியுள்ள பாடலில் பெரும் பறைகள் தொகுத்துச் சுட்டப்பட்டுள்ளன. (சிலப். உ.வே.சா. பதிப்பு. 1955, ப.105). இதில் தகுணிதம் கூறப்பட்டுள்ளது. இதழ் விரிந்த தாமரை மலரை ஒத்து இந்தக் கருவி இருந்தது எனக் கல்லாடம் (கல்.85) கூறுகிறது. பல்கலைக்கழக அகராதி இதைப் பொதுப்பறை என்கிறது.*

### 8. துந்துபி

**தகுணிதம் துந்துபி தாளம் வீணை** *(11.1.9)*

*இது ஒரு தோல் கருவி. 'தும்தும்' என்று ஒலிப்பது துந்துபி. ஒலிக்குறிப்பின் அடியாக இப்பெயர் பெற்றிருக்கலாம். துந்துபி, துந்துமி என்றும் குறிப்பு உள்ளது. இது வானோர் விரும்பி இசைத்த கருவியாகத் தெரிகிறது. இதனால் தேவ துந்துபி, அந்தரத் துந்துபி, அநங்கத் துந்துபி என்றும் அழைக்கப்படுகிறது.*

**துந்துபிகள் முதலாய தூரியங்கள் கிளராமே**

*(பெரிய புரா. சம்.புரா. 4.6.49)*

**மலர்மழை பொழிந்தது எங்கும்**
**வானத்துந்துபியின் நாதம்**
**உலகு எலாம் நிறைந்து விம்ம**

*(பெரிய புரா. காரை.புரா. 51)*

*ஞானசம்பந்தர் திருமணத்தில் இக்கருவி முழக்கப்பட்டது.*

**வானத் துந்துபி முழக்குடன் மங்கல வியங்கள்**

*(பெரிய புரா. சம்.புரா. 1198)*

*மிகப் பழங்காலத்திலிருந்தே நம் மக்கள் அணிந்திருந்த ஒரு கருவி இது. ஆழ்ந்த உரத்த இடியைப் போல ஒலி எழுப்பும் தன்மையது.*

***9. மத்தளம்***

***மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்*** *(11.1.9)*

*இது ஒரு இருமுகத் தோற்கருவி. இது தென்னகத்திற்குரிய தேசிய இசைக்கருவி. இது மரத்தால் செய்யப்பட்டது. மத்து மத்து என்று ஒலிப்பதால் மத்தளம் என்ற ஒலியின் அடிப்படையில் பெயர் பெற்றது (அடியார். நல். சிலப். 3.27) ஒலி இனிமைத் தரத்தில் வேறான பிற கருவிகளுக்குத் தளமாக இருப்பதால் மத்தளம் எனப் பெயர் பெற்றிருக்கலாம். சிலம்பு (அடியார். நல். உரை) மங்கல வாழ்த்துப்பாடல் 46 மற்றும் சிலம்பு. 3 அரங்கேற்று காதை 27. இரண்டிலும் மத்தளம் என்னும் கருவியின் பெயர் காணப்படுகிறது. நாச்சியார் திருமொழியிலும் (6-1).*

***மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்றூத***

*என்றும்,*

***மத்தளம் முதலிய வயங்கு பல்லியம்***

*(கம்ப. அயோ. 98)*

*கம்பராமாயணத்திலும் குறிப்பு உள்ளது. முதல் திருப்புகழில்*

***மத்தள வயிரனை உத்தமி புதல்வனை***

*என்ற விநாயகரின் தோற்றம் கூறப்பட்டுள்ளது.*

***10. கரடிகை***

***மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்*** *(11.1.9)*

*இது ஒரு தோற்பறை. கரடி என்ற பெயரும் உண்டு. இது கரடி கத்தினாற் போல் ஓசையிடுவதால் இப்பெயர் பெற்றது என்று அடியார்க்குநல்லார் உரை (சிலப். 3.27) கூறுகிறது. கரடிகை அளவுக்கருவியாகிய மரக்கால் போன்ற அமைப்புக் கொண்டது (கல். 85) என்று கல்லாடம் கூறுகிறது. பஞ்சமரபில் கரடிகை பலாமரத்தால் செய்யப்படும் எனவும், கனக்கரடிகை எனக் கூறி அதன் அளவுகளும் கூறப்பட்டுள்ளன. திருப்புகழில் பேரிகை, பம்பை, தமருகம், தவில் கருவிகளுடன் இக்கருவி ஒலித்ததாகக் கூறப்படுகிறது. கம்பராமாயணத்தில்,*

***கும்பிகை திமிலை செண்டை குறடுமாம்*** *(கம். 8445)*

*என்ற பாடலில் கரடிகை உள்ளது. முதலாம் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டில் கரடிகை என்னும் சொல் இடம் பெறுகிறது. கந்தபுராணம் தக்க காண்டத்தில் கயமகன் உற்பத்தி படலத்தில் (தக்க. காண். 14.214) கரடிகை காணப்படுகிறது.*

### *11. தமருகம்*

***தமருகம் குடமுழா மொந்தை வாசித்து*** *(11.1.9)*

*தமரு என்பதும் தமருகம் என்பதும் ஒரே கருவியைக் குறிக்கும் சொற்களே. உடுக்கை என்று பொருள்படும் என்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி கூறுகிறது. தமருகம் என்ற தோல் கருவியை இசை நூல் மென்மைக் கருவி என்று வகைப்படுத்துகிறது. பஞ்சமரபு இடைக்கருவி என்றும், புறமுழவு வகையைச் சேர்ந்தது என்றும் கூறுகிறது. தமரு என்பது ஒரு சிறுபறை. இடை சுருங்கிய பறை. சிவன் அண்டவெளியில் நடனமாடிய போது கையில் வைத்துக் கொண்டு முழக்கியதாக வரலாறு கூறுகிறது. நடனக்கலையில் நடராசரின் கையில் தமரு இருப்பதாகவே பண்டைக் காலச் சிற்பங்கள் சான்று பகர்கின்றன.*

***தொகு வெகு முரசு கரடிகை டமரு*** *(திருப். 69)*

***செங்கைத் தமருகம் ததிர்சதியொடன்பர்க்கின்ப*** *(திருப். 23)*

*என்று திருப்புகழில் பல இடங்களில் தமருகம் பற்றிக் குறிப்பு உள்ளது. தேவாரங்களிலும் தமருகம் பற்றிக் குறிப்பு உள்ளது.*

### *12. குடமுழா*

***தமருகம் குடமுழா மொந்தை வாசித்து*** *(11.1.9)*

*இதன் வாய் தோலால் மூடப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளதால் இது ஒரு தோற்கருவி வகையைச் சார்ந்தது எனலாம். இதில் ஒரு முக முழவு, இருமுக முழவு, மும்முக முழவு, ஐம்முக முழவு எனப் பலவகை உள்ளன. தேவார, திருவாசகத்தில் இம்முழவு பற்றிக் கூறப்பட்டுள்ளது.*

***குடமுழா நந்தீசனை வாசகனாகக் கொண்டார்*** *(6.96.1)*

*என்று நாவுக்கரசர் தேவாரம் நந்தி குடமுழா வாசித்ததைக் கூறுகிறது. சங்க காலத்தில் குடமுழா என்ற குறிப்பு இல்லை. காரைக்கால் அம்மையாரே முதன் முதலில் இக்கருவியைப் பற்றிக் கூறுகிறார். கல்லாடம் என்ற நூல் ஐந்து முகங்களைக் கொண்ட ஒரு முழவு பற்றிக் கூறுகிறது. ஐந்து முகங்களும் வெவ்வேறு ஓசையாக முழங்கும் குடமுழா என்னும் தோற்கருவியினை வாணாசுரன் தன் ஆயிரம் கைகளாலும் முழக்கினான் என்று கூறப்படும் செய்தியின் மூலம் ஐந்து முகங்களும் வெவ்வேறு ஒலியாக முழங்குவது குடமுழா என அறிகிறோம் (கல். 21).*

**13. மொந்தை**

> ***தமருகம் குடமுழா மொந்தை வாசித்து*** *(11.1.9)*

*மொந்தை என்பது ஒரு கட்பறை. யானையின் காலைப் போன்ற அமைப்பு உடையது. கையால் முழக்கி ஒலி எழுப்பக் கூடியது. கல்லவடத்திரள், தண்ணுமை, கல்லலகு, துத்திரி முதலிய பிற இசைக் கருவிகளுடன் சேர்த்து ஒலிக்கப்படும் கருவி.*

> ***மொந்தை கல்லழகு துத்திரி யோங்க*** *(கல். 30.10)*
>
> ***கரிகாலன்ன மொந்தை*** *(கல். 89.29)*

*தேவாரங்களில் இதன் குறிப்பு காணப்படுகிறது.*

> ***தழங்கு மொந்தை தக்கை...... முழங்க*** *(1-53.5)*
>
> ***குழல்யாழ் மொந்தை கொட்டவே*** *(1.70.2)*
>
> ***முழவங் கழன் மொந்தை*** *(2.171.7)*
>
> ***மொந்தை முழா வொலிக்க*** *(3.296.5)*

*தமிழிலக்கியங்களில் குறிக்கப்படும் மொந்தை என்ற தோற்கருவி ஒரு முகத்தை உடையது. ஒரே வகையான ஒலி (சுரம்) மட்டுமே இசைக்க வல்லது என்று பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி இசையகராதியில் குறிப்பிடுகிறார்.*

**14. பறை**

1. ***பறை போல் விழிகட் பேய் கொட்ட*** *(11.2.1)*
2. ***படுவெண் துடியும் பறையும் கறங்கப்பரமன் ஆடுமே*** *(11.2.9)*

*பறை மற்ற தோற்கருவிகள் போலத் தோலால் போர்த்தப்பட்ட ஒரு கருவி. வாரால் விசித்து இறுகக் கட்டப்பட்டது. இது ஒரு முகமுடையதாகவும், இரட்டை முகங்களை உடையதாகவும் இருந்துள்ளது. ஒரு முகப்பறை. ஒருகண் இரும்பறை என்றும், இரட்டை முகமுடைய பறையை இணை முகப்பறை என்றும் வழங்கினர். பறையின் ஒலியைக் கொண்டு இதனைப் பேரோசைப்பறை எனக் கூறியுள்ளனர். போர்ப்பறை, வெருப்பறை, வெறியாட்டுப்பறை என்றும் இது அழைக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியம் ஐந்து நிலங்களுக்கும் ஐந்து பறைகளைக் கூறியுள்ளது. அவை,*

*குறிஞ்சிப்பறை - தொண்டகம், முருகியம், துடி*

*பாலைப்பறை - துடி*

*மருதப்பறை - கிணைப்பறை*

*முல்லைப்பறை - பம்பை, ஏறுகோட்பறை*

*நெய்தற்பறை - சாப்பறை*

*காரைக்கால் அம்மையார் சுடுகாட்டில் இறைவன் ஆடலுக்குப் பக்கக் கருவியாகப் பறையும் ஒலித்தது என்கிறார்.*

***15. துடி***

***படுவெண் துடியும் பறையும் கறங்கப் பரமன்ஆடுமே*** *(11.2.9)*

*இது ஒரு இருமுகத் தோற்கருவி. மிக விரைந்து முழக்கப்படுவது. இது பாலை நிலத்திற்குரிய தோல் கருவி. பாலை நிலத்து மறவர்கள் தத்தம் துடியருடன் ஊர்ப்புறம் சூழ்ந்தார்கள் என்ற கருத்தினாலும் (தொல். பொருள். செய். 62)*

***மறங்கடைக் கூட்டிய துடிநிலை*** *(தொல்.பொருள். செய். 63)*

***துடிபடுத்து வெட்சி மாலையே***

*(புறப்பொருள் வெண்பாமாலை வெட்சி 2. உரை)*

*என்னும் நூற்பாக்களின் அடிகளாலும் துடி என்பது போர்க்காலத்தில் பயன்பட்டது என அறியலாம். முருகன் துடிகொட்டி ஆடினான் அது 'துடிக்கூத்து' எனப்பட்டது. (சிலப். புகார் கடலாடு காதை. 51). எனவே இது குறிஞ்சி நிலத்திற்கு உரிய பறையாகும். துடி பற்றித் தேவாரமும் திருப்புகழும் பல குறிப்புகள் தருகின்றன.*

***துடிகளோடு முழவம் விம்மவே*** *(1.24.6.)*

*ஆறாம் திருமுறையில் தனித்திருத்தாண்டகத்தின் மூன்றாம் பாடலில் அப்பர் 'துடிகொண்டார் கங்காளந் தோன்மேல் கொண்டார்' என்று இறைவன் துடியுடன் ஆடியதைக் கூறுகிறார். இதற்கு முன்னோடியாகக் காரைக்கால் அம்மை காட்டில் இறைவன் ஆடப் பறையும் துடியும் முழங்கின என்று பாடுகிறார்.*

***16. முழவு***

1. ***முந்தி அமரர் முழவின் ஓசை*** *(11.1.10)*
2. ***முழவங்கொட்ட கூழிபாடக் குழகன் ஆடுமே*** *(11.2.1)*
3. ***முந்தி அமரர் முழவின் ஓசை முறைமை வழுவாமே*** *(11.2.7)*

*காரைக்கால் அம்மையார் முந்தி அமரர் முழவின் ஓசை முறைமை வழுவாமே என்று கூறுவதால் ஒரு கட்டுப்பாட்டுடன், முறையோடு வாசிக்கப்பட்ட முழவின் ஓசை அவர் ஆடிய அந்தி நிருத்தத்தில் ஒலித்தது என்பது புலனாகும். முழக்கப்படும் தோற்கருவி முழவு எனப்பட்டது. முழவு தோற்கருவிகளின் பொதுப்பெயர் என்றும் கூறப்படுகிறது. பஞ்சமரபின் ஐந்து பெரும் பிரிவுகளில் இரண்டாம் பிரிவு வாச்சிய மரபு. இது முழவைப் பற்றியே கூறுகிறது. சங்க நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு அனைத்து நூல்களிலும் முழவு பற்றிய குறிப்புகள் அதிகம் உள்ளன. சிலம்பு* ***பண்ணமை முழவின்*** *(1.3.61)* ***என்றும் சீவக சிந்தாமணி பண் அமை மென்முழா*** *(சீவக. 530.2)* ***என்றும் தேவாரம் பண்முழவும் பல வோசையும்*** *(2.9.10)* ***பண்ணர் முழவதிர*** *(4.57.1)* ***என்றும் பண்ணுக்கு இயைந்து வாசிக்கப்படும் முழவு என்னும் குறிப்புகள் உள்ளன.***

### *17. தாளம்*

***தகுணித்தம் துந்துபி தாளம் வீணை*** *(11.1.9)*

***இது ஒரு கனக்கருவி அல்லது கஞ்சக் கருவி. இத்தாளங்கள் தற்போது இரும்பு, எஃகு, செம்பு, வெள்ளியுடன் கூடிய வெண்கலம் போன்ற உலோகங்களால் செய்யப்படுகின்றன. இத்தாளம் குழித்தாளம், கூத்துத்தாளம், நட்டுவத்தாளம் எனப் பலவகைப்படும். காரைக்கால் அம்மையார் இறைவன் நடனம் ஆடியபோது ஒலித்த இசைக்கருவிகளுடன் தாளமும் ஒலித்ததாகக் குறிப்பிடுகிறார். தாளம் பாடலையும், ஆடலையும் கட்டுப்படுத்தி வழிநடத்திச் செல்வதற்கு உதவியாக உள்ளது.***

## 4. காரைக்கால் அம்மையும் ஆடலும்

*'நான் மகிழ்ந்து பாடி அறவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க' என்று கேட்டுக் கொண்டபடி அவர் இறைவன் ஆடலை நேராகத் தரிசித்ததால் இவர் பாடல்களில் இறைவனின் திருக்கூத்துப் பற்றிய செய்திகள் நிறைந்து காணப்படுகின்றன. பலவகை நடனங்கள், தாண்டவங்கள், இறைவன் ஆடிய போது முழங்கிய இசைக்கருவிகள், உடன் ஆடியவை, அரங்கம், ஆடல்வழி உலக இயக்கம், கூத்து வகைகள், பஞ்ச பூதங்கள், ஐந்தொழில்கள் போன்ற பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.*

**தாண்டவங்கள்**

*இவர் பாடல்களின் வழி இறைவன் ஆடிய பலவகைத் தாண்டவங்கள், கூத்து வகைகள், நடனங்கள் பற்றி நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.*

*1. **ஊர்த்துவத் தாண்டவம்.***

*மண்டலம் நின்றுஅங்கு உளாளமிட்டு*
*வாதித்து வீசி எடுத்தபாதம்*
*அண்டமுற நிமிர்ந்தாடு மெங்கள்*
*அப்பனிடம் திருஆலங் காடே.* (11.1.4)

*இவ்வரிகளில் மண்டலம் என்பது இந்த உலகம். இந்த அண்டத்தில் பூமியே அரங்கமாகக் கொண்டு அதில் நின்றாடிய ஆடல் இது. எனவே மண்டலம் நின்று என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'உளாளம்' என்பது (உள்ளாளம்) ஒரு கால் கிரியை. பஞ்சமரபு கால்கிரியை மரபில் உள்ளாளம் என்பது "குஞ்சித்த காலைச் சுற்றி யொற்றி அணைய வைப்பது" என்கிறது. உள்ளாள மிட்டு வீசி எடுத்த பாதம் என்பதால் இறைவன் இடது பாதத்தை உள்ளாளமிட்டு வீசித் தூக்கிய நிலையில் நின்ற பாதம் என்று கொண்டால் இது ஊர்த்துவத் தாண்டவ நிலையைக் குறிக்கும். மேலும் 'வாதித்து வீசி எடுத்த பாதம்' என்பதால் வாது நடந்தது காளியுடன்தான். எனவே காளியுடன் போட்டியிட்டு அவர் ஆடிய தாண்டவம் ஊர்த்துவத் தாண்டவமே. மேலும் ஆனந்தத் தாண்டவத்தில் தூக்கிய பாதம் என்பது சற்று உயர்த்திய இடது பாதம். ஆனால் இங்கு வீசி எடுத்த பாதம் என்பதால் இது ஊர்த்துவத் தாண்டவமே. கடைசி வரியில் 'அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன்' என்பதால் அண்டம் முழுமையும் நிறைந்து நிமிர்ந்தாடும் ஆடல் ஊர்த்துவத் தாண்டவத்தையே குறிக்கும். மேலும் மற்றொரு பாடலில்*

***கழலொலி ஓசைச் சிலம்பொலிப்பக்***
***காலுயர்வட்டணை இட்டு நட்டம்*** *(11.1.7)*

*என்று பாடுகிறார்.*

*கால்களில் சிலம்பும், கழலும் ஒலிக்க இடது காலை உயர்த்தி, வட்டணை இட்டு ஆடியதாகக் கூறப்படும் நடனமும் ஊர்த்துவத் தாண்டவமே. ஊர்த்துவம் என்பது உயர்த்திய எனப் பொருள்படும். கால்உயர் என்று கூறப்படுவதால் இது ஊர்த்துவத் தாண்டவத்தைக் குறிக்கும். 'வட்டணை' என்பது சுழற்சியை, சுழன்று ஆடியதைக் குறிக்கும் சொல் ஆகும்.*

***2. சந்தியாத் தாண்டவம்.***

*சந்தி என்பது அந்திப்பொழுதைக் குறிக்கும். அந்தி வேளையில் ஆடிய நடனமே சந்தியாத் தாண்டவம் எனப்பட்டது.*

*முந்தி அமரர் முழவினோசை திசைக் கதுவச்*
*சிலம்பார்க்க ஆர்க்க அந்தியில் மாநடம் ஆடும்*
*எங்கள் அப்பன்.* *(11.1.10)*

*அமரர்கள் முழவின் ஓசை திசையெல்லாம் கேட்க, சிவன் காலில் அணிந்துள்ள 'சிலம்பு ஆர்க்க ஆர்க்க' என்று சிலம்பு நடனத்தின் நளினத்தைக் குறிக்கிறது. அந்தியில் ஆடிய நடனம் 'மாநடம்' என்று காரைக்கால் அம்மையார் கூறியுள்ளதால் இது சந்தியாத் தாண்டவமே என்று உணர முடிகிறது. மேலும் மற்றொரு பாடலில்,*

*முந்தி அமரர் முழவின் ஓசை முறைமை வழுவாமே*
*அந்தி நிருத்தம் அனல்கை ஏந்தி அழகன் ஆடுமே.* *(11.2.7)*

*என்று இரண்டாம் பதிகத்தில் கூறுகிறார். இங்கும் முந்தி அமரர் முழவின் ஓசை "முறைமை வழுவாமல்" என்று கூறுவதால் முழவு ஒரு கட்டுப்பாடுடன், வரன் முறையுடன் ஆடலுக்கு ஏற்ப ஒலித்த முறை கூறப்பட்டுள்ளது. இங்குச் சந்தியாத் தாண்டவம் 'அந்தி நிருத்தம்' என்று கூறப்பட்டுள்ளது. இந்நிருத்தம் ஆடும்போது இறைவன் அனலைக் கையில் ஏந்தி ஆடியுள்ளதாகத் தெரிகிறது.*

***கூத்து வகைகள்***

*கூத்துக்களில் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் ஆகிய மூன்றுமே சிவன் ஆடிய ஆடல்களாகச் சங்க நூல்களில் கலித்தொகையும், காப்பியங்களில் சிலப்பதிகாரமும் தெரிவிக்கின்றன. புறப்பொருள் இலக்கணங்களில் வரும் முன்தேர்க் குரவை, பின்தேர்க்குரவை போலத் திரிபுரத்தை வென்ற களிப்பால் இறைவன் பாரதி வேடந்தாங்கித் தேர்முன் ஆடினார். கைகொட்டி ஆடினார் என வருகிறது (ஆடல்வல்லான், பக். 85). கலித்தொகையும், சிலம்பும் கொடு கொட்டியாவது திரிபுரத்தை எரியச்செய்து சிவபெருமான் உமாதேவியை ஒருபால் கொண்டு கைகொட்டியாடிய கூத்து என்கின்றன.*

*திரிபுரம் எரியத்தேவர் வேண்ட*
*எரிமுகப் பேரம் பேவல் கேட்ப*

*உமையவள் ஒரு திற்கை ஓங்கிய*
*இமையவன் ஆடிய கொடுகொட்டி* *(கடலாடுகாதை 40)*

*என்று சிலப்பதிகாரம் கொடுகொட்டி பற்றிக் கூறுகிறது. கலித்தொகை கடவுள் வாழ்த்துப் பாடலில்*

*படுபறை பல இயம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ*
*கொடுகொட்டி ஆடுங் கால்* *(கலித். கடவுள். வாழ். 5-6)*

*என்று கொடுகொட்டி ஆடும் போது பலவிதப் பறைகள் முழங்கின என்று கூறுகிறது. காரைக்கால் அம்மையாரும் மூத்த திருப்பதிகத்தில் இறைவன் ஆடியபோது முழங்கிய பலவிதமான பறைகள் பற்றிக் கூறுகிறார்.*

*சச்சரி கொக்கரை தக்கை யோடு*
*தகுணிதம் துந்துபி தாளம்வீணை*
*மத்தளங் கரடிகைவன்கை மென்தோல்*
*தமருகங் குடமுழா மொந்தை வாசித்*
*தத்தனை விரவினோடு ஆடுமெங்கள்*
*அப்பனிடம் திருஆலங் காடே.* *(11.1.9)*

*இவ்வாறு 12 வகையான இசைக்கருவிகள் முழங்க இறைவன் ஆடியதாகக் கூறப்படுவதால் இது கொடுகொட்டியாக இருக்கலாம் என எண்ண இடமுண்டு. சிலம்பு திரிபுரம் எரித்தவுடன் ஆடிய ஆடல் இது என்கிறது. திரிபுரம் எரித்த நிலையில் ஆடிய தாண்டவமே திரிபுரத் தாண்டவம் எனப்படுகிறது. இது வெற்றிக் கூத்தாகும்.*

### திரிபுரத் தாண்டவம்

***மூன்று அசுரர்கள் (தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி) தேவர்களுக்கு மிகுந்த துன்பம் கொடுத்ததால் அவர்கள் சிவபெருமானை வேண்ட இறைவன் போர்க்கோலம் தாங்கித் தேரின் மீது சென்று அவர்கள் கோட்டையை எரித்து அவர்களை வாயிற்காவலர்களாக ஆட்கொண்டார் என்பது புராணச் செய்தி. இந்த வெற்றிக் களிப்பில் ஆடிய கூத்தே திரிபுரத்தாண்டவம் எனப்படுகிறது. காரைக்கால் அம்மையார் பல இடங்களில் முப்புரம் எரித்த வரலாற்றைக் கூறுவதால் இக்கூத்து பற்றிய செய்தியாகவே கொள்ளலாம்.***

1. ***முரண் அழிய ஒன்னாதார் மூஎயிலும் ஓரம்பால் எய்தானே (11.4.27)***
2. ***முப்புரங்கள் அன்றெரித்தான் (11.4.32)***
3. ***அந்தரத்தே நாம் ஆள் என்று ஏத்தார்***
   ***நகர் மூன்றும் வேம்ஆறு ஒரு கணையால் செற்றானை (11.4.34)***
4. ***மதியா அடல் அவுணர் மாமதில் மூன்று அட்ட (11.4.37)***

5. **விண்டார் மும்மதிலும் வெந்தீயினில் அழியக்**
   **கண்டாலும் முக்கணான் கண்** *(11.4.84)*

*என்று அற்புதத் திரு அந்தாதியில் பல பாடல்கள் திரிபுர சம்காரத்தைப் பற்றிக் கூறுகின்றன.*

**இரட்டை மணிமாலையில் திரிபுர சம்காரம்**

1. **முனிவார் திரிபுரம் மூன்றும்வெந்தன்று செந்தீயில் மூழ்கத்**
   **தனிவார் கணை யொன்றினால் மிகக் கோத்த வெஞ்சங்கரனே** *(11.3.5)*
2. **நீ நின்று தானவர் மாமதில் மூன்றும் நிரந்துடனே**
   **தீ நின்று வேவச் சிலை தொட்ட வாறென்** *(11.3.15)*

*என்று திரிபுரம் எரித்தது பற்றிய செய்திகள் உள்ளன.*

**பாண்டரங்கம்**

*இக்கூத்தும் திரிபுர சம்காரத்தை அடிப்படையாகக் கொண்டு ஆடப்பட்டதுவே. பாழ் + து + அரங்கம் - பாண்டரங்கம். பாழ்பட்ட சுடுகாட்டையே அரங்கமாக வைத்து ஆடிய ஆடல் ஆகையால் பாண்டரங்கம் எனப்பெயர் பெற்று இருக்கலாம். காரைக்கால் அம்மையாரின் மூத்த திருப்பதிகம் இரண்டும் இறைவன் திரு ஆலங்காட்டில் பாடப்பட்டவை. இவை முழுவதும் இறைவன் சுடுகாட்டில் ஆடிய ஆடலைக் குறித்தே பாடப்பட்டுள்ளன.*

1. **பேய்தங்கி யலறி உலறுகாட்டில்**
   **தாழ்சடை எட்டுத்திசையும் வீசி** *(11.1.1)*
2. **ஈமம் இடுசுடுகாட்டகத்தே**
   **ஆகங் குளிர்ந் தனல் ஆடும்** *(11.1.3)*
3. **பேய்கள் கையடித்தோடு இடுகாட்டரங்கா** *(11.1.4)*
4. **கூகைப் பேய்கள் குறுநரி சென்றணங்காடு காட்டில்** *(11.1.6)*
5. **பட்ட பிணங்கள் பரந்த காட்டில்** *(11.2.1)*
6. **சிறு கூகை மூளைத் தலையும் பிணமும்**
   **விழுங்கி முரலும் முதுகாட்டில்** *(11.2.6)*
7. **இடுவெண் தலையும் ஈமப்புகையும்**
   **எழுந்த பெருங் காட்டில்** *(11.2.9)*
8. **நட்டம் பேணும் இறைவன் பெயரும் பெருங்காடே** *(11.2.3)*

*மேற்கூறிய பாடல்கள் சிவன் சுடுகாட்டில் ஆடியதாகக் கூறுவதால் இவை பாண்டரங்கமாகக் கொள்ளப்படலாம்.*

**காபாலம்**

காபாலம் என்பது சிவன் மண்டை ஓடுகளை அணிந்து ஆடுவது என்று கலித்தொகை கூறுகிறது. பகைவர்களின் மண்டை ஓடுகளை அணிகலன்களாகக் கொண்டு பகைவர்களை ஆட்கொண்டான் எனக் கொள்ளல் வேண்டும்.

> கொலை யுழுவைத் தோலசைஇ கொன்றைத்தார் அவற்புரள
> தலையங்கை கொண்டு நீ காபாலம் ஆடுங்கால்.
>
> (கலித். கடவுள் வாழ்த்து 11-12)

எனவே தலையங்கை கொண்டு அவர் ஆடிய ஆடல் காபாலம் எனப்பட்டது. காரைக்கால் அம்மை கூறும் காபாலக் கூத்து :

1. **கொடு வெண் டலையும் பிறையும் ததும்பக்**
   **கெள்ளென் றிசை பாடப்**
   **படுவெண் துடியும் பறையும் கறங்கப் பரமன் ஆடுமே** (11.2.9)
2. **என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு**
   **அன்பறாது என் நெஞ்சு அவர்க்கு** (11.4.2)
3. **என்பே அணிந்து இரவில் தீ யாடும் எம்மானார்** (11.4.30)
4. **முன்பாயின தலை யோடுகள் கோத்தவை ஆர்த்துவெள்ளை**
   **என்பாயினவும் அணிந்தங்கோர் ஏறுகந் தேறுவதே** (11.3.17)
5. **பொடிபூசி என்பணிந்த பேய்க் கோலம்** (11.4.29)
6. **பொங்கிரவில் ஈமவனத் தாடுவதும்** (11.4.25)

மேற்கூறிய பாடல்வழி இறைவன் என்பணிந்து ஆடியதாகக் கூறப்படுவதால் இக்கூத்தைக் காபாலக் கூத்து என்று எண்ணலாம்.

**உன்மத்த நடனம்**

உன்மத்தன் என்பவன் பித்தன். பித்தன் வேடம் கொண்டு இறைவன் ஆடிய நடனம் உன்மத்த நடனம். இந்நடனத்தைக் காரைக்கால் அம்மையார்

> பித்த வேடம் கொண்டு நட்டம் பெருமான் ஆடுமே. (11.2.4)

என்கிறார். இதன்படி இறைவன் பித்தவேடம் கொண்டு ஆடிய நடனம் நமக்குப் புலப்படும்.

**சம்காரத் தாண்டவம்**

தாண்டவம் என்னும் நடனம் விரைந்து விறுவிறுப்பும் நிறைந்த, தாண்டிக் குதித்தலும், தாளப் பின்னல்களும், சுழற்சியும் கொண்ட ஒரு நடனமாகும். இறைவன் எண்தோள் வீசி நின்று, சடை நாற்திசையும் பரவத் தீப்பிழம்பு எங்கும் இலங்க, சொல்லொணாத சுழற்சியில் நின்றாடுவது சம்காரத் தாண்டவம் (ஆடல்

*வல்லான் ப. 130) என்று கூறுகிறது. இத்தகைய நடனத்தை இறைவன் ஆடியதாகக் காரைக்கால் அம்மையார் கூறும் பாடல் :*

> ***தாழ்சடை எட்டுத் திசையும் வீசி***
> ***அங்கம் குளிர்ந் தனலாடும் எங்கள் அப்பன்.*** *(11.1.1)*

*தாழ்சடை எட்டுத் திசையும் வீச அனலாடிய ஆடல் கூறுப்படுகிறது. மேலும்,*

> ***காடும் கடலும் மலையும் மண்ணும் விண்ணும் சுழல***
> ***அலை கையிலேந்தி ஆடும் அரவப்புயங்கன்.*** *(11.1.8)*

*இறைவன் சுழன்று ஆடியதால் காடு, மலை, மண், விண் ஆகிய அனைத்தும் சுழன்றதாகக் கூறப்படுகிறது.*

> ***ஆடும் மதியம் சடைமேல் உடையார்***
> ***சுழல்வார் திருநட்டம் ஆடும் பரமன்.*** *(11.2.11)*

*சுழன்று ஆடிய அவர் நடனத்தைச் "சுழல்வார் திருநட்டம்" என்று கூறுகிறார் மற்றொருபாடலில் :*

> ***காலுயர் வட்டணை இட்டு நட்டம்.*** *(11.1.7)*

*என்ற 'வட்டணை' என்ற சொல்லின் வழி சுழன்று நட்டம் ஆடிய விதம் நமக்குப் புலப்படும். இதுவே ஊழிக்கூத்து, சர்வ சம்காரத் தாண்டவம் என்றும் அழைக்கப்படுகிறது.*

***சர்வசம்காரத் தாண்டவம்***

*திருப்புத்தூர் புராணம் இறைவன் சர்வ சம்காரத் தாண்டவத்தை இருண்ட நள்ளிரவில் ஆடினான் என்று கூறுகிறது (ஆடல் வல்லான் ப.117). காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதியில் நள்ளிரவில் சுடுகாட்டில் இறைவன் ஆடிய நடனத்தைப் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.*

1. ***பொங்கிரவில் ஈம வனத்தாடுவதும்*** *(11.4.25)*
2. ***என்பே அணிந்து இரவில் தீ யாடும் எம்மானார்*** *(11.4.30)*
3. ***கழல் ஆர்ப்பப் பேரிரவில் ஈமப் பெருங்காட்டில் பேயோடும்***
   ***ஆரழல்வாய் நீயாடும் அங்கு*** *(11.4.51)*
4. ***பொங்கு இரவில் ஏந்து எரிபாய்ந்து***
   ***ஆடும் இடம் எமக்கு ஒருநாள் காட்டுதுயோ?*** *(11.4.70)*

*மேற்கூறிய பாடல்கள் வழி இறைவன் நள்ளிரவில் சுடுகாட்டில் எரிபாய்ந்து ஆடியுள்ளார் எனத் தெளிவு. இந்த நடனம் சர்வசம்காரத் தாண்டவம் எனக் கொள்ளலாம்.*

***அணுத் தாண்டவம்***

*'அணுவிற்கு அணுவாய் அப்பாலுக் கப்பாலாய்' என்று திருவாசகத்தில் மாணிக்கவாசகர் கூறுவது போல இறைவன் உலகங்களை எல்லாம் அணுவாக்கித் தானும் அணு உருவாய் நின்றாடுவது அணுத்தாண்டவம். இது அணுக்கத் தாண்டவம் என்றும் கூறப்படுகிறது. அணுவைப் பற்றி ஆராய்ச்சி செய்கின்ற விஞ்ஞானிகள் 'அணுக்கள் எல்லாம் ஏக தளத்தில் ஆடிக்கொண்டேயிருக்கின்றன' என்று கூறியுள்ளனர். அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன என்றும் கண்டறிந்தனர்.*

*ஓர் அணுவின் அமைப்பைக் கண்டோமானால் அதன் நடுப்பகுதி நிலைத்த அணுவும்* (Protons$^{+}$ & Neutrons) *அதனை வளையச் சுற்றும் அணுவும்* (electrons$^{-}$) *கொண்டது. சுற்றும் அணு அகலாமலும் அணுகாமலும் ஓரளவு தூரத்தில் ஓயாமல் சுற்றிக்கொண்டே இருப்பதைக் காணலாம்.*

***அணுவின் அமைப்பு***




*இந்த அணுவின் அமைப்பு கூத்தாடும் நடராசப் பெருமானுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது. அவனுடைய ஒழுங்கான கட்டுப்பாடான (சுற்றி வரும் அணுவைப் போன்ற) அசைவின் காரணமாக இந்த அண்டம் இயங்கிக் கொண்டு இருக்கிறது. நடராசர் கையில் தீ, காலில் மண், தலையில் கங்கை நீர், துடியில் காற்று, ஆடும் இடம் ஆகாயம் இவ்வாறு பஞ்ச பூதங்களும் ஒவ்வொரு உறுப்பில் விளங்கத் தான் அவைகளை எல்லாம் கூட்டுகின்ற நுண்பொருளாய், நுண்ணிய ஆற்றலாய் அவைகளைப் படைத்து ஆட்டுவிக்கிறான். இதனை விளக்குவதே அவன் நடனம்.*

*இந்த ஆட்டம் சற்றுப் பிழைப்பின், மாறுபடின் பேராபத்தை உண்டாக்கும். இது அணுவில் ஏற்படுத்தப்பட்ட சிறிய மாற்றம் அணுகுண்டுவழி பேரழிவை ஏற்படுத்துவது போன்றது. நடராசப் பெருமானின் ஆடல் சற்றுப் பிழைப்பின் இந்த அண்டம் என்ன ஆகும் என்றும் காரைக்கால் அம்மையார் தம் அற்புதத் திருவந்தாதியில் கூறுகிறார்.*

***அடி பேரிற் பாதாளம் பேரும் அடிகள்***
***முடிபேரின் மாமுகடு பேரும் - கடகம்***
***மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்***
***அறிந்தாடும் ஆற்றாது அரங்கு.*** *(11.4.77)*

*இப்பாடல் வழி இறைவன் பாதம் (அடி) சற்றுப் பெயர்ந்தால் பாதாள உலகம் பெயர்ந்து போகும். அடிகள் முடி பெயர்ந்தால் மேல் உலகங்கள் பெயர்ந்து போகும் என்றும் கடகம் அணிந்து ஆடும் கை பெயர்ப்பின் வான் திசைகள் அனைத்தும் பெயர்ந்து போகும் என்றும் இதை அறிந்து ஆடுவீராக. இல்லை என்றால் இந்த அண்டம் தாங்காது (ஆற்றாது) என்று இறைவன் அண்டத்தையே அரங்கமாகக் கொண்டு ஆடிய ஆடல் மூலம் இவ்வுலக இயக்கம் கூறப்படுகிறது.*

**உலக இயக்கம்**

*ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே என்ற திருநாவுக்கரசர் தேவாரத்திற்கு ஏற்ப அவர் ஆடல் இந்த உலக இயக்கமாக உள்ளது. இதையே திருமூலரும் திருமந்திரத்தில்,*

**வேதங்களாட மிகும் ஆகம மாடக்**
**கீதங்களாடக் கிளரண்டம் ஏழாடப்**
**பூதங்களாடப் புவனம் முழுதாட**
**நாதங் கொண்டாடினான் ஞானானந்தக் கூத்தே.** என்றும்

***காளி யோடு ஆடிக் கனகா சலத்தாடிக்***
***கூளியோடு ஆடிக் குவலயத்தே ஆடி***
***நீடிய நீர் தீகால் நீள்வான் இடையாடி***
***நாளுற அம்பலத்தே யாடும் நாதனே.*** *என்றும் பாடி மகிழ்கிறார்.*

*மண்ணில் நவரத்தின மணிகள் ஒளிவீசுகின்றன. நீரில் அலை மோதுகின்றது. நெருப்பு தனது சுவாலையாய் நாக்கை நீட்டி ஆடுகிறது. காற்று தென்றலாகவோ, புயலாகவோ வீசுகிறது. வானில் மின்னல் துள்ளி ஒளிர்கிறது. இவ்வாறு ஐம்பூதங்களிலும் ஒருவகை நடனம் நிகழ்ந்து கொண்டு இருக்கிறது. ஐம்பூத இயக்கம் ஆடல் வல்லானாகிய இறை ஆடும் நடனம் என்கிறார்.*

*உலக இயக்கங்களின் உயிர்த் துடிப்பு ஆடல் வல்லானின் ஆடலால் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. உயிர்கள் பிறப்பதும், இறப்பதும், வாழ்வதும், மறப்பதும்,*

*இருப்பதும் பேரின்ப நிலையில் பெருவாழ்வில் பொருந்துவதும் ஆடல்வல்லானின் அசைவினால் நிகழ்கின்றது. நுண்ணிய அணு கூட அசைவற்று இருப்பதில்லை.* ***இயக்கம் என்பது உலகின் மாபெரும் தத்துவம் இதனைக் காட்டும் இணையற்ற வடிவம் ஆடல் வல்லானின் வடிவமாகும்.***

***காரைக்கால் அம்மையார்***

***அறிந்தாடும் ஆற்றாது அரங்கு.*** *(11.4.77)*

*இந்த அண்டமே ஆடும் அரங்கமாகக் கொண்டு ஆடியுள்ளார் என்கிறார். இதில் பாதாளம் அவர் கால் பெயர்ந்து ஆடும் இடமாக இருப்பதால், அதன் இயக்கம் அவர் பாதங்களிலும் வான் முகடின் இயக்கம் அவர் முடியிலும், திசைகளின் இயக்கம் அவர் கைகளிலும் இருப்பதாகக் கூறிப் பொதுவாக அண்டத்தின் இயக்கம் அவரின் அறிந்தாடும் ஆடலில் தான் உள்ளது என்கிறார். அவரே விரிசுடர், ஆகாயம், ஐம்பூதம், அட்டமூர்த்தம் அனைத்தும் என்கிறார்.*

***அவனே இருசுடர்தீ ஆகாயம் ஆவான்***
***அவனே புவிபுனல் காற்றாவான் - அவனே***
***இயமானனாய் அட்ட மூர்த்தியுமாய் ஞான***
***மயனாகி நின்றானும் வந்து.*** *(11.4.21)*

*மேலும் காரைக்கால் அம்மையார் மற்றொரு பாடலில் இறைவன் திருமுடியின் மேல் கங்கை உலாவுவதாலும் பிறைமதி உலாவுவதாலும் (ராகு, கேது) பாம்புகள் உலாவுவதாலும் ஆராய்ந்து பார்த்தால் அது வானமே ஆகும் என்று கூறுகிறார்.*

***கலங்கு புனல் கங்கை ஊடால லாலும்***
***இலங்கு மதி இயங்க லாலும் - நலங்கொள்***
***பரிசுடையான் நீள்முடிமேல் பாம்பு இயங்கலாலும்***
***விரிசடையாம் காணில் விசும்பு.*** *(11.4.75)*

*இறைவன் திருமுடி வானே என்று அறுதி இட்டுக் கூறுகிறார். காரைக்கால் அம்மை தன் மூத்த திருப்பதிகத்தில்*

***அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன்*** *(11.1.4)*

*என்கிறார்.* ***இவ்வண்டம் முழுமையும் நிறைந்து கால் பூமியிலும் முடி மேல் உலகத்திலும் இருக்குமாறு ஆடிய ஆடல் இது. இதை நாம் கற்பனை செய்யும் போது, இறைவன் காரைக்கால் அம்மையாருக்கு 'விசுவரூப தரிசனம்' கொடுத்துள்ளார்.*** *அர்ச்சுனருக்குக் கீதோபதேசத்தின் போது கண்ணன் தரிசனம் கொடுத்தது போலவும், மாபலி சக்கரவர்த்திக்கு வாமன அவதாரத்தில் தரிசனம் கொடுத்தது போலவும் இங்கு நடராசப் பெருமான் விண்ணிற்கும், மண்ணிற்கும் இடையே பெரிய உருவம் எடுத்துள்ளார் என்று பொருள்கொள்ள முடிகிறது. மேலும் வாமன அவதாரத்தில் வாமனனாக அவதாரம் எடுத்துள்ள திருமால்*

*மண்ணில் ஒரு பாதமும், விண்ணில் ஒரு பாதமும் வைத்து, மூன்றாம் அடிக்கு இடம் தேடினார் என்கிறது புராணம். இங்குக் காரைக்கால் அம்மையார் கூறும் ஊர்த்துவத் தாண்டவத்திலும் நடராசப் பெருமான் மண்ணில் ஒரு பாதமும், விண்ணில் ஒரு பாதமும் வைத்துப் பெருங்கூத்து ஆடியுள்ளார்.*

**வாதித்து வீசி எடுத்த பாதம்.** *(11.1.4)*

*என்று கூறப்படுவதால் காளியுடன் போட்டியிட்டு வீசி எடுத்த, ஊர்த்துவத் தாண்டவமே என்பது உறுதி. மேலும் மூத்த திருப்பதிகத்தின் இரண்டாம் பதிகத்தில்,*

**மாயன் ஆட மலைமகளும் மருண்டு நோக்குமே.** *(11.2.8)*

*என்று கூறுகிறார். மாயன் என்பவன் மாயவித்தைகள் செய்யும் இறைவன். அண்ட முழுமையும் நிறைந்து ஆடிய தோற்றம் மாய வித்தையே. இதைக் கண்டு மலைமகள் மருண்டு வியந்து நோக்கினாள் என்று காரைக்கால் அம்மையார் கூறுவதைப் பார்க்கிறோம்.*

### துணங்கைக் கூத்து

*முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஒற்றி அடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒரு வகைக் கூத்தே துணங்கைக் கூத்தாகும். துணங்கைக் கூத்து வகைகளில் பேய்த் துணங்கை ஒருவகை. இந்தப் பேய்த்துணங்கைக் கூத்துப் பற்றிக் காரைக்கால் அம்மையார் தன் பாடல்களில் குறிப்பிடுகிறார்.*

1. **சுழலும் அழல்வழிக் கொள்ளிவாய்ப்பேய்**
   **சூழ்ந்து துணங்கையிட் டோடியாடி** *(11.1.7)*
2. **ஒப்பினை இல்லவன் பேய்கள் கூடி**
   **ஒன்றினை ஒன்றடித் தொக்கலித்துப்**
   **பப்பினை யிட்டுப் பகண்டைபாட** *(11.1.11)*
3. **பேய்கள் கையடித்து ஓடு இடுகாட்டரங்கா** *(11.1.4)*

*பேய்கள் கையடித்துக்கொண்டு என்றும், பேய்கள் கூடி என்றும் கூறப்படுவதால் பலர் சேர்ந்து கையடித்துக் கொண்டு ஆடப்படும் குழுநடனம் என்பது தெளிவு. பல பேய்கள் ஒன்றினை ஒன்றடித்துக் கொண்டு துணங்கை ஆடியதை இப்பாடல்கள் மூலம் தெரிவிக்கிறார்.*

### மூத்த திருப்பதிகம் கூறும் நடராசர் திருவடிவம்

| | | |
|---|---|---|
| ஆடிய இடம் | - | திருஆலங்காடு |
| அரங்கம் | - | சுடுகாடு |
| ஆடல் | - | நின்றாடியது (ஊர்த்துவத் தாண்டவம், சம்காரத் தாண்டவம், கொடு கொட்டி, பாண்டரங்கம், காபாலம்) |

பக்க இசைக்கருவிகள் - *சச்சரி, கொக்கரை, தக்கை, துந்துபி, தகுணிதம், தாளம், வீணை, மத்தளம், கரடிகை, தமருகம், குடமுழா, மொந்தை, துடி, பறை, குழல்.*

**திருஉருவ அமைப்பு**

1. *தாழ்சடை (எட்டுத்திசையும் வீசிய நிலையில்)*
2. *அங்கை அனல்*
3. *கழலொலிக்கச் சிலம்பொலிக்கக் காலுயர்த்திய பாதம்*
4. *வாதிட்டு வீசி எடுத்த பாதம்*
5. *புள்ளி உழைமான் தோல் ஒன்று உடுத்து*
6. *புலித்தோல் பியற்கிட்டு*
7. *கொடுவெண்தலை, பிறை ததும்ப*
8. *சூடும் மதியம் சடைமேல்*
9. *ஆடும் அரவப் புயங்கன்*
10. *ஆடும் அரவம் அரையில் ஆர்த்த அடிகள்*

**அங்கங்குளிர்ந்தனல் ஆடல்**

*இது காரைக்கால் அம்மையாரால் இறைவன் ஆடும் நடனத்திற்குக் கொடுக்கப்பட்ட சிறப்புப் பெயர். எங்கும் காணப்படாத ஆடல். அங்கம் குளிர்ந்து + அனல் ஆடல் - அங்கங் குளிர்ந்தனல் ஆடல். அங்கங்குளிர்ந்து என்பது இறைவனது உடல் அவர் திருமுடியிலிருக்கும் வற்றாத கங்கை பாய்வதால் குளிர்ந்துள்ளது. ஆனால் அவர் ஆடுமிடம் சுடுகாடு. அங்கு அனல் எரிந்து கொண்டே இருக்கும். இருவெவ்வேறான ஒன்று சேரமுடியாதவை, ஒன்று சேர்ந்ததாக ஆடல் (அங்கங் குளிர்ந்தனல் ஆடல்) கூறுகிறது.*

*இக்கருத்து மூத்த திருப்பதிகத்தில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளது.*

1. ***அங்கங் குளிர்ந்தன லாடும் எங்கள்*** *(11.1.1)*
2. ***ஆகங் குளிர்ந்தனல் ஆடும் எங்கள்*** *(11.1.3)*
3. ***அள்ளி யவிக்க நின்றாடும் எங்கள்*** *(11.1.2)*
4. ***அழலுமிழ்ந் தோரி கதிக்க ஆடும்*** *(11.1.7)*

மேலும் தாண்டவம் என்பது பாய்ந்து, தாண்டிக் குதித்து ஆடுவது. இதை,

***அட்டமே பாய நின்றாடும் எங்கள்.*** *(11.1.6)*

*என்று பாய்ந்து ஆடும் நடனம் பற்றிக் கூறுகிறார் காரைக்கால் அம்மையார்.*

*இந்தப்பாடல்களைப் பொருளுணர்ந்து, இசையோடு பாடி, கூத்தாடித் திருவருளைப் பெறமுயலுவோமாக.*

## காரைக்கால் அம்மையார்

*அருளிச்செய்த*

## 2. மூத்த திருப்பதிகம் - 1

*இத்திருமொழிகளின் வரலாற்றைத் திருத்தொண்டர் புராணத்துள், தெய்வச்சேக்கிழார் கீழ்க்கண்ட பாடல்களின் வழி இயம்புகிறார்.*

*ஆலங்கா டதனி லண்ட முறநிமிர்ந் தாடு கின்ற*
*கோலங்காண் பொழுது "கொங்கை திரங்கி"யென்றெடுத்துத் தங்கு*
*மூலங்காண் பரியார் தம்மை மூத்தநற் பதிகம் பாடி*
*ஞாலங்கா தலித்துப் போற்றும் நடம்போற்றி வாழு நாளில். 1784*

**வேறு**

***மட்டவிழ்கொன் றையினார்தந் திருக்கூத்து முன்வணங்கும்***
***இட்டமிகு பெருங்காத லெழுந்தோங்க வியப்பெய்தி***
***"யெட்டியில வம்மீகை" யெனவெடுத்துத் திருப்பதிகங்***
***"கொட்டமுழ வங்குழக னாடு" மெனப் பாடினார். 1785***

***திருவாலங்காடு - பண் நட்டபாடை***

***திருச்சிற்றம்பலம்***

**2.** **கொங்கை திரங்கி நரம்பெ ழுந்து**
**குண்டுகண் வெண்பற் குழிவ யிற்றுப்**
**பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு**
**பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்**
**தங்கி யலறி யுலறு காட்டில்**
**தாழ்சடை எட்டுத் திசையும் வீசி**
**அங்கங் குளிர்ந்தன லாடும் எங்கள்**
**அப்ப னிடந்திரு ஆலங் காடே. 1**

---

*2. 'திருப்பதிகம்' என்பது தேவாரப் பதிகங்களுக்கு உரிய பெயராயினமையால், அவற்றிற்கு முன்னே தோன்றிய அம்மை பதிகங்கள், 'மூத்த திருப்பதிகம்' எனப்பட்டன. திருவாசகத்தில் 'கோயில் மூத்த திருப்பதிகம்' என்பது கோயிலின் மற்றைப் பதிகங்கட்கு முன்னர்த் தோன்றியது. அம்மை பேய் வடிவம் பெற்றதற்கு ஏற்பப் பேய்களது வருணனைகளையும், 'ஆலங்காடு' என்பதற்கு ஏற்பக் காட்டு வருணனைகளையும் இப்பதிகங்களிற் காணலாம். அம்மை "நான் மகிழ்ந்து பாடி - அறவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க"* என வேண்டிப் பெற்ற வரத்தின்படி ஞானசம்பந்தரது முதற் பதிகமும் நட்டபாடைப் பண்ணில் அமைந்தது. அதுபோலவே அம்மைதன் மூத்த முதற் பதிகமும் நட்டபாடைப்*

---

** காரைக்காலம்மையார் புராணம் - 60*

3. கள்ளிக் கவட்டிடைக் காலை நீட்டிக்
 கடைக்கொள்ளி வாங்கி மசித்து மையை
 விள்ள எழுதி, வெடுவெ டென்ன
 நாக்கு, வெருண்டு விலங்கு பார்த்துத்
 துள்ளிச் சுடலைச் சுடுபி ணத்தீச்
 சுட்டிட முற்றும் சுளிந்து பூழ்தி
 அள்ளி அவிக்கநின் றாடும் எங்கள்
 அப்ப னிடம்திரு ஆலங்காடே. 2

---

*பண்ணில் அமைந்துள்ளது.*

***பொழிப்புரை :–*** *மார்பகங்கள் சுருங்கி, நரம்பு தெரிந்து, கண் குழி விழுந்து, வயிறு ஒட்டி, வெண்மையான பற்களில் இரண்டு கோரமாக நீண்டு, சிவந்த மயிர் சுருண்டு, கணுக்கால் நீண்ட பெண் பேய் கோபத்தோடு அலறுகின்ற சுடுகாட்டில் அவிழ்ந்து விழும் சடைமுடியை எட்டுத்திசையும் வீசி, உடலெங்கும் குளிர்ச்சி பொருந்தி, நெருப்பையும் கையிலேந்தி எங்கள் அப்பன் சிவபெருமான் ஆடுகின்றான். அவன் இடம் திரு ஆலங்காடு.*

***அகவிளக்கம்*** *– சரீரமாகிய காட்டிலே மனம் என்னும் பேய்கள் பலவிதத் துன்பம் செய்கின்றபோதும் இறைவனாகிய சிவபெருமான் அவன் திருநடனத்தை நடத்துகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :–*** *திரங்கி – வற்றி. குண்டு – ஆழம். குழி வயிறு – ஒட்டிய வயிறு. பங்கி – தலை மயிர். பரடு – புறங்கால். உலறுதல் – பசியால் உடல் மெலிதல். சில வேளைகளில் மற்றைப் பேய்கள் எங்கேனும் போய்விட ஒரு பெண் பேய் தனித்து நின்று அலறுதலும் உண்டு என்க. அங்கம் – திருமேனி. அனல் ஆடுதல் – சுற்றிலும் நெருப்பு எரிய நடுவே நின்று ஆடுதல். 'இவ்வாறு ஆடுபவன் அங்கம் குளிர்ந்திருத்தல் வியப்பு' என்றபடி.*

***3. பொழிப்புரை :–*** *பேய்கள் கள்ளிச்செடியில் காலை நீட்டி, கொள்ளிக்குக் கொண்டு வரும் தீயை அணைத்துக் கரியுள்ள பாகத்தைக் குழைத்து கண்ணுக்கு மை எழுதி, ஒன்றுக்கொன்று சினந்து சண்டை பிடித்து, நகைத்து, அஞ்சித் துள்ளி, சுடுபிணத்தின் அருகே போய்ச் சுடுகின்ற இடத்தில் சூழ்ந்து, புழுதியை அள்ளிப் போட்டு நெருப்பை அணைத்து விளையாடுகின்ற காடு, சிவபெருமான் திருக்கூத்து ஆடும் ஆலங்காடு.*

***அருஞ்சொற்பொருள் :–*** *கள்ளிக் கவடு – கள்ளி மரத்தின் கிளைகள். கடைக்கொள்ளி – எரிந்து முடிந்த கொள்ளிக் கட்டை. வாங்குதல் – எடுத்தல். மசித்தல் – மசிய அரைத்தல். 'பேய்கள் கண்ணில் எழுதுகின்ற மை கரியே' என்றபடி. எனவே, 'இவ்வாறு செய்வனவும் பெண் பேய்களே' என்பது விளங்கும்.*

4. வாகை விரிந்துவெள் நெற்றொ லிப்ப,
மயங்கிருள் கூர்நடு நாளை ஆங்கே
கூகையொ டாண்டலை பாட ஆந்தை
கோடதன் மேற்குதித் தோட வீசி
ஈகை படர்தொடர் சுள்ளி நீழல்
ஈமம் இடுசுடு காட்ட கத்தே
ஆகம் குளிர்ந்தன லாடும் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 3

5. குண்டில்ஓ மக்குழிச் சோற்றை வாங்கிக்
குறுநரி தின்ன, 'அதனை முன்னே
கண்டிலம்' என்று கனன்று பேய்கள்
கையடித்(து) ஓ(டு)இடு காட்ட ரங்கா

*விள்ள - கண்ணினின்றும் வேறு தோன்ற, 'வெடு, வெடு' என்பது சினக் குறிப்பு. எனவே, நகுதல் கோபச் சிரிப்பாயிற்று. (வெருளுதல், தம்மை வெருட்டும் பேய்கள் கடுந்தெய்வங்கள் முதலினவற்றை நினைத்து). 'விலங்காக' என ஆக்கம் வருவிக்க. விலங்காகப் பார்த்தல், நேரே பாராமல் வலமாகவும், இடமாகவும் திரும்பித் திரும்பிப் பார்த்தல். 'பிணஞ்சுடு தீச் சுட்டிட' என்றபடி. சுளித்தல் - கோபித்தல். பூழ்தி - புழுதி. இது 'பூழி' என்றும் வரும். அவித்தல், தன்னைச் சுட்ட தீயை.*

*4. பொழிப்புரை :- வாகை மரத்தடியில் வெண்ணிறமான முற்றிய காய்கள் காற்றில் சல சல வென்று ஒலிக்க நள்ளிரவு அடர்ந்த இருட்டில் கோட்டான் ஆந்தை மற்றும் பறவைகள் பாடி, மரக் கொப்புகளின் மேல் குதித்தோட இண்டஞ் செடி, கள்ளிச்செடி படர்ந்த, பிணத்தைச் சுட விறகு அடுக்கியிருக்கின்ற சுடு காட்டில், தலையில் கங்கையையும், கையில் அனலையும் ஏந்தி ஆடும் எம்பெருமான் திரு நடனம் புரிகின்றான்.*

*அருஞ்சொற்பொருள் :- வகை - காட்டு வாகை மரம். விரிந்து (விரிய) - தழைத்திருக்க. நெற்று வெண்மையாயது காய்ந்து போனமையால். மயங்கு இருள் - மாலைக் காலத்தில். பகலோடு வந்து பொருந்திய இருள். அது பின் மிகுதலின், "கூர்" என்றார். நடு நாள் - நள்ளிரவு. "நடு நாள் யாமத்தும் பகலும் துஞ்சான்"* எனப் புறப்பாட்டிலும் வந்தது. ஐ, சாரியை, ஆண்டலை, மனிதன் தலைபோலும் தலையையுடைய ஒருவகைப் பறவை. கோடு - மரக்கிளை. கூகையும், ஆண்டலையும் கூவக் கேட்டு ஆந்தை மரக் கிளையின் மேல் இடம்பெயர்ந்து ஓடுகின்றது. வீசுதல் - எழுச்சியுறுதல். ஈகை - இண்டங் கொடி - ஈகை வீசிப் படர்கின்ற. தொடர் கள்ளியின் நீழலையுடைய சுடுகாடு என்க. மற்றும், "ஈமம் இடு சுடுகாடு" எனவும் கொள்க. ஈமம் - பிணஞ்சுடும் விறகு. 'கூகை முதலிய*

** புறம் - 189*

மண்டலம் நின்றங்(கு) உளாளம் இட்டு,
வாதித்து, வீசி எடுத்த பாதம்
அண்டம் உறநிமிர்த்(து) ஆடும் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 4

6. விழுது நிணத்தை விழுங்க விட்டு,
வெண்தலை மாலை விரவப் பூட்டிக்
கழுதுதன் பிள்ளையைக் காளி யென்று
பேரிட்டுச் சீருடைத் தாவளர்த்துப்
புழுதி துடைத்து, முலைகொ டுத்துப்
போயின தாயை வரவு காணா(து)
அழுதுறங் கும்புறங் காட்டில் ஆடும்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 5

---

*பறவைகளின் செயல் ஒருபாலாக, ஈமம் ஒருபால் இடப்படுகின்றது' எனக் கொள்க. "ஆகம் குளிர்ந்து" என்பதற்கு, மேல், "அரங்கம் குளிர்ந்து" என்றதற்கு உரைத்தது உரைக்க. ஆகம் - உடம்பு. 'நடுநாள் சுடுகாட்டகத்தே, பாட, ஓட ஆடும் எங்கள் அப்பன்' என இயைத்துக் கொள்க.*

***5. பொழிப்புரை :-*** *ஆழமான ஓம குண்டத்தின் சோற்றை வாங்கிக் குள்ள நரி தின்ன, அதைக் கண்டு பேய்கள் சினத்தோடு ஒன்றுக்கொன்று அடித்து ஓடுகின்ற சுடுகாட்டையே அரங்கமண்டபமாகவும் கொண்டு, காளியோடு வாதித்து அண்டமெல்லாம் அதிரச் சிவபெருமான் நடனமாடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *குண்டின் ஓமக் குழி - ஆழத்தை உடைய ஓம குண்டம். இது சுடுகாட்டில் இறுதிக் கடனுக்காகச் செய்யப்படுவது. "வாங்கி" என்றது, 'யாவரும் போகட விட்டுப் போனபின்பு எடுத்து' என்றதாம். முன்பு கண்டிலோம் - முன்பே பார்க்கவில்லையே. (பார்த்திருந்தால் நரிகளை வெருட்டித் தின்றிருக்கலாமே என்று) மண்டபம் - வட்டமாகச் சென்று ஆடுதல். உள்ளாளம், 'ஆளத்தி' எனப்படும். அஃதாவது குரலால் இசை கூட்டுதல். வாதித்து - காளியோடும் வாதம் புரிந்து 'எடுத்த பாதம்' என்க. எடுத்த பாதத்தை அண்டம் உற நிமிர்த்து ஆடினமையால், காளி நாணம் அடைந்து தோற்றாள். 'நிமிர்ந்து' என்பதும் பாடம்.*

***6. பொழிப்புரை :-*** *வேகின்ற பிணத்தின் கொழுப்பு உருகி வடிகின்றதைச் சாப்பிட்டுத் தலையோடுகளை மாலையாக பூட்டியுள்ள பிசாசு தன் பிள்ளையைக் காளி யென்று பேரிட்டு வளர்த்து புழுதியெல்லாம் துடைத்துப் பாலூட்டிச் சென்ற தாயை ஒன்றுக்கொன்று காணாது அழுது உறங்கும் சுடுகாட்டில் கனக சபாபதி நடனம் புரிகின்றான்.*

7. பட்டடி நெட்டுகிர்ப் பாறு காற்பேய்
பருந்தொடு, கூகை, பகண்டை, ஆந்தை
குட்டி யிட, முட்டை, கூகைப் பேய்கள்
குறுநரி சென்றணங் காடு காட்டில்
பிட்டடித் துப்புறங் காட்டில் இட்ட
பிணத்தினைப் பேரப் புரட்டி ஆங்கே
அட்டமே பாயநின் றாடும் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. **6**

8. கழலும் அழல்விழிக் கொள்ளி வாய்ப்பேய்
சூழ்ந்து துணங்கையிட் டோடி, ஆடித்
தழலுள் எரியும் பிணத்தை வாங்கித்
தான் தடி தின்றணங் காடு காட்டில்,

---

*அருஞ்சொற்பொருள் :- கழுது - பேய். விழுது நிணம் - திரட்டி எடுத்த உருண்டையாகிய கொழுப்பு.*

*'கழுது தன் பிள்ளையை, நிணத்தை விழுங்க நிணம் - திரட்டி எடுத்து உருண்டையாகிய கொழுப்பு'.*

*'கழுது தன் பிள்ளையை, நிறத்தை விழுங்க இட்டு, வெண் தலை மாலை பூட்டி, புழுதி துடைத்து, முலைகொடுத்து - காளி - என்று பேர் இட்டுச் சீருடைத்தா வளர்த்து, (சிறிது நேரம் விட்டுப்) போயினதாக, அத்தாயை வரவிற் காணாது, பிள்ளைப் பேய் அழுது, பின் உறங்கும் புறங் காடு' என இயைத்துக் கொள்க. 'போயினதாக' எனவும், 'அத்தாய்' எனச் சுட்டும் வருவித்துக் கொள்க. 'விழுங்கியிட்டு' என்பது பாடம் அன்று.*

*7. **பொழிப்புரை :-** மடிந்து நீண்ட நகமும், வழுக்கும் கால்களையும் உடைய பேய்கள் குட்டியிட பருந்து, கோட்டான், ஆந்தை, கௌதாரி முட்டையிட, குள்ள நரி ஓட, பேய்கள் ஒன்றுக் கொன்று பிணத்தைப் புரட்டி, ஆடுகின்ற சுடு காட்டில் எட்டுத் திசையும் பாய்ந்து சிவபெருமான் வீர நடனம் ஆடுகின்றார்.*

*அருஞ்சொற்பொருள் :- 'அணங்கு ஆடு காட்டில் கூகைப் பேய்களும், குறு நரிகளும் குட்டியை ஈன, பருந்தும், கூகையும், பகண்டையும், ஆந்தையும் முட்டையிட, பாறுகாற் பேய்கள் சென்று அவைகளைப் பிட்டு வீசிப் பின் புறங்காட்டில் இடப்பட்ட பிணத்தைப் புரளப் புரட்டி, நெடுக்கும், குறுக்குமாகப் பாய்ந்து ஓட ஆடும் எங்கள் அப்பன்' என இயைக்க.*

*பட்ட அடி - பரந்துபட்ட பாதம். அகரம் தொகுத்தல். நெட்டுகிர் - நீண்ட நகம். பாறுதல் - வற்றுதல். பகண்டை ஒருவகைப் பறவை. கூகைப் பேய்கள்,*

கழலொலி, ஓசைச் சிலம்பொ லிப்பக்
காலுயர் வட்டணை யிட்டு நட்டம்
அழலுமிழ்ந் தோரி கதிக்க ஆடும்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 7

9. நாடும், நகரும் திரிந்து சென்று,
நன்னெறி நாடி நயந்தவரை
மூடி முதுபிணந் திட்ட மாடே,
முன்னிய பேய்க்கணம் சூழச் சூழக்
காடும், கடலும், மலையும், மண்ணும்,
விண்ணும் சுழல அனல்கை யேந்தி
ஆடும் அரவப் புயங்கன் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 8

---

*பேய்களில் கூகையாய் உள்ள பேய்கள் அணங்கு, தாக்கணங்குகள் (தீத்தெய்வங்கள்) அட்டம் - குறுக்கு.*

*8. **பொழிப்புரை :-** சுழல்கின்ற தீப் பிழம்பு வீசும் விழியையுடைய கொள்ளிவாய்ப் பேய்கள் சூழ்ந்து, ஒரு வகைக் கூத்து ஆடி, ஓடி, சுடலையில் எரிந்து கொண்டிருக்கும் பிணங்களை வாங்கி, ஊன் தசை தின்று கொண்டு திரிகின்ற பிசாசு ஆடுகின்ற இடத்தில் எம்பெருமான் தனது கால்களில் அணிந்துள்ள சிலம்புகள் ஒலிக்க, பொன்னொளி வீசுகின்ற ஜடாபாரத்தை எட்டுத் திசையும் வீசித் திரு நடனம் புரிகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-** துணங்கை - இரு கைகளையும் மடக்கி இரு விலாக்களிலும் அடித்துக் கொண்டு ஆடும் கூத்து. இது பெரு மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்ற ஒன்று. தடி - தசை. அணங்கு ஆடுதல் - தெய்வம் வந்தது போல ஆடுதல். 'காட்டில், ஓரி கதிக்க, கால் வட்டணையிட்டு நட்டம் ஆடும் அப்பன்' என்க. ஓரி - நரி. கதிக்க - குதிக்க (நட்டம்) அழல் உமிழ்தல். வெப்பத்தை வீசுதல். "உமிழ்ந்து" என்பதை, 'உமிழ' எனத் திரித்துக் கொள்க.*

*9. **பொழிப்புரை :-** நாடு நகரமும் சுற்றிச் சென்று, நல் வழியைத் தேடி, விரும்பி இறந்தவர்களைத் துணியால் மூடி, பழைய பிணங்களுடன் வைக்கப்பட்டு பேய்க் கூட்டம் கூடி ஆடும் இடத்தில் காடு, கடல், மண், மலை, விண் சுழல, பாம்பையும் ஆபரணமாகக் கொண்டு நெருப்பினைக் கையிலேந்தி எங்கள் அப்பன் சிவபெருமான் திருக்கூத்தாடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-** நயத்தல் - விரும்புதல். "பிணம்" என்றது, பிணமான நிலையை, 'பிணத்து மூடி' என மாற்றி, 'பிணமாய்விட்ட நிலையில் அவர்களைத் துணியால் மூடி மறைத்து' என உரைக்க. மாடு - பக்கம்; இடம் 'பிணத்தை*

10. துத்தம், கைக்கிள்ளை, விளரி, தாரம்,
உழை, இளி, ஓசைபண் கெழுமப் பாடிச்
சச்சரி, கொக்கரை, தக்கை யோடு,
தகுணிச்சம், துந்துபி, தாளம், வீணை,
மத்தளம், கரடிகை, வன்கை மென்தோல்
தமருகம், குடமுழா, மொந்தை வாசித்(து)
அத்தனை விரவினோ(டு) ஆடும் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 9

---

*இட்ட இடம்' என்றதனால் அது, 'முதுகாடு' என்றதாயிற்று. 'இட்ட மாடே ஆடும் புயங்கன்' என இயைக்க. முன்னிய - பலவற்றைக் கருதிய. அரவப் புயங்கன் - பாம்பையணிந்த கூத்தன். 'புயங்கம்' என்பது ஒருவகைக் கூத்தாயினும், அஃது இங்குப் பொதுப் பொருளே தந்தது; என்னை? இறைவன் காட்டில் ஆடுவது எல்லா நடனங்களையும் ஆதலின், 'காடு, கடல், மலை, மண்' என்பன, 'முல்லை, நெய்தல், குறிஞ்சி, மருதம்' என்பவற்றைச் சுட்டியவாறு 'நன்னெறி நாடி நயந்த வரை இட்டம் இடம்' என்றது, 'தீயோர் மட்டுமன்று; நல்லோருந்தாம் அடையும் இடம் அது' என்றபடி. எனவே, 'எங்கள் அப்பன் ஆடும் இடத்தை அடையாதார் எவரும் இல்லை' என்பது உணர்த்தும் முகத்தால், 'அவனே அனைத்துயிர்க்கும் புகலிடம்' என்பதைக் குறிப்பால் உணர்த்தியதாம். தொல்காப்பியரும், "பலர் செலச் செல்லாக் காடு"* - என்பதனான் இப்பொருளை இங்ஙனமே குறிப்பாற் சுட்டினார்.*

*10. பொழிப்புரை :- ஏழு இசையும் ஒருங்கே அமைத்து ஓசை, குரல் என்ற பல வாத்தியங்களோடும், பலவிதப் பறைகள் முழங்க, உடுக்கை, குடமுழா, ஒலிக்க இத்தனை வாத்தியக் கலப்போடு, எங்கள் சிவபெருமான் திருநடனம் ஆடுகின்றான்.*

*அருஞ்சொற்பொருள் :- "ஓசை" என்றதனை, 'குரல்' எனக் கூறியதாகக் கொண்டு, 'துத்தம்' முதலிய ஏழும் ஏழிசைகளின் பெயர் என உணர். இந்த ஏழிசைகளையும் தக்கபடி கூட்டுமாற்றால் பண்கள் பிறக்கும் ஆதலின், இவைகளை, "பண் கெழுமப் பாடி" என்றார். கெழும - பொருந்த. சச்சரி முதல் மொந்தை ஈறாகக் கூறப்பட்டவை வாத்திய வகைகள். 'கைக்கிளை' என்பது விரித்தல் விகாரம் பெற்றது.*

*வன் கை மென்தோல் தமருகம் - வலிய இரு பக்கங்களிலும் மெல்லிய தோலையுடைய உடுக்கை. அத்தனை விரவினோடு, 'அத்தனை வாத்தியங்களின்*

---

* தொல் - பொருள் - புறத்திணையியல் - காஞ்சி

11. புந்தி கலங்கி, மதிம யங்கி
இறந்தவ ரைப்புறங் காட்டில் இட்டுச்
சந்தியில் வைத்துக் கடமை செய்து
தக்கவர் இட்டசெந் தீவி ளக்கா
முந்தி அமரர் முழவி னோசை
திசைகது வச்சிலம் பார்க்க ஆர்க்க,
அந்தியின் மாநடம் ஆடும் எங்கள்
அப்ப னிடம்திரு ஆலங் காடே. 10

12. ஒப்பினை யில்லவன் பேய்கள் கூடி,
ஒன்றினை ஒன்றடித் தொக்க லித்து,
பப்பினை யிட்டுப் பகண்டை பாட,
பாடிருந் தந்நரி யாழ மைப்ப,

---

*ஒத்திசையோடு ஒத்து நிகழ ஆடும் எங்கள் அப்பன்' என்க. "சச்சரி" இன எதுகை 'வாசித்து' என்பதனை, 'வாசிக்க' எனத் திரிக்க. இதன்கண் அம்மையார் இசைக் கலையின் சிறப்புக்களைப் புலப்படுத்தினமை காண்க. 'புயங்கன்' முதலிய சொற்களால் பரதக் கலையைப் புலப்படுத்தி, 'அனைத்துப் பரதங்களையும் ஆடும் பெருமானே வல்லவன்' என்பதனைப் புலப்படுத்தலும் அம்மையாரது திருவுள்ளம் என்க.*

***11. பொழிப்புரை :-** புத்தி கலங்கி, அறிவு மயங்கி, இறந்தவரைச் சுடுகாட்டில் இட்டுச், சந்தியில் வைத்துக் குடம் உடைத்து, சொந்த மகன் தீ வைத்து, ஈமக் கடன் முடிக்கும் சுடுகாட்டில், கால் சிலம்பு ஒலிக்க, ஒலிக்க, பிரளய முடிவில் எங்கள் அப்பன் ஆடும் திரு ஆலங்காடு.*

***அருஞ்சொற்பொருள் :-** புந்தி - புத்தி, மதி - அறிவு. "கலங்கி, மயங்கி" என்றது, இறப்பு வருங்காலத்து நிகழ்வனவற்றைக் கூறியவாறு. சந்தி, உறவினர் நண்பர்களது கூட்டம். கடமை, ஈமக் கடன், தக்கவர், செய்ய உரிமையுடையவர்; புதல்வர் முதலானோர். தீ, பிணத்திற்கு இட்ட தீ. 'அதுவே விறகாய் இருக்க ஆடுகின்றான்' என்க. அவ்வாட்டத்தை மக்கள் காணார் ஆகலான், அதற்கு அமரர்களே வாத்தியம் வாசிப்பாராவர். முழவு - மத்தளம், திசை கதுவ - திசைகளை உள்ளடக்கி நிகழ. அந்தி, மாலைக் காலம், மா நடம், நெடிது நிகழும் நடனம்.*

***12. பொழிப்புரை :-** ஒப்புச் சொல்ல முடியாத பேய்க் கூட்டம் கூடி, பரவி, வட்டமாக நின்று, பம்பைக் கொட்டு ஒருபக்கம் முழங்க, நரி இடும் ஊளையை யாழ் ஒலியாகக் கொண்டு ஆடும் சுடுகாட்டில் பாம்பை ஆபரணமாகக் கொண்டு ஆடிக் கொண்டிருக்கும் சிவபெருமான் பாதார விந்தத்தில், புதர் போல் படர்ந்த*

அப்பனை அணிதிரு ஆலங் காட்டெம்
அடிகளைச் செடிதலைக் காரைக் காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்
சிவகதி சேர்ந்தின்பம் எய்து வாரே. **11**

---

*மயிர்த் தலையையுடைய காரைக்காலம்மையாரும் பேய் வடிவங் கொண்டு, அவன் ஆட்டத்தை கண்ணாரக் கண்டு, அனுபவித்துப் பாடிய செந்தமிழ் பாடல்கள் பத்தையும் அனுபவத்தோடு பாடுகின்றவர்கள் அழியாத பேரின்பத்தையும், வீடு பேற்றினையும் அடைவார்கள்.*

*அருஞ்சொற்பொருள் :-* "ஒப்பினை" என்பதில் ஐ, இரண்டாம் வேற்றுமை யுருபு. 'இல்லாதனவாகிய வலிய பேய்கள்' என்க. 'ஒக்கக்கலித்து' என்பது, 'ஒக்கலித்து' எனக் குறைந்து நின்றது. ஒரு சேரக் கூச்சலிட்டு' என்பதாம். "பகண்டை" மேலேயும் (பாட்டு - 6) கூறப்பட்டது. பாடு - பக்கம். "அந்நரி" என்பதில் அகரம் பண்டறி சுட்டு. 'காரைக்காலில் தோன்றியதாகிய இந்தப் பேய், மற்றைப் பேய்கள் ஒன்றை ஒன்று அடித்துக் கொண்டு ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தின் இடையே, நரியின் குரலையே யாழிசையாகக் கொண்டு பகண்டைகள் பாட, அந்தப் பாட்டோடு ஆலங்காட்டுள் அடிகளைச் செப்பிய செந்தமிழ்ப் பாடல்கள் பத்தினையும் முறையாகப் பாட வல்லவர்கள் சிவகதி சேர்ந்து இன்பம் எய்துவார்' என முடிக்க.

அம்மையார் தாம் உலக வாழ்வில் வாழ்ந்த காலத்திலும், 'சிவபெருமானே யாவர்க்கும் உண்மை அப்பன்' என்று உணர்ந்து, 'அப்பா! அப்பா!' என்று சொல்லி வந்து, கயிலையிலும் பெருமான் 'அம்மையே' என்று அழைக்க, தாம், 'அப்பா' என்று அழைத்தபடியே, இத்திருப்பதிகத்திலும், **"எங்கள் அப்பன், எங்கள் அப்பன்" எனப் பலமுறை சொல்லி இன்புற்றமையைக் காணலாம்**.

உலக மக்கள் எளிதில் உணரத் தக்கதாக, 'சிவன் இங்குள்ள சுடுகாடுகளிலே அங்குள்ள பேய்கள் சூழ அனலிடை, ஆடுகின்றான்' எனப் பெரியோர் பலரும் ஒரு படித்தாகக் கூறிவந்த போதிலும் **அதன் உண்மைப் பொருள், ஊழியிறுதிக் கண் உலகெலாம் ஒடுங்கியுள்ள பொழுது, உடம்பும், கருவி கரணங்களும் ஆகியவற்றுள் ஒன்றும் இன்றி இருளிற் கிடக்கும் உயிர்களை மீள உடம்போடும், கருவி கரணங்களோடும் கூடப் படைத்துக் காக்க வேண்டியவற்றிற்கு ஆவன வற்றைச் செய்தலாகிய சூக்கும நடனத்தைச் செய்கின்றான்' என்பதேயாகலின்**, 'அந்த உண்மையை உணர்ந்து இப்பதிகத்தைப் பாட வல்லவர்கள் சிவகதி சேர்ந்து இன்பம் எய்துவார்கள்' என்பதாம். இவ்வுண்மையை உணராதவர்கள் எல்லாம், 'சிவன் சுடுகாட்டில் ஆடுபவன்' எனச் சொல்லி இகழ்வார்கள் என்பதை அம்மையார் தமது அற்புதத் திருவந்தாதியில்,

'இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்
இவரை யிகழ்வதே கண்டீர்'*

என அருளிச் செய்வார். பதிகந்தோறும் திருக்கடைக்காப்புச் செய்யும் ஞானசம்பந்தர்க்கு முன்பே அம்மையார் அது செய்தமையை அவரது திருமொழிகள் பலவற்றிலும் காணலாம்.

காரைக்காற் பேய் - அம்மையார், சிவகதி சேர்ந்தின்ப மெய்துவர் - பதிகப்பயன் கூறியபடி. அற்புதத் திருவந்தாதியினும் இறுதிப்பாட்டில் இவ்வாறே தமது வேறு பெயரைப் பொறித்தும் பயன்கூறி யருளியும் முடித்தது காண்க. இம்மரபு அம்மையார் காட்டியருளியபடி பின்னர்த் திருப்பதிகங்களிலும் வழங்கலாயிற்றுப் போலும்.

இப்பதிகத்தாற் போந்த தொகைப் பொருளாவது - கயிலையினின்றும் அம்மையார் தாம் பெற்ற பேய் வடிவுடன் ஆணையின் வழியே திருவாலங்காட்டினை வந்தணைகின்றார். அங்கு அந்தக் காட்டினையும் அங்கு ஐயன் பேய்க்கணஞ்சூழ்ந்து இசையும் இயமும் முழக்க இலயம்பட ஆடும் கூத்தினையும் காண்கின்றார்; அந்த இடத்தைப் பற்றி ஐயன் காட்டத் தாம் கண்ட நிலையை உள்ளவாறே உலகறியப் பாடியருளுகின்றார்; ஐயன் சங்கார காரணனாகிய முதல்வன்; ''நற்கணத்தி லொன்றாய'' எனும் பேய் வடிவுடையராதலின் பேய்க்கணஞ் சூழ ஆடும் நிலையினையே காண் என்றார்; ஆடும் இடம் சுடலைக் காடு; அங்கு வாகை - கள்ளி - ஈகை முதலியவை செறிந்தன; அங்கு வாழும் பேய்களுள்ளே தாயும் சேயும் உண்டு; நரிகளும் அங்கு வாழும்; கூகை - ஆந்தை முதலியன பாடும்; இறந்தவரை இட்டுச் சடங்கு செய்து மூட்டிய செந்தீயே அங்கு விளக்காக உதவும்; பேய்க்கணம் பலவாறு கூடியும் ஓடியும் ஆடியும் பாடியும் களிக்கும்; ஏழிசையும் பாடும்; இயங்கள் பலவற்றையும் முழக்கும்; இவ்வாறு வெப்ப மிக்க சுடலையில் நடுநாளையில் அங்கங்குளிர்ந்து அருளுடன் எங்கள் அப்பன் ஆடும்; அவ்விடம் திருவாலங்காடேயாம். மேல்வரும் பதிகத்தும் இவ்வாறே கண்டுகொள்க. இப்பதிகம் தலம் பற்றியதும் மேல்வருவது இடம் பற்றியதும் ஆம்.

**மூத்த திருப்பதிகம் - 1 முற்றிற்று**

---

* வெண்பா - 29.

## காரைக்கால் அம்மையார்

*அருளிச்செய்த*

### மூத்த திருப்பதிகம் - 2

***திருவலாங்காடு - பண்: இந்தளம்***

***திருச்சிற்றம்பலம்***

**13. எட்டி, இலவம் ஈகை சூரை காரை படர்ந்தெங்கும்**
**சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி சோர்ந்த குடர்கௌவப்**
**பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்**
**கொட்ட முழவங் கூளி பாடக் குழகன் ஆடுமே. 1**

**14. நிணந்தான் உருகி நிலந்தான் நனைப்ப நெடும்பற் குழிகட்பேய்**
**துணங்கை யெறிந்து சூழும் நோக்கிச் சுடலை நவிழ்த் தெங்கும்**
**கணங்கள் கூடிப் பிணங்கள் மாந்திக் களித்த மனத்தவாய்**
**அணங்கு காட்டில் அனல்கை யேந்தி அழகன் ஆடுமே. 2**

---

*13. இப்பதிகத்தின் பண்ணாகிய இந்தளமே சுந்தரர் முதற் பதிகத்தின் பண்ணாய் அமைந்துள்ளது.*

*பொழிப்புரை :- எட்டி மரம், இலவ மரம், இண்டஞ் செடி, சூரைச் செடி படர்ந்து, சுடுகாட்டைச் சூழ்ந்துள்ள கள்ளிச் செடிகள், கழுகுகளால் குடல் கௌவப்பட்ட பிணங்கள் எங்கும் நிரம்பியுள்ள காட்டில், பெரிய விழிகளை உடைய பிசாசுகள் மத்தளம் கொட்ட, பூதங்கள் பாடிக் கொண்டிருக்கும் இடத்தில், காதில் குழைகளை அணிந்த சிவபெருமான் ஆடுகின்றான்.*

*அருஞ்சொற்பொருள் :- எட்டியும், இலவமும் மர வகைகள். ஈகையும் சூரையும் கொடி வகைகள். காரை, செடி. "படர்ந்து" என்றது இரட்டுற மொழிதலாய், 'பரவி' என்னும் பொருளையும் தந்தது. சுட்ட - பிணங்களைச் சுட்ட. 'சுட்ட சுடலை எங்கும் எட்டி முதலியன பரவி, சூழ்ந்த சுள்ளிகள் கழுகு முதலியவற்றின் வாயினின்றும் வீழ்ந்த குடர்களைப் பற்றி நிற்கும்படி கிடந்த பிணங்கள்' என்க. பறைபோல் விழி - அகன்ற கண்கள். 'காட்டில் பேய் முழவங் கொட்ட, கூளி பாடக் குழகன் ஆடும்' என வினை முடிக்க. கூளி - பூதம். குழகன் - அழகன்.*

*14. பொழிப்புரை :- கொழுப்பு உருகி நிலத்தில் விழுந்து நனைக்க, நீண்ட கோரைப் பற்களையும், குழி விழுந்த கண்களையும் உடைய பேய்கள் ஒரு வகை கூத்தாடிக் கூடிப் பார்த்து எரிகின்ற தீயை அணைத்து எல்லாப் பேய்களும் ஒன்று கூடிப் பிணங்களைத் தின்று மகிழும் மனத்தினை உடைய பேய்கள்*

**15.** புட்கள் பொதுத்த புலால்வெண் தலையைப் புறமே நரிகவ்வ
அட்கென் றழைப்ப, ஆந்தை வீச, அருகே சிறுகூகை
உட்க விழிக்க, ஊமன் வெருட்ட, ஓரி கதித்தெங்கும்
பிட்க நட்டம் பேணும் இறைவன் பெயரும் பெருங்காடே. **3**

**16.** செத்த பிணத்தைத் தெளியா தொருபேய் சென்று விரல்சுட்டிக்
கத்தி உறுமிக் கனல்விட் டெறிந்து கடக்கப் பாய்ந்துபோய்ப்
பத்தல் வயிற்றைப் பதைக்க மோதிப் பலபேய் இரிந்தோடப்
பித்த வேடங் கொண்டு நட்டம் பெருமான் ஆடுமே. **4**

---

*நிறைந்த காட்டில் கையில் நெருப்பினை எந்திச் சிவபெருமான் ஆடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *நிணம், துணங்கை இவை மேலே கூறப்பட்டன*. நிணம் உருகுதல் பிணஞ்சுடு தீயால், சூழும் நோக்கி - சுற்றிலும் பார்த்து. நவிழ்த்து - விரும்பி. கணங்கள் - பேய்க் கூட்டம். மாந்தி - உண்டு. களித்தல் - மயங்குதல். அணங்கு - துன்பம் தருகின்ற. "தான்" இரண்டும் அசைகள்.*

*15.* ***பொழிப்புரை :-*** *பறவைகள் மரத்தைத் துளைசெய்ய, பிணத்தின் தலையை நரி கவ்வ, ஒலியை எழுப்பி ஆந்தை கத்த, அருகில் இருக்கும் சிறு கூகை பயந்து பார்க்க, கோட்டான் விரட்ட, கிழ நரி பெருங் குரலிட்டுக் கத்த, நடனம் ஆடும் சிவபெருமான் இருக்கும் சுடுகாடு.*

***அருஞ்சொற்பொருள் :-*** *புட்கள் - பின்னர்க் கூறப்படுவன தவிர ஏனைய காக்கை, பருந்து முதலியன. பொதுக்கல் - குத்துதல். 'அட்கு' என்பது ஒலிக்குறிப்பாதலை, அதனை அடுக்கிக் கூறியறிக. அழைத்தல், தன் இனத்தை. 'சிறகை வீச' என ஒரு சொல் வருவிக்க. உட்க - அஞ்சும் படி. ஊமன் - பெரிய கூகை. ஓரி, நரி வகைகளில் ஒன்று. கதித்தல் - ஓடுதல். பிட்க - பிளவு செய்ய. 'நட்டம் பெயரும்' என இயைக்க. பேணும் - யாவராலும் வழிபடப்படும் இறைவன்; சிவன் பெயர்தல், அடி பெயர்த்து ஆடுதல். 'பெயரும் பெருங்காட்டில்' என ஏழனுருபு இறுதிக்கண் தொக்கது. 'வெண் தலையை நரி கௌவுதற் பொருட்டுத் தன் இனத்தை 'அட்கு' என்று கூச்சல் இட்டு அழைக்கக் கண்டு, ஆந்தை சிறிய சிறகை வீச கூகை, அச்சம் உண்டாகும்படி கண்களை விழித்துப் பார்க்க, பெரிய கூகை தனது குரலால் வெருட்ட, இந்நிலையிலும் ஓரிகள் ஓடித் தசையைப் பிட்டுத் தின்னல் நிகழுகையில் இறைவன் பெருங்காட்டில் ஆடுகின்றான்' என்றபடி.*

*16.* ***பொழிப்புரை :-*** *எரிந்து கொண்டிருக்கும் பிணம் என்று தெரியாது ஒரு பேய் தீயில் விரலை வைத்து, அலறிப் பயந்து, தீயைத்தாண்டி ஓட்டியிருக்கின்ற*

---

** பாட்டு 6, 8*

17. முள்ளி தீந்து முளரி கருகி மூளை சொரிந்துக்குக்
கள்ளி வற்றி வெள்ளில் பிறங்கு கடுவெங் காட்டுள்ளே
புள்ளி உழைமான் தோலொன் றுடுத்துப் புலித்தோல் பியற்கிட்டுப்
பள்ளி யிடமும் அதுவே ஆகப் பரமன் ஆடுமே. 5

---

*வயிற்றோடு அஞ்சி மோதிப் பல பேய்கள் விலகி ஓடுகின்ற காட்டில் பித்த வேடங் கொண்ட சிவபெருமான் நடனம் ஆடுகின்றான்.*

*அருஞ்சொற்பொருள் :-* *உயிர் நீங்கியதனால் பிணமாம் நிலையை அடைந்த உடம்பை அதன் உண்மையை அறியாமல் 'படுத்துக் கிடக்கின்ற ஆள்' என்று நினைத்து ஒரு பேய் அதன் அருகிற் சென்று தனது சுட்டுவிரலைக் காட்டி, உரக்கக்கத்தி, உறுமி, கொள்ளி ஒன்றை எடுத்து வீசி அப்பாற் செல்ல, அதன் கருத்தையே 'மெய்' என்று நினைத்து மற்றைப் பேய்களும் அந்த ஆளுக்கு அஞ்சித் தங்கள் பெரிய வயிற்றில் அடித்துக் கொண்டு அவ்விடத்தைவிட்டு ஓட, (இத் தன்மையதாய் இருக்கின்ற காட்டில்) பெருமான்தானும் ஒரு பித்தன் போல வேடம் பூண்டு நடனம் ஆடுகின்றான்.*

*"பிணம்" என்றது, 'உடம்பு' என்னும் அளவாய் நின்றது. விரலைக் காட்டிக் கத்தி உறுமியது கிடக்கின்ற ஆளை அச்சுறுத்தற்கு, பத்தல், வீணைத் தண்டு பொருத்தப்பட்டுள்ள குண்டுப் பகுதி 'அது போலும் வயிறு' என்க. 'ஒரு பேய், தெரியாது சென்று, சுட்டி, கத்தி, உறுமி, எறிந்து கடக்க, பல பேய் பாய்ந்து போய் வயிற்றை மோதி இரிந்து ஓட பெருமான் ஆடும்' என வினை முடிக்க.*

***17. பொழிப்புரை :-*** *முள்ளிச் செடியின் விறகுகள் கருகிக் கள்ளிச் செடி உலர்ந்து, விளாமரம் ஒலிக்கின்ற சுடுகாட்டில், மான் தோலை உடுத்திக்கொண்டு புலித்தோலைத் தோளிலிட்டு தனக்கு இருக்கின்ற இடமும் அதுவேயாக சிவபெருமான் ஆடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *முள்ளி - முள்ளையுடைய செடிகள். முளரி - தீ. அஃது இங்கு அதனையுடைய விறகைக் குறித்தது. வெள்ளில் - விளா மரம். பிறங்குதல் - விளங்குதல். முள்ளிகள் தீந்து போயதும், கள்ளி பால் வற்றியதும் பிணங்களைச் சுடுகின்ற தீயால். எரிகின்ற விறகு கரிந்து போயது, பிணங்களின் மூளை சொரிதலால், உகுதல் - சிந்துதல். விளா மரம் மட்டுமே விளங்கியிருந்தது என்க. உழை, ஒருவகை மான். உழை மான், இருபெயர் ஒட்டு. பியல் - தோள். பியற்கு. பியலின்கண்; உருபு, மயக்கம். பள்ளி இடம் - நிலையாக இருக்கும் இடம். அதுவே - அந்தக் காடே. உம்மை, சிறப்பு. எண்ணின் கண் வந்த செய்தென் எச்சங்கள், "பிறங்கு" என்னும் ஒருவினைக் கொண்டு முடிந்தன.*

***18. பொழிப்புரை :-*** *வாளை மீன்கள் வாயில் விளங்க வளைந்த, வாள்போன்ற அலகினை உடைய அழகான சிறிய கோட்டான்; ஓலை அகலமுடைய ஒருவகைப் பனையின் ஓலை போல் முடியையும், நெருப்பினைக் கக்கும் வாயையும்,*

**18.** வாளைக் கிளர வளைவாள் எயிற்று வண்ணச் சிறுகூகை
மூளைத் தலையும் பிணமும் விழுங்கி முரலும் முதுகாட்டில்
தாளிப் பனையின் இலைபோல் மயிர்க்கட் டழல்வாய் அழல்கட்பேய்
கூளிக் கணங்கள் குழலோ டியம்பக் குழகன் ஆடுமே. **6**

**19.** நொந்திக் கிடந்த சுடலை தடவி நுகரும் புழுக்கின்றிச்
சிந்தித் திருந்தங் குறங்குஞ் சிறுபேய் சிரமப் படுகாட்டின்
முந்தி அமரர் முழவின் ஓசை முறைமை வழுவாமே
அந்தி நிருத்தம் அனல்கை யேந்தி அழகன் ஆடுமே. **7**

---

*கண்ணையும் உடைய பேய் தலை மூளையையும், பிணத்தையும் சாப்பிட்டு அலறுகின்ற சுடுகாட்டில், பேய்க் கூட்டங்கள் சத்தம் பரப்பிக் கொண்டு ஒலிக்கச், சிவபெருமான் ஆடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"வாளை" என்பதில் ஐ - சாரியை. வாள், அதன் வடிவைக் குறித்தது. கிளர்தல் - விளங்குதல். "எயிறு" என்றது அலகினை. வளை - வளைந்த. வாள் - ஒளி. வாளின் வடிவு விளங்குகின்ற, வளைந்த, 'ஒளி பொருந்திய அலகு' என்க. முரலுதல் - மூக்கால் ஒலித்தல். தாளிப்பனை, விரிந்த மடல்களையுடைய ஒருவகைப் பனை. ஓலையை, 'இலை' என்றது மரபு வழுவமைதி. கட்டு அழல் மிகுந்த நெருப்பு. அழல் வாய்ப் பேய் - கொள்ளி வாய்ப் பேய். அழல் கண் பேய் - கொள்ளிக் கண் பேய். கூளி - பூதம். குழலோடு இயம்புதல் - குழலை ஊதித் தாமும் இசைத்தல். 'குழகன்' மேலே சொல்லப்பட்டது*.*

*19. **பொழிப்புரை :-** பிணங்கள் எரிந்து சாம்பலாகிச் சாப்பிட ஆகாரம் இல்லாமல் சுடுகாட்டில் சிந்தனை செய்து உறங்கும் சிறுபேய் வருத்தப்பட்டு இருக்கும் இடத்தில் தேவர்களும் வழக்கம் போல் முழக்கம் செய்ய பிரளயத்தின் முடிவாக ஒடுங்குகின்ற இடத்தில் அனலைக் கையிலேந்தி நடனம் ஆடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *நொந்திக் கிடந்த - சில நாள் ஏம் இன்றிக் கிடந்த. தடவி - துழாவி. புழுக்கு - புழுக்கல்; சோறு. சிந்தித்து - கவலையடைந்து. சிரமம் - துன்பம். 'அந்தியில்' என ஏழாவது விரிக்க.*

*20. **பொழிப்புரை :-** மூங்கில் மரங்கள் வளர்ந்து வெண்மையான முத்துக்கள் உதிர்த்து, வெடித்துக் கொண்டிருந்த சுடுகாட்டில் தளர்ந்த உருவில் வறண்ட கூந்தலும், கதறும் பிளந்த வாயினையும் உடைய பேய்கள் யாவும் கூடிப் பிணங்களைத் தின்று அச்சமூட்டும் சுடுகாட்டில் மாயங்கள் புரியும் சிவபெருமான் நடம் புரிய பார்வதியும் அதனைக் கண்டு வியந்து பார்க்குமே.*

***அருஞ்சொற்பொருள் :-*** *வேய்கள் - மூங்கில்கள். 'ஓங்கி வெடிகொள், உதிர*

---

** பாட்டு 13*

**20.** வேய்கள் ஓங்கி வெண்முத் துதிர வெடிகொள் சுடலையுள்
ஒயும் உருவில் உலறு கூந்தல் அலறு பகுவாய
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி அணங்கும் பெருங்காட்டில்
மாயன் ஆட மலையான் மகளும் மருண்டு நோக்குமே. **8**

**21.** கடுவன் உகளுங் கழைசூழ் பொதும்பிற் கழுகும் பேயுமாய்
இடுவெண் டலையும் ஈமப் புகையும் எழுந்த பெருங்காட்டில்
கொடுவெண் மழுவும் பிறையுந் ததும்பக் கொள்ளென் றிசைபாடப்
படுவெண் துடியும் பறையுங் கறங்கப் பரமன் ஆடுமே. **9**

---

*வெடிகொள் சுடலை' என்க. ஓய்தல் - இளைத்தல். உலறுதல் - காய்தல். பகுவாய் - பிளந்த வாய். அணங்கும் - வருந்தும் 'பேய்களின் வாழ்க்கை துன்ப வாழ்க்கை' என்றபடி. மாயம் - கள்ளத் தன்மை; வேட மாத்திரத்தில் பல பெற்றியனாகத் தோன்றுதல். அப்பன் நடனத்தை அம்மை காணுதலை இத்திருப்பாட்டில் குறித்தருளினார். மருட்சி - வியப்பு.*

*21. **பொழிப்புரை :-** ஆண் குரங்கு தாவிச் செல்லும் மூங்கில் சூழ்ந்த பெருங் காட்டில் சுடப்பட்ட தலையும், பிணம் வேகும் புகையும் நிறைந்த பெருங் காட்டில், பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற சடாபாரத்தில் சந்திரனும் வெண்ணீற்று ஒளியும் விளங்க, கூட்டமாக இசை பாட, உடுக்கை ஒலியும், பறை ஒலியும் ஒலிக்க, சிவபெருமான் ஆடுகின்றான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** கடுவன் - ஆண் குரங்கு. உகளும் - கிளைகளில் பாய்கின்ற. கழை - மூங்கில், பொதும்பு - புதர். இடுதல் - புதைத்தல். 'புதைத்ததனால் உண்டான வெண்டலை' என்க. ஈமம் - பிணஞ்சுடும் விறகு. வெண்டலையை "எழுந்த" என்றது, 'குழியினின்றும் வெளிப் போந்த' என்றபடி. மழுவுக்கு வெண்மை கூர்மையாலும், துடிக்கு வெண்மை அதன் தோலினாலும் ஆகும். ததும்ப - ஒளிவீச. கொள்ளெனல், ஒலிக்குறிப்பு. எனவே, 'அங்ஙனம் பாடுவன பூதங்கள்' என்பது பெறப்பட்டது. படுதல் - ஒலித்தல். துடி - உடுக்கை. கறங்குதல் - ஒலித்தல். துடி, இறைவனது. பறை, தேவர்களது.

***22. பொழிப்புரை :-*** உருண்டை வடிவமான வயிற்றினை உடைய, சிறு மலை போன்ற வடிவுடைய பேய்கள் இண்டங் கொடிகள் படர்ந்து இருள் நிறைந்து இருக்கிற சுடுகாட்டில் கொள்ளி வாயும் கோரப் பல்லுமுடைய குட்டிப் பேய்களைத் தடவிக் கோபத்தோடு பார்த்து, கூட்டமாக சத்தம் பரப்புகின்ற இடத்தில் பொன்னொளி வீசும் சடை முடியை எட்டுத் திசையும் வீசி சிவபெருமான் ஆடுகின்றான்.

***அருஞ்சொற்பொருள் :-*** குண்டு - ஆழம், ஐ, சாரியை. 'குறியனவாயும், சிறியனவாயும், நெடியனவாயும் பிறங்குதலையுடைய பேய்' என்க. பிறங்குதல் -

22. குண்டை வயிற்றுக் குறிய சிறிய நெடிய பிறங்கற்பேய்
இண்டை படர்ந்த இருள்சூழ் மயானத் தெரிவாய் எயிற்றுப்பேய்
கொண்டு குழவி தடவி வெருட்டிக் கொள்ளென் றிசைபாட
மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ விமலன் ஆடுமே. 10

23. சூடும் மதியம் சடைமேல் உடையார் சுழல்வார் திருநட்டம்
ஆடும் அரவம் அரையில் ஆர்த்த அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக் காரைக் காற்பேய்தன்
பாடல் பத்தும் பாடி யாடப் பாவம் நாசமே. 11

**திருச்சிற்றம்பலம்**

---

*விளங்குதல். இண்டு இண்டை; இண்டங் கொடி. வெருட்டுதல் - அச்சுறுத்தல். "பேய்" இரண்டையும் பன்மையாகக் கொள்க. பிள்ளைப் பேய்களைத் தாய்ப் பேய்கள் இருட்காலத்தில் தடவிக் கொடுத்து, ஆயினும் அச்சுறுத்தி, அவை குறும்பு அடங்கி அமைதியுற்றிருக்க இசை பாடின என்க. முதலில் உள்ள "பேய்" என்பதில் இரண்டன் உருபு விரிக்க. எரிவாய்ப் பேய் - கொள்ளி வாய்ப் பேய். கொள்ளென்று இசைபாடுதல் முன் பாட்டிலும் வந்தது. 'குழவியாக' என ஆக்கம் வருவிக்க. மிண்டுதல் - நெருங்குதல்.*

***23. பொழிப்புரை :-*** *சந்திரனை சடையில் உடையவரும், காலைச் சுழற்றி ஆடுபவரும், இடையில் பாம்பை அணிந்தவரும் ஆகிய சிவபெருமான் திருவருளால் திருவாலங் காட்டிலே அக்கினியைக் கக்குகின்ற கொள்ளிவாய்ப் பேய்கள் போலவே தானும் அனுபவத்தில் பேயாக இருந்து கொண்டு, சிவபெருமான் ஆடக் காரைக்காலம்மையார் பாடிய பாட்டுக்களைப் பாடினால் பாவங்கள் நாசமாகும்.*

***அக விளக்கம் :-*** *ஐம்புலன்களையும் வென்றவர்களுடைய சரீரமே ஆலங்காடு. புலன் வழிச் செல்லும் சரீரத்தை தன்வயப்படுத்தி இருக்கின்றவர்கள் இறைவனுடைய நடனத்தைக் கண்டவர்கள். அம்மையார் அந்த நிலையில் இருந்து இறைவனின் ஆனந்த நடனத்தை உள்ளும் புறமும் கண்டு மகிழ்ந்தவர்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'திருநட்டமாகச் சுழல்வார்' என ஆக்கம் விரித்து, மாறிக் கூட்டுக. 'அருளாலே பாடிய' என ஒரு சொல் வருவிக்க. இதனால் அம்மையார் பாடல்கள் அருள்வழி நின்று அருளிச் செய்தனவாதல் அறிந்து கொள்ளப்படும். காடு மலிந்த - காட்டை மகிழ்ந்து அங்கு வாழ்கின்ற. அம்மையார் தமது பணிவு தோன்ற மற்றைப் பேய்களைப் போலவே தம்மை வருணித்துக் கொண்டார். ஆடுதல், பாடற் பொருள் விளங்கச் செய்கைக் காட்டி நடித்தல்.*

***மூத்த திருப்பதிகம் - 2 முற்றிற்று***

## காரைக்கால் அம்மையார்

*அருளிச்செய்த*

## 3. திருஇரட்டை மணிமாலை

*திருச்சிற்றம்பலம்*

24. கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்த்
தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண் டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை
இளந்திங் களும்எருக் கும்இருக் குஞ்சென்னி ஈசனுக்கே. 1

**25. ஈசன் அவனல்லாது இல்லை எனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து – பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமைக் காக்கும் பிரான். 2**

---

*24. கட்டளைக் கலித்துறையும், நேரிசை வெண்பாவும் அந்தாதியாய் மாறி மாறி வர இருபது பாடல்களால் தொகுக்கப்படுவது,* ***'இரட்டைமணி மாலை'*** *என்னும் பிரபந்தம் ஆகும்.*

***பொழிப்புரை :-*** *முன்னைய வினை தூண்ட அதன் காரணமாகத் துன்பம் வந்து சேரும். அப்போது மனம் தளராமல் சடாபாரத்தில் பெருகிக் கொண்டிருக்கிற கங்கையையும், ஒளி வீசிக் கொண்டிருக்கும் சந்திரனையும் தாங்கி, எருக்கம் பூ மாலை அணிந்த சிவபெருமானின் பாதார விந்தங்களை வணங்கி இரு.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'நெஞ்சமே ஈசனுக்கே வந்தி; வெந்துயர் வந்து அடும்போது அஞ்சி, என்பாய் இங்குத் தளர்ந்திருத்தலைத் தவிர்தி' என இயைத்துக் கொள்க.*

*வெந்துயர் கிளர்ந்து, வந்து அடும் போது - கொடிய துன்பம் மிகுந்து வந்து வருத்தும்போது, என்பாய்த் தளர்ந்திருத்தல் - உடம்பு எலும்பாய் இளைத்துப் போகும்படி மெலிந்திருத்தல். வளர்ந்து உந்து கங்கை - பெருகி மோதுகின்ற கங்கை. கோட்டுத் திங்கள் - வளைவையுடைய சந்திரன். "ஈசனுக்கு" என்பதை, 'ஈசனை' எனத் திரிக்க. தளராது வந்தி - மனம் சலியாது வணங்கு.*

*'சிவனை மனம் சலியாது வணங்குவாரைத் துயர்வந்து அணுகாது' என்றதாம்.*

*25.* ***பொழிப்புரை :-*** *சிவபெருமானைத் தவிர ஈசன் இல்லை என்று மனதில் உறுதியாக எண்ணி, அதையே சொல்லி, வினாடியும் கூட மறவாது வாழ்கின்ற*

**26.** **பிரானென்று தன்னைப்பன் னாள்பர வித்தொழு வார்இடர்கண்
டிரான்என நிற்கின்ற ஈசன்கண் டீர்இன வண்டுகிண்டிப்
பொராநின்ற கொன்றைப் பொதும்பர்க் கிடந்துபொம் மென்துறைவாய்
அராநின் றிரைக்குஞ் சடைச்செம்பொன் நீள்முடி அந்தணனே.** **3**

---

*அடியவர்களை, ஈசன் மண்ணுலகத்தில் பிறவி ஒழித்து வீடு பேறு அளிப்பான்.*

*அருஞ்சொற்பொருள் :- ஈசன் - ஐசுவரியம் உடையவன்; அஃதாவது, உயிர்களாகிய அறிவுடைப் பொருள்களை அடிமைகளாகவும், ஏனை அறிவிலாப் பொருள்களை உடைமைகளாகவும் உடையவன். எனவே, 'முழுமுதல் தலைவன்' என்பதாயிற்று "அவன்" என்பது, முன்னைப் பாட்டிற் போந்த அந்த ஈசனைச் சுட்டிற்று. நினைதல், இங்குத் துணிதலைக் குறித்தது. கூசுதல் - தம்மையும் ஏனையோரையும் தலைவர்களாக எண்ண நாணுதல். 'அவனையே மனத்தகத்துக் கொண்டிருந்து' என்க. 'கொண்டிருந்தும், பேசியும்' என எண்ணும்மை விரிக்க. "பிரான்" என்றது, 'அவன்' என்னும் சுட்டளவாய் நின்றது. பிறவாமை, எதிர்மறை வினையெச்சம்.*

*'சிவனைப் பொது நீக்கியுணர்ந்து, மறவாது நினைவாரை அவன் பிறவாமற் காப்பான்' என்றவாறு.*

*26. **பொழிப்புரை :-** வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கிற கொன்றைப் பூ மாலை அணிந்து, பாம்பையும் கழுத்தில் அணிந்து, நீண்ட பொன்னொளி வீசும் சடா முடியை உடையவனான சிவபெருமான், தன்னையே பல காலம் இடைவிடாது தொழும் அடியவரின் துன்பம் கண்டு பொறுக்கமாட்டான், தீர்த்து அருளுவான்.*

*அருஞ்சொற்பொருள் :- 'அந்தணன், தன்னைப் பன்னாள் பரவித் தொழுவாரது இடரைக் கண்டு (வாளா) இரான் என நிற்கின்ற ஈசன்' என இயைக்க. "பிரான்" என்றது சொல்லுவாரது குறிப்பால், 'முழுமுதல் தலைவன்' என்னும் பொருட்டாய் நின்றது. 'தன்னையே பிரான் என்று' எனப் பிரிநிலை ஏகாரம் விரித்து, முன்னே கூட்டுக. பரவுதல் - துதித்தல். "ஈசன்" என்பது இங்கு, 'இறைவன்' என முன்னர்ப் பொதுமையில் நின்று, பின்னர் "இரான் என நிற்கின்ற" என்னும் அடைபெற்று, சிவனது சிறப்புணர்த்தி நின்றது. "தொழுவாரவர் துயராயின தீர்த்தல் உன தொழிலே" என நம்பியாரூரரும் அருளிச் செய்தார். கிண்டுதல் - கிளறுதல். பொருதல் - போர் செய்தல். பொதும்பர் - சோலை. பூக்களால் நிரம்பியிருத்தல் பற்றித் திருமுடியை, 'சோலை' என்றார். பொம் மெனல், ஒலிக்குறிப்பு. "துறை" எனவே, 'கங்கை' என்பது தானே பெறப்பட்டது. 'சடையாகிய செம்பொன் முடி' என்க. 'சடை, நிறத்தால் பொன் போல்கின்றது' என்பதாம். 'பிற முடிதனை விரும்பாதவன்' என்பது குறிப்பு. அந்தணன் - அழகிய தட்பத்தினை (கருணையை) உடையவன்; காரணப் பெயர். கண்டீர், முன்னிலையசை.*

**27.** **அந்தணனைத் தஞ்சம்என்(று) ஆட்பட்டார் ஆழாமே**
**வந்தணைந்து காத்தளிக்கும் வல்லாளன் – கொந்தணைந்த**
**பொன்கண்டால் பூணாதே கோள்அரவம் பூண்டானே**
**என்கண்டாய், நெஞ்சே, இனி.** **4**

**28.** **இனிவார் சடையினில் கங்கையென் பாளைஅங் கத்திருந்த**
**கனிவாய் மலைமங்கை காணில்என் செய்திகை யிற்சிலையால்**
**முனிவார் திரிபுரம் மூன்றும்வெந் தன்றுசெந் தீயின்மூழ்கத்**
**தனிவார் கணையொன்றி னால்மிகக் கோத்தளம் சங்கரனே.** **5**

---

*'தன்னைப் பொது நீக்கி நினைந்து, பன்னாள் பரவித் தொழுவாரது இடரை நீக்குபவன் சிவன்' என்பதாம்.*

*27. **பொழிப்புரை :-** பொன்னால் செய்யப்பட்ட ஆபரணமே பூணாமல் பாம்பினை அணிந்த சிவபெருமானுடைய பாதார விந்தமே கதியென்று சேர்ந்தாரை பிறவித் துன்பத்திலிருந்து காத்து கற்பக விருட்சம் போல் அள்ளிக் கொடுக்கும், வள்ளலை மனமே நீ எப்போதும் நினை.*

***அருஞ்சொற்பொருள் :-** 'முன்னைப் பாடலிற் கூறிய அவ்வந்தணன் அத்தன்மையன் ஆதலின், நெஞ்சே, இனியேனும் அவனது பெருமையைச் சொல்லி அவனைப் புகழ்' என்பது இப்பாட்டின் திரண்ட பொருள். இதன் முதல் இரண்டடிகள் முன்னைப் பாட்டிற் கூறியவற்றை மீட்டும் அநுவதித்துக் கூறியன. 'துயரில் ஆழாமே' எனச் சொல்லெச்சம் வருவித்துரைக்க. கொந்து - கொத்து; என்றது தீக் கொழுந்தை. "இணர் எரி" என்றல் வழக்கு. 'கொந்தில் அணைந்த பொன்' என்க. நெருப்பில் காய்ச்சி ஓட விட்ட பொன், மாசு நீங்கி ஒளி மிக்கதாகும். பொன் ஆகுபெயரால், அதனால் ஆகிய அணி கலங்களைக் குறித்தது. கோள் - கொடுமை. "இனி" என்பதன் பின், 'ஆயினும்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. 'அந்தணன்' என்றது, 'அவ்வந்தணன்' என்னும் பொருட்டாகலின் முதற்கண், "அந்தணன்" என்றே வைத்து, பின், 'அவனை என்' எனக் கூட்டி முடிக்க. கண்டாய், முன்னிலையசை. 'கோள் அரவம் பூண்டமையே அவன் 'தஞ்சம்' என்று அடைந்தாரை ஆழாமற் காத்தலைத் தெரிவிக்கும்' என்பது குறிப்பு.*

*'அறியாது கழிந்த நாள்கள் போக, அறிந்த பின்னராயினும் தாழாது சிவனைத் துதித்தல் வேண்டும்' என்பதாம்.*

*28. **பொழிப்புரை :-** மேரு மலையைக் கையில் வில்லாகக் கொண்டு பகைவர்களின் மூன்று புரங்களையும் எரித்துச் சாம்பலாக்கிய சிவபெருமானே! நீண்ட சடைமுடியில் கங்காதேவி இருப்பதை திருமேனியில் பாதியாக உள்ள பார்வதி கண்டால் என் செய்வீர்?*

**29.** **சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேற்**
**பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை – அங்கொருநாள்**
**ஆவாஎன்று ஆழாமைக் காப்பானை எப்பொழுதும்**
**ஓவாது நெஞ்சே உரை.** **6**

**30.** **உரைக்கப் படுவதும் ஒன்றுண்டு கேட்கின்செவ் வான்தொடைமேல்**
**இரைக்கின்ற பாம்பினை என்றுந் தொடேல்இழிந் தோட்டத்தெங்கும்**
**திரைக்கின்ற கங்கையுந் தேன்நின்ற கொன்றையுஞ் செஞ்சடைமேல்**
**விரைக்கின்ற வன்னியுஞ் சென்னித் தலைவைத்த வேதியனே.** **7**

---

*அருஞ்சொற்பொருள் :-* *முனிவார் - கோபிப்பவர்; திரிபுரம். (வானத்தில்) திரிந்தபுரம் என வினைத்தொகை. பகைவர், "வெந்து மூழ்க" என்பதனை, 'மூழ்கி வேவ' என மாற்றிவைத்துரைக்க. சிலை - வில். "சிலையால்" என்றது, 'விற் போரினால்' என்றபடி. வார்கணை - நீண்ட அம்பு. "கணை ஒன்றினால்" என்பதை, 'கணை ஒன்றினை' எனத் திரித்துக் கொள்க. அங்கம் - உடம்பு. "காணின் என் செய்தி" என்றது, 'நாணித் தலைகுனிவை போலும்' என்றபடி. எனினும், 'உயிர்களின் நன்மைக்காகவன்றிப் பிறிதொன்றையும் செய்யாதவன் நீ' என்பதை அவன் அறிவான் ஆகலின், 'இதுவும் ஒரு நன்மைக்கே' என்பது உணர்ந்து* ***'அவனும் முனியப் போவதில்லை; நீயும் நாணுதற்குக் காரணம் இல்லை' என்பது இப்பாட்டின் உள்ளுறைச் சிறப்பு*** *இதனை வட நூலார் 'நிந்தாத் துதி' என்றும், அதனைத் தமிழில் பெயர்த்துக் கூறுவார், 'பழிப்பது போலப் புகழ்தல்'[1] என்றும் கூறுவர். பின்னும் இவ்வாறு வருவனவற்றை உணர்ந்து கொள்க.*

*29. பொழிப்புரை :-* *நீண்ட சடை முடியையும், அச்சடை மேல் சீறுகின்ற பாம்பைப் புனைந்தும் உள்ள சிவபெருமானை, மக்கள் மரண துன்பத்தில் நினைத்து விட்டால் துன்பக் கடலில் வீழ்த்தாது வா வா என்று அழைக்கக் கூடிய புண்ணியனை மனமே நீ இடை விடாது சொல்லிக் கொண்டிரு.*

*அருஞ்சொற்பொருள் :-* *சங்கரன் - இன்பத்தைச் செய்பவன். தாழ்ந்த சடை - நீண்டு தொங்குகின்ற சடை. பொங்கு - சினம் மிகுகின்ற. "அங்கொருநாள்" என்றது, கூற்றுவன் வரும் நாளினை. ஆ! ஆ!, இரக்கக்குறிப்பு இடைச்சொல். என்று - என்று இரங்கி. "ஆழாமைக் காப்பான்" என்பது மேலேயும் வந்தது[2]. ஓவாது - ஒழியாமல். உரை - சொல்லு; துதி. 'எப்பொழுதும் ஓவாது துதித்தால்தான் காப்பான்' என்பது குறிப்பு. 'அன்று துதித்தல் இயலாது' என்பதாம், "சாங்காலம் சங்கரா! சங்கரா!" என வருமோ? என்பது பழமொழி.*

---

*1. தண்டியலங்காரம் - சூ-62 - உரை*
*2. பாட்டு - 4*

**31.** வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்(கு)
ஆதியனை ஆதிரைநன் னாளானைச் – சோதிப்பான்
வல்லேன மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது
கில்லேன மாஎன்றான் கீழ். **8**

**32.** கீழா யினதுன்ப வெள்ளக் கடல்தள்ளி உள்ளுறப்போய்
வீழா திருந்தின்பம் வேண்டுமென் பீர், விர வார்புரங்கள்
பாழா யிடக்கண்ட கண்டன் எண் தோளன்பைம் பொற்கழலே
தாழா திறைஞ்சிப் பணிந்துபன் னாளுந் தலைநின்மினே. **9**

---

*30. **பொழிப்புரை :-** ஒன்று சொல்லுகிறேன் கேள்:- பொன் போல் கற்றையாகப் பிரகாசிக்கின்ற சடை முடியில் பாம்புக்கும் சந்திரனுக்கும் பகையாக இருந்தும், அங்கே இரண்டும் ஒன்றாகவும் கங்காதேவியும் இருக்க, தேன் சொரிந்து கொண்டிருக்கும் கொன்றைப் பூமாலை யணிந்தவனும், வேதங்களால் போற்றப் பட்டவனுமான சிவபெருமானே நமக்குத் தலைவன்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *உம்மை, சிறப்பு. செவ்வான் தொடை - செவ்விய உயர்ந்த மலர்மாலை; கொன்றை மாலை. இரைக்கின்ற - சீறிக் கொண்டிருக்கின்ற. தொடேல் - தொடாதே என்றது, அது, 'பிறைச் சந்திரன் வளரும்' என்று பசியோடு காத்திருக்கின்றது; அதனால் சினம் மிகுந்து கடித்துவிடலாம் - என்றபடி. இதனால், 'தம்முட் பகையுடையவனவாகிய பாம்பையும், மதியையும் ஓரிடத்தில் சேர்த்து வைத்திருக்கின்றார் அல்லையோ' எனக் குறிப்பாற் புகழ்ந்தவாறு. இழிந்து ஓட்டத்து - கீழே வீழ்ந்து ஓடும்பொழுது, திரைக்கின்ற - அலை வீசுகின்ற; விரைக்கின்ற - 'வாசனை வீசுகின்ற கொன்றை' என இயைக்க. வன்னி - வன்னியிலை. தலை, ஏழாம் வேற்றுமையுருபு. வேதியன் - வேதம் ஓதுபவன். 'சிவன் சாம வேதத்தை ஓதுபவன்' என்பர். **ஓதுதல் பிறர் அறியவாம்**.*

*31. **பொழிப்புரை :-** திருமால் பன்றி வடிவெடுத்தும், பிரமன் அன்ன வடிவமெடுத்தும் பார்க்க முடியாத பரம் பொருளானவனும், மாயத் திரை நீக்கி மக்களுக்கு பதித் தன்மையையளிக்கக் கூடியவனும், வேதத்திற்கு முதல்வனுமான சிவபெருமான் பாதத்தில் தலை வைத்து வணங்கு.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'வேதத்தை ஓதுபவனும், வேதத்திற்குப் பொருளாய் உள்ளவனும், வேதத்தைச் செய்தவனும் ஆகிய ஆதிரை நன்னாளானை' என்க. 'சோதித்தற்கு மாலவனும் வல் ஏனமாய்க் கீழ்ப்புக்கு, மாட்டாது கில்லேன் அமா - என்றான்' என வினை முடிக்க. சோதித்தல் - அளந்தறிதல். ஏனம் - பன்றி. கில்லேன் - மாட்டேன். 'அம்மா' என்னும் வியப்பிடைச்சொல் இடைக்குறைந்து நின்றது. "மாலவனும் - கில்லேன் - என்றான்" என்றதனால், 'ஏனையோர் மாட்டாமை சொல்ல வேண்டுவதோ' என்பது கருத்து. கில் - ஆற்றல்.*

**33.** **தலையாய ஐந்தினையுஞ் சாதித்துத் தாழ்ந்து**
**தலையா யினவுணர்ந்தோர் காண்பர் – தலையாய**
**அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண்டிருண்ட**
**கண்டத்தான் செம்பொற் கழல்.** **10**

---

*32. **பொழிப்புரை** :- ஆசையாகிய சேற்றில் வீழ்ந்து பிறவிக்கடலைத் தாண்ட முடியாது துன்பப்படாமல் பேரின்பம் நாடி நிற்பவர்கள், முப்புரத்தை எரித்தவனும், நீலகண்டனும், தோள் வலிமையுடையவனுமான சிவபெருமானின் அடியைச் சேர்ந்து, காலம் தாழ்த்தாது இடைவிடாது வணங்கித் தலைப்பட்டிருங்கள்.*

***அருஞ்சொற்பொருள்** :- 'இழிந்த துன்பமாகிய பெரிய கடலிலே தள்ளப்பட்டு, அதன் உள்ளே அழுந்தாமல் வேறிருந்து நுகர்கின்ற இன்பம் வேண்டும்' என்று விரும்புகின்றவர்களே - என்று எடுத்து, 'தலைநின்மின்' என முடிக்க. நின்றால், 'அத்தகைய இன்பம் கிடைக்கும்' என்பது குறிப்பெச்சம். தள்ளுதலுக்கு 'வினையால்' என்னும் வினைமுதல் வருவிக்க. 'இருந்து நுகர்கின்ற' என ஒருசொல் வருவிக்க. 'துன்பக் கலப்பு இல்லாத இன்பம்' என்றபடி. அது வீட்டின்பமேயாம். விரவார் - கலவாதவர்; பகைவர். "கண்ட" என்றது 'செய்த' என்றபடி. கண்டன் - வன்கண்மையுடையவன். 'வன்கண்மை குற்றத்தின் மேலது' என்பது கருத்து. தாழாது - தாமதியாமல். இறைஞ்சுதல் - தலை வணங்குதல். பணிதல் - அடியில் வீழ்தல். தலை, இடைச்சொல்லாதலின், 'தலைநின் மின்' என்றது ஒருசொல் நீர்மைத்து 'அச்செயலிலே நின்மின்' என்றதாம்.*

*33. **பொழிப்புரை** :- சற்குருவின் மூலமாகக் கேட்டு முக்தி நிலை அடைய வேண்டிய பஞ்சாட்சரத்தை ஓதித் தியானம் செய்து அனுபவத்தில் சாதித்தவர்கள் எல்லாவற்றிற்கும் முதல்வனாகவும், பசுவுக்கு பாசத்தை நிவர்த்தி செய்து, பதித் தன்மையை அளிப்பவனும், நஞ்சையுண்டு கண்டத்தில் கருப்பு உடையவனுமான சிவனை அடைந்து வீடு பெறுவார்கள்.*

***அருஞ்சொற்பொருள்** :- தலையாய ஐந்து - மந்திரங்களுள் தலையாய ஐந்தெழுத்து, சாதித்தல் - கடை போகப் பற்றி முயலுதல். அஃது இங்குக் கணித்தலைக் குறித்தது. தாழ்தல் - வணங்குதல். தலையாயின - மேலான நூல்கள் 'அருள் நூலும், ஆரணமும், அல்லாதும், அஞ்சின் - பொருள் நூல்களே'[1] ஆதலின் அவற்றை உணர்ந்தோர் திருவைந்தெழுத்தையே பற்றிச் சாதிப்பர் - என்றபடி. தலையாய அண்டம் - சிவலோகம். 'தலையாயின உணர்ந்தோர் சாதித்துத் தாழ்ந்து கழல் காண்பர்' என வினை முடிக்க, இதனுள் சொற்பொருள் பின்வருநிலையணி வந்தது.*

*34. **பொழிப்புரை** :- சிவபெருமானின் சேவடிகளைத் தொழுபவர்கள்*

---

*1. திருவருட்பயன் - 81.*

**34.** **கழற்கொண்ட சேவடி காணலுற் றார்தம்மைப் பேணலுற்றார்**
**நிழற்கண்ட போழ்தத்தும் நில்லா வினைநிகர் ஏதுமின்றித்**
**தழற்கொண்ட சோதிச்செம் மேனியெம் மானைக்கைம் மாமலர்தூய்த்**
**தொழக்கண்டு நிற்கிற்கு மோதுன்னி நம்அடுந் தொல்வினையே.** **11**

**35.** **தொல்லை வினைவந்து சூழாமுன் தாழாமே**
**ஒல்லை வணங்கி உமையென்னும் – மெல்லியலோர்**
**கூற்றானைக் கூற்றுருவங்காய்ந்தானை வாய்ந்திலங்கு**
**நீற்றானை நெஞ்சே நினை.** **12**

---

*மனிதப் பிறவியின் குறிக்கோளை அடைகின்றார்கள். அவர்களைப் பார்த்த பொழுதிலேயே நம்மைச் சூழ்ந்த தீவினை நில்லாது போய்விடும். அதுபோல் சிவந்த மேனியுடன் பிரகாசிக்கின்ற எம்பெருமானைத் தூயமனத்தோடு தூய மலர்கொண்டு வணங்குவோமேயானால் நம்மைச் சூழ்ந்துள்ள பல வினைகள் மறைந்து ஒழியும்.*

*அருஞ்சொற்பொருள் :- 'நிகர் ஏதுமின்றித் தழற்கொண்ட சோதிச்செம் மேனி எம்மான்' - சிவன். அவன் தனக்குவமையில்லாதவன்; நெருப்பினிடத்துள்ள ஒளிபோலும், சிவந்த மேனியை உடையவன். 'அவனது கழலழணிந்த, சிவந்த பாதங்களைக் கண்டவர்களை வணங்குபவர்களது நிழலைக் கண்டாலே வினைகள் ஓடிவிடும் என்றால், அப்பெருமானை நாம் நமது கைகளால் மலர் தூவித் தொழுவதைப் பார்த்த பிறகு நம்மை வருத்துகின்ற நமது பழைய வினைகள் நம்மை நெருங்கி நிற்குமோ' என்க. **"சிவன் அடியார்களையும், அடியார்க்கு அடியார்களையும் கண்டால் வினைகள் நிற்க மாட்டாது ஓடி விடும்"** என்றபடி. 'கழல், நிழல், தழல்' என்பவற்றின் ஈறு திரிந்தது செய்யுள் நோக்கி.*

*உம்மை இரண்டனுள் முன்னது இழிவு சிறப்பு; பின்னது உயர்வு சிறப்பு. "போழ்தத்து" என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை. 'வினை துன்னி நிற்குமோ' என மாறிக் கூட்டுக.*

*35. பொழிப்புரை :- பல வினைவந்து சூழ்வதற்கு முன், காலங் கடத்தாமல் விரைந்து, பார்வதியை பாகத்தில் கொண்டவனும், காமனை எரித்தவனும், திருநீற்று ஒளி பிரகாசித்துக் கொண்டிருப்பவனும் ஆன சிவபெருமானை வணங்கி மனமே இடைவிடாமல் நினைப்பாயாக.*

*அருஞ்சொற்பொருள் :- தொல்லை - பழமை. தாழாமே - தாமதியாமலே. ஒல்லை - விரைவாக. கூற்று - யமன். காய்தல், உதைத்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. வாய்ந்து - (திருமேனியில்) பொருந்தி. 'வணங்கி நினை' என்பதை 'நினைந்து வணங்கு' என முன் பின்னாக நிறுத்தி, விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க.*

*36. பொழிப்புரை :- ஓ மனமே, நீ சிவபெருமானை நினைத்து வணங்கு*

**36.** நினையா தொழிதிகண் டாய்நெஞ்ச மேஇங்கொர் தஞ்சமென்று
மனையா ளையும்மக்கள் தம்மையுந் தேறிஓர் ஆறுபுக்கு
நனையாச் சடைமுடி நம்பன் நந் தாதைநொந் தாதசெந்தீ
அனையான் அமரர் பிரான்அண்ட வாணன் அடித்தலமே. **13**

**37.** அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்
முடித்தலமும் நீமுரித்த வாறென் – முடித்தலத்தின்
ஆறாடி ஆறாஅனலாடி அவ்வனலின்
நீறாடி நெய்யாடி நீ. **14**

---

*நினையாமல் விட்டுவிடாதே. மனைவி மக்கள் அழியக் கூடியவர் என்றும், கங்கையைச் சடைமுடியில் அணிந்திருந்தும் சடை நனையாதவனாகிய சிவபெருமானே நமக்குத் தந்தை என்றும் உணர்ந்து, தூண்டாமலும், அணையாமலும் இல்லாத நெருப்பினை கையில் உடைய தேவர் தலைவர் பெருமானை அடைக்கலம் புகுவாயாக.*

*அருஞ்சொற்பொருள் :-* *'நெஞ்சமே, மனையாளையும் மக்கள் தம்மையும், 'இங்கு ஓர் தஞ்சம்' என்று தேறி, அண்ட வாணன் அடித்தலம் 'நினையாது ஒழிதியோ' என இயைத்துக் கொள்க. மனையாளும், மக்களும் அம்மையார்க்கு இல்லையாதலின், 'அவர்களைத் தேறி' என்றது, 'அவர்களைத் தேறும் பிறரது மனங்களைப்போலவே நீயும் ஆகி' என்றது என்க. "சிவன்தாள் சிந்தியாப் பேதைமார் போல நீ வெள்கினாயே... நெஞ்சமே"[1] என அருளிச்செய்தார் ஞான சம்பந்தரும். 'ஒழிதியோ' என்பதில் வினாப் பொருட்டாய ஓகாரம் தொகுத்தலாயிற்று, "கடையவனேனைக் கருணையினாற் கலந்தாண்டு கொண்ட - விடையவனே விட்டிடுதி கண்டாய்"[2] என்பதிற்போல. அவ்வோகாரத்தால், 'அங்ஙனம் செய்தியாயின் கெடுவை' என்னும் குறிப்புப் போந்தது. கண்டாய், முன்னிலையசை. இங்கு - இவ்வுலகில். தஞ்சம் - புகலிடம். தேறுதல் - தெளிதல். ஓர் ஆறு, கங்கை. 'கங்கை யாறு புக்கது; ஆயினும் சடை நனைய வில்லை' என்றது சடைக்கு அதுபோதவில்லை என்றபடி. நொந்தாத - மிகுக்க வேண்டாத. 'மிக எரிகின்ற' என்றபடி. அனையான் - போன்றவன். அண்டவாணன் - சிவலோகத்தில் வாழ்பவன். அடித்தலம் - திருவடியாகிய புகலிடம், 'புகலிடம் ஆகாததை, ஆகும் என்று மயங்கிப் புகலிடம் ஆவதை விட்டொழியாதே' என அறிவுறுத்தவாறு.*

*37. பொழிப்புரை :- பாதத்தின் விரலால் அழுக்கி இராவணனின் தோள்கள் முடிகள் எல்லாம் முறித்தவனும், முடியில் கங்கையைத் தரித்தவனும், அணையாத அனலை வைத்து ஆடுகின்றவனும் அனலில் திருநீறு பூத்திருப்பவனும், நடனம் ஆடுபவனும் சிவனே.*

---

*1. திருமுறை 2-78-1*

*2. திருவாசகம்: நீத்தல் விண்ணப்பம்*

**38.** நீநின்று தானவர் மாமதில் மூன்றும் நிரந்துடனே
தீநின்று வேவச் சிலைதொட்ட வாறென் திரங்குவல்வாய்ப்
பேய்நின்று பாடப் பெருங்கா டரங்காப் பெயர்ந்துநட்டம்
போய்நின்று பூதந் தொழச்செய்யும் மொய்கழற் புண்ணியனே. **15**

**39.** புண்ணியங்கள் செய்தனவும் பொய்ந்நெறிக்கட் சாராமே
எண்ணியோ ரைந்தும் இசைந்தனவால் – திண்ணிய
கைம்மாவின் ஈருரிவை மூவுருவும் போர்த்துகந்த
அம்மானுக் காட்பட்ட அன்பு. **16**

---

*அருஞ்சொற்பொருள் :-* *'அடித்தலத்தின் நெரித்தவாறு' என இயையும். இன், ஐந்தாம் உருபு. அரக்கன், இராவணன். "முரித்தவாறு என்" - என்றது, 'பிழை நோக்கி ஒறுத்தல் வேண்டியோ' என்றபடி. ஒறுத்தபின் இசைபாடித் துதிக்க அருள்செய்தமையும் கேட்கப்படுவதால்,* **'பிழை செய்தவரும் அஃது உணர்ந்து பணிந்தால், பிழையை நோக்காது அருள் செய்பவன் நீ' என்பதும் குறிக்கப்பட்டதாம்.** *"ஆடி" நான்கும் பெயர்கள். அவற்றுள் முதற்கண் உள்ளதில் இகர விகுதி செயப்பாட்டு பொருட்டாயும் ஏனையவற்றில் அது வினைமுதற் பொருட்டாயும் நின்றது. ஆறு - கங்கை. 'அனலோ' என்றாயினும். 'அனலின்கண்' என்றாயினும் ஏற்கும் உருபு விரித்துக்கொள்க. 'நீற்றின் கண்' என ஏழாவது விரிக்க. 'நீ ஆடுபவன்; நீ அரக்கனது தோளையும் முடியையும் முரிக்கக் காரணம் என்ன? என வினை முடிக்க. "தலம்" மூன்றும், 'இடம்' என்னும் பொருளன. 'அடிகளாகிய தலம், முடியாகிய தலம்' என்க.*

*38.* **பொழிப்புரை :-** *நீவிர் திரிபுர அரக்கர்களின் முப்பெரும் மதில்களையும் ஒருங்கே கலக்கி உடன் எரியுண்ணுமாறு வில்லேந்திய காரணம் என்னை? (வில்லேந்தியது நடிப்பு. சங்கற்ப மாத்திரையாலே - புன்னகையாலேயே எரிந்துவிட்டது). திரங்கிய பெரிய வாயை உடைய பேய்நின்று பாடிட, ஊழிக்கால ஈமம் ஆடுமிடமாகக் கொண்டு நடனமாடி பூதம் தொழுதிடும் வலிய வீரக்கழலை அணிந்துள்ள நல்வினை வடிவினனாகிய நீர் இவ்வாறு செய்திடக் காரணம் என்னை?*

*அருஞ்சொற்பொருள் :-* *தானவர் - அசுரர். நிரந்து - ஒருங்கே. உடனே - விரைவில். 'தீயின்கண் நின்று' என உருபுவிரிக்க. சிலை - வில். தொடுதல் - வளைத்தல். இது, அம்பெய்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. திரங்கு - தசை மெலிந்து தொங்கிய. வல் வாய் - பிணத்தைத் தின்னும் வாய். பெயர்ந்து - புடை பெயர்ந்து. 'நட்டம் செய்யும்' என இயைக்க. 'பூதம் போய் நின்று தொழ' என மாறிக் கூட்டுக. 'வந்து' என்பதனை, "போய்" என்றது இடவழுவமைதி. எனவே, 'நின்பால் வந்து தொழ' என்றவாறாம். மொய் கழல் - பாதத்தைச் சூழ்ந்த கழல். "மதில் மூன்றும் புண்ணியன் - அற வடிவினன். வேவச் சிலைதொட்ட வாறு என்" என்றதற்கு முன்பாட்டில் ''நீ முரித்தவாறு என்'' என்றதற்கு*

**40.** அன்பால் அடைவதெவ் வாறுகொல் மேலதோ ராடரவம்
தன்பால் ஒருவரைச் சாரவொட் டா(து) அதுவேயுமன்றி
முன்பா யினதலை யோடுகள் கோத்தவை ஆர்த்துவெள்ளை
என்பா யினவும் அணிந்தங்கோர் ஏறுகந் தேறுவதே. 17

---

*உரைத்தவாறே உரைக்க. பின்னிரண்டடிகள் ஆசெதுகை பெற்றன. மொய் - நெருக்கம்.*

*39.* ***பொழிப்புரை :-*** *புண்ணியங்கள் செய்து, தீயநெறி வழிச் செல்லாது ஐம்புலன்களும் ஒருமித்து சிவனுக்கு அடிமையாகக் காரணம் யானைத் தோலை உடுத்திக்கொண்டு திருமாலும், பிரமனும், உருத்திரனும் ஆகிய மூன்று உருவமும் கொண்ட ஈசனுக்கு ஆட்பட்ட அன்பேயாகும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *(யாம்) பொய்ந்நெறிகளில் சேராமல் விலகியதுடன், செய்த செயல்களும் புண்ணியங்களே. அஃது (எவ்வாற்றால் எனின்) எண்ணப்பட்ட ஐம்பொறிகளும் அம்மானுக்கு ஆட்பட்ட அன்பிற்கு இசைந்தவாயின என இயைத்துப் பொருள் கொள்க. உம்மை, இறந்தது தழுவிய எச்சம். எண்ணிய - 'ஐந்து' என்று எண்ணப்பட்ட. ஈற்று அகரம் தொகுத்தல். ஆல், அசை. கைம்மா - யானை. "ஈர் உரிவை", வினைத்தொகை 'உரித்த தோல்' என்பது பொருள். மூவுருவம் - மும்மூர்த்தி உருவம். 'அன்பிற்கு' என நான்காம் உருபு விரித்து, 'அன்பு செய்தற்கு' என உரைக்க. 'ஐம்பொறிகள் அன்பு செய்தற்கு இசைந்தன' என்றமையால், 'இசையாது மாறிச் செல்லுதலே அவற்றின் இயல்பு' என்பதும், 'அவற்றை அவ்வாறு இசையச் செய்தல் வேண்டும்' என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. 'ஈருரிவை, மூவுருவம்' என்பது எண்ணலங்கார நயம் தோற்றி நின்றது.*

*40.* ***பொழிப்புரை :-*** *சடாபாரத்தோடு கூடிய தலையில் பாம்பை அணிந்திருப்பதனால் அதைக் கண்டு மற்றவர்கள் நெருங்க முடியாத நிலையில் மண்டையோடுகளையும், வெள்ளெலும்புகளையும் மாலையாகக் கொண்டவனும், காளையை வாகனமாகக் கொண்டவனுமான சிவனை அன்பினால் அடையலாம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'கொல், ஐய இடைச்சொல். அதனால், அடையு மாற்றை நீரே அருளுதல் வேண்டும்' என்பது குறிப்பெச்சமாயிற்று. 'ஐயரே, நும் மேலது' என முன்னிலையை வருவித்து, 'நும்மைப் பிறர் அன்பால் அடைவது எவ்வாறு கொல்' என முடிக்க. ஓர் அரவு, முடி மேல் உள்ளது. ஆடு அரவு - படமெடுத்து ஆடுகின்ற பாம்பு. 'ஆகவே அது சீறுகின்றது' என்றதாம். 'முன்பு ஆயின' எனப் பிரித்து, 'தலை ஓடுகள்' என முடித்து, 'அவை கோத்து' என வேறெடுத்துக் கொண்டு உரைக்க. 'கோத்து ஆர்த்து, அணிந்து, உகந்து ஏறுவது ஓர் ஏறு' என்க. ஏறு - இடபம். 'அது பாய்வதால் அச்சம் உண்டாதலுடன், யானை மீதும், குதிரை மீதும் ஏறாமல், இடபத்தின்மேல் ஏறுவதால், நன்கு மதிக்கவும் இயலவில்லை' என்பதாம்.*

**41.** ஏறலால் ஏறமற் றில்லையே எம்பெருமான்
ஆறெலாம் பாயும் அவிர்சடையார் – வேறோர்
படங்குலவு நாகமுமிழ் பண்டமரர்ச் சூழ்ந்த
தடங்கடல்நஞ் சுண்டார் தமக்கு. **18**

---

*'கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேறாதே*
*இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ'[1]*

*என்றது காண்க. உகத்தல் - விரும்புதல். 'பாம்பும், இடபமும் பகையாயினாரைச் சீறுதலும், பாய்தலும் செய்யுமேயல்லது, அன்பரை ஒன்றும் செய்யா' என்பதும், 'யானை குதிரைகளின் மேல் ஏறியும், மணி மாலைகளை அணிந்து யாம் பெருமை பெற வேண்டுவதில்லை' என்பதும், 'எவ்வாறு கொல்' என்னும் ஐயத்தை நீக்கும் விடைகள் என்பது கருத்து. "பூணாணாவதோர் அரவங்கண் டஞ்சேன்"[2] என்று அருளிச் செய்தமை காண்க.*

*41. பொழிப்புரை :- எம்பெருமானுக்கு பசு தவிர வேறு வாகனம் இல்லை. சடைமுடியில் கங்கை பாய்ந்தும், சடை நனையாமல் இருக்கின்றது. சடையில் பாம்பு படம் எடுத்து ஆடுகின்றது. தேவர்கள் வாசுகி என்னும் பாம்பை மத்தாகக் கொண்டு பாற்கடலைக் கடைய, விஷத்தைக் கக்க, அந்த விஷத்தைக் கண்டத்தில் வைத்திருக்கின்றான். அவனே நமக்குத் தலைவன்.*

*அருஞ்சொற்பொருள் :- 'எம்பெருமானும், அவிர் சடையாரும் ஆகிய நஞ்சுண்டார் தமக்கு ஏற, ஏறலால் மற்று இல்லையே' என முடிக்க. 'பெருமான்' என்பது ஒருமையாயினும் உயர்த்துக் கூறும் சொல்லாதலின் பன்மையோடு மயங்கிற்று. "இல்லையே" என்னும் ஏகாரம் வினாப் பொருட்டாய், 'உறவாகவும் விரும்பிலர்' என்னும் குறிப்பினதாய் நின்றது. "ஆறு" என்றது ஆகுபெயராய் அதன் நீரைக் குறித்தது. வேறோர் நாகம், உயர்ந்த பாம்பு, அது 'வாசுகி' என்பது, உமிழ்ந்த நஞ்சு, சூழ்ந்த நஞ்சு' எனத் தனித்தனி இயைக்க. 'அமரரை' என்னும் இரண்டாம் உருபு தொகுத்தலாயிற்று. 'அமரர் சூழ்ந்த' என்பது பாடம் அன்று, முன்னைப் பாட்டில் கூறியவாறு, 'ஏற்றையே உகந்து ஏறுவது இல்லாமையாலன்று; விரும்பாமையால்' என்பது இங்குக் கங்கையைத் தாங்கி மண்ணுலகினரைக் காத்தமை, நஞ்சை உண்டு விண்ணோரைக் காத்தமை இவற்றைக் குறித்த குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*42. பொழிப்புரை :- "நின்னடியே வழிபடுவான் நிமலா" என்றபடி சிவபெருமான் திருவடிக்கே எந்நாளும் இன்பணி செய்து கொண்டிருப்போருக்கு தாமொரு நாள் தமக்கென்று சொன்னால் அருளாமல் விட்டு விடுவாரா? இரண்டு காளைகள் இன்றி உமையம்மையையும் ஒரே காளையில் ஏற்றிச் செல்வது ஏன் உத்தமரே என்றும் கேட்கிறார்.*

---

*1. திருவாசகம் - திருச்சாழல் - 15*
*2. திருமுறை - 7.15.1.*

42. தமக்கென்றும் இன்பணி செய்திருப் பேமுக்குத் தாமொருநாள்
எமக்கென்று சொன்னால் அருளுங்கொ லாமிணை யாதுமின்றிச்
சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப தொன்றுதொண் டைக்கனிவாய்
உமைக்கென்று தேடிப் பொறாதுட னேகொண்ட உத்தமரே. 19

43. உத்தமராய் வாழ்வார் உலந்தக்கால் உற்றார்கள்
செத்த மரமடுக்கித் தீயாமுன் – உத்தமனாய்
நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்திறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து. 20

**திருச்சிற்றம்பலம்**

---

***அருஞ்சொற்பொருள் :-*** *"இணை யாதும் இன்றி" என்றது, "காளைகளைப் பயன்படுத்துகின்றவர்கள் இரண்டையிணைத்தே பயன்படுத்துவர் ஆகலின் அவ்வாறு இணைத்தற்கு ஒன்று கிடையாமையால் ஒரு காளையையே உடையவராய் இருக்கின்றார்" என்றபடி.*

*'இனி ஒற்றைக் காளையையே பயன்படுத்துவதாயினும் உமாதேவி ஊர்வதற்கு மற்றொரு காளை இன்றியமையாது வேண்டும்; அஃது இல்லாமையால், அவளையும் தமது ஒரு காளையின்மேலே உடன் ஏற்றிக் கொண்டு வருகின்றார்' என மேலும் குறி கூறியபடி, 'இத்தகைய இலம்பாடு (வறுமை) உடையவர், அவருக்கென்றே நாம் என்றும் பணிசெய்திருப்பினும், 'எமக்கு என்று ஒன்று இரந்தால், அதனை ஈய வல்லவராவரோ' - என ஐயுறுகின்றோம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்ட பொருள். இதுவும் நிந்தாத் துதி. "ஒருநாள் அருளுங்கொல்" என்றமையால், 'எந்நாளும் அருள மாட்டாது வாளாதே இருப்பரோ' என்பதும் போந்தது. ஆம், அசை. "எமக்கு என்று" என்பதன் பின், 'ஒன்று' என்பது வருவிக்க. 'சொன்னால்' என்றது, 'வேண்டினால்' என்றபடி. "பிள்ளை" என்றது, இளமையைக் குறித்தது. "இணை யாதும் இன்றி" என்பது, 'தனியே சுமக்கின்றது' என்பதைக் குறித்தற்கும் "வேறு ஒப்பது ஒன்று பெறாது" என்பது இணைத்தற்கு இல்லை' என்பதைக் குறித்தற்கும் கூறியன ஆகலின், கூறியது கூறல் ஆகாமையறிக. தொண்டைக்கனி - கொவ்வைக் கனி. உத்தமர் - எல்லாரினும் மேலானவர். என்றது, 'மற்றொரு காளையை இவர் கொள்ளாமைக்குக் காரணம் வறுமையன்று; உமையாளையும் ஒரு காளைமேல் உடன் கொண்டு செல்ல விரும்புதலேயாம்' என்பதை உணர்த்தி, 'ஆகவே, 'இவர் எம்மைத் தம் அடிமையென்று கருதியிரங்கி, வேண்டியவற்றை ஈபவரே எனவும் குறித்தவாறு. நம்பியாரூரரும் இவ்வாறே, முன்னர், ''ஊர்வது ஒன்று (ஏ) உடையான்'' எனக் கூறிப் பின்னர், ''உம்பர் கோன்'' என அவனது பெருமையுணர்த்தியவாறு அறிக.*

***43. பொழிப்புரை :-*** *உயர்ந்தோராக வாழ்ந்து தம்மைத் தாம் உறவினர் நாம் இறந்தவுடன் காய்ந்த விறகில் வைத்துச் சுடுமுன் நல்லவராக இருந்து, ஆழமான கடலின் நஞ்சினை உண்டு நடனமாடும் சிவபெருமான் பெருமையை ஆழ்மத கருத்துக்களை உடைய மனமே உணர்ந்து இன்பமுடன் கேட்பாயாக.*

***அக விளக்கம் :-*** *இருபது பாடல்களிலும் வெண்பாவும் விருத்தமும் மாறி மாறி அமைத்து இருவித மணப்பூக்களால் மாலையாகச் சாற்றினார்கள். முதலும் இறுதியும் அந்தாதியாக இருக்கிறது. தன் நெஞ்சைப் பார்த்துச் சொன்ன மாதிரியும் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் யாவும் உணர்ந்து தன் மனதை பார்த்துக் கேட்பது போலும் கேட்கும்படியும் சொல்லுகிறார்கள், காரைக்காலம்மையார்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *உத்தமராய் - கல்வி, செல்வம், அதிகாரம் முதலியவற்றில் ஒன்றாலேனும், பலவாற்றாலேனும் உயர்ந்தவர்களாய். 'வாழ்வாரும்' என்னும் உயர்வு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. உலந்தக்கால் - இறந்துவிட்டால். 'உயர்ந்தவர்களாய் வாழ்ந்தவர்களாயிற்றே' என்று எண்ணுதல் இன்றி, எல்லாரோடும் ஒப்பச் செத்த மரத்தையே (காய்ந்த விறகையே) அடுக்கி, அவற்றோடு ஒன்றாகச் சேர்த்து! உறவினர்கள் தீத்து (எரித்து) விடுவார்கள் 'இவ்வளவே இவ்வுலக வாழ்வு' என்றபடி. 'ஆகையால் இந்த வாழ்விலே ஆழ்தலை யுடைய நெஞ்சே, உன்னையும் அவ்வாறு செய்தற்கு முன், சிவனது புகழை அறிந்தோர் சொல்லக்கேள்' என்க. 'கேட்டால்', 'நிலையான வாழ்வைப் பெறுவாய்' என்பது குறிப்பெச்சம். "உத்தமன்" என்பதற்கு, முன்னைப்பாட்டில் "உத்தமர்" என்றதற்கு உரைத்தவாறே உரைக்க. "ஆழி" இரண்டில் முன்னது, 'கடல்' என்னும் பொருட்டாயும், பின்னது 'ஆழ்தல் உடையது' என்னும் பொருட்டாயும் நின்றன. 'கிளர்ந்து கேள்' என முன்னே கூட்டி, 'ஊக்கம் கொண்டு கேள்' என உரைக்க. இங்ஙனம் உரைக்கவே, 'ஊக்கம் இன்றிக் கேட்டல் பயனுடைத்தாகாது' என்பது பெறப்பட்டது.*

*'இரட்டை மணி மாலை இருபது பாட்டுக்களால் அமைதல் வேண்டும்' என்பதனால் திருக்கடைக் காப்புக் கூறிற்றிலர். இப்பிரபந்தம் முழுவதும் அந்தாதியாய் வந்து மண்டலித்தவாறு காண்க.*

***திருஇரட்டைமணிமாலை முற்றிற்று***

## காரைக்கால் அம்மையார்

*அருளிச்செய்த*

## 4. அற்புதத் திருவந்தாதி

***திருவந்தாதியின் தொகைக் குறிப்பு***

***இறைவரைச் சூழ்ந்து போற்றி நிற்கும் பூதகணங்களின் வடிவம் வேண்டியபடியே தமக்குக் கிடைக்கப் பெற்றமைக்கு மகிழ்ந்தும், அப்பேய் வடிவோடு கண்டுகொண்ட இறைவரது அருட் கோலங்களின் காட்சிகளில் திளைத்தும் வியந்தும் பாடியது.***

***திருச்சிற்றம்பலம்***

**44. பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்**
**சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் – நிறந்திகழும்**
**மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே**
**எஞ்ஞான்று தீர்ப்பது) இடர். 1**

---

*44. அற்புதம் என்றது அடிமைத்திறத்தினை வியந்தது. அற்புதம் - ஞானம் என்ற பொருளுமுண்டு.*

*பொழிப்புரை :- ஒளியுடன் விளங்கும் கரியநஞ்சு தங்கிய கழுத்தையுடைய விண்ணவர் தலைவனே! பிறந்து பேச்சுப் பழகிய காலம் முதல், நான் பேரன்பு கொண்டு, எக்காலமும் உன் திருவடியையே சேர்ந்தேன். எனது துன்பம் தீர்ப்பதுதான் எப்போது? கருவாய்க்கிடந்த போதே கழலடியை நினைந்தவர் அப்பர் சுவாமிகள். இவ்வாறு துணிந்து சொல்லுதல் வேறு யாவர்க்கும் அரிது. இது முன்னைத்தவத்தால் ஆவது.*

*அருஞ்சொற்பொருள் :- பயின்ற - பயின்று நன்கு உணர்ந்த. பின் - பிற்பட்ட காலம். என்றது, 'சிறு காலையே' என்றபடி. சேர்ந்தேன் - துணையாக அடைந்தேன். என்றது, தமது ஞானத்தின் இயல்பைக் குறித்தவாறு. இடர் - பிறவித் துன்பம். இதனையே சேக்கிழார்,*

*'வண்டடல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை*
*அண்டர்பிரான் திருவார்த்தை அணையவரு வனபயின்று'[1]*

*என அருளிச் செய்தார். நிறம் - அழகு. 'மணிகண்டம்' எனப்படுதல் அறிக. மை ஞான்ற - கருமை நிறம் ஓரளவில் (கண்டத்தளவில்) ஒட்டி நின்ற. இடர் - துன்பம்; பிறவித் துன்பம். "எஞ்ஞான்று தீர்ப்பது" என்றது, 'அதனை யறிந்திலேன்' என்னும் குறிப்பினது, அஃதாவது, 'இப்பிறப்பிலோ, இனி வரும் பிறப்பிலோ' என்பதாம்.*

---

*1. பெரிய புராணம் - காரைக்காலம்மையார் - 5*

45. இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் – சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்(கு)
அன்பறா(து) என்நெஞ் சவர்க்கு. 2

46. அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம் என்றும்
அவர்க்கேநாம் அன்பாவ தன்றிப் – பவர்ச்சடைமேற்
பாகாப்போழ் சூடும் அவர்க்கல்லால் மற்றொருவர்க்(கு)
ஆகாப்போம் எஞ்ஞான்றும் ஆள். 3

---

***45. பொழிப்புரை :-*** *எமது பெருமான் எனக்குப் பிறவித் துன்பத்தை நீக்கா விட்டாலும், என்மேல் இரக்கம் கொள்ளாவிட்டாலும், நான் செல்லுவதற்குரிய நல்வழியைக் காட்டாவிட்டாலும், பேரொளி வடிவமாய் நின்று எலும்பு மாலைகளை நீங்காமல் அணிந்த திருக்கோலத்துடன் சுடுகாட்டில் கூத்தாடுகின்ற அப்பெருமான்மேல் என் மனமானது கொண்டுள்ள அன்பு சிறிதும் நீங்காது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *படரும் நெறி - செல்லும் கதி என்றது, நற் கதியை. பணித்தல் - உரிமை செய்தல். உம்மைகள், 'அவற்றை அவர் செய்யாதொழியார்' என்பதைக் குறித்தலின், எதிர்மறை. சுடர் உரு - ஒளி வீசுகின்ற உருவம். 'கோலத்தோடு' என உருபு விரிக்க. "அவர்க்கு" என்பதன் பின், 'ஆயினமையால்' என ஒரு சொல் வருவிக்க. 'அன்பை அறுத்துவிடாது' என்றேனும், 'அன்பு அறப் பெறாது' என்றேனும் உரைக்க.*

***46. பொழிப்புரை :-*** *சிவபெருமானுக்கே நாம் எழுவகைப் பிறப்பிலும் அடிமையாவோம்; எப்பொழுதும் அவருக்கே நாம் அன்பு செலுத்துவோம் அல்லாமல், அடர்ந்த சடையின்மீது பிறைத்திங்களைச் சூடும் அப்பெருமானுக்கு அன்றி, வேறொருவருக்கும் எக்காலத்திலும் அடிமையாக மாட்டோம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"அல்லால்" என்றது, அன்பாதலைக் குறித்தும், போழ் சூடும் அவரைக் குறித்ததுமாம். அன்புடையேமை, "அன்பு" என்றது உபசாரவழக்கு. பவர் - கொடி. 'பவர் போலும் சடை' என்க. பாகு - ஒரு பகுதி. பாகு ஆக - ஒரு பகுதியில் பொருந்தும்படி போழ் - பிளவு. திங்களின் பிளவு. ஆள் - ஆளாம் தன்மை. 'அவர்க்கு அல்லால், எம் ஆளாம் தன்மை. எஞ்ஞான்றும் மற்றொருவர்க்கு ஆகாதே போம்' என இயைத்துக் கொள்க. 'ஆகாது' என்பதில் துவ்வீறும், பின்னர்த் தேற்றேகாரமும் தொகுத்தலாயின.*

***47. பொழிப்புரை :-*** *அடிமைப்பட்ட நாங்கள் எங்கள் துன்பத்தை அவர் அறியும்படி முறையிட்டால் அவர் அதைக் கேளாமல் இருத்தல் என்ன காரணமோ? எங்களை ஆட்கொண்ட பெருமான் இப்படிக் கேளாமலிருத்ததற்கு காரணம்; நீண்ட திருமேனி முழுதும் சிறப்பு நிறமாயிருந்தாலும், அழகிய கழுத்து மட்டும் கறுப்பு நிறமாயிருக்கும் தன்மை போன்றதாகும்.*

47. ஆளானோம் அல்லல் அறிய முறையிட்டாற்
கேளாத(து) என்கொலோ! கேள்ஆமை – நீள்ஆகம்
செம்மையான் ஆகித் திருமிடறு மற்றொன்றாம்
எம்மையாட் கொண்ட இறை. 4

48. இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான்; தோற்றி
இறைவனே ஈண்டிறக்கஞ் செய்வான்; இறைவனே
'எந்தாய்' என இரங்கும்; எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான். 5

---

***அருஞ்சொற்பொருள் :-*** *'கேள் ஆமை யாக' என ஆக்கம் வருவிக்க. கேள் - உறவு. ஆமை, ஆமை ஓடு. அதனை அணியத் தகும் பொருளாக அணிந்த. ஆகம் - மார்பு. மார்பைக் கூறவே, உடல் முழுவதையும் கூறியதாயிற்று. "ஆகம் செம்மையான்'' என, சினையினது பண்பு முதல்மேல் ஏற்றப்பட்டது. செம்மையைச் சுட்டிப் பின், 'மற்றொன்று' என்றமையால், 'கருமை' என்றதாயிற்று. 'ஆம் இறை, ஆட்கொண்ட இறை' எனத் தனித்தனி இயைக்க. 'கேளாதது என்கொலோ' என்றது, 'இன்னும் முறையிடல் வேண்டும் போலும்' என்பதாம்.*

***48. பொழிப்புரை :-*** *சிவபெருமானே எல்லா உயிர்களையும் பிறவியில் சேர்த்துவான். அவ்வாறு தோற்றுவித்த உயிர்களை அப்பெருமானே இவ்வுலகினின்று ஒடுங்கும்படி செய்வான். 'எமது தந்தையே!' என்று நாங்கள் அவரை துதிக்க, எங்களுக்குத் திருவுளம் இரங்குவான். எங்களுக்குக் கொடிய துன்பம் நேர்ந்தால் உடனே அதை நீக்கியருளுவான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *இறக்கம் - நீக்குதல்; ஒடுக்குதல். "இறைவன்" என்றது, 'சிவன்' என்றபடி. "இறைசிவன், கடன்வேந் தன்கையிறை, யிறுப்பு, இறை சிறந்தோன்" என்னும் சூடாமணி நிகண்டினால், "இறைவன்" என்பது சிவனுக்கே உரிய சிறப்புப் பெயராதல் விளங்கும். 'உலகம் முழுவதையும் ஆக்கி அழிப்பவனும், உயிர்களுக்குத் துன்பத்தை நீக்கி இன்பத்தை அளிப்பவனும் சிவனே' என்பது உணர்த்தியவாறு.*

***49. பொழிப்புரை :-*** *அறவே உருவானவனும், முற்காலத்தில் நஞ்சு உண்டதனால் கறுத்த மிகுந்த ஒளிபொருந்திய திருக்கழுத்தையுடையவனுமாகிய சிவபெருமானை, 'விண்ணுலகத்தில் உள்ளான்' என்று சொல்லுவார் சொல்லுக! அத்தேவதேவன் 'இம் மண்ணுலகத்தில் தான் உள்ளான்' என்று சொல்வாரும் சொல்க! நான் 'என் நெஞ்சில் வீற்றிருக்கின்றான்' என்றே கூறுவேன்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *வானம் - சிவலோகம். "உம்பர்கோன்" என்றது சீகண்ட உருத்திரரை - அவரது தானம் (இடம்) கயிலாயம். இருண்ட - இருள் மயமான. மெய்யொளி - செறிந்த ஒளி. "என்பாரும், என்பாரும் என்க. யான்*

**49.** வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாமென்க – ஞானத்தான்
முன்நஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தானென்பன் யான். **6**

**50.** யானே தவமுடையேன் என்னெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்; – யானே அக்
கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயி னேன். **7**

---

*'ஞானத்தானும், என் நெஞ்சத்தானும்' என்பன்'' என இயைத்து முடிக்க. சிவலோகத்திலும், கயிலாயத்திலும் இருத்தல் தடத்த நிலையாம். ஆகலின், 'சிவஞானம் பெற்ற சீவன் முத்தர்களது உள்ளத்தில் இருப்பவனாக உணர்தலே அவனது உண்மை நிலையை உணர்தலாம்' என்றபடி. மூன்றாம் அடியை முதலிற் கூட்டி, அதன் இறுதியில் இரண்டாம் உருபு விரித்து, பின் வந்த ''என்க'' என்பதன்பின் 'அவன்' எனச் சுட்டியுரைக்க.*

***50. பொழிப்புரை :–*** ***நானே தவத்தை உடையேன்; என் மனமும் நல்லமனம். நானே பிறவியை அறுக்கமுடியுமா என எண்ணினேன். இயலாது என்று எண்ணிக் கொண்டே - யானையை உரித்துத் தோலைப் போர்த்த - நெற்றிக் கண்ணையுடைய - திருவெண்ணீற்றை அணிந்த சிவபெருமானுக்கு அடிமையாகிவிட்டேன்.***

***அருஞ்சொற்பொருள் :–*** ***இரண்டாம் அடி ஈற்றில் உள்ள, "யானே" என்பது முதலாகத் தொடங்கி, ஈற்றடியின் முடிவில், 'ஆதலின்' என்பது வருவித்து உரைக்க. நீற்ற - நீற்றையணிந்த, ஏகாரங்கள் ஏனையோரினின்றும் பிரித்தலின் பிரிநிலை. இவற்றால், 'பிறர் தம்மை இவ்வாறு கூறிக்கொள்வன எல்லாம் மயக்க உரைகளாம்' என்றபடி. சிவனுக்கு ஆளாதலின் அருமையையும், பயனையும் குறித்தவாறு. "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து - முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை... வலஞ்சுழி வாணனை வாயாரப் - பன்னி, ஆதரித்து ஏத்தியும், பாடியும் வழிபடும் அதனாலே"[1] எனவும், "எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே - பந்தம் வீடவையாய பராபரன்... சிந்தையுள்ளும் சிரத்துளும் தங்கவே", "என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே - மின்னு வார்சடை வேத விழுப்பொருள்... செந்நெறி - மன்னுசோதி நம் பால் வந்து வைகவே"[2] எனவும் போந்தவற்றையும் உணர்க.***

***51. பொழிப்புரை :–*** ***உலகெலாம் ஆள்வானாகிய சிவபெருமானுக்கு நான் அடிமை ஆயினேன்; அடிமையான அன்றைக்கே பெறுதற்கரிய பெரும்பேறாகிய***

---

1. *திருமுறை - 2. 106*
2. *திருமுறை - 5. 7.2, 78.2*

51. ஆயினேன் ஆள்வானுக்(கு) அன்றே பெறற்கரியன்
ஆயினேன் அஃதன்றே ஆமாறு – தூய
புனற்கங்கை ஏற்றானோர் பொன்வரையே போல்வான்
அனற்கங்கை ஏற்றான் அருள். 8

---

*சிவமாம் தன்மையைப் பெற்றேன்; அதுவன்றோ அவன் அருள்; மாசற்ற நீராகிய கங்கையைச் சடையில் தாங்கியருளியவனும், ஒப்பற்ற மேரு மலையைப் போன்றவனும், தீயைத் தன்கையில் ஏந்தியருளியவனுமாகிய எம்பெருமானது திருவருள் இதுவன்றோ?*

***அருஞ்சொற்பொருள் :-*** *'ஆள்வானுக்கு (ஆள்) ஆயினேன்; அன்றே பெறற்கரியன் ஆயினேன்; அஃதன்றே அவன் அருள் ஆமாறு' என இயைத்து முடிக்க. ஆள்வான் - உண்மையாய் ஆள்வான்; சிவன் "ஆள்வான்" என்றதனால், "ஆயினேன்" என்றது, 'ஆள் ஆயினேன்' என்றதாயிற்று. "பெறற்கு அரியன்" என்றது, 'சிவன்' என்றபடி. 'சிவனுக்கு ஆளாயினேன்; அன்றே யானும் சிவனாயினேன்; தன் அடியவரைத் தானாகச் செய்தலேயன்றோ சிவனது திருவருளின் சிறப்பு' என்றபடி. "திகழ்ந்த மெய்ப்பரம் பொருள் - சேர்வார் தாமே தானாகச் செயுமவன்"[1] என்றது காண்க. "தூய.... போல்வான்" என்றது 'சிவன்' என்றபடி. 'புனலாகிய கங்கை' என்க. "அனற்கு அங்கை" என்பதை, 'அங்கைக்கு அனல்' எனப் பின் முன்னாக நிறுத்தி, உருபு பிரித்துக் கூட்டி, நான்காம் உருபை ஏழாம் உருபாகத் திரித்துக் கொள்க.*

***52. பொழிப்புரை :-*** *சிவபெருமானது திருவருளாகிய சிவசக்தியே உலகுயிர்களை ஆளச்செய்வது. அவ்விறைவன் திருவருளே உயிர்களின் பிறவியை ஒழியச் செய்வது. திருவருட் கண்கொண்டு இவ்உண்மைப் பொருளை உற்று நோக்கும் விதியுடையேனானால், எனக்கு எக்காலத்தும் எல்லாப் பொருளும் இனிது எய்துவதாகும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'ஈசன் அருளே உலகெலாம் ஆள்விப்பது, பிறப்பு அறுப்பது ஆனால், அவன் அருளாலே (யான்) மெய்ப்பொருளையும் நோக்கும் விதியுடையேன்; ஆதலின், எனக்கு எஞ்ஞான்றும் எப்பொருளும் ஆவது அவன் அருளே' என இயைத்து முடிக்க. ஈசன் - சிவன். "ஆனால்" என்பது தெளிவின்கண் வந்தது, "காண்பவன் சிவனே யானால்"[2] என்பதிற் போல. 'மெய்ப்பொருளையும்' என்னும் சிறப்பும், இறந்தது தழுவியதும் ஆகிய உம்மை தொகுத்தலாயிற்று. நோக்குதல் - ஆராய்தல். அறிவிப்பதொரு துணையின்றித் தானே அறியமாட்டாத இயல்புடையது உயிரினது அறிவு. அத்தன்மைத்தாகிய அவ்வறிவு, குறைபாடுடைய கருவிகளைத் துணையாகக் கொண்டு அறியுமிடத்து*

---

1. *திருமுறை - 1. 126. 7.*
2. *சிவஞானசித்தி சுபக்கம் - சூ. 2. 27.*

அறியப்படும் பொருள்களது இயல்பு பொதுவாக விளங்குதலன்றி, உண்மையாக விளங்காது. அதனால், குறைவிலா நிறைவாகிய இறைவனது அருளைத் துணையாகக் கொண்டு அறியுமாயின், அப்பொழுது பொருள்களின் இயல்பு உண்மையாக விளங்கும். இனிப் பிறபொருளைக் காட்டுகின்ற கதிரவனது ஒளியே தன்னையும் காட்டுவதாகும். அல்லது, அவனைப் பிறிதோர் ஒளி காட்டமாட்டாது. ஆகையால், கதிரவன் ஒளியைக் கொண்டே கதிரவனைக் காணுதல் போல, இறைவனது அருளால் எல்லாப் பொருள்களையும் அறிதலுடன், அவனையும் அவன் அருளாலேதான் அறிதல் வேண்டும். அது பற்றியே "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி"[1] என்னும் திருமொழி எழுந்தது. அதனையே இங்கு அம்மையார், "அருளாலே மெய்ப்பொருளையும் நோக்கும் விதியுடையேன்'' என்றார். விதி - முறைமை. இங்ஙனம் எப்பொருளையும் அருளாலே நோக்காது, கருவிகளாலும், நூல்களாலும் விளங்கும் தம் அறிவு கொண்டே பொருள்களை நோக்குவார்க்கு மெய்யுணர்வு தோன்றாது, திரிபுணர்வே தோன்றும் என்க.

இதனையே,

> இப்படியால் இதுவன்றித் தம்மிசைவு கொண்டியலும்,
> துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்.[2]

என்று அருளிச் செய்தார் சேக்கிழார்.

> அருளால் எவையும் பார்என்றான்:- அத்தை
> அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;
> இருளான பொருள்கண்ட தல்லால், - கண்ட
> என்னையும் கண்டிலன் என்னேடி, தோழி[3]

எனத் தாயுமான அடிகளும் கூறினார். 'மெய்ப்பொருளாவது யாது' என முதற்கண் ஆராய்தல், இறைவன் உள் நின்று உணர்த்தும் முறையை நோக்கும் நோக்கினாலும், அவன் ஆசான் மூர்த்தியாய் வந்து அறிவுறுக்கும் அருள்மொழியாலுமாம் என்க. அவ்வாற்றான் நோக்குவார்க்கே உண்மை புலனாவதன்றிப் பிறவாற்றான் நோக்குவார்க்கு உண்மை புலனாகாது என்பதை,

> சாத்திரத்தை யோதினர்க்குச்சற்குருவின் தன்வசன
> மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே - ஆர்த்தகடல்
> தண்ணீர் குடித்தவர்க்குத்தாகம் தணிந்திடுமோ
> தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு

எனத் திருக்களிற்றுப்படியார்[4] வலியுறுத்தி ஓதிற்று.

---

1. திருவாசகம் - சிவபுராணம் - 18
2. பெரிய புராணம் - திருஞானசம்பந்தர் - 71
3. தாயுமானவர் பாடல் - ஆனந்தக் களிப்பு.
4. வெண்பா - 6

52. அருளே, உலகெலாம் ஆள்விப்ப(து) ஈசன்
அருளே, பிறப்பறுப்ப தானால், — அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்; எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ தெனக்கு. 9

53. எனக்கினிய எம்மானை, ஈசனையான் என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன், — எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று. 10

54. ஒன்றே நினைந்திருந்தேன்; ஒன்றே துணிந்தொழிந்தேன்;
ஒன்றேயென் உள்ளத்தின் உள்ளடைத்தேன் — ஒன்றேகாண்
கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கொளிசேர்
அங்கையாற்(கு) ஆளாம் அது. 11

---

*__53. பொழிப்புரை :-__ எனக்கு இனியவனான எம்பெருமானை - எல்லாவுயிர்க்கும் தலைவனை எக்காலத்திலும், மனதுக்கு இனிய வைப்பு நிதியாக வைத்தேன். அவனை எனது தலைவனாகவும் கொண்டேன். அவ்விதமாகக் கொண்ட அவ்வளவிலே பேரின்பத்தை அடைந்தேன். இனி எனக்கு அரியதொரு பொருளும் உண்டோ? இல்லை.*

*__அருஞ்சொற்பொருள் :-__ 'ஈசன் - சிவன்' என்பது முன்னைப் பாட்டின் உரையிலும் கூறப்பட்டது. 'மனத்துக்கு' என்பதில் அத்துச் சாரியை தொகுக்கப்பட்டது. வைப்பு - சேம நிதி. 'அவனையே பிரானாகக் கொண்டேன்' என ஏகாரம் விரித்து, மாறிக் கூட்டுக. பிரான் - தலைவன்; ஆண்டான். 'கொள்வது' என்பது பொதுப்பட அத் தொழிலை உணர்த்தி நின்றது. உம்மை, வினையெச்ச விகுதி. 'எனக்கு அரியது ஒன்று உண்டே' என்க. ஏகாரம், எதிர்மறைப் பொருட்டாய வினா.*

*__54. பொழிப்புரை :-__ அடியேன் ஒரேயொரு பொருளைக் கேட்டுச் சிந்தித்தேன். அவ் ஒரே பொருளைத் தீரத் தெளிந்தேன். அவ்வொன்றையே என் உள்ளத்தில் அடக்கி நிட்டை கூடியிருந்தேன். அந்த ஒரு பொருள் யாதென்றால், கங்கையைத் தாங்கியருளியவனும், சந்திரனாகிய தண்கதிரைத் தலையில் சூடியருளியவனும், பொங்கி எரியும் நெருப்பைத் திருக்கையில் ஏந்தியருளியவனுமாகிய சிவபிரானுக்கு அடிமையாகும் அஃது ஒன்றேயாகும்.*

*__அருஞ்சொற்பொருள் :-__ நினைதல் - ஆராய்தல். துணிதல் - நிச்சயித்தல். 'ஒழி', துணிவுப் பொருண்மை விகுதி. உள்ளடைத்தல் - எப்போதும் மறவாது நினைதல். இறுதியில் 'அவ்வொன்றே' எனச் சுட்டு வருவிக்க. ஏகாரம், எடுத்தோதுப் பொருட்டாய், எழுவாய்த் தன்மை உணர்த்தி நின்றது. காண்,*

55. அதுவே பிரான்ஆமா(று) ஆட்கொள்ளு மாறும்
அதுவே; யினியறிந்தோ மானால் – அதுவே
பனிக்கணங்கு கண்ணியார் ஒண்ணுதலின் மேலோர்
தனிக்கணங்கு வைத்தார் தகவு. 12

---

*முன்னிலையசை. 'அவ்வொன்றே ஆளாம் அது' என முடிக்க. ஒளி - தீ; ஆகுபெயர்.*

***55. பொழிப்புரை :-*** *அதுவே தலைவன் என்று சொல்லுவதற்குரிய இலக்கணம் ஆகும். தாமே வலியத் திருவருளைப் புரிந்து உயிர்களையெல்லாம் தமக்கு ஆளாக்கிக் கொள்ளும் தன்மையும் ஆகும். அஃது இன்னதென்று நாம் அறிவோமானால், அது கார்காலத்தில் மலர்கின்ற கொன்றை மலர் மாலையைத் தலையில் அணிந்தருளி, ஒளிபொருந்திய நெற்றியின்மேல் ஓர் ஒப்பற்ற திருக் கண்ணைப் பொருந்தவைத்தருளிய சிவபிரானுடைய தனிப்பெருஞ்சிறப்பு ஆகும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *முதற்கண் "அதுவே" என்றது, மேல், "உலகெலாம் ஆள்விப்பது" என்றதையும், இடைக்கண், "அதுவே" என்றது "பிறப்பறுப்பது" என்றதனையும் ஏற்புழிக் கோடலால் சுட்டி நின்றன. இனி - இப்பொழுது. 'அதுவே என அறிந்தோமானால்' என்க. 'அதுவே தகவு' என முடிக்க. தகவு - தகுதி; தன்மை, பனிக்கு - பனிக்காலத்திற்கு ஆற்றாமல். அணங்குகின்ற - வாடுகின்ற. கண்ணி - முடிமாலை. 'பனிக் காலத்திற்கு ஆற்றாது வாடுகின்ற' என்றது, கொன்றை மலரைக் குறித்தவாறு. அது கார்காலத்தில் மட்டுமே பூப்பது. "கண்ணி கார்நறுங் கொன்றை"[1] என்ற பழம் பாடலைக் காண்க. நுதல் - நெற்றி. தனிக்கண் - ஒற்றைக் கண். 'அங்கும்' என, இறந்தது தழுவிய எச்ச உம்மை விரிக்க. அல்லாக்கால், "அங்கு" என்பது நின்று வற்றும். இது சிவனது தகைமையைப் புகழ்ந்தவாறு.*

***56. பொழிப்புரை :-*** *பெருமானே! நீர் பெருந்தன்மையுடையீர், ஆனால் மா நாகத்தை மார்பிலே மாலையாகப் புரளவிடுதல் கொடியது ஆகும். கொடிய கொலையைச் செய்தற்காக நெருங்கி ஊர்ந்து செல்லும் அந்நாகம், ஒரு நாள் மார்பிலே பங்கு கொண்ட பார்வதி அம்மையைக் கிட்டி விடுமானால், அந்தோ! பாவம். (கடித்துவிடுமே! என, ஐயனுக்கு அம்மையாதலால், இரங்குகின்றார்).*

***அருஞ்சொற்பொருள் :-*** *தகவு - தகுதி; நடுவு; நடுவு நிலைமை. அஃதாவது, பிறர்க்கு வரும் துன்பத்தையும் தமக்கு வரும் துன்பம் போன்றதாகவே உணரும் தன்மை. "தாம்" என்றது, 'யாரேனும்' என்றபடி. தார் - கொன்றைத்தார். அகலம் - மார்பு. எனவே 'சிவனது மார்பு' என்றதாயிற்று. 'அதனை மலைமகளைச் சாரத் தனிமையில் புகவிடுதல் பொல்லாது' என்க. பொல்லாது - தீங்கு. தீங்கிற்கு ஏதுவா வதனைத் தீங்கு என்றது உபசார வழக்கு. கண்டீர், முன்னிலையசை. 'தீங்கிற்கு*

---

*1. புறம் - கடவுள் வாழ்த்து*

**56.** தகவுடையார் தாமுளரேல் தாரகலஞ் சாரப்
புகவிடுதல் பொல்லாது கண்டீர்; – மிகவடர
ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்
சார்ந்திடுமேலே; பாவந் தான். **13**

**57.** தானே தனிநெஞ்சந் தன்னையுயக் கொள்வான்,
தானே பெருஞ்சேமஞ் செய்யுமால்; – தானேயோர்
பூணாகத் தாற்பொலிந்து, பொங்கழல்சேர் நஞ்சுமிழும்
நீணாகத் தானை நினைந்து. **14**

---

*ஏதுவாவது யாது' எனின், 'அவனது மார்பில் மிகத் தீங்கு செய்ய ஊர்ந்து கொண்டிருக்கின்ற பெரிய பாம்பு அவள் மேலே என்றாவது ஒரு நாள் தாவியே விடும். அதனால், தகவுடையோர்க்கு அது பெண் பாவமாய் முடியும்' என்பதாம். அடர்தல் - தீங்கு செய்தல். தான். அசை.*

*எல்லாம் அறிந்திருந்தும் அம்மையார் பெருமானை நகையாடிப் புகழ்தற் பொருட்டு ஒன்றும் அறியாதார்போல நின்று இங்ஙனம் கூறினால் பத்தி பரவசத்தால், 'பாம்பு முதலியவற்றுள் எதுவும் அவனையும் ஒன்றும் செய்யாது; அவளையும் ஒன்றும் செய்யாது; அவ்விருவரது தன்மையும் உலகர் தன்மையின் முற்றிலும் வேறானதே' என்பது கருத்து. இதுவும் நிந்தாத் துதி.*

*வாள்வரி யதளதாடை; வரிகோ வணத்தர்;*
*மடவாள்த னோடும் உடனாய்*
*நாள்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்தென்*
*உளமே புகுந்த அதனால்*
*கோளரி, உழுவையோடு, கொலையானை, கேழல்*
*கொடுநாக மோடு, கரடி*
*ஆளரி நல்ல நல்ல; அவைநல்ல; நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே.*[1]

*என அருளிச்செய்த மெய்ம்மைத் திருமொழியைக் காண்க.*

***57. பொழிப்புரை :-* நிகரற்ற என் நெஞ்சமானது பொங்குகின்ற தீப் போன்ற நஞ்சைச் சொரியுமாயினும் தன் வளைந்த உடம்பினால் ஓர் அணியாக விளங்குகின்ற நீண்ட பாம்பையுடைய பரமசிவனைத் தியானித்துத் தன்னைத்தானே உய்யச்செய்து கொள்ளும் வண்ணம் தனக்குப் பெரிய பாதுகாவலைத் தானாகவே செய்து கொள்ளும்.**

***அருஞ்சொற்பொருள் :-* 'நீள் நாகத்தானை நினைந்தமையால், தனி நெஞ்சம் தானே தன்னைக் கடைத்தேற்றிக் கொள்ளுதற் பொருட்டுத் தானே தனக்குப்**

---

1. *திருமுறை - 2. 85. 6*

**58.** நினைந்திருந்து வானவர்கள் நீள்மலராற் பாதம்
புனைந்தும் அடிபொருந்த மாட்டார்; – நினைந்திருந்து
மின்செய்வான் செஞ்சடையாய்; வேதியனே என்கின்றேற்(கு)
என்செய்வான் கொல்லோ இனி. **15**

**59.** இனியோநாம் உய்ந்தோம் இறைவன் அருள்சேர்ந்தோம்;
இனியோர் இடரில்லோம், நெஞ்சே;– இனியோர்
வினைக்கடலை யாக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண். **16**

---

*பெருஞ்சேமத்தைச் செய்து கொள்கின்றது' என்க. 'அவனை நினைப்பது ஒன்றே உயிர்க்குப் பாதுகாப்பாவது?' என்பதும், 'எம் நெஞ்சம் அதனைத் தானே தெரிந்து கொண்டு நினைக்கின்றது' என்பதும் கூறியவாறு.*

*தனி நெஞ்சம் - துணையற்ற நெஞ்சம். சேமம் - பாதுகாவல். ஆல், அசை. 'ஆகம் பூணாற் பொலியாநிற்க' என்க. ஆகம் - மார்பு. பூண் - அணிகலம். 'பொலியாநிற்க நீள் நாகத்தை உடையான்' என்றது, 'நீள் நாகமே பூணாக ஆம் பொலிய' என்றபடி.*

***58. பொழிப்புரை :-** வானவர்கள் தியானம் செய்தும், மணம் கமழ்கிற மிகுதியான மலர்களால் அலங்கரித்தும் திருவடிகளைச் சேர மாட்டாமல் அலைகின்றார்கள். ஆதலால், அவ்வாறே தியானித்தும், 'மின்னலைப்போன்ற பெரிய சிவந்த சடையையுடைய பெருமானே! வேதத்தின் பொருளாயிருப்பவனே' என்று துதித்தும் நிற்கும் எனக்குச் சிவபிரான் இனி என்ன செய்வானோ? அறியேன்.*

***அருஞ்சொற்பொருள் :-** நீள் மலர் - மிக்க மலர். புனைந்தும் - அலங்கரித்தும். 'செய்', உவம உருபு. வான் - உயர்ந்த. இனி - இப்பொழுது, "என் செய்வான்" என்பதில், 'செய்தல்' என்னும் பொது வினை, 'தருதல்' என்னும் சிறப்பு வினைப் பொருட்டாய் நின்றது. கொல், அசை.*

***59. பொழிப்புரை :-** நெஞ்சமே! நாம் இறைவன் திருவடிகளைச் சேர்ந்தோம்; அவருக்கு இனியவர் ஆயினோம். உய்தியும் பெற்றோம். இனி ஒரு சிறுதுன்பமும் நமக்கு இல்லை. இனிமேலும் ஒப்பற்ற இரு வினைகளுக்கும் வலிமையை ஏற்படுத்துகிற மீளாப்பிறவி என்னும் ஒலிக்கின்ற கடலினின்றும் நீந்திக் கரையேறி விட்டோம்.*

***அருஞ்சொற்பொருள் :-** 'இறைவன் சிவன்' என்பது மேலேயும்[1] கூறப்பட்டது. "இறைவன் அருள் சேர்ந்தோம்" என்பதை முதலில் வைத்து, அதன்பின், 'ஆதலால்' என்பது வருவிக்க. இனி - இப்பொழுது ஓகாரம், சிறப்பு.*

---

1. *அற்புதத் திருவந்தாதி பாடல் எண் 5.*

60. காண்பார்க்குங் காணலாந் தன்மையனே; கைதொழுது
காண்பார்க்குங் காணலாங்; காதலாற் – காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே; தொல்லுலகுக்
காதியாய் நின்ற அரன். 17

---

*'ஓர் கடல்' என இயையும். வினைக் கடல் உருவகம். வினை, இங்கு ஆகாமியம். கனைத்தல் - ஒலித்தல். கனைக்கடல் - கனைத்தலையுடைய கடல். இனிக் ககர ஒற்றை 'விரித்தல்' எனக் கொண்டு, 'கனை கடல்' என வினைத்தொகையாகவே உரைத்தலும் ஆம். கனைகடல், இனஅடை. காண், முன்னிலையசை. இதனால் சிவன் அவரவர் தன்மைக்கு ஏற்ப நின்று அருள்புரிதல் கூறப்பட்டது.*

***60. பொழிப்புரை :-** பழமையான உலகத்திற்கு மூலகாரணனாக என்றும் நிலைத்து நின்ற சிவபெருமான், (குருவையே சிவமாகக்) காண்பவருக்கும் காணப்படும் இயல்புள்ளவன். (இலிங்கத்தை வழிபட்டுக்) கையால் வணங்கிக் காண்பவருக்கும் காணப்படும் இயல்புள்ளவன்; மேலும், பேரன்புடன் (அடியார்களின் திருவேடத்தில்) காண்பவருக்கும் அவருடைய உள்ளத்தில் ஒளியுருவாய்க் காட்சியளிக்கும் இயல்புள்ளவனும் ஆவான்.*

***அருஞ்சொற்பொருள் :-** "தொல் உலகுக்கு ஆதியாய் நின்ற அரன்" என்பதை முதலிற் கொள்க. ஆதி - முதல்; முதல்வன். முதலில் உள்ள "காண்பார்" என்பது, 'உலகிற்கு முதல்வன் எவனும் இல்லை' என முரணிக் கூறுவாரை. அவர்க்குக் காணலாம் தன்மையாவது, அவரவர் 'மெய்' எனக் கொண்ட பொருள்களாய் நின்று அவர்க்குப் பயன் தரும் தன்மை. 'அவனின்றியாதும் இல்லை' என்பது கருத்து. பின்னர், "தொழுது காண்பார்" என்றதனால், முன்னர் "காண்பார்" என்றது, தொழாதே காண்பாரையாயிற்று. கை தொழுது காண்பார், 'தெய்வம் உண்டு' எனப் பொதுப்பட உணர்ந்து யாதேனும் ஓர் உருவத்தில் கண்டு வழிபடுவார். அவர்க்குக் காண்டல் கூடுவதாவது, அவரவர் வணங்கும் உருவத்தில் நின்று, அவர்க்குப் பயன்தருதல். காதலால் காண்பார், 'உலகிற்கு முதல்வன் உளன்; அம்முதல்வனாம் தன்மையை உடையவன் 'சிவனே' என உணர்ந்து, அதனானே அவன்பால் அன்பு மீதூரப் பெற்றுக் காண விரும்புவோர். 'அவர்கட்குப் புறத்தும் அகத்தும் ஒளியாய் வெளிப்பட்டு நின்று அருளுவான்' என்க. "சிந்தையுளே" என்றே போயினாராயினும், "சோதியாய்" என்றதனால் 'புறத்தும்' என்பதும் பெறப்பட்டது. "சுடர் விட்டுளன் எங்கள் சோதி"[1] என்றதற்கு, "ஆன்ற அங்கிப் புறத்தொளியாய், அன்பில் - ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன்"[2] எனப் பொருள் கூறியமை காண்க. தோன்றும் - தோன்றுவான். ஏகாரம் தேற்றம். அரன் - பாசத்தை அரிப்பவன்.*

---

*1. திருமுறை - 3. 54. 5*

*2. பெரியபுராணம் - திருஞானசம்பந்தர் 835*

61. அரனென்கோ! நான்முகன் என்கோ! அரிய
பரனென்கோ! பண்புணர மாட்டேன்; – முரண் அழியத்
தானவனைப் பாதத் தனிவிரலாற் செற்றானை,
யானவனை, எம்மானை இன்று. 18

62. இன்று நமக்கெளிதே! மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை – என்றும்ஓர்
மூவா மதியானை மூவே முலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு. 19

---

*61. **பொழிப்புரை :-** இராவணனைத் தன் காலின் பெருவிரலால் செருக்கு அடங்க அழுத்தியருளிய எம்பெருமானை, அடியேன் உருத்திரன் என்று கூறுவேனோ? பிரமன் என்று கூறுவேனோ? பிரமனுக்கு மேலானவனான திருமால் என்று கூறுவேனோ? அப்பெருமானின் பண்பு இன்னதென்று உணர வியலாது இருக்கின்றேன். (மூவருமாகி, மூவர்க்குள் நிறைந்து அவரவர் தொழிலைச் செய்வித்தும் அதற்கு அப்பாற்பட்டும் அறிய முடியாமல் நிற்பவர் சிவபெருமான்).*

*அருஞ்சொற்பொருள் :-* *அரன் - உருத்திரன். என்கோ - என்பேனோ. பரன் - பரமபதத்தில் (வைகுந்தத்தில்) இருப்பவன்; மாயோன். 'அரியாம் பரன்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். அப்பாடத்திற்கு. 'பரன் - மேலானவன்' என்க. 'அவன் பண்பு' எனச் சுட்டுப் பெயர். முரண் - வலிமை, தானவன், இராவணன், யான் அவன் - யானாய் நிற்கும் அவன். "முரண் அழிய" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க, ஒருவனாய் நில்லாது, மூவராய் நிற்பவனை 'ஒரு பண்பு உடையவனாக உணர்தல் எங்ஙனம்' என்ற படி ஒருவன் மூவராதல் கூடாமையின் அம்மூன்றும் ஓரோர் காரணம் பற்றிக் கொண்ட கோலமேயாக அவனது உண்மையியல்பு வேறு என்பது கருத்து. அஃது 'ஒரு நாமம், ஓருருவம், ஒன்றும் இன்றி'[1] மெய்யறிவின்பமே உருவாய் இருத்தலாம். எனவே, சிவனது தன்னியல்பும், பொதுவியல்பும் உருவாய் இருத்தலாம். எனவே, சிவனது தன்னியல்பும், பொதுவியல்பும் கூறியவாறாம். பொதுவியல்பு கருணை காரணமாகக் கொள்ளப்படுவது.*

*62. **பொழிப்புரை :-** எக்காலத்திலும் முதுமை அடையாத ஒரு பிறைமதியைச் சூடியவனும் மூவகையான ஏழு உலகங்கள் எங்கும் நிறைந்து நிற்பவனும், திருமாலுக்கும், பிரமனுக்கும் முற்காலத்தில் ஆராய்ந்தறிதற்கு அரியவனுமாகிய சிவபெருமானை எளிதிலே காண்கின்ற அறிவு இன்றைக்கு நமக்கு எளிதிலே கிடைத்திருக்கிறது. இது நாம் பெற்ற பேறல்லவா?*

*அருஞ்சொற்பொருள் :-* *"இன்று நமக்கு எளிதே" என்பதை இறுதியிற் கூட்டி, 'எளிதே - எளிதோ' என உரைக்க. அன்றும் - முயன்று தேடிய அன்றும்.*

*1. திருவாசகம் - திருத்தெள்ளேணம் - 1*

63. அறிவானுந் தானே; அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே; விரிசுடர், பார், ஆகாயம்
அப்பொருளுந் தானே; அவன். 20

64. அவனே இருசுடர், தீ, ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல், காற்(று) ஆவான் – அவனே
இயமான னாய்அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து. 21

---

*எனவே, 'இன்று அளப்பரியனாதல் சொல்ல வேண்டா' என்பதாம். 'என்றும் மூவா ஓர் மதியான்' என்க. மூத்தல் - வளர்தல். "ஓர் மதி" என்றது, 'அதிசயத் திங்கள்' என்றபடி, 'மூத்த ஏழ் உலகங்கள்' என்க. 'மூத்த உலகு' என்பதை, 'தொல்லுலகம்' என்றவாறாகக் கொள்க "நமக்கு" என்றது 'எளியராகிய நமக்கு' என்றவாறாதலைப் படுத்தல் ஓசையாற் கூறிக் காண்க.*

*'சிவனை உள்ளவாறுணரும் அறிவையடைதல் எளிதன்று' என்றபடி.*

***63. பொழிப்புரை :-** இறைவன் எல்லாவற்றையும் தானே அறிவான். ஆன்மாக்களுக்கு அறிவிப்பவனும் அவனே ஆவான். அறிவோடு கூடிநின்று அறிகின்றவனும் அவனே ஆவான். (ஆன்மாவால்) அறியப்படுகின்ற உண்மைப் பொருளும் அவனே ஆவான். விரிந்து பரந்த ஒளிச் சுடர்களாகிய ஞாயிறும் திங்களும் மண் முதல் ஆகாயம் வரை உள்ள எல்லாப் பூதங்களும் அவனே ஆவான்.*

***அருஞ்சொற்பொருள் :-** 'அவன்' என்பதை முதலில் வைத்து, 'அவனது இயல்பைக் கூறுமிடத்து' எனப் பொருள் விரிக்க. அறிவான் - உயிர்களுக்கு அறிவிக்கப்பாலனவற்றை அறிபவன். அறிவிப்பான் - அறிந்தவாறே அறிவிப்பவன். அறிவாய் அறிகின்றான் - அறிவித்தபின் அவ்வாற்றால் உயிர்கள் அறியும் பொழுது தானும் அவற்றது அறிவோடு உடன்நின்று அறிகின்றவன். 'இறைவன்' உயிர்கட்குச் செய்வது காட்டும் உபகாரம் மட்டும் அன்று; காணும் உபகாரமுங்கூட' என்பதை விளக்கச் சிவஞான போதத்துப் பதினொன்றாம் சூத்திரச் சிற்றுரையில் இவ்வடிகள் எடுத்துக்காட்டப்பட்டமை காண்க. அறிகின்ற - அறியப்படுகின்ற. விரி சுடர், கதிரும், மதியும், தீயும். "அப்பொருள்" என்றது, 'மெய்ப்பொருள் அல்லாது வேறு பொருள்' என்றதாம். "அவன்" என்றது, பண்டறி சுட்டாய்ச் சிவனைக் குறித்தது.*

***64. பொழிப்புரை :-** அந்த இறைவனே ஞாயிறு, திங்கள், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் இவற்றுடன் ஆன்மாவும் ஆகி, இங்ஙனம் எட்டு மூர்த்திகளாகி, இவற்றிற்கு வேறாய் அடியார்கள் காணுமாறு அவர் உள்ளத்தில் அறிவு வடிவமாக வந்து நின்றவனும் அவனே ஆவான்.*

65. வந்திதனைக் கொள்வதே யொக்குமிவ் வாளரவின்
சிந்தை யதுதெரிந்து காண்மினோ! – வந்தோர்
இராநீர் இருண்டனைய கண்டத்தீர் எங்கள்
பிரானீர்உம் சென்னிப் பிறை. 22

66. பிறையும், புனலும், அனலரவுஞ் சூடும்
இறைவர் எமக்கிரங்கா ரேனுங் – கறைமிடற்ற
எந்தையார்க்(கு) ஆட்பட்டேம் என்றென் றிருக்குமே
எந்தையா உள்ள மிது. 23

---

***அருஞ்சொற்பொருள் :-*** *இரு சுடர் கதிரும், மதியும். புவி - பிருதிவி; மண், புனல் - நீர். இயமானன் - எசமானன்; உயிர், அட்ட மூர்த்தி, எட்டுரு உடையவன். உம்மை எதிரது தழுவிய எச்சம். இஃது அவனது பொது நிலை. ஞானமயன் - அறிவே வடிவாய் உள்ளவன். இஃதே அவனது உண்மை நிலை. 'உலகுயிர்கட்கு அட்டமூர்த்தியுமாய், வீட்டுயிர்கட்கு ஞானமயனாகி வந்து நின்றானும் ஆவன்' என்க. 'ஆவன்' என்பது சொல்லெச்சம்.*

*சிவனது பொது நிலை, உண்மை நிலை இரண்டையும் கூறியவாறு.*

***65. பொழிப்புரை :-*** *மேகம் திரண்டு இரவுபோல் இருண்டு காணப்படும் கழுத்தை உடையவரே! எங்கள் பெருமானே! உம்முடைய சடை முடிமேல் உள்ள பிறைச்சந்திரனைப் பற்றி விழுங்கி விடும் போலக் காணப்படுகிற இந்தக் கொடிய பாம்பின் நினைப்பை நீரே அறிந்து கொள்வீராக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"வந்தோர்" என்பது முதலாகத் தொடங்கி, 'பிறைக்கண்' என ஏழாவது விரித்து உரைக்க. 'வந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. நீர் - நீர்மை; தன்மை. கொள்வது உட் கொள்வது; விழுங்குவது. 'ஒக்கும் சிந்தை' என இயையும். சிந்தை - எண்ணம். அது, பகுதிப் பொருள் விகுதி. காண்மின் - குறிக்கொண்டு நோக்குமின். ஓகாரம், சிறப்பு. 'அடைக்கலமாக வந்து அடைந்தத் திங்களை நினையாது விட்டு விடாதீர்' என்றபடி.*

*சார்ந்தாரைக் காக்கும் சிவனது இயல்பை அறியாதார் போன்று அறிவித்தவாறு.*

***66. பொழிப்புரை :-*** *எம்முடைய தண்ணளி மிகுந்த இந்த உள்ளமானது "பிறைச் சந்திரனையும் கங்கையாற்றையும், நெருப்புப்போல் நஞ்சைக் கக்கும் பாம்பையும் விரும்பி அணிந்தருளும் பெருமான், எமக்கு இரங்கியருளா விட்டாலும், நச்சுக் கறை பொருந்திய திருநீல கண்டத்தையுடையவராகிய எம் தந்தையார்க்கு அடிமையாகி விட்டோம்" என்றெண்ணிக் கொண்டு எந்நாளும் இன்புற்றிருக்கும்.*

67. இதுவன்றே ஈசன் திருவுருவம் ஆமா(று)
இதுவன்றே என்றனக்(கு)ஓர் சேமம் – இதுவன்றே
மின்னுஞ் சுடருருவாய் மீண்டாயென் சிந்தனைக்கே
இன்னுஞ் சுழல்கின்ற(து) இங்கு. 24

---

***அருஞ்சொற்பொருள் :-*** *அனல் அரவு - அனலுகின்ற; சீறுகின்ற பாம்பு. பிறை முதலிய அடையாளங்களைக் கூறியது. 'இறைவர் சிவபிரான்' என்பது உணர்த்துதற்கு. இனி, அவை அவரது கைம்மாறு கருதாத கருணைக்கும் அடையாளங்கள் ஆதலை உணர்க. அவற்றால், 'அவர்' எமக்கு இரங்காதொழியார்' என்னும் குறிப்பும் தோன்றிற்று. "இரங்காரேனும்" என்பதற்கு, மேல் "இடர்களை யாரேனும்" என்புழி உரைத்தாங் குரைக்க. "கறை மிடற்ற எந்தையார்" என்றது, 'அவர்' என்னும் சுட்டளவாய் நின்றதேனும், அதனாலும் அவரது கருணை மிகுதி குறிக்கப்பட்டதாம். அடுக்குப் பலகாலும் நினைத்தலைக் குறித்தது. இருக்கும் - அமைதியுற்றிருக்கும். 'துள்ளித் துடியாது' என்றபடி.*

*.................... "உன் அருள்நோக்கி,*
*இரைதேர் கொக்கொத்து இரவு பகல்*
*ஏசற்றிருந்தே வேசற்றேன்"*

*"இரங்கும் நமக்கு அம்பலக் கூத்தன்*
*என்றென்று ஏமாந் திருப்பேனை"*

*"நல்கா தொழியான் நமக்கென்று உன்*
*நாமம் பிதற்றி"[1]*

*என்னும் திருமொழிகளைக் காண்க. 'தயா' என்பதில் அகரத்திற்கு ஐகாரம் போலியாய் வந்து, "தையா" என நின்றது. தயா உள்ளம் - தயவை - அருளை விரும்புகின்ற உள்ளம். ''இது'' என்றது, எடுத்தல் ஓசையால், 'பித்துக் கொண்டதாகிய இது' எனப்பொருள் தந்தது. 'உள்ளமாகிய இது, - ஆட்பட்டு விட்டோம்; இனி அவர் செய்வது 'செய்க' - என்று அமைதியுற்றேயிருக்கின்றது என்க.*

***67. பொழிப்புரை :-*** *(என்னுடைய உட்பூசையில் கோடி சூரியப் பிரகாசமுள்ள) மின்னல் போன்ற சுடர் வடிவத்தில் மனத்திலே தோன்றி மறைந்தருளினாய்! அந்தச் சுடர் வடிவம் இப்பொழுதும் என் உள்ளத்திலே சுழன்று கொண்டிருக்கின்றது. ஆகா, இஃதல்லவா ஈசனாகிய உன் உண்மைத் திருவுருவம்! இஃதன்றோ எனக்குக் கிடைத்தற்கரிய பெரிய சேமநிதி!*

---

*1. திருவாசகம் - கோயில் மூத்த திருப்பதிகம் - 5, 7, 10*

**68.** இங்கிருந்து சொல்லுவதென்! எம்பெருமான் எண்ணாதே
எங்கும் பலிதிரியும் எத்திறமும் – பொங்கிரவில்
ஈமவனத் தாடுவதும் என்னுக்கென் றாராய்வோம்
நாமவனைக் காணலுற்ற ஞான்று. **25**

---

***அருஞ்சொற்பொருள் :-*** *"மீண்டு" என்பதை அடுக்கிக் கூறி, 'மீண்டும் மீண்டும்' ஆய்கின்ற என் சிந்தனையில் மின்னும் சுடர் உருவாய் (ப் புகுந்து) இன்னும் சுழல்கின்றதாகிய இது அன்றே ஈசன் இங்குச் செய்வது! அவன் திருவுருவத்தின் இயல்பும் இதுவன்றே! என்றனக்கு ஓர் சேமம் ஆவதும் இது வன்றே!' என இயைத்துரைத்துக் கொள்க.*

*'இடைவிடாது நினைப்பவர் உள்ளத்தையே சிவன் தனக்குக் கோயிலாகப் புகுந்து, ஒளியுருவாய் விளங்குவான்; அங்ஙனம் அவன் விளங்கப் பெறுதலே உயிர்க்கு ஆக்கமாவது' என்பதாம். "சிந்தனைக்கு" என்பது உருபு மயக்கம்.*

***68. பொழிப்புரை :-*** *(நம் தவக்குறையால் அவன் தன்னைக் காட்டப் பெறாத பெத்த நிலையில்) இங்கு இருந்து கொண்டு நாம் பலவாறு சொல்வதால் பயன் உண்டோ? எம்பெருமான் (தன் பெருமையையும் உயிர்களின் சிறுமையையும்) சிறிதும் கருதாமல் எல்லாவிடத்திலும் சென்று பிச்சையேற்றுத் திரியும் பெருமை களையும், சுடுகாட்டில் ஆடுகின்றதையும் பற்றி நாம் அவனைத் தரிசிக்கும் பேறு கிட்டும் முத்தி நிலையிலே ஆராய்வோம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'எங்கள் பெருமான், எங்கும் சென்று பிச்சை யேற்பதையும், இரவிலே சுடுகாட்டில் ஆடுவதையும், 'இவை இழிவல்லவோ' என்று சிறிதும் எண்ணிப் பாராமலே செய்தற்குரிய காரணத்தை நாம் இங்கேயிருந்து கொண்டு என்ன என்று சொல்ல முடியும்? முடியாது. ஆகவே, நாம் அவனை நேரிற் காணமுடிந்த பொழுது அவனிடமே, 'இவை எதற்கு' என்று கேட்டுத் தெரிவோம். (அது வரையில் சும்மா இருப்போம்) என்பது இப்பாட்டின் பொருள். 'இறைவனது செயலின் இரகசியங்களை உயிர்கள் அறிதல் அரிது. அதனால் சிலர் அவனை அவை பற்றி இகழவே செய்வர். அவர்களோடு நாம் சேர்ந்து விடுதல் கூடாது; தனியே அமைந்திருத்தலே தக்கது' என்பது குறிப்பு. பொங்குதல் - மிகுதல். அதற்கு 'இருள்' என்னும் வினைமுதல் வருவிக்க. ஈமம் - பிணஞ்சுடும் விறகு. 'பலி திரிதல்', உலகத்தைப் பற்றி நிற்கும் உயிர்கள் அப்பற்றினை விடுதற் பொருட்டு என்பதும், 'ஈம வனமாவது உலகம் முற்றும் ஒடுங்கிய நிலை' என்பதும், 'அங்கு இரவில் ஆடுதல்' என்பது, 'யாதொன்றும் இல்லாது மறைந்த அந்தக் காலத்தில், உலகத்தை மீளத் தோற்றுவதற்கு ஆவனவற்றைச் செய்தலாகிய சூக்கும நடனம்' என்பதும் ஆகிய உண்மைகளை அறிந்தோர் அறிவர் என்பதும் கருத்து.*

***69. பொழிப்புரை :-*** *நஞ்சுக்கறை பொருந்திய கழுத்தினையுடைய*

**69.** ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன
போன்ற கறைமிடற்றான் பொன்மார்பின் – ஞான்றெங்கும்
மிக்கயலே தோன்ற விளங்கி மிளிருமே
அக்கயலே வைத்த அரவு. **26**

**70.** அரவமொன்(று) ஆகத்து நீநயந்து பூணேல்;
பரவித் தொழுதிரந்தோம் பன்னாள்; முரணழிய
ஒன்னாதார் மூவெயிலும் ஓரம்பால் எய்தானே
பொன்னாரம் மற்றொன்று பூண். **27**

---

*சிவபெருமானுடைய அழகிய மார்பிலே, சுருள் சுருளாகத் தொங்கும் சடைகள், பொன்னிலே கீறிய கீற்றுக்கள் மின்னுவன போலத் தோன்ற, எலும்பு மாலைகளின் பக்கத்தில் அணிந்து வைத்துள்ள பாம்புகள் மிகுதியாகத் தொங்கிக் கொண்டு விளக்கமாகப் புரளுகின்றன.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"கறை மிடற்றான்" என்பதை முதலிற் கொள்க. ஞான்ற - நான்ற; தொங்கிய. குழல் - குழல்போலப் புரிசெய்த. வரை - கீற்று; என்றது கம்பியை. போல், அசை. போன்ற - போன்றன. "பொன் மார்பு" என்பதில் பொன் - அழகு. அக்கு - எலும்பு மாலை, "அதன் அயலிலே வைத்த அரவு (பாம்பு) அயல் (புறத்தில்) ஏனை எல்லாவற்றிலும் மிக்குத் தோன்றும் முறையில் எங்கும் ஞான்று விளங்கி மிளிரும்" என்க. விளங்கி மிளிர்தல், ஒரு பொருட் பன்மொழி. இது பெருமானது திருவுருவத்தைப் புகழ்ந்தவாறு.*

***70. பொழிப்புரை :-*** *பகைவருடைய முப்புரங்களையும் வலிமை கெடும்படி ஒரே அம்பினால் எய்த சிவபெருமானே! பாம்பு ஒன்றை உன் திருமார்பில் நீ விரும்பி அணியவேண்டாம். பல நாட்களாக இப்படித்தொழுது உன்னிடம் கேட்டுக்கொண்டோம். பாம்புக்குப் பதில் பொன்மாலை யொன்றைச் சூடிக்கொள்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *ஆகம் - உடம்பு. 'ஒன்றும்' என முற்றும்மை விரித்து. 'எதனைப் பூண்டாலும் பாம்பு ஒன்றை மட்டும் பூணாதே' என்க. 'பாம்பொடு பழகேல்'[1] என்பார் பெரியோர் ஆதலின், அஃது என்றாயினும் தீமையாகவே முடியும் என்று இரக்கின்றோம் என்பதாம். "ஒன்று" என்பது இனங்குறித்து நின்றது. நயந்து - விரும்பி. என்றதனால், 'சிவன் பாம்பை விரும்புகின்றான்' என்பது பெறப்படும். பரவுதல் - துதித்தல். முரண் - வலிமை. ஒன்னாதார் - பகைவர். "மற்றொன்று" என்பதும் மற்றோர் இனத்தையே குறித்தது. "பொன்னாரம்" என்பது, ஒருபொருள் குறித்த வேறு பெயராய் வந்தது. இஃது அன்பே காரணமாக, இறைவனது ஆற்றலை மறந்து, அவனுக்கு வரும் தீங்கிற்கு அஞ்சிக் கூறிய கூற்றாய் அமைந்தது. எனினும், 'மூவெயிலும் ஓர் அம்பால் எய்தான்' என அவனது அளவிலாற்றல் குறிக்கப்பட்டது.*

---

*1. ஆத்தி சூடி.*

71. பூணாக வொன்று புனைந்தொன்று பொங்கதளின்
நாணாக மேல்மிளிர நன்கமைத்துக் – கோள்நாகம்
பொன்முடிமேற் சூடுவது மெல்லாம் பொறியிலியேற்
கென்முடிவ தாக இவர். 28

72. இவரைப் பொருளுணர மாட்டாதார் எல்லாம்
இவரை யிகழ்வதே கண்டீர்; – இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி, என்பணிந்த
பேய்க்கோலங் கண்டார் பிறர். 29

---

***71. பொழிப்புரை :-*** *எம்பெருமான் ஒரு பாம்பை அணிகலமாக அணிந்து, மற்றொரு பாம்பை, இடுப்பிற் கட்டிய புலித்தோலின் மேல் அரைக் கச்சையாக இறுகக்கட்டி, கொல்லுங் குணமுடைய இன்னொரு பாம்பைத் தலைமேற் சூடிக் கொள்வதுமாகிய இவை எல்லாம் நல்வினை இல்லாத எனக்கு, என்ன தீங்கைத் தருவதற்கோ? அறியேன். (அம்மையார், தாய் நிலையிலிருந்து இரங்கிக் கூறுவது).*

***அருஞ்சொற்பொருள் :-*** *“இவர்” என்றது இறைவரை அண்மையில் வைத்துச் சுட்டியது. இதன் பின், “கோள் நாகம்” என்பதைக் கூட்டி, இரண்டையும் முதலில் வைத்து, ‘ஒன்று பூண் ஆகப் புனைந்து, ஒன்று அதளின்மேல் மிளிர நாண் ஆக நன்கு அமைத்து, (ஒன்று) முடிமேல் சூடுவதும் ஆகிய இவையெல்லாம் பொறியிலியேற்கு என முடிவதாக’ என இயைத்துப் பொருள் கொள்க. கோள் - கொடுமை. பூண் - அணிகலம். பொங்கு - அழகு மிகுந்த. அதள் - புலித்தோல்; இஃது உடுக்கையாக உடுத்தப்பட்டது. நாண், அரைநாண், “பொறியிலியேற்கு” எனத் தம்மையே குறித்தாராயினும், ‘தம் போலியர்க்கு’ என்றலே கருத்து என்க. பொன் முடி - பொன் போலும் முடி; சடைமுடி. பொறி - அறிவு. என் - என்ன பொருள். முடிவதாக - முடிதற் பொருட்டு. “ஒன்று” என்பதை, பொன்முடிக்கும் கூட்டுக. அஃதாவது, ‘விளங்குதற் பொருட்டு’ என்றதாம். ‘யான் அன்புடையேன்; ஆயினும் அறிவிலேன்; ஆகவே, இவர் செய்வன எல்லாம் என் போலியர்க்கு என்ன விளங்குதற்பொருட்டு’ என்றவாறு. எனவே, **‘ஆன்றமைந்தடங்கிய அறிவர்க்கே இவர் செய்வன விளங்கும்’** என்பதாம்.*

*இவ்வாறு அம்மையார் கூறுவன எல்லாம் நம்மனோரை முன்னிட்டுக் கொண்டேயாம்.*

***72. பொழிப்புரை :-*** *செந்தாமரைப் பூப்போலும் சிவந்த திருமேனியிலே சாம்பலைப் பூசி, எலும்பை மாலையாக அணிந்த இவருடைய பேய்க்கோலத்தையே நுண்ணறிவு இல்லாதவர் கண்டார்கள். (பொடியைப் பூசுவதால் என்றும் அழிவில்லாதவர் என்றும், பேய்க்கோலத்தால் ஆனந்தம் தருபவர் என்றும் காணும்) உண்மைப் பொருளை அறியாத அவர்களெல்லாம் இவரை இகழ்கின்றார்களே! உண்மையுணர்ந்தோர் புகழ்ந்து வணங்குவர்.*

73. பிறரறிய லாகாப் பெருமையருந் தாமே;
பிறரறியும் பேருணர்வுந் தாமே; – பிறருடைய
என்பே அணிந்திரவில் தீயாடும் எம்மானார்
வன்பேயும் தாமும் மகிழ்ந்து. 30

74. மகிழ்தி மடநெஞ்சே மானுடரில் நீயும்
திகழ்தி பெருஞ்சேமஞ் சேர்ந்தாய் – இகழாதே
யாரென்பே யேனும் அணிந்துழல்வார்க்(கு) ஆட்பட்ட
பேரன்பே இன்னும் பெருக்கு. 31

---

***அருஞ்சொற்பொருள் :-*** *பொருள் - மெய்ப்பொருள். 'பொருளாக' என ஆக்கம் விரிக்க. 'இகழ்வதையே செய்வர்' என ஒருசொல் வருவித்து முடிக்க. கண்டீர், முன்னிலையசை. 'இதுவே முறையாதலின், இவரது பேய்க் கோலத்தைக் கண்டு இகழ்பவர் எல்லாம், புறக்கோலத்தை மட்டுமே கண்டு, உண்மையை உணராத பிறரேயாவர்' என்க. முற்பகுதி பொது முறைமையாயும், பிற்பகுதி சிறப்பு முறைமையாயும் நின்றன. பூக்கோல மேனி - பொலிவு வாய்ந்த அழகிய மேனி. 'மேனிமேல்' என ஏழாவது விரிக்க. பொடி - சாம்பல். 'பூக்கோல மேனிமேல் சாம்பலைப் பூசுகின்றார்' என்பதாம். என்பு - எலும்பு. பேய்க்கோலம் பேய் போலும் கோலம், 'கோலம் கண்டார்' என்பது, 'கோலத்தை மட்டுமே கண்டவர்' என்னும் பொருளது. "பிறர்" என்றது, 'உண்மை யுணராதவர்' என்றபடி. கண்டார், எழுவாய்; பிறர், பயனிலை.*

***73. பொழிப்புரை :-*** *(அருட்கண்ணால் காட்டப் பெறாத) பிறர் எவராலும் அறியப்படாத பெருமை யுடையவரும் தாமே; மேலும் பதிஞானம் பெற்ற அடியார்களால் அறியப் பெறுதற்குரிய பேரறிவின் வடிவம் உள்ளவரும் அவரே யாவர். (அவர் யாவர் எனில்; தம்முடனே மூவர் என்றெண்ணி ஏமாந்து காலாந்தரத்தில் கழிந்தவராகிய பிரம விட்டுணுக்களுடைய எலும்பை அணிந்து, இரவிலே தீயில் நின்று கொண்டு கொடிய பேயும் தாமுமாக கூத்தாடுகின்ற சிவ பெருமானே யாவர்).*

***அருஞ்சொற்பொருள் :-*** *'பிறருடைய என்பே அணிந்து; இரவில் பேயும் தாமுமாய் மகிழ்ந்து தீயாடும் எம்மானார்' என எடுத்துக் கொண்டு உரைக்க. பிறர், முன்னைப் பாட்டிற் கூறிய பிறர், பேருணர்வு - மெய்யுணர்வு என்றது, 'அவர் மெய்யை உணர்ந்ததாக உணரும் உணர்வு' என்றபடி, "தாமே" என்பன, 'பிறர் ஒருவரும் இல்லை' என்னும் பொருளவாய் நின்றன.*

***74. பொழிப்புரை :-*** *மதியற்ற மனமே! நீ மகிழ்ச்சியுறுவாயாக! மக்களுக் குள்ளே நீ சிறந்து விளங்குகின்றாய்! "இறந்தார் எவரது எலும்பே என்றாலும் அதனை அணிந்து திரிபவன் சிவன்" என்று இகழாதே. அவனுக்கு அடிமைப்பட்ட பேரன்பை மேன்மேலும் பெருக்குவாயாக.*

75. பெருகொளிய செஞ்சடைமேற் பிள்ளைப் பிறையின்
ஒருகதிரே போந்தொழுகிற் றொக்கும்; – தெரியின்
முதற்கண்ணான் முப்புரங்கள் அன்றெரித்தான் மூவா
நுதற்கண்ணான் தன்மார்பின் நூல். 32

76. நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக;
நீல மணிமிடற்றான் நீர்மையே – மேலுலந்த(து)
எக்கோலத்(து) எவ்வுருவாய்? எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் அவ்வுருவே ஆம். 33

---

***அருஞ்சொற்பொருள் :-*** *மடம் - அறியாமை. 'மடநெஞ்சே, யார் என்பே யேனும் இகழாதே அணிந்து உழல்வார்க்கு ஆட்பட்டமையால்' என முதலில் எடுத்துக் கொண்டு, பின்பு 'அங்ஙனம் ஆட்பட்ட பேரன்பையே இன்னும் பெருக்கு' என முடிக்க. 'பெருக்கினால் இன்னும் பெருநலம் பெறுவாய்' என்பது குறிப்பெச்சம். மகிழ்தி - மகிழ்கின்றாய்; மானுடரில் நீயும் ஒருவனாய்த் திகழ்கின்றாய். சேமம், பாதுகாவல். 'என்பே அணிந்து உழல்வார்' என்றதும் நிந்தாத் துதி. 'அவர்க்கு ஆட்படுதலே மானுடப் பிறப்பின் பயன்' என்றபடி.*

***75. பொழிப்புரை :-*** *ஆராயுமிடத்து, (சங்காரகாரணன் ஆதலால்) எல்லாத் தேவர்கட்கும் முன்னிடம் பெற்றவனும், முன்னொரு காலத்திலே திரிபுரங்களை எரித்தவனும், என்றும் அழியாத நெற்றிக் கண்ணையுடையவனுமாகிய சிவபெருமானது மார்பில் அணிந்த முப்புரி நூல், அவனுடைய பேரொளி பொருந்திய சிவந்த சடைமேல் அணிந்த இளம் பிறைச் சந்திரனுடைய கதிர்களிலே ஒன்று இறங்கி ஒழுகியது போலக் காணப்படுகின்றது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *தெரியின் முதற்கண்ணான் - அறிவு வாய்க்கப் பெற்று ஆராய்ந்தால் முதலிடத்தில் வைத்துப் போற்றுதற்கு உரியவன்; 'இல்லையேல் இகழப்படுவான்' என்பதாம். இது முதலாகத் தொடங்கியுரைக்க. "நுதற் கண்ணான்" என்பது, 'சிவன்' என்னும் பெயரளவாய் நின்றது. மூவா - கெடாத; இஃது இனம் இல் அடை. ஒளிய - ஒளியையுடைய. கதிர் - கலை.*

***76. பொழிப்புரை :-*** *தாம் தாம் கற்ற நூலால் தெரிந்து கொண்டதற் கேற்றவாறு, தாம் கண்டதே காட்சியென்று பேசி, அன்பின் திறத்தில் நுழையாதவர் (எப்படி வேண்டுமானாலும்) பேசித் திரிவாராக. திருநீலகண்டனாகிய எம்பெருமானது பெருமையே மிக மேலோங்கி நிற்பதாகும். எந்தத் திருக்கோலத்திலே எந்தத் திருவுருவத்திலே எந்தவிதமான தவத்தினைச் செய்து முயன்றாலும், அவ்வடிவத்திலே, அவ்வெண்ணத்திலே வந்து அப்பெருமான் அருள் புரிவான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"நீர்மையே" என்னும் தேற்றேகாரத்தைப் பிரித்து,*

77. ஆமா றறியாவே வல்வினைகள்; அந்தரத்தே
நாம் ஆளென்(று) ஏத்தார் நகர்மூன்றும் – வேமா(று)
ஒருகணையாற் செற்றானை உள்ளத்தால் உள்ளி
அருகணையா தாரை யடும். **34**

---

*"ஆம்" என்பதனுடன் கூட்டி, இரண்டாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. 'உலந்த' என்பது பாடம் அன்று. உவந்தது - விரும்பியது; 'எக்கோலத்தையுடைய எவ்வுருவினிடத்து' என்க. வாய், ஏழுனுருபு. கோலம் - ஆடை அணி முதலியன. உருவு - வடிவம். 'அவ்வுருவை நோக்கி' என இசையெச்சம் வருவிக்க. 'ஆமே' என்னும் முற்று, சொல்லுவார் குறிப்பால், 'ஆதலே' என்னும் தொழிற்பெயர்ப் பொருட்டாய் நின்றது. இதன்பின் "நுழைவு இலாதார்" - என்பதைக் கூட்டி இதனை அறிந்து இவனை அடைய மாட்டாதார் திரிக என முடிக்க. நூல், தாம் தாம் அறிந்த நூல். அவை இரணிய கருப்பம், பாஞ்சராத்திரம் முதலியன. அறிவு - அறிந்த பொருள். 'தனக்கென ஓர் வடிவம் இல்லாது, கருதுவார் கருதும் வடிவமாய் நின்று அவர்கட்கு அருளுதலே இவனது இயல்பு' என்பதை யறியாதார், 'பொடி பூசி, எலும்பணிந்து, சுடலையாடுதலையே இவனது உண்மை யியல்பாக மயங்கித் தாம் தாம் அறிந்தவாறு பேசுவர்; அது பற்றி எமக்கு வருவ தோர் இழுக்கில்லை' என்றபடி.*

*ஆர்உருவ உள்குவார் உள்ளத்துள்ளே*
*அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்*[1]

*சுருதிவா னவனாம்; திருநெடு மாலாம்;*
*சுந்தர விசும்பில்இந் திரனாம்;*
*பருதிவா னவனாம்; படர்சடை முக்கட்*
*பகவனாம்; அகவுயிர்க் கமுதாம்;*
*எருதுவா கனனாம்; எயில்கள்மூன் றெரித்த*
*ஏறுசே வகனுமாம்; பின்னும்*
*கருதுவார் கருதும் பொருளுமாம் கங்கை*
*கொண்டசோ ளேச்சரத் தானே*[2].

*என்னும் திருமொழிகளைக் காண்க.*

***77. பொழிப்புரை :-** ஆகாயத்திலே பறந்து திரிந்து, ''நாம் சிவபெருமானுடைய அடிமைகள்'' என்று ஏத்தி வழிபடாதவராகிய திரிபுராதிகளின் மதில்கள் மூன்றையும் வெந்து ஒழியுமாறு ஒரே அம்பினால் அழித்த சிவபெருமானை மனத்தால் எண்ணி அருகே சென்று வணங்காதவரைக் கொடிய தீவினைகள், தாமே அறியாவாயினும், வினைப்பயனை ஊட்டும் இறைவனது ஆணையால் உருத்து வந்து உறுத்தி வருத்தும்.*

---

*1. திருமுறை - 6. 18. 11*

*2. திருமுறை - 9. 13. 5*

**78.** அடுங்கண்டாய் வெண்மதியென்(று) அஞ்சி இருள்போந்
திடங்கொண் டிருக்கின்ற தொக்கும் – படங்கொள்
அணிமிடற்ற பேழ்வாய் அரவசைத்தான் கோல
மணிமிடற்றின் உள்ள மறு. **35**

---

***அருஞ்சொற்பொருள் :-*** *'வல்வினைகள், அணையாதாரை அடும்; (அணைந்தார்பால்) ஆமாற்றை யறியா' என இயைத்து முடிக்க. 'அணைந்தார்பால்' என்பது சொல்லெச்சம். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்"[1] என்பதில், 'சேர்ந்தார்' என்பது போல. அந்தரம் - ஆகாயம். 'அந்தரத்தே வேமாறு' என இயையும். செற்றான் - அழித்தான். 'அருகாக' என ஆக்கம் வருவிக்க. அடும் - வருத்தும்.*

***78. பொழிப்புரை :-*** *படம் பொருந்திய அழகிய கழுத்தினையும் பிளந்த வாயினையும் உடைய பாம்பை அரையிற் கட்டியருளிய எம் பெருமானுடைய அழகிய நீலமணி போன்ற திருக்கழுத்தில் உள்ள கறையானது வெள்ளிய பிறைச்சந்திரன் தன்னை அழிக்கும் என்று அஞ்சி, இருள் திரண்டுவந்து, தனக்குப் பாதுகாப்பான இடம் இதுவே என்று தெரிந்து குடிகொண்டிருத்தலைப் போன்றிருக்கின்றது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'மறு, இருள், மதி அடும் என்று அஞ்சிப் போந்து இடம் கொண்டு இருக்கின்றதை ஒக்கும்' என இயைத்துக் கொள்க. 'கண்டாய்' முன்னிலையசை. அடும் - கொல்லும். 'படங் கொள் அரவு, அணி மிடற்ற அரவு, பேழ்வாய் அரவு' எனத் தனித்தனி இயைக்க. பாம்பு படம் எடுத்து ஆடும் பொழுது அதன் கழுத்து அழகாய் இருத்தல் பற்றி. "அணிமிடற்ற அரவு" எனப்பட்டது. பேழ்வாய் - பெரிய வாய்; எலிகளை விழுங்கும் வாய். அசைத்தான் - இறுகக் கட்டினவன். கோலம் - அழகு. மணி மிடறு - நீல மணிபோலும் கழுத்து. மறு - கறை. இருளுக்கு வந்து இடம் கொள்ளுதல் இன்மையால் இல்பொருள் உவமையும், வந்தமைக்கு ஒரு காரணம் கற்பித்தமையால் தற்குறிப்பேற்றமும் கூடி வந்தமையின் இது தற்குறிப்பேற்ற உவமையணி. இதனால் இறைவனது கண்டத்தைப் புகழ்ந்தவாறு.*

***79. பொழிப்புரை :-*** *திருநீலகண்டப் பெருமானே! உமது நீண்ட சடை மேலுள்ள பாம்பானது, தன்னைக் கொன்றுவிடும் என்று, தேய்ந்து வருந்துகின்றது பிறைச்சந்திரன் அந்தோ! இப்படி துன்புறுகின்ற அப் பிறைச்சந்திரன் தளர்ச்சியுறும்படி, அப்பாம்பானது மேலும் உமது முடியின்மேல் ஓடித் துரத்துமானால், அஃது அஞ்சி வளர முடியுமோ?.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"நாகம், வானத்திலும் தளர மீது ஓடுமேல், 'வார்சடைமேல் தெறும்' என்று அஞ்சி பிள்ளை மதி வளருமோ! அதனால்தான்,*

---

*1. திருக்குறள் - 10.*

79. மறுவடைய கண்டத்தீர் வார்சடைமேல் நாகம்
தெறுமென்று தேய்ந்துழலும் ஆ!ஆ! – உறுவான்
தளரமீ தோடுமேல் தான்அதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி. 36

80. மதியா அடலவுணர் மாமதில்மூன் றட்ட
மதியார் வளர்சடையி னானை – மதியால்
என்பாக்கை யாலிகழா(து) ஏத்துவரேல் இவ்வுலகில்
என்பாக்கை யாய்ப்பிறவார் ஈண்டு. 37

---

*ஆ!, ஆ! தேய்ந்து உழலும்" என இயைத்துப் பொருள் கொள்க. 'நாகம் வானத்தில் மதியை விழுங்குதல் யாவரும் அறிந்தது' என்பது கருத்து. 'நிறைவு பெற்றால், பெரிய வானத்திலே விழுங்குகின்ற பாம்பு, சிறிய சடைக்குள்ளே விழுங்குதல் எளிதன்றோ' என்பதாம். "வான்" என்பதில் ஏழனுருபும், உயர்வு சிறப்பும்மையும் விரிக்க. "அஞ்சி" என்பது ஓகாரத்தால் பெறப்பட்ட எதிர்மறையுடன் முடிந்தது. "பிள்ளை மதி நும் ஆணையால் வளராதிருக்கவில்லை; பாம்பிற்கு அஞ்சியே வளராதிருக்கின்றது" என மறுத்தவாறு. ஆ! ஆ! - வியப்பிடைச் சொல் அடுக்கு. இதுவும் பாம்பையும், மதியையும் பகை தீர்த்து உடன் வைத்திருப்பதைப் பழிப்பது போலப் புகழ்ந்தது.*

***80. பொழிப்புரை :-** தன்னை மதியாத, வலிமை மிக்க அசுரருடைய பெரிய மதில்கள் மூன்றையும் அழித்தருளிய, சந்திரன் வளர்கின்ற சடையையுடைய பரமசிவனை, உண்மையுணர்வாலே உணர்ந்து, "எலும்பு மாலை அணிவோன்" என்று இகழாமல் வழிபடுவோர், மீண்டும் இவ்வுலகத்தில் வந்து எலும்புடன் கூடிய உடம்பிலே புகமாட்டார். (பிறவா யாக்கைப் பெரியோனை வழிபடுவோர் மீண்டும் பிறவாத பேரின்ப முத்தி எய்துவர்).*

***அருஞ்சொற்பொருள் :-** "மதியா அவுணர்" என்க. அடல் - வலிமை. மதி இரண்டில் முன்னது அறிவு; பின்னது திங்கள். 'இகழாது, மதியால் ஏத்துவரேல்' என இயைக்க. என்பு ஆக்கையால் - எலும்பை அணிந்துள்ள மேனியைப் பற்றி (இகழாது). ஆதல் - அதுவாய்க் கலத்தல். "இவ்வுலகில்" என்றது, 'என்பு ஆக்கைகளாய்ப் பிறப்பதற்கே இடமாய் உள்ள இவ்வுலகு' என இதன் இழிவு கூறியவாறு.*

***81. பொழிப்புரை :-** அணியப் பெற்ற மாலையைப் போல ஊர்ந்து ஏறிச் செல்கின்ற பாம்பையுடைய பரமசிவனுடைய திருமார்பிலே செழித்து விளங்குகின்ற கூர்மை மிகுந்த கரிய பன்றிக் கொம்பானது, மிக்க ஒளி பொருந்திய ஆகாயத்திலே எழுகின்ற சந்திரனைக் கொடிய பாம்பு தீண்டியதனால், அது வளர்ச்சி குன்றிச் சிறுத்தது போன்றிருக்கின்றது.*

81. ஈண்டொளிசேர் வானத் தெழுமதியை வாளரவந்
தீண்டச் சிறுகியதே போலாதே ? – பூண்டதோர்
தாரேறு பாம்புடையான் மார்பில் தழைத்திலங்கு
கூரேறு காரேனக் கொம்பு. 38

82. கொம்பினையோர் பாகத்துக் கொண்ட குழகன்தன்
அம்பவள மேனி அதுமுன்னஞ் – செம்பொன்
அணிவரையே போலும் பொடி அணிந்தால் வெள்ளி
மணிவரையே போலும் மறித்து. 39

---

***அருஞ்சொற்பொருள் :-*** *"பூண்டது ஓர்" என்பது முதலாகத் தொடங்கி யுரைக்க. 'கொம்பு, போலாதே' என முடியும். ஏகாரம், எதிர்மறை வினாப் பொருட்டாய் உடன்பாட்டுப் பொருளைத் தந்தது. தார் - மார்பில் அணியும் மாலை, 'தாராக ஏறிய பாம்பு' என்க. கூர் ஏறு - கூர்மை பொருந்திய. ஏனம் - பன்றி, திருமால் கொண்ட வராகவதாரத்தின் இறுதியில் அதனை அழித்து, அதன் கொம்பைச் சிவபிரான் மாலையில் கோத்தணிந்தமை புராணங்களில் கூறப்படுவது. "முற்றல் ஆமை, இளநாகமோடு, ஏன முளைக்கொம்பு அவை பூண்டு" என்றமையும் காண்க. இறைவன் மார்பு வானத்திற்கும், அதில் அணியப்பட்ட பாம்பு இராகுவிற்கும், ஏனக் கொம்பு திங்களுக்கும் உவமையாகக் கூறப்பட்டன. திங்கள் சிறுகியதற்குக் காரணம் கற்பித்தது தற்குறிப்பேற்றம். எனவே, இது தற்குறிப்பேற்ற உவமையணியாதல் அறிக. இங்ஙனம் இறைவனது, மார்பணியைப் புகழ்ந்தவாறு.*

***82. பொழிப்புரை :-*** *பூங்கொம்பு போன்ற உமையம்மையை ஒரு பாகத்திலே கொண்டருளிய அழகன் ஆகிய சிவபெருமானது அழகிய பவளம் போன்ற திருமேனியாகிய அது, திருவெண்ணீறு அணியப் பெறுதற்கு முன்பு, அழகிய சிவந்த பொன்மாலையாகிய மகா மேருவைப் போன்றும், திருவெண்ணீறு அணியப் பெற்றதும், வெள்ளிமலையாகிய அழகிய திருக்கயிலாயத்தைப் போன்றும் விளங்கும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *கொம்பு, பூங்கொம்பு. அஃது உவம ஆகுபெயராய், உமாதேவியைக் குறித்தது. குழகன் - அழகன். தன், சாரியை. அம், அணி, மணி இவை அழகைக் குறிக்கும் பெயர்கள். பவள மேனி, உவமத்தொகை. அது, பகுதிப் பொருள் விகுதி. வரை - மலை, பொடி - நீறு, மறித்து - மீள, 'மேனி, முன்னம் செம்பொன் வரையேபோலும்; பின்பு வெள்ளி வரையே போலும்' என்க. 'இஃதோர் அதிசயம்' என்பது குறிப்பெச்சம். இறைவனது திருமேனியின் இயற்கை யழகையும், செயற்கை யழகையும் புகழ்ந்தவாறு.*

***83. பொழிப்புரை :-*** *அறிவில்லாத ஏ நெஞ்சமே! நீ மீண்டும் மீண்டும் திருத் தொண்டர்களுடைய திருவடியைக் குறிக்கோளாகக் கொண்டு வாயார வாழ்த்தித்*

83. மறித்து மடநெஞ்சே வாயாலுஞ் சொல்லிக்
குறித்துத் தொழுந்தொண்டர் பாதங் – குறித்தொருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்(டு)
உள்ளாதார் கூட்டம் ஒருவு. 40

84. ஒருபால் உலகளந்த மாலவனாம்; மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால், – இருபாலும்
நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோமால்
நின்னுருவோ, மின்னுருவோ ? நேர்ந்து. 41

---

*தொழுவாயாக! மேலும் வேறெவர் கருத்திலும் பற்றாத பிறைச் சந்திரனைத் தலை மாலையாய் அணிந்த சிவபெருமானிடம் நினைப்பு உறாதவருடைய கூட்டத்தை விட்டு நீங்கி விடுவாயாக!*

***அருஞ்சொற்பொருள் :-*** *'நெஞ்சே, தொண்டர் பாவத்தைச் சேர்; அல்லாதார் கூட்டத்தை நீக்கு' என்க. 'முன்னே நெஞ்சால் நினைத்து, மீள வாயாலும் வாழ்த்திப் பின் மெய்யாலும் வணங்குகின்ற தொண்டர்' - என்க. 'முப்பொறிகளாலும் தொண்டு செய்பவர்' என்றபடி. உம்மை, இறந்ததையும், எதிரதையும் தழுவிநின்றது. 'குறித்து' என்பது, முன்னர்க் காணுதலாகிய காரியத்தையும், பின்னர்ச் சேர்தலாகிய காரியத்தையும் குறித்தது. ஒருவர் கொள்ளாத திங்கள் - சிறிதாதலால் யாரும் விரும்பாத பிறை. 'எவரும் விரும்பாதன எவையோ, அவையே எங்கள் பெருமானால் விரும்பப்படுவன' என்பதாம். 'இதனால், இவன் ஏனையோரினின்றும் வேறுபட்டவன்; ஆகவே 'இவனை, உலகம் - பித்தன் - என்று இகழ்தல் இயற்கை! என்றபடி. ஒருவு - நீங்கு.*

*''பித்தரே என்றும்மைப் பேசுவர் பிறரெல்லாம்'' என்று அருளிச் செய்தமையுங் காண்க. 'ஒருவரும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று.*

***84. பொழிப்புரை :-*** *ஒரு பாகத்தில் உலகளந்த திருமால் உளன், மற்றொரு பாகத்தில் உமையம்மை. அப்படியானால் இருபாகத்திலும் உமது தனியுருவம் இஃது என்று நிறத்தால் தெரிந்து கொள்ள இயலோம். எனவே, திருமால் உமது உருவமா? உமையம்மை உமது உருவமா? எவர் உம்முடைய உருவத்தைப் பெற்றுள்ளார்?*

***அருஞ்சொற்பொருள் :-*** *உலகு அளந்த மாலாதல் இடப்பாதியும், உமையவளாதல் வலப்பாதியும் என்க. 'சிவன் எல்லாவற்றையும் சத்தி வழியாகவே தோற்றுவிப்பன்' என்பது முடிவாதலால் 'மாயோனை இடப்பாகத்தினின்றும் தோற்றுவிக்கும் நிலைமையில் வலப்பாகம் சத்தி பாகமாய் நிற்கும் என்பது பற்றி, ''ஒருபால் மாலவனாம், மற்றை ஒரு பால் உமையவளாம்'' என்றும்,*

**85.** நேர்ந்தரவங் கொள்ளச் சிறுகிற்றோ **?** நீயதனை
ஈர்ந்தளவே கொண்டிசைய வைத்தாயோ **?** **–** பேர்ந்து
வளங்குழவித் தாய்வளர மாட்டாதோ **?** என்னோ,
இளங்குழவித் திங்கள் இது **?** **42**

---

*இந்நிலைமையில் 'சிவம்' என்பதே இல்லாதது போலத் தோன்றுதலால், இருபாலில் ஒரு பாலையும் நின்னுருவமாகத் தெரிய மாட்டேம்' என்றும், இங்ஙனமாகவே, சிவமேதான் சத்தியோ? 'சிவம்' என்பது வேறு இல்லையோ? என வினாவும் முறையில், 'நின்னுருவே மின்னுருவுதானோ' என்றும் அருளிச் செய்தார். மின் - பெண்; உமை. 'சிவமும், சத்தியும் இரு பொருள்கள் அல்ல' என்பது விளங்குதற்கு இங்ஙனம் நகைச்சுவை தோன்றக் கூறினார். நிறம், 'உரு' என்னும் பொருட்டாய், வடிவத்தைக் குறித்தது. 'இந்நிறத்தை இரு பாலிலும் நின் உருவமாகத் தெரிய மாட்டோம்' என இயைக்க. ஒகாரம் இரண்டில் முன்னது சிறப்பு; பின்னது வினா, 'நின் உருவமாக நேர்ந்து தெரிய மாட்டோம்' எனக் கூட்டுக. 'நேர்ந்து தெரியமாட்டோம்' என்றாராயினும், 'தெரிந்து நேரமாட்டோம்' எனப்பின் முன்னாக நிறுத்தி, விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க. நேர்தல் - உடன் படுதல். சிவம் சத்திகளது இயல்பை விளக்கியவாறு.*

***85. பொழிப்புரை :-** இளம் பிறைச் சந்திரனாகிய இது, நெருங்கிப் பாம்பு பற்றுவதனால் இப்படிச் சிறுத்து விட்டதோ? (அல்லது) நீயே உன் சடைக்குப் பொருந்தும் அளவாக அறுத்துக்கொண்டு வைத்தாயோ? (அல்லது) மீண்டும் வளம் பொருந்திய குழவியாய் நிலைமாறி வரவரப் பெருகி வளர இயலாத பிணி ஏதேனும் உண்டோ?*

***அருஞ்சொற்பொருள் :-** அங்கு - வானத்தில். 'அங்கு அரவம்' நேர்ந்து (எதிர்ப்பட்டுக்) கொள்ள (விழுங்க, அதனால்) சிறுகிற்றோ? இசைய (உனக்குப் பொருந்த) அளவே ஈர்ந்து, (அளவாகப் பிளந்து எடுத்து) வைத்தாயோ? பேர்ந்து காலத்திற்கு ஏற்ப மாறி) வளர மாட்டாதோ? (மாட்டாத தன்மையை உடையதோ?) இளங் குழவித் திங்கள் இது (என்றுமே பசுங்குழவியாய் இருக்கின்ற திங்களாகிய இதன் தன்மை) என்னோ?' என இயைத்துக் கொள்க. 'வளக் குழவி' என்பது மெலிந்து நின்றது. குழவித்தாய் குழவித் தன்மையுடையதாய், இளங்குழவி - பசுங்குழவி. இறைவன் அணிந்துள்ள பிறை என்றும் ஒரு பெற்றித்தாய் இருத்தலைப் புகழ்ந்தவாறு.*

***86. பொழிப்புரை :-** "எங்கள் பெருமானே! இந்தச் சந்திரனைச் சடையிலே சூடிக்கொண்டு, சிறு பிச்சைக்காக ஊர் ஊராகத் திரிய வேண்டாமே" எனப் பணிந்து வேண்டி ஒளிமிக்க தேவரே விலக்கவில்லையானால், இயல்பாகவே முற்றறிவை யுடைய பெருமானை, எளிய மானிடராகிய நாங்கள் விலக்கலாகுமோ?*

86. திங்கள் இதுசூடிச் சில்பலிக்கென்று ஊர்திரியேல்
எங்கள் பெருமானே என்றிரந்து – பொங்கொளிய
வானோர் விலக்காரேல், யாம்விலக்க வல்லமே
தானே யறிவான் தனக்கு. 43

87. தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும்
எனக்கே அருளாவாறு என்கொல் ? – மனக்கினிய
சீராளன், கங்கை மணவாளன் செம்மேனிப்
பேராளன் வானோர் பிரான். 44

---

***அருஞ்சொற்பொருள் :-*** *“எங்கள் பெருமானே” என்பதை முதலில் வைத்து உரைக்க. ‘இது’ என்பது, எடுத்தல் ஓசையால், ‘இத்தன்மைத்து’ எனப்பொருள் தந்து நின்றது. ‘இவன் எவ்வாறு அவனை வெல்ல முடியும்’ எனக் கூறினால் அதில், ‘இவன், அவன் என்பன ஓசை வேறுபாட்டால், ‘இத்தன்மையன், அத்தன்மையன்’ எனப் பொருள் தருதல்போல. ‘சிறிதாய்ப் பயன் தாராதது’ என்றதாம். ‘பிச்சையேற்பவன் வேடத்தாற் பொலிவுடையனாயின் அது பற்றியேனும் பிச்சையிடுவர்; அது தானும் செய்கின்றிலையே’ என்றபடி. சில் பலி ‘இன்னதுதான் ஏற்பது’ என்பதின்றி இடுவார் இடுவனவாகிய எல்லாப் பிச்சையும், “ஊர்” என்பதன்பின், ‘தொறும்’ என்பது தொகுக்கப்பட்டது. பொங்கொளிய - மிக்க ஒளியான உடம்பையுடைய. ‘தேவர்’ என்பது ஒளியுடம்பினர்’ என்னும் பொருளாதல் பற்றி, ‘பொங்கு ஒளிய வானோர்’ என்றார். ‘வானோரே’ என்னும் சிறப்புணர்த்தும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. “விலக்காரேல்” என்றது, விலக்க வல்லரல்லராயின்’ என்றபடி. “வல்லமே” என்னும் ஏகாரம் எதிர்மறை வினாவாய் நின்று, மாட்டாமையைக் குறித்தது. ஈற்றடியைத் தனித் தொடராக வைத்து, முதற்கண், ‘இனி’ என்பது வருவிக்க. இறுதியில் ‘ஆவதை’ என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. ஈற்றடியால், ‘எம் பெருமான் தனக்கு ஆவதைப் பிறர் அறிவிக்க வேண்டாது தானே அறிவான் ஆதலின், அவன் இவ்வாறு ‘பலிக்கு’ என்று ஊர் திரிவதில் ஒரு கருத்திருத்தல் வேண்டும்’ என்றபடி. அக்கருத்தாவது, உயிர்களின் வினையை நீக்குதலாம்.*

***87. பொழிப்புரை :-*** *மனதிற்கு இனிய சிறப்பை உடையவனும், கங்கையின் மணவாளனும், சிவந்த திருமேனியையுடைய புகழாளனும், தேவர்கள் தலைவனுமாகிய சிவபெருமான் ஒருவனுக்கே அடிமையாகி, அவனையே அடைக்கலம் அடைந்து தொண்டு செய்து வாழும் எனக்கும், அவன் அருளாத இயல்பு என்ன காரணமோ?*

***அருஞ்சொற்பொருள் :-*** *“அடியன்” என்பது தன்மையொருமைப் பெயர். ‘தன்னை’ என்னும் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று. பிரிநிலை ஏகாரத்தை இதனுடனும் கூட்டுக. “எனக்கே” என்னும் பிரிநிலை ஏகாரம். பிறர்க்கெல்லாம் அருளினமையைக் குறித்தது. “அருளாவாறு” என்பதை நிகழ் காலத்ததாகவும்,*

**88.** பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரானவன்தன் பேரருளே வேண்டிப் – பிரானவனை
'எங்குற்றான்' என்பீர்கள் என்போல்வார் சிந்தையினும்
இங்குற்றான் காண்பார்க்(கு) எளிது. **45**

---

*"கொல்" என்பதை ஐய இடைச் சொல்லாகவும் கொண்டு உரைப்பதும், அவற்றை முறையே எதிர்காலத்ததாகவும், அசை நிலை இடைச் சொல்லாகவும், மற்றும் "என்" என்பதை இன்மை குறித்து வந்த வினாவினைக் குறிப்புச் சொல்லாகவும் கொண்டு உரைப்பதும் ஆகிய இரு பொருளையும் கொள்க. அங்ஙனம் கொள்ளவே, பின்னர் உரைக்கும் உரையின் படி,* ***'எனக்கு அருளாதொழியக் காரணம் இல்லை' என்னும் துணிவுப் பொருளே வலியுடைத்தாய் நிலை பெறும்.*** *பின்னை உரைக்கு "எனக்கே" என்னும் ஏகாரம் தேற்றப் பொருட்டாம். 'மனத்துக்கு' என்பதில் அத்துச் சாரியை தொகுத்தலாயிற்று. சீர் - புகழ். பேராளன் பெருமையுடையவன். இனி, 'செம்மேனி உடையனாதலைக் குறிக்கும் பெயரையுடையவன்; அப்பெயர் - சிவன் - என்பது' என உரைப்பினும் ஆம்; 'சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய, செம்மேனி எம்மான்'[1] என்னும் திருமொழியையும் காண்க.*

***88. பொழிப்புரை :-*** *தலைவனாகிய அச் சிவபெருமானையே நோக்கித் தொண்டாற்றும் பெருமை பொருந்திய திருநெறியைக் கைக்கொண்டு, அப்பெருமானுடைய திருவருளையே விரும்பி, "அந்தப்பெருமான் எங்கே இருக்கிறான்" என்று தேடியலையும் தீவிர எண்ணமுடைய உலகமக்களே! அந்தச் சிவபெருமான் காட்சிக்கு எளியவனாக என்போன்ற எளியார் உள்ளத்திலும் உள்ளான்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"பேணி, வேண்டி, என்று நீவிர் தேடுகிறீர்கள்; இங்கே என்போல்வார் சிந்தையினும் உற்றான்; (அஃதறிந்து) காண்பார்க்கு (க் காண்டல்) எளிது"*[1] *என்க. 'அவனையே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. பெருநெறி - மேலான நெறி. நோக்குதலையே "பெருநெறி" என்றார் ஆகலின், பெயரெச்சம் வினைப் பெயர் கொண்டதாம். "நின்முகம் காணும் மருந்தினேன்"*[2] *என்பதிற்போல, பேணுதல் போற்றிக் காத்தல். வேண்டுதல் - விரும்புதல். "பெருநெறி, பேரருள்" என அடை புணர்த்தமை. 'ஏனை நெறிகள் எல்லாம் ஒரு நெறியல்ல' என்பதும், 'ஏனையோர் அருளெல்லாம் பேரருள் அல்ல' என்பதும் தோன்றுதற் பொருட்டு, 'பெருநெறி' எனப்படாமை, பிறப்பைக் கடத்தலாகிய பெரும் பயனைத் தாராமை பற்றியும், 'பேரருள்' எனப்படாமை, சிலர்க்குச் சில சிறு பயன்களைத் தந்த அளவிலே அற்றுவிடுதல் பற்றியுமாம். "என்பீர்கள்" என்பது, 'என்று தேடுகின்றீர்கள்' என்னும் பொருட்டாய் நிற்றலின்,*

---

*1. திருமுறை - 4. 112. 9.*

*2. குறிஞ்சிக் கலி - 24.*

89. எளிய(து) இதுஅன்றே! ஏழைகாள் யாதும்
அளியீர் அறிவிலீர்; ஆ!ஆ! – ஒளிகொள்மிடற்
றெந்தையராப் பூண்டுழலும் எம்மானை உள்நினைந்த
சிந்தையராய் வாழுந் திறம். 46

90. திறத்தால் மடநெஞ்சே சென்றடைவ தல்லால்
பெறத்தானும் ஆதியோ! பேதாய் – நிறத்த
இருவடிக்கண் ஏழைக் கொருபாகம் ஈந்தான்
திருவடிக்கட் சேருந் திரு. 47

---

*"பிரான் அவனை" என்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. "என் போல்வார் சிந்தையினும் உற்றான்'' என்பது, 'உலகியல் வகையில் எளியனாயினும் அன்புடையார் உள்ளத்தில் இருப்பவன் அவன் என்பதை விளக்கிற்று. "இங்கு" என்பது, 'இங்கே' என அண்மை குறிக்க வந்தது. 'அஃது அறிந்து' என்பதும், 'காண்டல்' என்பதும் சொல்லெச்சமாய் எஞ்சி நின்றன. இவ்வாறன்றி, 'எளிதாக' என ஆக்கம் வருவித்து, 'எளிதாக உற்றான்' என முடிப்பினும் ஆம்.*

***89. பொழிப்புரை :-** ஏழை மக்களே! ஒளி பொருந்திய திருநீலகண்டத்தை உடைய எமது தந்தையாகிய பாம்பை அணிந்து திரியும் பரமசிவனை, நீங்காது நினைக்கும் மனம் உடையவராக வாழுந் தன்மை எளிதன்று! நீங்கள் இதனைச் சிறிதும் அறியாதிருக்கின்றீர்! அந்தோ! இரங்கத்தக்கவர் ஆவீர்!*

***அருஞ்சொற்பொருள் :-** "ஒளிகொள் மிடற்று" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. 'இது எளியது அன்றே! ஏழை காள், யாதும் அறிவிலீர்; ஆ! ஆ! அளியீர்!' என முடிக்க. அளியீர் - இரங்கத்தக்க நிலையை உடையீர். ஆ! ஆ!, இரக்க இடைச் சொல் அடுக்கு. ஒளி, நீல ஒளி, 'அறிகிலீர்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். தனிச்சீரில் ளகர ஒற்றை நீக்கி அலகிடுக.*

***90. பொழிப்புரை :-** அறிவற்ற மனமே! ஒளி பொருந்திய பெரிய கூர்மையான கண்களையுடைய உமையம்மைக்கு ஒரு பாகத்தைக் கொடுத்த இறைவனது திருவடியிற்சென்று சேர்கின்ற முத்தியாகிய செல்வம். அவனது பேரருளால், அவனை இடைவிடாது சிந்தித்துப் பெறுதற்கு உரியதாம், அன்றி, நீ உன்னுடைய சிற்றறிவின் முயற்சியால் அடைவதற்கு உரிமை ஆவாயோ?*

***அருஞ்சொற்பொருள் :-** 'நெஞ்சே, திருவை, (அடையும்) திறத்தால் அடைவதல்லால், பிறவகையில் பெறவும் ஆதியோ' (உரியை ஆவையோ? ஆகாய்) என இயைத்து முடிக்க. (பிற வகையில் பெற நினைக்கும்) பேதையே, (அந்த நினைவை விடு) என்க. 'அடையும்' என்பதும், 'பிறவகையில்' என்பதும் 'விடு' என்பதும் சொல்லெச்சங்கள். அடையும் திறமாவது, அன்பு செய்தல்.*

**91.** திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும்; – ஒருநாள்
இதுமதியென்(று) ஒன்றாக இன்றளவுந் தேரா(து)
அது, மதியொன் றில்லா அரா. **48**

**92.** அராவி வளைத்தனைய அங்குழவித் திங்கள்
விராவு கதிர்விரிய ஓடி – விராவுதலால்
பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தாற் போலாவே ?
தன்னோடே ஒப்பான் சடை. **49**

---

*அழுமலர்க் கண்ணினை அடியவர்க் கல்லால்,*
*அறிவரிது அவன்திரு வடியிணை யிரண்டும்[1].*

*என்றது காண்க. நிறம் - அழகு. வடிக் கண் - மாவடுவின் பிளவு போலும் கண். ஏழை - பெண்.*

***91. பொழிப்புரை :-*** *அறிவு சிறிதும் இல்லாத அந்தப் பாம்பு, (இதுதான் பிறைச் சந்திரனோ என்று) சிவபெருமானது திருமார்பில் அணிந்த பன்றிக் கொம்பைப் பார்க்கும்; அப்பெருமானது திருமுடியில் சூடிய பிறைமதியையும் பார்க்கும். (இவ்வாறு மயங்கி அப்பாம்பு) இன்றளவும், இதுதான் பிறை என்று ஒருநாளும் தெளியாமல் மயங்கி நிற்கும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *திரு - அழகு. ஏன மருப்பு - பன்றிக் கொம்பு. "பெருமான்" என்பது தாப்பிசையாய், முன்னும் சென்று, இயைந்தது. 'ஒரு நாளும் ஒன்றும்' என்னும் இழிவு சிறப்பும்மைகள் தொகுத்தலாயின. 'மதி' இரண்டில் முன்னது திங்கள். பின்னது அறிவு. ஒன்றாக - ஒருதலையாக; நிச்சயமாக. தேராது - அறியாது. 'அது யாது' எனின், மதி (அறிவு) ஒன்று இல்லா (சிறிதும் இல்லாத) அரா. இது மயக்க அணி. "மதி ஒன்று இல்லா" என்றதனால், எள்ளல் பற்றிய நகை பிறந்தது.*

***92. பொழிப்புரை :-*** *வெள்ளித்துண்டை அராவி வளைத்தது போன்ற அழகிய பிறைச்சந்திரனில் பொருந்திய கதிரானது பரந்துஓடி எங்கும் விரவி நிற்பதால், தனக்குத் தானே நிகரான சிவபிரானது சடை, பொன்கம்பியுடன் வெள்ளிக்கம்பியையும் சேர்த்து முறுக்கி விட்டாற் போன்று உள்ளது அல்லவா?*

***அருஞ்சொற்பொருள் :-*** *அராவி - அரத்தால் தேய்த்து, அம் - அழகு. விராவு கதிர் - திங்களிலே பொருந்தியுள்ள கதிர்கள். விரிய ஓடி - எங்கும் பரவ ஓடி. விராவுதலால் - இடை இடை செறிதலால். புரி - முறுக்கு. புரிந்தாற்போலவே - முறுக்குண்டாற்போல இல்லையோ. ஏகாரம் எதிர்மறை வினாப் பொருட்டாய்,*

---

*1. திருமுறை - 7. 58. 10.*

93. சடைமேல்அக் கொன்றை தருகனிகள் போந்து
புடைமேவித் தாழ்ந்தனவே போலும், – முடிமேல்
வலப்பால்அக் கோலமதி வைத்தான் பங்கின்
குலப்பாவை நீலக் குழல். 50

94. குழலார் சிறுபுறத்துக் கோல்வளையைப் பாகத்து
எழிலாக வைத்தேக வேண்டா – கழலார்ப்பப்
பேரிரவில் ஈமப் பெருங்காட்டிற் பேயோடும்
ஆரழல்வாய் நீயாடும் அங்கு. 51

---

*'போல்கின்றன' எனப் பொருள் தந்தது. 'தன்னோடே ஒப்பான் - தனக்குத் தானே ஒப்பானவன்'.*

***93. பொழிப்புரை :-*** *தன் சடைமுடியின் மேலே வலப்புறத்தில் அந்த அழகிய பிறையினை வைத்த பரமசிவனின் ஒருபாகத்தில் உள்ள உமையம்மையாரின் நீலநிறம் பொருந்திய கூந்தல் சடையானது, அப்பெருமானின் சடைமேல் உள்ள அந்தக் கொன்றை ஈன்ற கனிகள் வந்து ஒரு புறத்தில் தாழ்ந்து தொங்குவன போன்று இருக்கும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"முடிமேல்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. கோல மதி - அழகிய திங்கள். பங்கு - இடப் பாகம். 'பங்கின் உள்ள பாவை' என்க. குலப் பாவை - உயர் குல மடந்தை. 'அவன் சடைமேல் அணிந்த' எனச் சுட்டுப் பெயரும், ஒரு வினைக் குறிப்புச் சொல்லும் வருவிக்க. கொன்றை - கொன்றைப் பூ. பூக்கள் பின்னர்க் காய்த்துப் பழத்தைத் தருதல் இயல்பாகலின், சுவை தருகனிகள்' என்றார். கூந்தலுக்குக் கொன்றைக் கனி உவமையாகச் சொல்லப்படும். புடைமேவி - சடையின் மற்றொரு பக்கத்தில் பொருந்தி. சடை வலப் பால் உள்ளது. வலப் பக்கம் சடையும், இடப் பக்கம் கூந்தலுமாய் இரு தன்மைப்பட்டுத் தோன்றாது, சடையில் உள்ள கொன்றையின் கனியே இடப்பக்கம் உள்ளது போலும் என ஒருமை கற்பித்தவாறு. இஃது இடத்திற்கு ஏற்ற உவமை.*

***94. பொழிப்புரை :-*** *ஊழி முடிவுக் காலமாகிய நள்ளிரவிலே உலக முழுதும் எரிந்து சாம்பலான அப் பெரிய சுடுகாட்டில் பேய்களுடன் கூடிப் பெருநெருப்பின் நடுவில் நின்று, வீரக்கழல் ஒலிக்குமாறு நீ கூத்தாடுகின்ற அவ்விடத்திற்கு, சிவபெருமானே! பின்னற் சடைபடிந்த பிடரியையும், அழகிய வளையல்களையும் உடைய உமையம்மையை ஒரு பாகத்தில் அழகாக வைத்துக் கொண்டு செல்லவேண்டாம். (அவள் மெல்லியலாள் ஆதலின் அஞ்சுவாள்).*

***அருஞ்சொற்பொருள் :-*** *குழல் ஆர் சிறு புறத்து - கூந்தல் புரளுகின்ற சிறிய முதுகையுடைய. கோல் வளை - திரண்ட வளை. இஃது இதனை அணிந்தவளைக் குறித்தது. எழில் - அழகு. 'அழகுக்காக அவளை நீ ஆடும் அங்குக்*

95. அங்கண் முழுமதியஞ் செக்கர் அகல்வானத்(து)
எங்கும் இனிதெழுந்தால் ஒவ்வாதே – செங்கண்
திருமாலைப் பங்குடையான் செஞ்சடைமேல் வைத்த
சிரமாலை தோன்றுவதோர் சீர். 52

96. சீரார்ந்த கொன்றை மலர்தழைப்பச் சேணுலவி
நீரார்ந்த பேர்யாறு நீத்தமாய்ப் – போரார்ந்த
நாண்பாம்பு கொண்டசைத்த நம்மீசன் பொன்முடிதான்
காண்பார்க்குச் செவ்வேயோர் கார். 53

---

*கொண்டு செல்ல வேண்டா' என்க. இப்பாட்டிற்குப் 'பெருமானே' என்னும் முன்னிலை வருவிக்க. கழல் - வீரர்கள் காலில் அணியும் அணி. ஆர்த்தல் - ஒலித்தல். ஆரழல் - அணுகுதற்குரிய நெருப்பு.*

***95. பொழிப்புரை :-*** *சிவந்த கண்களையுடைய திருமாலைத் தன் பாகத்தில் கொண்ட சிவபெருமான். சிவந்த சடையின் மேல் சூடிக் கொண்ட தலை மாலையானது காட்சியளிக்கும் ஒப்பற்ற அழகுக்கு, அழகான முழுநிலவுகள் பலவும் சேர்ந்து செவ்வானத்தில் இனிமையாய்த் தோன்றி எழும் அழகு ஒப்பு ஆகாது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"செங்கண்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. 'பங்கில்' என ஏழாவது விரிக்க. ஒவ்வாதே - போலதே. ஏகாரத்தை வினாவாகவும், தேற்றமாகவும் கொண்டு, 'ஒக்கும்' என உடன்பாட்டுப் பொருளும், 'ஒவ்வாது' என எதிர்மறைப் பொருளும் இரண்டும் கொள்க. சிரமாலை - தலை மாலை. 'பெருமானது சடாடவி செவ்வானம்போல விளங்க, அதில் அணியப்பட்ட வெண்டலை மாலையில் உள்ள தலைகள் பல, பல சந்திரர் செவ்வானம் எங்கும் தோன்றியது போல விளங்குகின்றன' என்பதாம். தலை மாலை அவனது நித்தியத்துவத்தை விளக்குவதாகலின் அதனைப் புகழ்ந்தவாறு. சீர் - அழகு.*

***96. பொழிப்புரை :-*** *போராடும் தன்மையுள்ள பாம்பை (வில்) நாணாகக் கொண்டு அதனையே தன் அரையில் கச்சையாக கட்டியருளிய நம் சிவபெருமானுடைய அழகிய சடைமுடியானது, சிறப்புப் பொருந்திய கொன்றை மலர்கள் பூத்திருப்பதாலும் நீர் மிகுந்த கங்கை என்கிற பெருநதி பெருக்கெடுத்து பாய்வதாலும், கார்காலம் என்னும்படி நன்கு காட்சி தருகின்றது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'போரார்ந்த பாம்பு கொண்டு நாண் அசைத்த நம் ஈசன் பொன்முடி' என்று எடுத்து, முதற்றொட்டு உரைக்க. அசை, நாண் - அரை நாண். அசைத்த இறுகக் கட்டிய. பொன் - அழகு. தழைப்ப - மிகுந்திருக்க. சேண் - வானுலகம். 'அங்கு உலவி நீர் மிகுந்திருந்த யாறு' என்க. நீத்தம் - வெள்ளம். "ஆய்" என்பது, 'ஆயதனால்' எனக் காரணப் பொருள் தந்தது. செவ் ஏய் ஓர் கார் - செம்மை நிறம் பொருந்திய ஒரு மேகம் போலும் கொன்றை, கார் காலத்தில்*

**97.** காருருவக் கண்டத்தெங் கண்ணுதலே எங்கொளித்தாய்
ஒருருவாய் நின்னோடு ழிதருவான், — நீருருவ
மேகத்தாற் செய்தனைய மேனியான், நின்னுடைய
பாகத்தான் காணாமே பண்டு. **54**

**98.** பண்டமரர் அஞ்சப் படுகடலின் நஞ்சுண்டு,
கண்டங் கறுத்தவும் அன்றியே — உண்டு
பணியுறுவார் செஞ்சடைமேற் பால்மதியின் உள்ளே
மணிமறுவாய்த் தோன்றும் வடு. **55**

---

*பூப்பது. "கண்ணி கார் நறுங் கொன்றை" என்றது காண்க[1]. எனவே, 'கொன்றை மலரும், நீத்தமும் மேகத்தால் விளைந்தன' போலத் தோன்றுகின்றன என்றபடி, மேகம் கரிதாயினும் இஃதோர் அதிசய மேகம் என்பதாம்.*

***97. பொழிப்புரை :-** மேகம் போன்ற வடிவத்தையுடைய திருக்கழுத்தையும் நெற்றிக் கண்ணையும் உடைய சிவபெருமானே! உன்னுடன் சேர்ந்து ஒரு வடிவாகி உன்னுடனேயே திரிகின்றவனும், நீர் வடிவுகொண்ட மேகத்தால் செய்தாற்போன்ற திருமேனியையுடையவனும், உன் உடம்பில் ஒருபாகமாக விளங்குபவனும் ஆகிய திருமால், உன்னைக் கண்டுகொள்ள முடியாதபடி எங்கேதான் போய் ஒளிந்துக் கொண்டாயோ? (அறியேனே!) .*

***அருஞ்சொற்பொருள் :-** 'மாயோன், நின்னுடைய பாகத்தானாய் நின்னோடு ஓருருவாய் உழிதருவானாகவும், அவன் பண்டொருகால் காணாதபடி நீ எங்குச் சென்று ஒளித்தாய்' என்க. "பாகத்தான்" என்றது, ஓருருவாய் நின்றவாற்றை விளக்கியது. "எங்கு ஒளித்தாய்" என்றது, 'அவனுக்கு இடம் அளித்து நின்றே ஒளிக்கவும் வல்லாய்' என்றபடி.*

***98. பொழிப்புரை :-** முன்னொரு காலத்திலே, தேவர்கள் அஞ்சுமாறு திருப்பாற்கடலிலே எழுந்த நஞ்சை உண்டதனால், சிவபிரானுடைய திருக் கழுத்தில் கறுப்பு நிறமான வடு உண்டானது மட்டும் அல்லாமல், பாம்பணிந்த சிவந்த சடைமீதுள்ள பால் போன்ற வெண்ணிறமான சந்திரனின் நடுவிடத்திலும் அழகிய மறுவாய் விளங்கும் வடுவும் உண்டு.*

***அருஞ்சொற்பொருள் :-** படுகடல் - ஒலிக்கின்ற கடல். உண்டு - 'உண்டமையால்' என்க. பணி உறுவார் - பாம்பை அணிகலமாகப் பொருந்தியவர். 'அவர் கறுத்தமையால்' எனச் சினைவினை முதல் மேல் ஏற்றப்பட்டது. மணி மறுவாய் நீல நிறமான களங்கமாய் (த் தோன்றும் வடுவும் உண்டாகும் - என உம்மையும் ஆக்கமும் விரித்து முடிக்க) 'யாம் களங்கமிலேம்' என்று அவர் சொல்லினும், கண்டம் கறுத்ததையேனும், 'ஓர் உபகாரம் பற்றி' எனலாம்;*

---

*1. புறம் - கடவுள் வாழ்த்து*

**99.** வடுவன் றெனக்கருதி நீமதித்தி யாயின்
சுடுவெண் பொடிநிறத்தாய், சொல்லாய்; – படுவெண்
புலால்தலையின் உள்ளூண் புறம்பேசக் கேட்டோம்;
நிலாத்தலையிற் சூடுவாய் நீ. **56**

---

*'காரணம் இன்றி, மதியினிடத்துத் தோன்ற இருக்கும் வடுவும் ஒன்று உண்டு' என்க, 'இவர் களங்கமிலாராவது எங்ஙனம்' என்றபடி. இதனை,*

*வார மாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர்*
*பெறுவ தென்னே?*
*ஆரம் பாம்பு; வாழ்வ தாரூர்; ஒற்றி யூரேல்*
*உம்ம தன்று;*
..........................................................................................
*ஊருங் காடு; உடையும் தோலே*
*ஓண காந்தன் தளியு ளீரே.[1]*

*என்றதுபோல உரிமை பற்றிச் சொல்மாத்திரையால் பழித்தவாறாகக் கொள்க. நிறை மதிக்கன்றிப் பிறைக்குக் களங்கம் இன்மையால், "தோன்றும்" என்பதை எதிர்கால முற்றாகக் கொண்டு, 'இப்பொழுது இல்லையேனும் பின்பு உண்டாக இருக்கின்றது' என்றவாறாகக் கொள்க.*

***99. பொழிப்புரை :–*** *சுடப்பட்ட வெள்ளிய திருநீறு அணிந்த திருமார்பை உடைய எம்பெருமானே! இறந்த பிரமனது மண்டையோட்டில் பலியேற்று அவ்வுணவை நீ உண்டது குற்றம் என்று பிறர் பழித்துப் பேசக் கேட்டோம். முடிமீது தூய நிலவினைச் சூடும் பெருமானே! நீ அது குற்றம் அன்று என்று பெருமை கொள்வாயானால், அஃது ஏன் என்று எங்கட்குச் சொல்லியருள்வாய்.*

***அருஞ்சொற்பொருள் :–*** *'சுடு வெண்பொடி நிறத்தாய், படு வெண் புலால் தலையினுள் ஊண் (பற்றிப் பிறர்) புறம் பேசக் கேட்டோம்; (அதனை) - வடு அன்று - எனக் கருதி நீ மதித்தியாயின், (வடு வாகாமைக்குரிய காரணத்தைச்) சொல்லாய்; நீ நிலாவைத் தலையிற் சூடுபவன்' எனக் கூட்டி முடிக்க. நிறம் - மார்பு. படு - இறந்த. ஊண் - உண்டல். புறம்பேசுதல், 'பழித்தல்' என்னும் பொருட்டாகலின் அது, 'ஊண்' என்பதில் தொக்கு நின்ற இரண்டாவதற்கு முடிபாயிற்று. வடு - குற்றம். நிலாக் கலைகட்கு அடையாளம் ஆதலின், அதனைத் தலையில் சூடுதல், 'எல்லாக் கலையும் வல்லவன்' என்பதைக் காட்டும். ஆகவே, 'நீ வடுவாவன செய்யாய்' என்பது குறிப்பு.*

***100. பொழிப்புரை :–*** *எம்பெருமானே! நீ உலகமெங்கும் சென்று பிச்சை யேற்றாலும், உன்னுடைய அணிகலமாகிய கொடிய பாம்புகளை நீக்கி விட்டுச்*

---

*1. திருமுறை - 7. 5. 9.*

100. நீயுலக மெல்லாம் இரப்பினும் நின்னுடைய
தீய அரவொழியச் செல்கண்டாய்; – தூய
மடவரலார் வந்து பலியிடார், அஞ்சி,
விடவரவம் மேல்ஆட மிக்கு. 57

101. மிக்க முழங்கெரியும் வீங்கிய பொங்கிருளும்
ஒக்க உடனிருந்தால் ஒவ்வாதே? – செக்கர்போல்
ஆகத்தான் செஞ்சடையும், ஆங்கவன்தன் பொன்னுருவில்
பாகத்தாள் பூங்குழலும் பண்பு. 58

---

*செல்வாயாக. நச்சுப் பாம்பு படமெடுத்து ஆடும்! குற்றமற்ற பெண்கள் மிக நடுங்கி அருகில் வந்து பிச்சையிட மாட்டார்கள்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"எல்லாம்" என்பதன் பின், 'சென்று' என்பதும், "கண்டாய்" என்பதன்பின், 'ஏன்எனில்' என்பதும் வருவிக்க. கண்டாய், முன்னிலையசை. விடம் - நஞ்சு. 'விட அரவம் மிக்கு மேல் ஆடுதலால், மடவார் அஞ்சி, வந்து பலி இடார்' என்க. 'எம் அன்பினால் உன்னை, அறியாதார் போல நினைத்துச் சொல்கின்றேம்' என்பதாம்.*

***101. பொழிப்புரை :-*** *செவ்வானம் போன்ற திருமேனியையுடைய எம்பெருமானின் சிவந்த சடையும், அங்கே அவனுடைய பொன்னிறமான திருவுருவில் செம் பாகத்தையுடைய உமையம்மையின் அழகிய கூந்தலும் ஒருங்கே சேர்ந்து காணப்படும் தோற்றம் மிக முழங்கி எரியும் நெருப்பும் அடர்ந்த இருளும் ஒன்றோடொன்று நெருங்கி இருந்தால், அதுவும் ஒப்பாகாது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *மிக்க எரி - அளவில் மிகுந்த தீ. எரியின் முழக்கம். 'தமதம' என்பது. வீங்கிய பொங்கு இருள் - பெருகிய, மிகுந்த இருள். ஒக்க உடன் இருத்தல் - சமமாக ஒருங்கிருத்தல், "ஒவ்வாதே" என்றதற்கு, மேல், "போலாதே" என்றதற்கு[1] உரைத்தவாறு உரைக்க. செக்கர் - செவ்வானம். ஆகம் - உடம்பு. பண்பு - நிறம், 'பண்பினால்' என்னும் மூன்றனுருபு தொகுத்தலாயிற்று. 'சடையும், குழலும் பண்பினால் எரியும், இருளும் உடன் இருந்தால் ஒக்கும்' என்க. ஓருடம்பு இருவராய கோலத்தைப் புகழ்ந்தவாறு.*

***102. பொழிப்புரை :-*** *கண்பொருந்திய நெற்றியும், கறைபொருந்திய கழுத்தும் உடைய பெருமானே! எருது வாகனம் உடையானே! திருவெண்ணீறு அணியும் திருவுருவே உன் திருவுருவாயின், அஃது உமையம்மையுடன் கூடிய திருவுருவோ! அல்லது திருமாலுடன் கூடிய திருவுருவோ? இதன் பண்பு எனக்கு அறிய இயலாது. நீயே திருவுளம் இரங்கிக் கட்டளையிட்டு அருள்வாய்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"கண் புணரும்" என்பது முதலாகத் தொடங்கி*

---

*1. வெண்பா - 38*

102. பண்புணர மாட்டேன்நான் நீயே பணித்துக்காண்
கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா — பெண்புணரும்
அவ்வுருவோ ? மாலுருவோ ? ஆனேற்றாய் நீறணிவ(து)
எவ்வுருவோ நின்னுருவம் மேல். 59

103. மேலாய மேகங்கள் கூடியோர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தால் ஒவ்வாதே! — மாலாய
கைம்மா மதக்களிற்றுக் காருரிவை போர்த்தபோ(து)
அம்மான் திருமேனி அன்று. 60

---

*யுரைக்க. "மேல்" என்பதை, மேலே, "பண்பு" என்பதனோடு இயைத்து, 'மேல் பண்பு - மேலே உள்ள தன்மை' என உரைக்க. பணி - சொல்லியருள். 'பணி' என்னும் ஏவல் முற்றினைப் பார்த்துக் காண்' என்றது ஒரு நாட்டு வழக்கு. ஏவல் முற்றுக்கள் அந்த வழக்கில் இவ்வாறு வரும் என்க. இதில் கூறப்பட்டப் பொருளின் விளக்கத்தை, மேல், "ஒருபால் உலகளந்த" என்னும் வெண்பாக்[2] குறிப்பிற் காண்க. 'நீறணிவ தாகிய நின்னுருவம் எவ் வுருவோ' என்க. 'இரண்டு உருவத்திலும் நீறு காணப்படுதலால், உன் உருவம் அறியப்பட வில்லை' என்பது கருத்து.*

***103. பொழிப்புரை :-*** *பெரிய மேகங்கள் ஏழும் சேர்ந்து, ஒப்பற்ற பொன் மலையாகிய மேருமலையினுடைய பேரொளியைத் தமக்குள்ளே புதைத்துக் கொண்டாலும், அக்காட்சி எம்பெருமான் அந்நாளிலே மயக்கம் பொருந்திய மதயானையின் கறுப்புநிறமான தோலை உரித்துத் தன்மேல் போர்த்துக் கொண்டபோது கொண்டருளிய காட்சிக்கு ஒப்பாகாது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"மாலாய" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. மால் - மத மயக்கம். மா - காட்டு விலங்கு 'கையையுடைய மாவாகிய களிறு' என்க. கார் உரிவை - கரிய தோல். அன்று - உரித்துப் போர்த்த அன்று. விலங்கல் - மலை. "ஒவ்வாதே" என்பது, மேலேயும் வந்தது[1]. யானைத் தோற் போர்வையைப் புகழ்ந்தவாறு.*

***104. பொழிப்புரை :-*** *(அருள் விளக்கம் பெறாத இளம் பருவமாகிய) அந் நாளிலும், உனது அழகிய வடிவம் இன்னதென்று அறியாமலே உனக்கு அடிமைப்பட்டேன். (அருள் விளக்கம் பெற்றுச் சிவகணமாகித் திருக் கைலாயத்தை நோக்கிச் செல்லும்) இந்நாளிலும் உன் திருவுருவத்தை அறியவில்லை. "உங்கள் பெருமான் எத்தகைய உருவம் உடையான்?" என்று கேட்பவர்களுக்கு, நான் என்ன விடை கூறுவேன்? என்றைக்கும் உன் வடிவம் தான் யாது? (எங்கும் நிறைந்த உனக்கு) உருவம் எது?*

---

*2. வெண்பா - 41*

*1. வெண்பா - 52*

104. அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் – என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது ? 61

105. ஏதொக்கும் ? ஏதொவ்வா(து) ஏதாகும் ஏதாகா(து)
ஏதொக்கும் என்பதனை யாரறிவார் – பூதப்பால்
வில்வேட னாகி விசயனோ டேற்றநாள்
வல்வேட னான வடிவு. 62

---

***அருஞ்சொற்பொருள் :-*** *அன்று - ஆட்படாது உலகியலில் இருந்த அன்று. இன்று - உலகியலின் நீங்கி ஆட்பட்ட பின்னதாகிய இன்று. இரு நிலைகளிலும் உன் உருவத்தை நான் காணவில்லையென்றால் எப்பொழுதுநான் நான் அதனைக் காண்பது? நீ சிவனுக்கு ஆள் என்கின்றாயே; அவன் உருவம் எத்தகையது என வினவுவார்க்கு நான் என்ன விடை சொல்லுவேன்' என்றபடி. "எவ்வுருவோ நும்பிரான்" என்பதில், உரு உடையவனை, 'உரு' என்றது உபசார வழக்கு. "எவ்வுருவோ" என்னும் ஓகாரத்தை, 'ஏது' என்பதனோடும் கூட்டுக. ஏது - எத்தகையது. ஆட்படாதபொழுது எந்த உருவத்தையும் காணவில்லை. ஆட்பட்ட பின் உருவத்தை ஒன்றாகக் காணவில்லை; கயிலையில் கண்டது ஓர் உருவம்; ஆலங்காட்டிற் கண்டது ஓர் உருவம்; அவரவர்கள் சொல்லக் கேட்பன பல உருவங்கள்; அவை கருதுவார் கருதும் உருவங்கள்; ஒருபால் உலகளந்த மாலும், ஒருபால் உமையவளும் ஆகும் உருவம்; அரியும், அயனும் ஆய உருவம் முதலியன[3]. 'உருவ சிவன் தடத்த சிவனேயன்றிச் சொரூப சிவன் அல்லன்' என்பதும்* ***'தடத்த சிவனே கண்ணுக்குப் புலனாவன்; சொரூப சிவன் உணர்வுக்கு மட்டுமே புலனாவன்'*** *என்பதும் இதன் கருத்துக்களாகும்.*

*அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்*
*உருவும் உடையான் உளன்[1].*

*என்றது காண்க. "என்றுந்தான் எவ்வுரு" என்றது, நிலையான உரு எது' என்று வினாவி அஃது இல்லை, என்றபடி.*

***105. பொழிப்புரை :- :*** *முன்னொரு காலத்தில் வில்லை ஏந்திய வேடனாகி அருச்சுனனுடன் போரிட்ட நாளிலே, வலிய வேட்டுவனாகத் தோன்றிய உன் திருவுருவம், எதை ஒத்திருக்கும்? எதை ஒத்திராது? அதற்குப் பொருந்துவது எது? பொருந்தாதது எது? எதனோடு பொருந்துமென்பதை அறிவார் யார்?*

***அருஞ்சொற்பொருள் :-*** *"பூதப்பால்" என்பது முதலாகத் தொடங்கி*

---

*3. வெண்பா - 18, 33, 41*

*1. திருவருட்பயன் - 5*

**106.** வடிவுடைய செங்கதிர்க்கு மாறாய்ப் பகலே
நெடிதுலவி நின்றெறிக்குங் கொல்லோ — கடியுலவு
சொன்முடிவொன் றில்லாத சோதியாய் சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள் நிலா. **63**

---

*உரைக்க. "பூதம்" என்றது மண்ணை; எனவே, "பூதப்பால்" என்றது, 'மண்ணுலகில்' என்றவாறு "வேடன்" இரண்டில் முன்னது, 'வேடம் பூண்டவன்' என்றும், பின்னது, 'வேட சாதியினன்' என்றும் பொருள் தந்தன. விசயன் - அருச்சுனன். 'போர் ஏற்ற நாள்' என ஒரு சொல் வருவிக்க. ஒக்கும் இரண்டில் முன்னது 'நிகர்க்கும்' என்றும், பின்னது, 'பொருந்தும்' என்றும் பொருள் தந்தன. "ஏது" ஐந்தில்! முன்னிரண்டும் வினாப் பெயர்; அடுத்த இரண்டும் 'எத்தன்மையது' என வினைக் குறிப்பு. ஈற்றில் உள்ளதும் வினாப் பெயரே. பின் வந்த "ஏதொக்கும்" என்பது, 'எந்த விடை பொருந்தும்' என்பதாம். வினாக்கள் முதல் அடியில் வந்தன. வல்வேடனாய்த் தோன்றினும் தேவ வடிவாய் இருந்ததோ, வேட வடிவாயே இருந்ததோ - அதனை அறிந்தவர் ஆர் என்றபடி.*

***106. பொழிப்புரை :-* விளக்கம் பொருந்திய சொற்களால் இன்னதன்மையன் எனக்கூறி, முடித்தற்கு இயலாத சோதிமயமான பெருமானே! உன் திருமுடியின் மேலுள்ள பிறைச்சந்திரன், அழகிய வடிவத்தையுடைய சூரியனுக்கு எதிராகப் பகற் காலத்திலும் நெடுந் தூரத்திற்குப் பரவி நின்று சுடரொளியை வீசுமோ?**

***அருஞ்சொற்பொருள் :-* "கடி உலவு..... சோதியாய்" என்றது விளி. அது, "சொல்லாய்" என்பதனோடு முடிந்தது. ஆல், அசை, கடி உலவு சொல் - விளக்கம் அமைந்த சொல். அத்தகைய சொல் ஒன்றை முடிவாக இல்லாத சோதி. அஃதாவது, சொல்லால் அளவிட்டுச் சொல்ல முடியாத ஒளி "அலகில் சோதியன்"[1] என்றது காண்க. சோதியாய் - ஒளியை உடையவனே, 'நின் முடிமேல் திங்கள், பகலே நிலா எறிக்குங் கொல்லோ' என இயைக்க. வடிவு - வட்டம் என்றது, 'நின் முடிமேல் திங்கள் குறையுடையது' - எனக் குறிப்பால் நகை தோற்றியவாறு. செங்கதிர் - ஞாயிறு. நெடிது உலவி நின்று - பகல் முழுதும் மறையாது உலவி நின்று. "எறிக்குங் கொல்" என்றது, சொல்லால் ஐயம் போலக் கூறினும், பொருளால் துணிவு உணர்த்தியதேயாம். ஓகாரம் சிறப்பு. 'நீ அணிந்துள்ள திங்கள் உலகத் திங்களன்று; அருளுருவத் திங்களாம்' என்றபடி. "கனக மலை அருகே, - போயின காக்கையும் அன்றே படைத்தது பொன் வண்ணமே"[2] என்றாற் போல, 'சிவனை அடைந்த பொருள்கள் யாவும் சிவமே யாதலல்லது வேறாகா' என்பதனைக் குறிப்பால் உணர்த்தியதாம்.**

***107. பொழிப்புரை :-*** *பெருமானே! சந்திரன் பிரகாசிக்கின்ற அழகிய*

---

*1. பெரியபுராணம் - 1*

*2. இந்நூல் - 41*

107. நிலாவிலங்கு வெண்மதியை நேடிக்கொள் வான்போல்
உலாவி உழிதருமா கொல்லோ! – நிலாஇருந்த
செக்கரவ் வானமே ஒக்குந் திருமுடிக்கே
புக்கரவங் காலையே போன்று. 64

108. காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு; – மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை; மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு. 65

---

*செவ்வானத்தைப் போன்ற அழகிய சடை முடிக்குள்ளே புகுந்த பாம்பு, நிலவொளியாய் விளங்கும் பிறைச் சந்திரனைத் தேடிப் பிடிப்பதற்காகக் காற்றைப் போலச் சுழன்று சுற்றித் திரிகின்றதோ? இது என்ன வியப்பு!*

***அருஞ்சொற்பொருள் :-*** *“நிலா இருந்த” என்பது தொடங்கிச் சென்று, “நிலா இலங்கு வெண்மதியை நேடிக் கொள்வான்” என்பதை, “அரவம்” என்பதன் பின்னரும், “போல்” என்பதை, “கொல்லோ” என்பதன் பின்னரும் வைத்து உரைக்க. “போல்” என்பது ‘போலும்’ என முற்றுப் பொருள் தந்தது. கொல், அசை, ஓகாரம், சிறப்பு. கொள்வான், வான் ஈற்று வினையெச்சம். செக்கர் அவ்வானம் - செம்மை நிறம் உடைய அந்தவானம். ‘புக்க’ என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. திருமுடிக்கே - திருமுடிக்கண்ணே; உருபு மயக்கம் “காலை” என்பதில் ஐ இரண்டாம் வேற்றுமை யுருபு. கால் - காற்று. ‘காற்றையே போன்று உலாவி உழிதரும்’ என இயையும். ‘அரவம் சடை முடியில் மிக விரைவாக ஊர்ந்து உழலுதல், அங்குள்ள நிலாவை, ‘எங்கே உள்ளது’ எனத் தேடி உழல்வது போல் உள்ளது’ என்றது தற்குறிப்பேற்ற அணி. நிலா இரண்டில் முன்னது திங்களின் ஒளி; பின்னது திங்கள்.*

***108. பொழிப்புரை :-*** *எம்பெருமானுடைய திருமேனி காலை ஞாயிறு போன்றது. அவன் திருமேனியில் விளங்கும் திருவெண்ணீறு நடுப்பகல் போன்றது. சடைத் தொகுதியோ அந்திச் செவ்வானம் போன்றது. அப்பெருமானுடைய திருக் கழுத்தோ இம்மூன்று மில்லாத நள்ளிருளைப் போன்றது. (ஆகா என்ன வியப்பு!)*

***அருஞ்சொற்பொருள் :-*** *காலை நேரம், அருணோதயத்தாலும், உதய சூரியனாலும் வானம்மிகச் சிவந்து தோன்றுதலால், அக்காலத்து வானம் சிவனது திருமேனிக்கும், உச்சி வேளையில் சூரியன் வெண்ணிறமாய் நிற்றலால் வானமும் வெளிது ஆதலின், அக்காலத்து வானம் அவன் அணிந்துள்ள வெண்ணீற்றிற்கும், மாலையில் மறைகின்ற ஞாயிற்றின் கதிர்கள் பல திசைகளிலும் பல கம்பிகள் போல வீசுதலால் அவற்றின் தோற்றம் அவனது விரிந்த சடைக்கும், இரவு நேரத்தில் மிகுந்துள்ள இரவு மிகக் கரிதாய்த் தோன்றலின் அஃது அவன் கறை*

**109.** மிடற்றில் விடம்உடையீர், உம்மிடற்றை நக்கி
மிடற்றில் விடங்கொண்ட வாறோ! – மிடற்றகத்து
மைத்தாம் இருள்போலும் வண்ணங் கரிதாலோ,
பைத்தாடும் நும்மார்பிற் பாம்பு. **66**

*மிடற்றிற்கும் உவமையாயின. இவை மாலையுவமை யணி. 'காலை, பகல்' என்பன அக்காலத்து வானத்தையும், 'மாலை' என்பதும் அக்காலத்துக் கதிர் வீச்சினையும் குறித்தன. மாலை - மயங்கும் மாலை. அந்தக் காலம், 'மாலையின் உரு' என இயையும். தாங்கு உரு - தாங்கப்படும் உரு. வேலை - பொழுது. கடும் பகல் - மிக்க பகல்; நண்பகல். மற்று, அசை, "அவன்" என்பது சிவபிரானைச் சுட்டியது பண்டறி சுட்டு. வீங்குதல் - மிகுதல். சிவபிரானது திருமேனியது உறுப்பழகைப் புகழ்ந்தவாறு.*

***109. பொழிப்புரை :-*** *திருக்கழுத்திலே நஞ்சை உடைய பெருமானே! உமது திருமார்பிலே படம் விரித்து ஆடும் பாம்பானது, உமது திருக்கழுத்தை நக்கித் தன் கழுத்தில் நஞ்சை ஏற்றுக் கறுப்பு நிறம் பெற்றதோ? அல்லது, அதன் நிறமே உமது திருக்கழுத்தின் மையிருள் போன்ற கருப்பு நிறம் தானோ? (அறிகிலோம்)*

***அருஞ்சொற்பொருள் :-*** *'மிடற்றில் விடம் உடையீர் நும் மார்பில் பைத்து ஆடும் பாம்பு வண்ணம் (நும்) மிடற்றில் மைத்து ஆம் இருள் போலும் கரிது; (அது) உம் மிடற்றை நக்கித் (தனது) மிடற்றில் வடம் கொண்டவற்றாலோ?' என இயைத்துப் பொருள் கொள்க. 'உமது மிடற்றின் நிறமும், நும் மார்பில் ஆடும் பாம்பின் நிறமும் ஒன்றாய் இருக்கின்றதே' என வியந்துரைத்தவாறு. பின் வந்த மிடற்றுக்கு, 'தன்' என்பது வருவிக்க. "உம்" என்பதை ஈற்றில் வந்த மிடற்றுக்கும் கூட்டுக. 'விடம் கொண்டவாற்றால்' என உருபு விரிக்க. ஓகாரம் தெரிநிலைப் பொருட்டு. மைத்து ஆம் - மையின் தன்மை யுடையதாகி. "பாம்பு வண்ணம் கரிது" எனப் பண்பின் வினை பண்பின் மேல் நின்றது. ஆல், ஓ அசைகள். பைத்து - படத்தை உடையதாய். இது, 'பை' என்னும் பெயர் அடியாகப் பிறந்த வினைச் சொல்.*

***110. பொழிப்புரை :-*** *பொன்னிறம் பொருந்திய திருமேனியையும் பேரொளி பொருந்திய நெற்றிக் கண்ணையும் உடைய எம் பெருமான், பாம்பும்-சந்திரனும், இளமானும்-கொல்புலியும் நெருங்கிப் பழக வைத்துக் கீழ்நோக்கி விரைந்தோடி வரும் கங்கையாற்றை அடக்கி வைத்துக் கொண்டிருத்தலாலே, அவனுடைய திருவடியில் அணிந்த கழலே வீரக்கழல்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *இதனுள் "சிலம்பு" என்றது கழலையே குறித்தது, மாதொரு பாகமாம் வடிவில் சிவன் திருவடியில் மேயது கழலேயாகையால், 'கழல்' வீரம் உடையார்க்கே உரியது. முதல் இரண்டு அடிகளில் கூறியவாறு. சிவபெருமான் பகைப் பொருள்களைத் தனது மேனியில் பகைதீர்த்துப் பயில*

110. பாம்பும் மதியும்; மடமானும், பாய்புலியுந்
தாம்பயின்று தாழருவி தாங்குதலால் – ஆம்பொன்
உருவடியில் ஓங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்
திருவடியின் மேய சிலம்பு. 67

111. சிலம்படியாள் ஊடலைத் தான் தவிர்ப்பான் வேண்டிச்
சிலம்படிமேற் செவ்வரத்தஞ் சேர்த்தி – நலம்பெற்(று)
எதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான்
முதிரா மதியான் முடி. 68

---

*வைத்தமையாலும், தாங்கற்கரிய கங்கையைத் தலையில் தாங்கினமையாலும் அவன் கழல் அணிதல் தக்கதே "பயின்று" என்பதை, 'பயில' எனத் திரிக்க. தாழ்தல் - வீழ்தல். "அருவி" என்றது கங்கையை. 'பயின்று, தாங்குதலால் சிலம்பு ஆம்' என இயைக்க. ஆம் - பொருந்துவதே. உரு - நிறம். 'வடிவில் ஓங்குநின்ற ஒளி' என்க. சிவபிரானது எல்லாம் வல்ல தன்மையை வியந்தவாறு. பெருமான் புலித்தோலையே உடையனாயினும், மான் அதையே கண்டு, 'புலி' என்று அஞ்சும் ஆகலின், 'அங்ஙனம் அஞ்சவில்லை' என்பது கருத்து.*

***111. பொழிப்புரை :-*** ***இளம் பிறையைச் சூடிய பெருமான், சிலம்பு அணிந்த திருவடியையுடைய உமையம்மையின் ஊடலைத் தீர்ப்பதற்காக (அவளடியிலே வணங்கும் பொழுது) அத்திருவடியில் ஊட்டிய செம்பஞ்சுக் குழம்பைத் தன் திருமுடியில் தாங்கி, அச்செம்பஞ்சுக் குழம்புக்கு ஒப்பாகச் சிவந்த செவ்வானத்தைக் காட்டிலும் சிறந்த செவ்வண்ணத் திருக்கோலத்தை ஏற்று அருளினான்.***

***அருஞ்சொற்பொருள் :-*** ***'செந்நிறத்தால் செக்கர் வானமும், சிவபெருமானது சடைமுடியும் ஒன்றை ஒன்று வெல்லப் பார்க்கும் நிலையில், சிவபெருமான் உமாதேவியின் ஊடலைத் தவிர்க்க வேண்டி அவளது பாதங்களில் தனது முடியைப் பல முறை சேர்த்துதலால் அப்பாதங்களில் உள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு பட்டுச் சடைமுடி செக்கர் வானத்தை வென்று விட்டது' என்பது இப்பாட்டின் திரண்ட பொருள். இஃது உவகைச்சுவை. இதனை, 'சிருங்கார ரசம்' என்பர் வட நூலார். அனைத்துச் சுவைகளையும் பத்திச் சுவைக்குத் துணையாகவே திரு முறைகள் கொள்ளும்.***

*செவ்வரத்தம் - செம்பஞ்சு. 'செவ்வரத்தத்தில் சேர்த்தி' என உருபு விரிக்க. "சேர்த்தி" என்றாரேனும், 'சேர்த்திச் சேர்த்தி' என அடுக்கிக் கூறுதல் கருத்தென்க. நலம் - அழகு. "பெற்று" என்பதில் 'பெறுவித்து' என்னும் பிறவினை விகுதி தொகுக்கப்பட்டது. செக்கர் - செவ்வானம் இதன்பின், 'சிறக்க' என ஒரு சொல் வருவிக்க. 'முதிரா மதியான் தனது முடியைச் செவ்வரத்தத்தில் சேர்த்து நலம் பெறுவித்து இக்கோலம் செய்தான்' என்க. மதி திங்களாயினும், 'அறிவு' என்றும்*

112. முடிமேற் கொடுமதியான், முக்கணான் நல்ல
அடிமேற் கொடுமதியோம் கூற்றைப் – படிமேற்
குனியவல மாம்அடிமை கொண்டாடப் பெற்றோம்
இனியவலம் உண்டோ, எமக்கு. 69

113. எமக்கிதுவோ பேராசை; என்றுந் தவிரா(து)
எமக்கொருநாள் காட்டுதியோ ? எந்தாய் – அமைக்கவே
போந்தெரிபாய்ந் தன்ன புரிசடையாய், பொங்கிரவில்
ஏந்தெரிபாய்ந் தாடும் இடம். 70

---

*பொருள்தரும் ஆதலின், 'ஒரு பெண்ணின் அடிகளில் பல முறை முடி தோய வணங்குகின்றான்' என்னும் நகை நயம் தோன்ற அப்பொருள் மேற் செல்லும் குறிப்பும் உடையது.*

***112. பொழிப்புரை :-*** *தன் திருமுடிமேல் வளைந்த பிறைச் சந்திரனைத் தாங்கியவனாகிய முக்கண்ணன் ஆன எம்பெருமானுடைய திருவடிகளைத் தலைமேல் கொண்டதனால், யமனையும் ஒரு பொருளாக மதிக்கமாட்டோம். தரையிலே விழுந்து அத்திருவடிக்கு தலை வணங்கியதனால், அடிமையாம் வலிமை கிடைக்கப் பெற்றோம். இனி எங்களுக்குத் துன்பம் யாதும் உண்டோ? (இல்லை).*

***அருஞ்சொற்பொருள் :-*** *கொடு மதி - வளைந்த பிறை. "வாலறிவான் நற்றாள்"[1] என்பதன் உரையில், "பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் 'நற்றாள்' என்றார்" எனப் பரிமேலழகர் உரைத்த உரை இங்கு, ''நல்ல அடி'' என்பதற்குக் கொள்ளத்தக்கது. மேற் கொடு - தலைமேற் கொண்டமையால், 'கூற்றை மதியோம்' என்க. கூற்று, இறப்பைத் தரும் தெய்வம்; யமன். படி - பூமி. 'படிமேல் பொருந்தத் தலை குனிய வல்லமாகிய அடிமைத் தன்மையைக் கொண்டாடப் பெற்றோம்' என்பதில் 'வல்லம்' என்பது இடைக் குறைந்து நின்றது. கொண்டாடுதல் - பாராட்டுதல். அவலம் - துன்பம்.*

***113. பொழிப்புரை :-*** *தீயை அமைக்க, அது பற்றிக்கொண்டு பெருகியோடுவது போன்று முறுக்கிய சடைமுடியையுடைய பெருமானே! எம் தந்தையே! நள்ளிரவிலே, எரிகின்ற நெருப்பிலே, நீ குதித்துக் கூத்தாடுகின்ற இடத்தை எங்களுக்கு ஒரு நாளேனும் காட்டியருளுவாயா? எங்களுக்கு இஃதொரு நீங்காத பேராசையாய் இருக்கின்றது.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'எந்தாய், சடையாய், இரவில் நீ ஆடும் இடம் எமக்கு ஒருநாள் காட்டுதியோ? இதுவோ எமக்கு ஒரு பேராசையாய் (உள்ளது) தவிராது' என்க. அமைக்கவே போந்த எரி - சிலர் செயற்கையாக அமைக்க அதனாலே உண்டான எரி, பாய்தல் - பரத்தல்; 'இயற்கையேயாயினும் செயற்கை போல அத்தனை அமைப்பாய் உள்ளது' என்பதாம். 'போந்த' என்பதன் ஈற்று*

**114.** இடப்பால, வானத் தெழுமதியை நீயோர்
மடப்பாவை தன்னருகே வைத்தால் – இடப்பாகங்
கொண்டாள் மலைப்பாவை கூறொன்றுங் கண்டிலங்காண்
கண்டாயே; முக்கண்ணாய், கண். **71**

---

*அகரம் தொகுத்தலாயிற்று. பொங்குதல் - இருள் மிகுதல். ஏந்து எரி - ஓங்கி எரியும் எரி. "இதுவோ" என்னும் ஓகாரம் சிறப்பு. "தவிராது" என்றது, 'தவிர்க்கினும் தவிராது' என்றபடி. "காட்டுதியோ" என்பதில் ஓகாரம் ஐயப் பொருட்டு ஆகலின், 'மாட்டாயோ' என்பதும் கொள்ளப்படும். 'சிவன் இரவில் எரியாடும் இடம் இந்தச் சுடுகாடாயின், யாவரும் அதனை எளிதிற் சென்று கண்டுவிடலாம்; 'அவன் காட்ட வேண்டும்' என்பதில்லை. ஆகவே, 'அதனைக்காண வேண்டும்' என்று ஓர் ஆசை தோன்றுதலும், அதனை நிரப்ப முடியாதிருத்தலும் நிகழா. அதனால், இரவாவது முற்றழிப்புக் காலமும், எரியாடும் இடமாவது சூக்குமமாகிய காரண நிலையுமாம் - என்பது கருத்து.*

***114. பொழிப்புரை :-** மூன்று கண்களையுடைய எம்பெருமானே! இடமகன்ற வானத்திலே எழுகின்ற சந்திரனை, திருமுடியில் வீற்றிருக்கும் கங்காதேவிக்கு அருகே, நீ வைத்தாயானால், உன் திருமேனியின் இடப் பாகத்திலே குடிகொண்ட உமையம்மையின் பாகத்தைக் காண இயலவில்லை. (மறைத்து விடுகின்றது) நீயே இதனை ஆராய்வாய்*

***அருஞ்சொற்பொருள் :-** 'முக்கண்ணாய்' என்பதை முதலிற்கொண்டு உரைக்க. இடப்பால் - 'இடப் பக்கத்தில் உள்ள மதி' என்க. ஓர் மடப்பாவை, கங்கை, கங்கை தலையிலேயிருப்பதால், மதியை (பிறையை) அவள் பக்கத்தில் தான் வைக்க வேண்டியுள்ளது. அஃது உண்மைதான்; ஆயினும் அதனால் நீ அழகாகச் சூடிய பிறையில் உன் இடப் பாகத்தில் உள்ள தேவிக்குத் தொடர்பில்லாமல், அவள் மாற்றாட்கன்றோ தொடர்புடையதாகின்றது? கண் கண்டாயே இதனை நீ உன் கண்ணால் கண்டு கொண்டு தானே இருக்கின்றாள். ('இதற்கு என் செய்தாய்' என்பது இசையெச்சம். 'நீ, இடப்பாகத்தில் ஒருத்தியிருக்க, மற்றொருத்தியைத் தலையில் வைத்தது பிழை' என்பது குறிப்பு). இதுவும் நிந்தாத் துதி. "கண்டிலம் காண்" என்பதில் காண், முன்னிலையசை. கண் கண்டாயே' என மாற்றி, 'கண்ணால்' என உருபு விரிக்க. இனி, ஈற்றில் "கண்" என்பதை, 'காண்' எனப் பாடம் ஓதி, 'கண்டாயே; இதற்கு ஒரு வழியைக் காண்' என உரைப்பினும் ஆம்.*

***115. பொழிப்புரை :-** ஆகாயத்திலே ஆட்சிபுரியும் சந்திரனைத் தலையில் சூடிய பெருமானே! பேருலகங்கள் ஏழுக்கும் கருணை புரிவோனே! உன்னை 'என் உள்ளம் மகிழக்கண்டு', 'என் தந்தையே!' எனத் துதித்து வணங்கித் திருத்தொண்டு புரியப் பெற்றிலனேல், அண்டங்கள் அனைத்தையும் ஆட்சி புரியக் கிடைத்தாலும், அதனை விரும்பமாட்டேன். இதுவே என் தீர்மானம்.*

**115.** கண்டெந்தை என்றிறைஞ்சிக் கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன்; — துண்டஞ்சேர்
விண்ணாரூந் திங்களாய், மிக்குலகம் ஏழினுக்குங்
கண்ணாளா, ஈதென் கருத்து. 72

**116.** கருத்தினால் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாஞ் சிக்கெனநான் சொன்னேன்; — பருத்தரங்க
வெள்ளநீர் ஏற்றான் அடிக்கமலம் நீ விரும்பி
உள்ளமே எப்போதும் ஒது. 73

---

***அருஞ்சொற்பொருள் :-*** *'நின்னைக் கண்டு நினக்குப் பணி செய்யேனேல்' என்க. கைப் பணி - கையால் செய்யும் தொண்டு. சிறப்புடைமை பற்றி இதனை எடுத்தோதினார். ஆகவே, மனத்தொண்டும், வாய்த்தொண்டும் சொல்லாமே அடங்கின. "செய்யேனேல்" என்றது, 'செய்யும் வாய்ப்பைப் பெறேனாயின்' என்றபடி. அண்டம் - வானுலக ஆட்சி. இதனைக் கூறவே, மண்ணுலக ஆட்சியும் அடங்கிற்று. திங்களாய் - திங்களை அணிந்தவனே. இதனையும், "கண்ணாளா" என்பதையும் முதலிற் கொள்க. 'மிக்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "கண்" என்றது, கண் போலும் தன்மையை. அஃதாவது நன்னெறி தீநெறிகளை விளக்கும் தன்மை. ஆளன் உடையவன். கைப்பணி பிறப்பை அறுப்பதும், மண்ணுலக விண்ணுலக ஆட்சிகள் பிறப்பை மிகுவிப்பனவும் ஆதலின் அவை முறையே விரும்பப்படுவதும், வெறுக்கப்படுவனவும் ஆயின.*

***116. பொழிப்புரை :-*** *மனமே! பெரிய அலைகளை உடைய நீர்ப்பெருக்கு ஆகிய கங்கையைச் சடையின்மேல் தாங்கியருளிய சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளை நீ எப்பொழுதும் வாழ்த்தி வணங்குவாய். உன் உள்ளத்தினால் நினைத்த எல்லாச் செயல்களும் விரைவில் உறுதியாய்க் கைகூடும். நான் உனக்கு இதனைச் சொன்னேன்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"உள்ளமே" என்பதை, "பருத் தரங்கம்" என்பதற்கு முன்னே கூட்டி, அது முதலாக உரைக்க. தரங்கம் - அலை. வெள்ள நீர் - மிக்க நீர். வாயின் தொழிலாகிய ஓதுதலை நெஞ்சிற்கு ஏற்றியது இலக்கணை. நெஞ்சிற்குக் கருத்து உள்ளதுபோலக் கூறியதும் அது. திருத்தலாம் - நிரப்பலாம். சிக்கென - உறுதியாக.*

***117. பொழிப்புரை :-*** *இடம் அகன்ற மண்டை ஓடு ஆகிய பிச்சைப் பாத்திரம், குளிர்ந்த பெரிய கடல்கள் பலவற்றையும் கொண்டு வந்து பெய்தாலும் சிறிதும் நிறையவில்லை என்று உலகத்தார் சொல்வார்கள். ஆயினும், தாருகாவனத்து முனிபத்தினிகள் யாதும் உணராமல் இட்ட பிச்சையால் நிறைந்து விட்டது எப்படி? (இஃது ஒரு வியப்பு).*

117. ஒத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்தட்ட
ஏதும் நிறைந்தில்லை என்பரால்;— பேதையர்கள்
எண்ணா திடும்பலியால் என்னோ நிறைந்தவா
கண்ணார் கபாலக் கலம். 74

118. கலங்கு புனற்கங்கை ஊடால லாலும்
இலங்கு மதியியங்க லாலும் — நலங்கொள்
பரிசுடையான் நீள்முடிமேற் பாம்பியங்க லாலும்
விரிசடையாங் காணில் விசும்பு. 75

---

***அருஞ்சொற்பொருள் :-*** *ஓதம் - அலை. "எத்தனை" என்பது ஆகுபெயராய் அவற்றின் நீரைக் குறித்தது. அட்டுதல் - சேர்த்தல். 'அட்டவும்' என உம்மை விரிக்க. 'நிறைந்தது' என்பதில் அகரம் தொகுத்தல். அமர் நீதி நாயனார் நாட்டிய துலாக்கோல் மண்ணுலகத்ததாயினும் இறைவனது கோவணத்தைத் தாங்கிய தட்டு, எதிர்த் தட்டில் எத்தனைப் பொருள்களை வைப்பினும் மேல் எழாது இருந்தமை போல, கபாலம், பிரமன் தலையேயாயினும் இறைவன் கையில் இருத்தலால் எத்தனை கடல்களின் நீரை வார்ப்பினும் நிரம்பாதாயிற்று. பேதையர்கள் - பெண்கள். எண்ணாது - பாத்திரத்தின் பெருமையை அறியாமல். பலி - பிச்சை. 'கலம் பலியால் நிறைந்தவா என்னோ? என்க. (நிறையவில்லை, நிறைந்து விட்டதுபோல இறைவன் அப்பாற் சென்றான்' என்பது குறிப்பு. கண் ஆர் - இடம் மிகுந்த. கலம் - பாத்திரம். இறைவனை அடைந்த பொருள்களும் அவனைப் போலவே அளப்பரிதாதல் கூறியபடி.*

***118. பொழிப்புரை :-*** *அழகு மிகுந்த இயல்பு உடைய சிவபெருமானுடைய நீண்ட சடை முடியின் மேல் கலங்கிவரும் நீரையுடைய கங்கையாறு சஞ்சரிப்பதனாலும், விளங்குகின்ற பிறைச்சந்திரன் தவழ்ந்து கொண்டிருப்பத னாலும், பாம்புகள் ஊர்ந்து கொண்டிருப்பதனாலும், அவ்விரிந்த சடை முடியாகத் தோற்றம் அளிக்கின்றது ஆகாயம்!*

***அருஞ்சொற்பொருள் :-*** *ஊடு - உள்ளே, ஆலல் - ஒலித்தல். அசைதலுமாம். பரிசு - தன்மை; இயல்பு. 'நீள் முடிமேல் விரி சடை' என இயைக்க. காணில் - பார்க்கும்பொழுது. 'சடை விசும்பாம்' என்க. ஆக்கம் உவமை குறித்து நின்றது. 'கங்கை மழைபோலவும், பாம்பு இராகு போலவும் தோன்றுகின்றன' என்பதாம். இஃது ஏது உவமை யணி.*

***119. பொழிப்புரை :-*** *எங்கள் தந்தையே! சுவர்க்கத்திலே வாழ்வதற்குரிய நல்வினையை உடைய தேவர்கள் வந்து முடிபட வணங்குவதனால், அவர்களுடைய பொன்மணிக் கிரீடங்கள் உராய்ந்து உன்னுடைய அழகிய செந்தாமரை போலச் சிவந்த திருவடிகள், தழும்பு ஏறி அளவு மீறிச் சிவந்து போயினவே! அந்தோ, பாவம்!*

119\. விசும்பில் விதியுடைய விண்ணோர் பணிந்து,
பசும்பொன் மணிமகுடந் தேய்ப்ப — முசிந்து,
எந்தாய் தழும்பேறி யேபாவம் பொல்லாவாம்
அந்தா மரைபோல் அடி. 76

120\. அடிபேரிற் பாதாளம் பேரும்; அடிகள்
முடிபேரின் மாமுகடு பேருங் — கடகம்
மறிந்தாடும் கைபேரில் வான்திசைகள் பேரும்;
அறிந்தாடும் ஆற்றா(து) அரங்கு. 77

121\. அரங்கமாப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும்! ஏழாய் — இரங்குமேல்
என்னாக வையான்! தான் எவ்வுலகம் ஈந்தளியான்
பன்னாள் இரந்தாற் பணிந்து. 78

---

***அருஞ்சொற்பொருள் :-*** *"எந்தாய்" என்பதை முதலிற் கொள்க. விசும்பின் - வானின்கண் உள்ள. விதி, இங்கு நல்வினை. "விண்ணோர்" என்பது 'தேவர்' என்னும் அளவாய் நின்றது. "மகுடத்தைத் தேய்ப்ப" என்க. 'மகுடத்தால் தேய்ப்ப' என்றும் ஆம். முசிந்து - தேய்ந்து. ஏகாரம் பிற காரணங்களினின்று பிரித்தலின் பிரிநிலை. பொல்லா ஆம் - அழகில்லன ஆகின்றன. 'நின் அடி' என வருவித்து, 'தேய்ப்ப முசிந்து, தழும் பேறிப் பொல்லா ஆம்' என வினை முடிக்க. பாவம், இரக்கக் குறிப்புச் சொல். விண்ணோர் யாவரும் சிவபெருமானது திருவடிகளில் தங்கள் முடி தோய வணங்குதலைக் குறித்தவாறு.*

***120. பொழிப்புரை :-*** *எம் பெருமானே! கூத்தாடுவதற்காக உன் திருவடி பெயர்ந்தால், பாதாள உலகங்கள் ஏழும் நிலைபெயரும். திருமுடி அசைந்தாலோ, பேரண்ட முகடும் நிலைபெயரும், கங்கணங்கள் சுழன்று ஆடுகின்ற திருக்கைகள் அசைந்தால் பெருந்திசைகள் எட்டும் தடுமாறும். ஆடரங்கோ நிலை கொள்ளாது. எனவே, கவனித்துத் திருக்கூத்து ஆடுவாயாக!*

***அருஞ்சொற்பொருள் :-*** *'அடிகளது' என உருபு விரித்து, முதலிற் கூட்டுக. அடிகள் - சுவாமிகள். இஃது உயர்வு குறித்து வரும் பன்மைச் சொல். முகடு - அண்டத்தின் உச்சி. அது பேர்தலாவது, உடைதல், "மறிந்து" என்பதை, 'மறிய' எனத் திரிக்க. மறிதல் - உழலுதல். வான், இங்குச் சேய்மை. 'ஆகலான் அரங்கு ஆற்றாது; அதனை யறிந்து மெல்ல ஆடுமின்' என்பதாம். ஆடும், முன்னிலைப் பன்மை ஏவல்., சிவபெருமானது விசுவரூபத்தினைச் சிறப்பித்தவாறு.*

***121. பொழிப்புரை :-*** *ஏழை நெஞ்சமே! பேய்கள் திரியும் சுடுகாட்டை ஆடரங்கமாகக் கொண்டு கூத்தாடுகின்ற எம்பெருமான், எல்லா உயிர்களுக்கும் சும்மா இரங்கியருளுவானோ? பல காலம் வணங்கிப் பிரார்த்தித்தால்,*

*இரங்குவான்; அங்ஙனம் இரங்கியருளினால், எவ்விதப் பெருமையில் தான் வைக்க மாட்டான்! எந்த உலகத்தைத்தான் தந்தருள மாட்டான்! (எல்லாம் தந்தருளி, எல்லாப் பெருமையிலும் இருக்க வைப்பான்).*

***அருஞ்சொற்பொருள் :-*** *'ஏழாய், ஆடுவான் எவ்வுயிர்க்கும் வாளா இரங்குமோ! பன்னாள் பணிந்து இரந்தால் (இரங்கும்), இரங்குமேல், தான், என்னாகவையான்; எவ்வுலகம் ஈந்து அளியான்!' என இயைத்துக் கொள்க. "அரங்கமாப் பேய்க் காட்டில் ஆடுவான்" என்றாரேனும், 'பேய்க் காடு அரங்கமா அதன்கண் ஆடுவான்' என்றல் கருத்து என்க. எவ்வுயிர்க்கும் - எத்துணைச் சிறப்புடைய உயிர்க்கும். அவை அயன், மால், ஏனைத் தேவர் முதலியோர். 'அவரெல்லாம் அவனைப் பன்னாள் பணிந்து இரந்தே தத்தம் பதவிகளைப் பெற்றனர் என்றபடி. எனவே, 'அவனைப் பன்னாள் பணிந்து இரந்தால் திருவுளம் இரங்குவான்' என்பதற்கும், 'இரங்கினால் எத்தகைய சிறப்பைத் தான் அவன் தரமாட்டான்' என்பதற்கும் அவ் அயன், மால் முதலியோரே சான்று' என்றவாறு. ஏழாய் - அறிவிலியே. இது தமது நெஞ்சத்தை விளித்தது. "இரங்குமோ" என்னும் ஓகாரம் எதிர்மறை. 'இரங்கு மேல்' என்ற அனுவாதத்தால், இரங்குதலும் பெறப்பட்டது. அளித்தல் - காத்தல். 'எத்தகைய சிறப்பையும் எய்தச் செய்வான். எந்த உலகத்தையும் ஈந்து அளிப்பான்' எனக் கூறற்பாலதனை இங்ஙனம் வினாவாகக் கூறினார். வலியுறுத்தித் தெளிவித்தற்கு 'சிவன் வாளா இரங்கான்; பன்னாள் பணிந்து இரந்தால் இரங்குவான்' என்பது உணர்த்தியவாறு.*

> *சும்மா கிடைக்குமோ, சோணாசலன்பாதம்!*
> *அம்மால் விரிஞ்சன் அறிகிலார்; - நம்மால்*
> *இருந்துகதை சொன்னக்கால் என்னாகும் நெஞ்சே*
> *பொருந்த நினையாத போது![1]*

*எனப் பிற்காலத்தவரும் கூறினார்.*

> *சிவன்எனும் நாமம் தனக்கே உடைய*
> *செம்மேனி எம்மான்*
> *அவன்எனை ஆட்கொண் டளித்திடுமாயின்*
> *அவன்றனை யான்*
> *பவன்எனும் நாமம் பிடித்துத் திரிந்து*
> *பன்னாள் அழைத்தால்*
> *இவன்எனைப் பன்னாள் அழைப்பொழியான் என்று*
> *எதிர்ப்படுமே[2].*

*என்பது அப்பர் திருமொழி.*

---

*1. குகை நமசிவாயர் - அருணகிரி யந்தாதி*

*2. திருமுறை - 4. 112. 9*

122. பணிந்தும் படர்சடையான் பாதங்கள் போதால்
அணிந்தும் அணிந்தவரை ஏத்தத் – துணிந்தும்
எந்தையார்க்(கு) ஆட்செய்யப் பெற்ற இதுகொலோ
சிந்தையார்க் குள்ள செருக்கு. 79

123. செருக்கினால் வெற்பெடுத்த எத்தனையோ திண்தோள்
அரக்கனையும் முன்னின்(று) அடர்த்த – திருத்தக்க
மாலயனுங் காணா(து) அரற்றி மகிழ்ந்தேத்தக்
காலனையும் வென்றுதைத்த கால். 80

---

*உழப்பின் வாரா உறுதிகள் உளவோ!*
*கழப்பின் வாராக் கையற வுளவோ![3]*

*என்றார் பட்டினத்தடிகள்.*

***122. பொழிப்புரை :-*** *விரிந்த சடை முடியை உடைய சிவபெருமானின் திருவடிகளை வணங்கியும், மலர்களைக் கொண்டு அர்ச்சித்தும், அவ்விதம் வழிபடுகிற அடியார்களைத் துதிக்கத் துணிந்தும், எக்காலத்திலும் எங்கள் தந்தையாகிய அப்பெருமானுடைய திருவடிகளுக்குத் தொண்டு செய்வதற்குரிய பேறுபேற்ற இதுவன்றோ எங்கள் மனதிற்குப் பொருந்திய பெருமிதம் ஆகும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"படர்சடையான் பாதங்கள்" என்பதை முதலிற் கொள்க. போது - பேரரும்பு. அணிதல் - அலங்கரித்தல். வினைக்கண் வந்த எண்ணும்மைகள் ஆட்செய்யும் வகைகளை எண்ணி நின்றது. கொல், அசை. ஓகாரம் சிறப்பு. "சிந்தையார்" என உயர்த்தற்கண் அஃறிணை உயர்திணையாய் மயங்கிற்று. செருக்கு - பெருமிதம். அஃதாவது, "ஒருவரை மதியாது உறாமைகள் செய்தல்"[1] பெரு மிதத்தைத் தம் சிந்தைமேல் வைத்து, அதனை வேறுபோற் கூறினார். 'சிவனுக்கு ஆட்செய்யப் பெறுகின்ற பேறு கிடைத்தற்கரியது' என்பதைக் குறித்தவாறு.*

***123. பொழிப்புரை :-*** *தெய்வத்தன்மை வாய்ந்த திருமாலும், பிரமனும் தேடிக் காணாமல் புலம்பிப் பிறகு, மகிழ்ந்து துதிக்கக் காட்சி அளித்து இயமனையும் வென்று உதைத்தருளிய எம்பெருமானுடைய திருவடிகள், செருக்கு மிகுதியால் திருக் கைலாய மலையைப் பெயர்த்தெடுத்த பல வலிமை வாய்ந்த தோள்களை யுடைய அரக்கனாகிய இராவணனைப் பெருவிரலால் அழுத்தி அடக்கியருள் புரிந்தன.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"திருத் தக்க" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. திரு - திருமகள். 'திருவுக்குத் தக்க' என நான்கன் உருபு தொகுத்தலாயிற்று.*

---

*3. 11ம் திருமுறை - திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 10*

*1. திருமுறை 7.68.1*

124. காலனையும் வென்றோம்; கடுநரகம் கைகழன்றோம்;
மேலை இருவினையும் வேரறுத்தோம்; – கோல
அரணார் அவிந்தழிய வெந்தீஅம் பெய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து. 81

---

*'திருவினால் தக்க' என மூன்றன் உருபு விரிப்பின் மாலுக்குக் குறையுண்டாகும். "காணாது" என்பதை, 'காணப்படாது நின்று' எனச் செயப்பாட்டு வினைப் பொருட்டாக்கி, அதனை, 'ஏத்தக் காணப்பட்ட' என ஒரு சொல் வருவித்து முடிக்க. இல்லையேல், "ஏத்த" என்பதற்கு முடிபின்றாம். 'காணப்பட்ட கால்' என்க. "வென்று உதைத்த" என்பதனை, 'உதைத்து வென்ற' எனப்பின் முன்னாக வைத்து, விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க. 'கால் அடர்த்த' என முடியும். அடர்த்த அடர்த்தன; ஒறுத்தன. வெற்பு - கயிலை மலை. "எத்தனையோ" என்றது, 'பல' என்றவாறு. எண் வரையறை கூறாது இங்ஙனம் கூறியது, அவனது வலி மிகுதியைக் குறித்தது. அதனானே அவன் செருக்கிய தன் காரணத்தை உணர்த்தற்கு. அரக்கன், இராவணன். உம்மை, பிறருக்கில்லாத அவனது தலைகளும், தோள்களும் பற்றிய சிறப்பைக் குறித்தது. முன் நிற்றல், அனைத்துறுப்புக்களும் பின் நிற்கத் தான் முன்னிற்றல். அதனால், 'அஃதே, காண் பார்க்கு முதலிற் காணப்படுவது' என்பதும் பெறப்பட்டது. 'அத்துணை வலியன் தோளால் முயன்று எடுத்த மாலையை, தாளால் (அதனுள்ளும் ஒரு விரலால்) தடுத்து ஒறுத்தவனோடு இகலி நிற்பார் யாவர்' என அவனது அளவிலாற்றலைக் குறித்தது, அதனானே அவனது தன்வயம் உடைமையையும் குறித்தவாறு.*

***124. பொழிப்புரை :-*** **அழகு வாய்ந்த முப்புரங்களையும் உடையோர் வெந்து சாம்பர் ஆகுமாறு கொடிய தீயைக் கக்கும் அம்பைத் தொடுத்த சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளைச் சேர்ந்ததனால், இயமனையும் வென்றுவிட்டோம்; கொடிய நரகத் துன்பங்களிலிருந்து நீங்கி விட்டோம். முன்செய்த நல்வினை தீவினையென்னும் இரண்டையும் வேரோடு களைந்து விட்டோம்.**

***அருஞ்சொற்பொருள் :- ''கோல அரணார்'' என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. கோலம் - அழகு - அரண் - மதில். முப்புரம். அரணார் - அவற்றையுடைய அசுரர். 'அவிந்து அழிய' என்பது ஒரு பொருட்பன்மொழி. தீ - தீக்கடவுள் 'தீக் கடவுளாகிய அம்பு' என்க. சரண அரவிந்தங்கள் - திருவடியாகிய தாமரை மலர்கள். சார்ந்து சார்ந்தமையால். கழன்றோம் - நீங்கினோம். கை, இடைச்சொல். மேல், இடமேல். அது காலத்தால் 'கீழ்' எனப்படும். ஐ சாரியை. மேலை வினை - முன்னே சேர்ந்து கிடக்கின்ற வினை; சஞ்சித கன்மம். 'வேரோடு' என மூன்றாவது விரிக்க. சஞ்சிதம் இன்மையால், 'பிறவியில்லையாயிற்று' என்பது கருத்து.***

**125.** சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே ஒத்திலங்கிச் சாராது
போர்ந்தார்க்குத் தீக்கொழுந்தின் பெற்றியதாம்; – தேர்ந்துணரில்
தாழ்சுடரோன் செங்கதிருஞ் சாயுந் தழல்வண்ணன்
வீழ்சடையே என்றுரைக்கும் மின். **82**

**126.** மின்போலுஞ் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்
என்போலுங் காண்பார்கட்(கு) என்றிரேல் – தன்போலும்
பொற்குன்றும் நீல மணிக்குன்றுந் தாமுடனே
நிற்கின்ற போலும் நெடிது. **83**

---

***125. பொழிப்புரை :-*** *நெருங்கி ஆராய்ந்து உணர்ந்தால், மாலைக் காலத்தில் மேற்குத் திசையிலே இறங்குகின்ற சூரியனின் சிவந்த கதிர்களையும் தோற்கச் செய்யும் செந்தீ வண்ணத்தானாகிய சிவபெருமானுடைய சடைமுடியே, மின்னலொளி அல்ல என்று சொல்லத்தகுந்த தொங்குகிற அச்சடை முடியானது அன்பர்களுக்கு அழகிய பொன் கொழுந்து போன்று விளங்கி, நெருங்காத அன்பரல்லாதவருக்கு தீக்கொடியின் தன்மை உடையதாகும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"தாழ் சுடரோனை" என்பது முதலாகத் தொடங்கி, "தேர்ந்து உணவில்" என்பதை ஈற்றிற் கூட்டி உரைக்க. தாழ் சுடரோன் - மறைகின்ற சூரியன். எனவே, செங்கதிர், மாலை வெயிலாம். சாய்தல் - தோல்வியுறுதல். 'சாயும் வண்ணன்' என இயையும். வீழ் - தொங்குகின்ற. மின் - மின்னல். "சடையே என்று உரைக்கும் மின்" என்றது உருவக அணி. "சடையே" என்னும் தேற்றேகாரம் உண்மையுவமைப் பொருட்டாய், உருவகத்தோடு இயைந்து வந்தது. 'சார்ந்தார் இன்பமே பெறுதலால் அவர்க்கு அழகி தாயும், சாராதார் ஒறுத்தலே பெறுதலால் அவர்க்கு அச்சம் தருவதாயும் உள்ளது' என்க.*

***126. பொழிப்புரை :-*** *மின்னலைப் போலச் சிவந்த சடையினை யுடைய சிவபெருமான் திருமாலுடன் இங்குச் சேர்ந்து காட்சியளித்தான். அக்காட்சி காண்பவர்களுக்கு எதைப் போன்றிருக்கும் என்று கேட்பீரானால்; எம்பெருமானைப் போன்ற பொன்மலையும், மற்றொரு நீலரத்தின மலையும் உடன் சேர்ந்து நீண்டு நிற்கின்றாற் போன்றிருக்கும்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'காண்பார் கட்கு என்போலும்' எனக் கூட்டுக. என் போலும் - எதைப்போல இருக்கும். "தன்போலும்" என்றது, 'சிவனைப் போல இருக்கின்ற பொற்குன்று' என்றபடி. இதனை நீல மணிக்கும் கூட்டி, 'திருமாலைப் போல இருக்கின்ற நீல மணிக்குன்று' என்க. உலக இலக்கியங்களில் உபயோகத்தை மிக உயர்த்துக் கூறுதற்பொருட்டு, உவமான உவமேயங்களை நிலைமாற்றிக் கூறுதல் உண்டு. அங்ஙனம் கூறியவழி அஃது, 'எதிர்நிலை உவமம்' என்றும், 'விபரீத உவமை' என்றும் சொல்லப்படும். அதற்குக் காரணம் உலகப் பொருள்களில் உண்மையில் உயர்ந்து நிற்பது உவமையே. அதனை, "உயர்ந்ததன்*

**127.** நெடிதாய பொங்கெரியுந் தண்மதியும் நேரே
கடிதாங் கடுஞ்சுடரும் போலும் – நெடிதாக
விண்டார்கள் மும்மதிலும் வெந்தீ யினிலழியக்
கண்டாலும் முக்கணாங் கண். **84**

**128.** கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால் எண்ணியும் – விண்ணோன்
எரியாடி என்றென்றும் இன்புறுவன் கொல்லோ!
பெரியானைக் காணப் பெறின். **85**

---

*மேற்றே உள்ளுங்காலை'' என்னும் தொல்காப்பியத்தாலும் அறியலாம். இறையிலக்கியத்தில் உவமேயமாகிய இறையே உண்மையில் உயர்ந்து நிற்பது. எனினும் இலக்கண மரபு பற்றி அங்ஙனம் கூறுதல் கூடும். 'பொற்குன்றும் நீல மணிக் குன்றும் உவமமாக வேறிடத்து வைத்துக் கருதப்படாது. அவையே பொருளாகக் காட்சியில் முன்னிலையில் வைத்து உணரப்படும்' என, அரியர்த்த உருவத்தைச் சிறப்பித்தவாறு. உடன் - ஒருசேர, 'இரு பாதியாக' என்ற படி, நிற்கின்ற - நிற்கின்றன. நெடிது - நெடுங்காலம். 'எல்லையில் காலம்' என்பதாம்.*

***127. பொழிப்புரை :-** சிவபெருமானுடைய மூன்றாவது திருக்கண்ணாகிய நெற்றிக்கண் கடுமையாகப் பகைத்தவராகிய திரிபுராதியரின் மூன்று மதில்களையும் கொடிய தீயினால் வெந்தழியச் செய்தாலும்; நீண்டு சுடர் விட்டெரியும் தீயும், குளிர்ந்து இன்பந் தரும் திங்களும், கடுமையாய்க் காய்ந்து வெப்பத்தைத் தரும் சூரியனும் போன்று விளங்கி, (முச்சுடரையும் தன்னிடம் உளதாக்கி) அருள் உடையதேயாகும்.*

***அருஞ்சொற்பொருள் :-** "கொடிதாக" என்பது முதலாகத் தொடங்கி யுரைக்குங்கால், 'வெந்தீ - இயற்கையிலே வெப்பம் உடையதாகிய தீ, மேலும் கொடிதாகி எரிக்க, அதனில்' என உரைக்க. விண்டார்கள் - பகையாகியவர்கள்; அசுரர். 'ஆறும் கண்' என இயைக்க. ஆறுதல் - மகிழ்தல். காட்சியால் உள்ளம் மகிழ்தலை, "கண்களிப்பக் கண்டார்கள்"[2] என்றது போல "கண் களித்தது" என்றல் வழக்கு. 'மூன்றாகிய கண்' என்றற்பாலதனை, "முக்கண் ஆம் கண்" என்றார். எனவே, முன் உள்ள "கண்" என்பது 'பொருள்' எனப் பொதுமையில் நின்றதாம். 'முக்கணான் கண்' எனப்பாடம் ஓதி, 'சிவனது கண்கள்' என உரைத்தல் சிறக்கும். "நெடிது" என்பதற்கு, முன்னை வெண்பாவில் உரைத்தவாறே உரைக்க. பொங்கு எரி - எரிகின்ற நெருப்பு. நேரே போலும் - ஒப்பனவேபோலும். கடிது - மிக்கது. "கடுஞ் சுடர்" என்பதில் கடுமை வெம்மை குறித்தது. வெஞ்சுடர், ஞாயிறு. "போலும்" என்பது உரையசை, 'மங்கலம் என்பது ஓர் ஊர் உண்டுபோலும்' என்றல் போல. உவமம் அன்று. 'சிவனது மூன்று கண்களே முச்சுடர்கள்' என உணர்த்தியவாறு.*

129. பெறினும் பிறிதியாதும் வேண்டேம் எமக்(கு)ஈ(து)
உறினும் உறாதொழியு மேனுஞ் — சிறிதுணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
நற்கணத்தில் ஒன்றாய நாம். 86

---

***128. பொழிப்புரை :-*** *எல்லாரிலும் மிகப்பெரியவனாகிய எம்பெருமானை யான் காணப்பெற்றதும், என் கண் குளிரத் தரிசித்தும், கைகளால் நிறைவுபெறக் கும்பிட்டும், மனத்தால் ஆசையடங்கத் தியானித்தும், 'தேவனே! தீயிலே நின்று கூத்தாடுவோனே!' என வாயார வாழ்த்தியும் இடைவிடாது வழிபட்டு இன்புற்றிருப்பேன் அல்லவா?*

***அருஞ்சொற்பொருள் :-*** *ஈற்றடியை முதலில் வைத்து உரைக்க. பெரியான் - மகாதேவன்; சிவன். 'அவனை' எனச் சுட்டுப் பெயர் வருவிக்க. ஆர - நிரம்ப. எண், எண்ணம் - அதனைச் செய்வதாகிய "என்" என்பது தாப்பிசையாய் முன்னும் சென்று இயைந்தது. என்று என்றும் - என்று என்றும் சொல்லியும். கொல், அசை, ஓகாரம், ஐயப் பொருட்டு பேரவாக் காரணமாக இங்ஙனம் ஐயுற்றவாறு. "காணப்பெறின்" என்பது, காணப்பெறலின் அருமை குறித்து நின்றது.*

***129. பொழிப்புரை :-*** *(பக்குவத்திற்கு ஏற்ற வண்ணம்) சற்றே அறிவு விளங்கச் செய்தருளி, நெருப்புக் கண்ணை நெற்றியின் மேலே பெற்றருளியவனாகிய எம்பெருமானுடைய பேய் வடிவுடைய சிவகணங்களுக்குள்ளே ஒன்றாம் பேறு எய்திய நாம், இவ்வாழ்வு கிடைத்தாலும், கிடைக்காது ஒழிந்தாலும் இஃது ஒன்றையே வேண்டுவது அல்லாமல், வேறு எது பெற்றாலும் விரும்பமாட்டோம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'மற்றொரு கண் நெற்றிமேல் சிறிது உணர்த்தி வைத்தான்றன் பேய் நற்கணத்தில் ஒன்றாய நாம். (இஃது) உறினும், உறாதொழியுமேனும் பிறிதுயாதும் பெறினும் வேண்டேம்' என இயைத்து முடிக்க. நெற்றிக் கண்ணைச் சிறிது உணர்த்தலாவது, 'உளது' என்னும் அளவிலே காட்டுதல். நன்கு திறப்பின் உலகம் வெந்தொழியும். கணம் - படை. "நற்கணம்" என்றமையால், சிவகணமாகிய பேய்கள். பாவப் பிறவியாகிய பேய்களாகாமை விளங்கும். ஞானிகளை உலகம் அவர்களது புறக்கோலம் பற்றி, பித்தராக நினைப்பினும் அவர் பித்தராகாமை போல்வதே இது. ஊழி முடிவில் உடம்பின்றிச் சிறிதே உணர்வு மாத்திரமாய் இருக்கும் உயிர்களே சிவப் படைகளாகக் கூறப்படுதலின் உண்மை. எனவே, பௌதிக உடம்பு நீங்கிச் சிவனைச் சார்ந்திருக்கும் உயிர்களும் அவையாகவே விளங்கும் என்க. அம்மையார் மேற்காட்டிய திருப்பதிகங்களிலும் இவ்வந்தாதியின் இறுதியிலும் தம்மை, ''காரைக்காற் பேய்'' எனக் குறித்தமையால், அவர் அந்நிலையராகியே இறைவனைச் சார்ந்தமைத் தெளிவு. அதனால் நம்பியாரூரர் இவரது வரலாற்றை, "பேயார்" என்ற ஒரு சொல்லில் அடக்கி அருளிச் செய்தார். சேக்கிழார்,*

**130.** நாமாலை சூடியும் நம்ஈசன் பொன்னடிக்கே
பூமாலை கொண்டு புனைந்தன்பாய் – நாமோர்
அறிவினையே பற்றினால் எற்றே தடுமே
எறிவினையே என்னும் இருள். **87**

---

*மெய்யில் ஊனுடை வனப்பை யெல்லாம்*
*உதறி, எற்புடம்பே யாகி,*
*வானமும், மண்ணும் எல்லாம்*
*வணங்குப்பேய் வடிவ மானார்[1].*

*என விரித்தும்,*

*பொற்புடைச் செய்ய பாத*
*புண்டரீ கங்கள் போற்றும்*
*நற்கணத் தினில்ஒன் றானேன்*
*நான்என்று நயந்து பாடி[2].*

*என மேற்கோட்டியும் அருளிச் செய்தார். இவ்விடத்திலும் அம்மையார் பெற்ற பேய் வடிவம்* ***"வானமும் மண்ணும் எல்லாம் வணங்கு பேய் வடிவம்"*** *எனப் பட்டமை நோக்கத் தக்கது. இத்தகைய நற்பேறு கிடக்கப் பெற்ற பெருமிதம் பற்றி அம்மையார் தம்மை "நாம்" என்றும், "வேண்டேம்" என்றும், 'எமக்கு' என்றும் பன்மைச் சொல்லாற் குறித்தருளினார். 'பிற பேறுகளோடு தமக்கு இயைபில்லாமையால் அவை தம்மைக் கிட்டப் போவதில்லை' என்பது தோன்ற, "பெறினும்" என எதிர்மறை உம்மை கொடுத்துக் கூறினார். 'பிற பேறுகள் எல்லாம் இதன் முன் எம்மாத்திரம்' என்பது கருத்து. உறுதல் நன்மை பயத்தல்.*

***130. பொழிப்புரை :-*** *எம்பெருமானுடைய திருவடிக்குப் பாமாலை சூட்டியும், பூமாலை புனைந்து அலங்கரித்தும், அன்பு மிகுதியினால் பணிபுரியும் திருநெறியைப் பின்பற்றினால், நம்மைத் துன்புறுத்தும் தீவினையாகிய இருள், மேலும் துன்புறுத்துமோ? (துன்புறுத்தாது).*

***அருஞ்சொற்பொருள் :-*** *நா மாலை - நாவால் தொடுக்கப் படும் மாலை; சொன் மாலை; பா மாலை. "நம் ஈசன் பொன் அடிக்கே" என்பதை முதலிற் கொள்க. "கொண்டு" என்பது 'ஆல்' உருபின் பொருட்டாய இடைச்சொல். புனைந்து - அலங்கரித்து, ஓர் அறிவு, 'அவனே நமக்கு எல்லாப் பொருளும், பிறிதொன்றும் பொருளாவதில்லை' என அறியும் அந்த ஒருமை அறிவு. 'ஏ தாய், அற்றாய் அடும்' என்க. ஏது, 'யாது' என்பதன் மரூஉ. எற்று - என்ன தன்மைத்து. அடும் - வருத்தும். எறி - தாக்குகின்ற. "வினையே" என்னும் ஏகாரம். அசை.*

---

*1. திருமுறை - 7 - 39.4*

*2. பெரிய புராணம் - காரைக்கால் அம்மையார் - 50, 52.*

131. இருளின் உருவென்கோ! மாமேகம் என்கோ
மருளின் மணிநீலம் என்கோ! – அருளெமக்கு
நன்றுடையாய் செஞ்சடைமேல் நக்கிலங்கு வெண்மதியம்
ஒன்றுடையாய் கண்டத் தொளி. 88

132. ஒளிவிலி வன்மதனை ஒண்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையினிற் சேர்வாய் – ஒளிநஞ்சம்
உண்டவாய் அஃதிருப்ப உன்னுடைய கண்டமிருள்
கொண்டவா(று) என்இதனைக் கூறு. 89

---

*"வினை யென்னும் இருள்" என்றது உருவகம். இருள் - துன்பம். துன்பம் தருவதனைத் "துன்பம்" என்றது உபசாரம். பற்றினால், இருள், ஏதாய், எற்றாய் அடும்? என முடிக்க. 'வினாக்கள், யாதாயும், எற்றாயும் அடாது' என்னும் எதிர் மறைப்பொருள் குறித்து நின்றன.* ***<u>'சிவனுக்குப் பணி செய்து நிற்பாரை வினை அணுகமாட்டாது'</u>*** *என்றபடி.*

***131. பொழிப்புரை :-*** *நன்மைகள் எல்லாம் உடைய இறைவனே! சிவந்த சடைமுடியின் மேல் மிகவும் ஒளி வீசும் வெண்மையான பிறைச்சந்திரன் ஒன்றைச் சூடியருளிய பெருமானே! உம்முடைய திருக்கழுத்திலுள்ள நஞ்சின் ஒளியை, இருளின் வடிவம் என்பேனோ? பெருமை பொருந்திய மேகம் என்பேனோ? குற்றமற்ற நீலமணி என்பேனோ?*

***அருஞ்சொற்பொருள் :-*** *"நன்றுடையாய்" என்பது முதலாகத் தொடங்கி, 'உன்னுடைய கண்டத்து ஒளியை யான் என் என்கோ! எமக்கு அருள்' என முடிக்க. 'எமக்கு அருள்' என்பது வேறு தொடராதலின், ஒருமை பன்மை மயக்கம் அன்மை உணர்க. என்கோ - என்பேனோ. ஓகாரங்கள் - ஐயப் பொருள வாயினும், 'எவ்வாறு கூறினும் பொருந்தும்' என்பதே. மா - கருமை. மருள் - மருட்கை; வியப்பு. 'வியப்பைத் தரும் மணி' என்க. இதில் சாரியை நிற்க இரண்டன் உருபு தொக்கது, பெயர்த் தொகையாகலின். அருள் - சொல்லியருள். நன்று உடையாய் நன்று ஒன்றையே உடையவனே. "நன்றுடை யானைத் தீயதில்லானை" என அருளிச் செய்தமை காண்க. நக்கு இலங்குதல் - ஒளிவிட்டு விளங்குதல்.*

***132. பொழிப்புரை :-*** *ஒளி பொருந்திய வில்லை ஏந்திய வலிய மன்மதனைப் பெருமை பொருந்திய சாம்பர் ஆகும்படி கண்ணால் பார்த்தருளி, தெளிந்த அறிவுடையாரது மனத்திலே குடிகொண்டிருக்கும் எம்பெருமானே! கருமை ஒளி பொருந்திய நஞ்சை உண்டருளிய வாயானது கருப்பு நிறத்தை உறாதிருக்கவும், கழுத்து மாத்திரம் இந்தக் கருப்பு நிறத்தை அடையக் காரணம் என்ன?*

***அருஞ்சொற்பொருள் :-*** *ஒளி வில் - அழகையுடைய வில்; கரும்பு வில். வில்லி - வில்லையுடையவன். இஃது இடைக்குறைந்து நின்றது. பொடியாக -*

133. கூறெமக்கீ தெந்தாய் குளிர்சடையை மீதழித்திட்(கு)
ஏற மிகப்பெருகின் என்செய்தி – சீறி
விழித்தூரும் வாளரவும் வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்தோடுங் கங்கைத் திரை. 90

134. திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே ஆளாய்
உரைமருவி யாமுணர்ந்தோங் கண்டீர்; – தெரிமினோ
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தோமே
எம்மைப் புறனுரைப்ப தென் ? 91

---

*சாம்பலாகும் படி, நோக்கி - (நெற்றிக் கண்ணால்) பார்த்து. இவ் எச்சம், எண்ணின் கண் வந்தது. தெளிவு - ஞானம். சேர்வாய் - சேர்பவனே, ஒளி நஞ்சம் - ஒளிக்கப்பட்ட விடம், 'வாயாகிய அஃது' என்க. அஃது - அவ்வுறுப்பு. இருப்ப - கறை படாமலே இருக்க. 'கண்டமும் கறைபடாமல்தான் உள்ளது; ஆயினும் உள்ளிருக்கும் நஞ்சின் கறை வெளித் தோன்றுதலை உலகம் கண்டம் கறைபட்டதாக எண்ணுகின்றது' என்பதாம். **'எந்த ஒரு பொருளும் இறைவனை மாசுபடுத்துதல் இயலாது'** என்பது குறிப்பு.*

***133. பொழிப்புரை :-*** *எம் தந்தையே! சீறிப் பார்த்து ஊர்ந்து திரிகின்ற கொடிய பாம்பையும், வெண்மையாகிய பிறைச் சந்திரனையும் இழுத்துக் கொண்டு ஆரவாரித்து ஓடுகின்ற கங்கையாற்றின் அலையானது, குளிர்ச்சி பொருந்திய உன்னுடைய சடாபாரத்தையே குலைத்து விட்டுக் கங்குகரையில்லாமல் பெருக்கெடுத்து ஓடுமானால், நீ என்ன செய்வாயோ? எம் பெருமானே எனக்குச் சொல்லி யருள்வாய்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'எந்தாய்' எனத் தொடங்கி, 'கங்கை மிகப் பெருகின், அரவும், மதியும், ஈர்த்து ஒடும்; (அப்பொழுது) நீ என் செய்வாய் - ஈது எமக்குக் கூறு' என இயைத்து முடிக்க. எந்தாய் - எம் தந்தையே. 'சடையை அழித்திட்டு மீது ஏறப் பெருகின்' என்க. அழித்தல் - கட்டுக்கு அடங்காது போதல். 'சீறி விழித்து ஊரும் அரவு' என்க. தெழித்து - ஆரவாரித்து. திரை - அலை. "என் செய்வாய்" என நகையாடிக் கூறியது, 'கங்கை என்றும் அவ்வாறு பெருகப் போவது இல்லை' எனப் பழித்தது போலப் புகழ்ந்தது.*

***134. பொழிப்புரை :-*** *கங்கையாறு தங்கிய சிவந்த சடைமுடியை உடைய எம்பெருமானுடைய திருவடிக்கே அடிமையாகித் துதித்தும் தியானித்தும் மெய் உணர்வு பெற்றோம். இம்மைக்கும் மறுமைக்கும் உரிய சிறப்புக்களையெல்லாம் பெற்றுக் கொண்டோம். இப்படியிருக்கும் பொழுது எம்மைச் சிலர் பழித்துப் பேசுவது ஏனோ? (அறியோம்).*

***அருஞ்சொற்பொருள் :-*** *உரை - சிவனைப் பற்றிக் கூறும் புகழுரையும்,*

135. என்னை உடையானும் ஏகமாய் நின்றானுந்
தன்னை அறியாத தன்மையனும் – பொன்னைச்
சுருளாகச் செய்தனைய தூச்சடையான், வானோர்க்(கு)
அருளாக வைத்த அவன். 92

136. அவன்கண்டாய் வானோர் பிரானாவான் என்றும்;
அவன்கண்டாய் அம்பவள வண்ணன்; – அவன்கண்டாய்
மைத்தமர்ந்த கண்டத்தான் மற்றவன்பால், நன்னெஞ்சே,
மெய்த்தமர்ந்தன் பாய்நீ விரும்பு. 93

---

*பொருளுரையும். அவை தோத்திர சாத்திரங்களாம். உணர்ந்தோம் - உணரற் பாலனவற்றையெல்லாம் உணர்ந்தோம். 'இனி வேறு உரைகள் பற்றியாம் உணரற்பாலது யாதுமில்லை' என்பதாம். கண்டீர், முன்னிலை யசை. ஓகாரம், அசை. 'அதனால், இம்மைக்கும், அம்மைக்கும் ஆவன யாவற்றாலும் அமைந்தோம்; இஃது அறியாது, நீவிர் எம்மைப் புறங்கூறுதல் ஏன்' - என வேண்டும் சொற்கள் வருவித்து முடிக்க. அமைதல் - நிரம்புதல். ஏகாரம்; தேற்றம். புறன் உரைத்தல் - காணாத வழி இகழ்ந்துரைத்தல். அஃதாவது, 'பித்தனைப் பேணித் திரிகின்றார்' எனக் கூறுதலாம். இங்ஙனம் கூறுவோர் புறச் சமயிகள் ஆதலின், முதற்கண், 'புறச் சமயத்தீர்' என்பது வருவித்துக் கொள்க.*

***135. பொழிப்புரை :-*** ***பொன்னைச் சுருட்டி வைத்தாற் போன்ற தூய சடை முடியை உடையவனும், தேவர்களுக்குச் சேமநிதியாகப் பேரருளோடு தன்னையே கொடுத்தவனுமாகிய சிவபெருமான், எளியேனாகிய என்னையும் தன் உடைமையாகக் கொண்டருளி எவற்றிலும் கலவாது தான் தனியாக நின்று, தன்னை இன்ன தன்மையன் என்று அறியலாகாதவன் ஆயினான்.***

***அருஞ்சொற்பொருள் :-*** *உடையான் - ஆளாக உடைய தலைவன். ஏகமாய் நிற்றல் - ஒப்பாரும், மிக்காரும் இல்லாது தனி முதல்வனாய் நிற்றல். தன்னை அறியாதத் தன்மையாவது, எத்துணையும் பெரியவனாகிய தனது தன்மையைத் தான் எண்ணாமல், எத்துணையும் எளியவனாய் வந்து அருள் புரியும் குணம். "பெறுமவற்றுள் யாம் அறிவ தில்லை"[1] என்பதிற்போல, அறிதல் இங்கு மதித்தல், "தன் பெருமை தானறியாத் தன்மையன்காண்"[2] என்று அருளிச் செய்ததும் இப் பொருட்டு. 'அருளை வானோர்க்கு ஆகும்படி வைத்த அவன்' என்க.*

***136. பொழிப்புரை :-*** ***நல்வினை வாய்ந்த நெஞ்சே! அவன் என்று சிறப்பித்துப் புகழப்படுவோன் தேவதேவனாகிய சிவபெருமான் ஒருவனே! அவனே செம்பவள வண்ணன்! அவனே நஞ்சுண்டதனால் கறுத்த திருநீல***

---

*1. திருக்குறள் - 61*

*2. திருவாசகம் - திருச்சாழல் - 19*

137. விருப்பினால் நீபிரிய கில்லாயோ ? வேறா
இருப்பிடமற் றில்லையோ ? என்னோ ? – பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய் நிற்பிரிந்து வேறிருக்க
அஞ்சுமோ சொல்லாய்; அவள். **94**

---

*கண்டன்! ஆதலால் அவனிடமே நீ எப்பொழுதும் மெய்யன்பு பூண்டு விருப்பத்தைக் கொள்க.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"அவன்" என்றது முன்னை வெண்பாவிற் சுட்டிய அவனை. 'என்றும் பிரான் ஆவான்' என்க. பிரான் - தலைவன். மைத்து அமர்ந்த - மையின் நிறத்தைக் கொண்டு பொருந்திய. இது தேவர் அமுதுண்ணத் தான் நஞ்சை உண்ட கருணையைக் குறித்தது. மற்று, அசை. "நன்னெஞ்ச" என்பதை முதலிற் கூட்டுக. மெய்த்து - மெய்ம்மைப் பட்டு. அஃதாவது, 'பயன் யாதும் கருதாத நிலையில் நின்று' என்றதாம். 'மெய்த்து அமர்ந்த' என்பதின் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'மெய்த்து அமர்ந்த அன்பு' என்றது சிறப்பும், "விரும்பு" என்பது பொதுவுமாய்த் தம்முள் இயைந்து நின்றன.*

***137. பொழிப்புரை :-*** *வெண் மேகத்தைப் போன்ற பெரிய இடப வாகனத்தையுடைய எம்பெருமானே! இமயமலைக்கு அரசன் மகளாகிய பார்வதி அம்மையினிடம் நீ கொண்டுள்ள ஆசையினால் பிரியாமல் இருக்கிறாயா? அல்லது அவளுக்குத் தனியாக வேறோர் இருப்பிடம் இல்லையா? அல்லது அவள் உன்னைப் பிரிந்து தனியாயிருக்க அஞ்சுவாளா? இருவீரும் ஒன்றியிருப்பது ஏன் எனச் சொல்லியருள்க.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"மஞ்சுபோல் மால் விடையாய்" என்பதை முதலிற் கொள்க. மஞ்சு - மேகம். மேகம் போலும் நிறத்தையுடைய மால், திருமால். விடை - இடபம். 'திருமாலாகிய இடபம்' என்பதாம். 'சிவபெருமான் திரிபுரம் எரித்த காலத்தில் திருமால் அவருக்கு இடபவாகனமாய் இருந்தார்' என்பது புராண வரலாறு.*

*தடமதில்கள் அவைமூன்றும் தழல்செய்த நாளின் கண்*
*இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ.*[1]

*என்னும் திருவாசகத்தைக் காண்க. பொருப்பன் - மலையரையன். அவன் மகள் உமாதேவி. அவளை நீ வேறு வையாது உன் உடம்பில் ஒரு பாதியாக வைத்திருப்பதற்குக் காரணம் யாது, அவள்மீது நீ வைத்துள்ள பெருவிருப்பத்தால் அவளை விட்டு நீ வேறாய் இருக்க ஆற்றாயோ - அவளுக்கு இருக்க வேறு இடம் இல்லையோ? உன்னை விட்டுப் பிரிந்து அவள் தனியே யிருக்க அஞ்சுகின்றாளோ? என் - யாது காரணம்? - என்க. "என்னோ" ஓகாரம் அசை.*

---

*1. திருவாசகம் - திருச்சாழல் - 15*

**138.** அவளோர் குலமங்கை பாகத்(து) அகலாள்
இவளோர் சலமகளும் ஈதே; – தவளநீ(று)
என்பணிவீர் என்றும் பிறந்தறியீர்; ஈங்கிவருள்
அன்பணியார் சொல்லுமினிங்(கு) ஆர். **95**

---

*இவையெல்லாம் காரணங்களல்ல; **இருவரும் இருவரல்லர்; ஒருவரே என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு**. 'பொருப்பன்மகள்' என்னும் சீரை, னகர ஒற்றுத் தள்ளி அலகிடுக.*

***138. பொழிப்புரை :–*** *வெண்மையான திருநீற்றையும் எலும்பு மாலையையும் அணியும் பெருமானே! குலமகளாகிய உமையம்மை இடப்பாகத்தினின்று பிரியாது அமர்ந்திருப்பாள். சலமகளாகிய கங்கை அன்னையும் சடையினின்று பிரியாது தங்கியிருப்பாள். இருவரையும் நீ ஒரு நாளும் பிரிந்தறியாமையால், அன்பினால் அருகாமையில் எவர் மிக நெருங்கியிருப்பவர் என்று சொல்லி அருள்க.*

***அருஞ்சொற்பொருள் :–*** *'உம்முடைய ஒரு பாகத்தினின்றும் நீங்கா திருப்பவளாகிய அவள் (நீ முறைப்படி மணந்து கொண்ட) குல மங்கை' என்பது நன்கு விளங்குகின்றது. '(அவள் நிற்க) இவள் ஒருத்தியும் நீர் வடிவாய் (உமது தலையில் இருக்கின்றாள்) இவளையும் நீர் என்றும் பிரிந்தறியீர்; உம்முடைய தன்மை இதுவேயாய் உள்ளது. (இருக்கட்டும்) இவ்விருவருள் அன்பு மிகுதியால் நெருங்கிய உறவுடையவர் யார் - சொல்லுமின்' - என்க. "தவள நீறு, என்பு அணிவீர்" என்பதை முதலிற் கொள்க. "சலமகளும்" என்பதன்பின் 'உள்ளாள்' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. ஈதே - இவ்வாறானதே. இதற்கு, 'உமது தன்மை' என்னும் எழுவாய் வருவிக்க. 'அன்பால்' என உருபு விரிக்க. 'அன்பால் அணியார் இங்கு ஆர்; சொல்லுமின்' - என்றது, 'பொருப்பன் மகள்தான் அன்பால் அணியளாய் இருக்க முடியும்; சலமகள் எங்ஙனம் அன்பாய் இருக்க முடியும்' எனக் குறித்தவாறு, "சலம்" என்பதற்கு, - 'வஞ்சம்' - என்பதும் பொருளாகலின், அதனாலும் ஒரு சொல்நயம் தோற்றுவித்தவாறு. **'பொருப்பன் மகளே உமது அங்கமும், பிரத்தியங்கமும் அவள்; ஏனையவெல்லாம் உமது சாங்க உபாங்கங்களாம்' என்றபடி**. பொருப்பன் மகளே சிவனது சத்தி; அவளது சம்பந்தத்தாலே சிவனது அணி, ஆடை, இடம் முதலியன சத்திகள் ஆகின்றன என்பது உணர்க. 'கங்கையின் வீழ்ச்சியால் உலகம் அழிந்தொழியாதபடி அவளைச் சிவன் தன் தலையில் தாங்கிய தல்லது, காம தகனனாகிய அவனுக்கும் நம்மைப் போலக் காமம் உளதாகக் கருதுதல் மடமை யாதலின், நகைச் சுவை தோன்றவே புலவர்கள் அவனை இவ்வாறு கூறித் துதிக்கின்றனர்' என்பது கருத்து.*

***139. பொழிப்புரை :–*** *சிவபெருமானாகிய அவனை, எளியேமாகிய நாம் அன்பு என்னும் போர்வையினால் பொதிந்து வைத்து, சிறப்பாகிய*

**139.** ஆர்வல்லார் காண அரன்அவனை அன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச் – சீர்வல்ல
தாயத்தால் நாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து. **96**

**140.** மறைத்துலகம் ஏழினிலும் வைத்தாயோ ? அன்றேல்
உறைப்போடும் உன்கைக்கொண் டாயோ – நிறைத்திட்(டு)
உளைந்தெழுந்து நீயெரிப்ப மூவுலகும் உள்புக்(கு)
அளைந்தெழுந்த செந்தீ யழல். **97**

---

*உரிமையினாலே, ஒப்பற்ற நம் நெஞ்சினுள்ளே தந்திரமாக அடைத்து வைத்து மறைத்துக் கொண்டோம். ஆதலினாலே வேறு யார் அவனைக் காண முடியும்?*

***அருஞ்சொற்பொருள் :-*** *'நாமும் சீர்வல்ல தாயத்தால்' என மாற்றி முதலிற் கூட்டி, 'மாயத்தால் மறைத்து வைத்தோம்; இனி அரன் அவனை ஆர் காண வல்லார்' என இயைத்து முடிக்க. அன்பென்னும் போர்வை, உருவகம். ''போர்வையது'' என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அன்பினுள் அகப்படுபவனாதல் பற்றி அன்பு அவனை மறைக்கும் போர்வையாக உருவகிக்கப்பட்டது. சீர், ஆகு பெயராய்ப் பாட்டை உணர்த்திற்று. அவனைப் பாட்டால் போற்ற வல்ல தாயத்தால் என்க. தாயம் - செல்வ உரிமை. "நாமும்" என்னும் உம்மை, 'மற்றைத் தொண்டர்களோடு' என இறந்தது தழுவி நின்றது. தனி நெஞ்சம் - அன்பு மிக்கமையால் ஒப்பற்ற மனம். மாயம் - என்ற உபாயம். 'அரனாகிய அவனை' என்க. 'அன்பர்பலர் கூடித் தங்கள் அன்பாகிய போர்வையால் மறைத்து வைத்திருத்தலால் அன்பில்லாத பிறர் அவனை எங்ஙனம் காண முடியும்' என நயம்படக் கூறியவாறு. 'அன்பில்லாதார் அரனைக் காணுதல் இயலாது' என்பது கருத்து.*

***140. பொழிப்புரை :-*** *ஊழிக்கால முடிவிலே, நீ எரித்தலால், கழித்து மூண்டெரிந்து மூவுலகிலும் உள்ளே புகுந்து விரவி எழுந்த சிவந்த தீயை, இப்போது உலகங்கள் ஏழிலும் வெளிப்படத் தோன்றாதபடி மறைத்து வைத்தனையோ? அல்லது வலிமையுடன் உன் கையினுள் பொதிந்து வைத்துக் கொண்டாயோ?*

***அருஞ்சொற்பொருள் :-*** *'நீ நிறைத்திட்டு எரிப்ப, உளைந்து எழுந்து, மூவுலகும் உள்புக்கு, அணைந்து எழுந்த செந்தீ அழலை உலகம் ஏழினிலும் மறைத்து வைத்தாயோ? அன்றேல், உறைப்போடும் உன் கைக் கொண்டாயோ?' (அஃது இன்று உலகை எரிக்கவில்லையோ) என இயைத்து முடிக்க. ஈற்றில் வருவித்து உரைத்தது இசையெச்சம். உறைப்போடும் - வலிமையோடும். உம்மை சிறப்பு. உளைந்து - சினந்து. 'மூவுலகினும்' என்பதில் சாரியை தொக்கது. அணைந்து - விரவி. அழல் - சுவாலை. 'யாதொரு பொருளும் இறைவனது சங்கற்பத்தைக் கடக்கமாட்டாது' என்பதாம்.*

**141.** அழலாட அங்கை சிவந்ததோ ? அங்கை
அழகால் அழல்சிவந்த வாறோ ? – கழலாடப்
பேயோடு கானிற் பிறங்க அனலேந்தித்
தீயாடு வாய்இதனைச் செப்பு. **98**

**142.** செப்பேந் திளமு லையாள் காணவோ ? தீப்படுகாட்(டு)
அப்பேய்க் கணமவைதாங் காணவோ – செப்பெனக்கொன்
றாகத்தான் அங்காந் தனலுமிழும் ஐவாய
நாகத்தாய் ஆடும் நடம். **99**

---

***141. பொழிப்புரை :-*** *பேய்கள் கூத்தாடும் சுடுகாட்டில், தீயைக் கையிலே அழகாக ஏந்திக் கொண்டு, வீரக்கனல் சுழன்றாட தீயின் நடுவே நின்றாடும் பெருமானே! தீயினிடையில் நின்று ஆடுவதால் உன் திருக்கை சிவந்ததா? அல்லது அத்திருக்கையின் அழகால் தீ சிவந்ததா? சொல்லியருள்வாய்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *அங்கை - அகங்கை. ஆறு - பயன். தீ ஆடுவாய் - தீயின்கண் நின்று ஆடுவாய்; விளி அகங்கையும், தீயும் அழகால் ஒன்றனை ஒன்று விஞ்சுவனவாய் உள்ளன' எனக் கூறி, அகங்கையின் மிக்க அழகைப் புகழ்ந்தவாறு. இஃது ஏது அணியின் பாற் படும்.*

***142. பொழிப்புரை :-*** *வாய் திறந்து உடலினின்று தீயைக் கக்கும் ஐந்தலை நாகத்தையுடைய பெருமானே! நீ ஆடுகின்ற திருக்கூத்து செப்புப் போல் இளமையான மார்பகங்களையுடைய உமையம்மை காண்பதற்காகவா? அல்லது தீப்பற்றி எரியும் சுடுகாட்டிலேயுள்ள அந்தப் பேய்க் கூட்டங்கள் காண்பதற் ககாவா? இரண்டில் ஒன்று சொல்லியருள்க.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"தான் அங்காந்து" என்பது முதலாகத் தொடங்கி யுரைக்க. செப்பு ஏந்து - கிண்ணம்போல நிமிர்ந்த. "கணமவை" என்பதில் அவை, பகுதிப்பொருள் விகுதி. பின் வந்த, "காணவோ" என்பதன்பின், 'நிகழ்கின்றது' என்னும் பயனிலை அவாய் நிலையாக எஞ்சி நின்றது. 'நடம் நிகழ்கின்றது' என இயையும். 'எனக்கு ஒன்றாகச் செப்பு' என்க. ஒன்றாக - திட்டமாக. இனி, "நீ ஆடும்" என எழுவாய் வருவிக்க. முடிப்பினும் ஆம். 'எவர் காணுதற் பொருட்டும் நீ ஆடவில்லை; உனது கருணை காரணமாகவே நீ ஆடுகின்றாய்' என்பது குறிப்பு.*

> *"ஆடும் எனவும், அருங்கூற்றம் உதைத்து வேதம்*
> *பாடும் எனவும் ..................*
> *..........................................................................*
> *நாடும் திறத்தார்க்(கு) அருளல்லது நாட்ட லாமே?"[1]*

---

*1. திருமுறை - 3. 54. 6*

143. நடக்கிற் படிநடுங்கும் நோக்கில் திசைவேம்
இடிக்கின் உலகனைத்தும் ஏங்கும் – அடுக்கல்
பொருமேறோ ? ஆனேறோ பொன்னொப்பாய் நின்ஏ(று)
உருமேறோ ஒன்றா உரை. 100

144. உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக்
கரைவினாற் காரைக்காற் பேய்சொல் – பரவுவார்
ஆராத அன்பினோ(டு) அண்ணலைச்சென் றேத்துவார்
பேராத காதல் பிறந்து. 101

திருச்சிற்றம்பலம்

---

*என அருளிச் செய்தமை காண்க. அங்காத்தல் - வாய் திறத்தல். ஐவாய - ஐந்து வாய்களை உடைய. நாகத்தாய் - பாம்பை அணிந்தவனே.*

***143. பொழிப்புரை :-** பொன்வண்ணம் உடைய பெருமானே! உன்னுடைய இடபம், நடந்தால் உலகம் நடுங்கும்; உருத்துப் பார்த்தால் திசைகள் வெந்து போகும். ஊங்காரம் செய்து முழக்கம் இட்டால் எல்லா உலகங்களும் அஞ்சி ஏக்கம் அடையும். எனவே, மலையிலே திரிந்து எல்லா மிருகங்களையும் போரிட்டு வெல்லும் ஆண்சிங்கமோ அது? அல்லது இடபம் தானா? இதனைத் தெரிந்து ஒருசொல் சொல்லியருள்க!*

***அருஞ்சொற்பொருள் :-** 'பொன் ஒப்பாய், நின் ஏறு நடக்கில்' எனக் கூட்டி உரைக்க. படி - பூமி. நோக்கில் - கண் விழித்துப் பார்த்தால். "கண்ணினின்றும் எழும் தீயால் திசைகள் வேகும்" என்க. இடிக்கின் - கதறினால். ஏங்கும் - கதி காணாது கலங்கும். இதன்பின், 'ஆதலால்' என்பது வருவிக்க. அடுக்கல் - மலை. 'மலையின்கண் நின்று' என விரிக்க. பொரும் ஏறோ - இடபத்தானோ. உரும் ஏறோ - மேகத்தினின்றும் தோன்றுகின்ற இடியேறோ, சிவனைச் சார்ந்தமையால், ஆனேறும் பிறவகை ஏறுகளினும் மிகுவலி பெற்றமையைக் கூறியவாறு.*

***144. பொழிப்புரை :-** காரைக்கால் பேய் உள்ளம் உருகிப் பெருகிய பேரன்பினால் உரைத்த இவ் வெண்பா அந்தாதி மாலையைத் தம் வாயாற் பாடிப் புகழ்ந்து வழிபடுவோர், எம்பெருமான் பால் என்றும் நீங்காத முழு அன்பு தோன்றப் பெற்று, அப்பெருமானுடைய திருவடித் தாமரையைச் சென்று ஏத்தி இன்பத்தை எய்துவார்கள்.*

***அருஞ்சொற்பொருள் :-** 'காரைக்காற் பேய் சொல் இம்மாலை அந்தாதி வெண்பாக்களை உரையினால், கரைவினாற் பரவுவார் ஆராத அன்பினோடு சென்று அண்ணலைப் பேராத காதல் பிறந்து ஏத்துவார்' என இயைத்து முடிக்க. 'மாலையாய் அமைந்த வெண்பா' என்க. மாலையாதல் சொற்றொடர்நிலைச்*

*செய்யுள் ஆதல். "உரை" என்றது, 'மனம், மொழி, மெய்' என்னும் மூன்றனுள் 'மொழி' என்னும் மொழியைக் குறித்தது. கரைவு - அன்பு. பரவுதல், ஏத்துதல் இரண்டும் துதித்தலைக் குறிக்கும் சொற்கள். ஆராத - நிரம்பாத. பேராத - மாறாத. காதல் - பேரன்பு. பிறந்து தோன்றப் பெற்று. "கரைவினால் பரவுவார்" என்றது இவ்வுலகத்திலும், பின் வந்தவை சிவலோகத்திலும் ஆதலின் அவை கூறியது கூறல் அல்லவாதலை அறிக. சென்று - சிவலோகத்தை அடைந்து. இது நூற் பயன் கூறியவாறு. ஈற்றில் "பிறந்து" என்றது முதல் வெண்பாவின் முதற் சீரோடு சென்று மண்டலித்தல் காண்க.*

***திருவந்தாதியைப் பற்றிய சில குறிப்புகள்***

**இயற்றமிழ்**

***திருத்தொண்டர் தொகையினுள் ஆரூர் நம்பிகளாற் போற்றப்பட்ட உண்மை நாயன்மார்கள் அறுபத்து மூவர்களுள், பெண்ணடியார்கள் மூவருள், இசைத்தமிழும் இயற்றமிழும் வல்ல பெருமை காரைக்காலம்மையாருக்கேயுரியது. இதுவன்றித் தமிழுலகிலும், இப்பெருமை அம்மையாருக்கே உண்டு. அம்மையாரது இயற்றமிழ் மிகச் சிறந்த எளிய இனிய நடையிலமைந்தது; ஆயினும் ஆழ்ந்து அகன்ற நுண்ணிய கருத்துக்களை கொண்டுள்ளன இவர்தம் இப்பாட்டுக்கள். இவை வெண்பா என்ற பெயருக்கேற்ற எல்லா நலன்களையும் கொண்டு விளங்குகின்றன. யாப்புக்காகச் சொல்லைச் சிதைவு படுத்தாது, சொல்லும் பொருளும் ஒத்தியலும் பெருங்கவி யிலக்கணம் வாய்ந்தன.***

**ஆட்படுதல்**

***சிவபெருமானுக்கு ஆளாகிப் பணி செய்திருப்பதுவும் அவரது அடியார்க்கடிமை செய்திருப்பதுவுமே தமது பிறவிப் பயன்; அவையே உயிர்க்கெல்லாம் உறுதியாவது என்பது அம்மையார் கொண்டொழுகிய துணிவும் வாழ்க்கைத் திறமுமாவன என்பது இப்பாட்டுக்களால் நன்கு விளங்கும். அவர்க்கே எழு பிறப்பு மாளாவோம் (3); யானே தவமுடையேன்.... ஆளாயினேன் (7); ஒன்றே நினைந்திருந்தேன்.... ஆளாமது (11); ஆட்பட்ட, பேரன்பே யின்னும் பெருக்கு (31); குறித்துத்தொழு தொண்டர் பாதம் (40); பணியான் செய்யேனேல், அண்டம் பெறினு மது வேண்டேன் (72); உள்ளமே எப்போது மோது (78); சிந்தையார்க் குள்ள செருக்கு (79); நற்கணத்தி லொன்றாய நாம் (86); சேவடிக்கே யாளாய் (91); என்னெஞ்சத் தானென்பன் யான் (5); நெஞ்சினுள் ளடைத்து... வைத்தோம் (96) முதலியவை பார்க்க.***

**தாயின் அன்பு**

*பெருமானிடத்தும் பிராட்டியிடத்தும் அம்மையார் தாயார் தன்மை நிலையில் தலையன்பு கொண்டு பேணினராதலின் "தாயுமிலி தந்தையிலி தான்றனியனா''கிய இறைவரால் ''அம்மையே!'' என்றழைக்கும் சிறப்புடையவராயினர். பாம்புகளை அணியாதீர் - பொன்னாரம் மற்றொன்று*

*பூண் - இரந்துண்ண வேண்டா என்றிவ்வாறு வேண்டும் பற்பல பாட்டுக்களும் இத்தன்மையை நன்கு விளக்குகின்றன. வளராத இளம் பிறையைப் பற்றி வரும் பாட்டுக்கள் அம்மையாரது பேரிரக்கம் மிக்க திருவுள்ள நிலையை மேலும் காட்டுவனவாம்.*

**சிவபெருமானைப் பல வகைகளாலும் பாராட்டுதல்**

*இறைவரது திருவுருவ இயல்களையும், அங்கங்களையும், அவர் ஏந்துவன பூண்பனவற்றையும், ஊர்தியையும் தனித்தனியே பலபல கூறுகளாகப் பாராட்டும் பாட்டுக்கள் அம்மையார் இறைவரைத் திறமுற அழுந்தி யறிந்து நின்றனர் என்பதை விளக்குவன. பூணாகக் கொண்ட பாம்புகளைப் பற்றிய பல சுவைத் திறத்துப் பல பாடல்கள் (55, 57, 64, 66 முதலியன) - சிலம்பு (67) - ஆடுமிடம் (79-77) - சடை (75) - கபாலப் பலிப்பாத்திரம் (74) - திருவடி (80) - திருமிடறு (88) - கங்கை (90) - சிரமாலை (52) - அம்மையப்பராகிய கோலம் (39-58-94) - திருமால் பாகம் (41-54) - ஏந்திய அனல் (97-98) - ஏறு (100).*

**இறைவரது தத்துவ நிலைகள்**

*அவனே யிருசுடர் தீயாகாசமாவான் (21) - அறிவாயறிகின்றான்றானே (20) - அருளே உலகெலா மாள்விப்பது (9) - எவ்வுருவோ நின்னுருவம் (51) - காலையே போன்றிலங்கு மேனி (65) - ஏகமாய் நின்றானும் தன்னை யறியாத தன்மையனும் (92) - எக்கோலத் தெவ்வுருவா யெத்தவங்கள் செய்வார்க்கும், அக்கோலத் தவ்வுருவேயாம் (33), பிறரறியலாகாப் பெருமையரும் தாமே, பிறரறியும் பேருணர்வுந் தாமே (30) - அரனென்கோ நான்முகனென்கோ வரிய, பரனென்கோ பண்புணர மாட்டேன் (18) - இறைவனே யெவ்வுயிருந் தோற்று விப்பான் (5) - தொல்லுலகுக் காதியாய் நின்றவரன் (17) முதலிய பாட்டுக்கள் சிவபெருமானது முழுமுதற் றன்மைகளைக் கூறி விளக்கும் முகத்தால் பதியிலக்கணம் பற்றிப் போற்றுகின்றன.*

**அன்பையும் அருளையும் விளைக்கும் தன்மை**

*அம்மையாரது பாடல்களுள் ஒரு சிலவற்றையேனும் பயின்று சிந்தித்தார்க்கு அன்பும் அருளும் பெருக விளையும் என்பதொருதலை. "பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல், சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்" (1) என்று உண்மையாய்க் கூறத்தக்க நிலை வேறு யாவர்க்குக் கூடும்? இடர் களையா ரேனும் எமக்கு இரங்காரேனும் - என் நெஞ்சு அவர்க்கு அன்பு அறாது (2); அவர்க்கே எழுபிறப்பு மாளாவோம் - அவர்க்கல்லால் மற்றொருவர்க்கு எஞ்ஞான்றும் ஆள் ஆகோம் (8) என்று கூறும் துணிபு பெறின் உயிர்கள் உய்ந்து விடுமன்றோ? வானத்தான் என்பாருமென்க.... என் நெஞ்சந்தான் என்பான் யான்*

*(6), யாமுந் தனிநெஞ்சி னுள்ளடைத்துச் சிவனை மறைத்து வைத்தோம். ஆதலின் யாவர் அவனைக் காணவல்லார் (96) என்று கூறும் பெருமிதம் கண்டு துதிக்கப்பாலது. இம்மாலையால் ஏத்துவார் மாறாத காதலுடன் அண்ணலைச் சென்றேத்துபவராகும் நிலை யடைவர் என அம்மையார் இதற்குப் பயன் உரைத்தது முழு உண்மையேயாகும் என்ப தனுபவத்திற் காணப்பெறும்.*

**<u>இறைவரைப் போற்றும் அருமைப்பாடு</u>**

*நிறந்திகழு மைஞ்ஞான்ற கண்டத்துவானோர் பெருமானே! (1) என்பறாக்கோலத் தெரியாடு மெம்மானார் (2) இறைவனே! எந்தாய்! (5) முன்னஞ்சத்தானிருண்ட மெய்யொளி சேர்கண்டத்தான் (6); வெண்ணீற்ற அம்மான் (7); எனக்கினிய வெம்மானை யீசனை (10); கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கெளிசே ரங்கையான் (11); மின்செய்வான் செஞ்சடையாய்! வேதியனே! (15); சீராளன் கங்கை மணவாளன் செம்மேனிப், பேராளன் வானோர் பிரான் (44) சொன்முடிவொன் றில்லாத சோதியாய் (63); மிக்குலக மேழினுக்குங் கண்ணாளா! (72); முதலியவை அம்மையார் இறைவரைப் பாராட்டிப் போற்றும் அருமைப் பாட்டினால் அன்பு ததும்பி நிற்கும் நிலை கண்டு போற்றத்தக்கது.*

*இவ்வந்தாதியும், திருவிரட்டை மணிமாலையும் அம்மையார் பேய்க்கண வடிவம் வேண்டிப் பெற்றுத் திருக்கயிலை காண வழிப்பட்டுச் செல்லும் வழியில் அருளப்பட்டன. இவ்வாறே ஆளுடைய நம்பிகளும் கழறிற்றறிவாரும் வழியில் அருளிய திருப்பாட்டுக்களும் காண்க. வழிப்படுவோர் துதித்தல் வேண்டும் என்பதும் காணக் கிடைக்கின்றது.*

***அற்புதத் திருவந்தாதி முற்றிற்று.***

## ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

*அருளிச்செய்த*

## 5. சேத்திரத் திருவெண்பா

*இத்திருமுறையில் ஐந்தாவது பிரபந்தமாகிய சேத்திரத் திருவெண்பாவை அருளியவர் ஐயடிகள் காடவர்கோன் நாயனார். இவர் திருத்தொண்டத் தொகையில் சுந்தரரால் 'ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்' எனப் போற்றப் பெறுபவராவார். சேக்கிழார் பெரிய புராணத்தில் இந்நாயனாரின் வரலாற்றை விளங்க விரித்துரைத்துள்ளார்.*

**பெயர் விளக்கம்**

*காடவர் என்பது பல்லவ மன்னர் குலத்தினரைக் குறிக்கும் பொதுப்பெயர். ஐயடிகள் என்பது ஐயனடிகள் என்பதன் மரூஉவாகும். ஐயடிகள் காடவர்கோன் என்னும் பெயர் ஐயனடிகளாகிய பல்லவ மன்னர் என்ற பொருள் தரும் பெயராகும்.*

**ஆட்சிச் சிறப்பு**

*ஐயடிகள் உலகில் புகழ் நிலவ அரசு புரிந்த பல்லவர் குலத்தில் தோன்றினார். நாட்டில் வறுமையும் பகையும் குடிகளை வருத்தாவண்ணம் நீதிநெறியோடு ஆட்சி புரிந்தார். சிவநெறியைப் போற்றி வளர்த்தார்.*

> *திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தில் எவ்வுயிரும்*
> *பெருமையுடன் இனிதமரப் பிறபுலங்கள் அடிப்படுத்துத்*
> *தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேல் சைவமுடன்*
> *அருமறையின் துறைவிளங்க அரசளிக்கும் அந்நாளில்*

*என இம்மன்னரது பெருவீரத்தையும் சிவநெறிப் பற்றையும் சேக்கிழார் விளக்கியுள்ளார்.*

**துறவுள்ளம்**

*மன்னரெல்லாம் தம் ஆணைவழி நிற்கவும் வடமொழி தமிழ் மொழிகளின் கலைத் தொண்டுகள் சிறக்கவும் ஆட்சிசெய்த இம்மாமன்னர் அரசுரிமை தன் சிவனடித் தொண்டுக்கு இடையூறாகும் என உணர்ந்து அதனைத் தன் புதல்வன் பால் ஒப்புவித்துத் தலயாத்திரை மேற்கொண்டு சிதம்பரம் முதலான அனைத்துச் சிவ தலங்களையும் வழிபட்டு ஓரோர் வெண்பாவால் அத்தலங்களைப் போற்றிப் பாடினார். அவ்வெண்பாக்களில் இருபத்து நான்கு பாடல்களே கிடைத்துள்ளன. அவற்றின் தொகுப்பே சேத்திரத் திருவெண்பா எனப்பெறுகிறது. இப்பாடல்கள் பலவற்றிலும் நாயனார் நிலையாமையை உணர்த்தி தலங்களுக்கு ஆற்றுப்படுத்தலால் இவரது துறவுள்ளம் இப்பாடல்களில் விளங்கக் காணலாம்.*

*இவ்வாறு ஐயடிகள் செந்தமிழால் சிவநெறி போற்றியும் தமக்கு இயைந்த*

ஆலயத் திருப்பணிகள் ஆற்றியும் வாழ்ந்து முடிவில் சிவலோகம் எய்திச் சிவபிரான் திருவடிகளை அடைந்தார் என்பது பெரிய புராணம் உணர்த்தும் இந்நாயனார் வரலாறாகும்.

**ஐயடிகள் யார்?**

இந்நாயனார் பல்லவ மன்னர்களில் யாவர் என்பதையும் இவரது காலத்தையும் பேராசிரியர் திரு. க. வெள்ளைவாரணனார் விரிவாக ஆராய்ந்து தெளிவு செய்துள்ளார்.

சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் 'கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்' எனக் குறிப்பிடப்பெறும் மன்னன் காஞ்சியில் கைலாசநாதர் கோயிலைக் கட்டிய இராஜசிம்மப் பல்லவனாவான் என்றும் அம்மன்னனது தந்தையாகிய முதலாம் பரமேசுவர வர்மனே ஐயடிகள் காடவர்கோன் ஆவார் எனவும் அவர் தெளிவு செய்துள்ளார்.

முதலாம் பரமேசுவரவர்மன் காலத்தில் பெரும் போர் ஒன்று நிகழ்ந்தது. சாளுக்கிய வேந்தனாகிய இரண்டாம் புலிகேசியின் மகன் விக்கிரமாதித்தன் என்பான் தமிழ் மாநிலத்தைக் கைப்பற்றக் கருதி தமிழகம் வந்து இம்மன்னனோடு பெரும் போர் புரிந்து வென்று பாண்டி நாட்டைக் கைப்பற்ற முனைந்தபோது பாண்டியன் நெடுமாறன் மகனாகிய கோச்சடையன் என்பானிடம் தோல்வியுற்றுத் திரும்ப நேர்ந்தது. இவ்வேளையில் அவனிடம் தோற்ற பல்லவனாகிய முதலாம் பரமேசுவரவர்மன் தன் படைகளுடன் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள பெருவளநல்லூரில் விக்கிரமாதித்தனோடு போரிட்டு வெற்றி கொண்டான். தோற்ற விக்கிரமாதித்தன் ஒரு கந்தையைப் போர்த்திக்கொண்டு தன் நாடு திரும்பினான்.

விக்கிரமாதித்தனைப் பரமேசுவர வர்மன் வெற்றி கொண்டதைக் கைலாசநாதர் கோவில் கல்வெட்டு தெரிவிக்கிறது. சேக்கிழார் ஐயடிகள் காடவர்கோனின் பெருவீரத்தைக் குறிப்பிடும் பாடல் இப்போரைக் குறித்ததாகலாம். ஆதலின் அம்மன்னனே ஐயடிகள் என்பதையும் அறியலாம்.

பரமேசுவரவர்மன் கூரம் என்ற ஊருக்குப் பரமேசுவரமங்கலம் எனப் பெயர் சூட்டி அவ்வூரில் விச்சாவிநீத பல்லவ மன்ன பரமேசுவரக்கிருகம் என்ற சிவாலயத்தை முதன் முதல் கற்றளியாகக் கட்டிய பெருமைக்கு உரியவன். மாமல்லபுரத்தில் இவன் பாட்டனாகிய நரசிம்மவர்மன் காலத்தில் தொடங்கி இம்மன்னனால் முற்றுவிக்கப்பட்ட ஆலயத்தில் காணும் கல்வெட்டால் இவன் வடமொழி தென்மொழிகளில் வல்லவன் என்பதை உணரலாம்.

இவ்வாறு பெருவீரனாகவும் சிவநெறியாளனாகவும் புலமையாளனாகவும் விளங்கிய பரமேசுவர வர்மன் தன் ஆட்சியைத் தன் புதல்வன்பால் ஒப்புவித்து விட்டு, தலங்கள் தோறும் சென்று வழிபட்டு வெண்பா மாலைகளால்

*இறைவனை அர்ச்சித்து வழிபட்டு வந்ததால் அவன் மகனாலும் குடிமக்களாலும் இம்மன்னன் 'ஐயடிகள்' எனப் போற்றப்பெற்றான் என்று கொள்ளலாம். இவர் காலம் கி.பி. 670 முதல் 685 வரையாகும்.*

**தில்லைச் சிற்றம்பலம்**

**145.** **ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே, உற்றாரும்**
**கோடுகின்றார்; மூப்புங் குறுகிற்று – நாடுகின்ற**
**நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன், நன்னெஞ்சே**
**தில்லைச்சிற் றம்பலமே சேர். 1**

---

*145. **பொழிப்புரை :-** வாழ்க்கையில் இயங்குகின்ற தன்மை ஒழிந்தவுடன், உறவினரும் மனம் திரும்பி வேறுபடுகிறார்கள். வயோதிகமும் நெருங்குகிறது. விரும்புகின்ற நல்ல உடல் இறந்து சுடுகாட்டை அடைவதற்குமுன் நல்ல நெஞ்சமே! திருச்சிற்றம்பலத்தைச் சேர்வாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-** (இவ்வெண்பாக்கள் யாவும், 'யாக்கையின் நிலையாமையை உணர்ந்து, இன்றே, இப்பொழுதே தலங்கள் தோறும் சென்று சிவனை வழிபட்டு உய்தல் வேண்டும்' என்பதையே அறிவுறுத்துகின்றன). இவ்வெண்பா, 'தில்லைத் திருச்சிற்றம்பலப் பெருமானைக் கண்டு வணங்குக' எனக் கூறுகின்றது.*

*நீர்மை - தன்மை; 'நடத்தலேயன்றி ஓடவும் இருந்த வலிமை நீங்க, மூப்பு வந்தவுடன்' என்றபடி, உற்றார் - பிறவியிலே அன்புடையவராய்ப் பொருந்தினவர்; சுற்றத்தார்; மனைவி, மக்கள் முதலாயினார். "உற்றாரும்" என்னும் உம்மை உயர்வு சிறப்பு. கோடுகின்றார் - மனம் மாறிவிடுவர்; தெளிவினால் எதிர்காலம் நிகழ்காலமாகச் சொல்லப்பட்டது. "மூப்பும்" என்னும் உம்மை இளமையாகிய இறந்ததனைத் தழுவிற்று. 'வரும்' என்று அஞ்சப்பட்ட அதுவும் வந்துவிட்டது - என்றபடி. நாடுகின்ற - மிகவும் விரும்பப்படுகின்ற. நல் அச்சு - வண்டியில் பளுவைத் தாங்குகின்ற நல்ல அச்சுப் போல்வதாகிய உடம்பு. அஃது இறுதலாவது, செயலற்று வீழ்தல். அம்பலம், யாவருக்கும் உரிய பொது இடம். அஃது மயானத்தைக் குறித்தது. 'அம்பலமே' என்னும் பிரிநிலை ஏகாரம் செயலற்று வீழ்ந்த உடலுக்கு அது தவிர இடம் இன்மையைக் குறித்தது. "சிற்றம்பலமே" என்னும் பிரிநிலை ஏகாரம், 'சேரத் தக்க இடம் பிறிதன்று' என்பதை உணர்த்திற்று. "நல்நெஞ்சே" என்பதை முதலிற்கொள்க. 'நல்வழியைப் பற்றுதற்கு உரியை' என்பது தோன்ற, "நல் நெஞ்சே" - என்றார். பின்னிரண்டடிகள் 'திரிபு' என்னும் சொல்லணி பெற்றன. மேலும் இவ்வாறு வருவன காண்க.*

*146. **பொழிப்புரை :-** கடுக்காய் போட்டுக் காய்ச்சப்பட்ட மருந்து நீர் கொண்டு வா; புளித்த நீர் கொடு என்று நடுநடுங்கி நாக்கு அடங்குவதற்கு முன், சாம்பல் நிறைந்த சுடுகாடு சேர்வதற்கு முன் பல மாடங்களை உடைய*

**குடந்தைக்கீழ்க் கோட்டம்**

**146.** கடுவடுத்த நீர்கொடுவா; காடிதா என்று
நடுநடுத்து நாஅடங்கா முன்னம் – பொடியடுத்த
பாழ்க்கோட்டஞ் சேராமுன் பன்மாடத் தென்குடந்தைக்
கீழ்க்கோட்டஞ் செப்பிக் கிட. **2**

**திருவையாறு**

**147.** குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி,
நொந்திருமி, ஏங்கி, நுரைத்தேறி – வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை. **3**

---

*கும்பகோணத்தில் குடந்தைக் கீழ்க்கோட்டத்தில் கோயில் கொண்டுள்ள கோயிலைப் பிரார்த்தனை செய்து கொண்டிரு.*

***அருஞ்சொற்பொருள் :-*** *கடு - கடுக்காய்; 'இது பித்தத்தைப் போக்குவது' என்பர். காடி - பழஞ்சோற்று நீர். இதுவும் அத்தன்மையதாலோடு உணவும் ஆகும். 'வெடுவெடுத்தல்' என்பது போல, நடுநடுத்தல், நடுக்கத்தைக் குறித்ததோர் இரட்டைக் கிளவி. நா அடங்குதல் - பேச்சு நீங்குதல். பொடி - சாம்பல். பாழ்க் கோட்டம் - அழிவிடம், மயானம். தென் குடந்தை - தென்னாட்டில் உள்ளதாகிய 'குடந்தைக் கீழ்க்கோட்டம்' என்னும் தலம். தென், அழகும் ஆம், செப்பி - துதித்து. "கிட" என்றது 'நிலைமாறுதலை விடுக' என்றபடி, இது முதலாக இனி வரும் வெண்பாக்களில் வேண்டும் இடங்களில் 'நெஞ்சே' என்பது வருவிக்க. "முன்னம், முன்" என்பன செவ்வெண்.*

*147.* ***பொழிப்புரை :-*** *உட்கார்ந்தபடியே நகர்ந்தும், குனிந்து ஒரு கையில் கோல் ஊன்றியும், நொந்தும் இறுமியும் வருந்தியும், நுரைதள்ளியும் கோழை பெருகி வாய்வழியே பாய்வதற்கு முன், நெஞ்சமே! திருவையாற்றை வாயால் அழைப்பாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *ஐ - கோழை. குந்தி நடத்தல் - நெடுக நடந்துபோக இயலாமல் இடையிடையே குந்திக் குந்தி எழுந்து நடத்தல். "ஐ" இரண்டில் முன்னது கோழை. அது நுரைத்து, மேலே ஏறி, வெளி வந்து, ஓட்டெடுத்து வாய் ஆறு (வாய்வழியால்) பாயா முன்' என்க. ஐயாறு, சோழ நாட்டுத் தலம். தலப் பெயரைச் சொல்லுதலும் அங்குள்ள இறைவன் பெயரைச் சொல்லுதலோடே ஒக்கும். இனி, "ஐயாறு" என்பது ஆகுபெயரில் அங்கு எழுந்தருளியுள்ள இறைவனைக் குறித்தது என்றலும் ஆம், பின்னிரண்டடிகள் 'மடக்கு' என்னும் சொல்லணி பெற்றன.*

*148.* ***பொழிப்புரை :-*** *காளையைப் போல் உள்ள இளமைப் பருவத்தின்*

### திருவாரூர்

148. காளை வடிவொழிந்து கையுறவோ(டு) ஐயுறவாய்
நாளும் அணுகி நலியாமுன் – பாளை
அவிழ்கமுகம் பூஞ்சோலை ஆரூரற்(கு) ஆளாய்க்
கவிழ்கமுகம் கூம்புகஎன் கை. 4

### திருத்துருத்தி

149. வஞ்சியன நுண்ணிடையார் வாள்தடங்கண் நீர்சோரக்
குஞ்சி குறங்கின்மேற் கொண்டிருந்து – கஞ்சி
அருத்தொருத்தி கொண்டுவா என்னாமுன் நெஞ்சே
திருத்துருத்தி யான்பாதஞ் சேர். 5

---

*வடிவு ஒழிந்து, துன்பத்தோடு கோழை பொருந்தி, நாள்தோறும் நெருங்கித் துன்புறாமுன், பாளை அவிழ்கின்ற பாக்குமரச் சோலைகள் சூழ்ந்த திருவாரூர் எம்பெருமானுக்கு அடிமையாகி முகங்கவிழ்ந்து வணங்குக. என் கைகள் கும்பிடுவதாக.*

*அருஞ்சொற்பொருள் :- காளை - கட்டிளைஞன். இஃது அப்பருவத்தைக் குறித்தது. கையறவு - செயலற்ற நிலை. ஐயுறவு - சந்தேகித்தல், அஃது, 'இன்றோ, நாளையோ வாழ்வு முடிவது' எனப் பலரும் நினைப்பது. நாள் - இறுதி நாள். உம்மை, முன்னர்க் கூறியவற்றைத் தழுவி நின்றது. நலிதல் - அடர்த்தல். இதற்கு வினை முதலான 'கூற்றுவன்' எனத் தனித் தனி இயைக்க. "முகம்" என்றது தலையை. அதற்கும் 'என்' என்பதனைக் கூட்டி, 'என் முகம் (தலை) கவிழ்க; (வணங்குக) கை (கள்) கூம்புக' என்க. இதிலும் திரிபணி வந்தது.*

*149. பொழிப்புரை :- வஞ்சிக் கொடியைப் போன்ற மென்மையான இடையை உடையாரது வாளைப் போன்ற பெரிய கண்களில் நீர் சோரவும், கஞ்சிக் கலயத்தைத் தொடையின் மேல் வைத்துக் கொண்டு உண்பிக்கக் கொண்டு வா என்னாமுன் நெஞ்சமே! சோழ நாட்டிலுள்ள திருக் குத்தாலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனது பாதங்களைச் சேர்வாயாக.*

*அருஞ்சொற்பொருள் :- வஞ்சி - வஞ்சிக் கொடி. நுண்ணிடையார், தேவியார்; உயர்வுப் பான்மை. குஞ்சி - ஆடவர் தலை மயிர். அது விடாத ஆகுபெயராய், அஃது உள்ள தலையைக் குறித்தது. குறங்கு - துடை. இது தேவியாருடையது. 'தேவியார் உனது தலையைத் தமது தொடைமேற் கொண்டிருந்தது, - அருத்த ஒருத்தி கஞ்சி கொண்டு வா - என்னாமுன்' என்க. 'அருத்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. திருத்துருத்தி, சோழநாட்டுத் தலம் இது, 'குத்தாலம்' என வழங்குகின்றது. துருத்தி - ஆற்றிடைக்குறை.*

*150. பொழிப்புரை :- கால்களைத் துணியின் கரைப் பகுதியினால் இறுகக் கட்டி, கைகளை இழுத்துக் கட்டி, மாலையைத் தலைக்குச் சூட்டி, மை எழுதி,*

### திருக்கோடிக்கா

150. காலைக் கரையிழையாற் கட்டித்தன் கைஆர்த்து
மாலை தலைக்கணிந்து மையெழுதி – மேலோர்
பருக்கோடி மூடிப் பலரழா முன்னம்
திருக்கோடி காஅடைநீ சென்று. 6

### திருவிடைவாய்

151. மாண்டுவாய் அங்காவா முன்னம், மடநெஞ்சே
வேண்டுவா யாகி விரைந்தொல்லைப் – பாண்டவாய்த்
தென்னிடை வாய் மேய சிவனார் திருநாமம்
நின்னிடைவாய் வைத்து நினை. 7

---

*பெரிய புதுத்துணியினால் மூடுதல் செய்து, பலர் அழாமுன்பே காவிரிக்கு வடகரையில் உள்ள திருக்கோடிக்கா என்னும் திருக்கோயிலை நீ சென்று அடைவாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'காலைக் கட்டி' என இயையும். கரையிழை - பழந்துணியின் ஓரத்தில் உள்ள கரையைக் கிழித்து எடுத்த நீள் வடம். இறந்தோரது இரு காற் பெருவிரல்களையும் இத்தகைய இழையாற் சேர்த்துக் கட்டுதல் வழக்கம். "தன்" என்றது. 'தன் பிணத்தினது' என்ற படி. உடல் உயிருக்கு வேறாய் வீழ்ந்தமையின் பிறிதாகச் சொல்லப்பட்டது. கைகளையும் ஆட வொட்டாமல் கட்டுவர். ஆர்த்து - கட்டி. தலைக்கு மாலை சூட்டுதலும், கண்ணுக்கு மை யெழுதுதலும் பிணச் சிங்காரம். 'மேல் மூடி' என்க. பருக் கோடி - பெரிய புத்தாடை. 'பருக் கோடியால் மூடி' என்க. திருக்கோடிகா, சோழ நாட்டுத் தலம்.*

***151. பொழிப்புரை :-*** *இறந்து, வாய் திறந்து போவதற்கு முன்பு, மடமை நிறைந்த நெஞ்சமே! வேண்டுதலைச் செய்து, விரைவாக விரிந்த வாயினையுடைய அழகிய திருஇடைவாய் என்னும் பதியில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானுடைய திருநாமத்தை உன் மனத்தில் பதிய வைத்து எண்ணுவாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *அங்காத்தல் - திறத்தல். வேண்டு வாயாகி - விரும்புதல் தன்மையை உடையையாகி, விரைந்து விரைந்து சென்று. ஒல்லை - சீக்கிரமாக. 'பண்டு' என்பது முதல் நீண்டு 'பாண்டு' என வந்ததாகக் கொண்டு, 'பண்டே அவாவி இடைவாய் மேலே சிவனார்' என்க. இனி, 'பாண்டத்தின் வாய் போலும் உனது வாயில் வைத்து' என்றலும் ஆம். தென் இடைவாய் - தென்னாட்டில் உள்ள 'இடைவாய்' என்னும் தலம். சோழ நாட்டில் அண்மையில், 'விடைவாய்' என்னும் தலத்து ஞானசம்பந்தர் திருப்பதிகம் ஒன்றைக் கல்வெட்டிலிருந்து கண்டு சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசம் 1973-ல் வெளியிட்டது. 'இடைவாய்' என்பது அத்தலத்தின் மறுபெயராகலாம். அல்லது*

**திருநெடுங்களம்**

152. தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக் – கட்டி
எடுங்களத்தா என்னாமுன் ஏழைமட நெஞ்சே?
நெடுங்களத்தான் பாதம் நினை. 8

**குழித்தண்டலை**

153. அழுகு திரிகுரம்பை ஆங்கதுவிட் டாவி
ஒழுகும் பொழுதறிய ஒண்ணா – கழுகு
கழித்துண் டலையாமுன் காவிரியின் தென்பாற்
குழித்தண் டலையானைக் கூறு. 9

---

*வேறொரு வைப்புத் தலமாகவும் இருக்கலாம். இவ்வெண்பாக்களில் வைப்புத் தலங்களும் சில காணப்படுகின்றன. நின்னிடை - நின்னிடமாக. வாய் வைத்தல், வாசகமாகக் கணித்தல். நினைதல் - மானதமாகக் கணித்தல். இவை ஒன்றின் ஒன்று மிக்கது.*

***152. பொழிப்புரை :-*** *தொட்டுப் பார்த்தும் தடவிப் பார்த்தும் துடிப்பொன்றும் இல்லாமையால், வறிய பிணம் என்று பேரிட்டுப் பாடையில் வைத்துக் கட்டி, எடுங்கள் அத்தா என்னா முன், மடப்பம் பொருந்திய நெஞ்சமே! திருநெடுங்களம் என்னும் ஊரில் எழுந்தருளிய இறைவனது பாதங்களை நினைப்பாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *துடிப்பு - இருதயத் துடிப்பு, நாடித் துடிப்பு முதலியன. பெட்ட - முன்பெல்லாம் பலராலும் விரும்பப்பட்ட. இது பழமையை நினைவு கூர்தல் கூறியது. பகர வொற்று விரித்தல். பேர், மாற்றுப் பேர். 'அப்பனைக் கண்டேன், அம்மையைக் கண்டேன்' எனற்பாலனவற்றை, 'அப்பாவைக் கண்டேன், அம்மாவைக் கண்டேன்' என்னும் நாட்டு வழக்குப் போல, 'அத்தனை எடுங்கள்' என்பது 'அத்தாவை எடுங்கள்' என வந்ததாகக் கொண்டு, இரண்டாம் உருபு விரித்துரைக்க. அல்லது, 'அத்தா' என உரியவரை விளித்தது எனின், ஒருமைப் பன்மை மயக்கமாகும். இனி 'அத்தான்' எனப் பாடம் ஓதி, 'அத்தன்' என்பது நீண்டு வந்தது, எனினும் ஆம். இப்பொருட்கும் இரண்டன் உருபு விரிக்கப்படும். நெடுங்களம் சோழ நாட்டுத் தலம். ஏழை மடம், ஒரு பொருட் பன்மொழி.*

***153. பொழிப்புரை :-*** *அழுகிப் போவதும், மாறுபட்டுப் போவதுமான உடலை விட்டு உயிர் வெளியேறும்போது அறிய முடியாமல் கழுகு உடலைச் சிதைத்து உண்டு அலையாத முன், திருக்கடம்பந்துறையில் கோயில் கொண்டுள்ள இறைவனைப் போற்றுவாயாக. இப்போது இத்தலம் குளித்தலை எனப்படுகிறது.*

**பொது**

154. படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலாம் ஆண்ட
முடியரசர் செல்வத்து மும்மைக் – கடியிலங்கு
தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொ ண்டுபட்டு
ஓடேந்தி யுண்ப துறும். 10

**திருவானைக்கா**

155. குழீஇயிருந்த சுற்றம் குணங்கள்பா ராட்ட
வழீஇயிருந்த அங்கங்கள் எல்லாந் – தழீஇயிருந்தும்
என்னானைக் காவா இதுதகா தென்னாமுன்
தென்னானைக் காஅடைநீ சென்று. 11

---

*குளித்தலை காவிரியின் தென்கரையிலேயே உள்ளது. ஒரு சிலர் தென்கரையில் சற்றத் தொலைவாகத் திருவாரூர்ப் பகுதியில் உள்ள தண்டலை நீணெறிதான் இத்தலம் என்று சொல்லுவர்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *திரி - கெட்டுப்போன. கெட்டது மூப்பினாலும், பிணியினாலும். குரம்பை - குடில். குடில் போலும் உடம்பு. ஆங்கது, ஒரு சொல் நீர்மைத்து. ஆவி - உயிர். ஒழுகுதல் - ஓட்டைக் குடத்தினின்றும் நீர் நீங்குதல் போல நீங்குதல். இது நீங்குதலே இயல்பாதலைக் குறித்தவாறு. அறிதல், இங்கு நினைத்தல் 'கழித்து உண்டு அலையா முன்' என்றாரேனும், 'அலைந்து உண்டு கழியாமுன்' என்றலே கருத் தென்க. தண்டலை - 'தண்டலை நீணெறி' என்னும் தலம். இது 'குழித் தண்டலை' என வழங்கினமைப் பெறப்படுகின்றது.*

***154. பொழிப்புரை :-*** *உலக முழுவதையும் வெண்குடைக்கீழ் இருந்து ஆண்ட முடி சூடிய மன்னர், பெரிய அரச செல்வத்தை நுகர்ந்திருப்பதைப் பார்க்கிலும், மணமிகுந்த கொன்றை மாலையணிந்த ஒளி வடிவாகிய சிவபெருமானுக்குப் பணி செய்து ஐயம் ஏற்றுண்டல் மூன்று மடங்கு சிறந்தது என்றவாறு.*

***அருஞ்சொற்பொருள் :-*** *படி - நிலவுலகம். 'ஒரு வெண்குடை' என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. 'கீழாக' என ஆக்கம் வருவிக்க. "படி" என முன்னர் வந்தமையின், "பாரெலாம்" என்றது, 'அவற்றையெல்லாம்' எனச் சுட்டுப் பெயரளவாய் நின்றது. 'செல்வத்தின்' என ஒப்புப் பொருள் அல்லது உறழ் பொருள் பொருட்டாகிய ஐந்தாவது விரிக்க. 'செல்வத்தின்' என்றே பாடம் ஓதலும் ஆம். மும்மை - மும் மடங்கு. 'மும்மடங்கு உறும்' என முடியும். உறும் - நன்றாம். கடி - வாசனை. தோடு - இதழ். "கடியிலங்கு ....... உண்பது" என்பதனை முதலிற் கூட்டியுரைக்க. ஓடு ஏந்துதல், ஏந்தி இரத்தலாகிய தன் காரியத்தைத் தோற்றி நின்றது. இந்நாயனார், மன்னர் எலாம் பணிசெய்ய அரசாண்ட பல்லவ*

**திருமயிலை**

**156.** குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல்
பயிலப் புகாமுன்னம் நெஞ்சே – மயிலைத்
திருப்புன்னை யங்கானல் சிந்தியா யாகில்
இருப்பின்னை யங்காந் திளைத்து. **12**

---

*மன்னராய் இருந்தும், 'அரசை இன்னல்' எனத் துறந்தார்[1] - என்று சேக்கிழார் கூறியதற்கு இவ்வெண்பாவும், இனி வரும் 'தஞ்சாக மூவுலகும்' என்னும் வெண்பாவும் அகச்சான்றான் நிற்றலையறிக.*

***155. பொழிப்புரை :-*** *சுற்றிக் கூடியிருந்த சுற்றத்தார் குணங்களை எல்லாம் பாராட்டவும், நழுவிக் கடந்த உறுப்புக்கள் எல்லாம் தழுவிச் சேர்த்துக் கொண்டிருந்து "என்னுடைய ஆனையைப் போன்ற இவனுக்கு இவ்வாறு இறந்து போனது கூடாது" என்னாமுன், திருவானைக்காவை நீ சென்று அடைவாயாக. (அங்கங்கள் எல்லாம் என்பது குடும்பத்தாரையும் குறிக்கும் என்க).*

***அருஞ்சொற்பொருள் :-*** *எவர் ஒருவர் இறப்பினும் இறந்த அத்துக்கக் குழுவினர் இறந்தவரது குற்றங்களையெல்லாம் மறைத்து விட்டுக் குணம் சிலவேயாயினும் அவற்றை எடுத்துக் கூறிப் பாராட்டுதல் வழக்கம். வழுவுறுதல் - நிலைகெடுதல். அங்கங்கள் - உடல் உறுப்புக்கள். 'எல்லாவற்றையும்' என இரண்டாவதன் தொகை. "இருந்தும்" என்னும் உம்மையை வேறு வைத்து, அழுகை ஒலிக் குறிப்பாகக் கொள்க. "ஆனை" என்றது, காதல் பற்றி வந்த உபசார மொழி[2]. ஆஆ - அழுகை ஒலிக் குறிப்பு. தென் ஆனைக் கா - தென்னாட்டில் உள்ள 'திரு ஆனைக் கா' என்னும் தலம். சோழ நாடு.*

***156. பொழிப்புரை :-*** *குயில் நிறம் போல் கருமையாக இருந்த மயிர், கொக்கைப் போல் வெண்மையாய் நரைத்து, இருமல் மிகுதிப்படத் தொடங்குவதற்கு முன், திருமயிலைச் சிவப்பதியை சிந்திக்காமற் போனால், பின்னை வாய் திறந்து இளைத்து இரு என்பதாம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'ஒத்து இருண்ட குஞ்சி' என்க. 'குயில் ஒத்து இருண்ட' என்பதனோடு இயைய, 'கொக்கு ஒத்து வெளுத்து' என்பது வருவிக்க. பயில - அடிக்கடியாக. முதுமையில் கோழை மிகுதலால், இருமல் அடிக்கடி யெழுவதாம். புன்னையங் கானல் - புன்னை மரங்கள் மிக்குள்ள கடற்கரை. மயிலை - மயிலாப்பூர். இது தொண்டை நாட்டுத் தலம். இஃது இங்குள்ள திருக்கோயிலைக் குறித்தது. இக் கோயில் 'கபாலீச்சரம்' என்னும் பெயருடையது.*

---

1. *பெரிய புராணம் - ஐயடிகள் காடவர்கோன் - 3*
2. *தொல் - சொல் - கிளவியாக்கம் - 56*

**உஞ்சேனை மாகாளம்**

157. காளையர்கள் ஈளையர்க ளாகிக் கருமயிரும்
பூளையெனப் பொங்கிப் பொலிவழிந்து – சூளையர்கள்
ஓகாளஞ் செய்யாமுன் நெஞ்சமே உஞ்சேனை
மாகாளங் கைதொழுது வாழ்த்து. 13

**வளைகுளம்**

158. இல்லும் பொருளும் இருந்த மனையளவே
சொல்லும் அயலார் துடிப்பளவே – நல்ல
கிளைகுளத்து நீரளவே; கிற்றியே நெஞ்சே
வளைகுளத்துள் ஈசனையே வாழ்த்து. 14

---

*மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்*
*கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரம் அமர்ந்தான்*[1]

*என்னும் அற்புதத் திருப்பதிக அடிகளைக் காண்க. பின்னை, யாதும் இயலாத இறுதிக்காலம். அங்காந்து - (துயரத்தால்) வாயைத் திறந்து கொண்டு (உயிர் போய்விட). 'இரு - காண்போர் இரங்கக் கிட' என்றபடி 'இப்பொழுது சிந்திப்பாயாயின இந்நிலைவாராது' என்பது குறிப்பு.*

***157. பொழிப்புரை :-** காளை போன்ற இளவயதுடையவர்கள் இருமல் முதலிய நோயுடையவர்களாகி கரு மயிரும் வெண்ணிறப் பூளைப் பூவைப் போல் நரைத்து, தோற்றம் கெட்டு விலைமகளிர் வெறுப்பதற்கு முன்னே நெஞ்சமே, வடநாட்டிலுள்ள உஞ்சேனை மாகாளம் என்னும் சிவத்தலத்தைக் கைதொழுது வாழ்த்து.*

***அருஞ்சொற்பொருள் :-** "ஈளையர்கள்" என்றது, முதுமையெய்தினமையைக் குறிப்பால் உணர்த்தியது. பூளை - பூளைப் பூ. இது வெண்ணிறம் உடையது. பொங்குதல், படியாது விரிதல். சூளையர்கள் - எரிகொளுவச் சூழ்ந்திருப்பவர்கள். ஓகாளம் செய்தல், அருவருப்பால், முன் உண்டதைக் கக்குதல். உஞ்சேனை - உச்சாயினி; இது வட நாட்டில் உள்ள ஒரு நகரம். இதன்கண் உள்ள கோயிலும் 'மாகாளம்' எனும் பெயரினது. இஃதொரு வைப்புத் தலம். "நளிர்சோலை உஞ்சேனை மாகாளம்"[2] "உஞ்சேனை மாகாளம் ஊறல் ஓத்தூர்"[3] என்னும் தேவாரத் திருமுறைகளைக் காண்க.*

***158. பொழிப்புரை :-** மனைவியும் செல்வமும் வீட்டில் இருந்தவரை தான். புகழ்ந்துரைக்கும் அயலாரும் உயிர் உள்ள அளவுதான். நல்ல சுற்றத்தாரும் இறந்தபின் மூழ்கும் குளத்தளவுதான். வல்லையாயின் நெஞ்சமே! வளைகுளம்*

---

1. *திருமுறை - 1. 47. 1*
2. *திருமுறை - 2. 39. 9*
3. *திருமுறை - 6. 70. 8*

**திருச்சாய்க்காடு**

159. அஞ்சனஞ்சேர் கண்ணார் அருவருக்கும் அப்பதமாய்க்
குஞ்சி வெளுத்துடலங் கோடாமுன் – நெஞ்சமே
போய்க்காடு கூடப் புலம்பாது, பூம்புகார்ச்
சாய்க்காடு கைதொழுநீ சார்ந்து. 15

**திருவாசி (திருப்பாச்சிலாச்சிராமம்)**

160. இட்ட குடிநீர் இருநாழி ஒருழக்காச்
சட்டவொரு முட்டைநெய் தான்கலந்(து) ஆட்ட
அருவாய்ச்சா றென்றங் கழாமுன்னம் பாச்சில்
திருவாச்சி ராமமே சேர். 16

---

*என்னும் சிவப்பதியில் இருக்கும் ஈசனையே வாழ்த்துவாயாக. இது சோழ நாட்டுத் திருத்தலம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *இல் - இல்லாள். மனை - இல்லம். சொல் - இறந்தமை பற்றிய இரங்கிச் சொல்வனவும், தேற்றுவனவும். துடிப்பு, வந்து கண்டு நீங்குவதில் உள்ள கடமையுணர்ச்சி. கிளை - சுற்றம். கிற்றியே - இதனை அறிய வல்லாயோ? ஏகாரம் வினாப் பொருட்டு. வாழ் முதலாகக் கருதியிருந்த பொருள்களுள் ஒன்றேனும் (உடன் வருவதில்லை) என்பது கருத்து. 'கிற்றியேல் வாழ்த்து' என்பது குறிப்பு. 'கிற்றியேல்' என்றே பாடம் ஓதுதலும் ஆம். வளைகுளம் ஒரு வைப்புத் தலம்.*

***159. பொழிப்புரை :-*** *மை தீட்டப் பெற்ற கண்களை உடையவர் வெறுக்கும் பருவமாய் மயிர் நரையாகி உடம்பு கூன் அடைவதற்கு முன் நெஞ்சமே! சுடுகாட்டிற்குப் போய்ச் சேர, இறப்புத் துன்பத்தால் பிதற்றாமல் பூம்புகாரைச் சேர்ந்த திருச்சாய்க்காடு என்னும் சிவப்பதியைச் சார்ந்து நீ கை தொழுவாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *அஞ்சனம் - மை. மையெழுதிய கண்ணார், மகளிர். பதம் - நிலைமை 'வெளுத்து' 'வெளுக்க' எனத் திரிக்க. 'அருவருக்கப்படுவதும் உடலமே' என்க. கோடுதல் - வளைதல்; கூன் விழுதல், சுடப்படுங் காடு சுடுகாடு. புலம்புதற்கு, 'பலர்' என்னும் எழுவாய் வருவிக்க. 'காடு போய்க் கூடுவிட, பின்னர்ப் பலர் இருந்து புலம்பாமுன்' என்க. 'பூம்புகாரை அடுத்துள்ள சாய்க்காடு' எனக் கொள்க.*

***160. பொழிப்புரை :-*** *மருந்துகள் இடப்பட்ட இரு நாழி அளவுள்ள மருந்து நீர் ஓர் உழக்களவு ஆகுமாறு செப்பமாகக் காய்ச்சி, சிறிய கரண்டியளவு நெய் கலந்து ஊட்டியிட உயிர் பிரிந்தார் என்று அங்கு இருப்பவர் அழுவதற்கு முன், திருப்பாச்சிலாச்சிராமம் என்னும் சோழநாட்டுச் சிவத்தலத்திற்குச் செல்வாயாக என்பதாம்.*

**திருச்சி மலைக்கோட்டை**

161. கழிந்தது நென்னற்றுக் கட்டுவிட்டு நாறி
ஒழிந்த துடல்இரா வண்ணம் – அழிந்தது
இராமலையா கொண்டுபோ என்னாமுன் நெஞ்சே
சிராமலையான் பாதமே சேர். 17

**திருமழபாடி**

162. இழவாடிச் சுற்றத்தார் எல்லாருங் கூடி
விழவாடி ஆவி விடாமுன்னம் – மழபாடி
ஆண்டானை ஆரமுதை அன்றயன்மால் காணாமை
நீண்டானை நெஞ்சே நினை. 18

---

***அருஞ்சொற்பொருள் :-*** *முட்டை, முட்டை வடிவமாக எண்ணெய் முகப்பதற்குச் செய்து வைக்கப்படும் சிறிய அகப்பை. ஒரு முட்டையளவான விளக்கெண்ணெயை இருநாழியளவு நீரிற் கலந்து, அதனை ஓர் உழக்களவாகச் சுவறக் காய்ச்சி யெடுத்ததை 'உடலுக்கு நல்லது' என ஊற்றப் பிறர் முயலுவர். அட்ட - காய்ச்சி எடுக்கப்பட்ட அருவாய்ச் சாறு - அரிய சாறு; கசாயம். வாய் - வாயில் ஊற்றத் தக்க. "சாறு" என்பதன் பின், 'குடியுங்கள்' என்பது வருவிக்க. என்று சொல்லி அழுபவர்கள், சுற்றத்தார். திருப்பாச்சில் ஆச்சிராமம் சோழ நாட்டுத் தலம். திருச்சி - முசிறி சாலையில் அமைந்துள்ளது.*

***161. பொழிப்புரை :-*** *நல்ல நெற்று தளர்ச்சியடைந்து கழிந்தது; நம்முடன் வைத்திருக்க முடியாதபடி அழிந்தது; இதை எடுத்துக் கொண்டு போ என்று சொல்வதற்கு முன்பே நெஞ்சமே! திருச்சிராப்பள்ளி மலைமீது கோயில் கொண்டிருக்கும் இறைவனது பாதங்களைச் சென்று அடைவாயாக.*

*நெற்று - காய். முற்றியபின் காய்ந்து ஈரமில்லாமல் இருப்பது; இராமல் + ஐயா எனப் பிரிக்க.*

***அருஞ்சொற்பொருள் :-*** *"உயிர் போயது நேற்றையது; அதனால் உடல், கட்டுக்களெல்லாம் தளர்ந்து நாற்றம் எடுத்துவிட்டது. இனிச் சிறிது நேரமும் இருக்க முடியாதபடி அஃது அழிந்து விட்டது. ஆகவே, உறவினனான ஐயா, இனிச் சிறிது நேரமும் இங்கு இராதபடி அதனை அடக்கம் செய்ய வேண்டிய இடத்திற்குக் கொண்டு போ" என்று அயலார் பலரும் சொல்லுவதற்கு முன், நெஞ்சே, திருச்சிராமலையில் உள்ள சிவன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்று".*

*'நன்னெற்று' என்பது பாடம் அன்று. "கழிந்தது" என்பதற்கு, 'உயிர்' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. சிராமலை, திருச்சிராப்பள்ளிக்குன்று.*

***162. பொழிப்புரை :-*** *இழவு கொண்டாடி சுற்றத்தார் எல்லாரும் கூடி பிணத்தின்மேல் விழுந்து வருந்திக் கதற, உயிர் பிரிவதற்கு முன் திருமழபாடி*

**திரு ஆப்பாடி**

163. உள்ளிடத்தான் வல்லையே நெஞ்சமே ஊழ்வினைகள்
கள்ளிடத்தான் வந்து கலவாமுன் – கொள்ளிடத்தின்
தென்திருவாய் பாடியான் தெய்வமறை நான்கினையும்
தன்திருவாய்ப் பாடியான் தாள். 19

**திருக்கச்சி ஏகம்பம் (காஞ்சிபுரம்)**

164. என்னெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்
கன்னஞ்செய் வாயாகிற் காலத்தால் – வன்னஞ்சேய்
மாகம்பத் தானை உரித்தானை வண்கச்சி
ஏகம்பத் தானை இறைஞ்சு. 20

---

*என்னும் சிவப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவனை, அமுதம் போன்றவனை, முன்பு பிரமனும் திருமாலும் கண்டறியாதபடி ஜோதி வடிவாய் நின்றானை, நெஞ்சே நினைவாயாக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *இழவு ஆடுதல் - இழவு கொண்டாடுதல். விழவு ஆடுதல் - விழாக் கொண்டாடுதல். விழா, பிண விழா. "ஆடி" என்பவற்றை 'ஆட' எனத் திரித்துக் கொள்க. "இழவாடி" என்பதனை, "விழா வாடி" என்பதற்கு முன்னே கூட்டுக. மழபாடி, சோழநாட்டுத் தலம்.*

***163. பொழிப்புரை :-*** *நெஞ்சமே! நீ நினைக்கத்தான் வல்லையோ? ஊழ்வினைகள் கொள்ளை கொள்ள வந்து சேராமுன் கொள்ளிடத்தின் தெற்கிலுள்ள திருவாய்பாடியில் கோயில் கொண்டுள்ளவனும் நான்கு வேதங்களையும் தன் திருவாயினால் பாடியவனுமான இறைவனது பாதங்களை நினைக்கவல்லையோ என்று கூட்டுக.*

***அருஞ்சொற்பொருள் :-*** *உள்ளுதல் - நினைத்தல். அதனுடன் 'இடு' என்னும் அசையிடைச் சேர்த்து, "உள்ளிடை" என வந்தது. தான், அசை. உள்ளிட வல்லையே - நினைக்க வல்லாயோ. கள் இடம் - களவான காலம். அஃதாவது உயிர் சோர்வுற்றிருக்குங்காலம், "கள் இடத்தான்" என்னும் ஆன் உருபு ஏழாவதன் பொருளில் வந்தது. "காலத்தினாற் செய்த நன்றி"[1] என்பதிற் போல, திருஆப்பாடி சோழ நாட்டுத்தலம். திருவாய்ப் பாடியான் - திருவாயால் பாடினவன். 'தாள் உள்ளிடவல்லையே' என மேலே கூட்டுக. 'கலவா முன் உள்ளிட வல்லையே' எனவும் இயைக்க. "வல்லையே" என்னும் வினா, 'வல்லையாயின் நன்று' என்னும் குறிப்பினது.*

***164. பொழிப்புரை :-*** *என் நெஞ்சமே! உன்னை நான் வேண்டிச் சொல் கின்றேன். காது கொடுத்துக் கேட்பாயானால், காலப்போக்கில் வலிமையுடைய*

---

1. *திருக்குறள் - 102.*

### திருப்பனந்தாள்

165. கரமூன்றிக் கண்ணிடுங்கிக் கால்குலைய மற்றோர்
மரமூன்றி வாய்குதட்டா முன்னம் – புரம்மூன்றுந்
தீச்சரத்தாற் செற்றான் திருப்பனந்தாள் தாடகைய
ஈச்சரத்தான் பாதமே ஏத்து. 21

### திருவொற்றியூர்

166. தஞ்சாக மூவுலகும் ஆண்டு தலையளித்திட்(கு)
எஞ்சாமை பெற்றிடினும் யான்வேண்டேன் – நஞ்சங்
கரந்துண்ட கண்டர்தம் ஒற்றியூர் பற்றி
இரந்துண் டிருக்கப் பெறின். 22

---

*மனம் பொருந்திய பெரிய தூணில் கட்டப்படுகிற யானையினது தோலை உரித்தவனும், வளம் பொருந்திய காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருப்பவனுமான ஏகாம்பரநாதனை வழிபடுவாயாக.*

***அருஞ்சொற்பொருள் :–*** *இரத்தல், குறையிரத்தல், உம்மை, இழிவு சிறப்பு. கன்னம் - செவி. அதனைச் செய்தலாவது, செயற்படச் செய்தல்; கேட்டல் 'செவிசாய்த்தல்' என்றலும் வழக்கு. ''காலத்தால்'' என்பதனை, மேல், "கள்ளிடத்தான்" என்றதனைக் கொண்டவாறு கொள்க. வல் நஞ்சு ஏய் - கொடிய நஞ்சு போன்ற. நஞ்சுய் ஆனை, மா ஆனை, கம்பத்து ஆனை' எனத் தனித்தனி இயையும். மா - பெரிய. கம்பத்து - அசைதலையுடைய கச்சி. காஞ்சி. ஏகம்பம் அத்தலத்தில் உள்ள கோயில்.*

***165. பொழிப்புரை :–*** *கையை ஊன்றி, கண்கள் குழிவிழுந்து, கால் தடுமாற ஊன்றுகோலை ஊன்றி, வாய் பேச முடியாமல் அசைப்பதற்குமுன், முப்புரங்களையும் தீயினைக் கூராகவுடைய அம்பினால் அழித்தவனும், திருப்பனந்தாளில் உள்ள தாடகையீச்சரத்தானுமாகிய இறைவனின் பாதங்களையே புகழ்வாயாக.*

***அருஞ்சொற்பொருள் :–*** *கரம் - கை. முதுமையில், எழும் பொழுது எழுந்திருக்க இயலாமல் கைகளை நிலத்தில் ஊன்றிக் கொண்டு எழுதலும், ஒளியை முற்ற வாங்க முடியாமல் கண் கூச இடுக்கிப் பார்ப்பதும், நடக்க முடியாமல் கால்கள் தள்ளாடுதலும், அவை தள்ளாடாமைப் பொருட்டுக் கோல் ஊன்றி நடத்தலும், பல் இல்லாமையால் வாயைக் குதட்டுதலும் இயற்கை. மரம், கோல். மற்று, வினைமாற்று. தீச்சரம் - தீக்கடவுளாகிய அம்பு. திருப்பனந்தாள், சோழ நாட்டுத்தலம். தாடகை யீச்சரம், அதில் உள்ள கோயிலின் பெயர்.*

***166. பொழிப்புரை :–*** *விஷத்தை மறைந்திருக்குமாறு உண்ட நீலகண்டனது திருவொற்றியூரைச் சார்ந்து யாசித்து உண்டு இருக்கப் பெற்றால், அடைக்கலப்*

### பொது (அ) திருக்கடவூர்

167. நூற்றனைத்தோர் பல்லூழி நுண்வயிர வெண்குடைக்கீழ்
வீற்றிருந்த செல்வம் விழையாதே – கூற்றுதைத்தான்
ஆடரவங் கச்சா அரைக்கசைத்த அம்மான்தன்
பாடரவம் கேட்ட பகல். 23

### திருமயானம்

168. உய்யும் மருந்திதனை உண்மின் எனவுற்றார்
கையைப் பிடித்தெதிரே காட்டியக்காற் – மெல்ல
எழுந்திருமி யான்வேண்டேன் என்னாமுன் நெஞ்சே
செழுந்திரும யானமே சேர். 24

### திருச்சிற்றம்பலம்

---

*பொருளாக மூன்று உலகங்களையும் ஆண்டு காத்து, குறைவில்லாமற் பெற்றாலும் யான் வேண்டேன் என்பதாம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *'தஞ்சம்' என்பது ஈற்று அம்முக் குறைந்து, 'தஞ்சு' என நின்றது. தஞ்சம் - எளிமை. தலையளித்தல் - குடிகளை நன்கு காப்பாற்றுதல். எஞ்சாமை - அங்ஙனம் காப்பதில் இளையாமை. அத்தகைய பேற்றினைப் பெற்றாலும் அதனை வேண்டேன் என்க. 'கரந்து உண்ட' என்பதை 'உண்டு கரந்த' என முன்பின்னாக வைத்து விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க. ஒற்றியூர் - தொண்டை நாட்டில் உள்ள கடற்கரைத் தலம். "ஓடு ஏந்தி இரந்து உண்டல்" என்பது துறவு வாழ்க்கையைக் குறித்தது.*

***167. பொழிப்புரை :-*** *நூற்றுக்கணக்காகிய பல்லூழிக் காலம் வெண் கொற்றக்குடைக்கீழ் அரசாட்சி செய்து கொண்டிருந்த அரசாட்சிச் செல்வத்தை விரும்பாதே. அப்பெருஞ்செல்வம் ஒருநாள் வீழும் தன்மையது. எமனை அழித்தவனும் ஆடுகின்ற பாம்பை அரையில் கச்சாகக் கட்டியவனுமாகிய அம்மானுடைய பாட்டின் ஒலி ஒருபகல் கேட்பதனால் உளவாம் பயன், நூற்றுக்கணக்கான ஊழிக் காலம் அரசாட்சி செய்ததனாலும் உண்டாகாது என்றபடி.*

***அருஞ்சொற்பொருள் :-*** *நூற்று அனைத்து - நூற்றுக்கணக்கான. 'ஓர் நூற்றனைத்து' என மாற்றி, 'ஓர்' என்பதனை நூற்றுக்கு அடையாக்குக. 'பல் ஊழி வீற்றிருந்த' என்க. நுண்வயிரம் - நுண்ணிய ஒளியையுடைய வயிரம் - "செல்வம்" என்பது, செல்வத்தோடு வாழ்ந்த காலம். பாடு அரவம் கேட்ட காலத்தை விழையாது என்க. விழையாது - ஒவ்வாது. 'அரவம்' இரண்டில் முன்னது பாம்பு; பின்னது ஓசை. 'அம்மான் தன்னை' என்னும் இரண்டாம்*

*உருபு தொகுக்கப்பட்டது. இதில் தலம்யாதும் குறிக்கப்படவில்லை. அதனால், "கூற்று உதைத்தான்" என்ற குறிப்பினால், 'திருக்கடவூர் கூறப்பட்டது' எனலாம்.*

***168. பொழிப்புரை :-*** *இஃது உயிர் வாழச் செய்யும் மருந்து, உண்பாயாக என உறவின் முறையார் கையைப் பிடித்து எதிரே காட்டினால், மெல்ல எழுந்து இருமி, எனக்கு வேண்டாம் என்பதற்கு முன் நெஞ்சமே! செழிப்பான திருக்கடவூர் மயானம் என்னும் தலத்தையே சென்று அடைவாயாக.*

*மயானம் என்னும் பெயருடைய சிவத்தலங்கள் மூன்று.*

*அவையாவன; திருக்கடவூர் மயானம், திருநாலூர் மயானம், திருக்கச்சி மயானம் என்பனவாம்.*

***அருஞ்சொற்பொருள் :-*** *உய்யும் மருந்து - இறவாமல் வாழ்வதற்கு ஏதுவான மருந்து. உற்றார் - சுற்றத்தார் கையைப் பிடித்துக் காட்ட வேண்டிய நிலை. கண் தெரியாமையால் வருவது. பைய எழுந்து - மெல்ல எழுந்து. "யான் வேண்டேன்" என்றல், உண்ண முடியாமையால். 'திருமயானம்' என்பது சில தலங்களில் உள்ள கோயில்களின் பெயராய் அமைந்துள்ளது. மயானம் என்றால் பொதுவாக பிரமனின் தலையைக் கொய்த இடம் என்று பொருள் கொள்வர்.*

***சேத்திரத் திருவெண்பா முற்றிற்று.***

## 6. சேரமான் பெருமாள் நாயனார்

*அருளிச்செய்த*

## பொன்வண்ணத் தந்தாதி

***திருச்சிற்றம்பலம்***

*இத்திருமுறையில் பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கைலாய ஞான உலா ஆகிய மூன்று பிரபந்தங்களை அருளிச் செய்தவர் சேரமான் பெருமாள் நாயனார்.*

*சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையில் 'கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார்க்கும் அடியேன்' எனப் போற்றப்பெற்ற இவர் சேரமன்னர். சுந்தரரின் இனிய தோழர். சுந்தரருடன் கயிலை சென்றவர். ஆலவாய் இறைவர் பாணபத்திரர் பொருட்டுத் திருமுகப்பாசுரம் அருளிய பெருமை உடையவர். கயிலையில் தமிழ் மணம் பரப்பியவர். இந்நாயனார் வரலாறு பெரிய புராணத்தில் சேக்கிழார் சுவாமிகளால் கழறிற்றறிவார் புராணம், வெள்ளானைச் சருக்கம் ஆகியவற்றில் சுந்தரர் வரலாற்றோடு இணைத்துக் கூறப்பட்டுள்ளது.*

### அரசுரிமை ஏற்றது

*தமிழகத்தில் முடியுடை வேந்தர்களாகத் திகழ்ந்த மூவருள் சேரர் குடியில் தோன்றியவர் இவர். குடபுலமாகிய மலைநாட்டில் திருவஞ்சைக்களத்தில் சேரர்குலம் செய்த சிவ புண்ணியங்களின் பயனாய்த் தோன்றியவர். பெற்றோர் பெருமாக்கோதையார் எனப் பெயரிட்டு வளர்த்தனர். இளமை முதல் இந்நாயனார் திருஅஞ்சைக்களத்து இறைவர்பால் பேரன்புடையவராய் விளங்கினார். உலகின் இயல்பும் அரசியலும் உறுதியல்ல எனத் தெளிந்து புலர்வதன் முன் எழுந்து ஆலயத்தைத் திருஅலகிட்டும், திருமெழுக்கிட்டும் பூமாலை புனைந்தும் தொண்டுகள் செய்து இறைவனை வழிபட்டு வந்தார். அந்நாட்டை அரசு புரிந்த செங்கோற் பொறையன் என்பான் தன் அரச வாழ்வைத் துறந்து தவம் மேற்கொண்டு, சென்றதால் அமைச்சர் முதலானோர் சேரர் குடியில் தோன்றி திருஅஞ்சைக்களத்தில் சிவத்தொண்டு புரிந்து வந்த இப்பெருமாக்கோதையாரை அரசுரிமை ஏற்க அழைத்தனர். பெருமாக்கோதையார் தவம் செய்துவரும் சிவத்தொண்டுக்கு இடையூறாகுமே என எண்ணியும் அஞ்சைக்களத்து இறைவரை வழிபட்டு அவர் திருவுளம் அறியும் குறிப்புடன் நின்றார். சேரநாட்டு ஆட்சி உரிமையை அவர் ஏற்குமாறு திருவருள் உணர்த்திற்று. இறையருளால் மக்களுயிர்க்கே அன்றி அனைத்துயிர்க்கும் நலம் செய்து அவர் ஆட்சி நடத்துமாறு எல்லா*

*உயிரினங்களும் பேசும் மொழிகளை அறியும் அறிவாற்றலையும் தறுகண்மை, படைவன்மை, கொடைவண்மை முதலானவற்றையும் பெற்றார். பிற உயிர்கள் பேசும் மொழிகளை இவர் பெற்ற காரணத்தால் 'கழறிற்றறிவார்' என்ற சிறப்புப் பெயர் இவர்க்கு வழங்கலாயிற்று.*

**திருஉலா**

*அரசுரிமை ஏற்றல் இறைவன் திருவுள்ளம் என்பதை உணர்ந்த கோதையார் சேரமன்னராய் மணிமுடி சூடி, திருவஞ்சைகளத்திறைவனை வழிபட்டு, யானை மீது அரச மாளிகைக்குத் திருவுலாப் போந்தார். அவ்வாறு அவர் எழுந்தருளும் போது எதிரே ஒரு வண்ணான் உவர்மண் பொதி சுமந்து வந்தான். மழை நீரில் நனைந்ததால் உவர்மண் கரைந்து உடல் முழுவதும் வழிந்தும் வெயிலில் அம்மண் காய்ந்தும் அவன் முழுநீறு பூசிய அடியவர் போலக் காட்சி அளித்தான். அவனைக்கண்ட சேரர்கோ, சிவனடியார் ஒருவர் எதிரே வருகிறார் எனக்கருதி யானையினின்றும் கீழே இறங்கி வந்து அவனை வணங்கினார். அவன் அச்சம் மீதூர்ந்தவனாய் 'அடியேன் தங்கட்கு அடித்தொழில் புரியும் வண்ணான்' என்று கூறக்கேட்டு 'அடியேன் அடிச்சேரன் அன்புகெழுமிய சிவவேடத்தை நினைப்பித்தீர். வருந்தாது செல்லும்' என்று கூறி வழியனுப்பி வைத்து மீண்டும் யானைமீது இவர்ந்து அரண்மனையை அடைந்தார். இதனை நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருஅந்தாதியில்,*

*மன்னர் பிரான்எதிர் வண்ணான் உடல்உவர் ஊறி நீறார்*
*தன்னர் பிரான்தமர் போலவருதலும் தான் வணங்க*
*என்னர் பிரான்அடி வண்ணான் எனஅடிச் சேரன்என்னும்*
*தென்னர் பிரான்கழறிற்றறி வான்எனும் சேரலனே.*

*எனக் கூறியுள்ளார்.*

*கழறிற்றறிவார் தமிழகத்தின் ஏனைய மன்னர்களோடும் நட்புக் கொண்டொழுகி நல்லாட்சி புரிந்தார். நாள்தோறும் தில்லை நடராசப் பெருமானை நினைந்து சிவபூசை செய்து வந்தார். பெருமான் அவரது அன்பு வழிபாட்டை ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக நாள்தோறும் சிவபூசை முடிவில் தன்பாதச் சிலம்பொலியைக் கேட்பித்தருளி வந்தார்.*

**பாணபத்திரர்க்குப் பரிசில்**

*ஒருநாள் ஆலவாய் இறைவர் பாணபத்திரர்க்கு மாண்பொருள் கொடுத்துதவுமாறு எழுதியனுப்பிய திருமுகப் பாசுரத்தைக் கண்டு பாணபத்திரர்க்கு அளவற்ற நிதிக்குவைகளை அளித்து மகிழ்ந்தார்.*

**சிலம்பொலி தாழ்த்தது**

*சிவபிரான் சேரமானைச் சுந்தரருடன் நட்புக்கொள்ளச் செய்யும் திருவுளக் குறிப்பால் நாள்தோறும் பூசை முடிவில் கேட்பிக்கும் சிலம்பொலியை ஒருநாள் காலந்தாழ்த்துக் கேட்பித்தருளினார். கழறிற்றறிவார் இவ்வாறு நிகழ்தற்குத் தான் செய்த பூசையில் ஏதேனும் தவறு நிகழ்ந்திருக்குமோ என ஐயுற்ற போது, தில்லை மன்றிலில் சுந்தரன் நம்மைப் பாடிக் கொண்டிருக்கும் பாடலில் ஈடுபட்டதால் உன் பூசையை ஏற்கக் காலந்தாழ்த்த நேர்ந்தது எனக் கூறக்கேட்டு* ***சுந்தரரைத் தரிசித்து மகிழ வேண்டித் தில்லையை அடைந்து, ஆனந்தக் கூத்தனை வழிபட்டு, ஆரா இன்பெய்திப் பொன்வண்ணத்தந்தாதி பாடிப் போற்றினார். பெருமான் அதனை ஏற்றருளியதற்கு அடையாளமாகத் திருச்சிலம்பொலி காட்டியருளினார்.*** *பின்னர் சுந்தரர் திருவாரூர் சென்றதை அறிந்து திருவாரூரை அடைந்து சுந்தரரைத் தரிசித்து மகிழ்ந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் தழுவி வணங்கி உவகை உற்றனர். இருவரும் திருவாரூர்ப் பூங்கோயில் சென்று வழிபட்டு மன மகிழ்வுற்றனர். சேரர்பிரான் திருமும்மணிக்கோவை என்னும் பிரபந்தத்தால் பெருமானைப் போற்றினார். பின்னர் சேரமான் பெருமாள், சுந்தரரின் வேண்டுகோளுக்கிணங்கி அவர்தம் திருமாளிகையில் பல நாட்கள் அவரோடு உடனுறைந்து மகிழ்ந்தார்.*

**தல யாத்திரை**

*சுந்தரர், சேரமான் பெருமாள் இருவரும் பாண்டிநாடு சென்று திருஆலவாய் முதலான தலங்களைத் தரிசிக்க விரும்பி யாத்திரை மேற்கொண்டனர். சேரமான் தனக்குத் திருமுகம் அனுப்பியருளிய பெருமானைக் காணும் பெருவேட்கையோடு சுந்தரருடன் மதுரை சென்றார். பாண்டிய மன்னனும், அம்மன்னன் மகளை மணந்த சோழ மன்னனும் இவ்விரு பெருமக்களையும் இனிதே வரவேற்றுபசரித்தனர். மூவேந்தர் சூழச் சுந்தரர் பாண்டித் தலங்கள் பலவற்றைத் தரிசித்தார். பின்னர் சேரமானும் சுந்தரரும் திருவாரூர் மீண்டனர். சேரமான் பெருமாள் சுந்தரரோடு சிலநாள் திருவாரூரில் தங்கியிருந்து அவரைத் தம் நாட்டுக்கு எழுந்தருள வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பித்துச் சுந்தரரை அழைத்துக் கொண்டு, வழியிடையே பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு கொடுங்கோளூர் சென்றடைந்தார். சுந்தரரைச் சேரமான் தம் அரியணையில் அமர்த்தி உபசரித்தார். நாள்தோறும் ஆடல் பாடல் முதலிய நிகழ்ச்சிகளால் அவரை மகிழ்வித்தார்.*

**பிரிவும் நினைவும்**

*சில நாட்கள் சென்றன. சுந்தரர் ஆரூரானை மறத்தற்கியலா நிலையைச் சேரமானிடம் தெரிவித்துப் பிரியா விடைபெற்றார். சேரமான் தம்*

*மாளிகையிலுள்ள பெரும் பொருளைப் பொதி செய்து அளித்துச் சுந்தரரை வழியனுப்பி வைத்தார். கோவை அவிநாசி வழியாகச் செல்லும் போதுதான் சிவபெருமான், திருமுருகன் பூண்டியில் அவரிடம் வழிப்பறி நிகழ்வுளை நடத்தி, ஆட்கொண்டு, "கொடுகு வெஞ்சிலை"ப் பதிகத்தை நமக்குக் கிடைக்கும்படி அருளினார்.*

*திருவாரூர் வந்தடைந்த சுந்தரர் நெடுநாட்களுக்குப் பிறகு சேரமான் நினைவுவர அடியவர் குழாங்களோடு கொடுங்கோளூர் புறப்பட்டுச் சென்றார். இருவரும் அரண்மனையில் அளவளாவி மகிழ்ந்திருந்தனர்.*

**சுந்தரர் கயிலை சென்றது**

*ஒருநாள் சேரமான் திருமஞ்சன சாலையில் திருமஞ்சனமாடிக் கொண்டிருந்தபோது சுந்தரர் திருவஞ்சைக்களம் சென்று இறைவரை வணங்கி, 'தலைக்குத் தலைமாலை' என்ற திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார். அந்நிலையில் அவரது பாசத்தளையைப் போக்கிப் பேரருள் புரிய விரும்பிய பெருமான், இந்திரன் முதலிய தேவ கணங்களையும் வெள்ளை யானையையும் அனுப்பிச் சுந்தரரைத் திருக்கயிலைக்கு அழைத்து வருமாறு பணிக்கத் தேவர்கள் வெள்ளை யானையுடன் திருவஞ்சைக்களம் திருக்கோயிலை அடைந்து இறைவனது அருளிப்பாட்டைத் தெரிவித்தனர். சுந்தரர் இறையாணையை ஏற்று சேரமானை மனத்தில் சிந்தித்துக் கொண்டு, வெள்ளை யானையின்மேல் ஏறி, 'தானெனை முன் படைத்தான்' என்ற திருப்பதிகத்தை ஓதிக்கொண்டே திருக்கயிலாயம் சென்றார்.*

**அழையாமல் வந்ததேன்**

*சுந்தரர் திருக்கயிலாயம் செல்வதைத் தம் யோகக் காட்சியால் அறிந்த சேரமான் தன் அருகில் நின்றிருந்த குதிரை மீது ஏறித் திருவஞ்சைக்களம் சென்று சுந்தரர் தேவ கணங்களுடன் திருக்கயிலை செல்வதைக் கண்டு களித்துத் தாமும் அவருடன் கயிலை செல்லும் குறிப்போடு குதிரையின் காதில் திருஐந்தெழுத்தினை ஓதி அக்குதிரையின் மீது அமர்ந்து வான வெளியில் சுந்தரர் செல்லும் வெள்ளை யானையை வலம் வந்து அதன் முன்னே சென்றார். இருவரும் தெற்கு வாயில் வழியாகத் திருக்கயிலையை அடைந்தனர்.*

*சுந்தரர் உள்ளே சென்று இறைவனையும் இறைவியையும் வணங்கிப் போற்றினார். சேரமான் வருகையைச் சிவபிரானிடம் விண்ணப்பிக்கப் பெருமான் சேரர்கோனை உள்ளே வரச்செய்து, 'இங்கு நாம் அழையாமல் வந்தது ஏன்?' எனக் கேட்கச் சேரமான் திருவருள் வெள்ளம் சுந்தரருடன் என்னையும் ஈர்த்துக்*

*கொணர்ந்து இங்கே நிறுத்தியது; அடியேன் தேவரீரைப் பாட்டுடைத் தலைவராக வைத்து திருஉலாப் புறம் ஒன்று பாடியுள்ளேன் அதனைத் திருச்செவி சார்த்தியருள வேண்டுமென வேண்டினார். பெருமான் அதனைச் சொல்லுக எனக் கேட்கத் திருக்கயிலாய ஞான உலாவைத் திருக்கயிலையில் பெருமான் திருமுன்னர் அரங்கேற்றினார். பெருமான் சுந்தரரோடு சேரமானையும் சிவகணத் தலைவராய் நம்பால் நிலைபெற்றிருப்பீராக எனப் பணிக்கச் சேரமான் பெருமாள் நாயனாரும் திருக்கயிலையில் திருத்தொண்டு புரிந்து மகிழ்ந்துறைவாராயினார்.*

*திருக்கயிலையில் சேரமான் பாடியருளிய திருவுலாவைச் செவிமடுத்த மாசாத்துவான் என்ற ஐயனார் சோழநாட்டுத் திருப்பிடவூரில் அந்நூலை வெளியிட்டு அதனை நிலவுலகில் விளங்கும்படிச் செய்தருளினார் என்பது பெரிய புராணத்தில் காணப்படும் இந்நாயனார் வரலாறாகும். இத்தலம், தற்காலத்தில் திருப்பட்டூர் என அழைக்கப்பட்டு, திருச்சி - பெரம்பலூர் மார்க்கத்தில் திருச்சியிலிருந்து 15 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இவ்வூரில் பிரம்மபுரீசுவரருக்கு ஒரு ஆலயமும், ஐயனாருக்கு ஒரு ஆலயமும் தனித்தனியாக உள்ளன. சில ஆண்டுகளுக்கு முன் இரண்டு ஆலயங்களையும் திருப்பணி செய்து குடமுழுக்கு செய்யும் பேற்றைப் பதிப்பாசிரியர் பெற்றார்.*

*அந்தாதி என்பது யாப்பியலில் ஒரு தொடை வகையையும், ஒரு பிரபந்த வகையையும் குறிக்கும். அந்தாதி என்னும் சொல், தொடக்கம், முடிவு என்னும் பொருள்படும், ஆதி, அந்தம் ஆகிய இரு சமசுக்கிருதச் சொற்களின் சேர்க்கையால் உருவானது. இதற்கேற்ப, ஒரு பாடல் முடிவில் உள்ள எழுத்து, அசை, சீர், சொல் அல்லது அடி, அடுத்து வரும் பாடலின் தொடக்கமாக அமையும் பாடல்களால் ஆனது அந்தாதிச் செய்யுள் ஆகும். அடுத்தடுத்து வரும் அடிகள் அந்தாதியாக அமையும்போது அது, 'அந்தாதித் தொடை' எனப்படும். அந்தாதி அமைப்புப் பாடல்கள், மனப்பாடம் செய்வதற்கு வசதியாக வரிசையாக அமைகின்றன.*

**வரலாறு**

*சங்க இலக்கியங்களில் ஒன்றான பதிற்றுப்பத்தின் நான்காம் பத்தில் அந்தாதி அமைப்பு உண்டு. எனினும் அந்தாதி இலக்கியமாகத் தனியே அமைந்தவற்றில் இன்று கிடைக்கும் பழைய நூல், காரைக்கால் அம்மையாரின் 'அற்புதத் திருவந்தாதி' ஆகும். தவிர பன்னிரு திருமுறைகளில் பதினோராம் திருமுறையில் உள்ள நூல்களில் எட்டு அந்தாதி வடிவில் அமைந்துள்ளன.*

*மாணிக்கவாசகரின் திருவாசகம், திருமூலரின் திருமந்திரம், நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆகியவற்றிலும் அந்தாதி வடிவில் அமைந்த பாடல்களைக் காண முடியும். இவை தவிர, பிரபந்த வகையைச் சேர்ந்த, நான்மணிமாலை,*

*இரட்டை மணிமாலை, அட்டமங்கலம், நவமணிமாலை, ஒருபா ஒருபது, இருபது இருபது, மும்மணிக்கோவை, மும்மணிமாலை, கலம்பகம் என்பவை அந்தாதியாக அமைகின்றன.*

**வகைகள்**

*அந்தாதிகள் பல வகைகளாக உள்ளன; இவற்றுள் பின்வருவன அடங்கும்.*

- *ஒலியந்தாதி*
- *பதிற்றந்தாதி*
- *நூற்றந்தாதி*
- *கலியந்தாதி*
- *கலித்துறை அந்தாதி*
- *வெண்பா அந்தாதி*
- *யமக அந்தாதி*
- *சிலேடை அந்தாதி*
- *திரிபு அந்தாதி*
- *நீரோட்ட யமக அந்தாதி*

**சில அந்தாதி நூல்கள்**

- *அபிராமி அந்தாதி - அபிராமி பட்டர்*
- *அழகரந்தாதி*
- *திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி - அதிவீரராம பாண்டியர்*
- *திருச்செந்தில் நீரோட்டக யமக அந்தாதி - சிவப்பிரகாச சுவாமிகள்*
- *சடகோபர் அந்தாதி - கம்பர்*
- *சரசுவதி அந்தாதி - கம்பர்*
- *திருவரங்கத்து அந்தாதி - பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்*
- *திருவிடைமருதூர் அந்தாதி*
- *கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி - நக்கீரதேவ நாயனார்*
- *அம்மை பாதி அப்பன் பாதி அந்தாதி*
- *குருநாதன் அந்தாதி*
- *இராமானுச நூற்றந்தாதி*

**சிவதரிசனம்**

**169.** பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி; பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை; வெள்ளிக்குன்றம்

---

***169.*** *இது 'பொன் வண்ணம்' எனத் தொடங்கி 'பொன் வண்ணம்' என முடியும் அந்தாதியாய் இருத்தலின் 'பொன்வண்ணத் தந்தாதி' எனப் பெயர் பெற்றது. ஒரு செய்யுளின் இறுதியை அடுத்த செய்யுள் தனது முதலாகக் கொண்டு இயலும் செய்யுட்களால் ஆவது 'அந்தாதி' என்னும் பிரபந்தமாகும். அதனால் இது, சொற்றொடர்நிலை என்னும் வகையைச் சேர்ந்த பிரபந்தமாம். இவ்வந்தாதியின் வரலாற்றைப் பெரிய புராணத்துட் காண்க*[1].

***பொழிப்புரை :-*** *தன்னைக் கண்ட எனது மேனியின் நிறம் அங்ஙனம் கண்டபின் எந்த நிறமாயிற்றோ அந்த நிறத்தையே தனது இயற்கை நிறமாக உடைய இறைவனுக்கே மேனி, எப்பொழுதும் பொன்னின் நிறம் என்ன நிறமோ அந்த நிறமே. தாழ்ந்து தொங்குகின்ற சடைகள், விட்டு விளங்குகின்ற மின்னல் என்ன நிறமோ அந்த நிறமே. பெரிய இடப ஊர்தி, வெள்ளி மலை என்ன நிறமோ வடிவோ, அந்த நிறம் வடிவுகளே.*

***குறிப்புரை :-*** *"தன்னைக் கண்ட" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. இச்செய்யுள் தில்லைக் கூத்தப் பெருமானைக் கண்டு, அவர் மேல் காதல் கொண்டு ஆற்றாமை எய்தினாள் ஒருத்தி கூற்றாகச் செய்யப்பட்டது. காதலால் வருந்தும் தலைவியரது மேனி பொன்னிறமாகிய பசலையை அடையும் என்பது,*

*பசப்பித்துச் சென்றாரை உடையையோ? அன்ன*
*நிறத்தையோ? பீர மலர்*[2]

*என்பது முதலியவற்றான் விளங்கும். "தன்னைக் கண்ட என் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசன்" என்பது இவ்வாறு வெளிப்பொருள் தருவதாயினும், 'காணப்படாத இறைவனது இயல்பு, காணப்படுகின்ற அவன் அடியவரிடத்து விளங்குதல் பற்றியே அறியப்படும்' என்பதே இதன் உட்பொருள்.*

*ஒன்றும் குறியே குறிஆத லால்அதனுக்கு*
*ஒன்றும் குறிஒன் றிலாமையினால் - ஒன்றோடு*
*உவமிக்க லாவதுவுந் தான்இல்லை; ஒவ்வாத்*
*தவம்மிக்கா ரேஇதற்குச் சான்று*[3]

*என்ற திருக்களிற்றுப்படியினைக் காண்க. மால், மாயோனுமாம்.*

---

1. *கழறிற்றறிவார் நாயனார் (சேரமான் பெருமாள் நாயனார்)*
2. *தொல் - சொல் - எச்சவியல், சேனாவரையம்*
3. *வெண்பா - 10*

தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை; தன்னைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே. 1

170. ஈசனைக் காணப் பலிகொடு செல்லஎற் றேஇவளோர்
பேயனைக் காமுறு பிச்சிகொ லாமென்று பேதையர்முன்
தாயெனை ஈர்ப்பத் தமியேன் தளர, அத் தாழ்சடையோன்
வாவெனைப் புல்லவென்றான்இமை விண்டன வாட்கண்களே. 2

---

***170. பொழிப்புரை :-*** *("பிச்சை" என்று கேட்டு வாயிலில் வந்தவன் சிவ பிரான் - என்று தெரிந்துயான்) 'அவனைக் காண வேண்டும்' என்னும் ஆசையால் பிச்சையைப் பிறர் எடுத்துச் செல்வதற்கு முன் யானே விரைந்து எடுத்துச் செல்ல, என் தாய் (செவிலி) 'புறம் செல்லலாகாத இவள் மிக விரைந்து புறம் செல்கின்றாள் ஆதலின் பிச்சைக்கு வந்த இந்தப் பேய்க் கூட்டத்தான் மேல், பித்துப் பிடித்தவள் போல் இவள் காதல் கொண்டாள் போலும்' என்று அறிந்து, தோழியர் பலர்முன் தாய் என்னை, 'ஏடி, உள்ளே வா' என்று பற்றி ஈர்க்க, எனக்கு உதவுவார் யாரும் இன்றி யான் சோர்தலைக் கண்டு, பிச்சைக்கு வந்த, நீண்ட சடையையுடைய அவன், 'நீ என்னைக் காதலித்து விட்டபின் எவர் உன்னைத் தடுத்து என்ன பயன். (நீ என்னைக் காதலித்துவிட்ட பொழுதே நீ எனக்கு உரியவளாய் விட்டாய்; ஆகவே), நீ யாவரும் அறியவே என்னைத் தழுவ வா' என்று அழைத்தான். அவனது பொருளை அறிய, என்னுடைய வாள் போன்ற கண்கள் பொழிந்த அன்பு நீரைத் தடுக்க மாட்டாமல் இமைகள் திறந்துவிட்டன.*

***குறிப்புரை :-*** *"கண்டார் காதலிக்கும் கணநாதன் எம் காளத்தியாய்"[1] என்று அருளிச் செய்தபடி, **"பக்குவான்மாக்கள் சிவனது வடிவைக் கண்டவுடனே அவன்மேற் கரையிறந்த காதல் உடையனவாம்"** என்பதையும், 'அதுபொழுது அவ்வான்மாவை அபக்குவான்மாக்கள் ஏசியும், இகழ்ந்தும் தம் வயப்படுத்த முயலும்' என்பதையும், 'எனினும் **சிவன் தன்னைக் காதலித்த ஆன்மாவைத் தன்பால் ஈர்த்துக் கொள்ளுதலை ஒருவராலும் தடுக்க இயலாது'** என்பதையும் இவ்வாறு அகப் பொருள்மேல் வைத்து அருளிச் செய்தவாறாக உணர்க. இதற்குக் கண்ணப்ப நாயனார் சிறந்த எடுத்துக்காட்டு. அதனையே மேற்காட்டிய சுந்தரர் திருமொழி குறிப்பால் உணர்த்தியது. பிச்சி - பித்துக் கொண்டவள். சகரயகரங்கள் ஒன்றற்கு ஒன்று எதுகையாய் வருதல் உண்டு.*

***171. பொழிப்புரை :-*** *இச்சிறுமியை, அழகிய கண்டத்தையுடைய சிவன் வெறுக்கவும் இவள் அவன்மேற் கொண்ட காதலால், கண்கள் நீர் பொழிய, கை வளைகள் கழல, துகில் நெகிழ, அவனது கொன்றை மாலை போலும் நிறத்தை எய்தியதுடன் அறியாமையுடைய மனம் பித்துக் கொண்டவளாயினாள்.*

---

*1. திருமுறை - 7.26.1*

171. கண்களங் கஞ்செய்யக் கைவளை சோரக் கலையுஞ்செல்ல
ஒண்களங் கண்ணுதல் வேர்ப்பவொண் கொன்றையந் தார்உருவப்
பெண்களங் கம்இவள் பேதுறும் என்பதோர் பேதைநெஞ்சம்
பண்களங் கம்இசை பாடநின் றாடும் பரமனையே. 3

172. பரமனை யே, பலி தேர்ந்துநஞ் சுண்டது; பன்மலர்சேர்
பிரமனை யே, சிரங் கொண்டுங் கொடுப்பது பேரருளாம்;
சரமனை யேயுடம் பட்டும் உடம்பொடு மாதிடமாம்
வரமனை யேகிளை யாகும்முக் கண்ணுடை மாதவனே. 4

---

*இஃது இவளது பெண்மைக்குக் குற்றமாம்.*

***குறிப்புரை :-*** *இது சிவபிரானைக் காதலித்தத் தலைவிதன் தாய்க் கூற்று.*

*வீழப் படுவார் கெழீஇயிலர், தாம்வீழ்வார்*
*வீழப் படாஅ ரெனின்[2].*

*என்றபடி, தம்மால் காதலிக்கப்பட்ட தலைவரால் தாமும் காதலிக்கப்பட்ட மகளிரன்றோ பெருமையடைதற்கு உரியர்? இவள் அவ்வாறின்மையின் குற்றப்படுகின்றாள் - எனத் தாய் நொந்து கூறினாள் என்க. தீவிர பக்குவம் எய்தாத ஆன்மாவின் நிலைமையை இங்ஙனம் அகப்பொருள் முறையில் வைத்துக் கூறியதாக உணர்க. 'கண்கள் அங்கு அம் செய்ய' எனப் பிரிக்க. அம் - நீர். 'களக் கண்ணுதல்' என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. வேர்த்தல் - சிதைத்தல். அஃது இங்கு வெறுத்தலைக் குறித்தது. 'வேர்ப்பவும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுக்கப்பட்டது. 'வேர்ப்பவும் ஓர் பேதை நெஞ்சம் அவனையே விரும்பிப் பேதுறுகின்றாள் என்பது பெண் களங்கம்' என இயைத்து முடிக்க. களங்கம் - குற்றம். உருவத்தோடு' என உருபு விரித்து அதனை, "பேதுறும்" என்பதனோடு முடிக்க. 'பண்களுக்கு அங்கமான (உறுப்பான) இசைகளை இனிது விளங்கப் பலர் பாட ஆடும் பரமனையே விரும்பிப் பேதுறும்' என ஒருசொல் வருவித்து முடிக்க. இப்பாட்டுள் 'திரிபு' என்னும் சொல்லணி வந்தது.*

***172. பொழிப்புரை :-*** *மூன்று கண்களையுடைய, பெரியதவக் கோலத்தனாகிய சிவபிரான் அயலார் இல்லந்தோறும் சென்று இரந்த போதிலும் அவன் உண்டது நஞ்சமே. இதழ்களால் பன்மையைப் பெற்ற மலரின்கண் இருக்கும் பிரமதேவனைச் சிரம் கொய்ததும் அவனுக்கு வழங்கியது பெரிய அருளே. (படைப்புத் தொழில் தொன்மையை அளித்தது) மலர்க் கணைகளை யுடைய மன்மதனை அழித்தபோதிலும் உடம்பில் இடப்பாதியாகக் கொண்டது பெண்ணையே. இனி மேலாவன மனைவியாகிய அவளே அவனுக்குத் தாயும், மகளும் ஆகிய சுற்றம்.*

---

*2. திருக்குறள் - 1194*

**173.** **தவனே; உலகுக்குத் தானே முதல் தான் படைத்தவெல்லாம்;**
**சிவனே முழுதும்என் பார்சிவ லோகம் பெறுவர்செய்ய**
**அவனே அடல்விடை ஊர்தி கடலிடை நஞ்சம்உண்ட**
**பவனே எனச்சொல்லு வாரும் பெறுவரிப் பாரிடமே.** **5**

---

*குறிப்புரை :-* *'இஃது அவன் இலக்கணம்' எனப் பழித்தல் குறிப்பெச்சம். இது பழித்ததுபோலப் புகழ்ந்தது. சத்திக்குச் சிவன் எவ்வெம் முறையனாம் என்பதை,*

*"எம்பெருமான் இமவான் மகட்குத்*
*தன்னுடைக் கேள்வன், மகன், தகப்பன்,*
*தமையன்"[1]*

*என்னும் திருவாசகத்தாலும்,*

*தவளத்த நீறணி யும்தடந் தோள் அண்ணல் தன்னொருபா*
*லவள் அத்த னாம்; மகனாம் தில்லையான்[2],*

*என்னும் திருக்கோவையாராலும் அறிக. இங்ஙனம் கூறவே, இவை உலகில் உள்ள முறைபோலத் தம் பிறப்பினால் ஆகாது தமது அருள் நாடகச் செயலால் ஆவனவாதல் விளங்கும். தத்துவங்களில் சுத்த தத்துவங்கள் தோன்றுமிடத்து, பிறிதொன்றையும் நோக்காது தன்நோக்கியாக தன்னிலையில் ஒருவனேயான சிவன் உலகத்தை நோக்குங்காலத்தில் 'சிவன், சக்தி' என் இரு கூறாய்ப் பரநாதமாகிய சிவன் சுத்த சிவத்தினின்றும் தோன்றித் தன்னின்றும் பரவிந்துவாகிய சத்தியைத் தோற்றுவித்தலால் சத்திக்குச் சிவன் தந்தையாகின்றார். பின்பு பரவிந்துவாகிய சத்தியினின்றும், அபரநாதமாகிய சிவன் தோன்றுதலால் சத்திக்குச் சிவன் தோன்றுதலால் சத்திக்குச் சிவன் மகனாகின்றார். பின்பு அபர நாதமாகிய சிவன் அபர விந்துவாகிய சத்தியைத் தோற்றுவிக்க அச்சத்தி யினின்றும் முதலில் சதாசிவனும், பின்பு மனோன்மணியும் தோன்றுதலால் சத்திக்குச் சிவன் தமையனாகின்றார். பின்பு அவ்விருவரும் சேர்ந்தே மகேசுரன் முதலிய தலைவர்களைத் தோற்றுவித்து, அவர்கள் வழியால் உலகத்தையும் தோற்றுவித்தலால் சத்திக்குச் சிவன் கேள்வன் (கணவன்) ஆகின்றார். எனவே, இத்தத்துவக் குறிப்பே முறையில்லாத முறைகளாக நகைச்சுவை தோன்றச் சொல்லப்படுகின்றன என்க. இப்பாட்டிலும், 'திரிபு' என்னும் சொல்லணி வந்தது. பர மனை - அயல் வீடு. சரம் - இங்கு பூங்கணையும், மன் - மன்மதனுமாம். உடம்பு அட்டு - உடம்பை அழித்து. "உடம்பொடு" என்பதை 'உடம்பின் கண் இடம் ஆம்' எனச் சினைவினை முதல்மேல் நின்றது. கிளை ஆகும் - கிளையாக இருக்கும்.*

---

1. *திருப்பொற்சுண்ணம் - 13*
2. *பாட்டு - 112.*

**மாலிருக்கும் பாதியன் (சங்கரநாராயணத் திருவடிவம்)**

**174.** இடம்மால், வலந்தான்; இடப்பால் துழாய், வலப் பாலொண்கொன்றை;
வடமால் இடந்துகில் தோல்வலம் ஆதி இடம்வலம்மான்
இடமால் கரிதால், வலஞ்சே(து) இவனுக்(கு) எழில்நலஞ்சேர்
குடமால் இடம்வலங் கொக்கரை யாம்எங்கள் கூத்தனுக்கே. **6**

---

***173. பொழிப்புரை :-*** *'சிவபெருமானே எல்லோரிலும் மிக்கவன்; (எனவே, முதற்கடவுள்) உலகிற்கு முதல்வனும் அவனே. எல்லா உயிர்களும், எல்லாப் பொருள்களும் அவன் படைத்தனவே. (உயிர்கள், பிறப்பெடுத்த உயிர்கள்). அவன் அனைத்துப் பொருள்களிலும் அவையேயாய் நிறைத்திருக்கின்றான்' என இவ்வாறு உணர்கின்றவர்கள் சிவலோக வாழ்க்கையைப் பெறுவர். 'அவன் திருமாலை இடமாகக் கொண்டு ஏறி நடாத்துபவன், பாற்கடலில் தோன்றிய நஞ்சினைத் தேவர் பொருட்டு உண்டவன், நினைப்பவர் நினைத்த இடத்தில் அவர் நினைத்த வடிவில் தோன்றுபவன்' என இவ்வாறு அவனைப் புகழ்பவரும் இவ்வுலக ஆட்சியைப் பெறுவர்.*

***குறிப்புரை :-*** *மிகுதியை உணர்த்தும் 'தவ' என்னும் உரிச்சொல்லடியாக, 'தவன்' என்னும் பெயர் பிறந்தது, 'சால்' என்பது அடியாக, 'சான்றோன்' என்பது பிறத்தல் போல. பவன் - தோன்றுபவன். பெறப்படுவன வேறாயினும் இரண்டும் பேறாதல் பற்றி, "சொல்லுவாரும்" என இறந்தது தழுவிய எச்சவும்மை தரப்பட்டது.*

***174. பொழிப்புரை :-*** *சிவபெருமான் ஓரமையத்தில் இடப்பக்கம் திரு மாலும், வலப்பக்கம் தானுமான ஒரு வடிவத்துடன் நின்றான். (அது படைப்புக் காலம் என்க) அப்பொழுது இடப்பக்கம் துழாய் மாலையும், வலப்பக்கம் கொன்றைப் பூ மாலையும் - இடப்பக்கம் பொன்னாடையும், வலப்பக்கம் தோல் ஆடையும், இடப்பக்கம் சக்கரமும், வலப்பக்கம் மானும், இடப்பக்கம் கருநிறமும், வலப்பக்கம் செந்நிறமுமாய் இருந்தன. இனி இடப்பக்கம் குடக் கூத்தும், வலப்பக்கம் கொக்கரைக் கூத்தும் ஆடின.*

***குறிப்புரை :-*** *'இஃதோர் அதிசய வடிவம்' என்பது குறிப்பெச்சம். இவ் வடிவம் 'அரியர்த்தேசுர வடிவம்' எனப்படும். "எங்கள் கூத்தனுக்கு" என்பதை முதலில் கொண்டு உரைக்க. வட மால் - தாமோதரன், 'இடம், வடமாவது துகில்' என்க. துகில் - உயர்ந்த ஆடை. 'வலக்கையில் மான்' என்றது இவ்வடிவத்தில் மட்டும் சிறப்பாகக் கொண்டது. "இடம் ஆல் கரிது ஆல்" என்னும் 'ஆல்' இரண்டும் அசைகள். சேது - செய்யது; செந்நிறமானது. உருவம் கூறியபின் செயல் கூறுகின்றார். ஆகலின், "இவனுக்கு" என மீட்டும் சுட்டிக் கூறினார். எழில் நலம், ஒருபொருட் பன்மொழி. குடம் கொண்டு ஆடிய கூத்தைக் "குடம்" என்றும்[1]*

---

*1. சிலம்பு - கடலாடு காதை - 55 உரை.*

**175.** **கூத்துக் கொலாமிவர் ஆடித் திரிவது; கோல்வளைகள்**
**பாத்துக் கொலாம்பலி தேர்வது; மேனி பவளங்கொலாம்**
**ஏத்துக் கொலாமிவர் ஆதரிக் கின்ற(து) இமையவர்தம்**
**ஒத்துக் கொலாமிவர் கண்ட(து) இண் டைச்சடை உத்தமரே.** **7**

*கொக்கரித்து ஆடிய கொடுகொட்டிக் கூத்தைக்[1] "கொக்கரை" என்றும் கூறினார்.*

*சங்கரநாராயணத் திருக்கோலம்*

| *இடம் (மால்)* | *வலம் (சிவம்)* |
|---|---|
| *திருமால்* | *சிவன்* |
| *துளசிமாலை* | *கொன்றை மாலை* |
| *பொன்னாடை* | *தோலாடை* |
| *சக்கராயுதம்* | *மான்* |
| *கருவண்ணம்* | *செம்மை* |
| *குடக்கூத்து* | *கொக்கரைக்கூத்து* |

*175. **பொழிப்புரை :-** 'இண்டை' என்னும் வகை மாலையைச் சடையில் தரித்துள்ள மேலானவராகிய இவர், எங்கும் ஆடிச் செல்வது முறைப்படி அமைந்த நடனம். எங்கும் சென்று பிச்சை ஏற்பது தம் தேவியர் பகுத்து உண்டற்கு. இவர் மேனி பவளம் போல்வது, இவர் எவரிடமும் விரும்புவது தம்மைப் புகழ்தலை. இவர் நினைவு மாத்திரத்தாற் செய்தது வேதம்.*

***குறிப்புரை :-*** *இஃது இறையது பொது வியல்பைக் கூறியது. "கூத்து" எனப் பொதுப்படக் கூறினாராயினும், "ஆடித் திரிவது" என எடுத்தோதினமையால், அது முறைப்படி (கூத்த நூல் முறைப்படி) அமைந்த கூத்தாயிற்று. இது பெத்தான்மாக்களுக்கு ஊன நடனமாயும், முத்தான்மாக்களுக்கு ஞான நடனமாயும் நிகழ்தலை உண்மை விளக்க நூலால் அறிக[2]. "கோல் வளை" என்பது 'திரட்சியான வளையலை அணிந்தவள் என ஒருமையாய் நின்று, பின் 'கள்' விகுதியேற்றுப் பன்மையாயிற்று. சிவபெருமானுக்குத் தேவியர் 'உமை, கங்கை' என இருவராதல் வெளிப்படை. எனவே, 'அவர்களைக் காப்பாற்றுதற்கு வழியில்லாமையால் பிச்சை எடுக்கின்றான்' என்பது வெளிப்படைப் பொருளாய் இகழ்ச்சியைத் தோற்றுவித்தது. ஆயினும், 'பிச்சையிட வரும் மகளிரது வளைகளைக் கவர்ந்துகொள்கின்றான்' என்பது உள்ளுறைப் பொருளாய்ப் புகழ்ச்சியைத் தோற்றுவித்தது. இது சிலேடையணி. தொழிற் பெயர்கள் வினையொடு முடியுங்கால் வினையெச்சத்தோடே முடிதலும் உண்டு. ஆகையால், "திரிவது" என்னும் தொழிற் பெயர் "பாத்து" என்னும் வினையெச்சத்தோடே*

1. *சிலம்பு - கடலாடு காதை - 43 உரை.*
2. *வெண்பா - 35, 36*

176. உத்தம ராயடி யாருல காளத் தமக்குரிய,
மத்தம் அராமதி மாடம் பதிநலஞ் சீர்மைகுன்றா;
எத்தம ராயும் பணிகொள வல்ல இறைவர்வந்தென்
சித்தம ராயக லாதுடன் ஆடித் திரிதவரே. 8

177. திரிதவர் கண்ணுள்ளும் உள்ளத்தின் உள்ளுந் திரிதரினும்
அரிதவர் தன்மை அறிவிப்ப(து) ஆயினும் ஆழிநஞ்சேய்
கரிதவர் கண்டம் வெளிதவர் சாந்தம்கண் மூன்றொடொன்றாம்
பரிதவர் தாமே அருள்செய்து கொள்வர்தம் பல்பணியே. 9

---

*முடிந்தது. பாத்து - பகுத்து. இது வெளிப்படைப் பொருளில் 'பகுக்க' எனச் செயவெனெச்சப் பொருட்டாயும், உள்ளுறைப் பொருளில் 'கவர்ந்து' என்னும் பொருட்டாயும் நின்றது. ஏத்து - துதி; முதனிலைத் தொழிற்பெயர். ஆதரித்தல் - விரும்புதல். "இமையவர் ஒத்து" என்றதனால் இறைவன் திருவருட் குறிப்பினை உணரத் தேவர்களும் வேதத்தை உணர்தல் சொல்லப்பட்டது.*

***'பெத்தான்மாக்கள், முத்தான்மாக்கள் ஆகிய இருவகை ஆன்மாக்களுக்கும் ஏற்படையவற்றைச் செய்து அவைகளை உய்வித்தலும், தன்னை உணராதவரையும் தக்க வழியால் உணர்வித்தலும், சிறிது உணர்ந்தாரையும் தம்மைப் பகழ்தல் வாயிலாக மிக உணர்ந்து அன்புகூரச் செய்தலும், உயிர்களுக்கு நூல்கள் வாயிலாக நன்னெறியை உணர்த்துதலும் இறையது பொதுவியல்புகள்'*** *என்பது கூறியவாறு. 'மேனி பவளம்' என்றது வசிகரித்தலைக் கூறியது. "கொல், ஆம்" என வந்தன எல்லாம் அசைநிலைகள்.*

***176. பொழிப்புரை :-*** *தம் அடியார்கள் யாவரினும் மேலானவராய், மண்ணுலகு வானுலகுகளை ஆள, ஊமத்தை மலர், பாம்பு, திங்கள், அவற்றின் அருகே நீர் இவைகளே தமக்கு உரியவாய் மிக அழகும் புகழும் குறையாதனவாய் உள்ளன. எக்குலத்தவராயினும் தமக்கு அடியார்களாக ஆகும்படி செய்துகொள்ள வல்ல இறைவர் தமது மேல்நிலையினின்றும் இறங்கி வந்து என் உள்ளத்தில் பொருந்தி என்னோடு உடன் இயங்கியே திரியும் தன்மையுடையராகின்றனர்.*

***குறிப்புரை :-*** *'இதுவும் மேற்கூறிய ஊமத்தை முதலியவற்றை உவந்து கொண்டது போல்வதுதான்' என்பது குறிப்பெச்சம். இக்கருத்துக் குறிப்பால் தோன்றவே இதனை இருதொடராக அருளிச் செய்தார். "தமக்கு உரியவாய்" என ஆக்கம் விரித்து "சீர்மை குன்றா" என்பதற்கு முன்னே கூட்டுக. மத்தம் - ஊமத்தை. மாடு - பக்கம். 'அம்பு + அதிநலம்' எனப்பிரிக்க. அம்பு - நீர், நலம் - அழகு. 'அதிநலமும், சீர்மையும் குன்றா' என்க. ஈற்றடியில், 'மருவாய்' என்பது, 'மராய்' என வந்தது. மருவு - மருவுதல்; முதனிலைத் தொழிற்பெயர். திரிதவர் - திரிதலையே தவமாக - தொழிலாக உடையவர்.*

***177. பொழிப்புரை :-*** *இறைவர் மேற்கூறியவாறு என் கண்ணினுள்ளும்,*

**178.** பணிபதம் பாடிசை ஆ(டு)இசை யாகப் பனிமலரால்
அணிபதங் கன்பற் கொள்அப்பனை அத்தவற் கேயடிமை
துணிபதங் காமுறு தோலொடு நீறுடல் தூர்த்துநல்ல
தணிபதங் காட்டிடுஞ் சஞ்சலம் நீ யென் தனிநெஞ்சமே. **10**

**அன்புடையாரை அறிவன் சிவன்**

**179.** நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் அரும்ப முகம்மலர
அஞ்செங் கரதலங் கூம்பஅட் டாங்கம் அடிபணிந்து
**தஞ்சொல் மலரால் அணியவல் லோர்கட்குத்** தாழ்சடையான்
வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே. **11**

---

*கருத்தினுள்ளும் என்னோடு அகலாது நின்று உடனே திரிபவராயினும், 'அவரது தன்மை இதுதான்' என்று என்னால் வரையறுத்துச் சொல்லுதல் இயலாது. ஆயினும் கடல் நஞ்சம் பொருந்திய அவரது மிடறு கறுத்தது; அவர் பூசிய சந்தனம் வெளுத்தது; (திருவெண்ணீறு) கண்களோ மூன்று, ஏந்திய வில் பிறரால் ஏந்துதற்கு அரிய ஒன்று (அஃதாவது மலை)* ***தமக்குத் தாமே பல பணிகளைப் பணித்துக் கொள்வார்****. (பிறரால் யாதும் பணிக்கப்படுவாரல்லர்) என இங்ஙன் ஒருவாறு அவரைப் பற்றிக் கூறலாம்.*

***குறிப்புரை :-*** *ஈற்றில் வருவித்து உரைத்தது குறிப்பெச்சம். 'கண் முன்னொரு பரிதவர் ஒன்றாம்' என்க - பரித்தல் - தாங்குதல். தவர் - வில்.*

***178. பொழிப்புரை :-*** *எனது ஒப்பற்ற மனமே, சூரியனது பல்லை உகுத்த, யாவர்க்கும் தந்தையாகிய சிவனை அடிபணி; கூத்தாடு; பொருந்தும் வகையால் பல இசைகளைப் பாடு; குளிர்ந்த மலர்களால் அலங்கரி; 'அப்பெருமானுக்கே யான் அடிமை' என்னும் நிலைமையை நிச்சயமாக உணர்வதையே விரும்பு. இச்செயல்களில் உனக்கு அவனைப் போலவே உடம்பில் தோலை உடுத்தலோடு, நீற்றை நிறையப் பூசி அமைதியுற்றிருத்தலாகிய நல்ல பதவியைக் கொடுக்கும். இனி உனது கவலையை விடு.*

***குறிப்புரை :-*** *தம் மொழி வழி நிற்றல் வேண்டி, 'ஒப்பற்ற நெஞ்சமே' என்றார். இனி, 'துணையில்லாது தனித்து நிற்கும் நெஞ்சமே' என்றலும் ஆம். 'பதம் பணி' என மாற்றியுரைக்க. இசையாக - இசைவாக; பொருந்தும்படி. 'இசையாக இடை பாடு' என்க. பதங்கன் - சூரியன். 'அடிமைப் பதம் துணி' என இயைக்க. பதம் - நிலைமை. "தோலொடு......... தணிபதம்" என்றது சாரூப பதவியை. நீ - நீத்துவிடு. சஞ்சலம் - கவலை.*

***179. பொழிப்புரை :-*** *மனம், வறட்சியால் வாடிய செடியாகாது, அன்பென்னும் நீரால் குளிர்ந்த செடியாகித் தளிர்க்க, அதினின்றும் தோன்றுகின்ற குருத்து அரும்புவதன் அறிகுறியாக அழகிய, சிவந்த கைகள் குவிந்து தோன்ற, அக்கருத்தில் அன்பாகிய தேன் ததும்புவதாகக் கண்களில் நீர்*

ததும்ப, அரும்பிய கருத்து மலர்வதாக முகம் மலர, மலர்ந்தக் கருத்துக்களை வெளிப்படத் தெரிவிக்கின்ற, தமது சொற்களாகிய மலர்களைத் தொடுத்தப் பாக்களாகிய மாலைகளை அணிவித்து, எட்டுறுப்புக்களாலும் அடிபணிய வல்லவர்க்கு என்றே நீண்ட சடையையுடையவனாகிய சிவபெருமான் சிறிதும் கரவில்லாமல் தனது பெரிய சிவலோகத்தை நன்றாகப் படைத்து வைத்தான்.

**குறிப்புரை :-** "தளிர்விட" என்பது முதலியன உருவகத்தைக் குறிப்பால் உணர்த்தி நின்றன. "கண்ணீர்" என்பது சிலேடையாய் 'கள் + நீர்' எனப் பிரித்து, 'தேன்' எனப் பொருள்கொள்ள நின்றது. எட்டுறுப் பாவன; முழங்கால் இரண்டு, மார்பு ஒன்று, தோள் இரண்டு, செவி இரண்டு, முகம் ஒன்று. இவ் எட்டுறுப்பும் நிலத்தில் தோயப் பணிதல் அட்டாங்க நமஸ்காரம் எனப்படும். மார்பும், தோள்களும் ஒழிந்த ஐந்துறுப்புக்கள் நிலத்தில் தோயப் பணிதல் பஞ்சாங்க நமஸ்காரமாகும். 'மகளிர் அட்டாங்க நமஸ்காரம் செய்தல் கூடாது' என விலக்கியுள்ளது. தலைமட்டும் தாழக் கும்பிட்டு வணங்குவது ஏகாங்க நமஸ்காரம். 'இறைஞ்சுதல்' என்பதும் இதுவே. அட்டாங்கத்தோடு கூடியது, 'சாட்டாங்கம்' எனப்படும். ஈற்றில் வைக்கற்பாலதாய இதனைச் செய்யுள் நோக்கி இடை வைத்தார். 'சிவபெருமானை அன்பொடு பணிந்து பணி செய்பவர்கள் தவறாமல் சிவலோகத்தை அடைவர்' என்பது உணர்த்தியவாறு. "தம் சொல் மலரால்" என்றமையால் தாமே பாக்களை இயற்றிப் போற்றுவார் குறிக்கப்பட்டனர். **தம் சொல்லால் தொடுக்கப்படும் பாக்களுக்கு ஒரு தனிச் சிறப்புச் சொல்லப்படுகின்றது**. இதனால், 'பாமாலைகளைப் புதிது புதிதாய்த் தொடுத்தணியும் மரபு இடையே அற்றொழியாமல், நீடு செல்லல் வேண்டும்' என்பது இறைவனது திருவுளக் குறிப்பாதல் விளங்கும். தேவார திருவாசகங்கட்குப் பின்னரும் அன்புடைத் தொண்டர்கள் பாமாலை சாத்திப் பரவினமை இதற்குத் தக்கச்சான்று.

'பத்தனாய்ப் பணிந்தடியேன் றன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை'[1]

'பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூல் தமிழ்மாலை பாடு வித்துஎன்
சிந்தைமயக் கறுத்ததிரு அருளினானை'[2]

'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை'[3]

'நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அற்சனை பாட்டேயாகும்; ஆதலால் மண்மேல்நம்மைச்

---

1. திருமுறை - 6.68.3
2. திருமுறை - 84.4
3. திருவாசகம் - திருக்கோத்தும்பி - 12
4. பெரிய புராணம் - தடுத்தாட் கொண்டது - 70

**அடியரும் அல்லாதாரும் இவ்விவர்**

180. வானகம் ஆண்டு மந் தாகினி ஆடிநந் தாவனஞ்சூழ்
தேனக மாமலர் சூடிச்செல் வோருஞ் சிதவல்சுற்றிக்
கானகந் தேயத் திரிந்திரப் போருங் கனகவண்ணப்
பால்நிற நீற்றற்(கு) அடியரும் அல்லாப் படிறருமே. 12

**உடல் எடுத்த பயன்**

181. படிறா யினசொல்லிப் பாழுடல் ஓம்பிப் பலகடைச்சென்(று)
இடறா தொழிதும் எழு நெஞ்ச மேயெரி ஆடியெம்மான்
கடல்தா யினநஞ்சம் உண்ட பிரான்கழல் சேர்தல்கண்டாய்
உடல்தான் உளபயன் ஆவசொன் னேனிவ் வுலகினுள்ளே. 13

---

*சொற்றமிழ் பாடுகென்றார், தூமறை பாடும் வாயார்'*[4]

*என்பன முதலிய திருவாக்குகள் இதனை வலியுறுத்தும்.*

***180. பொழிப்புரை :-*** *சிவகங்கையில் ஆடுதல், சிவ நந்தவனத்தில் நிறைந்த பூக்களைச் சூடுதல் முதலிய சிறப்புக்களுடன் சிவலோகத்தில் வாழ்பவரும், கிழிந்த ஆடையை அரையில் சுற்றிக்கொண்டு, கால் நகம் தேய மண்ணுலகில் எங்கும் திரிந்து இரப்பவரும் யாவர் எனின், முற்பிறப்பில் திருமேனியில் பால்போலும் நிறத்தையுடைய திருநீற்றைப் பூசியுள்ள சிவபெருமானுக்குத் தொண்டு செய்தவரும், அது செய்யாது அதனை இகழ்ந்தவருமேயாவர்.*

***குறிப்புரை :-*** *'சிவத் தொண்டு தூய இன்பங்களைத் தரும்' எனவும், 'அதனை இகழ்தல் இவ்வுலகில் வறுமைத் துன்பத்தைத் தரும்' எனவும் உறுதிப்படக் கூறுவார் இங்ஙனம் கூறினார். படிறர் - பொய்யர். பொய் நிலையாமையை நிலைத்ததாக உணர்ந்து, நிலைத்ததை நிலையாததாக இகழ்தல். ஏகாரம் - தேற்றம். ஆளுதல் - பயன் கொள்ளுதல். அவை மந்தாகினி ஆடுதல் முதலியன. மந்தாகினி - விண்ணகக் கங்கை. அஃது இங்குச் சிவலோக கங்கையைக் குறித்தது. 'நந்தவனம்' என்பது நீண்டு வந்தது. 'கெடாத வனம்' என்றலும் ஆம். 'இவ்வாறெல்லாம் வானகத்தை ஆள்பவர்' என இறுதிக்கண் கூறற்பாலது செய்யுள் நோக்கி முதலிற் கூறப்பட்டது. சிதவல் - கந்தைத்துணி.*

***181. பொழிப்புரை :-*** *"எள் விழுந்த இடத்தைத் தேடிக்கொண்டு, 'ஈ மொய்த்தாலும் இழப்பு ஏற்படும்' என்று அது பற்றி ஈயை அடிக்கின்ற உலோபியை 'வரையாது வழங்கும் வள்ளலே' எனக் கூறுவது போன்ற பல பொய்களைச் சொல்லி*[1] *இரந்து, பிறிதொன்றற்கும் பயன்படாத உடலைப் பாதுகாத்தலை மேற்கொண்டு, பல இல்லங்களின் வாயிற் படிகளில் ஏறி இடறுதல் நேராதபடி அதனினின்றும் நீங்குவோம்; நெஞ்சமே, புறப்படு. 'எதற்கு'*

---

1. *திருமுறை - 7.34.8*

### அடியாரை அலைத்தலின் கொடுமை

182. உலகா ளுறுவீர் தொழுமின் விண் ணாள்வீர் பணிமின் நித்தம்
பலகா முறுவீர் நினைமின் பரமனொ டொன்றலுற்றீர்
நலகா மலரால் அருச்சிமின் நாள்நர கத்துநிற்கும்
அலகா முறுவீர் அரனடி யாரை அலைமின்களே. 14

183. அலையார் புனலனல் ஞாயி(று) அவனி மதியம்விண்கால்
தொலையா உயிருடம் பாகிய சோதியைத் தொக்குமினோ
தலையாற் சுமந்துந் தடித்துங் கொடித்தேர் அரக்கனென்னே ?
கலையான் ஒருவிரல் தாங்ககில் லான்விட்ட காரணமே. 15

---

*எனின், எரியின்கண் ஆடுபவனும், எம்பெருமானும் கடலில் பரந்து எழுந்த நஞ்சத்தை உண்டவனும் ஆகிய அவனது திருவடிகளைப் பல்லாற்றானும் சார்வனவே, இவ்வுலகத்தில் கிடைத்ததாகிய இவ்வுடலில் உளவாம் பயன்களாகும். இதனை நான் உனக்குச் சொல்லிவிட்டேன். (என்மேற் பழியில்லை).*

***குறிப்புரை :-** 'எனவே, அவற்றைச் சார்தற்கே புறப்படுக' என்பதாம். அவற்றைச் சாராதவர் நிலை முன்னைப் பாட்டில் கூறப்பட்டமையால், 'அந்நிலை நமக்கு வாராது ஒழிய முயல்வோம்' என்றபடி. படிறு - பொய். 'சொல்லி ஓம்பி' என இயையும். சொல்லுதல் அதன் காரியமாகிய இரத்தல். மேலும், ஓம்புதல் அதன் காரணமாகிய மேற்கொள்ளுதல், மேலும் நின்றன. தாயின - பரந்த. கண்டாய் - முன்னிலையசை. மனம், மொழி, மெய் என்பவற்றால் சார்தல் பலவாகலின் பன்மையாற் கூறினார். தான் - அசை. "சொன்னேன்" என்ற விதப்பு இக்கருத்துடையதாதலைக் "குற்றமில்லை என்மேல்; நான் கூறினேன்"[1].*

***182. பொழிப்புரை :-** மண்ணுலகத்தை ஆள விரும்புகின்றவர்களே, ('நீவிர்', உங்கள் விருப்பம் நிறைவேறச்) சிவபெருமானைக் கைகுவித்துக் கும்பிடுங்கள். விண்ணுலகை ஆள விரும்புகின்றவர்களே, (நீவிர், உங்கள் விருப்பம் நிறைவேறச்) சிவபெருமானது திருவடிகளில் வீழ்ந்து பணியுங்கள். நாள்தோறும் பற்பலவற்றை விரும்புகின்றவர்களே (நீவிர் உங்கள் விருப்பம் நிறைவேறச்) சிவபெருமானை இடையறாது நினையுங்கள். இவைகளையெல்லாம் விடுத்துச் சிவபெருமானோடு இரண்டறக் கலக்க விரும்புகின்றவர்களே, (நீவிர் உங்கள் விருப்பம் நிறைவேற) அப்பெருமானை நந்தவனத்தில் உள்ள நல்ல பல மலர்களால் அருச்சனை செய்யுங்கள் என்றும், நரகத்தில் நிற்றலாகிய பொல்லாத விளைவை விரும்புகின்றவர்களே, (அதற்கு நீவிர்) சிவபெருமானுடைய அடியாரை வருந்தப் பண்ணுங்கள்.*

***குறிப்புரை :-** 'சிவபெருமானை இந்த இந்த அளவில் வணங்குகின்றவர்கள் இன்ன இன்னப் பயன்களை அடைவார்கள்' என்னும் வகை முறையையும்,*

---

1. *திருமுறை - 6.31.5*

**184.** **காரணன் காமரம் பாடவோர் காமர்அம்(பு) ஊடுறத்தன்**
**தாரணங் காகத் தளர்கின்ற தையலைத் தாங்குவார்யார்?**
**போரணி வேற்கண் புனற்படம் போர்த்தன பூஞ்சுணங்கார்**
**ஏரணி கொங்கையும் பொற்படம் மூடி இருந்தனவே.** **16**

---

'சிவாபராதம், சிவனடியார்க்கு அபராதம் நரகம் விளைக்கும்' என்பதையும் இவ்வாறு கூறினார். நித்தம் - நாள்தோறும். கா - சோலை; நந்தவனம். 'நாளும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'அல்ல' என்பது இடைக்குறைந்து நின்றது. நரகங்கள் பல வகையின ஆதல் பற்றி, 'அல்ல' எனப் பன்மையாற் கூறினார். அலைத்தல் - வருத்துதல்.

*183. பொழிப்புரை :- (உலகீர்) கொடியை உயர்த்திய தேரை உடைய இராவணன் பத்துத் தலையும், இருபது தோளும் உடைமையால் மிகப் பருத்திருந்தும் சிறிய மானைக் கையில் ஏந்திய சிவபெருமானது கால் விரல்களில் ஒன்றன் ஊன்றலைத் தாங்கமாட்டாது அலறிய காரணம் என்ன? (அதனை எண்ணிப் பார்த்து), அலைபொருந்திட நீர், ஞாயிறு, நிலம், திங்கள், வானம், காற்று, தீ அழிவற்ற உயிர் ஆகிய எட்டினையும் தனது உடம்பாகக் கொண்ட, ஒளி வடிவாகிய அந்தப் பெருமானையே அவனது திருவடிகளைத் தலையிற் சுமந்தாயினும் சேருங்கள்.*

*குறிப்புரை :- "தலையாற் சுமந்தும்" என்பதை, "தொக்குமினோ" என்பதற்கு முன்னே கூட்டுக. தடித்தல் - பருத்தல். "என்னே" என்னும் வினா, 'அது நன்கு தெரிந்ததன்றோ!' என்னும் தேற்றக் குறிப்பினது. 'எத்தனை பேர் எத்தனைப் பெரிய உடலும் பேராற்றலும் படைத்திருப்பினும் அவர்களது ஆற்றல்கள் எல்லாம் எங்கும் நிறைந்த பெரும் பொருள் ஆகிய சிவபெருமானது ஆற்றலின்முன் எவ்வளவு' என்றற்கு அவன் அட்டமூர்த்தியாய் நிற்றலை எடுத்தோதினார். அட்ட மூர்த்தங்கள் செய்யுளுக்கேற்ப வைக்கப்பட்டன. 'அவன் சிறியதொரு மானை ஏந்துதலைக் கண்டு தவறாக உணர்ந்து விடாதீர்கள்' என்றற்கு, "கலையான்" என்றார். தொகுதல் - சேர்தல். "தொக்குமினோ" என்பதில் ககரமெய் விரித்தல். ஓகாரம் - அசை.*

*184. பொழிப்புரை :- எப்பொருட்கும் காரணனாகிய சிவபிரான் (வீணை யேந்தி) இசை பாடிக் கொண்டு வீதியிலே வர, குறும்பு செய்கின்ற ஒருவனாகிய மன்மதனது அம்பு மார்பில் தைத்து ஊடுருவுதலால் போர்க்குக் கொள்ளப்படுன்ற வேல்போலும் கண்கள் நீராகிய துணியால் தம்மை மூடிக்கொண்டன. அழகோடு அணிகளைத் தாங்கி அழகு தேமலையுடைய கொங்கைகள் பொன்னாடையால் தம்மை மூடிக்கொண்டன. அவனது கொன்றை மாலையை வேட்ட வேட்கையே தனக்குத் துன்பமாக இவ்வாறு சோர்வடைகின்ற இம் மகளைத் தாங்குவார் யார்?*

**இறைவன் பக்குவம் அறிந்து வினை தீர்ப்பன்**

**185.** இருந்தனம் எய்தியும் நின்றுந் திரிந்துங் கிடந்தலைந்தும்
வருந்திய வாழ்க்கை தவிர்த்திடு போகநெஞ் சே,மடவாள்
பொருந்திய பாகத்துப் புண்ணியன், புண்ணியல் சூலத்தெம்மான்
**திருந்திய போதவன் றானே களையும்நம் தீவினையே.** **17**

**186.** தீவினை யேனைநின்(று) ஐவர் இராப்பகல் செத்தித்தின்ன
மேவின வாழ்க்கை வெறுத்தேன்; வெறுத்துவிட் டேன்வினையும்
ஒவின(து) உள்ளந் தெளிந்தது கள்ளங் கடிந்(து) அடைந்தேன்
பாவின செஞ்சடை முக்கணன் ஆரணன் பாதங்களே. **18**

---

*குறிப்புரை :- இது தில்லைப் பெருமானைக் காதலித்து வருந்தும் தலைவியது ஆற்றாமை நோக்கித் தோழி நெஞ்சழிந்து கூறியது. "காமர்" என்பது இழித்தற்கண் வந்த பன்மை. "ஓர்" என்றதும் இழிவு பற்றி. தன் - சிவபிரானது, "தார்" என்றது அதனை வேட்ட வேட்கையை. அணங்கு - துன்பம். 'இத்தை யலைச்' சுட்டியுரைக்க. "புனற்படம், பொற்படம்" என்பன உருவகங்கள். 'கண்கள் நிரம்ப நீரைச் சொரிந்தன; கொங்கைகள் பசலை போர்த்தன' என்பது பொருள்.*

*185. பொழிப்புரை :- நெஞ்சே, நாம் தவறு செய்யாமல் திருந்தும் பொழுது, மாதொரு பாகத்துப் பொருந்தப் பெற்றப் புண்ணிய வடிவினனும், கொடியோரை அழித்தலால் அவர் புண் பொருந்திய சூலத்தை ஏந்தியவனும் ஆகிய எம் சிவபெருமான் நமது தீவினைகளை யெல்லாம் அவனே முன்வந்து நீக்கி விடுவான். (ஆகையால் நீ திருந்து. அஃதாவது) நின்றும், திரிந்தும், கிடந்து அலைவுற்று மிக்கபொருளை ஈட்டியபோதிலும் வருத்தத்தையே தருகின்ற இவ்வுலக வாழ்க்கையை (நீ விரும்புதலை விடுத்து), அஃது உன்னை விட்டு நீங்கும்படி நீக்கு.*

*குறிப்புரை :- "நெஞ்சே" என்பது முதலாகத் தொடங்கி, 'நம் தீவினையைக் களையும்' எனவும் "இருந்தனம் எய்தியும் வருந்திய" எனவும், 'போகத் தவிர்த்திடு' எனவும் இயைத்து உரைக்க. 'திருந்தா நிலையாவது இது' என்பதையே வாழ்க்கையின் விளக்கமாக முதலிற் கூறினார். ''அலைந்தும்'' என்னும் உம்மையைப் பிரித்து, "கிடந்து" என்பதனுடன் கூட்டுக. 'இறைவன் நமக்கு அருளாமைக்குக் காரணம் நமது குற்றமேயன்றி, அவனது குற்றம் அன்று' என்பதை விளக்கியவாறு. திருந்துதலுக்கு 'நாம்' என்பதே தோன்றா எழுவாய் ஆதல் அறிக. ''இருந்தனம் எய்தியும் வருந்திய வாழ்க்கை'' என்றது உலக வாழ்க்கையின் இயல்புணர்த்தியது. இருந்தனம் - பெருஞ்செல்வம். புண் இயல் - ஊன் பொருந்திய.*

*186. பொழிப்புரை :- தீவினையைப் பெரிதும் உடைய என்னை ஐம்புலன் களாகிய வேடர், கருவி கொண்டு சிதைத்துத் தின்னுதல் போன்ற துன்பத்தை*

**விசுவரூபம் (பேருருவம்)**

187. பாதம் புவனி சுடர்நய னம்புவ னமுயிர்ப்(பு) ஓங்(கு)
ஓதம் உடுக்கை உயர்வான் முடிவிசும் பேயுடம்பு
வேதம் முகம்; திசை தோள்; மிகு பன்மொழி கீதமென்ன
போதம் இவற்கோர் மணிநிறந் தோற்பது பூங்கொடியே. 19

---

*உறுவிக்கும்படி இதுகாறும் பொருந்திநின்ற வாழ்க்கையை இதுபொழுது நான் வெறுத்து விட்டேன். அதனால் எனது சஞ்சித வினைகளும் என்னை விட்டு ஒழிந்தன. அதனால் எனது உள்ளம் சிவனை வஞ்சித்து ஒழுகுதலை விலக்கித் தெளிவடைந்தது. நான் விரிந்த, சிவந்த சடையையும், மூன்று கண்களையும் உடையவனும், வேதப் பொருளாய் உள்ளவனும் ஆகிய அவனது திருவடிகளையே சார்பாகச் சார்ந்தேன்.*

***குறிப்புரை :-*** *இருவினை ஒப்பு, மல பரிபாகம், சத்திநிபாதம் இவை* ***வந்தபொழுதே இவையெல்லாம் நிகழ்வன ஆகலின், 'இதுபொழுது' என்பது வருவித்துரைக்கப்பட்டது. உள்ளம் தெளியாமைக்குக் காரணம் சஞ்சித கன்மமே யாதலின் "ஓவினது" எனப்பட்ட வினை அதுவேயாயிற்று. 'இவ்வினை சத்தி நிபாதர்க்கு ஞான குருவால் அழிக்கப்படும்' என்பது சைவ சித்தாந்தம். ஆயினும், "சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின்"[1] என்னும் திருக்குறளின் உரையில் பரிமேலழகர்,***

***"அவ்வழிக் (ஞானத்தைப் பெற்றுவிட்ட பின்பு) கிடந்த துன்பங்கள் எல்லாம் என் செய்யும் - என்னும் கடாவை ஆசங்கித்து, அவை ஞான யோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சாரமாட்டாமையானும், வேறு சார்பின்மையானும் கெட்டுவிடும் என்பது இதனாற் கூறப்பட்டது" என்றார். இன்னும் அவர் இதற்குமுன் சஞ்சித கன்மத்தைப் பற்றி,***

> ***"சாரக் கடவனவாய் நின்ற துன்பங்களாவன, பிறப்பு அநாதி யாய் வருதலின் உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும், பிறந்த உடம் பான் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னும் அனுபவிக்கக் கடவன வாய்க் கிடந்தன"***

***என விளக்கம் தந்தார். "ஐவர்" என்றது தொகைக் குறிப்பு உருவகம். செத்தித் தின்னல், வினைநிலை ஒட்டு, "கான முயல் எய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது"[2] என்றது போல், இஃது "அடையும் பொருளும் அயற்பட மொழிதல்"[3] என்பதனானே அடை அயற்பட மொழிதலாய் அடங்கும். ஆயினும் பரிமேலழகரும் இது பற்றி வாளா போயினார்.***

***187. பொழிப்புரை :-*** *என் மகளால் காதலிக்கப்பட்ட* ***இவனுக்கோ இவளால்***

---

1. *திருக்குறள் - 359*
2. *திருக்குறள் - 772*
3. *தண்டியலங்காரம் - 51*

**இடையறாத அகக்காட்சி**

**188.** **கொடிமேல் இடபமுங் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்**
**அடிமேற் கழலும் அகலத்தின் நீறும்ஐ வாய்அரவும்**
**முடிமேல் மதியும் முருகலர் கொன்றையும் மூவிலைய**
**வடிவேல் வடிவுமென் கண்ணுள்ளப் போதும் வருகின்றவே.** **20**

---

*தழுவப்படுவதோர் உடம்பில்லை. மற்று, இவனுக்கு நிலமே பாதங்கள்; கதிரும் மதியுமே கண்கள்; காற்றே மூச்சு; பெரிய கடலே உடை; உயர்ந்த வான முகடே தலை; எங்கும் பரந்துள்ள வானமே உடல்; வேதங்களே வாய்; திசைகளே தேர்கள்; பல வகையினவாய் வழங்குகின்ற மொழிகளே இவன் பாட்டு. இங்ஙனமாக, இவன் பொருட்டு இவள் தனது அழகிய நிறம் கெட நின்று வருந்துவது என்ன அறிவுடைமை!*

*குறிப்புரை :-* இது செவிலிதன் இரங்கற் கூற்று. சிவ பத்தர்களது நிலையைக் கண்டு பிறர் அறியாமையால் இரங்கிக் கூறும் கூற்றாதல் இதன் உள்ளுறைப் பொருள். புவனி - புவனம்; நிலம். சுடர் - ஞாயிறும், திங்களும், நயனம் - கண். பவனம் - காற்று. உயிர்ப்பு - மூச்சு. ஓதம் - அலை; அது கடலுக்கு ஆகு பெயர். உடுக்கை - உடை. "வான்" என்றது அதன் முகட்டினை; அஃது "உயர்" என்றதனானும் விளங்கும். விசும்பு - வானம். உடம்பு - உடல்; கழுத்திற்குக் கீழும், அரைக்கு மேலும், கை, தோள்கள் அல்லாத பகுதி; மார்பும், வயிறும், வாயை 'முகம்' என்றல் வடமொழி வழக்கு. கீதம் - இசை; அஃது அதனையுடைய பாட்டைக் குறித்தது. போதம் - அறிவு. இகழ்வது போலச் சிவபெருமானது உலக உருவத்தை (விசுவ ரூபத்தை)ப் புகழ்ந்தவாறு.

*மாநிலம் சேவடி யாகத் தூநீர்*
*வளைநரல் பௌவம் உடுக்கை யாக,*
*விசும்புமெய் யாகத், திசைகை யாகப்*
*பசுஞ்சுடர் மதியமொடு சுடர்கண் ணாக,*
*இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய*
*வேத முதல்வன் என்ப,*
*தீதற விளங்கிய திகிரி யோனே.*

என்னும் நற்றிணைக் கடவுள் வாழ்த்துச் செய்யுளை இதனுடன் ஒப்புநோக்குக. இதனுள் "திகிரி" என்பதைப் பொதுப்பட ஆஞ்ஞா சக்கரமாகக் கொள்வுழி இது பரம்பொருளின் தடத்தலக்கணத்தை விளக்கியதாதல் அறிக.

*188. பொழிப்புரை :-* கொடிச் சீலையின்மேல் எழுதப்பட்டுள்ள இடபமும், கோவணத்துடன் கூடிய கீளும், முடியின்மேல் ஒப்பற்ற ஒரு கொக்கின் இறகும், திங்களும், நறுமணத்தோடு மலர்ந்த கொன்றை மலர்மாலையும், மார்பில் பூசப்பட்டுள்ள திருநீறும், அங்குத் தவழ்ந்து சென்று முடிக்கு மேலே விரிக்கின்ற படங்களையுடைய ஐந்தலை நாகமும், திருவடியில் கட்டப்பட்டுள்ள கழல்களும்,

**189.** வருகின்ற மூப்பொடு தீப்பிணிக் கூற்றம்வை கற்குவைகல்
பொருகின்ற போர்க்கொன்றும் ஆற்றகில் லேன்பொடி பூசிவந்துன்
அருகொன்றி நிற்க அருளுகண் டாய்அழல் வாய்அரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை மேல்வைத்த வேதியனே. **21**

**190.** வேதியன் பாதம் பணிந்தேன் பணிந்துமெய்ஞ் ஞானமென்னும்
சோதியென் பால்கொள உற்றுநின் றேற்கின்று தொட்டிதுதான்
நீதியென் றான்; செல்வம் ஆவதென் றேன்; மேல் நினைப்பு; வண்டேர்
ஒதி; நின் போல்வகைத் தேயிரு பாலும் ஒழித்ததுவே. **22**

---

*தோள்மேல் சார்த்தியுள்ள இலைவடிவான, கூரிய முத்தலை வேலும் ஆகிய இவை எப்பொழுதும் என் கண்ணில் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன.*

*குறிப்புரை :- 'இமைப் பொழுதும் நெஞ்சில் நீங்காது நிற்கின்ற சிவனது திருவுருவமும் கண்களிலும் தெரிகின்றன' என்றபடி செய்யுளுக்கு ஏற்ப முறை பிறழ வைக்கப்பட்டவை முறையானே வைத்து உரைக்கப்பட்டன. கொக்குருவில் வந்த 'குரண்டன்' என்னும் அசுரன் மிக்க வலியுடையன் என்பதைக் குறிக்க "ஓர் கொக்கு" என்றார். அவனை அழித்து எடுத்த சிறகை அதன் அடையாளமாகச் சிவபெருமான் தனது முடிமேற் சூடியுள்ளான்.*

*189. பொழிப்புரை :- நெருப்புபோலும் நஞ்சினை வெளிவிடுகின்ற பாம்பைக் கண்டு அஞ்சுதலை ஒழித்து வெள்ளிய திங்களைச் சிவந்த சடைமுடியின் மேல் வைத்துள்ள, வேதப் பொருளானவனே, நாளுக்கு நாள் மிகுந்து வருகின்ற மூப்பும் கொடிய நோயும் செய்கின்ற போருக்கு அடியேன் சிறிதும் ஆற்ற மாட்டாதவனாய் உள்ளேன். அதனால், திருநீற்றைப் பூசிக் கொண்டு உன் அருகில் வந்து நிற்கும்படி அடியேனுக்கு அருள்புரி.*

*குறிப்புரை :- கண்டாய், முன்னிலையசை. கூற்றுவன் வருகைக்கு அறிகுறியானவற்றை, "கூற்றம்" என்றே உபசரித்துக் கூறினார். 'விரைந்து வீடருளுக' என்பது கருத்து. வைகல் - நாள். வைகற்கு வைகல் - நாளுக்கு நாள். வெரு - வெருவுதல்; முதனிலைத் தொழிற் பெயர். "வெண்மதி செஞ்சடை" - சொல் முரண் தொடை.*

*190. பொழிப்புரை :- வேதப் பொருளாகிய சிவபெருமானது பாதங்களை யான் பாவித்தேன்; பணிந்து, 'ஞானம்' என்னும் ஒளி என்னிடத்தில் வந்து பொருந்தும்படி இசைந்து நின்றேன். அங்ஙனம் நின்ற எனக்கு, 'இன்று முதல் இந்த முறைமையே முறைமை' என அவன் அருளிச் செய்தான். ஆயினும், இதற்கு மேலும் எனக்கு ஒரு கருத்து உளது. அஃதாவது, 'உமையையும் உன்னையும் போன்ற வகையில் இருவராய் நில்லாது ஒருவராதலே பெருஞ் செல்வம் என்பதாம் - என்றேன்.*

**அன்புநெறியில் திளைத்தல்**

191. ஒழித்தேன் பிறவியை ஊர்ந்தேன்; அறுபகை ஓங்கிற்றுள்ளம்
இழித்தேன் உடம்பினை ஏலேன் பிறரிடை இம்மனையும்
பழித்தேன் பழியே விளைக்கும்பஞ் சேந்திரியக் குஞ்சரமும்
தெழித்தேன் சிவனடி சேர்ந்தேன் இனிமிகத் தெள்ளியனே. 23

**கவி பாடுதல்**

192. தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன்; தீங்கவி பாடலுற்றேன்;
ஒள்ளிய சொல்லும் பொருளும் பெறேன்உரைத் தாருரைத்த
கள்ளிய புக்காற் கவிகளொட் டார்; கடல் நஞ்சயின்றாய்
கொள்ளிய வல்லகண் டாய் புன்சொல் ஆயினுங் கொண்டருளே. 24

---

***குறிப்புரை :-*** *'அச்செல்வம் வாய்க்குங்கொல்' என்பது குறிப்பெச்சம். ''என்றான்'' என்பதன்பின், 'மேல் நினைப்பு, வண்டு ஏர் ஓதியையும், நின்னையும்போலும் வகைத்தாய் இருபாலும் ஒழித்த அதுவே செல்வம் ஆவது என்றேன்' என இயைக்க. "ஆவது" என்பது, 'ஆவதாகிய நினைப்பு' என்றபடி. எய்தல் - பொருந்துதல். 'சிவன் சிவத் தொடு இரண்டறக் கலந்து நிற்பதே ஞானத்தின் பயன்' என்றபடி.*

***191. பொழிப்புரை :-*** *சிவனது திருவடிகளையே பற்றாகச் சேர்ந்தேன். அதனால் யான் இனி வரக்கடவதாகிய பிறவி யாதொன்றும் இல்லாமல் ஒழித்து விட்டேன். பிறப்பிற்குக் காரணமாகிய அகப்பகை ஆறினையும் மிதித்து மேல் ஏறினேன். எனது உள்ளம் உயர்நிலையை அடைந்தது. உடம்பின் இழிவை உணராது பற்றியிருந்த நிலையைவிட்டு அதன் இழிவை அறிந்து இனிப் பிறரிடம் சென்று இரத்தலைச் செய்யேன். எனக்கு உரியதாக என்றாலும், பிறராலும் மதிக்கப்பட்ட இந்த இல்லத்தையும் இகழ்ந்து நீங்கினேன். குற்றங்களையே விளைக்கின்ற பஞ்சேந்திரியங்களாகிய யானைகளை அதட்டி அடக்கினேன். ஆகவே, யான் இப்பொழுது மயக்கங்கள் யாவும் நீங்கித் தெளிவடைந்தேனாகியே விட்டேன்.*

***குறிப்புரை :-*** *'இல்லம்' என்பது இல்லாளையும் குறிப்பது, அகப்பகை ஆறு காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், அடக்குதலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. ஏகாரம், தேற்றம். சிவனடி சேர்தலின் பயனை உணர்த்தியவாறு. ஊர்ந்தேன் - அடக்கினேன்.*

***192. பொழிப்புரை :-*** *சிவபெருமானே, அடியேன் இனிய கவிகளைப் பாடவல்ல தெளிந்த அறிவுடையாரை அடுத்ததும் இல்லை. ஆயினும் ஆசையால் உன்மேல் இனிய கவிகளைப் பாடத் தொடங்கிவிட்டேன். அவற்றிற்கு 'ஏற்ற விளக்கமான சொற்கள் இவை' என்பதையும் அச்சொற்கள் என்னென்ன பொருள்களைத் தரும் என்பதையும் அறிவினால் பெறப் பெற்றேனில்லை.*

**193.** அருளால் வருநஞ்சம் உண்டுநின் றாயை, அமரர்குழாம்
பொருளார் கவிசொல்ல **<u>யானும்புன் சொற்கள் புணர்க்கலுற்றேன்;</u>**
இருளா சறவெழில் மாமதி தோன்றவும் ஏன்றதென்ன
வெருளா தெதிர்சென்று மின்மினி தானும் விரிகின்றதே. **25**

### சிவபரஞ்சுடரின் தூல தரிசனம்

**194.** விரிகின்ற ஞாயிறு போன்ற(து) மேனி;யஞ் ஞாயிறுசூழ்ந்(து)
எரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை; அச்சடைக்கீழ்ச்
சரிகின்ற காரிருள் போன்றது கண்டம் காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள தாலெந்தை ஒண்பொடியே. **26**

---

*பழமையாகப் பாடினவர்களுடைய கவிகளிலிருந்து அவற்றைக் களவு செய்து கொள்ளப் புகுந்தால், அவர்களோ, அல்லது அக்கவிகளைக் கற்று வல்லவர்களோ அதற்கு இடங்கொடுக்க மாட்டார்கள். ஆகவே, ஆசையால் வாய்க்கு வந்ததைக் 'கவி' என்று சொல்லிப் பாடுகின்ற பாடல்கள் அறிவுடையோரால் கொள்ளத்தக்கன அல்ல. அவை மிகப் புல்லிய சொற்களாயினும் ஏற்றருள்; நீ கடலில் தோன்றிய நஞ்சினையும் உண்ட பெருமான் அல்லையோ!*

***குறிப்புரை :-*** ***<u>'அந்நஞ்சினைமா என் கவிகள் கொடியன' என்பது குறிப்பு</u>***. ***கள்ளிய - களவு செய்ய. கவிகள் - கவிபாடுவோர். கொள்ளிய - கொள்ளப்படுவன. கண்டாய், முன்னிலையசை. "நஞ்ச யின்றாய்" என்பது உடம்பொடு புணர்த்தது ஆகலின், அதனை வேறு வைத்து, இவ்வாறு பொருள் உரைக்கப்பட்டது. 'பாடிப் பரவும் ஆசையுடையாரை அவர்க்கு அவ்வன்மையின்மை பற்றி இகழாது, அன்பு பற்றி ஏற்றுக் கொள்ளவே செய்வான் என்பதும், 'அவன் நஞ்சுண்ட செயல் இதனைக் குறிக்கும் குறிப்பும் ஆகும்' என்பதும் கருத்து. தெள்ளிய - தெளிவுடைய. ஒள்ளிய - சிறந்த. கள்ளிய - களவு. கொள்ளியவல்ல - கொள்ளத்தக்கன அல்ல.***

***193. பொழிப்புரை :-*** *(பெருமானே)* ***இருளாகிய குற்றம் நீங்கும்படி இரவில் அழகு பொருந்தி நிறை நிலாத் தோன்றி விளங்கினாலும், சிறிய மின்மினிப் பூச்சியும் அஞ்சாது அதன் எதிரே சென்று, 'எனது ஒளியும் இருளை விழுங்கும்' எனக் கருதித் தனது ஒளியால் சிறிது விளங்கி நிற்கின்றது. அதுபோல, பாற் கடலினின்றும் தோன்றித் தேவரைத் துரத்தி வந்த நஞ்சினை அவர்கள் மேல் வைத்த கருணையால் உண்டும் இறவாதிருக்கின்ற உனது கருணை மிகுதியைப் பொருளாக நிரப்பி அத்தேவர் கூட்டம் உயர்ந்த கவிகளைப் பாட, நானும் 'கவிகள்' என்ற பெயரில் சில சிறுசொற்களைக் கோக்கின்றேன்.***

***குறிப்புரை :- 'உலகர் மின்மினியை வெறாது நகைத்து ஏற்றல்போல, நீயும் எனது கவிகளை வெறாது நகைத்து ஏற்றருள்வாய்' என்பது கருத்து.*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. "பொருள்ஆர்" என்பதற்குக் கருத்து நோக்கி இவ்வாறு உரைக்கப்பட்டது.* ***<u>இறைவன் தனக்கு அர்ப்பணிக்கப்படும் பொருள்களின் தன்மையை நோக்காது, அர்ப்பணிப்பவர்களது உள்ளத்தில்</u>***

**195.** **பொடிக்கின் றிலமுலை; போந்தில பல்;சொற் பொருள்தெரியா;**
**முடிக்கின் றிலகுழல்; ஆயினும் கேண்மின்கள் மூரிவெள்ளம்**
**குடிக்கொண்ட செஞ்சடைக் கொண்டலங் கண்டன்மெய்க் கொண்டணிந்த**
**கடிக்கொன்றை நாறுகின் றாள்அறி யேன்பிறர் கட்டுரையே. 27**

---

*<u>நிற்கும் அன்பையே நோக்குவான்'</u> என்பதும் இதனால் உணர்த்தப்பட்டது. இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி பெற்றது.*

*194. **பொழிப்புரை :-** என் தந்தையாகிய சிவபெருமானுடைய திருமேனி விரிந்து விளங்குகின்ற ஞாயிற்று வட்டம் போன்றுள்ளது. எங்கும் வீழ்ந்து சுழல்கின்ற சிவந்த சடைகள் அந்த ஞாயிற்றைச் சூழ்ந்து சுடர்விடுகின்ற வெவ்விய கதிர்களைப் போன்றுள்ளன. அச்சடைக்குக் கீழ் உள்ள கண்டம், அந்த ஞாயிற்றின் கதிர்கட்கு அஞ்சி ஓடி ஒளிந்த கரிய இருள்போன்றுள்ளது. கண்டத்தின் கீழ் மார்பில் பூசப்பட்டுள்ள திருநீறு, அந்த இருட்குக் கீழாய்த் தோன்றிப்படரும் வெள்ளிய முகில்கள் போன்றுள்ளது.*

*குறிப்புரை :-* *சரிதல் - தோற்று நீங்குதல். சடை, சாதியொருமை. 'அச் சடைக்கீழ்க் கண்டம் இருள்போன்றது' என இயைக்க. வெண்முகில் சூல் கொள்ளாத மேகம். பெருமானது திருவுருவத்தை வகுத்துப் புகழ்ந்தபடி. இது மாலை யுவமையணி.*

*195. **பொழிப்புரை :-** (என் மகளுக்கு) இன்னும் கொங்கைகள் முகிழ்ப்படையவில்லை. பல் விழுந்து முளைக்கவில்லை. அவளது சொற்கள் பொருள் விளங்கும் அளவிற்குத் திருந்தவில்லை. கூந்தல் கூட்டி முடிக்க வரவில்லை. ('பேதைப் பருவத்தினள்' என்றபடி) ஆயினும் இவள் நிலைமையைக் கேளுங்கள்; பெரிய வெள்ளநீர் எப்பொழுதும் இருக்கும் சிவந்த சடைமுடியையும், மேகம் போன்ற கண்டத்தையும் உடைய சிவபெருமான் தன் மேனியில் அணிந்துள்ள நறுமணம் உள்ள கொன்றைத் தாரின் மணம் கமழ்கின்ற உடம்புடையளாயினாள். 'இதையறிந்தால் அயலார் சொல்லும் சொற்கள் எவையாய் இருக்கும்' என்பதை யான் அறிகின்றிலேன்.*

*குறிப்புரை :-* *'பேதைப் பருவத்தே இவள் புத்தியறிந்து சிவனைத் தழுவி விட்டாள்; இனி, இவள் பிறன் ஒருவனுக்கு உரியளல்லள்' எனப் பலரும் கூறுவார்கள் என்பதாம். இது கருவிலே திருவுடையராய்ச் சாமுசித்தராய்ப் பிறந்து, குழவிப் பருவத்தே சிவனையடைந்த ஞானசம்பந்தர் போன்றாரது பெருமையைக் குறிப்பால் உணர்த்தியது.*

*முதுக்குறைந் தனளே! முதுக்குறைந் தனளே*
*மலையன் ஒள்வேற் கண்ணி;*
*முலையும் வாரா; முதுக்குறைந் தனளே!*

*என்னும் பழம்பாடல் ஒன்றை இதனுடன் ஒப்பு நோக்குக. 'பிறர்க்கு உரியளல்லள்'*

**196.** உரைவளர் நான்மறை ஓதி உலகம் எலாந் திரியும்,
விரைவளர் கொன்றை மருவிய மார்பன் விரிசடைமேல்
திரைவளர் கங்கை நுரைவளர் தீர்த்தம்; செறியச்செய்த
கரைவளர் வொத்துள தால்சிர மாலையெம் கண்டனுக்கே. **28**

**197.** கண்டங் கரியன் கரிஈர் உரியன்; விரிதருசீர்
அண்டங் கடந்த பெருமான்; சிறுமான் தரித்தபிரான்;

---

*என்பது, 'கைச்சிறு மறியவன் கழல் அலாற் பேணாக் கருத்து'[1] உடையர் ஆதலையும், 'அயலார்' என்பது பௌத்தர்களையும் உள்ளுறையாகக் குறிக்கும். "முடிக்கின்றில" என்பது முடிக்கப்படு கின்றில' என்றபடி. நீங்காதிருத்தலை, 'குடி கொண்டிருத்தல்' என்றல் வழக்கு. "குடிக்கொண்ட" என்பதில் ககர ஒற்று விரித்தல். போக மாலையாவது மார்பிற் புரளும் தார் ஆகலானும் "கண்ணிகார் நறுங் கொன்றை, காமர் - வண்ண மார்பில் தாரும் கொன்றை"[2] என்ப ஆகலானும், "மெய்க்கொண்ட கொன்றை" என்றது, கொன்றைத் தார் ஆயிற்று. அது மும்மடி ஆகுபெயராய், அத்தாரின் மணத்தைக் குறித்தது. நாறுதல் - கமழ்தல். ஒற்றுமையால் உடம்பும், உயிரும் சினையும், முதலும்போல நிற்றலால், "நாறுகின்றாள்" என்றது, சினைவினை முதல்மேல் நின்றதாம். இப்பாட்டுச் சிவபெருமானோடு களவிற் கலந்த பேதைப் பெண் ஒருத்திக்குச் செவிலியாயினாள் கூற்றாக அருளிச் செய்யப்பட்டது. ஞானிகளது செயலை உலகர் அறியார் ஆதலின், அது களவோடு ஒப்பதாயிற்று.*

*196. பொழிப்புரை :- எம் தலைவனாகிய சொற்கள் வளர்ந்து வாரா நின்ற நான்கு வேதங்களையும் பாடிக்கொண்டு உலகம் எங்கும் பிச்சைக்குத் திரிகின்ற, சிவபெருமானுக்கு அவனது சடை முடியில் அலையை அடக்கிக் கொண்டுள்ள கங்கை நீர் தீர்த்தமாய் இருக்க, அதைச் சுற்றியுள்ள தலைமாலை, அந்தத் தீர்த்தத்திற்கு உயர்த்துக் கட்டிய கரை போன்று அமைந்து பெருமையைத் தருகின்றன.*

*குறிப்புரை :- கண்டன் - தலைவன். 'எம் கண்டனாகி மார்பனுக்கு அவன் விரிசடைமேல்' எனக் கூட்டியுரைக்க. சொற்கள் வளர்தலாவது, வழிவழியாக ஓதப்பட்டு வருதல். வினா - வாசனை. முன் இரண்டடிகள் சிவனைச் சிறப்பித் துணர்த்த வந்தன. "திரை வளர்" என்றதில் வளர்தல், உள்ளே பொங்குதல். தீர்த்தம் - புண்ணியப் பொய்கை. வளர்வு - வளர்ச்சி, உயர்தல். சிவபெருமானது தலையலங்காரத்தையும் புகழ்ந்துரைத்தவாறு.*

*197. பொழிப்புரை :- எமது புண்ணியத்தின் பயனாய் விளங்கும் சிவபெருமான் கண்டம் கரிய நிறமானவன்; யானையை உரித்தத் தோலைப்*

---

*1. ஞானசம்பந்தர் 1-77-11.*

*2. புறநானூறு - கடவுள் வாழ்த்து*

பண்டன்; பரம சிவனோர் பிரமன் சிரமரிந்த
புண்தங்(கு) அயிலன் பயிலார மார்பனெம் புண்ணியனே.. 29

198. புண்ணியன்; புண்ணியல் வேலையன்; வேலைய நஞ்சனங்கக்
கண்ணியன்; கண்ணியல் நெற்றியன்; காரணன்; காரியங்கும்
விண்ணியன்; விண்ணியல் பாணியன்; பாணி கொளவுமையாள்
பண்ணியன்; பண்ணியல் பாடலன் நாடற் பசுபதியே. 30

---

*போர்வையாக உடையவன்; சிறிய மானைக் கையில் ஏந்திய தலைவன்; பிரமனது தலைகளில் ஒன்றைச் சேதித்த குருதி பொருந்திய கூரிய படைக்கலத்தை உடையவன். எலும்பு மாலை புரள்கின்ற மார்பை உடையவன். ஆயினும் அவன் தனது இயற்கையில் அனைத்துலகங்களையும் கடந்த பெரியோன்; அநாதியன்; அதனால், 'பரம சிவன்' என்று குறிக்கப்படுபவன்.*

*குறிப்புரை :-* 'சிவன் தனது இயற்கை நிலையில் அனைத்திற்கும் அப்பாற்பட்டு, அருவத்தையும் கடந்து, கால இட எல்லைகளில் எதுவும் இன்றி யிருப்பவனாயினும் உயிர்களின் மேல் வைத்த கருணையால் பல்வேறு திருமேனிகளையும், அவற்றிற்கு ஏற்ற பெயர்களையும், செயல்களையும் உடையவன் ஆகின்றான்' என்றபடி. பரமசிவன் - சுத்த சிவன். அல்லது சொரூப சிவன். சிவன் தடத்த சிவன். 'பிரமன் தலையைக் கை உகிரால் கிள்ளினான்' என்பதே வரலாறு. ஆதலின் அதனையே இங்கு, 'படைக்கலம்' எனக் கூறினார் என்க. 'பிரமன் ஓர் சிரம் அரிந்த' எனக் கூட்டுக. 'பண்டு' என்பது ஐகாரம் பெற்று, 'பண்டை' என வருவது, இங்கு ஐகாரம் பெறாது வந்தது. 'ஆரம், எலும்புமாலை' என்பது ஏற்புழிக் கோடல்.

*198. பொழிப்புரை :-* பசுக்களாகிய உயிர்கட்கெல்லாம் பதியாகிய சிவன் நல்லோருடைய புண்ணியங்களின் பயனாய் உள்ளவன்; கொடியோருடைய குருதி ஒழுகும் முத்தலை வேலை ஏந்திய தலைவன்; கடலில் தோன்றிய நஞ்சைக் கண்டத்திலே உடையவன்; எலும்பு மாலையன்; கண் பொருந்திய நெற்றியை உடையவன்; எப்பொருட்கும் காரணனன்; மேகம் உலாவும் வானத்தில் விளங்குபவன்; ஆகாய கங்கையைத் தரித்தவன்; உமையவள் தாளம் இட ஆடுபவன்; பண் பொருந்திய பாடலைப் பாடுபவன். அவனையே, நெஞ்சே, நாடுக.

*குறிப்புரை :-* பசுபதி என்பதை முதலிற் கொள்க. வேல், முத்தலை வேல். வேலை - கடல். அங்கம் - எலும்பு. கண்ணி - மாலை. 'விண்ணன்' என்பது இடையே இகரம் விரித்தல் பெற்று வந்தது. அடியார்கட்கு வெளிப்படுங்கால் விண்ணில் நின்று காட்சி வழங்குதல் பற்றி இறைவனை, 'விண்ணன்' என்றார். "பாணி" இரண்டில் முன்னது நீர். பின்னது தாளம். 'உமையாற் பாணி கொளப் பண்ணியன்' என்க. பண்ணியன் - கூத்தாடுபவன். 'கோயில் திருப்பண்ணியர்

**199.** பதியார் பலிக்கென்று வந்தார் ஒருவர்க்குப் பாவைநல்லீர்
கதியார் விடைஉண்டு கண்மூன் றுள;கறைக் கண்டமுண்டு
கொதியார் மழுவுண்டு கொக்கரை உண்(டு)இறை கூத்துமுண்டு
மதியார் சடையுள மாலுள(து) ஈவது மங்கையர்க்கே. **31**

**200.** மங்கைகொங் கைத்தடத்(து) இங்குமக் குங்குமப் பங்கநுங்கி
அங்கமெங் குந்நெகச் சங்கமங் கைத்தலத் துங்கவர்வான்,
கங்கைநங் கைத்திரைப் பொங்குசெங் கண்ணர வங்கள்பொங்கிப்
பங்கிதங் கும்மலர்த் திங்கள்தங் கும்முடிப் பண்டங்கனே. **32**

---

*விருத்தம்'[1] என்றது காண்க. நாடல் - நாடுக. அல்' ஈற்று வியங்கோள். இதற்கு. 'அவனையே' என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 'ஆடல்' எனப் பிரித்து, 'பல்வேறான அருள் நாடகங்களை உடைய பசுபதி' என்று எடுத்துக் கொண்டு உரைப்பினும் ஆம். இப் பொருட்குப் பாடம், 'ஆடற் பசுபதி' என்பதாகும்.*

*199. பொழிப்புரை :- பாவைபோலும் அழகை உடையவர்களே, நம் தில்லைப் பதியில் இருப்பவராய், பிச்சை ஏற்பதற்கென்று வந்த ஒருவருக்கு வேகமாகச் செல்லும் காளை ஊர்தி ஒன்று உண்டு; கண்கள் மூன்று உள்ளன; கறை பொருந்திய கண்டம் உண்டு; வெப்பம் மிகுந்த மழு உண்டு; 'கொக்கரை' என்கின்ற வாச்சியம் உண்டு; தலைமை வாய்ந்த நடனம் உண்டு; பிறையைக் கண்ணியாகச் சூடிய முடிச் சடைகள் உள; இவையேயல்லாமல்; தம்மைக் காண்கின்ற மங்கையர்கட்குத் தருவதாக ஒரு மையலும் அவரிடம் உண்டு.*

*குறிப்புரை :- 'அவர் யாவர் என நீவிர் அறிவீரோ? அறிவீராயின், எனக்காக அவர் பாற் சென்று, எனது மையல் நோயை உரைப்பீராக' என்பது குறிப்பெச்சம். இது தலைவன்பால் பாங்கியைத் தூதுவிடக் கருதியாள் கூற்று. எனினும் உயிர்ப் பாங்கியை நோக்கிக் கூறாது, இறைவனைப் பிரிந்து ஆற்றகில்லாத அதிதீவிர பக்குவரது நிலை இதன் உள்ளுறை. இறை - இறைமை; தலைமை. மால் - மயக்கம்.*

*200. பொழிப்புரை :- பெண்மைத்தன்மைத்தாகிய கங்கை நதியின் அலையிடையே, சீற்றம் மிக்க சிவந்த கண்களையுடைய பாம்புகள் மிகுதியாய்ச் சடைகளின் இடையே தங்குவதும், கொன்றை முதலிய மலர்களுக்கிடையே பிறை தங்குவதும் ஆகிய முடியினையுடைய, பாண்டரங்கக் கூத்தனாகிய சிவபெருமான் இம்மங்கையின் கொங்கைச் சரிவிற்கு இடையே இங்கும் அழகிய குங்குமச் சேறு உடல் வெப்பத்தால் நீராகி உடம்பெங்கும் ஓட, இவள் கையில் உள்ள சங்க வளையல்களையும் கவர்ந்து அங்கே (அயலிடத்தே) செல்பவனாகின்றான்.*

*குறிப்புரை :- 'இனிச் செய்வதென்' என்பது குறிப்பெச்சம். இது, நற்றாய்க்கு*

---

1. *திருமுறை - 11. நம்பியாண்டார் நம்பிகள்*

**201.** **பண்டங்கன் வந்து பலிதாவென் றான்பக லோற்கிடென்றேன்;**
**அண்டங் கடந்தவன் அன்னமென் றான்யான் ஊர்தியென்றேன்;**
**கொண்டிங் குன்னையம்பெய் என்றான்; கொடித்தேர் அனங்கனென்றேன்;**
**உண்டிங் கமைந்ததென் றாற்கது சொல்ல உணர்வுற்றதே. 33**

---

*அறத்தொடு நிற்கக் கருதும் செவிலியது கூற்று. இப்பாட்டு மெல்லிசை வண்ணக் கலித்துறையாய் நின்றது. மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. 'பாண்டரங்கன்' என்பது 'பண்டங்கன்' என மருவிற்று. பாண்டரங்கம், ஒருவகைக் கூத்து. பங்கம் - சேறு. நுங்குதல் - முழுதும் வீழ்ந்து மறைத்தல். பங்கி - தலைமயிர். அஃது இங்குச் சடையைக் குறித்தது.*

*201. பொழிப்புரை :- 'பாண்டரங்கம்' என்னும் கூத்தினைச் செய்வோனாகிய சிவபெருமான் பிச்சாடனனாய் எங்கள் கடைத்தலையில் வந்து நின்று, இருபொருள் பட 'பலிதா' எனக் கூறினான்', அச்சொல் வெளிக்கு 'பிச்சை இடு' எனப்பொருள் தருவதாயினும், அவன் குறும்பாக பல்லை உடையவளே, அவற்றை எனக்குத் தா (முத்தம் கொடு) என உள்ளுறையாக வேறொரு பொருளைத் தருதலை யான் உணர்ந்து கொண்டு, அந்த வார்த்தையை நீவிர் சூரியனிடம் சொல்லுக' என்றேன். பின்பு அவர் 'அன்னம்' என்றார். அது வெளிக்கு, 'சோறு (தா)' - எனப்பொருள் தருமாயினும், உள்ளுறையாக, 'நீ ஓர் அன்னப் பறவை போல நடக்கின்றாய்' எனப் பொருள் தருதலை யான் உணர்ந்து கொண்டு, 'ஆம்! நீர் சொல்வது பிரமதேவனுடைய ஊர்தி' என்றேன். பின்பு அவர், நீ விரைவில் கொண்டு உனது ஐயம்பெய் என்றார். அது வெளிக்கு, 'பிச்சையிடு' எனப் பொருள் தருமாயினும், உள்ளுறையாக 'உன்னிடத்து உள்ள ஐந்து அம்புகளை கொண்டு வந்து எய்' எனவும் பொருள் தருதலை யான் உணர்ந்துகொண்டு, ஆம்! அதற்கு உரியவன் மன்மதன்' என்றேன். அவரும் 'உண்மை; நீ சொல்லியன எல்லாம் பொருத்தமானவைகளே' (என்று சொல்லி விட்டு வாயடங்கிப் போனார்). அவரது சொல்வன்மைக்குத் தக மறுமொழி சொல்ல எனக்கும் உணர்வு உண்டானது வியப்பு.*

*குறிப்புரை :- வருவித் துரைத்தன இசையெச்சங்கள். 'பாண்டரங்கன்' என வந்தது 'பண்டங்கன்' செய்யுள் முடிபு. 'பலி' என்பது உள்ளுறைப் பொருளில் 'பல்லி' என்பதன் இடைக்குறை. பல்லி - பல்லை உடையள். 'ஐயம்பெய்' என்பதை, 'ஐயம் பெய்' எனவும் 'ஐ அம்பு எய்' எனவும் பிரித்துக் கொள்க. அனங்கன் - மன்மதன். இது முன்பே தனது உள்ளம் சிவன் வயப்பட்டு அதனை மறைத்து ஒழுகும் தலைவியது நிலையை, அவள் தன்னிடம் மறையாது வெளிப்படுத்தற் பொருட்டுத் தோழி தானும் அந் நிலை அடைந்த போலவும், அடையாதது போலவும் இரு பொருள் பயப்பக் கூறியது. இது, "மெய்யினும், பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர் பொருள் நாட்டம்"[1] "கயமலர் உண்*

---

*1. தொல் - பொருள் - களவியல்*

**202.** உற்றடி யாருல காளவோர் ஊனும், உறக்குமின்றிப்
பெற்றம தாவதென் றேறும் பிரான், பெரு வேல்நெடுங்கண்
சிற்றடி யாய்வெண்பற் செவ்வாய் இவள்,சிர மாலைக்கென்றும்
இற்றிடை யாம்படி யாகாவென் னுக்கு மெலிக்கின்றதே. **34**

**203.** மெலிக்கின்ற வெந்தீ, வெயில்வாய் இழுதழல் வாய்மெழுகு;
தலிக்கின்ற காமங் கரதலம்; மெல்லி துறக்கம் வெங்கூற்(று)
ஒலிக்கின்ற நீருறு தீயொளி யார்முக்கண் அத்தர்மிக்க
பலிக்கென்று வந்தார் கடிக்கொன்றை சூடிய பல்லுயிரே. **35**

---

*கண்ணாய்" என்னும் கலித்தொகைப் பாட்டுப்போல.*

*202. பொழிப்புரை :- **தன்னைப் புகலிடமாக அடைந்த அடியார்களை (யானைமேல் உலாவந்து) உலகாள வைத்துத்தான் எருதின் மேல் ஏறிச் செல்கின்ற, அத்தகைய கருணையாளனாகிய சிவபிரான்**, பெரிய வேல் போன்ற, நீண்ட கண்களையும், சிறிய பாதங்களையும், வெண்மையானப் பற்களையும், சிவந்த வாயினையும் உடைய, என் தாயாகிய இவள் அவன் அணிந்துள்ளத் தலை மாலையை விரும்ப, அதனைத் தாராமல், அதன் பொருட்டு நாளும் உண்ணும், உறக்கமும் இல்லாமல், தன் இடை இயல்பிலே துவளுவது போல மேனி முழுதும் மெலிந்து போம்படி இவளை மெலியப் பண்ணுவது ஏனோ!*

*குறிப்புரை :- 'உற்ற' என்னும் பெயரெச்சத்து ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'உறக்கம்' என்பது ஈற்று அம்முக்கெட்டு, 'உறக்கு' என நின்றது. பெற்றம் - எருது. ஆவது - விருப்பமாவது. தாய் மகளை, 'யாய்' என்றது, காதல் பற்றி வந்த மரபு வழுவமைதி. இது தலைவியது ஆற்றாமை கண்டு, சிவபெருமானாகிய தலைவனைச் செவிலி இயற் பழித்துக் கூறியது. இதன் கொண்டு கூட்டினை அறிந்து கொள்க. "இற்று இடை ஆம்படியாக" என்பதை, 'இடையாய் இற்றிடும் படியாக' என மாற்றிவைத்து உரைக்க.*

*203. **பொழிப்புரை :-** நீரின்கண் விரவிய தீ வெளித்தோன்றாது நிற்றல்போல எப்பொருளினுள்ளும் நிறைந்திருப்பவரும், ஒளி பொருந்திய மேனியை உடையவரும், மூன்று கண்களையுடைய முதல்வரும் ஆகிய சிவபெருமானாகப் பிச்சை ஏற்பவராக வேடம் பூண்டு, 'பிச்சை' என்று கேட்டு வீதியிலே வந்தார். அவர் வரவைக் கண்டதும் பல உயிர்கள் அவரது வாசனை பொருந்திய கொன்றை மாலையைப் பெற்றுத் தாம் சூடிக்கொள்ள விரும்பி, எப்பொருளையும் அழிக்கின்ற, கொடிய தீயினிடத்து வெண்ணெயும், வெயிலிடத்து மெழுகும் போல ஆகிவிட்டன. (ஆயினும் பயன் என்ன?) தாங்கிக் கொள்கின்ற காமம் கைப்பொருளானதும், உறக்கம் அருகிப் போனதுந்தாம் கண்டது. காலத்தூதுவர் வந்து தம்முள் முணுமுணுக்கின்ற ஓசைகள் அவற்றின் காதுகளில் ஒலிக்கின்றன.*

---

1. *திருமுறை - 11. நம்பியாண்டார் நம்பிகள்*

**சிவனது புகழ் – வீரங்கள் – முறை நிரனிறை மூவணி**

**204.** பல்லுயிர், பாகம், உடல், தலை தோல்பக லோன்மறல்பெண்
வில்லியோர் வேதியன் வேழம் நிரையே பறித்துதைத்துப்
புல்லியுஞ் சுட்டும் அறுத்தும் உரித்துங்கொண் டான்புகழே
சொல்லியும் பாடியும் ஏத்தக் கெடும்நங்கள் சூழ்துயரே. **36**

---

*குறிப்புரை :- 'இனி அவைகட்கு நிகழ இருப்பது இறந்து பாடே' என்பதாம். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. சூடிய - சூடுதற்கு, 'செய்யிய' என்னும் வினையெச்சம். பெண்டிரைப் பயனின்றி மெலிதல் நோக்கி, "உயிர்" என்றார். "வாய்" என்னும் ஏழன் உருபை தீக்கும் கூட்டுக. இழுது - வெண்ணெய். மெழுகு - அரக்கு. இவற்றின் பின், 'ஆயின' என்பது எஞ்சி நின்றது. 'தரிக்கின்ற' என்பது எதுகை நோக்கித் திரிந்து நின்றது. கரதலப் பொருளைக் "கரதலம்" என்றது ஆகுபெயர். கரதலப்பொருளாவது, கிடைத்தப் பொருள். மெல்லிது, இங்கு மிகக் குறைந்ததைக் குறித்தது. "கூற்றம்" என்றது, கூற்றனின் தூதுவரை. அஃது ஆகுபெயராய் அவர்தம் வாயொலியைக் குறித்தது. ஒலிக்கின்ற - ஒலிக்கின்றன. இது பெருமானது பிச்சைக் கோலத்து அழகினைப் புகழ்ந்தவாறு. 'சென்றார்' என்னாது, "வந்தார்" என்றது இடவழுவமைதி. "வருவிருந்து வைகலும் ஓம்புவான்" என்பதிற் போல. "நீருறு தீயே" என்னும் திருவாசகத்தைக் காண்க.*

*204. பொழிப்புரை :- பகலோனது (சூரியனது) பல்லைப் பறித்தும், மறலி (யமனது) உயிரை உதைத்துப் போக்கியும், பெண் (உமா தேவியது) ஒரு பாதியினைத் தான் பொருந்தியும், வில்லி (மன் மதனது) உடலைச் சுட்டும், ஓர் வேதியனது (பிரமனது) தலையை அறுத்தும், யானையை உரித்தும் புகழைப் பெற்ற சிவபெருமானது புகழை உரையாற் சொல்லியும், பாட்டால் பாடியும் துதித்தால் நம்மைச் சூழ்ந்துள்ளத் துன்பங்கள் அழிந்துபோம்.*

*குறிப்புரை :- 'இது நிரல் நிறைப் பொருள்கோள்' என்பதை ஆசிரியரே, "நிரையே" என்பதனாற் குறித்தார்.*

> *இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
> *பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.*[1]

*என அருளிச் செய்த வழி நிற்றற்கு இறைவனது பொருள்சேர் புகழ்களைக் கிளைத்தெடுத்துக் கூறியவாறு. ''துயர்'' என்றது பிறவித் துயரையும் உள்ளடக்கியேயாம். 'மறலி' என்பதைத் தொழிலாகு பெயராக, "மறல்" என்றார். இது முதல்நிலைத் தொழிற் பெயர்.*

*205. பொழிப்புரை :- (மறைக் காட்டு இறைக்கு ஆட்பட்ட வாள் நுதல்) திருமறைக்காட்டுப் பெருமானுக்கே தான் உரியளாகத் தன்னை தகுதிபடுத்திக்*

---

1. திருக்குறள் - 8.

**205.** துயருந் தொழுமழும் சோரும் துகிலுங் கலையுஞ்செல்லப்
பெயரும்; பிதற்றும்; நகும்;வெய் துயிர்க்கும்; பெரும்பணிகூர்ந்(து)
தயரும் அமர்விக்கும் மூரி நிமிர்க்குமந்தோ இங்ஙனே
மயரும் மறைக்காட் டிறையினுக் காட்பட்ட வாணுதலே. **37**

**206.** வாணுதற் கெண்ணம்நன் றன்று; வளர்சடை எந்தைவந்தால்
நாணுதற் கெண்ணாள்; பலிகொடு சென்று நகும்நயந்து
பேணுதற் கெண்ணும் பிரமன், திருமால் அவர்க்கரிய
தாணுவுக் கென்னோ இராப்பகல் நைந்திவள் தாழ்கின்றதே. **38**

---

*கொண்ட என் மகள், (அவன் வந்து தன்னை ஏற்றுக் கொள்ளாமையால்) துன்புறுவாள். தொழுவாள். அழுவாள்; நெகிழ்கின்ற உடையும் மேகலையும் தன்னைவிட்டு நீங்கத் தான் அலைவாள்; வாயில் வந்தவற்றைப் பிதற்றுவாள், சிலபொழுது சிரிப்பாள்; பெருமூச்செறிவாள். தணிக்கலாகா நோய் மிகுந்தவளாய்ச் சோர்வாள்; போராட்டமாக விக்குள் எழ விக்குவாள்; உடல் திமிர் ஏறியது போல முரித்துக் கொள்வாள். அந்தோ! இவ்வாறெல்லாம் மையல் மிகுகின்றாளே; (யான் என் செய்வேன்).*

*குறிப்புரை :- "துயரும், மயரும்" என்பனவும் ஏனைய போலச் 'செய்யும்' என்னும் முற்றுக்களே. இப் பொதுவினை இங்குப் பெண் பாலில் வந்தது. இது தலைவியது ஆற்றாமை கண்டு செவிலி கவன் றுரைத்தது. அதிதீவிர பக்குவிகளது நிலைமை கண்டு உறவினர் கவறுதல் இதன் உள்ளுறைப் பொருள். மூரி நிமிர்த்தல் - திமிர் விடுதல். அமர்விக்கும் - மிகுதியாக விக்குதல்.*

*206. பொழிப்புரை :- வளர்ந்த சடைகளையுடைய, அடியார்கள் 'எந்தை' என்று ஏத்தும் சிவபெருமான் பிச்சை ஏற்க வந்தால், என் மகள் 'நாண வேண்டுமே' என்று எண்ணாமல், விரைவில் பிச்சையை எடுத்துக்கொண்டு சென்று, அவன் எதிரிலே சிரிக்கின்றாள். அவன் மேல் விருப்பங் கொண்டு அவனுடன் நட்புக் கொள்ள நினைக்கின்றாள், அந்தப் பிரம விட்டுணுக்களாலே அடைதற்கரிய தலைவனைத் தான் அடைய விரும்பி இவள் இராப்பகலாக வருந்தி நகுதற் குரியளாதல் என்ன அறிவுடைமை? இவளுக்குப் புத்தி நல்லதாய் இல்லை.*

*குறிப்புரை :- நல்லது, இங்குப் பயன்படுவதை விரும்புவது. இது, தலைவியது பேதைமை பற்றிச் செவிலி இரங்கிக் கூறியது. இறைவன் அன்பர்க்கு எளியன் ஆதலையறியாத உலகர் அல்லாதார்க்கு அவன் அரியன் ஆகின்ற அஃது ஒன்றே பற்றி அன்பு செய்வார்மேல் இரக்கங் கொள்ளுதல் இதன் உள்ளுறை. தாணு - சிவன்.*

*207. பொழிப்புரை :- எங்கள் பெருமுனிவனாகிய சிவபெருமானுக்கு உள்ளவை நீண்டு தொங்கும் சடை. அச்சடையின்மேல் உள்ளது கங்கை*

**207.** **தாழுஞ் சடை;சடை மேலது கங்கைஅக் கங்கைநங்கை**
**வாழுஞ் சடைசடை மேலது திங்களத் திங்கட்பிள்ளை**
**போழுஞ் சடை;சடை மேலது பொங்கர(வு) அவ்வரவம்**
**வாழுஞ் சடை,சடை மேலதுகொன்றையெம் மாமுனிக்கே.** **39**

**208.** **முனியே, முருகலர் கொன்றையி னாயென்னை மூப்பொழித்த**
**கனியே, கழலடி அல்லாற் களைகண்மற் றொன்றுமிலேன்;**
**இனியேல்; இருந்தவஞ் செய்யேன் திருந்தவஞ் சேநினைந்து**
**தனியேன் படுகின்ற சங்கடம் ஆர்க்கினிச் சாற்றுவனே.** **40**

---

*நதியாதலின் அது கங்கையாகிய நங்கை வாழும் சடையாகின்றது. அந்தச் சடை மேல் மற்றும் உள்ளது பிள்ளைத் திங்கள் (பிறை) ஆதலின் அந்தச் சடை பிள்ளைத் திங்களால் (பிறையால்) போழப்படும் (நுழைந்து செல்லப்படும்) சடையாகின்றது. அந்தச் சடைமேல் உள்ளது சீற்றம் மிக்க பாம்பு ஆதலின் அந்தச் சடை பாம்பு வசிக்கின்ற சடையாகின்றது. அந்தச் சடைமேல் உள்ளது கொன்றை மாலை (ஆதலின் அதுவே அவனுக்கு அடையாள மாலையாய் உள்ளது).*

*குறிப்புரை :- ஈற்றில் வருவித்துரைத்தது இசையெச்சம். ''மேலது'' என்பவற்றை அடுத்து வந்தன பலவற்றின் பின்னும் 'ஆதலால்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. இரண்டாம் முறையாக வந்த ''சடை'' என்பவற்றிற்குச் சுட்டு வருவிக்க. 'பிள்ளை' என்பதை முன்னும் கூட்டி, 'பிள்ளைத் திங்கள்' என மாற்றியுரைக்க. புகழை மிகுத்துரைக்கின்றார் ஆதலின், சொற் பொருட் பின்வரு நிலையணி தோன்றப் பல தொடராற் கூறினார். எனினும், அடையாள மாலையாகிய கொன்றையைச் சிறப்பித்தலே இப்பாட்டிற்குக் கருத்தென்க. 'சிவபிரான் பெரு முனிவன்' என்பதை விசுவாதிகோ, ருத்ரோ, மஹருஷி"[1] என்னும் உபநிடதத் தாலும் அறியலாம். 'பற்றற்றவன், தவக்கோலம் உடையவன்' என்பது இதற்குக் கருத்து. "முன்னியாய் நின்ற முதல்வா போற்றி"[2] என அப்பரும் அருளிச் செய்தார். இதன் பின்னும் 'உள்ளது' என்னும் எழுவாய் எஞ்சி நின்றது.*

*208. பொழிப்புரை :- முனிவனே, நறுமணம் கமழ மலர்கின்ற கொன்றை மாலையை அணிந்தவனே, எனக்குச் சாதலைத் தவிர்த்த கனியாய் உள்ளவனே, உனது வீரக் கழல் அணிந்த திருவடிகளைத் தவிர வேறு துணை ஒன்றும் இல்லேன்; (இவ்வுடம்பொடு நிற்றலால்) பெரிய தவத்தைச் செய்ய இயலாமல் ஐம்புலன்களையே நினைந்து தமியேன் படுகின்ற இடர்ப்பாட்டினை யார்க்கு அறிவித்துத் தீர்வு காண்பேன்; இப்பொழுதே என்னை நீ ஏற்றுக்கொள்.*

---

1. *மகாநாராயணோபநிடதம்*
2. *திருமுறை - 6.57.5*

**209.** **சாற்றுவன் கோயில் தலையும் மனமுந் தவம்இவற்றால்**
**ஆற்றுவன் அன்பெனும் நெய்சொரிந்(து) ஆற்றியஞ் சொல்மலரால்**
**ஏற்றுவன் ஈசன்வந்(து) என்மனத் தானென்(று) எழுந்தலரே**
**தூற்றுவன் தோத்திரம் ஆயின வேயினிச் சொல்லுவனே.** **41**

**சிவனை வணங்காத மனிதர், அசேதனர்**

**210.** **சொல்லா தனகொழு நாவல்ல சோதியுட் சோதிதன்பேர்;**
**செல்லாச் செவிமரம் தேறித் தொழாதகை மண்; திணிந்த**
**கல்லாம் நினையா மனம்; வணங் காத்தலை யும்பொறையாம்**
**அல்லா அவயவந் தானும் மனிதர்க்(கு) அசேதனமே.** **42**

---

*குறிப்புரை :- முதற்கண், 'முனியேல்' எனப்பாடம் ஓதுவாரும் உளர். "என்னை" என்பது உருபு மயக்கம். அன்றி, 'மூப்பொழித்து ஆண்ட' என ஒரு சொல் வருவித்து முடிப்பினும் ஆம். கனி, ஔவை உண்ட நெல்லிக்கனி போன்றது. இப்பாட்டு, பாசப் பற்று அற்ற வழியும் வாதனை தாக்குதலைக் கூறியது.*

*209. பொழிப்புரை :- யான் இப்பொழுது அன்பு என்னும் நெய்யைச் சொரிந்தது, (அருளாகிய தீயை வளர்த்து) அதில் தலையையும், மனத்தையும் நிறுத்தித் தவம் செய்வேன்; அதனால் அவை யிரண்டையும் 'சிவனுடைய கோயில்' என்றே சொல்வேன். அழகிய சொல் மாலைகளைச் சிவனுக்கு அணிவிப்பேன்; தோத்திரங்களாய் உள்ளவற்றைச் சொல்லுவேன்; இவ்வாற்றால், 'சிவன் என் மனத்தில் தான் உள்ளான்' என்று பலரும் அறியக் கூறுவேன்.*

*குறிப்புரை :- 'தலையும், மனமும் கோயில்' எனச் சாற்றுவன் எனவும், 'நெய் சொரிந்து இவற்றால் தவம் ஆற்றுவன்' எனவும் இயைக்க. நெய்சொரிதலாகிய காரணத்தைக் கூறினமையால், தீ வளர்த்தலாகிய காரியம் கொள்ளப்பட்டது. 'என' என்பது எஞ்சி நின்றது. ஒரு காலை ஊன்றித் தவம் செய்தலேயன்றித் தலைகீழாக நின்று தவம் செய்தலும் உண்டு என்பதை அறிந்து கொள்க. புறத்து வளர்க்கும் அங்கியிலும், அகத்து வளர்க்கும் அங்கி சிறந்தது என்க.* ***"சொல் மாலை" என்றது தாமே இயற்றுவனவற்றையும், "தோத்திரம்" என்றது முன்னோர் இயற்றியவற்றையும் என்க.*** *"மாலையால்" என்பதை, 'மாலையை' எனத் திரிக்க. இனி - இப்பொழுது. 'தவம் செய்தல், சொல் மாலை அணிவித்தல், தோத்திரம் சொல்லுதல். இவற்றைச் செய்தல் அவ்வாறு செய்பவரது உள்ளத்தில் சிவன் வந்து குடிகொள்ளுதல் உறுதி' என்பது உணர்த்தியவாறு.*

*210. பொழிப்புரை :- சோதிக்குட் சோதியாய் (ஒளிக்குள் ஒளியாய் - அறிவுக்குள் அறிவாய்) உள்ள சிவபெருமானுடைய பெயரைக் கேளாத செவிகள்*

*செவிகள் அல்ல; ஒலி நுழையாத வன்மையை யுடைய மரங்கள். அதனைச் சொல்லாத நாக்கள் நாவல்ல; உழுபடையின் நாக்கு, அவனைப் பரம்பொருளாகத் தெளிந்து தொழாத கைகள் மண்ணால் செய்து வைக்கப்பட்ட போலிக் கைகள்; மனிதக் கைகள் அல்ல; அவனை நினையாத மனங்கள் மனங்கள் அல்ல; உளியால் போழ்ந்தாலும் போழப்படாத உறுதியான கற்கள்; அவனை வணங்காத தலைகள் தலைகள் அல்ல; பிற உடற் பகுதிகளுக்கு ஏற்றி வைக்கப்பட்ட ஒரு சுமைகள். மக்கட்கு அமைந்த பிற உறுப்புக்களும் (கண், கால் முதலியனவும்) அவனுக்குத் தம்மால் ஆகும் பணியைச் செய்யா விடின் மனித உறுப்புக்கள் ஆகா; சடப்பொருட் பகுதிகளே ஆகும்.*

***குறிப்புரை :-*** ***தோத்திரமும், சாத்திரமும்[1] சிவனை, "சோதியுட் சோதி" எனக் கூறுதல் இங்கு நினைக்கத் தக்கது. தான், பன்மை யொருமை மயக்கம். இங்குக் கூறியவாறே,***

> ***கோளில் பொறியில் குணமிலவே, எண்குணத்தான்***
> ***தாளை வணங்காத் தலை[2].***

***எனத் திருவள்ளுவரும் கூறினார். "வன்பராய் முருடொக்கும் என் சிந்தை; மரக்கண் என் செவி; இரும்பினும் வலிது" எனவும், "நெஞ்சம் கல்லாம்; கண்ணினையும் மரமாம் தீவினை யினேற்கே" எனவும் போந்த திருவாசகத்தையும் காண்க[3]. "திணிந்த" என்ற விதப்பினால் அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. "மனிதர்க்கு" என்றதனால், "மனித உடம்பும், அவற்றில் அமைந்த உறுப்புக்களும் சிவன் பணி செய்தற் பொருட்டே தரப்பட்டுள்ளன"[4] என்பது விளங்கும்.***

> ***வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்***
> ***தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன்[5]***

***எனவும், "வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து" எனவும்,***

> ***கால்களாற் பயன் என்! கறைக்***
> ***கண்டன் உறைகோயில்***
> ***கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்***
> ***கால்களாற் பயன் என்.***
> ***ஆக்கையாற் பயன் என்! - அரன்***
> ***கோயில் வலம்வந்து***

---

*1. திருமுறை - 5.97.3, சித்தியார் - சுபக்கம் - சூ.11.8*

*2. திருக்குறள் - 9*

*3. திருவாசகம் - செத்திலாப் பத்து - 4, திருச்சதகம் - 21*

*4. திருமுறை - 5.90.7.*

*5. மேலது பாடல்.*

**அருளால் வருவதே பேரின்பம்**

**211.** **தனக்குன்றம் மாவையம் சங்கரன் தன்னருள் அன்றிப்பெற்றால்,**
**மனக்கென்றும் நஞ்சிற் கடையா நினைவன் மதுவிரியும்**
**புனக்கொன்றை யானரு ளாற்புழு வாகிப் பிறந்திடினும்**
**எனக்கென்றும் வானவர் பொன்னுல கோடொக்க எண்ணுவனே.** **43**

---

*பூக்கையால் அட்டிப் போற்றி யென்னாத இவ்*
*வாக்கையாற் பயன் என்*[1]

*எனவும்,*

*ஆமாத்தூர் - அம்மானைக் காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே*
*ஆமாத்தூர் - அம்மானைக் கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே*
*ஆமாத்தூர் - அம்மானைக் கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே*
*ஆமாத்தூர் - அம்மான்எம் வள்ளல் கழல் பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே*
*ஆமாத்தூர் - நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே*[2]

*எனவும்,*

*மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக் காயம்*
*ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றோ*[3]

*எனவும் வருவன பலவும் கண்டுணர்க.*

*211. பொழிப்புரை :- சிவபெருமானது அருள் வழியன்றிப் பிற வழிகளால் மலைபோலும் நிதியையும், பெரிய உலகம் முழுவதையும், பெற்றாலும் அவைகளே யான் என் மனத்தின் கண் நஞ்சினும் கடைப்பட்டனவாக என்றும் நினைப்பேன். கொல்லையில் நிற்கும் கொன்றை மரத்தில் தேனொடு மலரும் பூக்களால் ஆகிய மாலையையணிந்துள்ள சிவபெருமானது அருள் வழிப் புழுவாய்ப் பிறக்கினும் அதனையான் எனக்குத் தேவர்களது பொன்னுலகமே கிடைத்துவிட்டது போல என்றும் நினைப்பேன்.*

*குறிப்புரை :- "சங்கரன்றன் அருளாலன்றி" என்பதனை முதலிற் கொள்க. "பிறந்திடினும்" என்னும் எதிர்மறை யும்மையை, "பெற்றால்" என்பதற்கும் கூட்டுக. ''மனக்கு'' என்பது உருபு மயக்கம். 'மனத்துக்கு' என்பதில் சாரியை தொகுக்கப்பட்டது. ''எனக்கு'' என்பதன்பின் 'வாய்த்ததாக' என ஒருசொல் வருவித்து முடிக்க. திருவருளாலன்றிப் பிற வழியால் வருவன வினையின்றி வருதலால் அசுத்தமும், திருவருள் வழியால் வருவன வினையின்றி வருதலால் சுத்தமும் ஆதல் பற்றி இவ்வாறு எண்ணினார். திருவருளால் அன்றி வினையால் மட்டுமே வருவனயாதும் இன்மையின் "பெற்றாலும்" என்றும் உம்மையும்,*

---

1. *திருமுறை - 4.9 - 9, 8.*
2. *திருமுறை - 2.44 4, 7, 8, 9, 10*
3. *சித்தியார் - சுபக்கம் - சூ - 2. 92*

**212** **எண்ணம் இறையே பிழைக்குங் கொலாமிமை யோரிறைஞ்சும்**
**தண்ணம் பிறைசடைச் சங்கரன் சங்கக் குழையன்வந்தென்**
**உண்ணன் குறைவ தறிந்தும் ஒளிமா நிறங்கவர்வான்**
**கண்ணும் உறங்கா(து) இராப்பகல் எய்கின்ற காமனுக்கே.** **44**

---

*திருவருளால் புழுவாய்ப் பிறத்தல் இன்மையின் "பிறந்திடினும்" என்னும் உம்மையும் எதிர்மறைப்பொருள்.*

*அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்*
*புல்லார் புரள விடல்*[1]

*எனவும்,*

*பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்*
*கழிநல் குரவே தலை*[2]

*எனவும் திருவள்ளுவர் அறம் பற்றிக் கூறியதனை இங்கு ஒப்பு நோக்குக.*

*212. பொழிப்புரை :-* தேவர் பலராலும் வணங்கப்படும், குளிர்ந்த அழகிய பிறையை அணிந்த சடைமுடியை உடையவனும், சங்கால் ஆகிய குழையை அணிந்தவனும் ஆகிய சிவபெருமான் வந்து என் உள்ளத்தின்கண் நீங்காது இருத்தலை அறிந்திருந்தும் எனது அழகிய நிறத்தை அழித்தற் பொருட்டும் இரவும், பகலும் ஊணோடு உறக்கமும் இன்றித் தன் அம்புகளைத் தொடர்ந்து எய்து கொண்டிருக்கின்ற மன்மதனுக்கு, 'யாம் வெல்வோம்' என்னும் எண்ணம் சிறிதாயினும் நீங்காதோ!

*குறிப்புரை :-* 'சிவபெருமானைக் கண்டபின் காமனால் கண்ணும் உறங்காது மெலிகின்றவள் தன் மெலிவை மறைத்துக் காமனைத் தோல்வியுறுபவனாக வைத்து இகழ்ந்தாள்; மக்களிலுள்ள இவள் தோற்பதன்றித் தேவரில் உள்ள காமன் தோற்பது எங்குளது! இதனால் அவட்குப் பெருமிதம் பிறந்ததாயினும், கேட்டார்க்கு நகை பிறந்தது.

நனவினான் நம்நீத்தார் என்பர்; கனவினான்
காணார்கொல் இவ்வூரவர்[3]

என்றாற் போல்வனவற்றை இங்கு நினைவு கூர்க.

'இறையேனும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்த லாயிற்று. கொல், ஐயப்பொருட்டாய், இகழ்ச்சி குறித்து நின்றது. ஆம், அசை. "சங்கரன்" என்பதைச் "சங்கக் குழையன்" என்பதன்பின் கூட்டுக. கவர்தல், இங்குப் போக்குதல். போதல், பசலையால், தலைவி சிவனைத் தலைப்பட்டவரும், காமன் பழ அடியார்களும் ஆதல் இதன் உள்ளுறைப் பொருள்.

---

1. திருக்குறள் - 755
2. மேலது - 657
3. மேலது - 1220

**213.** காமனை முன்செற்ற தென்றாள் அவளிவள் காலனென்னும்
தாமநன் மார்பனை முன்செற்ற தென்றுதன் கையெறிந்தாள்;
நாம்முனஞ் செற்றதன்(று) ஆரையென் றேற்(கு)இரு வர்க்குமஞ்சி
ஆமெனக் கிற்றிலர் அற்றெனக் கிற்றிலர் அந்தணரே. **45**

**214.** அந்தண ராமிவர் ஆரூ ருறைவதென் றேனதுவே
சந்தணை தோளியென் றார்தலை யாயசலவர் என்றேன்
பந்தணை கையாய் அதுவுமுண் டென்றார் உமையறியக்
கொந்தணை தாரீர் உரைமினென் றேன்துடி கொட்டினரே. **46**

---

*213. பொழிப்புரை :- அழகிய தட்பத்தை (கருணையை) உடையவராகிய சிவபெருமான் முன்னிலையில் ஒரு பெண் 'இப்பெருமான் (காமனை எரித்தவன், காலனை உதைத்தவன்) இவ்விரு செயல்களுள் முதலிற் செய்தது காமனை எரித்தது தான்' என்று சொன்னாள். அவட்கு எதிராக மற்றொருத்தி, 'இல்லை காலனை உதைத்ததுதான் முதலிற்செய்தது' எனத் தன் கைகளை ஒன்றோடு ஒன்று மோதும் படி அடித்து உறுதி படக் கூறினாள். யான் 'அச்சம் உண்டாக, அவ்விரு வரில் நீவிர் முற்காலத்தில் முதலில் கொன்றது யாரை' என வினவினேன். பெருமான் அவ்விருவருக்காகவும் அஞ்சி, 'அவனை முதலிற் கொன்றது' என ஒன்றைத் திட்டமாக வாய்திறந்து கூறாமல், மௌனமாய் இருந்தார். (யான் இவரை, 'யாரிடத்தில் அன்புடையவர்' என்று நினைப்பது?)*

*குறிப்புரை :- 'சிவபெருமானது பண்டைச் செயல்கள் பற்றி முன் பின் கால ஆராய்ச்சி செல்லாது' என்பதனை, ஓர் மகளிர் உரையாடலாக வைத்துக் கூறினார். "முன்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே"[1] என்ற அப்பர் திருவாக்கையும் காண்க. நாம், அச்சப் பொருட்டாய் உரிச்சொல்[2] இறைவன் ஒருவர்க்கு மட்டும் உரியன் ஆகாமையும் இங்குக் குறிக்கப்பட்டது. "அந்தணர்" என்பது இங்குக் காரணப் பெயராய் நின்றது.*

*214. பொழிப்புரை :- துறவிகள் போலப் பிச்சை ஏற்க வந்த இவரைப் பற்றி யான், 'இவர் இருக்கும் ஊர் ஆர் ஊர்' (யார் இருக்கும் ஊர்) என்று பிறரை வினாவினேன்; இவர் தாமே முன் வந்து, 'சாந்து பூசிய தோளை உடையவளே, நீ வினாவாகச் சொல்லிய அந்த ஊர்தான் (ஆரூர்தான்) நாம் இருக்கும் ஊர்' என்றார். பின்பு யான் இவர் முதலில் வைத்து எண்ணத் தக்க 'சலவர்' (வஞ்சனைக்காரர்) என்றேன். அதற்கு அவர், 'பந்து ஏந்தும் கையை உடையவளே, நீ இரண்டாவதாகச் சொன்னதும் உண்மைதான்' (சலத்தை - நீரை - கங்கையைத் தாங்கினவர்) என்றார். இப்படி அவர் நகையாடிக் கூறினமையால் 'அவர் என்னைக் காதலிக்கின்றார்' என்று கருதி, யான், 'மார்பில் கொத்துக் கொத்தாகப் பல மாலையை அணிந்துள்ளவரே, உமை அறிய உம்மை நான் -*

---

1. *திருமுறை - 6.34*
2. *தொல். சொல். உரியியல்*

**215.** கொட்டும் சில;பல சூழநின் றார்க்கும்குப் புற்றெழுந்து
நட்ட மறியும் கிரீடிக்கும்; பாடும்; நகும்வெருட்டும்;
வட்டம் வருமருஞ் சாரணை செல்லும்; மலர்தயங்கும்
புட்டங் கிரும்பொழில் சூழ்மறைக் காட்டான் பூதங்களே. **47**

**216.** பூதப் படையுடைப் புண்ணிய ரேபுறஞ் சொற்கள் நும்மேல்
ஏதப் படவெழு கின்றன வாலிளை யாளொடும்மைக்
காதற் படுப்பான் கணைதொட்ட காமனைக் கண்மலராற்
சேதப் படுத்திட்ட காரணம்; நீரிறை செப்புமினே. **48**

---

*இன்னார் - என்று நன்கு அறியும்படி சொல்லுவீர்' என்று கேட்டேன். அவர் சொல் ஒன்றும் சொல்லாமல் கையில் இருந்த உடுக்கையை அடித்தார். (என்னை அவர் பக்கத்தில் உள்ள உமாதேவி பார்த்துத் தெரிந்து கொள்ளும்படிச் செய்தார்).*

*குறிப்புரை :- 'இவர் மிகவும் வல்லாளர்' என்பது குறிப்பெச்சம். 'திருவாரூரை இடமாகக் கொண்டிருப்பவரும், உலகம் அழியா திருத்தற் பொருட்டுக் கங்கையைச் சடையில் தாங்கியவரும் ஆகிய சிவபெருமான் தம்மை அடைய விரும்புவோர்க்குத் தமது அருளாகிய கையைக் கொடுத்துக் காப்பார்' என்பது குறிப்புப் பொருள். "அந்தணர்" என்பது இங்கு, "அறவோரை"[1] (துறவிகளை)க் குறித்தது. சலவர் - வஞ்சர், பகைவர். கொந்தனை - பூங்கொத்து.*

*215. பொழிப்புரை :- மலர்கள் விளங்குகின்றனவும், பறவைகள் வாழ்வனவும் ஆகிய பெரிய சோலைகள் சூழ்ந்த திருமறைக்காட்டில் எழுந்தருளியுள்ள இறைவனது படையாகிய பூதங்களுட் சில (அச்சமும், துன்பமும் இன்றிக் களித்திருத்தலால்) கைகளையும், பறைகளையும் கொட்டும். பல சிவபெருமானைச் சூழ்ந்து நின்று ஆரவாரிக்கும்; மற்றும் சில குப்புற வீழ்ந்தும் எழுந்தும் கூத்தாடும்; பல பல விளையாட்டுக்களைச் செய்யும்; பல பாட்டுக்களைப் பாடும்; சிரிக்கும்; ஒன்றை ஒன்று அச்சுறுத்தும்; வட்டமாக ஓடி வரும்; அணி வகுத்துச் செல்லும்.*

*குறிப்புரை :- 'சிவபெருமானுக்கு ஆட்பட்டவர் கட்கு' எந்த வகையான அச்சமோ துன்பமோ, கவலையோ இல்லை, "இன்பமே எந்நாளும்"[2] என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு.*

> *அச்சமிலர், பாவமிலர், கேடு மிலர், அடியார்*
> *நிச்சம்உறு நோயு மிலர் ..........................................................*
> *.........பச்சமுடை யடிகள் திருப் பாதம்பணி வாரே[3].*

*என்றது காண்க. கிரீடித்தல் - விளையாடுதல்.*

---

1. *திருக்குறள் - 30*
2. *திருமுறை - 6.98.1*
3. *திருமுறை - 1.18.2*

**217.** **செப்பன கொங்கைக்குத் தேமலர்க் கொன்றை நிறம்பணித்தான்;**
**மைப்புரை கண்ணுக்கு வார்புனற் கங்கைவைத் தான்மனத்துக்**
**கொப்பன இல்லா ஒளிகிளர் உன்மத் தமும்அமைத்தான்;**
**அப்பனை அம்மனை நீயென் பெறாதுநின் றார்க்கின்றதே.** **49**

---

*216. **பொழிப்புரை :-** பூதங்களையே படைகளாகக் கொண்டுள்ளப் புண்ணிய சொரூபரே, உம்மைப் பற்றிப் புறங் கூற்றுக்கள் நீர் குற்றப் படும்படி பலவாய் எழுகின்றன. (அவற்றை நீர் அறிவீரோ, அறியீரோ! அவற்றுள் தலையாயது) இளையாள் ஒருத்தியின் காதலில் உம்மை அகப்படுத்தற்குத் தனது கணையாகிய மலரை எய்த மன்மதனை நீர் உமது கண்ணாகிய மலரால் அழிவுபடுத்தியது. 'அஃது ஏன்' என்பதற்கு நீர் விடை கூறுவீர்.*

***குறிப்புரை :-*** *புறங் கூற்றுக்களாவன தன் கடமையைச் செய்ய வந்த காலனைக் காலால் உதைத்தது. முப்புரத்தவரை அழித்தது; தாருகாவன முனிவரது மனைவியரின் கற்பை நிலைகுலையச் செய்தது முதலியவை பற்றியன. 'இன்னோரன்னவற்றை நும் எதிரில் கூற மாட்டாது பலர் புறங் கூறுகின்றார்கள்' என்றபடி. 'மன்மதன் செய்தது, தனியராய் இருந்த உம்மை இல்வாழ்க்கையர் ஆக்குவிக்க முயன்றதே. அவனை அழிவு செய்தமை தகுமோ' என்பதாம். இவற்றிற்கெல்லாம் விடை,*

> *இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்*
> *இவரை இகழ்வதே கண்டீர்*[1]

*என அருளிச் செய்ததே என்பது கருத்து. ஆல் அசை. இறை - விடை. "காரணம்" என்பதன்பின் 'என்' என்பது எஞ்சிநின்றது. புறஞ்சொற்கள் - பழிச்சொற்கள். ஏதம் - மாசு.*

*217. **பொழிப்புரை :-** எல்லோரும் தங்கட்கு 'அப்பன்' என்றும், 'அம்மை' என்றும் சொல்லிப் போற்றுகின்ற இறைவன், கிண்ணம் போலும் தனங்களையுடைய நின்மகளுடைய தனங்களுக்குத் தான் அணிந்துள்ள கொன்றைப் பூவின் நிறத்தைக் கொடுத்தான் (தனிமையால் உண்டாகும் பசப்பூரச் செய்தான்). மை தீட்டப்பட்ட சிறந்த கண்ணிற்குத் தான் தரித்துள்ள, ஒழுகுகின்ற கங்கை நீரைக் கொடுத்தான். (கண்ணீர்விட்டு அழச் செய்தான்) மனத்துக்குத் தான் அணிந்துள்ள, ஒப்பில்லாத, அழகுமிக்க ஊமத்தம் பூவைக் கொடுத்தான். (பித்தம் பிடிக்கச் செய்தான்) இதையறியாது, 'இவள் ஏதோ தெய்வந் தீண்டப்பட்டாள்' என்று அதற்குப் பூசை போடுகின்றாயே!*

***குறிப்புரை :-*** *ஞானியரை உலகர் ஏதோ மனநோய் உள்ளவராகக் கருதி அது தீரத் தெய்வங்களை வேண்டுதல் முதலியன செய்தலும், அவர்க்கு அறிவர் அறிவுறுத்தலும் இதன் உள்ளுறை. புரை - உயர்வு. 'ஊமத்தம் பூவைத் தலையில் சூடிக்கொண்டால் பித்தம் பிடிக்கும்' என்பது உலக வழக்கு. "அப்பனை"*

---

1. *அற்புதத் திருவந்தாதி - 29*

**218.** **ஆர்க்கின்ற நீரும் அனலும் – மதியும்ஐ வாயரவும் –**
**ஓர்க்கின்ற யோகும், உமையும் உருவும் அருவும்வென்றி**
**பார்க்கின்ற வேங்கையும் மானும் – பகலும் இரவுமெல்லாம்**
**கார்க்கொன்றை மாலையி னார்க்குடன் ஆகிக் கலந்தனவே.** **50**

---

*என்பதனோடு இயைய, "அம்மனை" என்பதிலும் இரண்டன் உருபு விரிக்க. பெறுதல், இங்கு வரைவு உடன் படுதல். செப்பு - கிண்ணம். உன்மத்தம்-மயக்கம்.*

*218. **பொழிப்புரை :-** கார் காலத்தில் பூக்கின்ற கொன்றைப் பூவினாலாகிய மாலையைத் தனது அடையாள மாலையாகக் கொண்ட சிவபெருமானிடத்தில் நீர் - நெருப்பு, திங்கள் - ஐந்து தலைப் பாம்பு, யோக நிலை - இல்லாள், உருவம் - அருவம், புலி - மான், பகல் - இரவு இவ்வாறு எல்லாம் ஒன்றுக்கொன்று பகையாய பொருள்கள். அப்பகை நீங்கி நட்புக்கொண்ட உடன் கலந்து வாழ்கின்றன.*

***குறிப்புரை :-** 'இஃது அதிசயம்' என்பது குறிப்பெச்சம். ஆர்க்கின்ற - ஒலிக்கின்ற. ஓர்க்கின்ற - தியானிக்கின்ற. யோகு - யோகம். அஃது ஆகுபெயராய். அந்நிலையைக் குறித்தது. 'யோகம் துறவிகட்கு உரித்து' என்பது பெரும்பான்மை. உரு - உருவத் திருமேனி. அரு - அருவத் திருமேனி - முழுமையாக அமைந்த புலித்தோல் உயிருடைய புலி பார்ப்பது போலத் தோன்றுதலின் "பார்க்கின்ற வேங்கை" என்றார். "அதைக் கண்டு மான் அஞ்சவில்லை" என்றபடி. மான் விலங்காதலுடன் மறி (கன்று) ஆதலின், 'உயிரில்லது' என அறியும் அறிவில்லதாம். பகல் வலக் கண்ணாகிய சூரியனாலும் இரவு இடக்கண்ணாகிய சந்திரனாலும் உளவாகின்றன. 'சிவபெருமானைச் சேர்ந்தவர்க்கு நடுவு நிலையே உளதாவதன்றி, உறவு பகைகள் உளவாவன அல்ல' என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு. "யோகும் உமையும்" - என்றதனை.*

*ஒன்றொடொன் றொவ்வா வேடம்*
*ஒருவனே தரித்துக் கொண்டு*
*நின்றலால் உலகம் நீங்கி*
*நின்றனன்*

*எனவும், உருவும், அருவும்" என்றதனை,*

*பந்தமும் வீடும் ஆய*
*பதபதார்த் தங்கள் அல்லான்;*
*அந்தமும், ஆதி யில்லான்*
*அளப்பிலன் ஆதலாலே*
*எந்தைதான் 'இன்னன்' என்றும்,*
*'இன்னதாம், இன்ன தாகி*
*வந்திடான்' என்றும் சொல்ல*
*வழக்கொடு மாற்றம் இன்றே[1].*

**219.** கலந்தனக்(கு) என்பலர் கட்டவிழ் வார்கொன்றை கச்(சு)அர(வு)ஆர்
சலந்தனக்(கு) அண்ணிய கானகம் ஆடியோர் சாணகமும்
நிலந்தனக் கில்லா அகதியன் ஆகிய நீலகண்டத்து
அலந்தலைக் கென்னே அலந்தலை யாகி அழிகின்றதே. **51**

**220.** அழிகின்ற தாருயிர் ஆகின்ற தாகுலம் ஏறிடும்மால்
இழிகின்ற சங்கம் இருந்த முலைமேற் கிடந்தனபீர்
பொழிகின்ற கண்ணீர் புலர்ந்தது வாய்கலை போனவந்தார்
மொழிகின்ற தென்னினி நான்மறை முக்கண் முறைவனுக்கே. **52**

---

*எனவும் சிவஞான சித்தி நூல் விளக்குதல் காண்க. 'சிவபிரான் அணியும் கொன்றை கார்க் கொன்றையே' என்பதை "கண்ணி கார்நறுங் கொன்றை; காமர் - வண்ண மார்பில் தாரும் கொன்றை"[2] "கொன்றைப் பொன்னேர் புதுமலர்த் - தாரன், மாலையன், மிலைந்த கண்ணியன்"[3] என்பவற்றானும் அறிக.*

*219. **பொழிப்புரை :-** இவளால் காதலிக்கப்பட்டவனுக்கு அணிகலம் ஆவன எலும்புகளே; அணியும் பூக்களாவன அரும்பவிழ்ந்த கொன்றைப் பூக்களே. (இவை சூடும் மலர் அல்ல). அரைக்கச்சாவது பாம்பு. அவனோ நீர் இல்லாமல் நீருக்கு அருகில் வெம்மை பொருந்திய காட்டில் (ஈமத்தில்) ஆடுபவன். ஆகவே, அவன் ஒரு சாண் அளவினதான இடமும் 'தன்னுடையது' என்று இல்லாத அகதி, கழுத்தில் கறையுடை யனாய் எங்கும் திரிகின்ற அவனை நினைந்து இவள் மனம் அலைதல் என்னோ!*

***குறிப்புரை :-** இது, தலைவியது ஆற்றாமை கண்டு செவிலி இரங்கிக் கூறியது. ஞானிகளது நிலைமை யறியாமல் உலகர் அவர் பொருட்டு இரங்குதல் இதன் உள்ளுறை. "ஆடி" என்றது பெயர். அலந்தலை - அலமரல். அது முன்னர் ஆகுபெயராய் அதனை உடையவனைக் குறித்தது. 'இவள் அழிகின்றது என்னே' எனத் தோன்ற எழுவாய் வருவித்து முடிக்க. கலம் - அணிகலம். அலந்தலைக்கு - துக்கமுடையவனுக்கு.*

*220. **பொழிப்புரை :-** நான்கு மறைகளையும் அருளிச் செய்த, மூன்று கண்களையுடைய அறவோன் பொருட்டு எனது அரிய உயிர் போய்க் கொண்டிருக்கின்றது. அது போவதற்கு முன்னே மனக் கவலை உண்டாகின்றது; மயக்கம் ஒருகாலைக் கொருகால் மிகுகின்றது; சங்க வளையல்கள் கழன்று வீழ்கின்றன; இறுமாந்திருந்த கொங்கைகளின் மேல் பீர்க்கம்பூப் போலும் பசலைகள் வெளிப்பட்டுக் கிடந்தன; கண்கள் நீரைப் பொழிகின்றன; வாய்*

---

1. *சிவஞான சித்தியார் சுபக்கம் - சூ - 1 - 51, 44.*
2. *புறம். - கடவுள் வாழ்த்து*
3. *அகம். - கடவுள் வாழ்த்து*

**221.** **முறைவனை, மூப்புக்கும் நான்மறைக் கும்முதல் ஏழ்கடலந்**
**துறைவனைச் சூழ்கயி லாயச் சிலம்பனைத் தொன்மைகுன்றா**
**இறைவனை, எண்குணத் தீசனை, ஏத்தினர் சித்தந் தம்பால்**
**உறைவனைப் பாம்பனை யாம்பின்னை என்சொல்லி ஓதுவதே.** **53**

---

*புலர்ந்து விட்டது; மேகலைகள் போயே விட்டன. எனக்காக அவரிடம் தூது சென்று வந்தவர்கள் என்ன சொல்கின்றனரோ!*

***குறிப்புரை :-*** *'அவர்களது வாய்ச்சொல்லைப் பொறுத்துள்ளது என் உயிரின் நிலைமை' என்பது குறிப்பெச்சம். இது தூது சென்றார் வந்ததையறிந்து தலைவி அவர் சொல்லைக் கேட்க விதுப்புற்றுக் கூறியது. தூதுவிடக் கருதுதலோடு ஒழியாமல், தூதுவிட்டே நின்றமையால், இது, "மிக்க காமத்து மிடல்"[1] என்னும் பெருந்திணை. 'நன்மைகள் பலவற்றை எய்தாது கழிகின்றது' என்னும் கருத்தால் தலைவி தனது உயிரை "ஆருயிர்" என்றாள். மால் - மயக்கம். பீர் - பீர்க்கு. அஃது இருமடியாகுபெயராய் முன்னர் அதன் பூவையும், பின்னர் அப்பூப்போலும் பசலையையும் குறித்தது. மணிக்கோவைகளின் பன்மை பற்றி மேகலை பலவாகச் சொல்லப்பட்டது. மேகலையை, 'கலை' என்றது தலைக் குறை, தீவிரதர பக்குவத்தில் அடியவர் வாய்மொழிகளை நோக்கியிருத்தல் இதன் உள்ளுறை. 'இறைவன், துறைவன், துணைவன்' - முதலியன போல, 'முறைவன்' வகர இடைநிலை பெற்ற பெயர். இருந்த, கிடந்தன - நான்மறை முக்கண் இவை முரண்தொடை; விரோத அணி. ஆகுலம் - கவலை. சங்கம் இழிகின்றன - சங்கு வளையல்கள் நழுவுகின்றன.*

***221. பொழிப்புரை :-*** *அறத்தின் வடிவானவனும், காலப்பழமைக்கும், நான்கு வேதங்கட்கும் முதலாய், ஏழு கடல்களால் சூழப்பட்ட ஏழு தீவுகளிலும் வழிபடப்படுபவனும், ஞானியர் சூழ்ந்துள்ள கயிலாய மலையில் இருப்பவனும், தனது அனாதி நிலையினின்றும் என்றும் குறைவு படாத கடவுளும், எட்டுக் குணங்களையே ஐசுவரியமாக உடையவனும், தன்னைத் துதித்தவர்களது உள்ளத்திலே என்றும் உறைபவனும் பாம்புகளையே அணிகலமாக அணிந்தவனும் ஆகிய சிவ பெருமானை யாம் இவ்வளவிலன்றி, வேறு எவற்றைச் சொல்லி ஓயாது துதிப்பது?*

***குறிப்புரை :-*** *'சிவனது அளவிறந்த புகழ்களில் நாம் அறிந்தன மிகச் சிலவே' என்பது கருத்து.*

*'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்'[2] ஆதலை, 'மூப்புக்கு முதல்' என்றார். முதல் - முதல்வன்; ஆகுபெயர். "முதல்" என்பதில் தொகுக்கப்பட்ட 'ஆய்' என்னும் வினையெச்சம். "துறைவன்" என்னும் குறிப்பு*

---

*1. தொல் - பொருள். அகத்திணையியல். நூ. 51.3*

*2. திருவாசகம் : திருவெம்பாவை : 9*

**இதோபதேசம் : வாழ்க்கை நலங்கூறல் (அகத்துறை – தோழிகூற்று)**

**222.** **ஓதவன் நாமம் உரையவன் பல்குணம்; உன்னைவிட்டேன்;**
**போதவன் பின்னே, பொருந்தவன் வாழ்க்கை திருந்தச்சென்று;**
**மாதவ மாகிடு மாதவ மாளவர் புன்சடையான்**
**யாதவன் சொன்னான், அதுகொண் டொழியினி; ஆரணங்கே.** **54**

---

*வினைப்பெயர் கொண்டது. உலக முழுவதிலும் உள்ளாரால் வழிபடப்படுதல் பற்றி, "ஏழ்கடல் துறைவன்" என்றார். சூழ்தலுக்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. தொன்மை - அனாதி. அஃதே இயற்கையாதலை அறிக. எண் குணங்களாவன. 1. தன்வயம் 2. தூய உடம்பு 3. இயற்கையுணர்வு 4. முற்றுணர்வு 5. இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றல் 6. முடிவில் ஆற்றல் 7. பேரருள் 8. வரம்பில் இன்பம் - என்பன[1]. இவையே கடவுட் குணங்கள் ஆதலை ஓர்ந்துணர்க. தம், சாரியை. இன் சாரியை நீக்கித் தம் சாரியை கொடுத்தார். "பின்னை" என்பது 'மற்று' என்னும் பொருட்டு. "ஓதுதல்" என்பது இங்கு இடைவிடாது துதித்தலின் மேற்று.*

*222. பொழிப்புரை :- அரிய தெய்வப்பெண் போன்றவளே, உன்னை நான் இப்பொழுது பெரிய தவக்கோலமாய் வளர்கின்ற புல்லிய சடையை உடைய சிவபெருமான்பால் அனுப்புகின்றேன்; நீ அவனிடம் சென்று, அவனுடைய பெயர்கள் பலவற்றையும் சொல்; அவனுடைய இறைமைக் குணங்கள் பலவற்றையும் எடுத்துப் பேசு; அவன் எங்குச் சென்றாலும் அவனை விடாது அவன் பின்னே செல்; சென்று, அவனது வாழ்க்கைக்கு ஏற்ப உன்னைத் திருத்திக்கொண்டு அவனுக்குப் பொருந்தியவளாய் இரு. (மற்றும் அவன் மனம் இரங்க வேண்டிப்) பெரிய தவத்தைச் செய். (இவ்வளவும் செய்தால் அவன் ஏதாவது ஒரு முடிவைக் கூறாமல் இருக்க மாட்டான்). அவன் என்ன முடிவைச் சொன்னாலும் அதைக் கேட்டுக் கொண்டு வந்துவிடு.*

*குறிப்புரை :- இது சிவபெருமானிடம் தூது விடுப்பவள் சொல்லியது. 'சிவபெருமான் பேரிரக்க குணம் உள்ளவன்' என்பதும், 'அவனைப் பலபடியாலும் வழிபட்டால் அவன் இரங்கா தொழியான்' என்பது அவரது நம்பிக்கை.*

*நல்கா தொழியான் நமக்கென்றுன்*
*நாமம் பரவி நயனசிர்*
*மல்கா, வாழ்த்தா, வாய்குழறா,*
*வணங்கா, மனத்தால் நினைந்துருகிப்*
*பல்கால் உன்னைப் பாவித்துப்*
*பரவிப் பொன்னம் பலமென்றே*
*ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி*
*யருளாய், என்னை உடையானே.[2]*

*என்றாற் போலும் திருவாக்குகளைக் காண்க. "மாதவம்" இரண்டில் பின்னது*

1. *திருக்குறள் - 9 : பரிமேலழகர் உரை*
2. *திருவாசகம் - கோயில் மூத்த திருப்பதிகம் - 10*

**223.** ஆரணங் கின்முகம் ஐங்கணை யானகம்; அவ்வகத்தில்
தோரணந் தோள்அவன் தேரகல்அல்குல்;தொன் மைக்கண்வந்த
பூரண கும்பம் முலையிவை காணப் புரிசடையெம்
காரணன் தாள்தொழும்; அன்போ பகையோ ? கருதியதே. **55**

---

*ஆகுபெயராய்த் தவக்கோலத்தைக் குறித்தது. "தவம் மறைந்து அல்லவை செய்தல்"[1] என்பதிற் போல. 'வாழ்க்கையோடு' என்னும் மூன்றன் உருபு தொகுத்தலாயிற்று. 'புன் சடையானாகிய அவன்' என்க.*

*223.* **பொழிப்புரை :-** *அரிய தெய்வப்பெண் போன்றவளாகிய இவளது முகம் மிக அழகிதாய் இருத்தலின் மன்மதன் வாழும் இல்லமாகின்றது; இவளது தோள்கள் தூங்கியசைதலால் அவ்இல்லத்தில் தூக்கப்பட்டுள்ள தோரணங் களாகின்றன. அகன்ற அல்குல் மன்மதன் ஊரும் தேர் ஆகின்றது. தனங்கள் பழைய மரபின்படி ஏந்தி வரும் பூரண கும்பங்களாகின்றன. இவையெல்லாம் பலர்க்கும் தெரிய இவள் வந்து எங்கள் சிவபெருமானது திருவடிகளை வணங்குகின்றாள். ஆயினும் (இவள் மன்மதனது படைகளுள் ஒருத்தி யாதலின் இவள்) சிவபெருமானை (மன்மதனையும் மறந்து) காதலித்து வரவேற்று வரவேற்று வணங்குகின்றாளா? இல்லை; பகைமை காரணமாக வெறும் நடிப்பாக வரவேற்று வணங்குகின்றாளா? இவள் மனத்தில் உள்ளது என்ன?*

**குறிப்புரை :-** *சிவபெருமான் வீதியுலா வரும்பொழுது வரவேற்று வணங்குகின்ற பலருள் காதல் பொங்க அவ்வாறு வணங்குவாள் ஒருத்தியைக் கண்டோர் ஐயுற்றுக் கூறியது. அவளது பேரழகும், முகக் குறிப்பும் அவர்களது ஐயத்திற்குக் காரணம். மெய்யன்பர்களது உண்மையன்பின் பெருமையை அறியாது உலகர் அவர்களையும் தம்முட் சிலராக வைத்துக் குறைத்து எண்ணுதல் இதன் உள்ளுறை. அனைத்து அழகிலும் முகத்தழகே தலையாயது ஆதலின் அதனை யுடைய முகமே மன்மதனது இல்லமாகச் சொல்லப்பட்டது. ஏனைய வெளி. உவமைகள் சுட்டிக் கூறா உவமமாய் நின்றமையின் பொதுத் தன்மைகள் விரித்துரைக்கப்பட்டன. காரணன் - முதல்வன். தொழும். 'செய்யும்' என்னும் முற்று.*

*224.* **பொழிப்புரை :-** *ஊரவரே, நீவிர் ஆற்ற வேண்டிய கடமையாகக் கொண்டது யாதொன்றும் இல்லையாயினும், யான் சொல்வதைக் கேட்டருளுங்கள். இன்று வர இருக்கும் இருட்பொழுது இந்த அழகி இனி ஒரு நாளாயினும் வாழ விடாது. ஆகையால் (நீவிர் அருள் கூர்ந்து) பகையாகிய அசுரர் பலர் அழியும்படி போர் செய்த திருமாலை இடப ஊர்தியாக உடைய புண்ணிய சொரூபனாகிய சிவபெருமான் அணிந்துள்ள அழகு மிக்க, அன்றலர்ந்த கொன்றைப் பூமாலையை இப்பொழுதே சென்று அவனிடம் விண்ணப்பித்து வாங்கி வந்து தாருங்கள்; எல்லோருக்கும் நல்லாதாயிடும். தாராது விடிலோ,*

---

1. *திருக்குறள் : 274*

**224.** கருதிய தொன்றில்லை ஆயினுங் கேண்மின்கள்; காரிகையாள்
ஒருதின மும்உள ளாகவொட் டா(து)ஆடுங் காரொடுங்கப்
பொருதநன் மால்விடைப் புண்ணியன் பொங்கிளங் கொன்றையின்னே
தருதிர்நன் றாயிடும் தாரா விடிற்கொல்லுந் தாழிருளே. **56**

**225.** இருளார் மிடற்றால் இராப்பகல் தன்னால் வரைமரையால்;
பொருளார் கமழ்கொன்றை யால்முல்லை; புற்றர வாடுதலால்
தெருளார் மதிவிசும் பால்பௌவந் தெண்புனல் தாங்குதலால்
அருளாற் பலபல வண்ணமு மாஅரன் ஆயினனே. **57**

---

*இருட்பொழுது இவளை இன்று கொன்றுவிடும்.*

*குறிப்புரை :- இது, தலைவி ஆற்றாமை மிகுவது கண்டு தோழி அயலாரிடம் இரங்கிக் கூறியது. நாணழிந்து அயலார் அறியக் கூறினமையின் இது பெருந்திணைப்பாலது. தாழ் இருள் - இனித் தங்க வரும் இருள்; எதிர்கால வினைத்தொகை. இருள் ஆகுபெயராய் அது வருவதற்குரிய காலத்தைக் குறித்தது. தீவிரதர பத்தியால் சிவனை அடைய விரையும் அன்பரது நிலையை அறிந்து அவரோடு உடன் உறைபவர் அவ்வன்பரது நிலைமையை அடியார்கள் அறியக் கூறுதல் இதன் உள்ளுறை. 'தலைவன் தான் அணிந்திருக்கும் மாலையைக் கழற்றி ஒருத்தி அணிந்து கொள்ள இசைந்து தருவானாயின், அவன் அவளைக் கைவிடாது தன் துணைவியாகக் கொள்ளல் வேண்டும்' என்பது அறநெறி. அதனால் துயர் கூருந் தலைவியரை ஆற்றுவிக்கத் தலைவன் அணிந்திருக்கும் மாலையை இரத்தல் அகப்பாட்டுக்களுள் சொல்லப்படுகின்றது. காரிகை - அழகு. ஒடுங்கார் - பகைவர்.*

*225. பொழிப்புரை :- சிவபெருமான் கறுத்த கண்டத்தையுடைமையால் இரவாய் இருக்கின்றான்; தனது திருமேனி ஒளியால் பகலாய் இருக்கின்றான்; மானைக் கொண்டிருத்தலால் குறிஞ்சி நிலமாய் இருக்கின்றான்; அடையாளமாகப் பொருந்திய, மணங்கமழும் கொன்றையை அணிந்திருப்பதால் முல்லை நிலமாய் இருக்கின்றான்; பாம்புகள் இயங்கப் பெறுதலால் புற்றாய் இருக்கின்றான்; ஒளி பொருந்திய சந்திரன் தவழப் பெறுதலால் ஆகாயமாய் இருக்கின்றான்; தெளிவாகிய நீரைத் தாங்குதலால் கடலாய் இருக்கின்றான். இவ்வாறு அருள் காரணமாக அவன் பலப்பல பொருள் வடிவாய்க் காட்சியளிக்கின்றான்.*

*குறிப்புரை :- "தன்" என்பது ஆகுபெயராய்த் தனது உடம்பைக் குறித்தது. மரை - மான். 'மதியால்' என்னும் மூன்றன் உருபு தொகுத்தலாயிற்று. "விசும்பால்" என்னும் ஆல், அசை. சிவபிரானது தோற்றத்தை வியந்து கூறி 'இத்தனைக்கும் காரணம் அவனது அருள்' என்றபடி.*

*226. பொழிப்புரை :- மன்மதனது கையில் உள்ள படைக்கலத்திற்கு*

**226.** ஆயின அந்தணர் வாய்மை அரைக்கலை கைவளைகள்
போயின வாள்நிகர் கண்ணுறு மைந்நீர் முலையிடையே
பாயின வேள்கைக் கரபத் திரத்துக்குச் சூத்திரம்போல்
ஆயின பல்சடை யார்க்கன்பு பட்டவெம் ஆயிழைக்கே. **58**

**227.** இழையார் வனமுலை வீங்கி இடையிறு கின்றதுஇற்றால்
பிழையாள் 'நமக்கிவை கட்டுண்க' என்பது பேச்சுக்கொலாம்;
கழையார் கழுக்குன்ற வாணனைக் கண்டனைக் காதலித்தாள்;
குழையார் செவியொடு கோலக் கயற்கண்கள் கூடியவே. **59**

---

*(கணைகளுக்கு) அவைகளைச் செயற்படாதபடி கட்டி வைக்கின்ற கயிறுபோலத் தோன்றுகின்ற பல சடைகளையுடைய எம்பெருமானார்க்கு அன்பு செய்த எங்கள் மகளுக்கு இடையில் உடுத்துள்ள உடையும், கையில் அணிந்துள்ள வளையல்களும் அவளை விட்டு நீங்கிப் போய்விட்டன. வாள் போன்ற கண்களில் தீட்டப்பட்டுள்ள மையோடு வீழ்கின்ற கண்ணீர்த் துளிகள் மார்பிடையே தாரையாய்ப் பாய்கின்றன. ஆகவே, அறவோர் கூறும் மெய்ம்மொழி இவள்பால் மெய்யாகிவிட்டது.*

*குறிப்புரை :- அம்மொழியாவது 'பற்றற்றான் பற்றினைப் பற்றினால் மற்றைய எல்லாப் பற்றுக்களும் அற்றுவிடும்'[1] என்பது*

*பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றிஅப்*
*பற்றை அறுப்பர்என் றுந்தீபற[2]*

*என்னும் திருவுந்தியாரையும் காண்க. வேள் - மன்மதன். கர பத்திரம் - கை வாள். அது பொதுவே 'படைக்கலம்' என்னும் பொருட்டாய்க் கணையைக் குறித்தது. மன்மதனது குறும்பு சடையையுடைய யோகிகள்பால் செல்லாமை பற்றிச் சிவபெருமானது சடைகளை அவனது கணைகளைக் கட்டிப் போடுகின்ற கயிறாக உவமித்தார். 'வேங்கைக் கர பத்திரத்துக்கு' என்பது முதலாகத் தொடங்கி, 'அந்தணர் வாய்மை ஆயின' என மாற்றி, இறுதியில் வைத்து உரைக்க "அந்தணர்" என்றது அறவோரை. 'வாய்மை' என முன்னர் வந்தமை யால் பின்னும் அதனைக் கூறாது வாளா "ஆயின" என்றாள். இது காதலால் நலிகின்ற தன் மகளது நிலைமை கண்டு செவிலி இரங்கிக் கூறியது ஆகலின், அந்தணர் வாய்மையைப் புகழ்ந்தது வஞ்சப் புகழ்ச்சியாம். எனினும் அடியவர் நோக்கில் உண்மையே உள்ளுறைப் பொருளில் செவிலி, உலகர்.*

*227. பொழிப்புரை :- மூங்கில்கள் நிறைந்துள்ள 'திருக்கழுக்குன்றம்' - என்னும் மலைமேல் வாழ்கின்றவனும், வரையறைப் படாதவனும் ஆகிய*

---

*1. திருக்குறள் - 350*
*2. உந்தி - 15*

**228.** **கூடிய தன்னிடத் தானுமை யாளிடத் தானைஐயாறு)**
**ஈடிய பல்சடை மேற்றெரி வண்ணம் எனப்பணிமின்**
**பாடிய நான்மறை பாய்ந்து கூற்றைப் படர்புரஞ்சுட்(டு)**
**ஆடிய நீறுசெஞ் சாந்திவை யாமெம் அயனெனவே.** **60**

---

*சிவபெருமானை இவள் காதலித்தாள்; அஃது எங்ஙனமெனின், இவளது அழகிய கண்கள் குழை பொருந்திய காதுகளுடன் சென்று சேர்ந்தன. ('நன்றாகத் தன் கண்களை உருட்டி இவள் சிவபெருமானை நோக்கினாள்' - என்றபடி) அதனால் அணிகள் நிறைந்த, அழகிய இவளது கொங்கைகள் மிகவும் பூரித்தலால் இவளுடைய இடை கொங்கைகளைச் சுமக்க மாட்டாது ஒடிந்து கொண்டிருக்கின்றது. அஃது அறவே ஒடிந்துவிட்டால், இவள் பிழைக்க மாட்டாள் (என்பதைச் சொல்ல வேண்டுமோ! காதலால் இவள் உடம்பு பூரித்தலை, 'நமக்குக் கட்டுப்பட்டு அடங்குவதாக' என நாம் சொல்வது வெறும் பேச்சே.*

*குறிப்புரை :- 'அதனால் நாம் சிவபெருமானிடம் சென்று முறையிட்டுக் கொள்வதே வழி' என்பது குறிப்பெச்சம். இதுவும் மேற்கூறிய துறையே. திரிபின்றி உறைத்த பத்தியுடையவரது நிலைமையை உணரும் பொழுது உலகவர் தம் செயல் அற்று அவர்வழி நிற்றல் இதன் உள்ளுறை. கண்ணப்பர் அடைந்த நிலைமைக்கு முதலில் வருந்தித் தெரிவிக்க முயன்ற தந்தை நாகனும், பிற வேடர்களும் பின்னர்ச் செயலற்றுத் திரும்பினமை இதற்கு எடுத்துக்காட்டாகும். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. அகண்டனை, 'கண்டன்' என்றது தலைக்குறை. "காதலித்தாள்" என்பதன் பின், 'எங்ஙனம் எனின்' என்பது வருவிக்க. 'கண்கள் செவியொடு கூடின' என்றது நன்றாகப் பார்த்தமையைக் குறிப்பால் உணர்த்தியது. வீங்கி - வீங்குதலால். ''பிழையாள்'' என்பதன் பின் இசையெச்சம் வருவிக்கப்பட்டது. கொல், ஆம் அசைகள். கழை - மூங்கில் புதர்.*

*228. பொழிப்புரை :- உமையவளை விரும்பிக் கூடிய தன் திருமேனியில் அவளை இடப்பாகத்தில் உடையவனைத் திருவையாற்றுத் தலத்தில் சென்று, 'இவன் பாடியன நான்கு வேதங்கள், வெகுண்டு கொன்றது கூற்றுவனை; எங்கும் செல்வனவாகிய கோட்டைகளை எரித்துப் பூசிக்கொண்ட சாம்பலே இவனுக்கு நல்ல சந்தனம்; ஆகலின் இவன் எங்கள் சிவபெருமானே' என அடையாளம் கண்டு, 'நெருப்பினது நிறம் இவன் தலையிலே உள்ள பல சடைகளிலும் உள்ளது' எனச்சொல்லி வணங்குங்கள்.*

*குறிப்புரை :- 'வணங்கினால் பயன் பெறுவீர்' என்பது குறிப்பெச்சம். "இடத்தான்" என இரண்டில் முன்னது, ஏழாவதன் பொருளில் வந்த மூன்றன் உருபை ஏற்ற பெயர். அம்மூன்றன் உருபு, பின் வந்த, "இடத்தான்" என்னும் குறிப்பு வினையொடு முடிந்தது. இடத்தான் - இடப்பாகத்திலே உடையவன். 'ஐயாற்றின் கண்' - என உருபு விரிக்க. 'ஈண்டிய என்பது இடைக்குறைந்து, "ஈடிய"*

**229.** அயமே பலியிங்கு; மாடுள தாணுவோர் குக்கிக்கிடப்
பயமே மொழியும்? பசுபதி ஏறெம்மைப் பாய்ந்திடுமால்;
புயமேய் குழலியர் புண்ணியர்; போமின் இரத்தல்பொல்லா;
நயமே மொழியினும் நக்காம் அம்மாவும்மை நாணுதுமே. **61**

---

*என வந்தது. ஈண்டுதல் - நெருங்குதல், பின் இரண்டு அடிகள் அடையாளம் காட்டின. ஆம் - இவன்பால் உள்ளன. இதன்பின், 'ஆகலின், இவன்' எனவும், "எம் அயன்" என்பதன்பின் 'கண்டு' எனவும் வேண்டும் சொற்கள் வருவித்து, 'எரி வண்ணம் சடை மேற்று எனப் பணிமின்' என முடிக்க. ஐயன், 'அயன்' எனப் போலியாய் வந்தது.*

*229. **பொழிப்புரை :-** தாணுவே, (தலைவரே) நீர் இனிய வார்த்தை களையே பேசிய போதிலும், உமது கோலம் திகம்பரமாய் (நிருவாணமாய்) உள்ளது. அதனால் உம்மைக் காண நாங்கள் வெட்கப்படுகின்றோம். அதனால், உம்முடைய வயிற்றுக்கு இட வேண்டுவது போல இங்கு நீர் பிச்சை ஏற்க வந்த செயலும் ஐயத்திற்கு உரியதே. 'பிச்சையிடு மின்; இட்டால் உங்கட்குப் புண்ணியம்' என்பன போல், 'நீவிர் சொல்லும் சொற்களும் உண்மைதாமோ' என ஐயுற வேண்டியுள்ளது. இவைகிடக்க, நீர் ஏறி வந்திருக்கின்ற, பசுக்களுக்கெல்லாம் தலையாய எருது எங்களைப் பாய வருகின்றது. ஆகவே, தங்கள் தோள்களின் மேல் நீர் பொருந்த இசைகின்ற மகளிர்தாம் உண்மையில் புண்ணியம் செய்பவராவர் (பிச்சையிடுவோர் புண்ணியரல்லர்) இப்படி நீர் பிச்சையெடுப்பது தீதாகும். இவ்விடத்தை விட்டுப் போய்விடுங்கள்.*

*<u>**குறிப்புரை :-**</u> இது, பிச்சைக் கோலத்தவராய்ச் சென்ற பெருமானைக் கண்டு காதலித்த மடவார் கூற்று, உண்மையில் அவரைக் கண்டு அவர்கள் நாணமும், வெறுப்பும் கொண்டவராயின் பொருக்கென இல்லத்துக்குள் போய்விட வேண்டியவர் தாமே? அதை விடுத்துப் பல வார்த்தைகளை விரிப்பது ஏன்?*

*'தாணு' என்பது விளி. அது பன்மையொருமை மயக்கமாய் நின்றது. குக்கி (குட்சி) = வயிறு. 'குச்சிக்கு இட இங்குப் போந்த பலி (ஏற்றல் செயல்) ஐயமே' என்க. ஐயம், "அயம்" எனப் போலி யாயிற்று. 'மாடு உளஏறு, பசுபதியாம் ஏறு' எனத் தனி இயைக்க. மாடு - பக்கம். 'உம் பக்கம்' என்றபடி. பயமே - பொருள் உடையனதாமோ? ('உண்மையோ' - என்றபடி). "குழல்" என்னும் விதப்பினால் 'வார் குழல்' (நீண்ட கூந்தல்) எனக் கொள்க. "ஏய குழலியர்" என்றது, 'ஏய இசையும் குழலியர்' என்றபடி. 'குழலியரே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. 'அவரே புண்ணியர்' என்றது, 'அந்தப் புண்ணியச் செயலை விரும்பித்தான் நீர் வந்தீர்; பிச்சையிடும் புண்ணியச் செயலை விரும்பி வந்தீர்' என்றபடி. அதை, "புண்ணியம்" என்றது வஞ்சப் புகழ்ச்சி. "இரத்தல்" என்பதன் முன், 'இவ்வாறு' என்பது ஆற்றலால் வந்து இயைந்தது. 'பொல்லாது' என்பதன் ஈறு தொகுத்தலாயிற்று. 'அம்மா' என்னும் அச்சக்குறிப்பு இடைச்சொல் இடைக்*

**230.** நாணா நடக்க நலத்தார்க் கிடையில்லை நாமெழுக;
ஏணார் இருந்தமி ழார்மற வேனுந் நினைமினென்றும்,
பூணார் முலையீர் நிருத்தன், புரிசடை எந்தைவந்தால்
காணா விடேன்கண் டிரவா தொழியேன் கடிமலரே. **62**

---

*குறைந்து, "அமா" என வந்தது. 'சிவன் பிச்சை ஏற்பது, உயிர்களைத் தன்பால் சேர்த்து கொள்ளுதற் பொருட்டே' என்பது இதன் உட் கருத்து. அயம் - புண்ணியம். குக்கி - வயிறு.*

*230. **பொழிப்புரை :-** அணிகலன்கள் பொருந்திய தனங்களையுடைய தோழியர்களே, (உங்கள் உதவியை நாடாது) "நாமே செல்வோம்" என்றால் (நாணம் தடுக்கின்றது) நாணம் உண்டாகாதபடி செல்லச் சமையம் வாய்க்கவில்லை. நடனம் புரிபவரும் புரியாகிய சடைகளையுடையவரும், உலகர் எல்லாராலும் 'எம் தந்தை' என்று போற்றப்படுபவரும் ஆகிய சிவபெருமான் (இங்கு வருவார்) வந்தால், நான் அவரைக் காணாமல் இருந்துவிடமாட்டேன். கண்டு, 'உம்மையான், உம்மை அகப்படுத்தவல்ல பெரிய தமிழாற்பாடி மறவாதிருக்கின்றேன்; இதை நினைமின்' என்று சொல்லி அவர் அணிந்துள்ள வாசனை பொருந்திய மலர் மாலையை இரந்து வாங்கவும் செய்வேன்.*

***குறிப்புரை :-*** *'முலையீர், 'நாம் எழுக' என்றால் நாணாது நடக்க இடையில்லை' என மாற்றி ஒரு சொல் வருவிக்க. 'நாணாது' என்பது கடைக் குறைந்தது. இடை - சமையம். எண் - வலிமை, இருமை - பெருமை. அஃது இங்கு விரிவைக் குறித்தது. 'சிவபெருமான் தமிழ் விருப்பன்' என்பதை, "நீர் தமிழோடு இசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர்"[1] என்பது முதலியவற்றால் அறிக. 'தமிழாற் பாடி' எனவும் ஒருசொல் வருவிக்க. 'உம்மை மறவேன்' என உருபு விரித்து மாற்றுக. "என்றும்" என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மையைப் பிரித்து, 'இரவாது' என்பதனுடன் கூட்டுக.*

*இது தூதுவிடக் கருதிய, தோழியரோடு, புலந்து கூறியது, இது வாயிலாக, தமிழாற் பாடுவோரைச் சிவபெருமான் மிக விரும்புதல் குறிக்கப்பட்டது. "தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்"[2] என்பது முதலியவற்றையும் காண்க.*

*231. **பொழிப்புரை :-** (நாளை இங்கு வருகின்ற சிவபெருமான் என்னைத் துறவாமைக்கு அடையாளமாகத் தனது) வாசனை பொருந்திய கொன்றை மலர்களால் ஆன மாலையை வலிய எனக்குத் தந்தானாயினும் யான் உடல் பொருந்தத் தழுவ மாட்டேன்; எனது உடையை அவன் பற்றவரின் நெருங்க விடமாட்டேன்; என் கூந்தலில் முடிக்கப்பட்டுள்ள மலரைத் தொடும் முறையால் என்னைத் தொட முயல்வானாயின், வெகுண்டு விலக்குவேன், 'கொங்கையை*

---

*1. திருமுறை - 7.88.8*

*2. திருமுறை - 4. 1. 6.*

231. கடிமலர்க் கொன்றை தரினும்புல் லேன்கலை சாரலொட்டேன்
முடிமலர் தீண்டின் முனிவன்; முலைதொடு மேற்கெடுவன்;
அடிமலர் வானவர் ஏத்தநின் றாய்க்(கு) அழ கல்லவென்பேன்;
தொடிமலர்த் தோள்தொடு மேல்திரு வாணை தொடங்குவனே. 63

**பொய்த்துறவு**

232. தொடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே,
அடங்கிய வேட்கை அரன்பால் இலர்அறு காற்பறவை
முடங்கிய செஞ்சடை முக்கண னார்க்கன்றி இங்குமன்றிக்
கிடங்கின்றி பட்ட கராவனை யார்பல கேவலரே. 64

---

*அவன் தொட்டு விட்டால் நான் இறந்து விடுவேன்' (என்பது தோன்றப் புறங் காட்டி நிற்பேன்) பிற குறும்புகளும் செய்வானாயின் 'தேவர் பலரும் உனது திருவடிகளை வணங்க இருக்கின்ற உனக்கு இவையெல்லாம் அழகல்ல' என அறிவுரை கூறுவேன், அவைகளையும் கடந்து அவன், வளையும், மாலையும் பொருந்திய எனது தோள்களை வலாற்கார மாகப் புல்ல வருவானாயின் அவன்மீதே ஆணை வைக்க முயலுவேன்.*

*குறிப்புரை :- 'ஆகலான் நீ கவலற்க' என்பது குறிப்பெச்சம். இது வரைவு கடாவ எண்ணிய தோழியைத் தலைவி உடன் பட்டுக் கூறியது. 'தலைவன் வரைவு நீட்டிப்பின் இருமுது குரவர் பிறர் வரைவுக்கு உடன்படுதல் முதலியன நேரத் தலைவி இறந்துபடுவாள்' எனத் தோழி கவன்று, தலைவனை வரைவு கடாதற்கு விரைதல் இயல்பு. அவ்வழித் தலைவி புணர்ச்சி மறுப்பாள் என்க. அதிதீவிர பக்குவிகள் சத்தியோ நிர்வாணத்தையை விரும்பி வேண்டுதல் இதன் உள்ளுறை. முனிதல் அதன் காரியம் தோற்றி நின்றது. 'தான் இறந்து படின் அவனும் படுவான்' எனத் தலைவி அஞ்சுவாள் ஆதலின், "கெடுவேன்" என்றது, கெடுதலைக் குறிப்பித்தலையேயாம். ஏனையோர்மீது வைக்கும் ஆணைபோலாது சிவன்மீது வைக்கும் ஆணை தலையாயது ஆகலின் "திரு ஆணை" என்றார். ஆணை வைத்து விடின் பின்னர்க் கூட்டம் இன்றாம் ஆகலின், "ஆணை தொடங்குவன்" என்றாள். கலை சாரவொட்டேன் - ஆடையை அவர் மீது பட விடமாட்டேன்.*

*232. பொழிப்புரை :- (இல்லறத்தார் கிடக்க), துறவறத்தை மேற்கொண்டவர் களிலே பலர் அந்தத் துறவறத்தைப் பயனிலதாகப் போக்குவர். எங்ஙனம் எனின், உலகப் பொருள்களினின்றும் நீக்கிய தங்கள் ஆசையை அரன்பால் செலுத்தாது, வேறு எவ்வெப்பொருளிலேயோ செலுத்துதலால். ஆகவே, அவர்கள் சிவனிடத்து அன்பு செய்யாது பிறவிடத்து அன்பு செய்தலால் அம்மைக்கும் உரியராகாது, இவ்வுலகப் பொருள்களைத் துறந்தமையால் இம்மைக்கும் உரியராகாது,*

**மாதிருக்கும் பாதியன் (அர்த்தநாரீசுரத் திருவுருவம்)**

**233.** **வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலமிடமே**
**கலந்தான் வலம்நீ(று) இடம்சாந்து எரிவலம் பந்திடமென்பு**
**அலர்ந்தார் வலமிடம் ஆடகம், வேல்வலம் ஆழியிடம்**
**சலந்தாழ் சடைவலம் தண்ணங் குழலிடம் சங்கரற்கே.** **65**

---

*அகழியுட் கிடக்கும் முதலைபோலத் துன்பத்திற்கு கிடத்தலல்லது, கரையேறாது தமியர் ஆகின்றனர்.*

***குறிப்புரை :-*** *'இந்நிலை இரங்கத் தக்கது' என்பது குறிப்பெச்சம். "துறந்தவரே" என்பதை முதலில் வைத்து, "இலர்" என்பதன் பின் 'ஆகலின்' என்பதனைக் கூட்டுக. அடங்கிய - உலகப் பொருள்மேல் செல்லாது அடங்கிய. அறுகாற் பறவை, வண்டு. அவை முடங்குதல் கொன்றை மலரிடத்து. எனவே, 'கொன்றையைச் சூடிய சடை' என்றபடி. "அன்றி" இரண்டில் முன்னது, 'மாறுபட்டு' என்றதாம். பின்னது, 'உரியராகாமல்' எனப் பொருள் தந்தது. "இங்கும்" என்ற உம்மையால், 'அங்கும்' என்பது பெறப்பட்டது. 'அங்கு, இங்கு' என்பன, 'அம்மை, இம்மை' என்பவற்றைச் சுட்டின. கிடங்கு - அகழி. கரா - முதலை அது கரையேறாமைக்கு உவமை. 'கேவலர் தமியர்' என்பன ஒரு பொருளைக் குறிக்கும். தமியர் - துணையற்றவர். 'உலகப் பற்றை விட்டபோதிலும், மெய்யுணர்வு இல்லையேல் துறவு பயன் இலதாம்' என்றபடி. இதனைத் திருவள்ளுவரும்,*

> *ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே*
> *மெய்யுணர் வில்லா தவர்க்கு[1].*

*என அருளிச் செய்தார். இத்தன்மையோரையே அப்பர் பெருமானும் "இருப்பிறப்பும் வெறுவியர்"[2] என்று அருளினார்.*

*233.* ***பொழிப்புரை :-*** *சிவபெருமானுக்கு வலப்பாதியும், இடப்பாதியும் மாறுபட்டதான வடிவம் உள்ளது. வலப்பாதியும் எங்ஙனம் எனின், வலப்பாதியில் காலில் வீரக்கழல், மார்பில் பாம்பு, சாம்பல், இறந்தவர் எலும்பால் ஆகிய மாலை, கையில் மழு, சூலம், தலையில் நீர் தங்கியுள்ள சடை - இவ்வாறு உள்ளது.*

*இடப்பாதியில் காலில் பாடகம், மார்பில் விலை உயர்ந்த அணிகலம், சந்தனம், பொன்னரி மாலை, கையில் பந்து, மோதிரம், பூச்சூடிய கூந்தல் - இவ்வாறு உள்ளது.*

***குறிப்புரை :-*** *'வலப்பாதி ஆணும், இடப்பாதி பெண்ணு மாய் உள்ளது' என்றபடி. 'இது ஒரு பெருவியப்பு' என்பது குறிப்பெச்சம். 'சிவபெருமானது உருவம், ஏனையோரது உருவம் போன்றதன்று' என்பதாம். அப்பர் பெருமானும்,*

---

1. *திருக்குறள் 354.*
2. *திருமுறை - 6. 3. 5.*

**234.** **சங்கரன் சங்கக் குழையன் சரணார விந்தந்தன்னை**
**அங்கரங் கூப்பித் தொழுதாட் படுமின், தொண் டீர், நமனார்**
**கிங்கரர் தாம்செய்யும் கீழா யினமிறை கேட்டலுமே**
**இங்கரம் ஆயிரம் ஈரவென் நெஞ்சம் எரிகின்றதே.** **66**

*சிவபெருமானது திருவடிகளை, "உருவிரண்டும் ஒன்றோடொன்றொவ்வா அடி"[1] என்று அருளினார். செய்யுள் நோக்கிச் சிலவற்றை முறை பிறழ வைத்தார். "எரி" என்றது மழுவை. சலம் - நீர். தாழ்தல் - தங்குதல்.*

*அர்த்தநாரித் திருவடிவம் (மாதொர் பாகன்)*

| உடல் | வலம் (சுவாமி பாகம்) | இடம் (அம்பாள் பாகம்) |
|---|---|---|
| கால் | வீரக்கழல் | பாடகம் |
| மார்பு | பாம்பு | மேகலை (அணிகலன்) |
| | சாம்பல் | சந்தனம் |
| | எலும்பு மாலை | பொன்னரி மாலை |
| கை | மழு | பந்து |
| | சூலம் | மோதிரம், சக்கரம் |
| தலை | கங்கை தங்கிய சடை | பூச்சூடிய கூந்தல் |

*234. **பொழிப்புரை :-** தொண்டு மனப்பான்மை யுடையவர்களே, யமகிங்கரர்கள் (தூதுவர்கள்) சிவபெருமானுக்கு ஆட்படாதவர்கட்குச் செய்யும் இழிவான பல துன்பங்களை நூல்கள் வாயிலாகக் கேட்டவுடன் இவ்வுலகத்திற்றானே எனது மனம் ஆயிர அரங்களால் அராவுவது போலத் துன்பத்தால் வெதும்புகின்றது. ஆகவே, நீவிரும் பிற தொண்டுகளை விடுத்து, சுகத்தைச் செய்தலால், 'சங்கரன்' எனப்பெயர் சொல்லப்படுகின்ற, சங்கக் குழையணிந்த செவியையுடைய சிவபெருமானுடைய திருவடித் தாமரையை அகங்கைகளைக் குவித்துக் கும்பிட்டு, அவனுக்கே ஆளாகித் தொண்டு செய்யுங்கள்.*

***குறிப்புரை :-** 'செய்தால், யமகிங்கரர் அணுகார்' என்பது குறிப்பெச்சம். மிறை - துன்பம். கீழாயின மிறை. அருவருக்கத் தக்க துன்பம். அரம் - இரும்பையராவும் கருவி.*

*235. **பொழிப்புரை :-** சிவபெருமானுக்கு அவனது சடை எரிகின்ற தீயைப் போலவும், அந்தச் சடையில் பொழிகின்ற நீர் அந்தத் தீயை அணைப்பதற்காகத்*

1. *திருமுறை - 6. 6. 6*

**235.** எரிகின்ற தீயொத் துளசடை, ஈசற்(கு)அத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது சூழ்புனல் அப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணியொக் கின்ற(து)அத் தோணியுய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுள தாலத் திறலரவே. **67**

**236.** அரவம் உயிர்ப்ப அழலும் அங்கங்கை வளாய்க்குளிரும்
குரவங் குழலுமை ஊடற்கு நைந்துரு கும்அடைந்தார்
பரவும் புகழண்ணல் தீண்டலும் பார்வா னவைவிளக்கும்
விரவும் இடரின்பம் எம்மிறை சூடிய வெண்பிறையே. **68**

---

*தேவர்கள் ஊற்றுகின்ற பாற்கடல் பால் போலவும், அந்த நீரில் மிதந்து செல்கின்ற பிறை ஒரு தோணிபோலவும், அந்தப் பிறையை சூழ்கின்ற திறமையுடைய பாம்புகள் அந்தத் தோணியை இயக்குதற்குத் தெரிந்தெடுத்த உறுதியான மூங்கில் போலவும் உள்ளன.*

*குறிப்புரை :- மாலையுவமை. திங்கட் கதிரால் நீர் வெண்ணிறம் பெற்றது. இது சிவபெருமானது தலைக் கோலத்தைப் புகழ்ந்தவாறு.*

*236. பொழிப்புரை :- எங்கள் கடவுளாகிய சிவபெருமான் முடியில் சூடியுள்ள வெள்ளிய பிறை, அங்குள்ள பாம்பு தன்னை நோக்கிச் சீறும் பொழுது தான் கோபத்தால் தணலாய் எரியும். அங்குள்ள அழகிய கங்கை பாயும்பொழுது குளிர்ச்சியடையும். குராமலரைச் சூடியுள்ள கூந்தலையுடைய உமையவள் ஊடல் கொள்ளும் பொழுது, தன்னை அடைந்தோரால் துதிக்கப்படுகின்ற சிவபெருமான் (உமை அறியாத படி) தன்னைக் கையால் தீண்ட, தான் நைந்து உருகி உமையவள்மேல் தனது கதிர்களைப் பொழியும். மற்றைய நேரங்களில் நிலத்தையும், வானத்தையும் இருள் நீங்க ஒளி பெற்று விளங்கச் செய்யும். ஆகவே, அது துன்பத்தையும், இன்பத்தையும் மாறி மாறி அடைவதாகின்றது.*

*குறிப்புரை :- திங்களின் கதிர்கள் காதலை மிகுவித்தலால் உமையவள் ஊடல் தணிவாளாவள். அதன் பொருட்டுத் திங்களைத் தூண்டச் சில சொற்களைச் சொல்லின் உமை மேலும் வெகுள்வாள் ஆதலின், குறிப்பால் தூண்டச் சிவபெருமான் தனது கையால் தீண்டுவான் என்க. இவ்வாறு செய்தல் உலக வழக்கம். இது சிவபெருமானது தலைக்கோலத்துள் பிறை ஒன்றனையும் புகழ்ந்தவாறு. "வளாய்" என்பதனை 'வளாவ' எனத் திரிக்க.*

*237. பொழிப்புரை :- (மகளிர்) இவள் (தலைவி) சிவன் பின்னே குறையிரந்து செல்லத் துணிந்தது அவன் சூடியுள்ள பிறையைத் தான் சூட விரும்பியோ - (அவனுடன் சென்று) பிச்சை ஏற்றுப்பின் அவனோடு கூடத் தீயில் நின்று ஆட விரும்பியோ - அவனோடு இணைந்து கண்டத்தினின்றும் சாமவேதம் பாட விரும்பியோ - அவன் அணிகின்ற எலும்பு மாலையையும், பூசுகின்ற சாம்பலையும் தானும் அணியவும், பூசவும் விரும்பியோ - அவனுடைய கருமையான கழுத்தைக்*

**237.** பிறைத்துண்டஞ் சூடலுற் றோபிச்சை கொண்டனல் ஆடலுற்றோ
மறைக்கண்டம் பாடலுற் றோவென்பும் நீறும் மருவலுற்றோ
கறைக்கண்டம் புல்லலுற் றோகடு வாயர வாடலுற்றோ
குறைக்கொண் டிவளரன் பின்செல்வ(து) என்னுக்குக் கூறுமினே. **69**

**நெறிப்படுத்தல்**

**238.** கூறுமின் ஈசனைச் செய்ம்மின்குற் றேவல் குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின் சிவனைச் செறுமின்செற்றம்
ஆறுமின் வேட்கை அறுமின் அவலம் இவைநெரியா
ஏறுமின் வானத்(து) இருமின் விருந்தாய் இமையவர்க்கே. **70**

---

*கட்டித் தழுவ விரும்பியோ - அவன் தன்மேல் ஆடவிட்டுள்ள நஞ்சு பொருந்திய வாயினையுடைய பாம்புகளைத் தன்மேலும் ஆட விட்டுக்கொள்ள விரும்பியோ - 'எதனை விரும்பி' என்பதை எனக்கு நீவிர் கூறுமின்.*

*குறிப்புரை :- இது, செவிலி தலைவியது வேறுபாடு கண்டு இரங்கி ஆயத்தாருடன் கூறியது. அவளால் காதலிக்கப்பட்ட சிவனைச் செவிலி தலைவியை ஆற்றுவித்தற்கு இயற்பழித்துக் கூறினாள். மெய்யுணர்வில்லாதார் சிவனது கோலங்களை இகழ்தலைக் குறித்தல் இதன் உள்ளுறை.*

*இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்*
*இவரை இகழ்வதே கண்டீர்*[1]

*என மேல் வந்த அம்மை திருவாக்கினைக் காண்க. "செல்வது" என்பது எதிர்காலம். ஆதலின் அது செல்லத் துணிந்தமையையே குறித்தது. பின் செல்லல், வழிப்படுதலைக் குறித்த குறிப்பு மொழி. 'இது துணிந்தவள் உடன் போக்கிற்கும் உடன் படுவாள்' என்பது கருத்து.*

*238. பொழிப்புரை :- (உலகீர்; நீவிர் நும்செயல்களை விடுத்து). சிவனைத் துதியுங்கள்; அவனுக்கு அணுக்கராய் நின்று சிறிய பணி விடைகளைச் செய்யுங்கள். (அன்பினால் நீர் துளித்தலால்) கண்கள் குளிர்ச்சியடையுங்கள்; மனத்தை ஒரு நிலையில் நிறுத்துங்கள்; 'சிவனே முதல்வன்' - என அவனைத் தெளியுங்கள்; எவரிடத்தும் பகைமை கொள்ளுதலைத் தடுங்கள்; ஆசையை அடக்குங்கள்; துன்பத்தினின்றும் நீங்குங்கள்; இவைகளையே வழியாகப் பற்றி வானுலகில் ஏறுங்கள்; ஏறியவராய் அங்கு வானத்தவர்க்கு எய்தற் கரிய விருந்தினராய் அங்கு அவர் உபசரிக்க வீற்றிருங்கள்.*

*குறிப்புரை :- குற்றேவலே கிரியா பூசையாகச் சொல்லப்படுகின்றது. "ஏறுமின்" என்றது குறிப்புருவகம். உலகியலில் நிற்போரை நோக்கிக் கூறினார். ஆகலின், 'அவரது விருப்பமும் இவற்றால் நிறைவுறும்' என்றற்கு, "வானத்து*

---

*1. அற்புதத் திருவந்தாதி - 29*

**239.** இமையோர் கொணர்ந்திங் கிழித்திட நீர்மைகெட்(டு) ஏந்தல்பின்போய்
அமையா நெறிச்சென்றோர் ஆழ்ந்த சலமக ளாயணைந்தே
எமையா ளுடையான் தலை மகளாவங் கிருப்பவென்னே
உமையா ளவள்கீழ் உறைவிடம் பெற்றோ உறைகின்றதே. **71**

**யாக்கையின் இழிபுரைத்து வழிப்படுத்துதல்**

**240.** உறைகின் றனரைவர் ஒன்பது வாயிலோர் மூன்றுளவால்
மறைகின்ற என்பு நரம்போ டிறைச்சி உதிரம்மச்சை
பறைகின்ற தோல்போர் குரம்பை பயனில்லை போயடைமின்
அறைகின்ற தெண்புனல் செஞ்சடைக் கொண்டோன் மலரடிக்கே. **72**

---

*விருந்தாய் இருமின்" என்றார். '<u>சிவ வழிபாடே எல்லாப் பயன்களையும் தரும்</u>' என்பது கருத்து.*

*239. பொழிப்புரை :- (கங்கையானவள் தான் வானுலகத்திலே இருக்கவும்) தேவர்கள் கொணர்ந்து நிலத்திலே இறக்கிவிடத் தன் தன்மை கெட்டு, (ஆகாயகங்கை' என்னும் சிறப்பு நீங்கி). ஓர் அரசன் பின்னே சென்று, தனக்கு ஏற்றபுடைத்தாகாத வழியிலே நடந்து, பின்பு ஓர் ஆழமான ஆற்றுவடிவத்தை அடைந்து, தனது கரையில் எம்மை ஆளுடையானாகிய சிவன் தலைவனாய் வீற்றிருக்க, அதனால் அவன் தேவி உமையவள் தலைவியாய் இருத்தலால் அவருக்குக் கீழே ஓர் உறைவிடம் பெற்றோ இருப்பது! (இஃது என்ன முறை!)*

*குறிப்புரை :- சிவன் ஆகாய கங்கை மண்ணில் வந்து காசியில் சிறந்த புண்ணிய நதியாய் இருக்கச் செய்து, அதன் கரையில் தானும், தன் தேவியும் வீற்றிருந்து அங்குச் சென்று அந்த கங்கையில் முழுகித் தன்னை வழிபட்டவர்களது பாவங்களைப் போக்குதலும், இறந்தவர்களுக்கு வீடுபேற்றைத் தருதலும் ஆகிய அருட் செயல்களைக் கங்கையின் பொருட்டு இரங்குவாரைப் போலக் கூறியவாறு. காசிக் கங்கை நதியின் பெருமையும் இதனால் குறிக்கப்பட்டது. "ஏந்தல்" என்றது பகீரதனை. அமையா நெறி, தரை வழி. பகீரதன் கங்கையைக் கொணர்ந்த வரலாற்றினை இராமாயணம் முதலியவற்றிற் காண்க. "இமையோர்" என்பது பிரமன் ஆணையைப் பெற்ற தேவர்களை. 'கெட்டு, ஆய் அணைந்து, உறைகின்றது' - என்பவற்றிற்கு, 'கங்கை' என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க. "சலமகளாய்" என்றது, 'நதி வடிவாய்' என்றபடி. அமையாநெறி - பொருந்தா வழி.*

*240. பொழிப்புரை :- (உலகீர்) விரிந்து கிடக்கின்ற தோலாகிய கூரை வேய்ந்த சிறு குடிலாகிய இந்த உடம்பில் அக்கூரையால் எலும்பும், நரம்பும், இறைச்சியும், குருதியும், மச்சையுமாகிய கட்டுப் பொருள்கள் வெளித்தோன்றாது மறைந்து கிடக்கின்றன. (வெளித் தோன்றினால் அருவருப்பைத் தரும்). இந்தச் சிறுகுடிலுக்கு வாயில்களோ ஒன்பது உள்ளன. (ஆகவே பாதுகாப்பில்லை). இதில்*

**241.** **அடிக்கண்ணி கைதொழு தார்க்(கு)அகன் ஞாலங் கொடுத்தடிநாய்**
**வடிக்கண்ணி நின்னைத் தொழவளை கொண்டனை வண்டுண்கொன்றைக்**
**கடிக்கண்ணி யாயெமக்(கு) ஓரூர் இரண்டகங் காட்டினையால்**
**கொடிக்கண்ணி மேல்நல்ல கொல்லே றுயர்த்த குணக்குன்றமே. 73**

---

***பண்டங்கள் மூன்றே உள்ளன. அவைகளை முன்னிட்டு இதில் ஐந்துபேர் வாழ்கின்றனர். (ஆகவே, இதில் உங்கட்குப் பயன் எப்படிக் கிடைக்கும்) கிடையாது, ஆகையால், ஒலிக்கின்ற, தெளிவாகிய நீரைச் சிவந்த சடையிலே வைத்துள்ள சிவபெருமானது மலர்போலும் திருவடிகளை நோக்கிச் சென்று, அவற்றையே அடைமின்கள்.***

*குறிப்புரை :- ஐவர் - ஐம்புல ஆசைகள். மூன்று - வாத பித்த சிலேத்து மங்கள். மச்சை - பித்த நீர். "போர் குரம்பை", இறந்தகால வினைத்தொகை. 'குரம்பையில்' என உருபு விரித்து, 'என்பு முதலியன மறை கின்ற' என்க. மறைகின்ற, அன்பெறா அகர ஈற்றுப் பலவின்பால் வினை முற்று. 'யாக்கையது நிலையாமையையும், துன்ப மிகுதியையும் உணர்ந்து இதன்மேல் உள்ள பற்றினை விடுத்துச் சிவனது திருவடிகளைப் பற்றல் வேண்டும்' என்றபடி. போதல் பற்று விடுதலையும், அடைதல் பற்றுதலையும் குறித்தன. 'உடம்பினால் வரும் துன்பத்தினை எண்ணாமல் அதன்மேல் மக்கள் பற்றுச் செய்கின்றனர்' என்பதைத் திருவள்ளுவர்,*

> *இழத்தொறூஉங் காதலிக்கும் சூதேபோல் துன்பம்*
> *உழத்தொறூஉங் காதற் றுயிர்.*[1]

*என்பதனால் உணர்த்தினார்.*

***241. பொழிப்புரை :-*** *வண்டுகள் தேனை உண்கின்ற கொன்றை மலரால் ஆகிய, நறுமணம் பொருந்திய கண்ணியைச் சூடியுள்ளவனே, நீ, உனது திருவடியை விரும்பி உன்னைக் கையால் தொழுதவர்கட்கெல்லாம் பெரிய இவ்வுலகத்தையே பரிசிலாகக் கொடுத்து, உனது அடிக்கீழ் கிடக்கும் நாய்போன்ற, மாவடு ஒத்த கண்களையுடைய இவள் நின்னைத் தொழ, (இவட்கு ஏதும் கொடாமல்) இவள் அணிந்திருந்த வளையல்களையும் கொண்டுவிட்டாய். கொடியை உயர்த்துக் கட்டும் கயிற்றில் அறமாகிய இடபக் குறியை உயர்த்துள்ள குணமலை போல்பவனே, எங்களைப் பொறுத்தமட்டில் ஓர் ஊரில் இரண்டு இல்லங்களைக் காட்டுதல் போலும் செயலைச் செய்தால்; (இது நீதியோ!).*

***குறிப்புரை :-*** *"அடிக்கண்ணி" என்பதில் ககர ஒற்று எதுகை நோக்கி விரிந்தது. "கண்ணி" - நான்கில் முதலாவது 'கருதி' என்றும், இரண்டாவது, 'கண்களையுடையவள்' என்றும், மூன்றாவது, 'முடியில் அணியும் மாலை' என்றும், இறுதியது 'கயிற்று முடி' என்றும் பொருள் தந்தன. ஓர் ஊரில் இரண்டு சுகம் -*

---

*1. திருக்குறள் - 940.*

**அற்றவர்க்கற்ற சிவன்**

**242.** **குன்றெடுத் தான்செவி கண்வாய் சிரங்கள் நெரிந்தலற**
**அன்றடர்த்(து) அற்றுகச் செற்றவன் அற்றவர்க் கற்றசிவன்**
**மன்றிடைத் தோன்றிய நெல்லிக் கனிநிற்ப மானுடர்போய்**
**ஒன்றெடுத் தோதிப் புகுவர் நரகத் துறுகுழியே.** **74**

---

*'வேண்டுபவர்க்கு' என்று எல்லா நலங்களும் நிறைந்த ஓர் இல்லமும், 'வேண்டாதவர்க்கு' என்று ஒன்றும் இல்லாத ஓர் இல்லமுமாக அமைத்தல். ஓர் இல்லமேயிருப்பின் வேற்றுமையில்லை. அதனால், 'இரண்டகம்' என்று சொன்னாலே, 'வேண்டாதவர்கட்கு' என்று வேறு இல்லம் அமைப்பதையே குறித்தல் வழக்கு. 'உண்ட வீட்டிற்கே இரண்டகம் செய்யாதே' என்பர். நன்மை, அறம். ''கொல்லேறு'' என்றது இன அடை. 'ஏனையோர்க் கெல்லாம் அருள்செய்து, இவளைக் காதலால் வருந்தவிட்டாய்' என்பது கருத்து. இது தலைவியது ஆற்றாமை கண்டு செவிலி இரங்கிக் கூறியது. 'மாணிக்க வாசகர் போலச் சிவனை அடைதலில் வேட்கை மிக்காரைச் சிவன் இவ்வுலகத்தில் வைத்தல் என்னை' என உலகத்தார் இரங்கி ஆராய்தல் இதன் உள்ளுறை.*

*242. **பொழிப்புரை :-** தான் வீற்றிருக்கும் மலையைப் பெயர்த்த இராவணனை அன்று அவன் தனது காது, கண், வாய், தலை எல்லாம் நெரிந்து அவன் 'ஓ' என்று அலறும்படி அடர்த்து, அவனது அகங்காரம் முழுதும் அற்றொழிய அவனை ஒறுத்தவனும், மற்றுப் பற்றுக்கள் எல்லாவற்றையும் விட்டுத் தன்னையே பற்றாகப் பற்றுவோர்க்குத் தானும் தன் பெருமைகளை யெல்லாம் விட்டு அவர்க்கு இரங்கி வந்து எவ்வகையிலும் நலம் புரிபவனும் ஆகிய 'சிவன்' என்னும் அருநெல்லிக்கனி வெளியிடத்திலே தோன்றி நிற்க, மக்கள் அதனை உண்ணாமல் தமக்கு எளிதில் தெரிந்ததை எடுத்துச் சொல்லி இறப்பிற்கு ஆளாகிப் பின்பு மிக ஆழ்ந்த குழியாகிய நரகத்திலும் வீழ்கின்றனர்.*

*குறிப்புரை :- 'இஃது அவரது அறியாமையின் நிலை' என்பது குறிப்பெச்சம். 'நிக்கிரகமும், அநுக்கிரகமும் செய்யவல்ல முழுமுதல்' என்பதை முதல் இரண்டடிகள் குறித்தன. "அற்றவர்க்கு அற்ற சிவன் உறைகின்ற ஆலவாய்"[1] என்ற திருஞானசம்பந்தர் திருமொழி காண்க. சிவன் அற்றவர்க்கு அற்றவன் ஆதலை, வன்றொண்டருக்கு இருமுறை தூது நடந்தமை முதலியன பற்றி அறிக. செவி, கண் முதலியவற்றை விதந்தோதியது, அவை அளவின் மிக்கிருந்தமை குறித்தற்கு. நெல்லிக்கனி, ஔவை உண்ட நெல்லிக்கனி போல்வது. 'சிவனை அடைந்தால் இறப்பில்லை' என்பதை அது குறித்தது. ஒன்று - எளிதாகிய ஒன்று. அது சிவனது கோலம். 'அந்தக் கோலத்தின் மெய்ம்மையறியாது இகழ்ந்து, நரகுறுகின்றனர்' என்றபடி. 'உறுகுழி' 'நரகத்துப் புகுவர்' என மாற்றியுரைக்க. உறு - மிகுதி.*

---

1. *திருமுறை - 3. 120. 2*

**243.** **குழிகண் கொடுநடைக் கூன்பற் கவட்டடி நெட்டிடையூன்**
**உழுவைத் தழைசெவித் தோல்முலைச் சூறை மயிர்ப்பகுவாய்த்**
**தெழிகட் டிரைகுரல் தேம்பல் வயிற்றுத் திருக்குவிரற்**
**கழுதுக் குறைவிடம் போல் கண்டன் ஆடும் கடியரங்கே.** **75**

---

*243. பொழிப்புரை :- யாவர்க்கும் தலைவனாகிய சிவன் ஆடுகின்ற விளக்கமான அரங்கமாவது, ஆழமான கண்களையும், வேகமான நடையினையும், வளைவான பிளவுபட்ட பாதங்களையும் நீண்ட இடையினையும், ஊன் தின்னும் புலி தொங்குகின்ற விரிந்த செவிகளையும், வெறுந் தோலாய்த் திரைந்த கொங்கைகளையும், பரட்டை மயிரினையும், பிளந்த வாயினையும், 'கட்டு, உதை' என்று அதட்டி இரைகின்ற குரலையும், ஒட்டிய வயிற்றையும், முறுக்கிய விரல்களையும் உடைய பேய்களுக்கு உரிய உறைவிடந்தான் போலும்!*

*குறிப்புரை :- 'வேறு இடம் இல்லையோ' என்பது குறிப்பெச்சம்' இங்குக் குறிக்கப்பட்ட இடம் முதுகாடு' என்பது தெளிவு. 'முதுகாடு' என்பது உண்மையில் அனைத்தும் ஒடுங்கிய முற்றொடுக்க நிலையையும், 'பேய்கள்' என்பது அந்நிலையில் நிகழும் மூன்று வகையான கேவல நிலையில் நிற்கும் ஆன்மாக்களையும் குறிக்கும். அக்கேவலங்களைச் சிவஞான யோகிகளது சிவஞான போத ஆறாஞ் சூத்திரச் சிற்றுரையால் அறிக. இந்நுட்பம் உணர மாட்டாதார் சிவனை உலக முதுகாட்டில் ஆடுபவனாகவே வைத்து இகழ்வர். அவர் அவ்வாறு இகழ்தலையே தாம் இகழ்வதுபோலக் கூறினார். "போல்" என்றதனால், அவனுக்குப் பொன், வெள்ளி, மணி முதலிய நல்லரங்குகளும் உள என்பதனைக் குறிப்பால் உணர்த்துதலும் செய்தார். 'சிவன் ஆடுவது சுடுகாட்டில் என, யார் அக்காட்டினை எத்துணை இகழினும் அனைவரும் இறுதியிற் செல்லும் இடம் அதுவேயாதல் அறியத் தக்கது. இறப்பிற்கு அஞ்சுவோர் யாவரும் சுடுகாட்டை நினைப்பினும் துணுக்குறுவர்; இறவாதவன் ஏன் அதற்கு அஞ்சப் போகின்றான் - "கட்டு" என்பது கூறினமையால் அதற்கு இனமான 'உதை' என்பதும் வருவிக்கப்பட்டது. குழிகண் - ஆழமான கண். கொடுநடை - விரைவான நடை. கவட்டடி - பிளவுபட்ட பாதம். உழுவை - புலி. தோல் முலை - சதை வற்றிய கொங்கை. நெடுஇடை - நீண்ட இடுப்பு. சூறைமயிர் - சுருண்ட மயிர். கழுது - பேய். தெழி இரை குரல் - அதட்டிக் கூறுகின்ற குரல்.*

*244. பொழிப்புரை :- தேன்போலும் மொழியையுடைய என் மகளுக்குச் சோலைகளில் உள்ள அழகிய அன்றிலின் குரலாகிய அரம், தென்றலாகிய ஓர் யமன், திங்களாகிய அழகிய நெருப்பு, மன்மதன் எய்கின்ற ஐந்து மலர்களாகிய அம்பு, பூசப்படுகின்ற சந்தனம் மேலுக்குக் குளிர்வதுபோலக் காட்டி உண்மையில் வெதுப்புகின்ற உட்பகை ஆகியவற்றால் இவள் உயிர் தளர்ந்தாள். இதைக் கண்டு மனம் இரங்காதவர் இல்லை. ஆயினும், தேவர்களது தலைகளையும்,*

**244.** அரம்கா மணியன்றில் தென்றலோர் கூற்றம் மதியம்அந்தீச்
சரம்காமன் எய்யஞ்சு சந்துட் பகையால் இவள் தளர்ந்தாள்
இரங்கா மனத்தவர் இல்லை இரங்கான் இமையவர்தம்
சிரம்கா முறுவான் எலும்புகொள் வானென்றன் தேமொழிக்கே. **76**

**245.** மொழியக்கண் டான்பழி மூளக்கண் டான்பிணி முன்கைச்சங்கம்
அழியக்கண் டானன்றில் ஈரக்கண் டான்தென்றல் என்னுயிர்மேற்
கழியக்கண் டான்துயர் கூரக்கண் டான்துகில் சூழ்கலையும்
கழியக்கண் டான்தில்லைக் கண்ணுத லான்கண்ட கள்ளங்களே. **77**

---

*எலும்புகளையும் மாலையாகவும், அணிகலமாகவும் அணிய விரும்புகின்ற அவன் மனம் இரங்கவில்லை.*

***குறிப்புரை :-*** *'அவனைக் காதலித்த இவள் இந்நிலையை அடைகின்றாள்' என்றபடி. இதுவும் செவிலியின் இரங்கற் கூற்றே. உள்ளுறையும், "அடிக்கண்ணி" என்னும் பாட்டில் கொண்டவாறே கொள்க. 'அழகிய தீ' என்றது, 'பார்ப்பதற்கு அழகாய்த் தோன்றிச் செயலால் வருத்தம் செய்கின்றது' என்றபடி. அன்றில் தன் துணையை அழைத்து வருந்தும் குரல் தனிமைப்பட்ட காதலர்க்கு வருத்தத்தை மிகுவிக்கும். "உட்பகை" என்பதன்பின், 'இவற்றால்' என்று 'இவை' என்பது தொகுத்தலாயிற்று.*

***245. பொழிப்புரை :-*** *தில்லையில் உள்ள சிவபெருமான், என்னைப் பலரும் பழி தூற்றவும், எனக்கு வருத்தம் ஒரு காலைக்கொருகால் மிகவும், முன்கையில் சங்கு வளையல்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகவும், அன்றிலின் குரல் என்னையும், என் உயிரையும் வேறுபடும்படி பிளக்கவும், தென்றல் எனது உயிர்மேல் சினந்து நோக்கவும், இன்ன பல இன்னல்கள் மிகுதிப்படவும், உடையும், மேகலையும், நீங்கிப் போகவும் செய்தான். இவை என்னிடத்துச் செய்த கள்ளச் செயல்கள்.*

***குறிப்புரை :-*** *தலைவி தானும் அறியாதவாறு இவை நிகழ்ந்தமையின், "கள்ளங்கள்" என்றாள். இதன்பின் 'இவை' என்பது எஞ்சி பக்குவிகளைச் சிவன் அவர்களையறியாமலே அவர்களைத் தன்வயம் ஆக்கல் இதன் உள்ளுறை.*

***246. பொழிப்புரை :-*** *(உலகீர்) மனத்தில் வஞ்சனைக்கு இடம் அளிக்காமல் போக்கி, உண்மையாக அடிமைப்படத் தெரிந்தவர்களுடைய உள்ளமாகிய வரைவிடத்தில் வீற்றிருக்கின்ற, மேலானவனாகிய சிவபெருமான் தனது நீண்ட முடியின்மேல் பெருவெள்ளப் பரப்பின் நுரையிலே சூடிய வெள்ளிய பிறையைக் கொள்ளுதற்குச் சூழ்கின்ற பாம்பு ஒன்று இருத்தலைக் கருத்துட் கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *'அஃது, ஒன்றற்கு ஒன்று பகையாகியவற்றைப் பகை யின்றி வாழச் செய்யும் குறிப்பினது ஆதலின், அவனை யடைந்தால் நீங்களும் பகை*

**246.** கள்ள வளாகங் கடிந்தடி மைப்படக் கற்றவர்தம்
உள்ள வளாகத் துறுகின்ற உத்தமன் நீள்முடிமேல்
வெள்ள வளாகத்து வெண்ணுரை சூடி வியன்பிறையைக்
கொள்ள வளாய்கின்ற பாம்பொன் றுளது குறிக்கொண்மினே. **78**

**247.** குறிக்கொண் டிவள்பெய்த கோல்வளை யேவந்து கோளிழைத்தீர்
வெறிக்கொண்ட வெள்ளிலம் போதோ எலும்போ விரிசடைமேல்
உறைக்கொன்றை யோவுடைத் தோலோ பொடியோ உடைகலனோ
கறைக்கண்ட ரேநுமக் கென்னோ சிறுமி கடவியதே. **79**

---

*முதலிய இடர் இன்றி வாழ்வீர்' - என்றபடி. வளாகம் - பரந்த வரைவிடம். 'நுரைக்கண்' என ஏழாவது விரிக்க. 'சூடிய' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. வளாவுதல் - சூழ்தல், 'வளாவுகின்ற' என்பது, 'வளாய்கின்ற' எனத் திரிந்து வந்தது.*

*247. **பொழிப்புரை :-** நீல கண்டத்தை உடையவரே, உமக்கு இவள், ஒன்றைக் கருத்திலே கொண்டு இட்டன தான் அணிந்திருந்த வளையல்களையே. அவைகளை நீர் வந்து கொண்டும் விட்டீர். ஆயினும் இச் சிறுமி உம்மை இரக்கக் கருதியது உம்மிடத்துள்ள மணம் பொருந்திய விளாம் பூவோ - எலும்போ - விரிந்த சடைமேல் இருக்கின்ற கொன்றை மாலையோ - உடையாகப் பொருந்திய தோலோ - சாம்பலோ - உடைந்து போன பிச்சைப் பாத்திரமோ.*

*__குறிப்புரை :-__ 'இவை தவிர உம்மிடத்தில் வேறு என்ன இருக்கின்றது' எனச் சொல்லி நகையாடித் தன் தலைவியின் அறியாமைக்குத் தோழி இரங்கியவாறு. ''சிறுமி'' என்றது பேதைமை குறித்ததே. 'இப் பேதைமையுடையாளை நீ கைவிடலாகாது' என ஓம்படுத்தினாள் என்க. வெறி - நறு நாற்றம். வெள்ளில் - விளா. 'உறைதலை யுடைய கொன்றை' - என்க. உடை கலன், வினைத்தொகை. 'நுமக்குப் பெய்தது' என மேலே கூட்டுக. கடவியது - கடாவியது. கேட்டது.*

*248. **பொழிப்புரை :-** இவள் இங்கு வந்த நீண்ட சடையையுடைய, பலரும் 'எம் தந்தை' எனப் போற்றுகின்ற சிவபெருமானிடம் எதனையும் இரக்கவில்லையாயினும் அவன் செய்ததைக் கேளுங்கள்; அவனுக்குத் தனது விரிந்த நெஞ்சத்தை இடமாகக் கொடுத்த ஒன்று தான் இவள் செய்தது. ஆயினும், அதற்குக் கைம்மாறாக அவன் இவளுக்குத் துன்பத்தைக் கொடுத்தான். பெரிய கிளைகள் அடிமரத்தின் மேலே இருக்கும் பொழுது அந்த அடிமரம் நிற்கக் கிளை வெட்டப்படுவது உலக இயல்புதானே.*

*__குறிப்புரை :-__ 'அதுபோல, இவட்குப் பற்றுக்கோடாயினார் பலர் இருக்கவும் இவள் இறந்துபடுகின்றாள்' என்பதாம். ஈற்றடி ஒட்டணி யாய் நின்றது 'ஆகவே, இவளது அறியாமையின் நிலையை யாம் கண்டோம்' என முடிக்க.*

**248.** கடவிய தொன்றில்லை ஆயினும் கேண்மின்கள் காரிகையாள்
மடவிய வாறுகண் டாம்பிறை வார்சடை எந்தைவந்தாற்(கு)
இடவிய நெஞ்சம் இடங்கொடுத் தாட்கவ லங்கொடுத்தான்
தடவிய கொம்பதன் தாள்மேல் இருந்து தறிக்குறுமே. 80

**249.** தறித்தாய் அயன்தலை சாய்த்தாய் சலந்தர னைத்தழலாப்
பொறித்தாய் அனங்கனைச் சுட்டாய் புரம்புன லுஞ்சடைமேற்
செறித்தாய்க் கிவைபுகழ் ஆகின்ற கண்டிவள் சில்வளையும்
பறித்தாய்க் கிதுபழி ஆகுங்கொ லாமென்று பாவிப்பனே. 81

---

*கடவியது - கடாவியது கேட்டது. "காரிகையாள்" என்பதை முதலிற் கூட்டுக. மடவியவாறு, மடமையாளாகிய வகை. இடவிய - இடம் பரந்த. தடவிய - பெரிய; 'தட' என்னும் உரியடியாகப் பிறந்த பெயரெச்சம். கொம்பு - கிளை. தாள் - அடிமனம். தறிக்குறும் - வெட்டப்படும்.*

*249. **பொழிப்புரை :-** எங்கள் பெருமானே, நீ பிரமன் தலையைக் கிள்ளினாய்; சலந்தராசுரனைக் கொன்று வீழ்த்தினாய்; காமனைப் பொறிக் கறிபோல ஆகும்படி நெருப்பாக்கினாய்; இவையெல்லாம் உனக்குப் புகழாதலைக் கண்டு, 'இவளுடைய சில வளையல்களை நீ கவர்ந்தது உனக்குப் பழியாகும்' என்று கருதி நான் வருந்துகின்றேன்.*

***குறிப்புரை :-** கொல், ஆம் அசை. பாவித்தல் - கருதுதல். 'வளையைக் கவர்ந்தாய்' என்றது, 'மெலியப் பண்ணினாய்' என்றபடி.*

*வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு*
*வீழ்வார் அளிக்கும் அளி[1]*

*என்ப ஆதலின், 'அவ்வாறு அருளாமை புகழுடைய நினக்கு ஆகாது' என்பதாம். இது தோழி தலைவனை இரந்து பின்னிற்றல் ஆகலின் பெண்பாற் கைக்கிளை,*

*சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்பரவி*
*ஏம்பலிப் பார்கட்கு இரங்கு கண்டாய்[2]*

*நின்னடியார் இடர் களையாய்[3]*

*என்றாற்போல, அன்பர் பொருட்டு அருளாளர் விண்ணப்பித்தல் இதன் - உள்ளுறை.*

*250. **பொழிப்புரை :-** எம் சிறுமி, செய்வது அறிகின்றிலள்; கொட்டாவி விடுகின்றாள்; மனம் நெகிழ இவள் உடம்பெங்கும் குங்கிலியம் போன்ற மணம்*

---

1. *திருக்குறள் - 1192*
2. *திருமுறை - 4.110.1*
3. *திருமுறை - 1.52.3*

250. பாவிக்கும் பண்டையள் அல்லள் பரிசறி யாள்சிறுமி
ஆவிக்கும் குற்குலு நாறும் அகம்நெக அங்கமெங்கும்
காவிக்கண் சோரும்பொச் சாப்புங் கறைமிடற் றானைக் கண்ணில்
தாவிக்கும் வெண்ணகை யாளம்மெல் லோதிக்குச் சந்தித்தவே. 82

251. சந்தித்த கூற்றுக்குக் கூற்றாம் பிணிக்குத் தனிமருந்தாம்
சிந்திக்கிற் சிந்தா மணியாகித் தித்தித் தமுதமுமாம்
வந்திக்கில் வந்தென்னை மால்செய்யும் வானோர் வணங்கநின்ற
அந்திக்கண் ஆடியி னானடி யார்களுக் காவனவே. 83

---

வீசநின்றது. குவளை மலர் போலும் கண்கள் நீரைச் சொரியாநின்றன. தன்னை மறக்கின்றாள்; நீல கண்டனைத் தன் கண்களில் நிறுவுகின்றாள். இவையெல்லாம் வெண்மையான பற்களையும், மென்மையான கூந்தலையும் உடைய இவளை வந்து பொருந்தின. ஆகலான் இவள் நாம் முன்பெல்லாம் அறிகின்ற பழைய பெண் அல்லள்.

*குறிப்புரை :-* 'சிவனுக்கு உரியளாய புதியள்' என்பதாம், இது, நாற்றம் தோற்றம் முதலியவற்றால் பாங்கி மதியுடம் பட்டது. **சிவஞானிகளது நிலைமையை அவர்பால் நிகழும் சில மெய்ப்பாடுகள் பற்றி உலகத்தார் ஊகித் துணர்தல் இதன் உள்ளுறை**, 'செய்யும்' என்னும் வினைகள் பலவற்றுள் முதலதாகிய "பாவிக்கும்" என்பது ஒன்றும் எச்சம்; ஏனையவெல்லாம் முற்று. "சிறுமி பரிசறியாள்" என்பது முதலாகத் தொடங்கி உரைக்க. 'அகம் நெக, அங்கம் எங்கும் குற்குலு நாறும்' என்க. இது சிவனைத் தழுவியதால் உண்டாயது. சோர்தலாகிய, இடத்தின்மேல் நின்ற வினைக்கு, 'நீர்' என்னும் வினைமுதல் வருவிக்க. தாவிக்கும் - தாபிக்கும், ஓதி - ஓதியை உடையாள். "ஓதிக்கு" என்னும் நான்காவதை இரண்டாவதாகத் திரிக்க. பாவிக்கும் - எண்ணியறியும். பண்டையவன் - பழமையானவன். பரிசு - தன்மை. ஆவித்தல் - கொட்டாவி விடுதல். குற்குலு - குங்கிலியம். தாவித்தல் - நிலைபெறச் செய்தல்.

*251. பொழிப்புரை :-* வந்து எதிர்நின்ற நமனுக்கு நமன் ஆவான்; நோய்கட்கு ஒப்பற்ற மருந்தாவான்; நினைத்தால் சிந்தாமணிபோல, நினைப்பவற்றைக் கொடுப்பான்; இனிக்கின்ற அமுதம்போல இனிமையைத் தருவான்; வணங்கினால் எதிர்ப்பட்டுத் தன்வயம் ஆக்கிக் கொள்வான்; தேவர்களும் வணங்க நிற்கின்ற, இரவில் காட்டில் ஆடுகின்ற சிவன் தன் அடியார்களுக்கு ஆகின்ற பொருள்கள் இவைகளாகும்.

*குறிப்புரை :-* 'தித்தித்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. என்னை, 'எவன்' என்னும் வினாப் பெயரின் திரிபு. அஃது இங்கு 'எத்துணை' என்னும் பொருட்டாய் மிகுதியைக் குறித்தது. மால் - மயக்கம். அஃது இங்கு வசப்படுத்துதலைக் குறித்தது. 'காட்டில்' என்பது ஆற்றலால் வந்தது. 'ஆவன இவை' என ஒரு சொல் வருவித்து முடிக்க.

**252.** **ஆவன யாரே அழிக்கவல் லாரமை யாவுலகில்**
**போவன யாரே பொதியகிற் புராபுரம் மூன்றெரித்த**
**தேவனைத் தில்லைச் சிவனைத் திருந்தடி கைதொழுது**
**தீவினை யேனிழந் தேன்கலை யோடு செறிவளையே.** **84**

**253.** **செறிவளை யாய்நீ விரையல் குலநலம் கல்விமெய்யாம்**
**இறையவன் தாமரைச் சேவடிப் போதென்றெல் லோருமேத்தும்**
**நிறையுடை நெஞ்சிது வேண்டிற்று வேண்டிய நீசர்தம்பால்**
**கறைவளர் கண்டனைக் காணப் பெரிதுங் கலங்கியதே.** **85**

---

*252. **பொழிப்புரை :-** முப்புரத்தை எரித்த கடவுளாகிய தில்லையிலே எழுந்தருளியுள்ள சிவபெருமானை அடிதொழுதமையால் (நல்லோர் பலரும் பல நன்மைகளைப் பெற) யான் தீவினை செய்தேன் ஆகலின் எனது உடையோடு, செறிந்த வளையல்களையும் இழந்தேன். ஒரு நெறிப்படாத இந்த உலகத்தில் ஊழ் வலியால் மேன்மேல் நன்றாய் வளர்வனவற்றை - அழிக்க வல்லவர் யாவர்! சிறிது சிறிதாய்த் தேய்ந்து போவனவற்றை அவ்வாறு தேயாமல் கட்டிக் காக்க வல்லவர் யாவர்! (ஒருவரும் இல்லை).*

***குறிப்புரை :-*** *இது, சிவபெருமானைக் காதலித்தாள் அக்காதல் நிறை வெய்தாமை பற்றி ஆற்றாது கூறியது.* **பக்குவ மிகுதியால் சிவனை அடைய விரும்பினார் அதற்குத் தடையாய் நிற்கும் பிராரத்தம் பற்றி வருந்திக் கூறுதல் இதன் உள்ளுறை***. ஊழ் வலியாகிய பொதுப் பொருளால் கை வளையல்களை இழந்த சிறப்புப் பொருளைச் சாதித்தமையால் இது வேற்றுப் பொருள் வைப்பணி. "சிவனை அடியைத் தொழுது" என்றதை, 'கள்வனைக் கையைக் குறைத்தான்' என்பது போலக் கொள்க. திருந்து அடி - செவ்வியவாய பாதங்கள். ஆவன - வரத்தக்கன. பொதிய - நிலைபெற. கலை - ஆடை. செறிவளை - நெருக்கமான வளையல்கள்.*

*253. **பொழிப்புரை :-** செறிக்கப்பட்ட வளைகளை உடையவளே, 'சிவனது செவ்விய பாதங்களாகிய தாமரை மலர்களே குடிப்பிறப்பு, கல்வி, மெய்ப்பொருள் எல்லாமாகும்!' என யாவரும் புகழ்கின்ற அத்தன்மையையே நிலைபேறாக உடைய உனது மனம், 'அந்தச் சிவனைத் தாம் விரும்பியதையே விரும்புகின்ற கீழ்மக்கள் கூட்டத்திற் சென்று காண்பேன்' என்று இப்பொழுது கலக்கமடைந்து விட்டதே; இஃது என்!' அந்த மனத்தின்வழி நீ விரைந்து செல்லாதே.*

***குறிப்புரை :-*** *இது, தலைவியை ஆற்றுவிக்க வேண்டி, 'தலைவனை யான் விடர்கள் கூட்டத்திற் சென்று கழற்றுரை கூறி நின்னைச் சேர்விப்பேன்' எனத் தலைவனை இயற்பழித்த வழி, தலைவி, 'அவர் விடர்களது கூட்டத்தில் சேர்பவர் அல்லர்' எனத் தலைவனை இயற்பட மொழிந்தது. பக்குவிகள் பால், 'சிவஞானம் இன்றியும் வீடு பெறலாம்' என மயங்கிக் கூறுகின்றவர்களைப் பக்குவிகள் 'அது*

**சங்காரத் திருக்கூத்துத் தரிசனம்**

**254.** கலங்கின மால்கடல் வீழ்ந்தன கார்வரை ஆழ்ந்ததுமண்
மலங்கின நாகம் மருண்டன பல்கணம் வானங்கைபோய்
இலங்கின மின்னொடு நீண்ட சடைஇமை யோர்அவிந்தார்
அலங்கல்நன் மாநடம் ஆர்க்கினி ஆடுவ(து) எம்மிறையே. **86**

---

*கூடாது' எனத் தெருட்டுதல் இதன் உள்ளுறை. 'சேவடித் தாமரைப் போது' என மாற்றுக. நிறை - வழுவாது நிறுத்துதல். "நெஞ்சு இது" என்றது, 'தான் அவள்' என்னும் வேற்றுமையின்மையால் தோழியது நெஞ்சத்தை. ''கலங்கியதே'' என்பதன்பின் வருவித்தது சொல்லெச்சம். விரையல் - விரையாதே. "வேண்டிற்று வேண்டிய நீசர்" என்பதனை, "காணா தான் - கண்டானாம் தான் கண்டவாறு"[1] "பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்"[2] முதலியவற்றோடு ஒப்பிட்டு உணர்க. 'அக்கறை வளர் கண்டனை' எனச் சுட்டு வருவிக்க.*

*254. பொழிப்புரை :- எங்கள் பெருமானே, கடல்கள் யாவும் தீயால் கொதித்து வற்றிவிட்டன. கரிய மலைகள் பெருவெள்ளத்தில் மூழ்கி விட்டன. பூவுலகங்களும் அவ்வெள்ளத்தில் ஆழ்ந்து மறைந்து விட்டன. வானுலகங்களும் நிலை குலைந்து போயின. பலவாகிய உமது கணங்களும் 'என்ன செய்வது' என்று தோன்றாமல் மயங்கி விட்டன. 'இறவாதவர்' எனப்படுகின்ற தேவர்களும் இறந்து விட்டனர். இந்த நிலையில், ஆகாயம் எங்கும் போய் விட்டுவிளங்குகின்ற மின்னலோடு மின்னலாய் ஒளிர்கின்ற உமது நீண்ட சடைகள் சுழல நல்லதொரு சிறந்த நடனத்தை யார் பார்ப்பதற்கு ஆடுகின்றீர்?*

*குறிப்புரை :- 'பார்ப்பதற்கு ஒருவருந்தாம் இல்லையே என்றபடி. இது 'சிவன் சுடுகாட்டில் ஆடுபவன்' எனக் கூறப்படுவதன் உண்மையை விளக்கியது. 'சுடுகாடு' என்பது எல்லாம் ஒடுங்கிய நிலை. இது முற்றழிப்பு, அல்லது 'சருவ சங்காரம்' - எனப்படும். 'இந் நிலையில் சிவன் ஆடுகின்றான்' என்பது, புனர் உற்பவத்திற்கு (மறு முறைப் படைப்பிற்கு) ஆவனவற்றைச் செய்தலைக் குறிக்கும். அச்செயல் 'சூக்கும பஞ்ச கிருத்தியம்' - எனப்படும். இந்நிலையில் ஆன்மாக்கள் 'சகல கேவலம்' - என்னும் நிலையில் நிற்கும். அந்த ஒரு கேவலத்திற்குள்ளே 'பிரளய கேவலம், விஞ்ஞான கேவலம் - என்னும் இரு கேவலங்கள் உளவாகும். இவற்றைச் சிவஞானபோத ஆறாம் சூத்திரத்துச் சிவஞான யோகிகளது சிற்றுரையால் அறிக. இக்கேவலங்களை உடைய ஆன்மாக்களே சிவனோடு உடன் நிற்கும் பேய்களாகச் சொல்லப்படுகின்றன. இஃது உணராதார், 'சிவன் ஆடும் சுடுகாடு உலகில் பல இடங்களில் உள்ள சுடுகாடுகளே' என்றும், பேய்கள் அங்கு வாழும் பேய்களே' என்றும் கருதிவிடுகின்றனர் என்பது கருத்து. நாகம் - சுவர்க்க லோகம்.*

---

1. *திருக்குறள் - 849*
2. *திருவாசகம் - அதிசயப் பத்து 9*

**255.** எம்மிறை வன்னிமை யோர்தலை வன்உமை யாள்கணவன்
மும்முறை யாலும் வணங்கப் படுகின்ற முக்கண்நக்கற்(கு)
எம்முறை யாளிவள் என்பிழைத் தாட்கிறை என்பிழைத்தான்
இம்முறை யாலே கவரக் கருதிற் றெழிற்கலையே. **87**

**256.** கலைதலைச் சூலம் மழுக்கனல் கண்டைகட் டங்கம்கொடி
சிலையிவை ஏந்திய எண்டோட் சிவற்கு மனஞ்சொல்செய்கை
நிலைபிழை யாதுகுற் றேவல்செய் தார்நின்ற மேருவென்னும்
மலைபிழை யாரென்ப ராலறிந் தோர் இந்த மாநிலத்தே. **88**

---

*"இமையோர் அவிந்தார்" என்பதை, "பல்கணம்" என்பதன் பின்னர்க் கூட்டுக. "இமையோர் வியந்தார்" என்பது பாடம் அன்று, அலங்கல் - அசைதல். கார் - முகில். வரை - மலை. மலங்கின - வருத்தமுற்றன.*

*255. **பொழிப்புரை :-** எமக்கு இறைவனும், தேவர்கட்குத் தலைவனும், உமைக்குக் கணவனும், யாவராலும் மனம், மொழி, மெய் ஆகியவற்றால் வணங்கப்படுபவனும், மூன்று கண்களை உடைய வனும், திகம்பரனும் ஆகிய சிவனுக்கு என்னை வஞ்சித்து இவள் என்ன முறை உடையவள் ஆயினான்? ('மனைவி ஆயினளோ' - என்றபடி அது நிற்க), என்னை வஞ்சித்த இவளுக்குச் சிவன் இவள் தன்னை விரும்பியதை அறிந்தும் இவளுக்கு மெலிவை நீக்காமல் மெலிவை விளைவித்து, இவளது அழகிய உடையை அகன்று போகும்படி இவ்வாறு தவறு செய்தது ஏன்?.*

*குறிப்புரை :- 'அதனை யான் அறிகின்றிலேன்' என்பதாம். 'இறை பிழைத்தான்; என்' என மாறிக் கூட்டுக. 'எழிற் கலை கவரக் கருதிய தாகிய இம்முறையாலே பிழைத்தான்' என்க. இது, செவிலி தலைவியது ஆற்றாமை கண்டு தலைவனை இயற் பழித்தது. இறைவனைச் சார்ந்தார்க்கு ஆற்றாமை உளதாதலைக் கண்டு உலகர் இறைவனை இயற் பழித்தல் இதன் உள்ளுறை.*

*256. **பொழிப்புரை :-** 'எட்டுக் கைகளில் மான், முத்தலைச் சூலம், மழு, நெருப்பு, மணி, மழுவிற் சிறிது வேறுபட்ட கட்டங்கம், கொடி, வில் - என்னும் இவற்றை ஏந்தியுள்ள சிவபெருமானுக்கு மனம், மொழி, மெய் மூன்றும் பிற வழிகளில் செல்லாது பணிவிடை செய்தவர்கள் நிலையாய் உள்ள மகாமேரு மலையைப் போன்ற உயர்ந்த குறிக்கோள்களைக் கொள்ளினும் தவறாமல் பெறுவார்கள்' - என்று, அறிவுடையோர் இந்தப் பெரிய பூமியில் எங்குள்ளவரும் அறியக் கூறுவர்.*

*குறிப்புரை :- "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" எனக் கூறிய திருவள்ளுவர் 'அஃது எய்துதல் அரிது' என்னும் கருத்தால், "மற்றது - தள்ளினும் தள்ளாமை*

**257.** மாநிலத் தோர்கட்குத் தேவர் அனையவத் தேவரெல்லாம்
ஆநலத் தாற்றொழும் அஞ்சடை ஈசன் அவன்பெருமை
தேனலர்த் தாமரை யோன்திரு மாலவர் தேர்ந்துணரார்
பாநலத் தாற்கவி யாமெங்ங னேயினிப் பாடுவதே. **89**

**258.** பாடிய வண்டுறை கொன்றையி னான்படப் பாம்புயிர்ப்ப
ஓடிய தீயால் உருகிய திங்களின் ஊறலொத்த(து)
ஆடிய நீறது கங்கையுந் தெண்ணீர் யமுனையுமே
கூடிய கோப்பொத்த தாலுமை பாகமெம் கொற்றவற்கே. **90**

---

*நீர்த்து"[1] என்றார் ஆகலின், 'சிவனடியார்கள் அத்தகைய குறிக்கோள்களைத் தவறாமல் எய்துவர்' என்றார். 'மேரு வும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. கட்டங்கம் - யோக தண்டம். சிலை - வில்.*

*257. **பொழிப்புரை :-** பெரிய பூமியில் உள்ள மக்களினும் மேம்பட்டப் பெருமையுடையவர் தேவர். அத்தேவர் யாவரும் தம்மால் ஆன மட்டும் நன்முறையில் வணங்கும் சிவபெருமான் பெருமையுடையவன், அவனது பெருமையைத் தேன் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரம தேவனும், திருமாலும் ஆகிய அவரே ஆராய்ந்து முற்றும் உணரவல்லாரல்லர் என்றால், அவனது பெருமையை நாம் எங்ஙனம் முற்ற உணர்ந்து பாநயத்தோடு கூடிய கவிகளால் பாடுவது!*

*__குறிப்புரை :-__ 'இயலாது ஆகையால் அறிந்த அளவில் பாடுவோம்' - என்பது குறிப்பெச்சம். "யான் அறி அளவையின் ஏத்தி"[2] என்றார் முருகாற்றுப் படையிலும் தேவரது பெருமையை உணர்த்தற்கு, "மாநிலத்தோர்கட்குத் தேவர்" என்றார். "தேவர்" என்பதன் பின்னும் "ஈசன்" என்பதன் பின்னும் 'பெருமையுடையர், பெருமையுடையன்' என்பன எஞ்சி நின்றன. பாநலம் - இலக்கண இலக்கிய நயம் அமைந்த நல்ல பாடல்.*

*258. **பொழிப்புரை :-** எம் தலைவனாகிய சிவபெருமானுக்கு அவன் **பூசியுள்ள திருநீறு அவன் அணிந்துள்ள படத்தையுடைய பாம்பு பெருமூச்சு எறிதலால் கையில் ஏந்தியுள்ள நெருப்பு ஓங்கி எரிய, அதனால் அவன் முடியில் அணிந்துள்ள பிறை உருகி ஒழுகுவது போன்று உள்ளது**. பின்பு அந்நீறும், உமையாளது பாகமும் ஒன்று சேர்வது, கங்கை நதியும், தெளிவாகிய நீரையுடைய யமுனை நதியும் ஒன்று சேர்ந்தது போன்று உள்ளது.*

*__குறிப்புரை :-__ கங்கை நீர் வெண்மை நிறத்தையும், யமுனை நீர் கருமை நிறத்தையும் உடையன. "பாடிய வண்டு உறை கொன்றையினான்" என்பது, "எம்*

---

1. *திருக்குறள் - 596*
2. *திருமுருகாற்றுப்படை : அடி 277*

**259.** கொற்றவ னேயென்றுங் கோவணத் தாயென்றும் ஆவணத்தால்
நற்றவ னேயென்றும் நஞ்சுண்டி யென்றும் அஞ்சமைக்கப்
பெற்றவ னேயென்றும் பிஞ்ஞக னேயென்றும் மன்மதனைச்
செற்றவ னேயென்றும் நாளும் பரவுமென் சிந்தனையே. **91**

**சாதனவியல்**

**260.** சிந்தனை செய்ய மனமமைத் தேன்;செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்;கை தொழவமைத்தேன்;
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்;மெய் அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி ஈசற் கிவையான் விதித்தனவே. **92**

---

*கொற்றவன்" எனப்பட்டவனை. 'அவன் எனச் சுட்டும் அளவாய் நின்றது', 'அதுவும், உமை பாகமும் கூடியது, கங்கையும், தெண்ணீர் யமுனையும் கூடிய கோப்பு ஒத்தது' என வேண்டும் சொற்கள் வருவித்து இயைத்து முடிக்க.*

*259. பொழிப்புரை :- என்னுடைய சித்தம் எந்நாளும், யாவர்க்கும் என்றும், 'கோவணமாக உடுத்த உடையை உடையவனே' என்றும், 'புனைந்துள்ள கோலத்தால் நல்ல தவசியே' என்றும், 'நஞ்சை உண்டவனே' என்றும், அஞ்செழுத்தை நெஞ்சில் அமைத்தவர்களால் பெறப்பட்டவனே' என்றும், 'தலைக்கோலம் உடையவனே' என்றும், 'மன்மதனை அழித்தவனே' என்றும் இவ்வாறே சொல்லித் துதிக்கும்.*

*குறிப்புரை :- 'வேறொன்றையும் செய்யாது' எனத் தமது உள்ளத்தின் உறைப்பை வெளியிட்டவாறு.* ***சிந்தித்தல் அன்றித் துதித்தல் சித்தத்திற்கு இல்லை*** *யாயினும், 'சிந்தித்தலே துதித்தலாம்' என்னும் கருத்தால் 'துதிக்கும்' என்றார். ஆவணம், 'ஆய வண்ணம்' என இறந்தகால வினைத்தொகை. உண்டி - உணவு. உண்டியை உடையவனை, 'உண்டி' என்றது ஆகுபெயர்.*

*260. பொழிப்புரை :- என்னுடைய மனத்தை இடையறாது உன்னுதற்கு வைத்தேன்; நாவைப் புகழ்சொல்லுதற்கு வைத்தேன்; தலையை வணங்குதற்கு வைத்தேன்; கைகளைக் கும்பிடுதற்கு வைத்தேன்; அன்பை அகப்படுத்தற்கு வைத்தேன். உடம்பை மயிர்க்கூச்சு எறிவதற்கு வைத்தேன்; வெந்து தணிந்த வெள்ளிய நீற்றைப் பூசுகின்ற இறைவனுக்கு யான் நேர்ந்தன இவை.*

*குறிப்புரை :- 'என்னால் ஆயின இவை; இனி அவனது திருவுள்ளம்' என்பதாம். 'மனம் முதலியவற்றை வேறொன்றற்கு வைத்திலேன்' என்றபடி. "ஈசற்கு" என இறுதியிற் கூறியமையால், முன்னர்க் கூறியன பலவும் அவனுக்கேயாதல் தெளிவு.*

*261. பொழிப்புரை :- நன்மை தீமைகளை அறிகின்ற பலவகையான*

**261.** விதித்தன வாழ்நாள் பெரும்பிணி விச்சைகள் கொண்டுபண்டே
கொதிப்பினில் ஒன்றும் குறைவில்லை குங்குமக் குன்றனைய
பதித்தனங் கண்டனம் குன்றம்வெண் சந்தனம் பட்டனைய
மதித்தனங் கண்டனம் நெஞ்சினி என்செய்யும் வஞ்சனையே. **93**

**262.** வஞ்சனை யாலே வரிவளை கொண்டுள்ள மால்பனிப்பத்
துஞ்சும் பொழுதும் உறத்தொழு தேன்சொரி மாலருவி
அஞ்சன மால்வரை வெண்பிறை கவ்வியண் ணாந்தனைய
வெஞ்சின ஆனையின் ஈருரி மூடிய வீரனையே. **94**

---

*அறிவுகளைக் கொண்டு பிரமன் எமக்கு வகுத்த வாழ்நாள்களிலே பெரிய நோய்கள் வந்து வெதுப்புவதில் சிறிதும் குறைவில்லை. மகளிரது குங்கும மலைபோலும், மார்பில் அழுந்துதலையுடைய தனங்களை முன்னே கண்டோம், பின்பு அத்தனங்கள் தாமே மலைகளில் வெள்ளிய சந்தனம் பூசப்பட்டனபோல் ஆயினமையை உணர்ந்து பார்த்தோம். (இவ்வளவும் செய்து விட்டமையால்) எமது மனம் இனிச் செய்வதற்கு என்ன வஞ்சனை உள்ளது?*

*குறிப்புரை :- 'செய்யக் கூடிய வஞ்சனைகள் அனைத்தும் செய்தாகி விட்டன' என்றபடி. 'இங்கு கூறியன எல்லாம் எமது மனம் எம் வழிநின்று சிவனை நினையாமல் தப்பி ஓடிச் செய்த வஞ்சனைகளால் விளைந்தன' என்பதாம். 'சிவனை நினையாது மனம் போன போக்கிலே போகின்றவர் இவ்வாறு கெடுவர்' என்பது கருத்து. 'மகளிரது தனங்கள் முதலில் குங்குமக் குன்று போலக் காணப்பட்டது' என்றது கலவிக்கு முன்னுள்ள நிலையையும், 'அவை வெண்சந்தனம் பூசப்பட்ட குன்று போலக் காணப்பட்டன' என்றது கலவிக்குப் பின்னுள்ள நிலையையும் குறித்தது. தலைவரது மார்பில் சந்தனக் குழம்பு இருத்தல் இயல்பு. இன்ப நோக்கில் இன்பமாய்த் தோன்றினும் துறவு நோக்கில் இவை இடர் ஆதல் அறிக. 'பட்டனையவாக' என ஆக்கம் விரிக்க. 'மதித்தனம்' என்பது முற்றெச்சம். 'விச்சைகள் கொண்டு பண்டே விதித்தனவாகிய வாழ் நாளில் பெரும்பிணிக் கொதிப்பினில் ஒன்றும் குறைவில்லை' என இயைக்க. விதித்தன - விதிக்கப்பட்டன.*

*262. **பொழிப்புரை :-** என்னுடைய மனத்தில் மயக்கம் நிறைந்து ததும்பும்படி, யான் அறியாமலே எனது கீற்றுப் பொருந்திய வளையல்களைக் கவர்ந்து கொண்டு, யானைத் தோலைப் போர்த்துக் கொண்டு இருக்கின்ற வீரனை நான் உறங்கும் பொழுதும் மிக வணங்கினேன்.*

*குறிப்புரை :- 'வணங்கியும் அவன் எனக்கு அருள் செய்திலன்' என்பது குறிப்பெச்சம். வஞ்சனையாலே கவர்ந்து கொண்டவன் தன்னை 'வீரன்' என்று சொல்லிக் கொள்வது வெட்கம் - என்பது கருத்து. 'மால் பனிப்பக் கொண்டு'*

---

1. *திருமுறை - 7.4.8*

**263.** வீரன்—அயனரி, வெற்பலர் நீரெரி பொன்னெழிலார்
காரொண் கடுக்கை கமலம் துழாய்விடை தொல்பறவை
பேரொண் பதிநிறம் தாரிவர் ஊர்திவெவ் வேறென்பரால்;
ஆரும் அறியா வகையெங்கள் ஈசர் பரிசுகளே. **95**

---

*என்க. "கொண்டு" என்னும் செய் தென் எச்சம், "மூடிய" என்பதனோடு முடிந்தது. துஞ்சும் பொழுதும் தொழுதல், இடைவிடாத பழக்கத்தால் நிகழ்வது. "நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே"[1] என்று அருளிச் செய்தது காண்க. "மால்" மூன்றில் முன்னவை மயக்கம்; ஏனையது பெருமை. பனித்தல் - ததும்புதல். 'அருவியை யுடைய வரை' என்க. வரை - மலை. 'மயக்க அருவி' என்பதில் மயக்கம், அதற்கு ஏதுவாகிய மத நீரைக் குறித்தது. அஞ்சனம் - மை; அஃது அதன் நிறத்தைக் குறித்தது. வெள்ளிய தந்தங்களை வாயில் கொண்டு நிமிர்கின்ற கரிய யானைக்கு, வெண்பிறை கௌவி அண்ணாக்கின்ற அஞ்சன மலையை உவமை யாகக் கூறியது இல்பொருள் உவமம். ஈர்உரி - உரித்த தோல்; இறந்தகால வினைத்தொகை.*

***263. பொழிப்புரை :-** எங்கள் இறைவரது தன்மைகள் யாராலும் ஒரு நிலையாக அறிந்து சொல்லுதற்கு இயலாதன. ஏன் எனில், அவர் பெயர் ஒன்றாகாது, 'உருத்திரன், பிரமன், விட்டுணு' - என மூன்று என்றும், அவருக்கு இடம் ஆவதும் ஒன்றாகாது, 'மலை, மலர், நீர்' என மூன்று என்றும், அவரது நிறமும் ஒன்றாகாது, 'தீ வண்ணம், பொன் வண்ணம், அழகு நிறைந்த மேக வண்ணம்' என மூன்று என்றும், அவரது அடையாள மாலையும் ஒன்றாகாது, 'கொன்றை மலர், தாமரை மலர், துளசி' என மூன்று என்றும், அவர் ஏறிச் செல்கின்ற ஊர்தியும் ஒன்றாகாது, 'இடபம், அன்னம், கருடன்' என மூன்று என்றும் இவ்வாறு அனைத்தையும் மூன்று மூன்றாகவே, அறிந்தோர் கூறுகின்றனர்.*

***குறிப்புரை :-** இஃது, ஒருவனாகிய சிவனே 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்னும் தொழிலை நோக்கி 'அயன், அரி, அரன்' என மூவராய் நிற்கின்றான் - என உணர்த்தியவாறு.*

> *ஓர் உருவாயினை மான் ஆங்காரத்து*
> *ஈரியல்பாய், ஒரு விண்முதற் பூதலம்*
> *ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்*
> *படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகள் ஆயினை[1]*

*என்று அருளிச் செய்தது காண்க. சம்பு பட்சமாகப் பார்க்கும் பொழுது மூவரும் ஒருவனே. அணுபட்சமாகப் பார்க்கின் வேறுவேறாம். சம்பு பட்ச அணுபட்சங்களின் இயல்பைச் சித்தாந்த நூல்களுட் காண்க. இறைவனது*

---

1. *திருமுறை - 1. 128 (1-4)*

**264.** பரியா தனவந்த பாவமும் பற்றும்மற் றும்பணிந்தார்க்
குரியான் எனச்சொல்லி உன்னுட னாவன் எனவடியார்க்(கு)
அரியான் இவனென்று காட்டுவன் என்றென்(று) இவையிவையே
பிரியா துறையுஞ் சடையான் அடிக்கென்றும் பேசுதுமே. **96**

---

*தொழிலை மூன்றாகக் கூறும் பொழுது மறைத்தல் காத்தலிலும் அருளல் அழித்தலிலும் அடங்கும் என்க. தொழில்களை ஐந்தாக விரிக்குமிடத்துச் சிவன் 'அயன், அரி, அரன்' என்பவரோடு 'மகேசுரன், சதாசிவன்' - என மேலும் இருவராய், ஐவராய் நிற்பன்.*

*பேர், பதி, நிறம், தார், ஊர்தி - என்பவற்றுள் ஒவ்வொன்றையும் வீரன் முதலிய மும்மூன்றனோடு முறை நிரல் நிறையாகப் பொருத்திக் கொள்க. இவர்தல் - ஏறுதல். இவர் ஊர்தி, வினைத்தொகை, அன்னமும், கலுழனும் "பறவை" என அடங்கின. 'வகையின' என்பதில் சாரியையும், இறுதி நிலையும் தொகுத்தலாயின. அன்றி, 'வகை, ஆகுபெயர்' - என்றலும் ஆம், "வீரன்" என்றது "அரன்" என்னும் பொருட்டு.*

***264. பொழிப்புரை :-** "அடியார்களைப் பிரியாது அவர்களோடு உடன் உறைபவனாகிய சிவபெருமான், பிறர்க்கு அரியவனாயினும், 'யான் என்னைப் பணிந்தவர்கட்கு உரியவன்' என்று, சொல்லி உன்னோடு உடன் உறைவான்" என்று அவன் அடியவர் சொல்ல, யாம், அவனுடைய அடியவர்களைவிட்டு அகலாது வந்து பற்றுகின்ற பாவமும், பற்றும், மற்றும் பழி முதலியனவும் ஆகிய இவை இவை, 'அவன் அடியார்க்கு எளியனல்லன்; அவர்கட்கும் அரியவனே' எனக் காட்டுவன்" என்று அவன் திருவடிக்கு என்றும் விண்ணப்பிப்போம்.*

***குறிப்புரை :-** இது,*

*வீ, என்றன்னை விடுதிகண் டாய், விடில்,
என்னை மிக்கார்
'ஆரடியான்' என்னின், 'உத்தரகோச
மங்கைக்கரசின்
சீரடியார் அடியான்' என்று நின்னைச்
சிரிப்பிப்பனே.[1]*

*என்றது போலப் பிராரத்தத்தை விரைய விலக்காமை பற்றி வருந்திக் கூறியது. பரிதல் - நீங்குதல். 'பரியாதனவாய் வந்த' - என ஆக்கம் விரிக்க. "பணிந்தார்க்கு உரியான் - எனச் சொல்லி, - உன்னுடன் ஆவன் - என" என்பதை முதலிலும், "இவை, இவை" என்பதை "மற்றும்" என்பதன் பின்னும் கூட்டியுரைக்க. 'என - என்று அடியவர் சொல்ல' என்க. "உன்னுடன்" என்பது வேறு முடிபு ஆகலின் பன்மை யொருமை மயக்கம் இன்று. 'இவன் என்று காட்டுவன்' என்பது பாடம் அன்று. அடுக்கு, பன்மை குறித்து நின்றது.*

---

1. *திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம் - 48*

**265.** **பேசுவ தெல்லாம் அரன்திரு நாமம்;அப் பேதைநல்லாள்**
**காய்சின வேட்கை அரன்பா லதுவறு காற்பறவை**
**மூசின கொன்றை முடிமே லதுமுலை மேல்முயங்கப்**
**பூசின சாந்தம் தொழுமால்; இவையொன்றும் பொய்யலவே.** **97**

**மறவா வரம் வேண்டுதல்**

**266.** **பொய்யா நரகம் புகினுந் துறக்கம் புகினும்புக்கிங்(கு)**
**ஊய்யா உடம்பினோ(டு) ஊர்வ நடப்ப பறப்பவென்று**
**நையா விளியினும் நானிலம் ஆளினும் நான்மறைசேர்**
**மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே.** **98**

---

*265.* ***பொழிப்புரை :-*** *அந்தச் சிறுமியாகிய அழகி பேசுகின்ற பேச்சு முழுதும் சிவன் திருப்பெயர்களேயாய் உள்ளன. காய்கின்ற சினத்திற்கு முதலாய் உள்ள அவளது வேட்கை, சிவனிடத்தில் உள்ளதான, வண்டுகள் மொய்க்கும் கொன்றையை உடைய அவனது முடியின் மேலது. அவள் தன் தனங்களின்மேல் பொருந்திய பூசியுள்ள சந்தனக் குழம்பை ('நீயேனும் சிவனை அடையத் தவம் செய்' என்று) கும்பிடுவாள். யான் சொல்லிய இவைகள் சிறிதும் பொய்யல்ல. (மெய்).*

***குறிப்புரை :-*** *'ஆகவே, இனி இவளை நாம் சிவனுக்கு வரைவு நேர்தலே செய்யத் தக்கது' என்பது குறிப்பெச்சம். இது செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது. பக்குவிகளது நிலைமையை அறிவர் அவர்தம் சுற்றத்தார்க்கு உணர்த்துதல் இதன் உள்ளுறை. "எல்லாம்" என்பது எஞ்சாமையைக் குறித்தது. தலைவி அருகில் இல்லாமையால் "அப்பேதை நல்லாள்" எனச் சேய்மைச் சுட்டாகச் சுட்டினாள். ஒன்றும்... சிறிதும்.*

*266.* ***பொழிப்புரை :-*** *பாவிகட்குத் தப்பாது கிடைக்கின்ற நரகத்திலே நான் புகுந்தாலும், அதைவிட்டுச் சுவர்க்கத்தை அடைந்தாலும், இப்பூமியில் வந்து, வெறுப்பைத் தரினும் விட இயலாத உடம்புகளோடு கூடி, 'ஊர்வன' என்றும், 'நடப்பன' என்றும், 'பறப்பன' என்றும் பிறப்புக்களை எடுத்து வருந்தி வாழ்ந்து இறக்கினும், (யாதேனும் ஒரு பிறப்பில்) பேரரசனாகி நிலம் முழுவதையும் ஆளினும் நான் வேண்டுவன எல்லாம் நான்கு வேதங்களில் ஒலி பொருந்திய நீல கண்டத்தினை உடைய சிவபெருமானது திருவடிகளை மறவாதிருக்கின்ற அந்த ஒருவரமேயாகும்.*

***குறிப்புரை :-*** *"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே - வழுவாதிருக்க வரந்தர வேண்டும்"[1] என அப்பர் பெருமான் அருளிச் செய்ததும் காண்க.*

---

*1. திருமுறை - 4. 94. 8*

**ஆயுள் நிலையாமை கூறி ஆற்றுப்படுத்துதல்**

267. வேண்டிய நாள்களிற் பாதியும் கங்குல்; மிகவவற்றுள்
ஈண்டிய வெந்நோய் முதலது பிள்ளைமை மேலதுமூப்(பு)
ஆண்டின அச்சம் வெகுளி அவா வழுக் காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன் சடைமுக்கண் மாயனையே. 99

**தொண்டர் இன்பம் பெறுதல்**

268. மாயன்நன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே;
காய்சின ஆனை வளரும் கனக மலையருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே. 100

**திருச்சிற்றம்பலம்**

---

***267. பொழிப்புரை :-*** *(படைப்போன் ஆகிய நான்முகக் கடவுள்) மக்களைப் படைக்கும் பொழுது 'ஒவ்வொருவரும் இவ்வுடம்போடு கூடி இத்துணை ஆண்டுகள் வாழ்க' என வேண்டி வரையறுக்கின்றான். அவ் ஆண்டுகள் அனைத்தும் மக்களுக்கு வாழும் நாளாக அமைவதில்லை. பொதுவாக ஒரு பாதி ஆண்டுகள் இரவுப் பொழுதாகி விடுகின்றன. (இரவு வாழ்க்கை வாழ்க்கையன்று) மற்றொரு பாதி ஆண்டுகளே பகலாய் மிஞ்ச, அவைகளிலும் பலவாய்த் திரண்ட கொடிய நோய்கள் உளவாகும். இனி, வரையறுக்கப்பட்ட ஆண்டுகளில் தொடக்கப்பகுதி குழவிப் பருவமாய்க் கழிகின்றது. முடிவுப் பகுதி முதுமைப் பருவமாய்க் கழிகின்றது. (இடையில் எஞ்சும் ஒரு சில ஆண்டுகளில் என்ன செய்ய இயலும்!) அவைகளிலும் 'அச்சம், வெகுளி, அவா, அழுக்காறு' என இப்படி ஆண்டுகள் கழிந்தோடிப் போகின்றன. ஆகையால் (யாம் மிக இளைய பருவத்திற்றானே வேறு எதனையும் பொருட்படுத்தாமல்) நீண்ட, புல்லிய சடையையும், மூன்று கண்களையும் உடைய கள்வனைக் கண்டறிந்து, அவன் திருவடிகளையே புகலிடமாக அடைவோம்.*

***குறிப்புரை :-*** *வேண்டுதல் - விரும்புதல். அஃது அதன்படி வரையறுத்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. இதற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. "பாதியும்" என்னும் உம்மை சிறப்பு. கங்குல் - இரவு. 'கங்குல் ஆம், பிள்ளைமை ஆம், மூப்பும் ஆம்' என்க. மிகுதல் - எஞ்சுதல். ஈண்டுதல் - திரளுதல். ஆண்டின - 'ஆண்டு' எனப்படும் காலங்கள். 'கள்வன்' என்றது, எளிதில் அகப்படாமை பற்றி.*

***268. பொழிப்புரை :-*** *எளிதில் அகப்படாமை பற்றி, 'கள்வன்' எனப் படுகின்ற, நல்ல, உயர்ந்த நீலமணி போலும் கண்டத்தையுடையவனும், நீண்ட*

## சிறப்புப் பாயிரம்

அன்றுவெள் ளானையின் மீதிமை யோர்சுற் றணுகுறச்செல்
வன்றொண்டர் பின்பரி மேற்கொண்டு வெள்ளி மலைஅரன்முன்
சென்றெழில் ஆதி உலாஅரங் கேற்றிய சேரர்பிரான்
மன்றிடை ஓதுபொன் வண்ணத் தந்தாதி வழங்கிதுவே. **101**

---

*சடையை உடையவனுமாகிய சிவனுக்குத் தொண்டு பூண்ட அடியார்கள் யாதோர் உடம்பினையும் பற்றா நிலையாகிய வீட்டைப் பெறுதல் உண்மையே. எங்ஙனம் எனில், பொன் மலையை அடுத்த காக்கையும் அப்பொழுதே பொன்னிறத்தைப் பெற்று விடுகின்றது.*

***குறிப்புரை :-*** *இஃது எடுத்துக்காட்டுவமை. தன்னைச் சார்ந்த பொருளைத் தன் வண்ணம் ஆக்குதல், சிவனுக்கும், செம்பொன் மலைக்கும் இடையேயுள்ள பொதுத் தன்மை.*

*சேர்வார் தாமே தானாகச் செயுமவன்*[1]

*என ஞானசம்பந்தர் அருளிச் செய்தது காண்க.*

*செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே*[2]

*என்பது திருமந்திரம். கொடி - காக்கை. "சொல்" என்றது பொருளை. "காய்சின ஆனை வளரும்" என்றது கனக மலைக்கு அடைமொழி.*

***சிறப்புப் பாயிரம் :-*** *இதிற் குறிக்கப்பட்ட வரலாற்றைத் திருத்தொண்டர் புராணத்துக் கழறிற்றறிவார் நாயனார் புராணத்தால் அறிக. இது பிற்காலத்து ஆன்றோரால் செய்யப்பட்டது.*

***குறிப்புரை :-*** *சுற்று - எப்பக்கத்திலும். மன்று - தில்லையம்பலம், பொன் வண்ணத் தந்தாதியாவது, 'இவ்வாறு வழங்குகின்ற இதுவே' என முடிக்க.*

***பொன்வண்ணத் தந்தாதி முற்றிற்று.***

---

1. *திருமுறை - 1. 126. 7*
2. *திருமந்திரம் : எட்டாம் தந்திரம் : பரலக்கணம் : 4*

## 7. சேரமான் பெருமாள் நாயனார்

*அருளிச்செய்த*

## திருவாரூர் மும்மணிக்கோவை

*வெவ்வேறு வண்ணங்களுடைய மூவகை மணிகளாற் கோக்கப் பெற்ற மாலைபோல் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்ற மூவகைச் செய்யுட்களால் அந்தாதித் தொடையால் பாடப்பெறுவதாகும். மும்மணிக்கோவைக்கு இலக்கியமாகத் திகழ்வது சேரமான் பெருமாள் பாடிய இப்பிரபந்தமேயாம்! திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமான் மீது பாடப்பட்டுள்ளதால் இப்பெயர் பெற்றது. சுந்தரர் பெருமானைத் தோழராகப் பெற்று, அவருடன் ஆரூர்ப் பெருமானைப் பாடினார் என்றும்; இந்நூலை சுந்தரர் கேட்டு இன்புற்றார் என்றும், இறைவன் திருமுன் இந்நூலை அரங்கேற்றினர் என்பதும் வரலாறு. இந்நூல் அகப்பொருள் செய்தியையே தாங்கியுள்ளது. விரிகடல் என்று தொடங்கி விரிகடலே என நிறைவாதல் காண்க.*

*இத்திருமுறை சிற்றிலக்கியங்கள் நிரம்பப் பெற்றிருப்பதால் “பா” இலக்கண விளக்கம் அடியார் பெருமக்களுக்குத் தேவை எனத் திருவருள் உணர்த்த, “பா” வகை பற்றிய சிறுகுறிப்பை இத்தோடு இணைத்துள்ளோம்.*

### பா வகைகள்

***செப்பலோசையை உடைய வெண்பா, அகவலோசையை உடைய ஆசிரியப்பா, துள்ளலோசையை உடைய கலிப்பா, தூங்கலோசையை உடைய வஞ்சிப்பா, வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்து வரும் மருட்பா எனப் பாக்கள் ஐவகைப்படும்.***

***அவற்றுள் வெண்பாவும் ஆசிரியப்பாவும் பெருவழக்குடையனவும் தெரிந்துகொள்ள வேண்டியனவும் ஆகும். ஆசிரியப்பா அகவற்பா என்றும் சொல்லப்படும்.***

### வெண்பா

***ஈற்றடி முச்சீரும் ஏனைய அடி நாற்சீரும் பெற்று வரும். மாமுன் நிரை, விளம் முன் நேர், காய் முன் நேர் என்பனவாகிய வெண்பாத் தளைகளையே பெற்று வரவேண்டும். ஈற்றுச் சீர் ஓரசையாலோ, ஓரசையுடன் குற்றியலுகரமோ பெற்று முடிதல்வேண்டும். இவ்வெண்பா குறைந்தது இரண்டு அடிகளைக் கொண்டது.***

***மேற்கண்ட இலக்கணங்கள் பொருந்த இரண்டடிகளில் வருவது - குறள்வெண்பா; மூன்றடிகளில் வருவது - சிந்தியல் வெண்பா; நான்கடிகளில் வருவது - இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா; ஐந்தடி முதல் 12 அடி வரை அமைவது - பஃறொடை வெண்பா; 12 அடிகளுக்குமேல் பல அடிகளைப்***

*பெற்று வருவது - கலிவெண்பா என வகைப்படுத்துவர்.*

*அவற்றுள் குறள் வெண்பாவும், நேரிசை வெண்பாவும் பயிலத்தக்க சிறப்புடையன.*

**குறள் வெண்பா**

*குறள் வெண்பா யாப்பால் அமைந்து சிறப்புடன் திகழ்வது திருக்குறள்.*

*உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்*
*உள்ளத்துள் எல்லாம் உளன். - (குறள் - 294)*

*என்னும் குறட்பா எளிய நடையில் திகழ்வதைக் காண்கிறோம்.*

*ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்*
*பேரறி வாளன் திரு. - (குறள் - 215)*

*என வரும் குறள், அழகிய உவமையைப் பெற்று விளங்குகிறது.*

*(உலகு அவாம் எனப் பிரிக்க; ஊருணி - ஊரார் நீருண்ணும் குளம்)*

*இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்*
*கழிபே ரிரையான்கண் நோய். - (குறள் - 946)*

*என்னும் குறளில், உணவின் செரிமானம் அறிந்து உண்பவனிடம் இன்பம் நிலைபெற்றிருப்பது போல, செரிமானம் ஆவதற்குமுன் அளவிற்கு அதிகமாய் உண்பவனிடம் நோயானது நிலைபெற்றிருக்கும் என இரண்டு கருத்துகள் உவமையடிப்படையில் ஒருங்கே அமைந்து விளங்கக் காண்கிறோம்.*

**நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா**

*அடைமொழி இன்றி வெண்பா என்று சொல்லும் அளவில் நினைவிற்கு வருவது நேரிசை வெண்பாவேயாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், பிற்கால நீதி நூல்கள் எனப் பல்வேறு நூல்களிலும் பயின்று வழங்கி வந்துள்ள சிறப்பினையுடையது இது.*

*நீக்கம் அறும்இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்*
*நோக்கின் அவர்பெருமை நொய்தாகும் - பூங்குழலாய்!*
*நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்*
*புல்லினும் திண்மைநிலை போம். - (நன்னெறி - 5)*

*(நொய்தல் - அற்பம்; புல்லினும் - பொருந்தினாலும்; திண்மை - உறுதி; போம் - போகும், போய்விடும்).*

*எனவரும் நேரிசை வெண்பா, நட்பில் பிரிவும் கருத்து வேற்றுமையும் வரக்கூடாது என்பதனை முன்னிரண்டடிகளிலும் அதற்கேற்ற உவமையைப் பின்னிரண்டடிகளிலும் அமைத்துக் கூறுகின்றது.*

*கள்ளம்என் பார்க்கும் துயிலில்லை; காதலிமாட்(டு)*
*உள்ளம்வைப் பார்க்கும் துயிலில்லை; ஒண்பொருள்*
*செய்வம்என் பார்க்கும் துயிலில்லை; அப்பொருள்*
*காப்பார்க்கும் இல்லை துயில்.*

*என வரும் இன்னிசை வெண்பா, திருடர், காதலர், பொருளீட்ட விழைவோர், பொருளைப் பாதுகாப்போர் என்னும் நால்வருக்கும் தூக்கம் இல்லாமையை அழகுபட அடுக்கி எடுத்துரைக்கின்றது.*

*இவை வெண்பாப் பற்றியன. இனி ஆசிரியப்பாவைக் குறித்துக் காண்போம்.*

### ஆசிரியப்பா

*உரைநடை போன்று அமைவதே ஆசிரியப்பா. ஈரசைச் சீர்கள் நான்கு கொண்ட அளவடிகளால் அமைவது இது. எதுகை, மோனைகளால் சிறப்புப் பெறுவது. குறைந்தது மூன்றடிகளைப் பெற்றுவரும். அடி மிகுதிக்கு எல்லை இலலை.*

*எல்லை அடிகளும் நாற்சீர் பெறுவது நிலைமண்டில ஆசிரியப்பா. சீரை மாற்றாமல் அடிகளை மாற்றிப் போட்டாலும் ஓசையும் பொருளும் மாறாதிருப்பது அடிமறிமண்டில ஆசிரியப்பா; ஈற்றடி முச்சீரும் ஏனைய அடிகள் நாற்சீரும் பெறுவது நேரிசை ஆசிரியப்பா; முதலடியும் ஈற்றடியும் நாற்சீர் பெற்று, இடையிலுள்ள அடிகள் இரு சீரோ, முச்சீரோ பெற்று வருவது இணைக்குறள் ஆசிரியப்பா ஆகும். இவ்வாறு ஆசிரியப்பா நால்வகைப்படும்.*

*அவற்றுள் நிலைமண்டில ஆசிரியப்பாவும் நேரிசை ஆசிரியப்பாவும் பெரிதும் பின்பற்றப்படுபவை. **எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, கல்லாடம்** என்பன ஆசிரியப்பாவால் அமைந்தவை. வெண்பாவைக் காட்டிலும் காலத்தால் முற்பட்டது ஆசிரியப்பாவே ஆகும் (எனினும் யாப்பிலக்கண நூல்கள் வெண்பாவை முற்படக் கூறலின், இங்கும் அம்முறை பின்பற்றப்பட்டது).*

### நிலைமண்டில ஆசிரியப்பா

*மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!*
*காசறு விரையே! கரும்பே! தேனே!*
*அரும்பெறல் பாவாய்! ஆருயிர் மருந்தே!*
*பெருங்குடி வணிகன் பெருமட மகளே!*
*மலையிடைப் பிறவா மணியே என்கோ!*
*அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!*
*யாழிடைப் பிறவா இசையே என்கோ!*
*தாழிருங் கூந்தல் தையால்! நின்னைஎன்(று)*
*உலவாக் கட்டுரை பலபா ராட்டித்*

*தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி*
*வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்துசெல் வுழிநாள்*
*............................................................*
*யாண்டுசில கழிந்தன இற்பெருங் கிழமையின்*
*காண்தகு சிறப்பின் கண்ணகி தனக்கென்*

*(சிலப்பதிகாரம் - 2 : 73-90)*

*(மாசு, காசு - குற்றம்; விரை - மணப்பொருள்)* என்பது சிலப்பதிகாரம். கோவலன், கண்ணகியைத் திருமணமான புதிதில் புகழ்ந்துரைக்கும் பகுதி இது.

### நேரிசை ஆசிரியப்பா

'உலகம் உன்னுடையது' என்னும் தலைப்பில், பாவேந்தர் பாரதிதாசன் பாடும் பாடல் பின்வருமாறு:

*நாட்டொடு நாட்டை இணைத்து மேலே ஏறு!*
*வானை இடிக்கும் மலைமேல் ஏறு!*
*விடாமல் ஏறு மேன்மேல்!*
*ஏறி நின்று பாரடா எங்கும்!*
*எங்கும் பாரடா இப்புவி மக்களை!* (5)

*பாரடா உனது மானிடப் பரப்பை!*
*பாரடா உன்னுடன் பிறந்தபட் டாளம்!*
*'என்குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய*
*மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!*
*அறிவை விரிவுசெய்; அகண்ட மாக்கு!* (10)

*விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!*
*அணைந்துகொள்! உன்னைச் சங்கம மாக்கு!*
*மானிட சமுத்திரம் நான்என்று கூவு!*
*பிரிவிலை எங்கும் பேதம் இல்லை!*
*உலகம் உண்ணஉண்! உடுத்த உடுப்பாய்!* (15)

*புகல்வேன் 'உடைமை மக்களுக்குப்பொது'*
*புவியை நடத்து; பொதுவில் நடத்து!*
*வானைப் போல மக்களைத் தாவும்*
*வெள்ளை அன்பால் இதனைக்*
*குள்ள மனிதர்க்கும் கூறடா தோழா!* (20)

உலகம் என மானிட இனம் முழுவதையும் தழுவி, வேறுபாடற்ற சமுதாயம் காண உணர்ச்சி செறிந்த நடையில் பாவேந்தர் இப்பாடலை ஆக்கியுள்ளார். இடையிடையே எதுகைத் தொடை விடுபடினும் பொருண்மையும் உணர்ச்சியும் சிறந்து பாடலின் நடை சிறக்கக் காண்கிறோம்.

*இனிப் பாவினங்கள் குறித்துக் காண்போம்.*

### பாவினங்கள்

*வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நான்கு பாக்களுக்கும் தாழிசை, துறை, விருத்தம் என்னும் மூவகைப் பாவினங்கள் அமைந்துள்ளன. ஆனால் பாவின் இலக்கணத்திற்கும் பாவின இலக்கணத்திற்கும் நெருங்கிய தொடர்பு இல்லை. பாவினங்களைப் பொருத்தவரையில் சீர், அடி எண்ணிக்கையும் வாய்ப்பாட்டு அமைப்புமே கருத்தில் கொள்ளப்பெறுகின்றன.*

### தாழிசை

*குறள் தாழிசை, வெள்ளொத் தாழிசை, வெண்டாழிசை, ஆசிரியத் தாழிசை, கலித்தாழிசை, வஞ்சித் தாழிசை என்பனவாகத் தாழிசையின் வகைகள் அமைகின்றன.*

*ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருதல் என்பது தாழிசையின் தனிச் சிறப்பாகும். பெரும்பாலும் நாட்டுப்புறப் பாடல்கள் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வரும் தன்மையுடையன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.*

*தாழிசைகளுள் வஞ்சித் தாழிசை பயன்பாட்டிற்குரியது.*

### வஞ்சித் தாழிசை

*குறளடி (இரு சீர் அடி), நான்கு கொண்ட செய்யுள்கள் மூன்று ஒரு பொருள்மேல் அடுக்கி வருவது.*

*பாட்டாளர் நலம்பேணாத்*
*தேட்டாள ராய்வாழ்வார்*
*மாட்டாத மரமென்ன*
*நாட்டாரால் நகையுண்பர்* (1)

*எளியவர்க் கிரங்காமல்*
*ஒளியராய் உறவாழ்வார்*
*துளியிலா விசும்பென்ன*
*வெளியரால் இளிவுண்பர்* (2)

*உழவர்தம் உழைப்புண்டு*
*விழவராய் மிகவாழ்வார்*
*இழவராம் இவரென்னக்*
*கிழவரால் இழிவுண்பர்* (3)

*(பாட்டாளர் - உழைப்பாளி; தேட்டாளர் - செல்வ வசதியர்; மாட்டாத - பயன்தர இயலாத; நாட்டார் - உலகினர்; ஒளி - புகழ்; விழவு - மகிழ்வு; இழவர் - இழிவினர்; கிழவர் - உரிமையுடையவர்) எனப் புலவர் குழந்தை இதற்குச் சான்று காட்டுகின்றார்.*

***துறை***

*குறள்வெண் செந்துறை, ஆசிரியத்துறை, கலித்துறை, கட்டளைக் கலித்துறை, வஞ்சித்துறை என்பன துறை வகைகள் ஆகும். இவற்றுள் கலித்துறை, கட்டளைக் கலித்துறை, வஞ்சித் துறை ஆகியன தெரிந்துணர வேண்டியவையாகும்.*

***கலித்துறை***

*நெடிலடி (ஐஞ்சீரடி) நான்கு கொண்டது இது. சான்றாக; மா, விளம், விளம், விளம், மா என்னும் வாய்ப்பாட்டில் அமைந்த பாடல்*

*எனக்கு நல்லையும் அல்லைநீ என்மகன் பரதன்*
*தனக்கு நல்லையும் அல்லைஅத் தருமமே நோக்கின்*
*உனக்கு நல்லையும் அல்லைவந்(து) ஊழ்வினை தூண்ட*
*மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய்*

*(மந்தாரை சூழ்ச்சிப் படலம் - 65)*

*(நல்லை - நல்லவள், அல்லை - நல்லவளில்லை; மனக்கு - மனத்துக்கு) என்பது கம்பராமாயணத்துத் தசரதன் கூற்று.*

***கட்டளைக் கலித்துறை***

*வெண்சீர் அமைந்த ஐந்து சீர்களையுடையதாய், ஐந்தாம் சீர் விளங்காய் வாய்பாட்டில் அமைந்ததாய், நேரசையில் தொடங்கின் 16 எழுத்தும், நிரையசையில் தொடங்கின் 17 எழுத்தும் என ஒற்று நீக்கி எண்ணத்தக்கதாய் அமைவது கட்டளைக் கலித்துறையாகும்.* ***கந்தரலங்காரம், அபிராமி அந்தாதி*** *போன்ற நூல்கள் இவ்வகையில் அமைந்தனவாகும்.*

*பாவேந்தர் பாரதிதாசனாரின் 'வள்ளுவர் வழங்கிய முத்துக்கள்' என்னும் தலைப்பிலான பாடல் வருமாறு:*

*வெல்லாத இல்லை திருவள் ளுவன்வாய் விளைந்தவற்றுள்*
*பொல்லாத தில்லை புரைதீர்ந்த வாழ்வினி லேஅழைத்துச்*
*செல்லாத தில்லை பொதுமறை யான திருக்குறளில்*
*இல்லாத தில்லை இணையில்லை முப்பாலுக் கிந்நிலத்தே*

*(புரை - குற்றம்).*

***வஞ்சித் துறை***

*குறளடி நான்கு கொண்டது இது. புளிமாங்காய் + கருவிளம் என்னும் வாய்ப்பாட்டிலமைந்த, ஆழிப்பேரலை குறித்த கி. சிவகுமாரின் பாடல் பின்வருமாறு:*

*பிழைமூன்று பொறுப்பையாம்*
*பிழைச்சொல்லோ பெருங்கடல்!*
*அழைக்காமல் நுழைந்தனை!*
*பிழைக்காமல் விழுங்கினை!*

*(பிழை - தவறு; பிழைக்காமல் - யாரும் உயிர் பிழைக்காமல், தவறாமல்).*

**விருத்தம்**

*அளவொத்த நான்கு அடிகளையுடையது விருத்தம் எனப் பொதுவாகக் கூறலாம். வெளி விருத்தம், ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், வஞ்சி விருத்தம் என்பன விருத்தப்பா வகைகள். இவற்றுள் வெளிவிருத்தம் தவிர்த்த ஏனையன அறிய வேண்டியனவாகும்.*

**ஆசிரிய விருத்தம்**

*கழிநெடிலடி நான்கு உடையது இது. சீர்களின் எண்ணிக்கைக்கேற்பப் பெயர் பெறும்.*

1. **விளம் மா தேமா** - அறுசீர் விருத்தம்

*தாயெழில் தமிழை என்றன்*
*தமிழரின் கவிதை தன்னை*
*ஆயிரம் மொழியில் காண*
*இப்புவி அவாவிற் றென்றே*
*தோயுறும் மதுவின் ஆறு*
*தொடர்ந்தென்றன் செவியில் வந்து*
*பாயுநாள் எந்த நாளோ?*
*ஆரிதைப் பகர்வார் இங்கே*

*(**மது** - தேன்; **பாயுநாள்** - பாயும் நாள்)*

*பாவேந்தரின் பாடல் இது. விளச்சீருக்குப் பதில் மாங்காய்ச் சீரும் வரலாம்.*

2. **மா மா காய்** - அறுசீர் விருத்தம்

*இல்லாப் பொருளுக் கேங்காமல்*
*இருக்கும் பொருளும் எண்ணாமல்*
*எல்லாம் வல்ல எம்பெருமான்*
*இரங்கி அளக்கும் படிவாங்கி*
*நல்லார் அறிஞர் நட்பையும்நீ*
*நாளும் நாளும் நாடுவையேல்*
*நில்லா உலகில் நிலைத்தசுகம்*
*நீண்டு வளரும் நிச்சயமே*

***(உமர்கய்யாம் - கவிமணி)***

*3.* ***விளம் மா விளம் மா, விளம் விளம் மா*** *- எழுசீர் விருத்தம்*

*தந்ததுன் தன்னை; கொண்டதென் தன்னை;*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்?*
*அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்;*
*யாதுநீ பெற்றதொன் றென்பால்?*
*சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்!*
*திருப்பெருந் துறையுறை சிவனே!*
*எந்தையே! ஈசா! உடலிடம் கொண்டாய்!*
*யான்இதற்கு இலன்ஓர்கைம் மாறே!*

*(கோயில் திருப்பதிகம் - 10)*

*(**சங்கரன்** - சிவன், **சதுரர்** - திறமையுடையவர், **அந்தம்** - முடிவு, **கைம்மாறு** - பதிலுதவி)*

*என்பது மாணிக்கவாசகரின் திருவாசகம்.*

*4.* ***காய் காய் மா தேமா*** *- எண்சீர் விருத்தம்*

*ஆவின மழைபொழிய இல்லம் வீழ*
*அகத்தடியாள் மெய்ந்நோவ அடிமை சாவ*
*மாவீரம் போகுமென்று விதைகொண் டோட*
*வழியிலே கடன்காரன் மறித்துக் கொள்ளச்*
*சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்*
*தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பம் தீண்டக்*
*கோவேந்தன் உழுதுண்ட கடமை கேட்கக்*
*குருக்களோ தட்சணைகள் கொடுவென் றாரே.*

*(**ஆவீன** - ஆ ஈன, பசுகன்று ஈன; இல்லம் - வீடு; மாவீரம் - பெரிய ஈரம்).*

*என்பது இராமச்சந்திர கவிராயரின் தனிப்பாடல். காய்ச்சீருக்குப் பதில் சில இடங்களில் விளச்சீர் வருதலும் உண்டு.*

***கலி விருத்தம்***

*அளவடி நான்கு கொண்டது இது. விளம், விளம், மா, விளம் என்னும் வாய்ப்பாட்டில் அமைந்த வில்லிபாரதப் பாடல் வருமாறு:*

*அருமறை முதல்வனை ஆழி மாயனைக்*
*கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்*
*திருமகள் கேள்வனைத் தேவ தேவனை*
*இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்*

*(**முளரி** - தாமரை; **பதம்** - திருவடி)*

***வஞ்சி விருத்தம்***

*சிந்தடி நான்கு கொண்டு அமைவது இது. விளம், விளம், காய் வாய்ப்பாட்டிலான கி. சிவகுமாரின் பாடல் வருமாறு:*

*என்பது பெண்ஏன எழுச்சியுறும்;*
*வன்கலும் புணைஎன மிதக்கலுறும்;*
*முன்சுவை மகவினை முதலைதரும்;*
*தென்தமிழ்த் திருமுறைச் செயலாலே;*

*(**என்பது** - எலும்பானது; **கலும்** - கல்லும்; **சுவை மகவு** - விழுங்கிய குழந்தை)*

*'பா' இலக்கணத்தை இவ்வளவோடு நிறைவு செய்து, இந்நூலைப் புரிந்து கொள்ள உதவும் அகப்பொருட்துறை அருஞ்சொற்பொருள் அகராதியைச் சற்று நோக்குவோம்.*

*கைக்கிளை - ஒருதலைக்காமம்*
*பெருந்திணை - ஒவ்வாக்காமம்*
*ஐந்திணை - ஒத்த காமம்*

***கைக்கிளை***

*கை - பக்கம். கிளை - உறவு. கைக்கிளை என்பது ஒருதலைக்காமம். ஒருவன் ஒருத்தி என்னும் இருவருள் ஒருவர் மட்டும் அன்பினால் கூடி வாழ்தலில் அளவிறந்த வேட்கை உடையவராய் ஒழுக, மற்றவர் அவரின் அன்பின் திறத்தை உணர்ந்துகொள்ள முடியாத நிலையினராக, இவ்வாறு அமைந்த தொடர்பு ஒரு பக்கத்து உறவாதலின் அது கைக்கிளை எனப் பெயர் பெற்றது. பெண்ணின் இசைவு அறியும் முன்பு, ஆடவனிடம் தோன்றும் காதல் உணர்வு.*

***பெருந்திணை***

*ஒருவன் ஒருத்தியாகிய இருவரும் தம்முள் அன்பின்றிக் கூடிவாழும் ஒழுகலாறு பெருந்திணை எனப்படும். கணவன் மனைவியரிடையே நிகழும் இத்தகைய உளம்பொருந்தா வாழ்க்கை உலகியலில் பெரும்பான்மையாகக் காணப்படுவதால் இதற்குப் பெருந்திணை எனப் பெயரிடப்பட்டது. பெருந்திணை - உலகத்தில் பெரும்பான்மையாக நிகழும் ஒழுகலாறு. பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்.*

***அன்பின் ஐந்திணை***

*பல பிறவிகள் தோறும் கணவனும் மனைவியுமாகப் பிரிவின்றி ஒன்றி வாழ்ந்தமையால் நிரம்பிய அன்புடையார் இருவர் வேறுவேறு இடங்களில் பிறந்து வளர்ந்தவர் ஆயினும், இறைவனது ஆணையாகிய நல்லூழின் செயலால் ஓரிடத்தெதிர்ப்பட்டு நெஞ்சுகலந்து ஒருவரையொருவர் அன்பினால் கூடி வாழும் ஒழுகலாறு அன்பின் ஐந்திணை எனப்படும். ஒத்த அன்பினராகிய இவ்விருவரும்*

*அன்பினால் அளவளாவி ஒருங்கு கூடியிருத்தலும், இவருள் கணவன் உலகியற் கடமை கருதிச் சில நாள் மனைவியைப் பிரிந்து செல்லுதலும், மனைவி அப் பிரிவுத்துன்பத்தைப் பொறுத்து ஆற்றியிருத்தலும், பிரிந்த கணவன் தான் வருவதாகக் குறித்த நாளில் வரத் தாமதிப்பின் ஆற்றாமைமிக்கு இரங்குதலும், பின் அவன் வந்தபோது அன்பினாற் பிணங்குதலும் என இவ்வொழுகலாறுகள் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து பகுதிகளாக வகுத்து விளங்கப்பெறுதலின், இஃது அன்பின் ஐந்திணை எனப்பெயர் பெறுதலாயிற்று. திணை - ஒழுக்கம். அன்பினால் நிகழும் ஐவகைப்பட்ட ஒழுகலாறுகள் அன்பின் ஐந்திணை.*

### உடன்போக்கு

*தலைவன் தன் காதல் வெற்றிபெற மேற்கொள்ளும் வழிகளில் இதுவும் ஒன்றாகும். பெற்றோரும், உற்றோரும் அறியாவண்ணம் இரவு நேரத்தில் தோழியின் இசைவுடன் தலைவியைத் தனியே அழைத்துக் கொண்டு நடத்தற்கரிய வழியில் நடந்து சென்று வேறு ஊரில் திருமணம் செய்துகொள்வான்.*

### வரைவு கடாவுதல்

*தலைவியை மணந்துகொள்ளும்படி தோழி தலைவனை வற்புறுத்தல்.*

### ஏழு பருவ மகளிர்

*பேதைக்கு வயது 5-8, பெதும்பை 9-10, மங்கை 11-14, மடந்தை 15-18, அரிவை 19-24, தெரிவை 25-29, பேரிளம்பெண் 30-38.*

### தகையணங்குறுத்தல்

*தகை - அழகு. அணங்குறுத்தல் - காதல் துன்பத்தை உண்டாக்குதல். தலைவியது அழகு, அவளைக்கண்டு காதல் கொண்ட தலைமகனிடம், அவள் குறிப்பறியத் தவிக்கும் வேட்கைத் துன்பத்தை விளைவித்தல்.*

### நாணுத்துறவுரைத்தல்

*திருமணம் செய்துகொள்ளத் தடை ஏற்படுமாயின், தலைவன் நாடறியத் தன் காதலை வெளிப்படுத்தி மடலேறத் துணிவான். தலைவி தன் காதல் நோய் உலகறிய வெளிப்பட்டதை அறிந்து வருந்துவாள். இருவரும் வெட்கத்தை விட நேர்ந்ததைக் கூறி வருந்துகின்றனர்.*

### அலர் அறிவுறுத்தல்

*களவொழுக்கம் இரண்டு திங்களுக்கு மேல் நீட்டித்தல் அரிது. திருமணத்தில் முடியவேண்டிய நிலையில், காலத்தாழ்வு ஏற்பட தலைவன் நாணத்தைவிட்டு மடலேறவும் தலைவியின் காமத்துயரம் அவள் நலிவுறுவதால் ஊரார் அறியவுமான நிலைமைகள் ஏற்படும். இதை அறிந்த ஊரார் இவர்கள் மீது பலவாறு பழிச்சொல் பேசுவர். இதுவே அலர் எனப்படும். இந்த அலரால்*

*காதலர்தம் உறவு வலுப்படுமே தவிரக் குறைபடாது. இதனைத் தலைவன், தலைவி, தோழி கூற்றுக்களால் அறிகிறோம்.*

***படர் மெலிந்திரங்கல்***

*பிரிவுத் துன்பத்தால் உடல் மெலிந்து வருதல்.*

***கண் விழிப்பழிதல்***

*பிரிந்தவரைக் கண்ணால் காணவேண்டுமென்று கண்கள் விதுவிதுக்கும், துடிதுடிக்கும். அவ்விரைவால் மனமழிந்து வருந்துவது இது.*

***பசப்புறு பருவரல்***

*பசப்பு எனப்படும் நிறமாற்றத்தைத் தந்து, மேனி அழகைக் குறைத்தற்குக் காரணமான பிரிவுத்துன்பம், பொன்னிறமான மேனி நிறம் மங்கிக் கருத்துக் காணப்படுவதே பசப்பு, பசலைநோய் எனப்படும்.*

***உறுப்பு நலனழிதல்***

*பிரிவுத் துன்பத்தால் தலைவியின் கண், தோள், நுதல் முதலிய உறுப்புகள் தம் அழகு கெட்டு நலிதல்.*

***நிறையழிதல்***

*மறை (இரகசியம்) பிறர் அறியாது காப்பதும், மனத்தை ஒருவழி நிலை நிறுத்துவதுமே “நிறை” எனப்படும். தலைவி காம மிகுதியால், தன் மனத்தை அடக்க இயலாத நிலையில், வாய்விட்டு வெளிப்படுத்திப் பேசுதல் நிறை அழிதலாகும்.*

***விதும்பல்***

*ஆசை மிகுதலால் நேரில் கண்டு கூடத்துடித்தல்.*

***மடல் ஏறுதல்***

*ஒருத்தியைக் காதலித்துப் பெறாது இறக்கும்நிலை ஏற்படுமாயின், அவன் பனங்கருக்கு மடலாற் குதிரை செய்து, காதலியின் உருவத்தை படத்தில் தன் பெயரை, அவள் பெயருடன் எழுதி, தான் சாம்பற்பூசி, எருக்கமாலையை அணிந்து, ‘இவளால் நான் இறந்தொழிகின்றேன்’ எனப் பறையடித்துப் பாடிக்கொண்டு தெருவின் கண் வருதல். அதனைக் கன்ட அரசன், ‘இறந்துபடுதல் உண்மை என்றற்குச் சோதனை தருவாயோ எனக் கேட்டு தருவேன்’ என அவன் உடன்படிந்து சோதித்து அவற்கு அவளைத் தன் ஆணையாற் சேர்ப்பிப்பான்.*

***புலவி***

*தலைவன் தலைவியரிடையே நிகழும் சிறுசிறு ஊடல்கள். இவை கூடலின்பத்தை மிகுவிப்பன.*

***திருச்சிற்றம்பலம்***

***அகவற்பா***

**269.** விரிகடல் பருகி அளறுபட் டன்ன
கருநிற மேகம் கல்முக டேறி
நுண்துளி பொழிய நோக்கி ஒண்தொடி
பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்(டு)
இலங்கெழிற் செவ்வாய்க் கோபம் ஊர்தரக் 5

கைத்தலம் என்னும் காந்தள் மலர
முத்திலங் கெயிறெனும் முல்லை அரும்பக்
குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட
எழிலுடைச் சாயல் இளமயில் படைப்ப
உள்நிறை உயிர்ப்பெனும் ஊதை ஊர்தரக் 10

கண்ணீர்ப் பெருமழை பொழிதலின் ஒண்ணிறத்(து)
அஞ்சனக் கொழுஞ்சே றலம்பி யெஞ்சா

---

*__269.__ அகவற்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை இவை முறையாக மாறி மாறி வர, முப்பது செய்யுட்களை அந்தாதியாகக் கோப்பது 'மும்மணிக் கோவை' என்னும் பிரபந்தமாகும். இப்பிரபந்தத்தின் பாட்டுடைத் தலைவர் திருவாரூர்ப் புற்றிடங் கொண்ட பெருமான்.*

*இப்பாட்டின் திணை பொருள்வயிற் பிரிவாகிய பாலை. கைகோள் கற்பு; தோழி கூற்று; கேட்போர் அவளது நெஞ்சு; பயன்முன்னிலைப் புறமொழி வகையால் தலைவனது இயல்புணர்ந்து தலைவி ஆற்றுதல்.*

***பொழிப்புரை :–*** *பொருள்வயிற் சென்ற தலைவர் குறித்த கார்ப் பருவமும் யாவரும் அறிய வந்திறுத்தது. அதனால் ஆற்றாமை காரணமாக இவளும் (தலைவியும்) மற்றொரு முகிலின் தன்மையை எய்தினாள்; தலைவர் தலைவியிடத்து மாறாக் காதலராயினும் (குறித்தபடி வாராமையால்) அவர் மனம் கல்லுப்போல வலிதாகிவிட்டதோ!*

***குறிப்புரை :–*** *"விரிந்த கடல் நீரைத் தான் முற்றப் பருகியதனால் அது சேறாயிற்றுப் போலத் தோன்றுதற்கு ஏதுவான கரிய மேகம் மலை முகட்டில் ஏறி நுண் துளி பொழிய, அதனை நேரே கண்டு, தலைவி தானும் தனது காதணியாகிய மின்னல் மின்ன, புருவமாகிய வான வில்லைத் தோற்றுவித்து, விளங்குகின்ற எழிலையுடைய தனது சிவந்த வாயாகிய, 'இந்திரகோபம்' என்னும் வண்டு ஊர்தர, 'அகங்கைகள்' என்னும் காந்தட் பூக்கள் விரிய, முத்துப்போல விளங்குகின்ற பற்களாகிய முல்லை அரும்புகள் அரும்ப, கூந்தல் கொன்றைக் காயையும், தேமல் கொன்றைப் பூவையும், எழுச்சியையுடைய சாயல் மயிலையும் தோற்றுவிக்க, உள்ளிருந்து வெளிவரும் நெட்டுயிர்ப்பாகிய காற்று உடன் வீச,*

மணியும் பொன்னும் மாசறு வயிரமும்
அணிகிளர் அகிலும் ஆரமும் உரிஞ்சிக்
கொங்கை யென்னுங் குவட்டிடை இழிதரப் 15

பொங்குபுயல் காட்டி யோளே; கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ணல் ஆரூர்
எல்லையில் இரும்பலி சொரியும்
கல்லோ சென்ற காதலர் மனமே. 20

---

*தனது கண்ணீராகிய பெருமழையைப் பொழிந்து, அதனானே கண்ணில் உள்ள மையாகிய கொழுவிய சேறு அலம்பப்பட்டு, அந்நீராகிய அருவி தன் கொங்கைகளாகிய மலைகளுக்கு இடையே, மாணிக்கம், பொன், குற்றம் அற்ற வைரம், அழகுமிகுந்த அகில் சந்தனம் இவைகளைத் தேய்த்து ஒழுகுதலால் மற்றொரு மேகமாம் தன்மையை விளக்கினாள். தலைவர் காதலுடை யாராயினும், வந்து சேராமையால் அவர் மனம் இப்பொழுது கல்லாகிவிட்டதோ!" எனப் பொருள் உரைத்துக் கொள்க.*

*"தவிர்த்த" என்னும் பெயரெச்சம், "சடை" என்பதனோடு முடிந்தது. 'அண்ணலுக்கு' என நான்காவது விரிக்க. பலி சொரியும் கல், பலிபீடம். பலி சொரியப்படும் கல் வலிதாதலோடு, பலியொன்றற்கன்றி பிறிதொன்றற்கு இடமாகாமையால் அதுவே கைப்பொருளுக்கன்றிப் பிறிதொன்றற்கு இடமாகாத மனத்திற்கு உவமையாயிற்று*

*பொருளே காதலர் காதல்*
*அருளே காதல் என்றி நீயே*

*என்னும் அகப்பாட்டினையும் காண்க. இப்பாட்டு உரிப் பொருளாற் பாலையாயிற்று. இது நேரிசையாசிரியப்பா. அளறு - குழை சேறு. சுணங்கு - பசலை. குழல் - பின்னிய குழற்சடை. அஞ்சனம் - கண்ணுக்குத் தீட்டும் மை.*

***270. பொழிப்புரை :-** (தலைவர் குறித்துச் சென்ற கார்ப் பருவம் வந்து விட்டமையால்) பெருமை பொருந்திய திருமாலாகிய இடப வாகனத்தையுடை சிவபெருமானது கண்டத்திற்கு ஒத்த வகையினையுடையவாய் முகில்கள் கண் முன்னே தோன்றிவிட்டன. ஆயினும் தலைவர் ஊர்ந்து சென்றதும், சேமமாகக் கொண்டு சென்றவும் ஆகிய தேர்கள் எம் கண் முன் தோன்றவில்லை. ஆகவே, இவளுடைய (தலைவியுடைய) மனம் மயக்கம் கொள்ளாது என் செய்யும்! (ஒன்றையும் செய்ய மாட்டாது. ஆகையால்) இவள் கையில் உள்ள சங்கு வளையல்கள் கழன்று வீழ்ந்தன; மேனி முழுவதும் பசலைகள் போர்ந்தன; கண்கள் நீரைப் பொழிந்தன.*

***வெண்பா***

**270.** **மனம்மால் உறாதேமற் றென்செய்யும்! வாய்ந்த**
**கனமால் விடையுடையான் கண்டத்(து) – இனமாகித்**
**தோன்றினகார்; தோன்றிலதேர்; சோர்ந்தனசங்(கு) ஊர்ந்தனபீர்;**
**கான்றனநீர் ஏந்திழையாள் கண். 2**

***கட்டளைக் கலித்துறை***

**271.** **கண்ணார் நுதல்எந்தை காமரு கண்டம் எனவிருண்ட**
**விண்ணால் உருமொடு மேலது கீழது கொண்டல்விண்ட**
**மண்ணார் மலைமேல் இளமயில் ஆல்மட மான் அனைய**
**பெண்ணாம் இவள்இனி என்னாய்க் கழியும் பிரிந்துறைவே. 3**

---

***குறிப்புரை :-*** *'இனி இறந்துபடுவாள் போலும்' என்பது குறிப்பெச்சம். இது பருவங் கண்டு ஆற்றாளாய தலைவியது நிலை கண்டு தோழி வருந்திக் கூறியது. இதுவும் உரிப் பொருளாற் பாலையே. 'கனம் வாய்ந்த மால்' என மாற்றிக் கொள்க. கன மால்விடை - மிகப்பெரிய விடை. சங்கு - வளை. பீர் - பசலை. கான்றன - சொரிந்தன.*

***271. பொழிப்புரை :-*** *மேகம், 'கண் பொருந்திய நெற்றியையுடைய எம் தந்தையாகிய சிவபெருமானது அழகிய கண்டம்' என்று சொல்லும்படி இருண்டு, தனக்கு இடமாகிய விண்ணின்கண் இடியுடன் மேலே உளதாயிற்று. விசாலித்த நிலத்தின்கண் மலையிடத்து இளமையான மயிலின் ஆட்டம் கீழே உளதாயிற்று. (எனவே, விண்ணும், மண்ணும் கார்ப் பருவம் வந்ததைத் தெளிவாகக் காட்டி நிற்றலால்) இளைய மான் போலும் பெண்ணாகிய இவள் தலைவனைப் பிரிந்து உறையும் தனிமை இனி என்னாய்க் கழியுமோ!*

***குறிப்புரை :-*** *'இறந்துபாடாய்க் கழியுமோ' என்றபடி "இருண்ட" என்னும் பெயரெச்சம் "விண்" என்னும் இடப் பெயர் கொண்டது. கண்டமென இருண்ட விண் - கண்டம் போல நீல வானம். ஆல் உரும் - சத்திக்கின்ற இடி.*

*'இருண்டு' என்றே பாடம் ஓதலும் ஆம். விண்ட - அகன்ற. ஆல் - ஆலுதல்; முதனிலைத் தொழிற் பெயர். 'கொண்டல் மேலது; மயில் ஆலுதல் கீழது; இனி என்னாய்க் கழியும்' என்க. இதன் திணையும், துறையும் மேலனவே.*

***272. பொழிப்புரை :-*** *துணைவரின் பிரிவால் பருவங்கண்ட தலைவி வருந்திக் கூறுபவை. வானம்; தன்னிடத்து உள்ள மேகங்களின் வழி மின்னலாகிய ஒளி பொருந்திய வாளை உறையினின்றும் உருவி வீசி, இடி முழக்கமாகிய போர்முரசம் ஒலிக்க, எவ்விடமும் அகப்படக் கூடிய வில்லை (வான வில்லை) வளைத்து, எங்கும் நிறைந்த மழைத் தாரைகளாகிய வெள்ளிய அம்புகளை ஏவிப்*

***அகவற்பா***

**272.** **உறைகழி ஒள்வாள் மின்னி உருமெனும்**
**அறைகுரல் முரசம் ஆர்ப்பக்; கைபோய்**
**வெஞ்சிலை கோலி, விரிதுளி என்னும்**
**மின்சரந் துரந்தது வானே; நிலனே,**
**கடிய வாகிய களவநன் மலரொடு.** **5**

**கொடிய வாகிய தளவமும் அந்தண்**
**குலைமேம் பட்ட கோடலுங் கோபமோ(டு)**
**அலைமேம் பட்ட காந்தளும் இவற்றொடு**
**காயா வெந்துயர் தருமேல் அவரே**
**பொங்கிரும் புரிசை போக்கற வளைஇக்** **10**

**கங்குலும் பகலும் காவல் மேவி**
**மாசறு வேந்தன் பாசறை யோரே**
**யானே இன்னே**
**அலகில் ஆற்றல் அருச்சுனற்(கு) அஞ்ஞான்(று)**
**உலவா நல்வரம் அருளிய உத்தமன்.** **15**

**அந்தண் ஆரூர் சிந்தித்து மகிழா**
**மயரிய மாக்களைப் போலத்**
**துயருழந் தழியக் கண்துயி லாவே.** **4**

---

*போர்புரியா நின்றது; நிலம், கடிய களாமலர், கொடிய முல்லை மலர், குலையாக மேம்பட்ட அழகிய, குளிர்ந்த வெண்காந்தள் மலர், அலைவால் மேம்பட்ட செங்காந்தள் மலர், 'இந்திர கோபம்' என்னும் வண்டு காயா மலர், இவைகளுடன் கூடி கொடிய துன்பத்தைத் தாரா நின்றது. அவரோ (தலைவரோ) பகை மன்னரது காவல் மிக்க அரணை, வெளி வருவாரையும், உட்புகுவாரையும் அவற்றைச் செய்யாதவாறு தடுத்து முற்றுகையிட்டு, இரவும் பகலும் காவல் புரிதலை விரும்பிக்குற்றம் அற்றவனாகிய அரசன் பாசறைக்கண்ணே இருத்தலால் (எம்மையும், எமக்கு அவர் சொல்லிச் சென்ற சொல்லையும் நினைப்பாரல்லர்; ஆதலின்) யானோ இவ்விடத்திலே, அளவற்ற ஆற்றல் வாய்ந்த அருச்சுனனுக்கு அக்காலத்தில் அவன் போரில் இறந்து படாது வெற்றி பெறும்படி நல்ல வரத்தைக் கொடுத்த மேலோனாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள, அழகிய, குளிர்ச்சி மிக்க திருவாரூரை நினைத்து மகிழும் நல் ஊழ் இல்லாது, உலக மயக்கத்திற் கிடக்கும் மாக்களைப் போலத் துயரத்தையே நுகர்ந்து இறந்துபடும்படி என்னுடைய கண்கள் உறங்குகின்றில.*

***குறிப்புரை :-*** ***'இனியான் என் செய்வேன்' என்பது குறிப்பெச்சம். இதுவும் உரிப்பொருளாற் பாலை. வினைவயிற் பிரிந்த தலைவன் நீடத் தலைவி பருவங்***

### *வெண்பா*

**273.** **துயிலாநோய் யாம்தோன்றத் தோன்றித்தீத் தோன்ற,**
**மயிலால வந்ததால் மாதோ – அயலாய**
**அண்டத்துக் கப்பாலான் அந்திங்கட் கண்ணியான்,**
**கண்டத்துக் கொப்பாய கார். 5**

### *கட்டளைக் கலித்துறை*

**274.** **காரும் முழக்கொடு மின்னொடு வந்தது; காதலர்தம்**
**தேருந் தெருவுஞ் சிலம்பப் புகுந்தது; சில்வளைகள்**
**சோருஞ் சிலபல ஆங்கே நெரிந்தன; துன்னருநஞ்(சு)**
**ஆரும் மிடற்றண்ணல் ஆரூரன் ஐய அணங்கினுக்கே. 6**

---

*கண்டு ஆற்றாமை துறை. மயரிய - மயங்கிய. "கடிய, கொடிய" என்பன, 'மணம் பொருந்திய, கொடியில் உள்ள என்னும் பொருளவாயினும் 'கடுமையுடைய, கொடுமையுடைய' பிற நயங்களையுந் தந்தன. இதனுள் இயைபுருவகம் வந்தமை காண்க. இஃது இடையே குறளடி பெற்றமையால் இணைக்குறள் ஆசிரியப்பா. சிலை கோலி - வில்லினை வளைத்து. உரும் - இடி. ஆர்த்தல் - மிக்கு ஒலித்தல். மின்சரம் - ஒளியுடைய அம்பு. குலை - கொத்து. கோடல் - வெண்காந்தள். நல்வரம் - பாசுபதம் தந்த வரலாறு.*

***273. பொழிப்புரை :-*** *இப்பாடல் கார்காலத்துக்குரிய வர்ணனையாகும். துயிலாமைக்கு ஏதுவாகிய துன்பம் எம்மிடத்திலே தோன்றுமாறு தோன்றிப் பூவாகிய நெருப்புத் தோன்றும்படியும், மயில்கள் ஆடும்படியும் அடுக்கடுக்காய் உள்ள பல அண்டங்கட்கும் அப்பால் உள்ள பல அண்டங்கட்கும் அப்பால் உள்ளவனும், அழகிய திங்களாகிய கண்ணியைச் சூடினவனும் ஆகிய சிவபெருமானது கண்டத்துக்கு ஒப்பாய் உள்ள முகில் வந்துவிட்டது. கண்டத்தினுள் விடத்தை வைத்துத் தேவரைக் காத்தது போல யாமும் அபயம் பெற்று வாழ்வோம்.*

***குறிப்புரை :-*** *'இனித் தலைவர் வருவார்' என்பது குறிப்பெச்சம். 'வாராராயின் யாம் துயிலேம் என்பதை அவர் அறிவார்' என்றற்கு, 'துயிலாநோய் யாம் தோன்றக் கார் வந்தது' என்றாள். இது, 'பருவம் கண்டு தலைவி ஆற்றாள்' எனக் கருதி ஆற்றுவித்தற் பொருட்டுத் தலைவனை இயற் பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது. "நோய் யாம் தோன்ற" என இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் நின்றது. தோன்றித் தீ, உருவகம். ஆல், மாது, ஓ அசைகள். மயில் ஆலுதல் - மயில் ஆடுதல்.*

***274. பொழிப்புரை :-*** *மேகமும் இடியோடும், மின்னலோடும் வந்தது. தலைவர் சொல்லியபடி அவரது தேரும், தெருவும் ஆரவாரிக்கும்படி புகுந்தது.*

***அகவற்பா***

**275.** **அணங்குறை நெடுவரை அருமைபே ணாது,**
**மணங்கமழ் தெரியல் சூடி, வைகலும்**
**விடுசுடர் நெடுவேல் முன்னடி விளக்காக்**
**கடுவிசைக் கான்யாற்று நெடுநீர் நீந்தி**
**5** **ஒருதனி பெயரும் பொழுதில், புரிகுழல்**
**வான்அர மகளிர்நின் மல்வழங் ககலத்(து)**
**ஆனாக் காத லாகுவர் என்று**
**புலவி உள்ளமொடு பொருந்தாக் கண்ணள்,**
**கலைபிணை திரியக் கையற வெய்தி**
**10** **மெல்விரல் நெரித்து விம்மி வெய்துயிர்த்து,**

---

*நினைத்தற்கரிய விடத்தை உண்ட கண்டத்தினை உடைய முதல்வராகிய சிவபெருமானது ஆரூரை ஒத்தவளாகிய அழகிய தலைவி தன் கைவளைகள் மெலிவால் கழல்வனவாய் இருந்தவை இப்பொழுது பூரிப்பால் நெரிவனவாயின.*

***குறிப்புரை :-*** *இது, பிரிந்திருந்த தலைவன் தான் குறித்தபடி வந்தமை யறிந்து கண்டோர் கூறியது. "காரும், தேரும்" என்னும் உம்மைகள் எதிரது தழுவியதும், இறந்தது தழுவியதுமாய எச்ச உம்மைகள். "தெருவும்" என்னும் உம்மை உயர்வுச் சிறப்பு. 'அன்ன' என்பது கடைக் குறைந்து நின்றது. காரும் - இதுகாறும் துன்பஞ் செய்துவந்த கார் . முன்போலத் துன்பம் செய்ய எண்ணி வந்தது. ஆனால் காதலர் தேர் வரவைக் கண்டு ஏமாந்தது. சில்வளை - சிறிய வளையல்கள். துன்னுதல் - அருகணைதல். அணங்கி - தெய்வப்பெண். துன்னரும் - அணுகுதற்கு அறியதாகி.*

***275. பொழிப்புரை :-*** *தலைவ, தெய்வம் தங்கும் பெரிய மலைகளை 'அவை அத்தன்மைய' என்றும், 'ஏறுதற்கு அரியன' என்றும் எண்ணாது, நறுமணம் கமழும் மாலையைச் சூடிக் கொண்டு, நாள்தோறும், வீசுகின்ற ஒளியையுடைய நீண்ட உனது வேற்படையே உனக்கு முன்னே வழியை விளக்கும் விளக்காய் அமைய, மிக்க வேதத்தையுடைய கான்யாற்று நீண்ட நீரை நீந்திக் கடந்து, நீ ஒருவனே தனியாய் வரும்பொழுது, 'பின்னப்பட்ட கூந்தலையுடைய தேவ மகளிர் உன்னை, 'தேவன்' என மருண்டு, திண்மை வாய்ந்த உனது மார்பின் கண் பொருந்துதற்கு நீங்காக் காதல் மிகுகின்றவராய் உன் குணத்தை வேறுபடுத்தி விடுவர்' என்று, பகைவரது மூன்று ஊர்களும் ஒருங்கே எரிந்தொழியும்படி ஓர் அம்பையே ஆராய்ந்து எடுத்து எய்த, மாதொரு பாகனாகிய இறைவனது திருவாரூரில் நீர் வளத்தாற் சிறந்த பொய்கையிற் பூத்த தாமரை மலர் போலும் ஒளி பொருந்திய முகத்தையும், இளைய மயிலினது சாயல்போலும் சாயலினையும், ஏந்திய அணிகலன்களையும் உடைய என் தோழி உன்னை*

அல்லியங் கோதை அழலுற் றாஅங்(கு)
எல்லையில் இருந்துயர் எய்தினள் புல்லார்
திரிபுரம் எரிய ஒருகணை தெரிந்த
அரிவை பாகத் தண்ண லாரூர்
15 வளமலி கமல வாள்முகத்(து)
இளமயிற் சாயல் ஏந்திழை தானே. 7

***வெண்பா***

**276. இழையார் வனமுலை யீர்இத்தண் புனத்தின்**
**உழையாகப் போந்ததொன் றுண்டோ ? – பிழையாச்சீர்**
**அம்மான், அனலாடி, ஆரூர்க்கோன் அன்றுரித்த**
**கைம்மாநேர் அன்ன களிறு. 8**

---

*வெறுக்கும் உள்ளத்துடன் இமை குவியாத கண்களையுடையவளாய், எங்கள் குடில்களையடுத்து ஆண்மான்கள் பெண்மான்களோடே பிரியாது திரிதலைக் கண்டு செயலற்று ஆற்றாமையால் கையிலுள்ள மெல்லிய விரல்களை நெரித்துக் கொண்டு விம்மி வெப்பமாக மூச்செறிந்து, அக இதழோடு கூடிய பலவகை மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை ஒன்று கண்ணீர் விட்டு அழுதல்போல (இரவு முழுதும்) எல்லையில்லாத பெருந்துயரை எய்தி அழாநின்றாள்; (அவளை யான் ஆற்றுவிப்பது எங்ஙனம்?)*

***குறிப்புரை :-*** *ஈற்றில் வருவித்துரைத்தது குறிப்பெச்சம். இது தலைவன் களவொழுக்கத்தை நீட்டியாது வரைதலை வேண்டித் தோழி இரவு வருவானை 'வாரற்க' என இரவுக் குறி விலக்கியது. இது முதல் கரு, உரி முப்பொருளாலும் குறிஞ்சி. அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வங்கள்.*

*"கலை பிணை திரிய" என்றது, 'நீயும் அதுபோல இவளை வரைந்து கொண்டு பிரியாதிருத்தல் வேண்டும்' என்பதைக் குறித்த உள்ளுறை யுவமம். 'மணங்கமழ் தெரியல் சூடி' என்றது, அவரது மருட்சிக்கு மற்றுமொரு காரணம் உண்மை கூறியது. கலை - ஆண் மான். பிணை - பெண் மான். கலை - துகில். புல்லார் - பகைவர்.*

***276. பொழிப்புரை :-*** *அணிகலன்கள் நிறைந்த, அழகிய தனங்களை யுடையவர்களே, வறிது படாதப் புகழையுடைய பெரியோனும், தீயில் நின்று ஆடுவோனும், திருவாரூரில் உள்ள முதல்வனும் ஆகிய சிவபெருமான் முற்காலத்தில் உரித்த யானையே போன்ற அந்த யானை இந்தக் குளிர்ச்சியானப் புனத்தின் பக்கமாகப் போந்ததொருச் செயலை நீவிர் கண்டது உண்டோ?*

***குறிப்புரை :-*** *இஃது, இயற்கைப் புணர்ச்சியிலும், இடந்தலைப்பாட்டிலும், பாங்கற் கூட்டத்திலும் தலைவியைக் கூடி இன்புற்றத் தலைவன் பாங்கியிற்*

***கட்டளைக் கலித்துறை***

**277.** **களிறு வழங்க வழங்கா அதர்கதிர் வேல்துணையா**
**வெளிறு விரவ வருதிகண் டாய்விண்ணினின் றிழிந்து**
**பிளிறு குரற்கங்கை தாங்கிய பிஞ்ஞகன் பூங்கழல்மாட்(டு)**
**டொளிறு மணிக்கொடும் பூண்இமை யோர்செல்லும் ஓங்கிருளே.** **9**

***அகவற்பா***

**278.** **இருள்புரி கூந்தலும் எழில்நலம் சிதைந்தது**
**மருள்புரி வண்டறை மாலையும் பரிந்தது**
**ஒண்ணுதல் திலகமும் அழிந்தது; கண்ணும்**
**மைந்நிறம் ஒழிந்து செந்நிறம் எய்தி**
**5** **உள்நிறை கொடுமை உரைப்ப போன்றன;**

---

*கூட்டத்தின் பொருட்டு அவளை மதியுடம்படுத்தற்கு அவர் இருவரும் உள்வழிச் சென்று வேழம் வினாயது. "அன்ன" என்பது சுட்டு. இழை - அணிகள். உழையாக - இப்பக்கமாக. பிழையா - கெடாத, மாறாத. கைம்மா - கையையுடைய விலங்கு - யானை.*

***277. பொழிப்புரை :-*** *யானைகள் உலாவுதலால் மக்கள் செல்லாத வழியில் கையில் உள்ள வேல் ஒன்றே துணையாக, ஆகாயத்தினின்றும் இறங்கிய, ஒலிக்கும் ஒலியையுடைய கங்கையைச் சடையில் தாங்கிய தலைக் கோலத்தையுடைய சிவபெருமானது அழகிய திருவடிகளை வணங்குதற்பொருட்டு அவற்றை நோக்கி, ஒளிவீசுகின்ற இரத்தினங்களால் ஆயவளைந்த அணிகலன்களை அணிந்த தேவர் மட்டுமே செல்கின்ற மிகுந்த இருட் காலத்தில் நீ அத்தேவரைக் காண இங்கு வருகின்றாய்!*

***குறிப்புரை :-*** *இமையோர் செல்லும் ஓங்கிருள் - தேவச்சாதியர் வழிபாடு செய்யும் இரவுக்காலம். 'இது தகாது' என்பது குறிப்பெச்சம். இதன் திணையும், துறையும் மேல், "அணங்குறை நெடுவரை" எனப் போந்த பாட்டினவேயாம். 'அர்த்த யாம பூசையில் தேவர் சிவபெருமானைச் சென்று வணங்குவர்' என்பது பற்றி "பிஞ்ஞகன் பூங்கழல் மாட்டு இமையோர் செல்லும் இருள்" என்றார். கண்டாய், முன்னிலை அசை. ஒளிறு - விளக்கம், ஒளி.*

***278. பொழிப்புரை :-*** *இது தோழி கூற்று. நெருங்கிய சோலைகளைப் பக்கத்தே உடைய திருவாரூரில் விரும்பி உறைகின்ற அமுதமாய் உள்ளவனும், நறுமணத்தோடு மலர்கின்ற மாலையை அணிந்தவனும், மூன்று கண்களையுடையவனும் ஆகிய இறைவனது மராமரச் சோலையையுடைய திருச்சிராமலைச் சாரலில், வண்டுகள் வீழும் நறிய போது சிலவற்றைக் கொய்து வருதற் பொருட்டு, அடர்த்தியான காட்டில் இவளை யான் இப்பொழுதுதான்*

சேதகம் பரந்தது செவ்வாய்; மேதகு
குழைகெழு திருமுகம் வியர்ப்புள் ளூறுத்தி
இழைகெழு கொங்கையும் இன்சாந் தழீஇக்
கலையுந் துகிலும் நிலையிற் கலங்கி
10 என்னிது விளைந்த வாறென மற்றி(கு)

அன்னது அறிகிலம் யாமே; செறிபொழில்
அருகுடை ஆரூர் அமர்ந்துறை அமுதன்
முருகுவிரி தெரியல் முக்கண் மூர்த்தி
மராமரச் சோலைச் சிராமலைச் சாரல்
15 சுரும்பிவர் நறும்போது கொய்யப்

பெருஞ்செறு வனத்தில்யான் பிரிந்ததிப் பொழுதே. 10

***வெண்பா***

**279. பொழுது கழிந்தாலும் பூம்புனங்காத்(து) எள்கி
எழுது கொடியிடையாய், ஏகான்; – தொழுதமரர்
முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணான் நான்மறையான்
மன்னுஞ்சேய் போல்ஒருவன் வந்து. 11**

---

*பிரிந்து போய்வந்தேன். (நெடும்பொழுது தாழ்த்திலேன்; வந்து பார்க்கும் பொழுது) இவளுடைய இருள் போன்ற கூந்தல் எழுச்சியுடைய அழகு சிதைந்து குலைந்துள்ளது; வியப்பைத் தரும், வண்டுகள் ஒலிக்கும் மாலை அலங்கோலமாகக் கசங்கியுள்ளது, ஒளிபொருந்திய நெற்றியில் இட்டதிலகம் அழிந்துவிட்டது. கண்களில் தீட்டிய மை கலைய, கண்கள் சிவந்து, எவையோ சில கொடுமையைக் கூறுவன போல்வன போன்றன; சிவந்த வாய் அந்நிலை குலைந்தது; காதில் வெயர்ப்புடையதாக, அணிகலம் பொருந்திய தனங்களில் பூசப்பட்ட சந்தனம் அழிந்து, மேகலையும், உடையும் நெகிழ்ந்தமையால் 'இவ்வாறான இந்நிலை எத்தன்மையின் விளைவு' என அறியயாம் இயலேம்.*

***குறிப்புரை :-*** *இருள்புரி - கரிய. இருளை முறுக்கினாற் போன்று பின்னிய. பரிதல் - அறுதல். சிராமலை - தலைமையாகிய மலை. இது, தலைவி தலைவனது களவொழுக்கத்துட் பட்டமையைத் தலைவியது தோற்றம் பற்றித் தோழி குறிப்பால் உணர்ந்தது, திணை - குறிஞ்சி. "செறி பொழில்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க.*

***279. பொழிப்புரை :-*** *தேவர்கள் வணங்கித் தனது சந்நிதியை அடைகின்ற, நெருங்கிய கழல் அணிந்த திருவடியை உடையவனும், மூன்று கண்களை உடையவனும், நான்கு வேதங்களின் முதல்வனும் ஆகிய சிவபெருமான்றன் மைந் தனாகிய முருகன்போன்ற ஒருவன் நமது அழகிய புனத்திலே வந்து, பொழுது*

***கட்டளைக் கலித்துறை***

**280.** **வந்தார்; எதிர்சென்று நின்றேற்கு ஒளிரும்வண் தார்தழைகள்**
**தந்தார்; அவையொன்றும் மாற்றகில் லேன்; தக்கன் வேள்விசெற்ற**
**செந்தா மரைவண்ணன் தீர்த்தச் சடையன் சிராமலைவாய்க்**
**கொந்தார் பொழிலணி நந்தா வனத்துக் குளிர்புனத்தே.** **12**

***அகவற்பா***

**281.** **புனமயிற் சாயற் பூங்குழல் மடந்தை**
**மனைமலி செல்வம் மகிழா ளாகி**
**ஏதிலன் ஒருவன் காதலன் ஆக**
**விடுசுடர் நடுவண்நின்(று) அடுதலின் நிழலும்**
**5** **அடியகத் தொளிக்கும் ஆரழற் கானத்து.**

---

*போய்விட்டாலும் தான் போகாது, யாவரும் இகழும்படி காத்து நிற்கின்றான்; ஓவியத்தில் எழுதப்பட்டது, போன்ற அழகுடைய கொடிபோலும் இடையை உடையவளே!*

***குறிப்புரை :-*** *முன்னம் - மனம். முன்னஞ்சேர்தல் - மனத்துள் வைத்து அழுந்த எண்ணுதல். எள்கிப்போதல் - பயனற்ற இக்காவல் வேண்டுவதின்று என்று இகழ்ந்து அகலுதல். 'அவனுக்கு நான் என்ன சொல்வது' என்பது குறிப்பெச்சம். இது, தலைவனை மடல் விலக்கி அவனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைவியிடம் சென்று மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தது. இதுவும் குறிஞ்சியே. மறையான் - மறைகளால் பேசப்பட்டவன். மறையான் பொருளானவன். மன்னுஞ்சேய் - என்றும் கழியா இளமையுடைய முருகன்.*

***280. பொழிப்புரை :-*** *(தோழீ!) தக்கன் வேள்வியை அழித்த, செந்தாமரை மலர்போலும் நிறத்தையும், கங்கையைத் தரித்த சடையையும் உடைய சிவபெருமானது திருச்சிராமலையின் கண், பூங்கொத்துக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்டு, நமக்கே உரித்தாய் நாம் சென்று விளையாடுகின்ற நந்த வனத்தின் நடுவிலே நாம் இருக்கின்ற புனத்தின் கண் ஆடவர் ஒருவர் தனியே வந்தார். ('இஃது என்' என்று வினாவ) யான் அவன் எதிரே சென்றபொழுது அவர் அழகிய மாலையையும், தழையையும் ('இவை எங்கும் கிடைத்தற்கு அரிய' என்று சொல்லித்) தந்தார். அவற்றுள் ஒன்றையும் யான் மறுக்க மாட்டாதவளாய் வாங்கிக் கொண்டேன்.*

***குறிப்புரை :-*** *இதுவும் மேற்கூறிய வகையில் தழை ஏற்பித்தது.*

***281. பொழிப்புரை :-*** *தலைமகனுடன் தலைமகள் செல்ல அதனைக்கண்ட செவிலி கவன்று கூறியது. முறைமையறியாத, 'இயமன்' என்னும் பெயரையும், கொடிய தொழிலையும் உடைய ஒருவனது வலிமையை அழித்த பெருமான்*

வெவ்வினை வேடர் துடிக்குரல் வெரீஇ
மெய்விதிர் எறியுஞ் செவ்விய ளாகி
முள்ளிலை யீந்தும் முளிதாள் இலவமும்
வெள்ளிலும் பரந்த வெள்ளிடை மருங்கில்
10 கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப்

பாசந் தின்ற தேய்கால் உம்பர்
மரையதள் வேய்ந்து மயிர்ப்புன் குரம்பை
விரிநரைக் கூந்தல் வெள்வாய் மறத்தியர்
விருந்தா யினள்கொல் தானே! திருந்தாக்
15 கூற்றெனப் பெயரிய கொடுந்தொழில் ஒருவன்

---

*எழுந்தருளியுள்ள திருவாரூர் வயல்களில் பூத்துள்ள தாமரை மலர் போலும் சிறிய பாதங்களையும் கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயையும், குயிலின் குரலைப் போன்ற குரலையும், அழகிய மயில்போன்ற சாயலையும், பூவையணிந்த கூந்தலையும் உடையவள் ஆகிய, பூங்கொடி போல்பவளாகிய என் மகள், இந்த இல்லத்தில் நிறைந்த செல்வத்தில் திளைத்தலை விரும்பாதவளாய், அயலான் ஒருவனைத் தன் காதலனாகக் கொண்டு, (அவன்பின்னே போய்) ஒளியை வீசுகின்ற செங்கதிர் வானத்தின் உச்சியில் நின்று காய்தலால் நிலத்தில் உள்ளோரது நிழல்களும் அவர் அவர் அடிக்கீழ் வந்து ஒடுங்குகின்ற (எனவே, எந்த நிழலும் இல்லாத) பொறுத்தற்கரிய வெப்பத்தையுடைய சுரத்தின்கண் கொடுந்தொழிலை உடைய மறவர்கள் முழக்குகின்ற பறைகளின் ஓசையைக் கேட்டு உடம்பு நடுங்கும் நிலையை உடையவளாய் முள்போன்ற இலையை யுடைய ஈச்ச மரமும், அடிமரமும் உலர்ந்துபோன இலவ மரமும், (இலையுதிர்ந்த) விளா மரமும் ஆங்காங்கு உள்ள, மறைவு யாதும் இன்றி வெட்ட வெளியாகிய இடத்தில், கடுமையானக் குரலையுடைய, சினம் பொருந்திய நாய்களை நீண்ட சங்கிலியாற் கட்டிவைத்திருத்தலால் அந்தச் சங்கிலியால் தேய்ந்து போனக் கால்களின் மேல் மான்தோலை வேய்ந்து, அதனால் அதன் மயிர்கள் தோன்றும் கூரையையுடைய சிறிய குடில்களில் வாழும் பரட்டையாய் நரைத்துப்போன தலை மயிரையும், பாசடை இன்மையின் வெளுத்த வாயினையும் உடைய மறத்தியர்களுக்கு விருந்தாய்ப் போய்த் தங்கினாளோ!*

***குறிப்புரை :-** ஏதிலன் - சாதல் ஒன்றொழிய வேறு தொடர்பில்லாத பிறன். விடுசுடர் - கதிரவன். அடுதல் - எரிதல். மெய் விதிர் எறிதல் - உடல் நடுக்குறுதல். முளிதாள் - தாளில் முள் உடைய. முளி - உலர்ந்த. வெள்ளில் - விண். பாசம் - கயிறு. கதம் - விரைவு. மரை அதள் - மான் தோல். புள்குரம்பை - சிறுகுடில். மறத்தியர் - பாலை நில மகளிர். 'ஒன்றும் தெரியவில்லை' என்பது குறிப்பெச்சம். இது தலைவி தலைவனோடு உடன்போயினமை அறிந்து செவிலி பின் தேடிச் சென்றது.*

ஆற்றல் செற்ற அண்ணல் ஆரூர்ச்
செய்வளர் கமலச் சீறடிக்
கொவ்வைச் செவ்வாய்க் குயில்மொழிக் கொடியே. 13

***வெண்பா***

**282.** **கொடியேர் நுடங்கிடையாள் கொய்தாரான் பின்னே**
**அடியால் நடந்தடைந்தா ள்ஆவாக – பொடியாக**
**நண்ணார்ஊர் மூன்றெரித்த நாகஞ்சேர் திண்சிலையான்**
**தண்ணாரூர் சூழ்ந்த தடம்.** 14

***கட்டளைக் கலித்துறை***

**283.** தடப்பாற் புனற்சடைச் சங்கரன் தண்மதி போல்முகத்து
மடப்பால் மடந்தை மலரணைச் சேக்கையிற் பாசம்பிரீஇ
இடப்பால் திரியின் வெருவும்; இருஞ்சுரஞ் சென்றனளால்
படப்பா லனஅல்ல வால்தமி யேன்தையல் பட்டனவே. 15

---

***282. பொழிப்புரை :-*** *பகைவரது முப்புரத்தைச் சாம்பல் ஆகும்படி எரித்த, பாம்பே நாணாகச் சேர்ந்த வலிய வில்லை உடைய பெருமானது குளிர்ந்த திருவாரூர்க்கு அயலாக உள்ள கொடிய வழியிலே கொடிபோலத் துவளுகின்ற இடையினையுடைய என் மகள் கத்தரியால் மட்டம் செய்யப்பட்ட மாலையை அணிந்த ஓர் அயலான்பின்னே காலால் நடந்தே சென்றாள்; இஃது இரங்கத் தக்கது.*

***குறிப்புரை :-*** *நண்ணார் - பகைவர். முப்புரவாணர். நாகம் - மலை (மேரு). சிலை - வில். 'அடைந்தாளாக' என்பது பாடமன்று. "கொய்தார்" என்பதனைச் சினைவினை முதல்மேல் ஏற்றப்பட்டதாகக் கொண்டு, 'கொய்யப்பட்ட மலரால் ஆகிய மாலை' என்றலும் ஆம். இதுவும் முன்னைப் பாட்டின் துறையே. "திண்சிலை" என்றது, 'மலையாகிய வில்' என்பதனைக் குறிப்பால் உணர்த்தியது. தடம் - குளிர்ந்த இடம். செவிலி தன் மகள் "இனிதே ஆரூர் சென்ற அடைவாளாக" என வாழ்த்துகின்றாள்.*

***283. பொழிப்புரை :-*** *தீர்த்தங்களில் இருக்கற் பாலதாய நீரை சடையிலே உடைய சிவபெருமான் அணிந்துள்ள பிறை போலும் நெற்றியையுடைய, பேதைமைப்பாலளாகிய என் மகள் இயல்பாக மலர் அணையாகிய படுக்கையினின்றும் சிறிது வெறுத்து நீங்கி இடம் மாறினாலும் அஞ்சி வருந்துவாள். அத்தகையவள் இப்பொழுது பெரிய பாலை நிலத்திலே நடந்து சென்றாள். தமியேன் மகள் இப்பொழுது அடைந்த துன்பங்கள் அவள் அடையத்தக்கன அல்ல.*

***குறிப்புரை :-*** *தடம்பால் புனல் - பெருந்தடத்தின் தன்மை கொண்ட பெரிய*

***அகவற்பா***

**284.** **பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி**
**நட்ட கல்லும் மூதூர் நத்தமும்**
**பரல்முரம் பதரும் அல்லது படுமழை**
**வரல்முறை அறியா வல்வெயிற் கானத்துத்**
**5** **தேன்இவர் கோதை செல்ல மானினம்**

**அம்சில் ஓதி நோக்கிற்கு அழிந்து**
**நெஞ்செரி வுடைமையின் விலக்காது விடுக;**
**கொங்கைக்(கு) அழிந்து குன்றிடை அடைந்த**
**கொங்கிவர் கோங்கமுஞ் செலவுடன் படுக**
**10** **மென்றோட்(கு) உடைந்து வெயில்நிலை நின்ற**

---

*நீர். பால் - பக்கம். புனல் - கங்கை. இதுவும் மேல்வந்த துறையே. “தடப்பாற் புனல்” என்றது. ‘ஆகாய கங்கை’ என்றபடி “முகம்” என்றது நெற்றியை. இங்கு உவமிக்கப்படுவதற்கு உரியது அதுவேயாகலின் பாசம் - விருப்பம். அதனைப் பிரிதலாவது அதன் மேற்றானே கிடத்தலைச் சிறிது வெறுத்தலாம். பிரீஇ - பிரிந்து. மடப்பால் - மடம் கொண்ட. பால் - பகுதி. மடமை - பெண்மைக் குணங்கள் நான்கினுள் ஒன்று. மடந்தை - பெண். சேக்கை - படுக்கை.*

***284. பொழிப்புரை :-*** *நலத்தால் தகுதிப் பட்ட, அலையும் நீரையுடைய திருவாரூரில் விரும்பி உறைகின்ற அமுதமாகியவனும், மான் பொருந்திய கையை உடையவனும், கண் பொருந்திய நெற்றியை உடையவனும் ஆகிய எம் தந்தை கொன்றை மாலையோடு ஒக்க அணிந்த கண்ணியாதற்கு அமைந்த நறுமணத்தோடு கூடிய மலர்களையுடைய குராமரமே, போரில் இறந்து பட்டோரது பெயர்களையும், அவர் செய்த வீரச் செயல்களையும் எழுதி நடப்பட்ட கற்களும், பழையனவாகிய குடில்களையுடைய சீறூர்களும், பரற்கற்கள் நிறைந்த அருவழிகளும் அல்லது, வானின்றும் வீழ்கின்ற பெய்தலை ஒரு காலத்தும் கண்டிராத மிக்க வெயிலையுடைய சுரத்தில்; தேன் ததும்பும் மாலையை அணிந்த என் மகள் செல்லும் பொழுதும் மான் கூட்டம் அவளது பார்வைக்குத் தோற்றுப் போன பகைமையால் மனம் வெதும்பி விலக்காது போகட்டும்; அவளது கொங்கைகளுக்குத் தோற்றுப் போய் மலையிடத்தே ஓடி நின்ற, மணம் மிக்க மலர்களையுடைய கோங்க மரங்கள் அவளை விலக்காமல் பார்த்துக் கொண்டிருக்கட்டும்; அவளது மெல்லிய தோள்களுக்குத் தோற்றுப் போய் வெயிலிலே நின்று வருந்துகின்ற மூங்கில்கள் அவளை விலக்காமல் ஓரிடத்தில் ஒதுங்கியிருக்கட்டும்; பெரிய சுரத்திடையிலே நாள்தோறும் ஆயிரம் பாவைகளைப் பெற்று வளர்க்கின்ற நீ அவளை விலக்காது குற்றத்திற்கு மிகவும் ஆளாயினை. இது செவிலி கூற்றாகும்.*

குன்ற வேய்களும் கூற்றடைந் தொழிக;
மாயிருங் கடற்றிடை வைகல் ஆயிரம்
பாவையை வளர்ப்போய் நீநனி பாவையை
விலக்காது பிழைத்தனை மாதோ! நலத்தகும்
15 அலைபுனல் ஆரூர் அமர்ந்துறை அமுதன்

கலையமர் கையன் கண்ணுதல் எந்தை
தொங்கலஞ் சடைமுடிக் கணிந்த
கொங்கலர் கண்ணி யாயின குரவே. 16

***வெண்பா***

**285. குரவங் கமழ்கோதை கோதைவே லோன்பின்**
**விரவுங் கடுங்கானம் வெவ்வாய் – அரவம்**
**சடைக்கணிந்த சங்கரன் தார்மதனன் றன்னைக்**
**கடைக்கணித்த தீயிற் கடிது. 17**

---

***குறிப்புரை :-*** *'இது நன்றோ' என்றபடி குராமலர் பாவை போலத் தோன்றுதலின், அது பாவையைப் பெற்று வளர்ப்பதாக இலக்கியங்களில் கூறப்படும். 'பாவையைப் பெற்று வளர்க்கும் அன்பின்மேலும், உனது மலரைச் சிலர் விரும்பியணியும் தகுதியையும் உடையை யன்றோ' என்றற்கு, "எந்தை அணிந்த கண்ணியாயின குரவே" என்றாள். 'அணிந்த கண்ணிக் கொங்கலர் குரவே' என மாற்றியுரைக்க. "குரா மலரோடு அரா மதியம் சடைமேற் கொண்டார்" என்னும் திரு முறையால் குராமலர் இறைவனுக்கு இனிதாதல் அறிக. இது மேலைத் துறையில் குரவொடு புலம்பல். பட்டோர் - இறந்தோர். மூதூர் நத்தம் - பழைய ஊர் இருந்து அழிந்து போன இடம். பரல் - பருக்கைக் கற்கள். அதர் - வழி. வேய் - மூங்கில். மாயிரும் கடறு - பெரிய பாலை நிலம். பாவை - இங்கு குரா மலர். கலையமர் கையன் - மான் கன்று ஏந்திய கையன். கொங்கு இவர் - மணம் வீசும். கடறு - காடு, பாலை நிலம்.*

***285. பொழிப்புரை :-*** *குரா மலர் மணம் கமழ்கின்ற மாலையை அணிந்த என் மகள் மாலையணிந்த வேலை ஏந்தியவன் பின்னே சென்ற கொடுங்காடு, கொடிய நஞ்சுபொருந்திய வாயையுடைய பாம்பைச் சடையிலே அணிந்த சிவபெருமான், மாலையணிந்த மன்மதனை நெற்றிக் கண்ணால் சிறிதே நோக்கிய பொழுது எழுந்த தீயினும் கொடியது.*

***குறிப்புரை :-*** *கமழ் கோதை - மணம் வீசும் கூந்தல். கோதை வேல் - மாலை அணிந்த வேல். 'அதில் அவள் எப்படிச் சென்றாள்' என்றபடி. இதுவும் செவிலி புலம்பல். கடிது - கொடுமை. வெவ்வாய் - நஞ்சு கொண்ட கொடிய வாய். குரவம் - குராமலர். சுரம் - காடு.*

***கட்டளைக் கலித்துறை***

**286.** கடிமலர்க் கொன்றையுந் திங்களுஞ் செங்கண் அரவும்அங்கண்
முடிமலர் ஆக்கிய முக்கணக் கன்மிக்க செக்கரொக்கும்
படிமலர் மேனிப் பரமன் அடிபர வாதவர்போல்
அடிமலர் நோவ நடந்தோ கடந்ததெம் அம்மனையே. **18**

***அகவற்பா***

**287.** மனையுறைக் குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி
ஈன்இல் இழைக்க வேண்டி ஆனா
அன்புபொறை கூர மேன்மேல் முயங்கிக்
5 கண்ணுடைக் கரும்பின் நுண்தோடு கவரும்.

பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுனல் ஊரன் பார்வை யாகி
மடக்கொடி மாதர்க்கு வலையாய்த் தோன்றிப்
படிற்று வாய்மொழி பலபா ராட்டி

---

*286. **பொழிப்புரை :-** எம் தாய் (மகள்) சுரத்தைக் கடந்தது, வாசனை பொருந்திய கொன்றையோடு திங்கள், சிவந்த கண்களையுடைய பாம்பு இவைகளையும் முடியில் அணியும் மலராகக் கொண்டு அணிந்துள்ள, மூன்று கண்களையுடைய திகம்பரனும், செவ்வானம் போலும் மெல்லிய மேனியை உடையவனும் ஆகிய சிவபெருமானது திருவடி மலர்களைத் துதியாதவர்கள் போலப் பாதங்களாகிய தாமரை மலர்கள் நோகும்படி நடந்தேயோ!*

***குறிப்புரை :-** இதுவும் மேலைத் துறை. எம் அம்மனை - எம் மகள்.*

*287. **பொழிப்புரை :-** பாணனே, இல்லங்களில் வாழும் குருவிகளில் வளைந்த அலகினையுடைய ஆண் குருவி ஒன்று தன் பெட்டைக் குருவி கரு முதிர்ந்து முட்டையிடும் காலத்தை அடைந்திருப்பதை உணர்ந்து அது தங்கி முட்டையிடுவதற்கு உரிய கூடு ஒன்றைக் கட்டவேண்டி, அப்பெட்டையின் மேல் உளதாகிய அன்பு மிகுந்து தனக்குச் சுமையாதலால், பெட்டை மனம் வருந்தாதபடி அதனை அடிக்கடி தழுவி மகிழ்ச்சி உண்டாக்கிக் கொண்டு பக்கத்து வயலில் கணு முற்றி வளர்ந்திருக்கின்ற கரும்பின் சிறிய சோலைகளில் நார் உரிக்கின்ற வயல் வளம் மிகப்பொருந்திய, பெருமை நிறைந்த இல்லங்களையும், எப்பொழுதும் வற்றாது வரும் நீரினையும் உடைய ஊரை உடையவன் உன் தலைவன். அவன் கட்டிவைக்கும் பார்வை மிருகமாய், இளைய கொடிபோல்பவராகிய மகளிரை அவன் வலையில் வீழ்க்க வந்து, வஞ்சக வார்த்தைகள் பலவற்றை இனிமையாகச் சொல்லி, உள்ளத்தில் உள்ள*

10 உள்ளத் துள்ளது தெள்ளிதின் கரந்து
கள்ள நோக்கமொடு கைதொழு திறைஞ்சி
எம்மில் லோயே பாண அவனேல்
அமரரும் அறியா ஆதிமூர்த்தி
குமரன் தாதை குளிர்சடை இறைவன்
15 அறைகழல் எந்தை ஆரூர் ஆவணத்
துறையில் தூக்கும் எழில்மென் காட்சிக்
கண்ணடி அனைய நீர்மைப்
பண்ணுடைச் சொல்லியர் தம்பா லோனே. 19

---

*உண்மையை முற்றிலுமாக மறைத்துத் திருட்டுப் பார்வை பார்த்துக் கொண்டு, கள்ளக் கும்பிடுபோட்டு, (தலைவர் இங்கு உள்ளாரோ' எனப் பொய்யாக வினவிக் கொண்டு) எங்கள் இல்லத்திலே வந்து நிற்கின்றாய். (அவன் செய்தியை நீ அறியாயோ? அவன் இங்கா இருப்பான்?) அவனோ அமரரும் அறியா ஆதி மூர்த்தியும், முருகன் தந்தையும், நீரால் குளிர்ந்த சடையை உடைய இறைவனும், ஒலிக்கும் கழலை அணிந்தவனும், எம் தந்தையும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவாரூர்க் கடைத்தெருவில் கடைகளில் தொங்க விடப்பட்டுள்ள அழகிய தோற்றத்தையுடைய கண்ணாடிகளைப் போன்ற தன்மையை உடைய, பண்போல இனிமையாகப் பேசுகின்ற அத்தகைய பெண்டிர் இல்லங்களில் இருக்கின்றான்.*

*குறிப்புரை :-* செவ்வி - பருவம். (முட்டை ஈனும் பருவம்). ஈனில் இழைத்தல் - கூடு கட்டுதல். கண்ணாடி போன்ற தன்மையாவது அருகில் வந்தோர் யாராயினும், 'இன்னார், இனியார்' என்னும் வரையறையின்றி உடனே அகத்திட்டுக் கொள்ளுதல். எனவே, 'இந்நீர்மையுடையோர் வரைவின் மகளிர்' என்பது உணர்த்தியவாறு. இது, தலைவியை வாயில் வேண்டிய பாணனுக்குத் தலைவி வாயில் மறுத்தது. திணை - மருதம். துறை - காட்சி அறைகள். முயங்கி - தழுவி.

"மனை வாய்ச் சேவற்குருவிதன் பெடையை அடிக்கடி தழுவித் தலையளி செய்து, ஈன் இல் இழைக்கக் கரும்பின் நுண்தோடு கவரும் ஊரன்" என்றது, 'அக்குருவியின் அன்பு தானும் உன் தலைவனுக்கு இல்லை' எனத் தலைவி உள்ளுறையாகக் கழற்றுரை கூறினாள். அவ்வுள்ளுறைக்கண் பொதியப்பட்ட பொருளானே, தலைவி புதல்வனைப் பெறும் நிலையில் இருத்தலும், தலைவன் அதனையும் நோக்காது புறத்தொழுக்கினன் ஆயதும் பெறப்பட்டன. ஈன் இல், வினைத்தொகை.

*288. பொழிப்புரை :-* ஏ பாண்மகனே, 'மேலாய, இனிய, தண்ணிய கொன்றை மலரைச் சூடியுள்ள சிவபெருமானது திருவடிகளை யான் தலைமேற்

***வெண்பா***

**288. பாலாய சொல்லியர்க்கே சொல்லுபோய்ப்; பாண்மகனே,**
**ஏலா இங்(கு) என்னுக்(கு) இடுகின்றாய் ? – மேலாய**
**தேந்தண் கமழ்கொன்றைச் செஞ்சடையான் தாள்சூடும்**
**பூந்தண் புனலூரன் பொய். 20**

***கட்டளைக் கலித்துறை***

**289. பொய்யால் தொழவும் அருளும் இறைகண்டம் போல்இருண்ட**
**மையார் தடங்கண் மடந்தையர் கேட்கிற்பொல் லாதுவந்துன்**
**கையால் அடிதொடல்; செல்வனில் புல்லல் கலையளையல்**
**ஐயா இவைநன்கு கற்றாய் பெரிதும் அழகியவே. 21**

---

*கொள்பவன்; பொய்கூறேன்; உண்மையில் என்மேல் தவறு ஒன்றும் இல்லை' என்று தலைவன் கூறிய பொய்களையெல்லாம் இங்கே வந்து எதற்குக் கொட்டுகின்றாய்? இங்கே அவைகள் ஏலா. யாருடைய சொல் தலைவனுக்குப் பால்போல இனிக்கின்றதோ அவர்களிடத்தில் போய் அவைகளைச் சொல்லு; (கேட்டுக் கொள்வார்கள்). தலைமகள் பாணனுக்குக் கூறியது.*

*குறிப்புரை :- இதுவும் மேலைத் திணை, துறை. "சூடும்" என்றது, 'சூடுவேன்' எனச் சொல்வானது சொற்பற்றிக் கூறியது. ஏலா - ஏற்றுக் கொள்ளாத. என்னுக்கு - எதற்கு. இடுதல் - மொழிதல்.*

*289. பொழிப்புரை :- தலைவனே, இங்கே உன் கையினால் எம் காலைத் தொட்டு வணங்க வேண்டா. மகனை அன்போடு அணைப்பது போலக் காட்டி, அவ்வழியாக வந்து எம்மைச் சார வேண்டா. எம் உடையைப் பற்றி அலைக்கழிக்க வேண்டா. ஏனெனில், பொய்யாக வணங்கினாலும் அதற்கு அருள்செய்கின்ற சிவபெருமானது கண்டம் போலக் கறுத்த மைதீட்டிய, அகன்ற கண்களையுடைய உன் காதலிகள் இவற்றைக் கேள்விப்பட்டால் உனக்கு இடராய் முடியும். காதல் இன்றியும் உடையவன்போல நடித்தற்கு இச்செயல்களையெல்லாம் நன்கு கற்றிருக்கின்றாய். இம்முறைமை உனக்கு மிகவும் அழகியவாய் உள்ளன.*

*குறிப்புரை :- இது, பள்ளியிடத்து ஊடலில் புதல்வன் வாயிலாகத் தலைவன் ஊடல் தணிவிக்கத் தலைவி ஊடல் தணியாளாய்க் கூறியது. இதுவும் மருதத் திணை.*

*290. பொழிப்புரை :- நெஞ்சே, அழகுடையவாகிய கிண்கிணிகள் அடி மேல் ஒலிக்க, அடிக்கத் தக்கதாகிய சிறுபறையைத் தோளில் மாட்டிக்கொண்டு, சிறுதேரை இழுத்துக் கொண்டும், யானையாகச் செய்யப்பட்ட அதனை உருட்டிக் கொண்டும், தெருப் புழுதியிலே முழுகி, போர் செய்தற்குரிய ஆண் யானை தன்*

***அகவற்பா***

**290. அழகுறு கிண்கிணி அடிமிசை அரற்றத்**
**தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேர்ஈர்த்(து)**
**ஒருகளி(று) உருட்டி ஒண்பொடி ஆடிப்**
**பொருகளி றனைய பொக்கமொடு பிற்றாழ்ந்த**
**5 பூங்குழற் சிறாரொடு தூங்குநடை பயிற்றி**

**அக்கரை உடுத்தி ஐம்படை கட்டி**
**ஒக்கரை இருக்கும் ஒளிர்புன் குஞ்சிக்**
**குதலையங் கிளவிப் புதல்வன் தன்னை**
**உள்ளச் சொரிந்த வெள்ளத் தீம்பால்**
**10 உடைய வாகிய தடமென் கொங்கை**

---

*பெண் யானையினிடத்துக் கொள்ளும் இன்பம் போலும் இன்பத்தை உள்ளத்தில் எய்தி, தன்னைப் பின்பற்றிவரும் அழகிய கால் அணிகளை அணிந்த மற்றைச் சிறுவர்களுடன் சாய்ந்து சாய்ந்து நடக்கும் நடை பழகி, ஓரங்களில் கரையை உடைய சிறுதுண்டை இடையிலே சுற்றிக்கொண்டு, கழுத்திலே ஐம்படைத் தாலி அணிந்து, பின் எனது ஒக்கலிலே வந்து அமரும், விளங்குகின்ற, சிறிதே வளர்ந்த தலைமயிரையும், மழலைச் சொல்லையும் உடைய என் பிள்ளையை யான் நினைத்ததனால் சுரந்து பொழிந்த வெள்ளம்போலும் இனிய பாலை உடையனவாய் விட்ட என் பருத்த, மெல்லி கொங்கைகளை வெறுத்து பிரிந்து போய்விட்ட, மிக்க நீரையுடைய ஊரையுடைய தலைவனது அணிகலம் பொருந்திய மார்பினை, 'யான் வலியச் சென்று தழுவுவேன்' என்று முயன்று. (அஃது இயலாமையால்) பெரிதும் பேதைமையுடையை ஆயினாய்; நீ வாழ்வாயாக. (இனி அது வேண்டா) தான் தனது நீண்ட சடையிலே அணிந்துள்ள, வளைந்த, வெள்ளிய திங்களினது செழித்த நிலவோடொக்கும் சுடுவெண் பொடியை அணிந்து ஒளிவிடுகின்ற மார்பினையுடைய பெருமானது திருவாரூரில் வாய்க்கால்களில் உறுதியாகக் கட்டப்பட்ட மடைகளில் அப்பாற் செல்லாமல் தன் மேகம் தடையுண்டு நிற்கின்ற மிக்க நீர்போல, உறுதிப்பாட்டுடன் என்னிடத் திற்றானே நீங்காது நில்.*

*குறிப்புரை :- ஒண்பொடி - புழுதி. இது புதல்வற் பயந்து தன்தலைக்கடன் இறுத்து வாழும் தலைவி, தலைவன் பரத்தையிற் பிரிந்த வழி ஆற்றாமையால் அவள் உள்வழிச் செல்ல நினைத்து, நாண் தடுத்தலால் அஃது இயலாது நின்ற நெஞ்சினைக் கழறிக் கூறியது. இது, "புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு அகன்ற கிழவனைப் புலம்பு நனி காட்டி இயன்ற நெஞ்சம் தலைப்பெயர்த்து அருக்கி எதிர்பெய்து மறுத்த ஈரம்" என்பதன் பகுதியாம். இதுவும் மருதத் திணை. தாழ்தல் - தங்குதல். பொக்கம் - மிகுதி. ஒக்கரை - இடை.*

வேண்டாது பிரிந்த விரிபுனல் ஊரன்
பூண்தாங்(கு) அகலம் புல்குவன் எனப்போய்ப்
பெருமடம் உடையை; வாழி! வார்சடைக்
கொடுவெண் திங்கட் கொழுநில வேய்க்கும்
15 சுடுபொடி யணிந்த துளங்கொளி அகலத்(து)
அண்ணல் ஆரூர் திண்ணிதிற் செய்த
சிறைகெழு செழும்புனல் போல
நிறையொடு நீங்காய்; நெஞ்சம் நீயே. 22

***வெண்பா***

**291. நீயிருந்திங் கென்போது; நெஞ்சமே, நீளிருட்கண்**
**ஆயிரங்கை வட்டித் தனலாடித் – தீயரங்கத்(து)**
**தைவாய் அரவசைத்தான் நன்பணைத்தோட் கன்பமைத்த**
**செய்வான தூரன் திறம். 23**

---

*291. பொழிப்புரை :- நெஞ்சே, நம் தலைவனது செயற்கூறு நெடிய இருளிடத்து தீ எரிகின்ற அரங்கத்தின்கண், தீயின் நடுவே நின்று கைகள் ஆயிரத்தைச் சுழற்றி ஆடி, ஐந்தலை நாகத்தைக் கட்டியுள்ள சிவபெருமானது அழகிய தோள்களினிடத்து அன்பை அமைத்த செயல்களைச் செய்வதாயிற்று நீ இங்கு இருந்து பெறுவது என்! என்னுடன் வா, போவோம்.*

*குறிப்புரை :- 'நெஞ்சமே, ஊரன் திறம் அரவு அசைத்தான் தோட்கு அன்பு அமைத்த செய்வு ஆனது; நீ இங்கு இருந்து என்! போது' என இயைத்து முடிக்க. 'தோட்கு, தோட் கண்' என உருபு மயக்கம், அமைத்த - அமைத்தன. அமைத்தனவாகிய செயல்கள். செய்வு - செய்தல்; தொழிற்பெயர். இஃது அறப்புறம் காவற் பிரிவில் ஆற்றாளாய தலைவி தலைவன் உள்வழிச் செல்ல நினைந்து நெஞ்சத்தொடு கூறியது. இதுவும் பாலைத் திணையே. வட்டித்து - வீசி. நீளிருள் - சங்கார காலம்.*

*292. பொழிப்புரை :- நீண்ட சடையை உடைய சிவபெருமானது திருக் கடவூரில் உள்ள குளத்தில் அதன் துறைகளில் நிறைய பல ஆயிரம் ஆம்பல் மலர்கள் பூத்திருக்க, அவற்றின் இடையில் மணம் மிக்க தாமரை மலர் ஒன்றே பூத்திருப்பினும் அந்தக் குளம் 'தாமரைக் குளம், என்று தானே புகழப்படும்? ஆகையால் வீரம் அமைந்த வேலை ஏந்திய தலைவன் எமக்கு அருள் பண்ணாமல், திறமை நிறைந்த சில சொற்களையும் சிவந்த வாயினையும் உடைய எம் தங்கை மார்க்கே அருள் பண்ணட்டும்; (தலைவனாதல் எமக்குத்தானே? அவர்கட்கு ஏது?) தோழிக்குத் தலைவி கூறியது.*

*குறிப்புரை :- குளத்திற்குச் சிறப்புத் தருவது தாமரை மலரே ஆகையால்*

### *கட்டளைக் கலித்துறை*

**292.** **திறமலி சின்மொழிச் செந்துவர் வாயின எங்கையர்க்கே**
**மறவலி வேலோன் அருளுக வார்சடை யான்கடவூர்த்**
**துறைமலி ஆம்பல்பல் லாயிரத் துத்தமி யேயெழினும்**
**நறைமலி தாமரை தன்னதன் றோசொல்லும் நற்கயமே.** **24**

### *அகவற்பா*

**293.** **கயங்கெழு கருங்கடல் முதுகுதெரு மரலுற**
**இயங்குதிமில் கடவி எறிஇளி நுளையர்**
**நெய்ம்மீன் கவரல் வேண்டிக் கைம்மிகுத்**
**தால வட்டம் ஏய்ப்ப மீமிசை**
**5** **முடிகெழு தருவலை வீசி முந்நீர்க்**
**குடரென வாங்கிக் கொள்ளை கொண்ட**
**சுரிமுகச் சங்கும் சுடர்விடு பவளமும்**
**எரிகதிர் நித்திலத் தொகுதியுங் கூடி**
**விரிகதிர் நிலவுஞ் செக்கருந் தாரகை**
**10** **உருவது காட்டும் உலவாக் காட்சித்**

---

*அதைக் குறித்துத் தான் குளத்தை, 'தாமரைக் குளம்' எனப் பெருமையாகக் கூறுவார்கள். அதுபோல இல்லறத்திற்குத் துணையாகின்றவள் தலைவியே ஆகையால் 'அவளுக்குத் தலைவன்' எனச் சொல்லியே தலைவனை யாவரும் பாராட்டுவர் - என்றபடி. எனவே, இப்பாட்டில், "வார்சடையான்" என்பது முதலாக உள்ள பகுதி ஒட்டணியாம். இது, பரத்தையிற் பிரிவில் 'தலைவி ஆற்றாள்' எனக் கவன்ற தோழிக்குத் தலைவி 'ஆற்றுவல்' என்பதுபடக் கூறியது. எனவே இது முல்லைத் திணையாம். "தன்னது" என்பதில் தன், சாரியை. அதில் ஒன்று இரட்டியது செய்யுள் விகாரம். 'தனதாக' என ஆக்கம் விரிக்க. "சொல்லும்" என்பது 'சொல்லப்படும்' எனச் செயப்பாட்டுவினைப் பொருள் தந்தது. திறம் மலிதல் - பொருளும் இன்பமும் மிகப் பொருந்துதல். எங்கையர் - எம் இளைய தங்கைமார்.*

*293. பொழிப்புரை :- ஆழம் பொருந்திய கரிய கடலின் முதுகு அலையும்படி அலைத்துச் செல்கின்ற ஓடங்களைச் செலுத்திய 'இளி' என்னும் ஒருவகை ஒலியை வாயினின்றும் எழுப்புகின்ற வலைஞர்கள், 'நெய்ம்மீன்' என்னும் ஒருவகை மீனைப் பிடிக்க வேண்டிக் கைமிகுந்து முடிச்சுகள் பொருந்திய வலையை ஆலவட்டம் போலத் தோன்றும்படி மிக உயரத்திலே சென்று வீழ வீசி, வீசிய வலைகள் கடலின் குடர்போலத் தோன்றும்படி வெளியே இழுத்து வாங்கும் பொழுது அவ்வலையில் அகப்பட்ட குவிந்த முனையையுடைய சங்கும், ஒளி வீசுகின்ற பவளமும், பொற்கதிரைப் பரப்புகின்ற முத்துக்களும் ஆகிய*

தண்ணந் துறைவன் தடவரை அகலம்
கண்ணுறக் கண்டது முதலா ஒண்ணிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோளிழைத் திருக்குங் கொள்கை போல
15 மணிதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிகழ் அகலத்(து) அண்ணல் ஆரூர்
ஆர்கலி விழவின் அன்னதோர்
பேர்செலச் சிறந்தது சிறுநல் லூரே. 25

---

இவற்றின் தொகுதிகள் ஒருங்கு தொக்கு, வெள்ளொளியைப் பரப்புகின்ற திங்களும், செவ்வானமும், விண்மீன்களும் ஆகிய இவைகளின் உருவத்தைத் தோற்றுவிக்கின்ற, கெடாத காட்சியையுடைய, குளிர்ந்த, அழகிய துறையையுடைய தலைவனது அகன்ற மார்பினை ஒருமுறை கண்ணுறக் கண்டு, அங்ஙனம் கண்டது முதலாக இந்தச் சிறிய நல்ல ஊர், ஒளிபொருந்திய நிறத்தையுடைய கரும்பாம்பு இளந்திங்களை, 'அது முதிரட்டும், முதிரட்டும்' என்று விடாது பார்த்துக் கொண்டிருப்பது போல என்னைப் பற்றி விடாது எவற்றையேனும் சொல்லி, நீலமணிபோல விளங்குகின்ற கண்டத்தையுடைய பெருமான் எழுந்தருளியுள்ள, அழகு விளங்கும் விசாலித்த திருவாரூரில், நிறைந்த ஆரவாரத்தோடு கூடிய திருவிழாவில் அத்தலப் பெருமானது ஒருபெயரே எங்கும் ஒலித்தல்போலத் துறைவனது ஒரு பெயரே எங்கும் ஒலிக்கின்ற சிறப்பினை உடையதாயிற்று.

*குறிப்புரை :- திமில் - படகு. காளம் - கருமை. மாசுணம் - பாம்பு. கயம் - ஆழமுடைய. "இவ்வூரவர்க்குத் தொழில் வேறு இல்லை போலும்" என்பது குறிப்பெச்சம். இது வரையா நாளின் வந்தோன் முட்டிடக் கண்ட ஆயத்தார் அலர் கூறுதல் அறிந்த தலைவி முன்னிலைப் புறமொழியாற் கழறிக் கூறியது. இதன் பயன் உடன்போக்காதலின் இது நெய்தலிற் பாலையாயிற்று. நிலவு, செக்கர், தாரகை என்பவற்றைச் சங்கு முதலிய மூன்றனோடு நிரலே இயைக்க. "தண்ணந் துறைவன். கொள்கைபோல" என்றதனை,*

*கண்டது மன்னும் ஒருநாள்; அலர்மன்னும்*
*திங்களைப் பாம்புகொண் டற்று.*

*என்பதனோடு ஒப்பு நோக்கு. 'போலச் சிறந்தது' என்பது பாடம் அன்று. சுரி முகம் - உட் சுழிகளையுடைய முகம். தாரகை உரு - விண்மீன்களின் ஒளி. ஆர்கலி - கடல். அலர் - பழிச்சொல்.*

***வெண்பா***

**294. ஊரெலாந் துஞ்சி உலகெலாம் நள்ளென்று**
**பாரெலாம் பாடவிந்த பாயிருட்கண் – சீருலாம்**
**மாந்துறைவாய் ஈசன் மணிநீர் மறைக்காட்டுப்**
**பூந்துறைவாய் மேய்ந்துறங்கா புள். 26**

***கட்டளைக் கலித்துறை***

**295. புள்ளுந் துயின்று பொழுதிறு மாந்து கழுதுறங்கி**
**நள்நென்ற கங்குல் இருள்வாய்ப் பெருகிய வார்பனிநாள்**
**துள்ளுங் கலைக்கைச் சுடர்வண் ணனைத்தொழு வார்மனம்போன்(று)**
**உள்ளும் உருக ஒருவர்திண் தேர்வந் துலாத்தருமே. 27**

---

*294. பொழிப்புரை :- ஊர் முழுதும் உறங்கி, உலகம் முழுதும் நள்ளிரவு நிலையை அடைந்து, மண் முழுதிலும் உள்ள உயிர்கள் அனைத்தும் ஒலி அடங்கிய இப்பரந்த இருளிடத்து, (தோழீ! என்னை காரணமோ) அழகு பொருந்திய திருமாந்துறையில் உள்ள ஈசனுக்கு உரித்தாய் உள்ள திருமறைக் காட்டில் உள்ள நீல மணிபோலும் நீரினது துறையில் நிரம்ப இரைமேய்ந்த பின்னும் அதில் உள்ள பறவைகள் உறங்காமல் ஆரவாரிக்கின்றன.*

*குறிப்புரை :- செய்தென் எச்சங்கள் எண்ணின்கண் வந்தன. இஃது இரவுக் குறிக்கண் தலைவன் வந்தமையைத் தோழி தலைவிக்கு அவள் அறியுமாற்றாற் கூறியது. புட்கள் உறங்காமல் எழுந்து ஆரவாரித்தல் தலைவன் தான் வந்தமை குறிக்கும் குறியாக எழுப்புதலினாலேயாம் இது குறிஞ்சித் திணை.*

*295. பொழிப்புரை :- பறவைகளும் துயின்று, ஞாயிறு தன் கதிரும் தோன்றாமல் மறைந்து, பேயும் உறங்கி, இவ்வாறு 'பாதி' என உணரப்படுகின்ற இரவில், இருளிலே, மிக்கு ஒழுகும் பனிக் காலத்தில், நினைத்தால் மனம் நெகிழ்ந்துருகும்படி, துள்ளுகின்ற மானைக் கையில் ஏந்திய, தீ வண்ணனாகிய சிவபெருமானை வணங்குகின்றவர்களுடைய மனம் அப்பெருமானிடத்தே எவ்வாறு ஓய்வின்றி உலவுமோ அதுபோல ஒருவருடைய திண்ணிய தேர்வந்து வந்து உலவாநின்றது.*

*குறிப்புரை :- கழுது - பேய். துள்ளுங்கலை - துள்ளும் மான். 'ஊழது நிலை இவ்வாறாயிற்று' என்பது குறிப்பெச்சம். இஃது இரவுக் குறிக்கண் அல்ல குறிப்பட்டுத் தலைவனை எய்தாளாய தலைவி பின், வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறிக் கூறியது. இது குறிஞ்சித் திணை. இறுமாத்தல், இங்குச் செயலின்றி மடிந்திருத்தல். 'உள்ளும்' என்னும் உம்மை, உயர்வுச் சிறப்பு. உலாத்தரும் - உலாவும்.*

***அகவற்பா***

**296.** **உலாநீர்க் கங்கை ஒருசடைக் கரந்து**
**புலால்நீர் ஒழுகப் பொருகளி றுரித்த**
**பூத நாதன், ஆதி மூர்த்தி;**
**திருமட மலைமகட்(கு) ஒருகூறு கொடுத்துத்தன்**
**5** **அன்பின் அமைத்தவன் ஆரூர் நன்பகல்.**

**வலம்புரி அடுப்பா மாமுத் தரிசி**
**சலஞ்சலம் நிறைய ஏற்றி நலந்திகழ்**
**பவளச் செந்தீ மூட்டிப் பொலம்பட**
**இப்பியந் துடுப்பால் ஒப்பத் துழாவி**
**10** **அடாஅ(து) அட்ட அமுதம் வாய்மடுத்**

---

***296. பொழிப்புரை :-*** *(தோழீ, கேள்) பாய்ந்து செல்வதாகிய கங்கை நீரை ஒரு சடையிலே ஒளித்துவைத்தும், போர் செய்வதாகிய ஆண் யானை ஒன்றை உதிரம் ஒழுக உரித்தும் தன் ஆற்றலைப் புலப்படுத்திய பூதப் படைத் தலைவனும், யாவர்க்கும் முன்னேயுள்ள மூர்த்தியும், அழகிய, இளைய மலைமகட்கும் தனது திருமேனியில் பாதியைத் தந்து அன்பினாலே அவளை உடன் கொண்டு இருப்பவனும் ஆகிய சிவபெருமானது இத்திருவாரூரிலே (நாம் தெருவில் விளையாடுகின்ற பருவத்திலே நீ ஒருநாள் அன்னையோடு இருக்க நான் ஆயத்தாருடன் தெருவில்) வலம்புரிச் சங்குகளை அடுப்பாகக் கூட்டி, சலஞ்சலச் சங்கினைப் பானையாக ஏற்றி, அது நிறையச் சிறந்த முத்துக்களை அரிசியாக இட்டு, பவழங்களைச் சிவந்த தீயாக மூட்டி அழகு உண்டாக இப்பியை அகப்பையாக இட்டு நன்றாகத் துழாவி இவ்வாறு உண்மையாகச் சமைக்காமல் பொய்யாகச் சமைத்த சோற்றினை வாயில் இடாமலே நான் ஆயத்தாருடன் உண்ணப் போகும் பொழுது (சிறான் ஒருவன் வந்து) 'திருத்தமான அணிகளையும், பருத்த தோள்களையும், தேன்போன்ற சொற்களையும் உடைய மாதே, உங்கள் சிற்றில் அயர்வின்கண் விருந்து ஒன்று இல்லாத குறையை யான் நிரப்புதற்கு அருள்செய்வாயோ' என்று வினவி, என் கொங்கையின் முகங்களை நோக்கி, உள்ளத்து ஆசை வெளிப்படும்படி சிரித்து, என் அடிகளில் வீழ்ந்து வணங்கினான். அவனது செயல், நறுமணம் கமழும்படி காய்ச்சப்படுகின்ற வெண்ணெயிலே சிறிய, நுண்ணிய நீர்த்துளி ஒன்று வீழின் அந்நெய் முழுவதும் அதனாலே ஆரவாரித்துப் பொங்குதல் போல யான் என் உடம்பு முழுதும் அவனாகி விட்டது போலும் உணர்ச்சியை அடைந்தேன்.*

***குறிப்புரை :-*** *உலாநீர் - ஓடும் நீர். புலால் நீர் - இரத்தம். பொருகளிறு - சண்டைக்கு வரும் யானை. 'இஃது இளமைக் காலத்தில் நிகழ்ந்தது' என்பது இசை யெச்சம். 'இதனை நம் தாய்க்கு நீ சொல்லுதல் வேண்டும்' என்பது குறிப்பு.*

திடாஅ ஆயமோடு உண்ணும் பொழுதில்
திருந்திழைப் பணைத்தோள் தேமொழி மாதே,
விருந்தின் அடியேற்(கு) ருளுதி யோஎன
முலைமுகம் நோக்கி முறுவலித் திறைஞ்சலின்
15 நறைகமழ் வெண்ணெய்ச் சிறுநுண் துள்ளி

பொங்குபுனல் உற்றது போலஎன்
அங்க மெல்லாந் தானா யினனே. 28

***வெண்பா***

**297. ஆயினஅன்(பு) ஆரே அழிப்பர்? அனலாடி**
**பேயினவன் பார்ஓம்பும் பேரருளான் – தீயினவன்**
**கண்ணாளன் ஆரூர்க், கடலார் மடப்பாவை**
**தண்ணாருங் கொங்கைக்கே தாழ்ந்து. 29**

---

*இது களவொழுக்கத்தில் அது வெளிப்படாத வகையில் ஒழுகிய தலைவி தமர் வேற்று வரைவிற்கு முயல்வதை அறிந்து தானே தன் தோழிக்குப் படைத்து மொழியால் அறத்தொடு நின்றது. இதுவும் குறிஞ்சித் திணை. "பூத நாதன்" என்பதற்கு, 'உயிர்கட்கு முதல்வன்' என உரைத்தலும் ஆம். தனது ஊரையே வேறுபோலக் கூறினார். ஆதலின், ''இவ் ஆரூர்'' எனச் சுட்டுவருவித்துக் கண்ணுருபு விரிக்க. 'நல்லதொரு விளையாட்டு நிகழ்ந்த பகல்' என்பாள் பகலை, "நன் பகல்" எனச் சிறப்பித்துக் கூறினார். "துடுப்பு" என்றாராயினும் சோற்றைத் துழாவுவது அகப்பையேயாதல்பற்றி அதற்கு அவ்வாறு உரைக்கப்பட்டது. 'வாய் மடுத்திடா' என்பது ஒரு சொல். ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'துளி' என்பது "துள்ளி" என விரித்தல் பெற்றது. தான் - அவன் "ஆயினன்" என்பது தன்மை ஒருமை வினைமுற்று. சலஞ்சலம் - சங்கு. ஆயம் - ஒத்த தோழியர் கூட்டம்.*

***297. பொழிப்புரை :- தீயில் நின்று ஆடுபவனும், பேய்க் கூட்டத்தை உடையவனும், உலகத்தைக் காக்கும் பேரருளாளனும், நெருப்புப் பொருந்திய கண்ணை உடையவனும் ஆகிய சிவபெருமானது திருவாரூரோடு ஒத்த, கடற்கரைக் கண் உள்ள, இளையபரவை போல்வாளது குளிர்ச்சி நிறைந்த கொங்கையின் கண்ணே தங்கிவிட்ட அன்பினை இனி அழிப்பவர் யார்?***

***குறிப்புரை :-** கடலார் - கடல் போன்ற பெருந்தன்மை குணமுடையவன். **கண்ணாளன் - கண் போன்றவன். இது, குற்றம் காட்டிய வாயில் பெட்ப (கழற்றுரை கூறிய பாங்கன் பின் தன்னை விரும்பும்படி) தலைவன் தன் ஆற்றாமை கூறிக் கழற்றெதிர் மறுத்தது. இது நெய்தலிற் குறிஞ்சி மயங்கியது. "ஆடி" என்பது***

***கட்டளை கலித்துறை***

**298. தாழ்ந்து கிடந்த சடைமுடிச் சங்கரன் தாள்பணியா(து)**
**தாழ்ந்து கிடந்துநை வார்கிளை போல்அய் வேற்கிரங்கிச்**
**சூழ்ந்த கிடந்த கரைமேல் திரையென்னும் கையெறிந்து**
**வீழ்ந்து கிடந்தல றித்துயி லாதிவ் விரிகடலே. 30**

**திருச்சிற்றம்பலம்**

---

*பெயர். "பேயினவன்" என்பதில் 'இன்' சாரியை; அகரம் பெயரெச்ச விகுதி 'வன்கண்' என்க. 'ஆரூர் போலும் மடப்பாவை' என்க. கொங்கைக்கு, 'கொங்கைக்கண்' என உருபு மயக்கம். தாழ்ந்து 'ஆயின அன்பு' என மேலே கூட்டுக. தாழ்தல் - தங்குதல்.*

***298. பொழிப்புரை :-*** *தாழ்ந்து தொங்குகின்ற சடைமுடியை உடைய, 'சங்கரன்' என்னும் பெயரினன் ஆகிய சிவபெருமானது திருவடிகளை வணங்காமையால் துன்பத்தில் ஆழ்ந்து கிடந்து வருந்துவாரது சுற்றம் போல வருந்துகின்ற என்பொருட்டு இரங்கி இந்த அகன்ற கடல் தன்னைச் சூழ்ந்து கிடக்கின்ற கரைமேல் அலைகளாகிய கையை அடித்து அடித்து, தரைமேல் வீழ்ந்து, வாய்விட்டு அலறிக் கொண்டு உறங்காமல் உள்ளது.*

***குறிப்புரை :-*** *தாழ்ந்து - தொங்கிய. 'பிறர் ஒருவரும் என்பொருட்டு இரங்குவார் இல்லை' என்பது கருத்து. இது, 'தாளாண் எதிரும் பக்கம்' எனப்படும். பொருள் வயிற் பிரிவின் கண் தலைவன் நீட ஆற்றாளாய தலைவி தூது செல்லாத பாங்கியைப் புலந்து கடலை முன்னிலைப்படுத்துக் கூறி இரங்கியது. இதனை, 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்பர். இது நெய்தல் திணை, பணியாதவரே யன்றி அவர் சுற்றமும் வருந்தும் நிலையை உடைத்தாதல் பற்றி, "நைவார் கிளைபோல் அயர்வேற்கு" என்றாள்.*

***திருவாரூர் மும்மணிக் கோவை முற்றிற்று.***

## 8. சேரமான் பெருமாள் நாயனார்

*அருளிச்செய்த*

## திருக்கைலாய ஞானஉலா

***கலிவெண்பா***

***திருச்சிற்றம்பலம்***

### 299. தலைவன் புகழ் - சிவத்தின் சொரூப இலக்கணம்

**கண்ணி–1 திருமாலும் நான்முகனும் தேர்ந்துணரா(து) அங்கண்**
**அருமால் உற; அழலாய் நின்ற – பெருமான்**

---

*உலா என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று.*

*திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்வகை*
*மறந்தயர வந்தான் மறுகென் - றறைந்தகலி*
*வெண்பா உலாவாம்*

*என இதற்கு இலக்கணம் கூறுவர் வச்சணந்தி மாலை ஆசிரியர். இப்பிரபந்தம் உலாச்செய்யுள் எனவும், உலாப்புறம் எனவும் வழங்கப்படும்.*

*299. பொழிப்புரை :- 'உலா' என்னும் பிரபந்தம் பற்றிய இலக்கணக் குறிப்புத் தொல்காப்பியத்தில்,*

*"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப்" என்னும் நூற்பாவாற் பெறப்பட்டது. அஃதாவது, "தலைவன் ஒருவனைப் பாடாண் பகுதியால் பாடக் கருதும் புலவர், அவன் தன் ஊரில் உலாப்போதுங்கால் அவ்வுலாவில் அவனைக் கண்டு, பேதை முதல் பேரிளம்பெண் ஈறான எழுவகைப் பருவத்து மகளிரும் காதல் கொண்டதாகக் கற்பித்துப் பாடப்படுவது - உலா - என்னும் பிரபந்தம்" என்பதாகும்.*

*'இங்ஙனம் காதல் கொண்டு வருந்தினாராகக் கூறப்படுவோர் பொது மகளிரேயன்றிக் குலமகளிர் அல்லர்' என்பது மேற்காட்டிய அந்நூற்பாவில்,*

*"வழக்கொடு சிவணிய வகைமை யான"*

*என்றதனால் பெறப்படும் என்பது அதற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையான் விளங்கும்.*

*'உலாக் கலிவெண்பாவானே பாடப்படும்' என்பர். பஃறொடை வெண்பாவே பிற்காலத்தில் "கலி வெண்பா" என்னும் மரூஉ வழக்கைப் பெற்றது. அதனால்,*

*'கைலைப் பெருமானைப் பற்றிய உலா' ஆதலின், 'கைலாய உலா' என்றும், வெளிநோக்கில் காமம் பொருளாக வந்தது போலத் தோன்றினும் உள்நோக்கில் ஞானம் பொருளாகவே வந்தமையால் ஞானஉலா என்னும் பெயர்பெற்றது.*

*இறைவன் மேல் அடிநிமிர் கிளவியாய் ஓர் யாப்பான செய்யுளால் அமைந்த முதல் உலா இதுவே யாதலின் இஃது, 'ஆதியுலா' என்றும் வழங்கப்படும்.*

*'இதன் ஆசிரியராகிய சேரமான் பெருமாள் நாயனார் வெள்ளை யானை மேற் சென்ற தம் தோழராகிய சுந்தரருடன் தாம் குதிரைமேற் சென்று கைலையை அடைந்தபொழுது, கைலைப் பெருமான் அருள்கூர்ந்து திருச்செவி சாத்தியருள அப்பெருமான் திருமுன்பில் நாயனார் அரங்கேற்ற, அங்கிருந்து இதனைக் கேட்ட ஐயனார் திருப்பிடவூரில் வந்து இதனை மண்ணுலக மக்களுக்கு அருளிச் செய்தார்' என்னும் வரலாற்றினைப் பெரிய புராணத்துட் காண்க.*

*இதனானே, "ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ்" எனச் சேக்கிழார் அருளிச் செய்தபடி தமிழ்மொழி திருக்கைலை அளவும் சென்று விளங்கும் சிறப்பினதாதலும் விளங்கும்.*

*சிவபெருமான் திருக்கயிலையில் எழுந்தருளியிருக்கின்றார். தேவர்கள் இறைவனைக் காண வேண்டுமென்று பேரார்வங்கொண்டு திருக்கோயிலின் முன் சென்று நின்று வேண்டிக் கொள்கிறார்கள். வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபெருமான் ஒரு நாள் தம்மை அழகு செய்து கொண்டு வசுக்கள் போற்றிச் செய்யவும் முனிவர்கள் வாழ்த்துரை கூறவும், பன்னிரு கதிரவர்கள் பல்லாண்டு பாடவும், நாரதர் யாழ் வாசிக்கவும் மற்றும் பலவகையான சிறப்புகளோடு திருவுலாப் புறப்பட்டார்.*

*சிவபெருமான் திருவுலாப் புறப்பட்ட தெரு இனிய மொழிகளைப் பேசும் தன்மையினராகிய பெண்களின் பேராரவாரத்தை உடையதாயிற்று. எழுவகைப் பருவ மாதர்களும் அப்பெருமானைக் கண்டு காதல் கொள்கின்றனர்.*

*இறைவனைத் தலைவனாகவும் அவனருளை விரும்பிய மன்னுயிர்களை அத் தலைவன்பாற் காதல் கொண்டு மயங்கிய பெண்களாகவும் வைத்துப் பாடற் பெற்றது. இத்திருக்கயிலாய ஞான உலா.*

*இந்நூலினால் சிவபெருமானுடைய முழு முதல் தன்மையைச் சேரமான் விளக்கிய திறம் அறிந்து இன்புறத் தக்கதாகும்.*

| ஏழு பருவ மாதர்கள் | | வயது |
|---|---|---|
| 1. | பேதை | 5-7 |
| 2. | பெதும்பை | 8-11 |
| 3. | மங்கை | 12-13 |
| 4. | மடந்தை | 14-19 |
| 5. | அரிவை | 20-24 |
| 6. | தெரிவை | 25-30 |
| 7. | பேரிளம்பெண் | 31-40 |

2. பிறவாதே தோன்றினான்; காணாதே காண்பான்;
துறவாதே யாக்கை துறந்தான் முறைமையால்.

3. ஆழாதே ஆழ்ந்தான்; அகலா(து) தகலியான்;
ஊழால் உயராதே ஓங்கினான் – சூழொளிநூல்

4. ஓதா துணர்ந்தான்; நுணுகாது நுண்ணியான்
யாதும் அணுகாது அணுகியான்; – ஆதி

**இறைவனின் தடத்த இலக்கணம்**

5. அரியாகிக் காப்பான்; அயனாய்ப் படைப்பான்;
அரனாய் அழிப்பவனுந் தானே – பரனாய

6. தேவர் அறியாத தோற்றத்தான்; தேவரைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தான்; – ஓவாதே

7. எவ்வுயிரும் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான்; எவ்வுருவும்

8. தானேயாய் நின்றளிப்பான்; தன்னிற் பிறிதுருவம்
ஏனோர்க்குக் காண்பரிய எம்பெருமான்; – ஆனாத

---

***கண்ணி - 1 :*** *அரு மால் - போக்குதற்கு அரிய மயக்கம். அழலாய் - அக்கினிப் பிழம்பாய். மாலும், அயனும் அடிமுடி தேடிய சிவபுராண வரலாறு பலவிடத்தும் பரவலாக வழங்கும்.*

***கண்ணி 2-8 :*** *இப்பகுதியில் சிவபெருமானது பெருமைகள் விரித்துரைக்கப்படுகின்றன. 'பிறர் செயற்கையால் அடையும் பெருமைகளைச் சிவபெருமான் இயற்கையாகப் பெற்றுள்ளான்' என்பது பலவகையில் கூறப்படுகின்றது. முதல் நான்கு கண்ணிகளில் சொரூப சிவத்தைப் போற்றி விட்டுப் பின் தடத்த சிவத்துக்கு வருகிறார்.*

*தோன்றுதல் - உளன் ஆதல், பிறர் எல்லாம் கால வயப்பட்டு ஒரு காலத்திலே பிறத்தலால் உளர் ஆகின்றனர்; சிவபெருமான் அவ்வாறின்றி, என்றுமே உளனாய் இருக்கின்றான். எனவே, காலம் அவனுக்கு உட்படுகின்றதே யன்றி அவன் காலத்திற்கு உட்படுகின்றானில்லை. துறவாதே - நீக்காமல்.*

*பிறர் எல்லாம் கண்ணைக் கருவியாகக் கொண்டு அது வழியாகவே பொருள்களைக் காண்கின்றனர்; சிவபெருமான் அவ் வாறின்றிப் பொருள்களை நேரே காண்கின்றான். 'பிறர் எல்லாம் பொருள்களைக் கண் காட்டும் அளவில், அது காட்டியவாறு காண்பர்' என்பதும், 'சிவபெருமான் அவ்வாறின்றி, எல்லாவற்றையும் உள்ள படி காண்பான்' என்பதும் விளங்கும்.*

கட்புலத்திற்கச் சொல்லியது ஏனைச் செவிப்புலம் முதலியவற்றிற்கும் ஒப்பதே. ஆழாதே - ஆழ்ந்து செல்லாமல். அகலியான் - நீங்கி இருப்பவன்.

பிறர்க்கெல்லாம் உடம்பு அறிவு இச்சை செயல்கட்கு இன்றியமையாதது ஆதலின் வேண்டப்படுவதாயினும் அதனால் நிகழும் அறிவு முதலியன பிறவிக்குக் காரணமாதலின் பந்தமாய், அவரால் முயன்று துறக்கப்படுவதாக, சிவனது அறிவு இச்சை செயல்கட்கு உடம்பு வேண்டாமையின் அவன் உடம்போடு கூடிநின்றே அதனாற் பந்தம் உறாது இருக்கின்றான்.

சிவபெருமான் எப்பக்கத்திலும் வரம்பின்றிப் பரந்துள்ளவன் ஆதலின், 'ஆழம், அகலம், உயரம்' என்பவைகளில் இயல்பாகவே எந்த வகையிலும் ஓர் அளவு இல்லாதவன்.

'பிறர் எல்லாம் மேற்குறித்த அளவுகளில் சிறியராய்த் தோன்றிப் பெரியராய் வளர்வர். சிவபெருமான் அன்ன தன்மையில்லாதவன் என்பது, "ஆழாது, அகலாது, ஊழால் உயராது" என்னும் சொற்களால் குறிக்கப்பட்டது. ஊழ் - முறைமை. சூழொளிநூல் - அறிவு நூல்.

விரிந்து பரந்த அறிவைத் தரும் நூல்களை அவன் அவை தோன்றிய பின் ஓதி உணராமல் என்றுமே உணர்ந்திருக்கின்றான் என்றது, அவற்றின் பொருளை அவன் தானே இயல்பாக உணர்ந் திருக்கின்றான் என்றபடி. எனவே, 'அனைத்துப் பொருள்கட்கும் முதல் நூலைச் செய்தவன் அவனே' என்றதாயிற்று.

சிவபெருமான் முன்பு பரியனாய் இருந்து பின்பு நுணுகி நுணுகித் தீர நுணுகுதல் இன்றி, இயல்பிலே தீர நுணுகியிருப்பவன். எனவே, 'அவனிலும் நுணுகிய பொருள் ஒன்று இல்லை' என்ப தாயிற்று. 'அவனிலும் பரிய பொருளும் எதுவும் இல்லை' என்பது மூன்றாம் கண்ணியில் சொல்லப்பட்டது.

எந்தப் பொருளையும் புதிதாக ஒரு காலத்தில் அணுகாது, இயல்பாகவே எல்லாப் பொருளிலும் அது அதுவாய்க் கலந்து நிற்கின்றான்.

சிவபெருமான் சுத்த மாயையில், தானே, 'அயன், அரி, அரன்' - என்னும் மும்மூர்த்திகளாய் நின்று, படைத்தல், காத்தல், அழித்தல்களைச் செய்வான். எனவே, 'அசுத்த மாயை பிரகிருதி மாயைகளில் தன் அருள்பெற்றவரை அயன் முதலிய பதவியினராகச் செய்து, அவர்கள் வழியாகப் படைத்தல் முதலிய தொழில்களைச் செய்விப்பன்' என்பது போந்தது.

சிவபெருமான் தானே கொள்ளும் வடிவங்கள் 'சம்பு பக்கத்தின' என்றும், பிறருக்கு அவனால் தரப்படும் அவ்வடிவங்கள் 'அணு பக்கத்தின' என்றும், சொல்லப்படும். பரனாய - மேலானவன்.

சிவபெருமான் எல்லாரினும் மேலாய்த் தேவர்களாலும் அறியப்படாத காட்சியை உடையவன். தேவரையெல்லாம் தான் விரும்பிய வண்ணம் படைத்து அவ்வத்தொழிலில் நிறுத்தினான். ஓவாது - இடையறாது. ஒவ்வாமை - நீங்காமை.

எவர் ஒருவர் எந்த உருவத்தில் வைத்து உள்ளத்தில் இடையறாது தியானிக்கின்றார்களோ அவருக்கு அந்த உருவமாய்த் தோன்றியே அதன்வழி அருளற்பாலதாய அருளைச் சிவபெருமானே அருளுவான்.

இங்ஙனம் எந்த உருவத்தையும் தனது உருவமாகவே கொண்டு அருள்புரிகின்ற சிவபெருமான் பிறர் தனது உருவமாய் நின்றாராக எவரும் கண்டிலாத, காண வாராத நிலையை உடையவன்.

அத்தகைய அவனே எம் கடவுள்.

இவற்றால் எல்லாம், மூவரும், பிறரும் ஆகிய தேவர் பலரும் 'பசு' எனப்படும் உயிர்வருக்கத்தினரேயாகச் சிவபெருமான் ஒருவனே அனைவர்க்கும் தலைவனாகிய பதி - என்பது பல்லாற்றானும் விளக்கப்பட்டது. ஏனோர்க்கும்" என்னும் உம்மை, 'சிவநெறி யாளர்க்கேயன்றிப் பிற சமயத்தார்க்கும்' என இறந்தது தழுவிற்று.

அருணகிரிநாதரும் இது குறித்துப் பாடியுள்ளார்.

"அகரமும் ஆகி அதிபனும் ஆகி
அதிகமும் ஆகி - அகம் ஆகி
அயன் என ஆகி அரியென ஆகி
அரன் என ஆகி - அவர்மேலாய்
இகரமும் ஆகி எவைகளும் ஆகி
இனிமையும் ஆகி - வருவோனே" (திருப்புகழ்)

இன்னதென எவரும் கூற இயலாத ஏக பூரணத்துவமாக விளங்கும் நிறைவை சொரூபம் என்பர். நினைக்கும் உயிர்கள் எண்ணியவாறு, தன்னுடைய திருவருளையே திருமேனியாகக் கொண்டு அச்சொரூபம் வெளிப்படும். அவ்வுருவே தடத்தம் எனப்படும். இறைவன் அனுக்கிரக நிமித்தமாக ஒன்றுடன் ஒன்று ஒவ்வாத முத்திற மேனிகளைத் தடத்த நிலையில் கொள்கிறான். ஆருயிர்களுக்கு போகம் அருளும் பொருட்டுப் போக வடிவமும் வினைகளை நீக்கும் பொருட்டுக் கோர வடிவமும், யோக முத்தி உதவும் பொருட்டு யோக வடிவமும் கொள்கிறான். இதுவரை மேலே கண்ட ஒன்று முதல் எட்டுக் கண்ணிகளும் இறைவன் உலகினைக் கடந்த உருவன் என்றும் பொருள் தரும் 'விஸ்வாதிகன்' என்னும் திருப்பெயரையும், உலகம் தோன்றி ஒடுங்கும் வடிவுடையவன் எனப் பொருள்படும் 'விஸ்வகாரணன்' என்னும் திருநாமத்தையும்,

உலகிற்கு உயிராக இருப்பவன் என்னும் பொருள் கொண்ட 'விஸ்வாந்தர் யாமி' என்னும் பெயரையும்,

உலகமாக நின்றவன் என்னும் பொருள் தரும் 'விஸ்வரூபி' என்னும் திருநாமத்தையும் பெரிதும் போற்றுகின்ற வேத மந்திரங்கள் வாயிலாக சிறப்புறக் காட்டின.

9. சீரார் சிவலோகந் தன்னுள் சிவபுரத்தில்
ஏரார் திருக்கோயி லுள்ளிருப்ப – ஆராய்ந்து

10. செங்கண் அமரர் புறங்கடைக்கண் சென்றீண்டி
எங்கட்குக் காட்சிஅருள் என்றிரப்ப – அங்கொருநாள்

---

*இறைவனின் சொரூப தடத்த லட்சணங்களைப் பதிஞான உள்ளம் கொண்டுதான் உணரமுடியும். மற்று எவர்களாலும் ஓத முடிவதில்லை. இவ்வாறிருக்கையில் பாச பசு ஞானம் கொண்டு ஓதுவது எளிதன்று. ஆன்றோர் அனுபவங்களை அறிந்து அவற்றை ஓதி உணர்வதே உத்தமமாகும்.*

***கண்ணி 9, 10 :*** *அவன் என்றும் நீங்காத சிறப்பினையுடைய சிவலோகத்தில், தன்னுடைய வளாகமாகிய சிவபுரத்தில் அழகு நிறைந்த திருக்கோயிலுள் ஓலக்கமாக வீற்றிருக்கும் பொழுதில் செந்தாமரை போலும் கண்களையுடைய தேவர்கள் செவ்வியறிந்து திருவணுக்கன் திருவாயிலை அடைந்து குழுமி, 'பெருமானே, திரு வோலக்க மேயல்லாமல் தேவரீரது திருவுலாக் காட்சியையும் எங்கட்கு வழங்கியருளல் வேண்டும்' என்று பலநாட்கள் குறையிரந்த நிலைமையில் ஒருநாள்.*

*சிவபிரானை என்றும் கொண்ட சிறப்பால் அவ்வுலகம் சிவலோகம் எனப்பெறும். சிவலோகம் நாடு; அதன் தலைநகரம் சிவபுரம். நாம் வாழ்கின்றது பூலோகம். இதன் மேல் 15 இலட்ச யோசனை உயரத்தில் இருப்பது புவலோகம். அதற்கு மேல் 85 இலட்ச யோசனை உயரத்தில் உள்ளது சுவலோகம். அதன் மேல் 2 கோடி யோசனை உயரத்தில் மரீசி முதலியோர் வாழும் மகலோகம் இருக்கிறது. அதற்கு மேல் 8 கோடி யோசனை உயரத்தில் சனலோகம் உள்ளது. அதற்குமேல், 12 கோடி யோசனை உயரத்தில் தவலோகம் இருக்கிறது. அதன்மேல் 6 கோடி யோசனை உயரத்தில் அமைந்துள்ளதே சிவலோகம் ஆகும் என்று கூர்ம புராணம் கூறுகிறது.*

*"புவலோகம் கடந்து போய்ப் புண்ணியருக்(கு)*
*எண்ணிறந்த போகம் ஊட்டும்*
*சுவலோகம் கடந்து போய், மகலோகம்*
*சனலோகம் துறந்து, மேலைத்*
*தவலோகம் கடந்து போய்ச், சத்திய*
*லோகம் கடந்து, தண் துழாயோன்*
*நவலோகம் கடந்(து) உலக*
*நாயகமாம் சிவலோகம் நண்ணினாரே"*

*என்று பரஞ்சோதி முனிவர் சிவலோகம் சேர்ந்தாரைப் பயபக்தியுடன் பாடுகிறார்.*

*சிவபுரத்தின் நடுவில் கோயில் இருக்கின்றது. அது, 'ஏர் ஆர் திருக்கோயில்' ஆகும். ஏர் - அழகு. ஆர் - நிறைவு; திரு - அருள், கோயில் - அரண்மனை. ஆக,*

*அழகுடைமை. நிறைவுடைமை, அருளுடைமை என மூன்றும் அந்த அரண்மனையின் அலங்காரமாகத் திகழ்கின்றது.*

*"பேரின்ப வெள்ளம் பெருக்காறும் மீதானம்*
*தேரின்பம் நல்கும் திருநாடும் - பாரின்பம்*
*எல்லாம் கடந்த இருநிலத்துள் போக்குவர(வு)*
*அல்லா துயர்ந்த அணி நகரும்"* *(கந்தர் கலிவெண்பா)*

*என்று குமரகுருபரர் பாடுவார்.*

*'சிவலோகா', 'சிவபுரத்து அரசே', 'திருப்பெருந்துறை உறை சிவனே' என்று போற்றுவார் மாணிக்கவாசகப் பெருமான்.*

*பசுவின் உடல் முழுவதும் பால் விரவி இருந்தாலும் அதன் காம்பின் வழியாகவே பாலைச் சொரிகின்றது. அதைப்போன்றே ஏகபூரணன் என இறைவன் எங்கும் நிறைந்திருந்தாலும், கோயில்களிலும் கயிலை முதலிய இடங்களிலும், ஞானியர் உள்ளங்களிலும் இருந்தே வெளிப்படுகிறான் இறைவன்.*

*ஆலய வழிபாடு எல்லாவற்றிலும் சிறந்தது என்பதை,*

*"என்று கூடுமிப் பருவமென் றியம்பில்*
*இடந்தோறும் இறைஞ்சி*
*நன்றி சேர்சிவ புண்ணியம் புரிய நன்மை*
*நன்மை யாவது நணுகுமென்(று) அறிநீ"*

*திருவாதவூரர் புராணம் (திருப்பெருந்துறைச் சருக்கம், 67) எடுத்துக்கூறும்.*

*சிவபிரானின் போக அதிகார நிலையங்களாகக் கயிலை மலையும், மகா மேருவும் விளங்குகின்றன. பெருமான், காண்பான், துறந்தான், ஆழ்ந்தான், அகலியான், ஓங்கினான். நுண்ணியான், அணுகியான், காப்பான், படைப்பான், அழிப்பான், அறியாத தோற்றத்தான், விதித்தமைத்தான், அருள் கொடுப்பான், அளிப்பான் ஆன எம்பெருமான், சிவபுரத்தின் கோவிலுள் இருப்பு என்று சேரமான் பெருமாள் நாயனார் அருளி முடிப்பதை எண்ணி இன்புற்று மகிழலாம்.*

*பொதுவாக, 'ஆடவர்க்குக் கண்கள் செந்தாமரை போன்றிருத்தல் விரும்பத் தக்கது' என்னும் கருத்தால் "செங்கண்" என்றார். புறங்கடை - கடைப்புறம், தலைவாயில்.*

***கண்ணி - 11, 12 :*** **பூ மங்கை - இலக்குமி. புகழ், வெற்றியால் வரும் புகழ். எனவே, புகழ் மங்கை கொற்றவையாம். நாமங்கை - கலைமகள். 'இம்மூவரும் நன்கு செய்தமைத்த பாதுகாப்பில் இருக்கின்ற மலைமகள்' என்க. ஞானக் கொழுந்து, மலைமகள், அவள் ஞானத்தின் முடிநிலையாதல் பற்றி அங்ஙனம் கூறப்பட்டாள். நகராசன் - மலையரையன். நகம் - மலை. நடவாதது. கம் - நடத்தல். ந - அஃதின்மை. சிவபெருமான் புறப்படும் பொழுது மலைமகளே**

### இறைவன் கோலம் கொள்ளல்

11. பூமங்கை, பொய்தீர் தரணி புகழ்மங்கை,
நாமங்கை என்றிவர்கள் நன்கமைத்த – சேமங்கொள்

12. ஞானக் கொழுந்து நகராசன் தன்மடந்தை
தேன்மொய்த்த குஞ்சியின்மேல் சித்திரிப்ப – ஊனமில்சீர்

13. நந்தா வனமலரும் மந்தா கினித்தடஞ்சேர்
செந்தா மரைமலர்நூ றாயிரத்தால் – நொந்தா

14. வயந்தன் தொடுத்தமைத்த வாசிகை சூட்டி
நயந்திகழும் நல்லுறுப்புக் கூட்டிப் – பயன்கொள்

---

*அவனைத் தீண்டி அலங்கரிக்கத் தக்கவள் ஆதலின் அவள் அவனுக்குத் தலைக்கோலம் செய்தாள். இறைவா! எமக்குக் காட்சியருள் என்று அமரர்கள் முறையிடுவதை அறிகின்றாள் அமலை. சேய்களின் முறையீட்டிற்கு இயற்கையாகவே தாயின் திருவுள்ளம் பரிகிறது. பரமசிவன் பக்தர்கள் கூப்பிடும் குரலுக்குச் செவி சாய்ப்பவன்; வானோர்க்கு விரைந்து அருள்புரிய வெளிப்படுபவன் என்பதை எண்ணுகிறாள் அம்பிகை. இறைவன் இயற்கையிலேயே அழகுடையவன். அவனுக்கு விரைந்து செயற்கைக் கோலமும் செய்கிறாள் பார்வதி தேவி. இந்த ஞான உலாவில் வலம்வர இருக்கும் சிவபிரானை ஞானக் கொழுந்தாய் இறைவி அலங்கரிக்கும் திருக்கோலப் புனைவை இனிவரும் இருபத்தோராம் கண்ணிவரை இன்பமாகக் கண்டு களிக்கலாம். தேன் மொய்த்த குஞ்சி - 'தேன் என்னும் வண்டுகள் மொய்த்த தலைமுடி'. நறுமணம் பொருந்திய மலர்கள் நிறைந்திருத்தலால் வண்டுகள் மொய்ப்பவாயின. ஊனம் - குறை. சீர் - அழகு. சேமம் - பாதுகாப்பு, காவல்.*

***கண்ணி - 13, 14 :*** *நந்தா - கெடாத. வனம் - பூஞ்சோலை 'அதன்கண் மலரும் செந்தாமரை, தடம் சேர் செந்தாமரை' - என்க. மந்தாகினித் தடம் - ஆகாய கங்கையாகிய தீர்த்தம். நூறாயிரம் - இலட்சம். நொந்தா - கெடாத. வயந்தன் - வசந்தன். இவன் மன்மதனுக்குத் தோழன். இவன் ஆகாய கங்கையிற் பூத்த செந்தாமரை மலர் நூறாயிரத்தால் தொடுத்து வனைந்த திருவாசிகையைச் சிவ பெருமானது திருமுடிக்கு மேல் விளங்கும்படி சூடக் கொடுத்தான்.*

***தெளிவுரை :*** *வண்டுகள் மொய்த்த சடைமேல் அலங்காரம் செய்வதற்காக பழுதற்ற சிறப்பை உடைய நந்தவனத்து மலர்களாலும், தேவகங்கையில் மலர்ந்த பல இதழ்களை உடைய செந்தாமரை மலர்களாலும், அதிக சிரமப்பட்டு வசந்தன் தொடுத்து வைத்த தொடுமாலையை அணிந்து (பாடபேதம் : வாசிகைசூட்டி - வாசிகையுஞ் சூட்டி)*

*தேன் மொய்த்த குஞ்சியாவது வண்டுகள் தேன் உண்ணுவதற்காக*

மொய்க்கும் புத்தம் புது மலர்களை உடைய சடைமுடியைக் குறிக்கும். பற்பல மலர்களைக் கொண்டு பரமசிவனை பக்தர்கள் அர்ச்சித்து வழிபடுவர். பெரிய தும்பை, மந்தாரம், சங்குபுட்பம், வெள்ளைப் பாதிரிப்பூ, வழுதுணை, பொன் ஊமத்தை, புலிநகக் கொன்றை, வன்னி என்னும் எண்மலர்களைக் கொண்டு இறைவனை நண்பகலில் அர்ச்சிக்க வேண்டும்.

மாலை மற்றும் அர்த்தயாம அர்ச்சனைக்கு வெட்டிவேர், சண்பகப்பூ, மகிழம்பூ, அலரி, குண்டு மல்லிகை, நித்திய மல்லிகை, சாதிப்பத்திரி, சம்பங்கிப் பூ என்பவை ஏற்ற மலர்களாம்.

இம்மலர்களுடன் கொன்றைமலர் என்றும் இறைவனின் திருமுடியில் உள்ளது. இம்மலர்களில் உள்ள தேனை விரும்பி இறைவனின் நீண்டு வளர்ந்த சடைமுடிக் காட்டில் வண்டுகள் என்றும் மொய்க்கின்றனவாம்.

இவ்வாறு பரமசிவனின் 'தேன்மொய்த்த குஞ்சி'யைத் தான் பார்வதி தேவியார் அலங்காரம் செய்கின்றார்.

நொந்தா வயந்தன் தொடுத்தமைந்த வாசிகை என்பது வசந்தன் மலர் பறித்து மாலையாகத் தொடுத்ததைக் கூறுகிறது. அம்பிகையின் குறிப்பை அறிந்தான் வசந்தன். அளவிலா மகிழ்ச்சியுடன் எழுந்து நந்தவனத்தில் நுழைந்தான். அந்த நந்தவனம் உள்ளத்தாலும் ஒழுக்கத்தாலும் உயர்ந்தோர் நுழையும் நந்தவனம்.

> "உரைசெய் நூல்வழி ஒண்மலர் எட்டிடத்
> திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்"

என்றும்,

> "கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்கவேண்டா
> எட்(டு) அலாம் கைகள் வீசி எல்லிநின் றாடுவானை
> அட்டகா மலர்கள் கொண்டே ஆன அஞ்ஞகம் ஆட்ட ஆடிச்
> சிட்டராய் அருள்கள் செய்வார் திருச்சோற்றுத் துறையனாரே"

என்றும் திருநாவுக்கரச சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளுவார். பன்மலர் தூவிப் பூசை செய்யவேண்டும் என்பதை,

> "பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவி" (திருமந்திரம் 1836)

என்று திருமூலர் கூறுவார்.

எந்தெந்த மலர்களைக் கொண்டு இறைவனை எவ்வப்போது அர்ச்சிக்க வேண்டும் என்ற நியதி உண்டு. வெள்ளெருக்கு, வில்வம், நாயுருவி, அரளி, தாமரை, நாகலிங்கம், நந்தியவர்த்தம், நெடுமல்லிகை என்னும் எட்டுவகை மலர்களால் வைகறையில் அர்ச்சிக்க வேண்டும்.

நந்தவனம் பூசைக்கு மலர் பறிக்கும் போது வாயை சீலையால் கட்டிக்

15. குலமகளிர் செய்த கொழுஞ்சாந்தம் கொண்டு
தலமலிய ஆகந் தழீஇக் – கலைமலிந்த

16. கற்பகம் ஈன்ற கமழ்பட் டினையுடுத்துப்
பொற்கழல்கள் கால்மேற் பொலிவித்து – விற்பகரும்

17. சூளா மணிசேர் முடிகவித்துச் சுட்டிசேர்
வாளார் நுதற்பட்டம் மன்னுவித்துத் – தோளா

18. மணிமகர குண்டலங்கள் காதுக் கணிந்தாங்(கு)
கணிவயிரக் கண்டிகை பொன்னாண் – பணிபெரிய

---

*கொள்வது முன்னோர்கள் வகுத்த முறை வசந்தனும் அதை மறவாது செய்து பற்பல மலர்களைப் பறித்தான். நந்தவனத்தை விட்டு வேகமாகப் புறப்பட்டு மாபெரும் விண்ணில் இருந்த மந்தாகினியில் இறங்கினான். அங்கும் பற்பல மலர்களைப் பறித்தான். இவ்வாறு மிகவும் முயன்று பறித்த மலர்களைக் காண்போர்க்கு மகிழ்ச்சி தரும் மாலையாகக் கட்டினான். விறுவிறுக்க இந்தத் திருப்பணியில் ஈடுபட்ட அவனுக்கு ஏற்பட்ட அயர்ச்சியையும் சிரமத்தையும் பொருட்படுத்தவில்லை அவன். ஏனெனில் அது ஒரு புனித கைங்கர்யம் ஆயிற்றே. அவ்வாறு தொடுத்த மாலையை அம்மையிடம் அளித்தான் அவன். வாசிகையை எடுத்த அன்னை அதை அத்தன் திருமுடியில் ஆர்வத்தோடு தரித்தாள்.*

***குறிப்புரை :*** *மந்தாகினி - தேவகங்கை; ஆரவாரம் இன்றி மெல்லப் பாய்வது என்பது இதன் பொருள். இந்த நதி தேவர்களுக்கு நடை வாவியாதலால் சுர தீர்த்திகை என்று சொல்லப்படும். இது சித்திரகூடத்திற்கு அருகே பாயும். இதனை இன்று காசிகங்கை என்பர்.*

***கண்ணி - 14, 15 :*** *பச்சைக் கருப்பூரம், குங்குமப் பூ. பனி நீர் முதலிய கலவை உறுப்புக்களைச் சேர்த்து உயர்குலப் பெண்டிர் உருவாக்கிய செழுமையான சந்தனக் குழம்பால் பெருமானது மார்பிடம் முழுதும் பூசி. வாசிகை - மாலை.*

***சிறப்புரை :*** *திருநாவுக்கரசு சுவாமிகள் இறைவனை,*

*"தேன் உலாம் கொன்றை திளைக்கும் திருமார்பன்"*

*என்று திருக்கழிப்பாலை பதிகத்தில் பாடுவார். பரந்த மனங்கொண்டவன், பரந்த மார்பை உடையவன் பரமன். அதனாலன்றோ தன் திருமேனியின் இடப்பாகத்தில் தேவிக்கும் திருமாலுக்கும் இடமளித்தான்! அந்தத் திருமார்பு மணம் கமழுமாறு பரிமள சாந்தைப் பூசவேண்டும் என அம்பிகை ஆவல் கொள்கிறாள். அக்குறிப்பை அறிந்து கொண்டனர். ஆரணங்குகள் பல பேர். அவர்கள் கற்பின் பயன், அறிவின் பயன், பிறப்பினால் ஆய பெரும் பயன் பெற்ற சிறந்த நற்பெண்டிர் ஆவர்.*

***கண்ணி - 15, 16 :*** *கற்பகதருவால் தரப்பட்ட, செயற்பாடு நிறைந்த நறுமணம் கமழும் பட்டு உடையை உடுத்து, பொன்னால் ஆகிய வீரக்கழல்களைப் பாதங்களில் விளங்கக் கட்டி.*

***சிறப்புரை :*** *முதன்மை பெறும் முப்பத்தாறு தத்துவங்கள் மீது பீடு விளங்க இருக்கின்ற பெருமானுக்குக் கட்டுவதற்கு உகந்த ஆடையை உமையன்னை யோசித்துக் கொண்டிருக்கிறாள்.*

> *"வண்டு உலவு கொன்றை வளர்புன் சடையானே*
> *விண்டு அலர்ந்து நாறுவது ஓர் வெள் எருக்க நாள் மலர்*
> *உண்டு என்கின்றாளால்*
> *உண்டு அயலே தோன்றுவது ஓர் உத்தரியப்பட்டு உடையன்*
> *என்கின்றாளால்*
> *கண்டு அயலே தோன்றும் கழிப்பாலைச் சேர்வானைக்*
> *கண்டால் கொல்லோ"*

*என்னும் திருக்கழிப்பாலைப் பதிகத்தில் அப்பர் சுவாமிகள் அத்தனின் உத்தரியப் பட்டைக் குறிப்பிடுகின்றார்.*

*சிவபுரத்திலே பற்பல மலர்ச்சோலைகள் உள்ளன. கவின்மிக்க முதற்குலம் கற்பகம். பயன்மிக்க இரண்டாம் குலம் பாரிசாதம். மதிப்புமிகு மூன்றாம் குலம் மந்தாரம். சத்தான நான்காம் குலம் சந்தானம். அழகுமிக்க ஐந்தாம் குலம் அரிசந்தானம். இச்சோலைகளுடன் கொன்றைச்சோலை, துவார நந்தவனம், அந்தப்புர உபவனம் முதலிய பல பொழில்களும் சேர்ந்து பரிமள மணம் கமழ்ந்து பரவசப்படுத்துவனவாம்.*

*இச்சோலைகளுள் எல்லாம் சிறப்பானதும் தலையாயதும் கற்பகம் ஆகும். கற்பகத் தரு தேவியின் கருத்தை அறிந்து உள்ளம் அள்ளும் வித்தகம் நிறைந்த வேலைப்பாடுடைய பரிமள மணம் கமழும் பட்டாடையை விரைந்து அளிக்கிறது. இறைவியிடம் நிறம் பொலிந்த அந்த ஆடையை நிமலன் இடையில் உடுத்த அழகு பார்க்கிறாள் நிமலை.*

*செயற்பாடு கை வன்மை ஆதலின் "கலை" என்றார். உடைகளும் மணம் ஊட்டி வைக்கப்படுதல் அறிக.*

***கண்ணி - 16, 17 :*** *ஒளியை வீசுகின்ற சூளாமணி பதிக்கப்பெற்ற மணிமுடியைச் சென்னியிலே கவித்து, உச்சியினின்றும் போந்து நெற்றியில் தொங்குகின்ற சுட்டியைச் சேர்ந்த, ஒளி நிறைந்த நெற்றிப் பட்டத்தை நிலையாக அணிவித்து,*

***பொருளுரை :*** *பொற்கழல் - பொன்னாலாகிய வீரக்கழல்; வீரத்திற்கு அறிகுறியாத் திருவடியில் அணிவதோர் ஆபரண விசேடம்; இதனை வீரகண்டை எனவும் கூறுவர்; கால் - திருவடி; பொலிவித்து - சிறப்புற அணிந்து; வில்பகரும்*

- ஒளி வீசும்; சூளா மணி - குற்றமில்லாத இரத்தினம்; ஒரு தெய்வீக மணி; இதனை, சூடாமணியின் திரிபு என்று கொண்டு தலையில் அணியும் ஆபரணம் எனப் பொருள் காண்பர் வடமொழி வல்லுநர். சூடா - தலைமயிர் முடி; மணி - இரத்தினம். வாள் ஆர் - ஒளி நிறைந்த; நுதற்பட்டம் - நெற்றிப்பட்டம்; மன்னுவித்து - சேர்த்துக் கட்டி; தோளா - துளைபடாத; மணிமகர குண்டலம் - இரத்தினக் கற்களைப் பதித்த மகரமீன் வடிவாகச் செய்யப்பெற்ற குண்டலம்; ஆங்கு - அதனுடன்.

***தெளிவுரை :*** *(கண்ணிகள் 16, 17)* **பொன்னால் ஆகிய வீரக்கழல்களைத் திருவடிகளின் மீது சிறப்புற அணிந்து ஒளிவீசும் சூளாமணி என்னும் ஒரு வகைத் தெய்வீகமணி பதித்த மகுடத்தைச் சூட்டி, சுட்டியோடு சேர்ந்த ஒளிநிறைந்த நெற்றிப் பட்டம் கட்டி, துளைபடாத இரத்தினக் கற்களைப் பதித்த மகரமீன் வடிவாகச் செய்யப்பெற்ற குண்டலங்களைத் திருச்செவிக்கு அலங்காரமாக அணிந்து, அதனுடன்**

***சிறப்புரை :*** *பரிவட்டம் கட்டிப் பரமனை அலங்கரித்து அழகு பார்த்த பார்வதி தேவியார் இப்போது சிவபிரானின் சீரடிகளைப் பார்க்கிறாள். எப்பேர்ப்பட்ட திருவடிகள் அவை!*

> *"பாதாளம் ஏழ்உருவப் பாய்ந்த பாதர்"*

*என்று திருத்தாண்டகத்திலும்,*

> *"சொற்றுணை வேதியன் சோதிவானவன்*
> *பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழ"*

*என்று நமச்சிவாயத் திருப்பதிகத்திலும் நாவுக்கரசர் போற்றிய திருவடிகளல்லவா அவை! அந்தத் திருவடிகளை மாணிக்கவாசகப் பெருமான் எவ்வாறெல்லாம் போற்றிப் பாடுகிறார் பாருங்கள்.*

> *"ஈசன் அடி போற்றி எந்தை அடி போற்றி*
> *தேசன் அடி போற்றி சிவன் சேவடி போற்றி*
> *சீரார் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி*
> *மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி"*

*(சிவபுராணம் : 11-16)*

*பட்டாடையை அளித்த கற்பகம் பரமனுக்காகப் பற்பல அணிகலன்களையும் அளித்தது. பார்வதி தேவியார் பரமசிவனின் திருவடிகளுக்கு வீரக்கழல் பூட்ட விரும்புகிறாள். அது பொன்னாலான கழல். பொன், ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என நால்வகைப்படும். அவற்றுள் முதன்மையான ஆடகப் பொன்னாலான கழலை அன்னை எடுத்து அத்தனின் திருவடியில் பூட்டினாள். திரிபுரமெரித்த தீரனின் திருவடியைச் சேர்ந்ததால் அந்தக் கழல்கள் பெருமைபெற்றன.*

*தேனென இனிக்கும் திருவாசகத்தில், அத்தனின் திருவடிகளை அலங்கரிக்கும் அக்கழல்களை, மாணிக்கவாசகப் பெருமான் மகிழ்ந்து போற்றிப் பாடுகிறார்.*

*"பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க*
*புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க*
*கரம் குவிவார் ஓங்குவிக்கும் கோன்கழல்கள் வெல்க*
*சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க"*

*(சிவபுராணம் 7-10)*

*அடிக்குக் கழல் பூட்டிய அமலை விமலனின் முடிக்கு மகுடம் சூட்டி மகிழ்கிறாள். சூழ்ந்து பளபளக்கின்றது சூளாமணி. மணிபதித்த அற்புத மகுடம் சிவபிரானின் சிரத்தை அலங்கரிக்கிறது. சுட்டியொடு நெற்றிப் பட்டத்தையும் கட்டுகிறாள் இறைவி. இறைவனின் திருச்செவிகளுக்கு பயன்தரும் இரத்தினம் பதித்த மகர குண்டலங்களைச் செவியில் மாட்டுகிறாள். குவலய முதல்வனின் செவிகளை அலங்கரிப்பதால் குண்டலங்களுக்குக் கொண்டாட்டம் "தோடுடைய செவியன்'' என்று திருஞான சம்பந்தர் முதன்முதலில் திருப்பிரம்மபுரத் திருப்பதிகத்தில் திருவாய் மலர்ந்தருளத் தோற்றமளித்த செவியன்றோ சிவபிரானின் திருச்செவிகள்!*

*"தோடுடைய காதுடையான்"*

*என்று திருநள்ளாற்றுப் பதிகத்திலும்,*

*"தோடுடையார் குழைக்காதில்"*

*என்று திருப்பெரும் புலியூர்ப் பதிகத்திலும்,*

*"தோடுடையான் குழையுடையான்"*

*என்று திருச்செங்காட்டாங்குடிப் பதிகத்திலும்,*

*"தோடு உடையான் ஒரு காதில் தூயகுழைதாழ"*

*என்று திருக்கழுக்குன்றப் பதிகத்திலும் திருஞானச் சம்பந்தர் சிவபிரானின் செவியழகைப் போற்றுவார்.*

***கண்ணி - 17, 18 :** **துளையிடப்படாத மணிகள் அழுத்திய, சுறா மீன் வடிவமாகச் செய்யப்பட்ட வளையங்களைக் காதுகளில் அணிவித்து.***

***கண்ணி - 18, 19 :** அப்பொழுதே, அழகு பொருந்திய வயிரத்தால் ஆகிய கண்டிகை, பொன் இழை கோத்த பெரிய முத்தாரம். இவைகளுடன் அழகிய சன்னவீரம் அழகிய மார்பில் ஒளிவிட, 'பூட்டி' என ஒரு சொல் வருவிக்க.*

***கண்ணி - 19, 20 :** அழகுடைய எட்டுத் தோள்களிலும் தோள் வளைகளைப்*

19. ஆரம் அவைபூண்(டு) அணிதிக ழும்சன்ன
வீரந் திருமார்பில் வில்இலக – ஏருடைய

20. எண்தோட்கும் கேயூரம் பெய்துஉதர பந்தனமும்
கண்டோர் மனம்மகிழக் கட்டுறீஇக் – கொண்டு

21. கடிசூத் திரம்புனைந்து, கங்கணம்கைப் பெய்து
வடிவுடைய கோலம் புனைந்தாங்கு – அடிநிலைமேல்

---

*பொருத்தி, (தோள்வளை - வாகு வலயம்). பார்த்தவர் மனம் மகிழும்படி கச்சினை இறுகக்கட்டி.*

***பொருளுரை :*** *அணி - அழகு; கண்டிகை - பதக்கம் (கடகம், தோளணி எனவும் பெறும்); பணி - ஆபரணம்; வேலைப்பாடு; ஆரம் - பவளமாலை; பொன்மாலையையும் குறிக்கும்; சன்னவீரம் - வீரச் சங்கிலி; வில்இலக - ஒளி செய்ய, ஏர் உடைய - எழுச்சியை உடைய; அழகுடைய; கேயூரம் - வாகுவலயம்; தோள்வளை; உதர பந்தனம் - அரைப் பட்டிகை; கட்டுறீஇ - கட்டி (சொல்லிசை அளபெடை); கடிசூத்திரம் - அரைஞாண்.*

***கண்ணி - 20, 22 :*** *கடி சூத்திரம் - அரை நாண். இஃது அழகிற்காக உடைமேல் கட்டப்படுவது. 'கடிசூத்திரம் கொண்டு புனைந்து' என மாற்றியுரைக்க. கங்கணம் - காப்பு. திருமேனி முழுதும் பொருந்திய புனையப்படுவன யாவற்றையும் புனைந்து, ஆங்கு - அதன்பின், அடிநிலை - பாதுகை. 'அடிநிலை மேல் நிற்பித்து' என ஒரு சொல் வரு வித்து, அதனை, 'நந்தி மாகாளர் கடைகழிந்த போழ்தத்து' என்பதனோடு முடிக்க. மேற்கூறிய கோலங்களை எல்லாம் புனைவித்தவர் நந்திமாகாளர் என்க. கடை - முதல்வாயில். "போழ்தத்து" என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை.*

***கண்ணி - 22 : வசுக்கள்*** *- 'முப்பத்து மூவர்' எனத் தொகை பெற்ற தேவர்களுள், எண்மராய ஒரு குழுவினர். இருக்கு - மந்திரங்கள்.*

***தெளிவுரை :*** *(கண்ணி - 22, 25) சிவபிரான் திருப்பாதுகை மேல் ஏறி நந்திதேவரும் மாகாளரும் காவல் செய்யும் திரு அணுக்கன் திருவாயிலைக் கடந்து சென்ற சமயம் அட்ட வசுக்கள் இறைவனின் எதிரில் தோன்றி ரிக்வேத பாராயணம் செய்ய, முடிவு இல்லா சிறப்பினை உடைய, நினைத்தற்கும் அரிய புகழ் அமைந்த சப்த முனிவர்களும் வந்து, பெருமையிற் சிறந்த தலைவராம் சிவபெருமான் மீது வாழ்த்துக்கூற, ஒளி வீசும் நிறத்தினை உடையவர்களான பன்னிரண்டு சூரியர்களும் பல்லாண்டு வாழ்த்தைப் பெரிது பாட, நிலைபெற்ற அகத்திய முனிவர் யாழ் வாசிக்க, பொன்னிறத்தோடு விளங்கும் அக்கினி பகவான் மணம் வீசும் தூய கலசம் ஏந்திவர இயமன் வந்து மங்கல மொழியால் வாழ்த்துக் கூறுகிறான்.*

*குறிப்புரை : நந்திதேவர் - விரஹவ்யர் என்னும் சிலாத முனிவர் தமது பத்தினியார் சித்திரவதியார் புத்திரப்பேறு வேண்ட, முனிவர் சிவபெருமானை எண்ணித் தவம் செய்தார். சிவபிரான் காட்சி தந்து, "யாகம் செய்வதற்கு நிலத்தை உழு; அங்கு நம்மை ஒக்கும் அழகு வாய்ந்த புதல்வன் உண்டாவான்" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். அவ்வாறே சிலாத முனிவர் யாகம் செய்வதற்காக நிலத்தை உழுதார். உழுசாலில் தங்கப்பெட்டி ஒன்று கிடைத்து, அந்தப் பொற் பெட்டியில் நந்திமாதேவர் குழந்தை உருக்கொண்டு அவதரித்தார். இவரது தவப்பயனால் எல்லா தேவர்களையும், களிப்பித்தமையால் நந்தி தேவர் என்று பெயர் பெற்றார். இவர், சிலாத முனிவர் புத்திரர் என்பதால் சைலாதி என்று இருடிகளால் பெயர் பெற்றார். இவர் நன்கு வளர்ந்து சகல கலைகளையும் கற்று வல்லவரானார். சிவபெருமானை எண்ணி மும்முறை தவம் செய்தார். முதலில், திருவடியில் நீங்காத அன்பும், இரண்டாவது முறை சிவநிந்தை, சிவனடியார் நிந்தை, விபூதி ருத்திராட்ச நிந்தை செய்பவரைத் தண்டிக்கும் ஆணையும், மூன்றாம் முறை சிவபெருமானைப் போல் நித்தியராய் எவராலும் துதிக்கப் பெறுதலும் சிவசாரூபமும், பட்டாபிடேகமும், சிவஞான சாரியத்துவமும் பெற்றார். பிதுர் தேவர்களின் இதயத்தில் தோன்றிய கன்னிகையாகிய சுயஞ்ஞையின் திருமணமும் பெற்றார். பின்னர் திருக்கயிலை அடைந்தார். இவரது பழைய பெயர் வீரகன் ஆகும்.*

*இவர் செந்நிறம், முக்கண், சடை, வலக்கையில் ஜபமாலை, இடக்கையில் சூலம், அபய வரதம் கொண்டு நான்கு கைகளுடன் இருப்பார். கோடி வருடங்கள் உக்கிரதபம் செய்ததால் சிவபெருமானுக்கு வாகனமும் துவார பாலகருமானார். அகச் சந்தான குரவர்களுக்கு முதற் குருவாகவும் சிவபெருமானுக்கு முதன் மாணாக்கராகவும் விளங்கினார்.*

*"நந்தி பெருமானின் அருளைப் பெற்ற குருநாதர்களை ஆராய்ந்தால் அவர்கள் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் நால்வர். அவர்களுடன் சிவயோக முனிவரும், திருவம்பலத்தில் திருக்கூத்தைத் தரிசித்த பதஞ்சலியும், வியாக்கிரபாதரும், என்னுடன் கூட எட்டுப் பேருமாகும்" என்று திருமூலர் குருபாரம்பரியத்தைக் குறிப்பிடுவார். மேலும்,*

*"நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்*
*நந்தி அருளாலே மூலனை நாடினோம்*
*நந்தி அருளாவது என்செயும் நாட்டினில்*
*நந்தி வழிகாட்ட நான் இருந்தேனே"       (திருமந்திரம் 68)*

*என்றும்,*

*"நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்*
*நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்*
*நந்தி அருளால் மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்*
*நந்தி அருளாலே நான் இருந்தேனே"       (திருமந்திரம் 92)*

*என்றும் போற்றிப் பாடுகிறார். நந்தி என்றே சிவபெருமானுக்கும் ஒரு பெயருண்டு. இடத்துக்குத் தக்கவாறு பொருள் கொள்வர்.*

### இறைவன் புறப்பாடு

22. நந்திமா காளர் கடைகழிந்த போழ்தத்து
வந்து வசுக்கள் இருக்குரைப்ப – அந்தமில்சீர்

23. எண்ணருங் கீர்த்தி எழுவர் இருடிகளும்
அண்ணல்மேல் ஆசிகள் தாம் உணர்த்த – ஒண்ணிறத்த

---

*சேக்கிழார் பெருமான்,*

*"நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்தும்"*

*என்றும்,*

*"நந்தி எம்பிரான் முதற்கண் நாதர்கள் நலங்கொள்பவன்"*

*என்றும் பெரிய புராணத்தில் நந்திதேவரை முதன்மையாக்கிப் பாடுவார்.*

***வசுக்கள் :*** *தட்சனுக்குப் பத்துப் பெண்மக்கள். அவர்களுள் ஒருத்தி ஒளி உடம்பினள்; அதனால் வசு என்னும் பெயர் பெற்றாள். வசு என்றால் ஒளி என்று பொருள். அவளுக்கு எட்டு மகன்கள் பிறந்தனர். அவர்கள் அநலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்யூசன், பிரபாசன் என்னும் பெயர்களை உடையவர்களாவர். அவர்களும் தம் தாயைப் போன்று மின்னும் மேனியராக விளங்கினர். அறிவின் ஒளியும் பெற்றவர். எனவே, அவர்கள் அட்ட வசுக்கள் என அழைக்கப்பெற்றனர். இவர்களை பிரமன் புத்திரர்கள் எனவும் கூறுவர். இவர்கள் கட்டுப்பாட்டுடன் கடும் தவம் மேற்கொண்டனர். கண்ணுதற் கடவுள் காட்சி தந்தார். சிவபெருமானிடம் கருத்தால் ஒருமித்து தாங்கள் கலந்திருக்கவும், வாயால் என்றும் பரமனை வாழ்த்தவும், அடியவர்களுக்கு என்றும் தொண்டாற்றவும் அருள்புரிய வேண்டினர். ஆதிசிவனும் அவ்வாறே அருளினார். எட்டுத் திசைகளிலும் அவர்களுக்கு இடமளித்தான் ஈசன். (இவர்கள் வசிட்டரின் சாபத்தால் மனிதப்பிறவி பெற்ற போது சந்தனுவின் தேவியாகிய கங்கையிடம் பிறந்தனர். பிரபாசன் பீஷ்மாச்சாரியானார்).*

***கண்ணி - 22, 23 :*** *எண்ணருங் கீர்த்தி - அளவிட இயலாத புகழ், எழுவர் இருடிகள் - சத்த இருடிகள் அகத்தியர், புலத்தியர், அங்கிரர். கௌதமர், வசிட்டர், காசிபர், மார்க்கண்டேயர்.*

***எழுவர் இருடிகள் - சப்தரிஷிகள் :*** *அத்திரி, ஆங்கிரிசர், பரத்துவாசர், வசிட்டர், கவுதமர், சமதக்னி, கோசிகர் ஆகிய இவர்கள் எழுவரும் சப்த முனிவர்களாவர் என்றும் கொள்வர்.*

***அத்திரி :*** *முனிவர் அயன் மைந்தனாவார். அகரம் ஈச்வரனைத் தெரிவிக்கும் சப்தம். திரி என்பது திரிகுணாத்மகமாகும். பிரகிருதியைத் தெரிவிக்கும். இவ்விரண்டினும் சமமான பக்தியை வைத்தவராதலால் அத்திரி என்னும் பெயர்*

*பெற்றார். பிரமனது கண்ணில் பிறந்தவர். இவரது தேவி அனுசுயை. தூய அமுதத் துளிகளுடன் குளிர்ச்சி பொருந்திய ஒளி வீசும் சந்திரனுக்கு இவர் தந்தை. அருந்ததி என்னும் கற்புக்கரசியை அருந்தவ மகளாகப் பெற்றவர். ரிக்வேத ஐந்தாம் காண்ட அதிகாரியாவார்.*

***ஆங்கிரசர் :*** *அக்கினியின் மூத்த குமாரர். இவர் தேவ குருவான வியாழனைப் பெற்ற தெய்வ முனிவர். இவர் அதர்வண வேதியாவார்.*

***பரத்துவாசர் :*** *தந்தை உதத்தியர்; தாய் மமதை, பிரகஸ்பதியால் பிறந்தவர்; வித்தகன் என்றொரு பெயரும் இவருக்கு உண்டு. இவரைக் கலசத்திற் பிறந்தவர் என்றும் கூறுவர். 'பரத நாத வேத பரத்துவாசர்' என்று பாரதம் இவரைப் பேசுகிறது. இவர் இருக்குவேதத்தின் ஆறாவது காண்ட கீதங்களைச் செய்தவர்.*

***வசிட்டர் :*** *பிரமனுடைய மானச மைந்தராவார். மாபெரும் கற்பரசி அருந்ததியின் மணவாளர். சூரிய வம்சத்து அரசர்களுக்கு குருவாக விளங்கியவர். ரிக் வேதத்தின் ஏழாவது காண்ட ஆசிரியராவார். அத்திரியின் பேரன்.*

***கௌதமர் :*** *தீர்க்கதம முனிவரின் மகனாவார். இவரது மனைவி அகலிகை. இவரது மகன் சதானந்தர். சதானந்தரை இராஜரிஷியான சனகமகாராசனுக்குப் புரோகிதராகத் தந்தவர்.*

***சமதக்கினி :*** *ஜம்தக்னி 'ஜ' என்றால் ஜனிப்பது, பிறப்பது என்று பொருள் ஜமத்பட்சிப்பது. யஜ என்றால் யாகம் செய்வது. ஜானே என்றால் அறிவது. ஜிஜாஹி என்றால் இந்திரியங்களை வெல்வது என்று பொருள். ஜிஜாயிஷி என்றால் சீடர்களின் ஞானங்களை உண்டாக்குவது. ஜ்ஜாமத் என்றால் தேவர்களும் அக்கினியும் ஆவிர்ப்பவிக்கும் இவ்வுலகத்தில் உண்டாயிருப்பவன் என்று பொருள். இவர் பிருகுவின் புதல்வர். வேள்வி இயற்றல், பொறிகளை வெல்லல், அருள் அறிவை அமைதல் முதலிய பல நெறிகளில் மக்களையும் பயிற்றியவர் இவர்.*

***கோசிகர் :*** *காசிராசனது புத்திரராகிய விசுவாமித்திரர். பிறப்பால் இவர் அரசராயினும் செயலால் முனிவராக விளங்கினார். பலகாலம் அருந்தவம் ஆற்றி பிரமரிஷி பட்டம் பெற்றவர்.*

*இவர்கள் ஏழு பேரும் சப்தரிஷிகள் எனப்படுவர். சனி உலகத்திற்கு மேல் பதினோரு இலட்சம் யோசனை தூரத்தில் உள்ளது சப்தரிஷி மண்டலம். களங்கமற்ற வானத்தை இரவு வேளைகளில் வடதிசைப் பக்கம் நிமிர்ந்து நோக்கினால் அங்கு நட்சத்திரக்கூட்டம் ஒன்று இருப்பதைக் காணலாம். அக் கூட்டத்தில் ஏழு நட்சத்திரங்கள் அடங்கி இருக்கும். அந்த விண்மீன் கூட்டம் இரவின் ஆரம்பத்தில் வடகிழக்கில் உதித்து, வடமேற்கில் மறையும்.*

*அண்ணல் - தலைவன்; சிவபெருமான் ஆசிகள் வாழ்த்துக்கள். அவை,*

*"நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!"[1] என்றாற் போலக் கூறப்படுவன, 'வெல்க' என்றும், 'சயசய' என்றும் சொல்லப் படுவனவும் வாழ்த்துக்களே. 'இவ்வாறு இறைவனை உயர் வருக்கத்தினர் வாழ்த்துதல் உலகம் வாழ்தற் பொருட்டு' என்பதை, வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான்"[2] என்பதனான் அறிக.*

***கண்ணி - 23, 24 :** ஔ்‌ நிறத்த - ஒளி பொருந்திய நிறத்தையுடைய. ஆதித்தர் - சூரியர். முப்பத்து மூவர் தேவரில் சூரியர் பன்னிருவராவர். "பல்லாண்டு" என்பதும் 'பல் யாண்டு' எண்ணில்லாத யாண்டுகள் - வாழ்க' என்னும் குறிப்பினதேயாகும்.*

***ஆதித்தர் பன்னிருவர் :** சூரியர்கள் அதிதியின் மக்கள் ஆதலால் ஆதித்தர் என்னும் பெயர் பெற்றனர். அவர்கள் பன்னிரண்டு பேர் ஆவர். அம்சன், தாதா, இந்திரன், சவிதா, விச்சுவா, பகன், பருச்சனி, துவஷ்டா, மித்திரன், விஷ்ணு, வருணன், பூடன் என்னும் பெயருடையவர்கள். இறைவன் ஆணைப்படி இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதமும் இருளைப் போக்குவர். சித்திரையில் அம்சன்; வைகாசியில் தாதா; ஆனியில் இந்திரன்; ஆடியில் சவிதா; ஆவணியில் விச்சுவா; புரட்டாசியில் பகன்; ஐப்பசியில் பச்சனி; கார்த்திகையில் துவஷ்டா; மார்கழியில் மித்திரன்; தையில் விஷ்ணு; மாசியில் வருணன்; பங்குனியில் பூடா எனப் பன்னிரு மாதங்களும் பாரைப் பரிபாலிப்பர்.*

*இவர்கள் வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பார்க்கவன், இரவி, உலோகப் பிரகாசன், உலோக சாட்சி, திரிவிக்ரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிமசாலி என பன்னிருவர் எனவும் கூறுவர்.*

***அகத்தியர் :** அகத்தில் தீயை அடக்கியவர் அகத்தியர். தமிழுக்குத் தலைமை குருநாதர். வாதாபி என்னும் அரக்கனைக் கொன்றவர். பார்வதி - பரமசிவன் திருமணத்தில் தேவர்களெல்லாம் வடதிசை நிறையத் தென் திசை உயர்ந்ததனால் அதனைச் சமன் செய்ய தென்திசையில் பொதிகை மலைக்கு வந்தவர். கடல்நீரைக் கமண்டலத்தில் அடைத்தவர். பொதிகையில் முருகக்கடவுள் அருளால் தமிழை வளர்த்தவர். இவருக்குக் கும்பமுனி, குறுமுனி, கலச மோநி எனப் பல நாமங்கள் உண்டு. பல்வேறு வைத்திய நூல்களைப் படைத்தவர். இவரது மாணாக்கர் திரண தூமக்கினி அல்லது தொல்காப்பிய முனிவர், அதங்கோட்டாசான், துராலிங்கண், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவிநயன், காக்கைப் பாடினியன், நற்றத்தன், வாமநன் முதலியவர்கள் ஆவர். இவரது அகத்தியம் ஐந்திலக்கணம் அடங்கிய நூலாகும். வடமொழிக் கடலைக் கரைகண்டு மகிழ்ந்த இவர் தணிகையில் முருகப் பெருமானின் தண்ணருள் பெற்றவர்.*

---

1. *திருவாசகம் - சிவபுராணம்*
2. *மேற்படி - திருச்சதகம் - 16*

24. பன்னிருவர் ஆதித்தர் பல்லாண் டெடுத்திசைப்ப
மன்னும் மகதியன்யாழ் வாசிப்பப் – பொன்னியலும்

25. அங்கி கமழ்தூபம் ஏந்த யமன்வந்து
மங்கல வாசகத்தால் வாழ்த்துரைப்பச் – செங்கண்

---

*"ஒருக்கிய ஐம்பொறியான் உபதேசம்*
*அருக்கிய சிந்தை அகத்தியன் என்பான்"*

*என்கிறது தணிகைப்புராணம்.*

*இராவணனுக்கும் இவருக்கும் ஏற்பட்ட இசைப்போட்டியில் யாழை மீட்டி மலையையும் உருகும்படி செய்தவர். இராவணன் இவரிடம் தோற்று அடங்கினான். "என்னை வென்ற உமக்கு என்ன பரிசு வேண்டும்?" என்று இராவணன் வினவ, "உனது ஆட்கள் தமிழ்நாட்டிற்கு இடர் தரவேண்டா. இஃது ஒன்றே யான் வேண்டும் பரிசு" என்றார். "அதற்கிசைந்த இராவணன் அன்று முதல் எந்த அரக்கரும் தமிழகத்திற்குத் தொல்லை தரலாகாது" என்று ஆணை யிட்டான். இவ்வாறு அகத்தியர் உலகத்தார்க்குச் செய்த உதவிகள் ஒரு கோடி. எனவேதான் 'மன்னும் அகத்தியர்' என்கிறார் சேரமான்.*

*மகதி - 'மகதி' என்னும் யாழை ஏந்திய முனிவன்; நாரதன்.*

***கண்ணி - 24, 25 :*** *பொன் இயலும் பொன்போல ஒளிவிடுகின்ற. அங்கி - தீக்கடவுள். கமழ் தூபம் - நறுமணப் புகை, சத்த இருடிகள் கூறிய ஆசிகள் முன்பே வேதம் முதலியவற்றில் அமைந்து, மரபாகச் சொல்லப்பட்டு வருவன. 'அவை தம் பயனைத் தப்பாமல் தரும்' என்பது கொள்கை. இங்கு யமன் வந்து மங்கல மொழிகளால் வாழ்த்தியது தனது பணிவைப் புலப்படுத்திக்கொள்ளும் உபசார வார்த்தை.*

***அக்கினி :*** *பிரசாபதிக்கும் சாண்டிலிக்கும் பிறந்தவன். இவன் மனைவி சுவாகாதேவி. இவனுக்கு இரண்டு முகம். நீண்ட ஏழு நாக்குகள், நான்கு கொம்புகள், மூன்று பாதம் உண்டு. இவனது நகரம் தென்கிழக்கில் உள்ள தேஜோவதியாகும். இவனது வாகனம் ஆடு. இவனுக்குக் குமரன் என்னும் பெயருள்ள ஒரு குமாரன் உண்டு. இவன் சுதை என்னும் அமுதம் சுமந்தவன். மேன்மையான ஆற்றல் மிக்கவன். சூரிய சந்திரர் இடத்தில் சோதியானவன். மேல் எழு மேகத்தில் மின்னலானவன். நிலத்தில் தீயானவன். கடலில் வடவையானவன். ஆக்கையில் ஜடராக்கினியானவன். வேதமெல்லாம் போற்றும் வித்தகன் இவன்.*

***இயமன் :*** *இவன் சூரிய புத்திரன். தென்திசைக் கடவுள். இவனது வாகனம் எருமைக்கிடா. ஆயுதம் கதை, பாசக் கயிறு முதலியன. கிங்கரகர்களுக்குத் தலைவன். யமுனையுடன் இரட்டையாகப் பிறந்தவன். கருமலை போன்ற கரிய நிறம் பதினெட்டுக் கைகள், பிறை போன்ற பற்கள், தீப்பொறி சிதறும் விழிகள், துடிக்கும் இதழ்கள் உடையவன். மிருத்யுகாலன், அந்தகன் முதலானோர் சூழத்*

**26.** நிருதி முதலோர் நிகழ்கலன்கள் ஏந்த
வருணன் மணிக்கலசந் தாங்கத் – தெருவெலாம்

**27.** வாயு நனிவிளக்க மாமழை நீர்தெளிப்பத்
தூயசீர்ச் சோமன் குடையெடுப்ப – மேவியசீர்

---

*தன் நகரத்தில் வீற்றிருப்பவன். சிவேதன் பொருட்டும், மார்க்கண்டேயன் பொருட்டும் சிவபெருமானின் கோபத்துக்குள்ளாகி உயிர்நீங்கி மீண்டும் உயிர் பெற்றவன். சாவித்திரி தொடர்ந்து வந்ததனால் அவள் கணவன் சத்தியவான் உயிரைத் தந்தவன். தருமனுக்கு அஞ்ஞாதவாசத்தில் யார் கண்ணுக்கும் புலப்படாதிருக்க மந்திர உபதேசம் செய்தவன். ஒருமுறை சிபிச் சக்கரவர்த்தியின் உண்மை அறிய வல்லூறாகச் சென்றவன். இவன், புண்ணியர்களுக்குச் சாந்தமுள்ளவனாகவும், பாவிகளுக்குக் கோர உருவுடனும் தோன்றுபவன். ஆதிசேடன் மூச்சில் தோன்றிப் பிராணிகளைத் தண்டிப்பவன். இவனது நிர்வாகி சித்திரகுப்தன். இவனது நகரம் சையமினி. இவனது மனைவியர் அப்பிராப்தி, சாமளை, இரி என மூவராவர்.*

***கண்ணி - 25, 26 :*** *நிருதி - தென்மேற்குத் திசைக்குக் காவலன். 'இவன் அரக்கன்' என்பது பற்றிச் சிவந்த கண்களையுடையவனாகக் கூறினார். முதலோர் - நிருதியின் பரிவாரங்கள். நிழல் - ஒளி. கலன்கள் - அணிகலன்கள். இவை உலா இடையில் எந்த அணிகலமாயினும் பழுதுபடின் உடனே மாற்றிப் பூட்டுதற்கு அமைவன.*

*வருணன் - மேற்றிசைக் காவலன். கலசம் - நீர்ப் பாத்திரம்.*

***பொருளுரை :*** *நிருதி - ஒரு திசைக்கடவுள்; நிழற்கலன்கள் - ஒளிசெய்யும் கண்ணாடிகள்; குணி உருத்திரன், திருமால், பிரம்மா, நிருதி, வர்ணன், வாயு போன்ற எண்டிசைக் காவலர்கள், பஞ்சபூதநிர்வாகிகள், சூரியன், சந்திரன் உட்பட நவகோள்கள், நட்சத்திரங்கள், 12 ஆதித்தர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள் என்று யார்யாரெல்லாம் வானுலகில் இருப்பதாகச் சொல்கிறார்களோ, அவர்கள் அனைவரும் சிவபெருமானால் குறிப்பிட்ட பணிக்கு அமர்த்தப்பட்டவர்கள். செத்துப் பிறக்கின்றவர்கள். நம்மவரில் வீடுபேறு வேண்டாதவர்கள் இப்பதவிகளை வேண்டிப் பெறலாம். விளக்க - தூய்மை செய்ய; சோமன் - திங்கள்; அடைப்பை - வெற்றிலைப் பை; அச்சுனி - அஸ்வினி தேவர்கள்; வாய்நிறைந்த; கருத்தமைந்த - அமைதி பெற்ற மனத்தினரான; உள்ளன்பு உடையவரான; கவரி - வெண்சாமரம்; புடை இரட்ட - இருபுறமும் வீச; புடை - இரு பக்கத்திலும்; இரட்டுதல் - மாறி மாறி வீசுதல்.*

***தெளிவுரை :*** *(கண்ணிகள் 25-30) செவ்விய கண்களையுடைய நிருதி முதலாயுள்ளவர்கள் ஒளி செய்யும் கண்ணாடிகளை ஏந்திக்கொண்டு வர, வருண பகவான் அழகிய நீர்க்கலசத்தைச் சுமந்து வர, வீதிகள் முழுவதும் வாயுபகவான்*

*பெரிது தூய்மை செய்ய, சிறந்த மேகங்கள் வீதியெல்லாம் நீர் தெளிக்க, தூய்மையான சிறப்புடைய திங்கள் குடைபிடித்துவர, விரும்பத் தக்க சீர்த்தி யமைந்த ஈசானன் நெருங்கிவந்து வெற்றிலைப் பையைக் கையில் எடுத்துக் கொண்டு வர, அஸ்வினி தேவர்கள் வாய்நிறைந்த மந்திரங்களால் வாழ்த்துச் சொல்ல, தூய்மையை உடைய உருத்திர கணத்தவர் துதிமொழிகளைக் கூற, குபேரன் மேன்மையும் தகுதியும் உடைய சிறந்த பொருள்களை வரும் வழியில் வாரி இறைக்க, அமைதி பெற்ற மனத்தினரான கங்கை, யமுனையை உள்ளிட்ட நதிகளின் அதி தெய்வங்கள் அளவிலாத வெண் சாமரங்களை இருபாலும் வீச,*

***குறிப்புரை : நிருதி*** *- இவன் பூர்வ ஜன்மத்தில் பிங்கலாட்சன் என்னும் வேடன். இவன் வேடனாய் இருந்தாலும் தீமை செய்யும் வேடர்களை அடக்கி வந்தவன். இவ்வாறிருக்கையில் புண்ணியத்தால் யாத்திரை செய்வோரைச் சில வேடர் மறுக்க அவ்வேடர் பலருடன் இவன் போரிடும்போது மரணமடைந்து நிருதியானன். இவன் தவவலிமையால் தென்மேற்குத் திசைக் கடவுள் ஆனான். இவனது மனைவியின் பெயர் தீர்க்காதேவி. இவனது நகரம் கிருஷ்ணாங்கனை; வாகனம் பூதம் (நரவாகனம்), ஆயுதம் குந்தம்; இவன் உலகத்தை, இழிந்தவராயினும் நன்மை செய்தவர் அடைவர். இவர் வாகனமாகிய பூதம் பராசர முனிவர் வேள்வியால் இழுக்கப்படச் சிவபெருமானை எண்ணி அது முறையிடச் சிவபிரான் வேள்வியை நிறுத்தக் கட்டளையிட்டதால் நிறுத்த உயிர் பெற்றது.*

*நிழல் கலன்கள் என்பது மங்கலக் கண்ணாடிகளையும், திருவாபரணங் களையும் குறிக்கும். பளபளப்பான அவைகளை நிருதி முதலானோர் நிமலன் திருமுன் ஏந்தி வருகின்றனராம்.*

***வருணன் :*** *கருத்தம பிரசாபதிக்குத் தூம்ரையிடம் பிறந்தவன். சுசிட்டுமான் என்று பெயர். சமுத்திராஜனால் முதலையிடமிருந்து காப்பாற்றப் பெற்றவன். மதுரையின் மேல் இந்திரன் ஏவலால் வந்து உக்கிரபாண்டியனால் வீறு அடங்கியவன். இந்திரன் கேட்டுக்கொண்டதால் ஆயர்பாடியில் அடாது மழைபொழிய கண்ணனது கோவர்தனகிரி குடையால் தடுக்கப்பட்டவன் கண்ணபிரானுக்கு ஒரு காது பசுமையும் வெண்ணிறமும் உள்ள ஆயிரம் குதிரைகளைக் கொடுத்தனன் என்று சிவபுராணம் சொல்லும். சூரபதுமனின் மகனாகிய பானுகோபன் மோகனாஸ்திரம் பிரயோகம் செய்து கடலில் முழுகச் செய்த வீரவாகு முதலியவரை மீட்க வந்த வேலாயுதத்தை வணங்கி மன்னிப்பு கேட்டவன். இவன் மேல்திசைக்கு அதிபதி. இவனது நகரம் வியாவரி அல்லது சிரத்தாவதியாகும். இவனது வாகனம் முதலை; ஆயுதம் பாசமாகும். தண்ணீர்த் தலைவனான இவன் சிவபெருமான் திருமுன் நிறைகுடம் ஏந்தி வருகிறான்.*

***கண்ணி - 26, 27 :*** *வாயு தேவன், 'தெருவெலாம் விளக்க' என்க. விளக்குதல், குப்பைகளைப் போக்கி அழகு விளங்கச் செய்தல். மழை - மேகம். மேகத்திற்குத் தலைவன் இந்திரன் ஆதலின் அவனே மேகங்களைக் கொண்டு தெருக்களில் நீர்*

*தெளிப்பித்தான் என்க.*

*சோமன் - சந்திரன். குபேரனோடு கூட இவனும் வட திசையைக் காக்கின்றான். சீர் - புகழ்.*

***வாயு :*** *காசிபர் குமாரருள் ஒருவன். பலகாலம் தவம் செய்து வாயு பதம் பெற்றவன். வடமேற்கு திசைக்குக் கடவுளாயிருப்பவன். இவனது தேவியின் பெயர் அஞ்சனை. மானை வாகனமாக உடையவன். இவனது நகரம் கந்தவதி; ஆயுதம் துவசமாகும். கண்ணபிரானுடைய ஏவலால் இந்திரனிடம் இருந்த சுதர்மையைப் பெற்று உக்கிரசேநனுக்குக் கொடுத்தவன். தேவர்களின் வேண்டுகோளால் முருகப் பெருமானின் இரதத்திற்குச் சாரதியாக இருந்தவன். ஆஞ்சனேயருக்குத் தந்தை. அனுமானுக்கு நீ யாரைக் காண்கிறாயோ அவரிடத்தில் உனக்கு அதிக அன்பு மேலிடும் போது அவர்களுக்கு அடிமை செய் எனக் கட்டளை இட்டவன். அதிகாயன் போரில் இலக்குவனுக்கு முன் நின்று பிரம்மாஸ்திரப் பிரயோகம் செய்ய ஏவினவன். சிவபிரானது ஆணையால் அவர்தம் நெற்றிக்கண்ணில் தோன்றிய ஆறு தீப்பொறிகளைத் தாங்கிச் சென்று கங்கையில் வைத்தவன்.*

*இறைவன் உலா வருதலை உணர்ந்த வாயுதேவன் வீதியெலாம் தூசு இலாத வண்ணம் விளக்கம் செய்கிறான்.*

***'நீர் தெளிப்ப'*** *- மண் புழுதி எழாதவாறு நீர் தெளிக்கப்படுகிறது. மழை பொழியும் மேகங்கள் ஏழு வகைப்படும். அவை, சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பனவாம். அவற்றுள் சம்வர்த்தம் மணியையும், ஆவர்த்தம் நீரையும், புட்கலாவர்த்தம் பொன்னையும், சங்காரித்தம் பூவையும், துரோணம் மண்ணையும், காளமுகி கல்லையும், நீலவருணம் தீயையும் பொழியும். ஆவர்த்தம் வாயு தூய்மை செய்த நிலமெல்லாம், நியதியுடன் நீர்தெளித்து, புழுதியை அடர்ந்து எழாதவாறு அடக்குகின்றது. பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளை சுவாமி குளிர்சாதனப் பெட்டிகள் பொருத்தப்பட்ட நாடுகளாகவே படைத்துள்ளார். அங்கு வெப்பம் $20^{O}$ என்ற அளவுக்கே வராததால் புழுதியே இல்லை. அவர்களது மிதமான தட்வெப்பச்சூழல் புழுதியில்லா வாழ்வை உருவாக்கியுள்ளது. கயிலை அப்படி இல்லை போலும்.*

***சோமன் :*** *திங்கள், சந்திரன் என்ற பெயர்கள் உண்டு. இவன் திருமாலின் திருமார்பில் பிறந்தவன் என்றும், திருப்பாற் கடலை கடைகையில் பிறந்தவன் என்றும், அத்திரிக்கு அநசூயையிடம் பிறந்தவன் என்றும் கூறுவர். சோமன் சிவபிரானை எண்ணித் தவம் புரிந்து கிரகபதமும், அந்தணர், பயிர் முதலியவை களுக்குத் தலைமையும், சிவபெருமானுக்குக் கண்ணாகவும், சடைமுடிக்கு அணியாகவும் வரம் பெற்றவன். தட்சனது பெண்கள் இருபத் தெழுவரை மணந்து அவர்களிடத்தில் ஒருமித்து ஆசை வைக்காமல் கார்த்திகை, உரோகிணி ஆகிய இருவர்களிடம் மட்டும் அன்பு வைத்ததால், மற்றைப் பெண்கள் தம் தந்தையிடம் குறை கூறியதால் தட்சன் நாள்தோறும் ஒவ்வொரு கலை தேயவும் சயரோகமும்*

*அடையுமாறு சாபமிட்டான். சந்திரன் சாபமடைந்து சிவபெருமானால் கலைகள் வளரவும் நோய் நீங்கவும், அனுக்கிரகம் அடைந்தவன். தக்க யாகத்தில் வீர பத்திரரால் தேய்வுண்டு அநுக்கிரகம் பெற்றவன்.*

*சந்திரன் பன்னிரண்டாயிரம் யோசனை பரப்பளவு உள்ள மண்டலத்தை உடையவன். இவன் கலையை முதற்பதினைந்து நாள் தேவர் அருந்துவர். மற்றவற்றைத் தென்புலத்தார் அருந்துவர். இவனது தேருக்கு மூன்று சக்கரங்களும் குருந்தமலர் நிறமுள்ள குதிரைகள் பத்தும் உண்டு. சூரியனது சுகமுனை என்னும் கதிரால் ஒளிபெறுபவன். இராகு கேதுக்களின் வஞ்ச உருவத்தை மோகினி உருக்கொண்ட திருமாலுக்குக் காட்டிக் கொடுத்ததால் அவர்களால் பகைமை பெற்று விழுங்கப் பெற்றவன். நற்குணமும், வெண்ணிறமும், தென்கிழக்கும் இடமாக உடையவன். அவுடத மூலிகைகளுக்கு அதிபன்.*

*சிவபெருமான் உலாவரும் வேளையில் அப்பெருமானுக்குக் குடைபிடிக்கும் பணி கொண்டவன்.*

***கண்ணி - 28 :** ஈசானன், வடகீழ்த்திசைக் காவலன். இவன் உருத்திரர் வகையைச் சேர்ந்தவன். அடை - வெற்றிலை. அதனையுடைய பை அடைப்பை எட்டுத் திக்குப் பாலகர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு பணியை மேற்கொண்டமையறிக. வடதிசையில் குபேரனுக்கு ஈடாகச் சந்திரன் சொல்லப்பட்டான். குபேரன் பின்பு சொல்லப்படுவான்.*

*அச்சுனிகள் - அச்சுவினி தேவர்கள். இவர்கள் தேவ மருத்துவர்கள். முப்பத்து மூவரில் இவர்கள் இருவராவர். வாய் ஆர்ந்த - வாய் நிறைந்த. இவர்கள் வாழ்த்துரைத்தல், 'தம்மால் சிவபெருமான் அடையத் தக்க உடல் நலம் ஒன்றில்லை; அவன் நிராமயன்; (இயல்பாகவே நோயிலி) என்பது பற்றியாம்.*

***ஈசானர் :** திக்குப் பாலகர்களில் ஒருவர். இவர் வடகீழ்த்திசைக்கு அதிபராக இலங்குபவர். கம்பீரமான இவர், சிவசாம்ராஜ்யக் காப்புப் படைத் தலைவர். வெற்றிலைப் பையை ஏந்தி பயபக்தியுடன் பரமசிவனாரை நெருங்கி வருபவர்.*

***அச்சுனிகள்** - அச்சுவினி - அஸ்வினி தேவர்கள்; ஆதித்தனின் மக்கள் எழுவர் இவர்கள். விவச்சுவான் என்னும் சூரியன், தன் மனைவி சஞ்ஞை அல்லது துவஷ்டரை, தன்னை விட்டுப் பெட்டைக் குதிரை உருவம் கொண்டு தவம் செய்வதை அறிந்து ஆண்குதிரை உருக்கொண்டு தொடர அப்பெட்டைக் குதிரையாகிய சஞ்ஞாதேவியின் இரண்டு மூக்கின் துளைகளிலிருந்து சூரிய ரேதசால் பிறந்தவர்கள். தேவ வைத்தியர் சியவநரின் மனைவி சுகன்னியைச் சோதித்துச் சியவநருக்கு இளமையை அளித்தவர்கள். இந்திரனால் இவர்கள் தேவர்களுடன் அவிவரம் பெற்றனர். வேத மந்திரங்களில் இவர்களைப் பலவாறு கூறப்பட்டிருக்கிறது. முப்பத்து மூவரில் இவர்கள் இருவராவர்.*

*மாபெரும் தேவ மருத்துவர்களான இவர்கள் தெய்வ மந்திரங்களால் இறைவனை வாழ்த்தியபடியே வருகின்றனர்.*

28. ஈசானன் வந்தடைப்பை கைக்கொள்ள அச்சுனிகள்
வாயார்ந்த மந்திரத்தால் வாழ்த்துரைப்பத் – தூய

29. உருத்திரர்கள் தோத்திரங்கள் சொல்லக் குபேரன்
திருத்தகு மாநிதியஞ் சிந்தக் – கருத்தமைந்த

---

***கண்ணி - 29 :*** *இங்கு "உருத்திரர்கள்" என்றது ஏகாதச ருத்திரரை. முப்பத்து மூவரில் இவர் பதினொருவராவர். இங்ஙனம் தேவர் முப்பத்து மூவரும் திரண்டமையறிக.* ***'இவர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கோடி பரிவாரம்' என்பதால் தேவர் முப்பத்து முக் கோடியினர் ஆவர்.***

***உருத்திரர் :*** *உருத்திரர் பிரமன் வேண்டுகோளால் சிவபெருமானால் அதிட்டிக்கப்பட்டுப் பிரமன் நெற்றியில் தோன்றிச் சிருட்டி செய்தவர்கள் பதினொருவர். ஏகாதச ருத்திரர் எனப்படுவர். அவர்கள் மகாதேவர், அரர், உருத்திரர், சங்கரர், நீலலோகிதர், ஈசானர், விசயர், வீமதேவர், பவோற்பவர், காபாலி, சௌமியர் என்பவராவர். இவர்களுக்கு ஏகாதசர் என்னும் பெயருண்டு. உலகபாலகர் எனவும் அழைக்கப்படுவர். இந்த ருத்திரர் ஒவ்வொருவரும் கோடி உருத்திரரைப் படைத்தனர். இவர்களைப் பிரமன் கண்டு வினைக்கீடாகப் படையாமல் முடியாச் சிருட்டி செய்தல் கூடாது என வேண்ட, நின்று சிவசாரூபம் தாங்கித் தேவர் கூட்டமானவர்கள். திக்குப் பாலகர்களான இவர்கள் ஒவ்வொரு திக்கிலும் பலர் உள்ளனர். இந்திர திக்கில் அக்கினி திக்கில், இயம திக்கில், நிருதி திக்கில், வருண திக்கில், குபேர திக்கில், ஈசான திக்கில், அண்டகடாக வோட்டுக்குக் கீழ் விஷ்ணு திக்கில், அண்டகடாகத்தின் மேல் பரமதிக்கில் என எத்திக்கிலும் உள்ளனர். இவர்கள் வெண்ணிறத்துடன் கைகளில் வியாக்யான முத்திரை, அக்கினி, ஞானமுத்திரை, சூலம், அரவப் பூணூல் கொண்டிருப்பர். அக்கினிக்கு அதிதேவரான இவர்கள் தோத்திரங்கள் சொல்லி இறைவனைத் துதிக்கின்றனர். இங்ஙனம் தேவர் முப்பத்து மூவரும் திரண்டனர்.*

***குபேரன் :*** *விசிரவசு என்னும் முனிவருக்கும் இளிபிளைக்கும் பிறந்தவன். இது நிகழ்ந்தது பதுமகற்பத்தில். இவன், வராக கற்பத்தில் காம்பிலி நாட்டிலிருந்த வேள்வி தத்தனுக்குக் குணநிதி எனப் பிறந்து தந்தை தேடிய செல்வத்தைச சூதிலும் வேசைகள் பொருட்டு செலவு செய்தான். இவன் மீது கொண்ட அன்பால் இவனது தாய் இவனது நடவடிக்கைகளைத் தனது கணவனுக்குத் தெரிவிக்காமல் இருந்தாள். இதனை அறிந்த தந்தை, தாயையும் மகனையும் நீக்கிவிட்டு வேறு மணம் செய்து கொண்டான். குணநிதி பசி பொறுக்க மாட்டாமல் சிவராத்திரியன்று சிவதரிசனம் செய்வாருடன் சிவசந்நிதானத்திற்குச் சென்றான். சிவதரிசனம் செய்தபின் பரிசாரகர் உறங்கும் வேளையில் சிவத்திரவியம் கவர எண்ணி விளக்கைத் தூண்டிவிட்டுத் திரவியத்தை எடுத்துக் கொண்டு திரும்புகையில் இவனது கால் அங்கே உறங்கிக் கொண்டிருந்தவர்கள் மீது பட அவர்கள் எழுந்திருந்து இவனைக் கொலை செய்தனர். கொலை*

*யுண்டவனை யமபடர் பிடிக்கச் சிவகணங்கள் விலக்கிச் சிவராத்திரியில் சிவதரிசனம் செய்ததாலும், திருவிளக்கைத் தூண்டிய புண்ணியத்தாலும் கலிங்க நாட்டில் அருந்தமன் புதல்வனாகிய தமன் என்பவனாகப் பிறக்கச் செய்தனர்.*

*இந்தத் தமன் சிவபெருமானை நோக்கித் தவம் செய்தான். சிவபெருமான் என்ன வேண்டும் என்று கேட்க உம்மைக் காண கண்வேண்டும் என்றான். அவ்வாறே பரமன் அருளினான். தமன் இறைவனையும் அருகிருந்த இறைவியையும் கண்டு அவ்வொளியால் கண் மறைவு பெற்று மீண்டும் துதித்துப் பொற்கண்ணனாகவும், அளகாபுரிக்கு அரசனாகவும், அரசனுக்குத் தோழனாகவும் ஆனவன். இவன் விஞ்சையர் கின்னரர்க்கு அரசன். வடதிசைக்கு இறைவன். இலக்குமி தேவிக்கு வைசயந்தம் கொடுத்தவன். இவனது மனைவியின் பெயர் சித்திரரேகை. இவனது வாகனம் குதிரை, கிளி, பூதம். ஆயுதம் கட்கம்; மாலை சீரக்கதார்; பூந்தோட்டம் சைத்திராதம்; விமானம் புஷ்பகம்; இவனது மகன் நளகூபரன்.*

*அருட்கொடையாளரான அம்பலத்தாடுவான் உலா வருகையில் பொருட் கொடையாளனான குபேரன் பொன்மாரி பொழிந்து வருகிறான்.*

***கண்ணி - 29, 30 :*** *கருத்து - உள்ளன்பு.* ***தீர்த்தங்கள் - தீர்த்தங்களின் அதிதேவதைகள்****. கவரி - சாமரை, புடை - இருபக்கத்திலும் இரட்டுதல் - மாறி மாறி வீசுதல்.*

***கங்கை :*** *கங்கா என்னும் வடசொல்லுக்கு வேகம் என்னும் பொருள் கொண்டு விரைந்து செல்லும் நதி என்பர். கங்கை புண்ணிய நதியுருவானவள். இவள் வெண்ணிறம் உடையவள். வலது கையில் கருநெய்தல், இடது கையில் பூர்ண கும்பம், முதலை வாகனம் உடையவள். இமயவேந்தனின் மகள் இவள். சிவனது நெற்றிக் கண்ணில் தோன்றிய ஆறு பொறிகளைச் சரவணப் பொய்கையில் வைத்தவள். சுவர்க்கத்தில் மந்தாகினி என்றும், பூமியில் கங்கை எனவும், பாதாளத்தில் போகவதி என்றும் பெயர் பெற்றவள். உலகத்திலுள்ள மூன்றரைக்கோடி தீர்த்த பலனும் தரவல்லவள். சூரிய வம்சத்துப் பகீரதச் சக்கரவர்த்தியின் கடும் தவத்தால் சிவபெருமான் அருளால் கங்கையின் ஏழு துளிகள் பூமியில் வரப்பெற்றன. அந்த கங்கை கலாநிதி, பவாநி, நளிநி என்று மூன்று பிரிவுகளாய்க் கிழக்கிலும், சுசக்ஷு, சீதை, சிந்து என மேற்கிலும் அளகந்தை எனப் பகீரதன் பின்னும் வரும்போது சந்து முனிவரின் ஆசிரமவழி வருதலை அறிந்த முனிவர் அதனை ஆசமனம் செய்தார். அதனால் கங்கை மறைந்ததைக் கண்ட பகீரதன் முனிவரிடம் முறையிட அவர் கங்கையைத் தன் காதின் வழி வெளியிடச் சாநவி எனப் பெயரடைந்து பகீரதனின் பாட்டன் சரசர் எலும்பில் விழுந்து அவர்களுக்கு நற்கதி தந்தவள்.*

*திருமால் திரிவிக்கிரம அவதாரம் எடுத்து மாபலி கொடுத்த மூவடியை மூவுலகாக அளந்த போது திருவடி சுவர்க்கமடைய அண்டம் உடைந்து ஆகாய*

**30.** கங்கா நதியமுனை உள்ளுறுத்த தீர்த்தங்கள்
பொங்கு கவரி புடைஇரட்டத் – தங்கிய

**31.** பைந்நாகம் எட்டும் சுடரெடுப்பப் பைந்தறுகண்
கைந்நாகம் எட்டும் கழல்வணங்க – மெய்ந்நாக

---

*கங்கை கால்வழி ஒழுகியதால் உண்டானது என்றும் கூறுவர்.*

*பார்வதி தேவி விளையாட்டாகச் சிவபெருமானின் கண்களை மூட அவளது அக்கரத்தின் வழியாகப் பெருகிய நீர் வெள்ளப் பெருக்காக அதைச் சிவபெருமான் தமது தலையில் தரித்தார் என்பர்.*

*இவள் பிரமனது சபைக்கு வந்தபோது உண்டான சாபத்தால் சந்தனுவின் தேவியாகிப் பீஷ்மரைப் பெற்றார் என்பர்.*

*இவள் பரமசிவனை மணக்க விரும்பியதைப் பார்வதி தேவி குறிப்பால் உணர்ந்து இரேணு என்பவனுக்கு மகளாகப் பிறக்கச் சாபமும் அமங்கலமும் பெற்றுத் தவத்தால் மங்கலம் அடைந்தவள். மானச தீர்த்தத்திலிருந்து வந்தமையால் 'கருத்தமைந்த கங்கை' என்கிறார் நாயனார்.*

***யமுனை :** யமனுக்கு முன்னே பிறந்தவள் என்று இதற்குப் பொருளாகும். இவள் சூரியனுக்குச் சுவாகா தேவியிடம் பிறந்தவள். யமி எனவும் பெயர் உண்டு. இவள் ஒரு தீர்த்தமாயினள். காளிந்தி என்பது இவளுக்கு மற்றொரு பெயர். இவளுக்கு ஆமை வாகனம். ஒரு கரத்தில் கரு நெய்தலும் மற்றக் கரத்தில் பூர்ண கும்பமும் இருக்கும்.*

*கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, தபதி, காவிரி, கோதாவரி என்னும் இனிய நதிகளின் தேவதைகள் எழுவர். இவர்களிடம் அமைந்த அணிகலன் அமைதியாகும். உலகிற்கு உயிர்ப்பளிக்கும் இவ்வுத்தமிகள் பரமசிவனாரின் உலாவில் மகிழ்வுடன் கலந்து கொண்டனர். பணியைப் பெரிதும் விரும்பும் பாவையர்களான இவர்கள் பரமனுக்கு வெண்சாமரம் வீசுகின்றனர் இருபாலும் இன்பமுடன்.*

***கண்ணி - 30, 31 :** தங்கிய - எட்டுத் திசைகளிலும் தங்கியிருக் கின்ற பைந்நாகம் - படத்தையுடைய பாம்பு. சுடர் - விளக்கு. அவை தம் தம்மிடத்திலுள்ள மாணிக்கங்களையே விளக்காக எடுத்தன. கைந் நாகம் - கையையுடைய யானை. அவை கால்களை மண்டியிட்டு கைகளைத் தலைமேல் வைத்து வணங்கின.*

***சிறப்புரை : 'பைந்நாகம் எட்டும்'** எட்டு நாகர்களும். வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடன் என நானிலம் தாங்கும் நாகர் எண்மர் உள்ளனர். இவர்கள் பாதவாசிகள். இந்த நாகர்கள் மங்கல*

32. மேகம் விதானமாய் மின்னெலாஞ் சூழ்கொடியாய்
மேகத்(து) உருமு முரசறையப் – போகம்சேர்

33. தும்புரு நாரதர்கள் பாடத் தொடர்ந்தெங்கும்
கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட – எம்பெருமான்

---

*விளக்குகளைத் தங்கள் தலைமேல் ஏந்தி வருகின்றனர்.*

***கைந்நாகம் எட்டும்*** *- துதிக்கையையுடைய எட்டுத் திக்கு யானைகள். ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்ரதீபம் என எட்டுத்திக்கு யானைகள் உள்ளன. மதுரை ஆலவாய் அண்ணலின் கருவறையைச் சுற்றி இந்த எட்டு யானைகளின் பிம்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவற்றை அஷ்டதிக் கஜங்கள் என்பர். இவற்றின் பெண் யானைகள் முறையே அப்பிரமை, கபிலை, பிங்களை, அனுபை, தாம்பிரபர்ணி, சுபதந்தி, அங்கனை, அஞ்சநாவதி என்பனவாம். எட்டுத் திக்கு யானைகளும் திசைதோறும் நின்று நிலம் தாங்கும் திருப்பணியைச் செய்கின்றன. அவைகளும் வரிசையாய் வருகின்றன. வந்து சிவபிரானை வணங்கி நிற்கின்றன.*

***கண்ணி - 31, 32 :*** *மெய் - இறைவனுக்குத் திருமேனியாய் உள்ள. நாகம் - ஆகாயம். விதானம் - மேற்கட்டி. கொடி - துகிற் கொடிய மின்னல் - தோன்றித் தோன்றி மறை தலால் அது காற்றால் மாறி மாறி வீசுகின்ற கொடியாயிற்று. மோகம் - மயக்கம். முரசின் ஓசையால் சிலர்க்கும் சில உயிர்கட்கும் மயக்கம் உண்டாயிற்று என்க. அன்றி, "உலாவைக்காண விருப்பத்தை உண்டாக்கிற்று" என்றலும் ஆம். இங்கும், 'மேகம்' எனல் பாடல் அன்று. உருமு - இடி. விதானம், கொடி, முரசு இவைகள் உண்மையாகவே பல இருப்பினும், இவை ஒப்புமையால் அவையாய் அழகுசெய்தன.*

***கண்ணி - 32, 33 :*** *தும்புரு நாரதர்கள், உம்மைத் தொகை. 'போகம் சேர் நுண்ணிடையார்' என இயைக்க. இதுகாறும் வந்த 'செய' என் எச்சங்கள் நிகழ் காலத்தன.*

***'தும்புரு நாரதர்கள்'*** *- தும்புரு நாரதர் என்னும் இரு முனிவர்கள். தும்புரு விபுலர் குமாரர். இவர் இந்திரனைப் பாடிய பாவத்தால் நாரதரால் பூமியில் திருவேங்கடத்தில் ஒரு பொய்கையில் தள்ளப்பட்டு அக்கரையில் தவம் இயற்றிச் சித்தி பெற்றவர். இவர் ஒரு காந்தருவர். இவர் செய்த நூல் தும்புரீயம் என்பர். போகம் சேர் தும்புரு என்பதில் போகம் இசை அனுபவம் என்றும் கொள்ளலாம்.*

*நாரதர் பிரமனது புத்திரர். இவர் தட்சன் குமாரர்களாகிய அரியசுவர்கள். சபள சுவர்களுக்கு ஞான உபதேசம் செய்து ஞானிகளாக்கியதனால் தட்சனால் நிலையில்லாது திரியச் சபிக்கப்பட்டவர். இவரது கையில் இருப்பது மகதியாழ். அது வேத வீணை, பிரமவீணை, உருத்திர வீணை, சுந்தர வீணை, பிரகதீ, கலாவதி,*

**34.** விண்ணார் பணிய உயர்ந்த விளங்கொளிசேர்
வெண்ணார் மழவிடையின் மேல்கொண்டாங்கு – எண்ணார்

**35.** கருத்துடைய பாரிடங்கள் காப்பொத்துச் செய்யத்
திருக்கடைகள் ஏழ்கடந்த போதில் – செருக்குடைய

---

*கச்சபி போல் மாபெரும் சிறப்பினை உடையது. நாரதர் பஞ்சபாரதியம் என்னும் நூலை இயற்றினார்.*

*"மான்புரிந்த திருக்கரத்து மதியிருந்த*
*நதிவேணி மங்கை பாகன்*
*தான்புரிந்த திருக்கூத்துக் கிசைய*
*மகிழ்ந்து இசைபாடும் தத்வஞானி"*

*என்று பாரதம் நாரதரைப் பாராட்டுகின்றது.*

*பரமசிவனை இவ்விருவரும் என்றும் பாடி மகிழ்வர். இறைவன் உலா வருகையில் இருவரும் இசையோடு தங்கள் உள்ளம் உருகிப் பரம அன்போடு பாடுகின்றனர்.*

***'கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட'* - பூங்கொடி போலும் வடிவமும் நுண்ணிடை இடையையும் உடைய பல மாதர்கள் பரத நிருத்தம் பண்ணிவரவும். அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை என்பவர் தேவதாசியர். பசு புண்ணியத்தால் பொன்னுலக நடனமாதர்களான இவர்கள், பதி புண்ணியம் விரும்பி, பாவம், ராகம், தாளம் வழுவாது பரமன் திருமுன் பரத நாட்டியம் ஆடி வருகின்றனர்.**

***ந-ரை :** பைந்நாகம், கைந்நாகம், மெய்ந்நாகம் என்பதில் நாகம் என்பது பலபொருள் ஒரு சொல்லாகும். பை, கை, மெய் என்னும் அடையால் பாம்பையும், யானையையும், ஆகாயத்தையும் உணர்த்திற்று. மெய்நாகம் ஆகாயம்; யாவற்றிற்கும் இடம் தரும் உடம்புபோல் இருப்பதால், மெய் என அடை கொடுத்தார். நாகம் என்னும் சொல்லை மிக நயமாகப் பயன்படுத்தியுள்ளார் நாயனார்.*

***கண்ணி - 34 :** பணிய - பணியும்படி. இவ்வெச்சம் எதிர்காலத்தது. இது "மேல்கொண்டு" என்பதனோடு முடியும். 'வெண்நார்' எனப்பிரித்து, 'நார் - தனது அன்பிற்கு இடமாகிய விடை' என உரைக்க. 'மேல் கொள்ளல்' என்பது, 'ஊர்தல்' என்னும் பொருட்டாகலின் அது "விடையை" என்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. மழ விடை - இளமையான இடபம்.*

***கண்ணி - 34, 35 :** எண் ஆர் - எண் நிறைந்த; எண்ணால் மிகுதிப் பட்ட. கருத்துடைய - அன்புடைய, பாரிடங்கள் - கூளிச் சுற்றம்; பூத கணங்கள். 'ஒத்துக் காப்புச் செய்ய' என்க. ஒத்து - இணங்கி. காப்பு - காவல். கடைகள் - வாயில்கள்.*

**உலாச் சென்றோர்**

36. சேனா பதிமயில்மேல் முன்செல்ல யானைமேல்
ஆனாப்போர் இந்திரன் பின்படர – ஆனாத

37. அன்னத்தே ஏறி அயன்வலப்பால் கைபோதக்
கன்னவிலும் திண்டோள் கருடன்மேல் – மன்னிய

38. மால்இடப்பாற் செல்ல மலரார் கணைஐந்து
மேல்இடப்பால் மென்கருப்பு வில்இடப்பால் – ஏல்வுடைய

39. சங்கணையும் முன்கைத் தடமுலையார் மேல்எய்வான்
கொங்கணையும் பூவாளி கோத்தமைத்த – ஐங்கணையான்

40. காமன் கொடிப்படைமுன் போதக் கதக்காரி
வாமன் புரவிமேல் வந்தணைய – நாமஞ்சேர்

---

***கண்ணி - 35, 36 :*** *செருக்கு - பெருமிதம்; வீரம். சேனாபதி - தேவ சேனாபதி; முருகன். யானை, ஐராவதம். ஆனா - நீங்காத. போர், அசுரர்மேற் செய்யும் போர், முன் செல்வது தூசிப்படை பின்செல்வது கூழைப்படை.*

***கண்ணி - 37, 40 :*** *கைபோத - பக்கத் துணையாய வர. கல் - வலிய கல். நவிலும், உவம உருபு. மேல் இட - மேற்பட்டுத் தோன்ற. கரும்பு வில் இடப்பால் ஏல்வுடைய - கரும்புவில்லை இடப்பக்கத்தில் ஏற்றலை உடைய காமன். ஏல்வு, தொழிற் பெயர். "பால் மென் கரும்பு" என்பதில் பால், 'சாறு' என்னும் பொருட்டாய்க் கரும்பிற்கு அடையாயிற்று.*

*எய்வான் - எய்தற் பொருட்டு. கொங்கு - தேன். நறுமணமுமாம், வில் மேலே கூறப்பட்டமையால், 'வாளியை அதன் கண் கோத்து அமைத்த' என்க. வாளி - அம்பு.*

*கணை ஐந்து மேலே கூறப்பட்டதாயினும் 'காமனுக்கு உள்ள சிறப்பு ஐங்கணைகளை எய்வதே' என்பது தோன்றுதற்கு. "ஐங்கணையான் காமன்" எனப் பெயர்த்துங் கூறினார். காமனது கொடி மீனக்கொடி. அவனுடை படைகள் மகளிர் குழாம். அவர்கள் ஆடவர்மேல் போர்க்குச் செல்லக் காமன் அப்படைக்குத் தலைவனாய் வில்லும், அம்பும் கொண்டு செல்வான் - ஆயினும் இப்பொழுது அந்தப் படை சிவபெருமான் மேல் வரக் காமன் அச்சத்தால் சிவபெருமானுக்கே துணைசெய்பவனாய்த் தன் குறிப்பறியாது எதிர்த்து வரும் தன் படைகள் மேலேயே தன் அம்புகளை எய்ய வருகின்றன. 'காமன் தன் கொடிப் படைக்கு எதிராய்ப் போத' என்க.*

*காரி - ஐயனார் கதம் - கோபம். வாமம் - அழகு. 'காரியாகிய வாமன்' என்க.*

***தெளிவுரை : (கண்ணி 35-40)*** *களிப்புடைய முருகப் பெருமான் மயில்*

மேல் அமர்ந்து முன்னே செல்ல, போரில் பின்வாங்காத ஆற்றலுடைய தேவேந்திரன், தன் வெள்ளை யானையாகிய ஐராவதத்தின் மேல் அமர்ந்து பின்தொடர்ந்து வர, பிரமன் தன்னை விட்டு நீங்காத அன்ன வாகனத்தின் மேல் அமர்ந்து வலது பக்கத்தில் வர, மலையெனச் சொல்லப்பெறும் வன்மை வாய்ந்த தோள்களை உடைய கருடன் மேல் அமர்ந்துள்ள நாராயணன் இடது பக்கத்தில் வர, தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, குவளையெனப் பொருந்திய மலர்க்கணை ஐந்திணை உடலின் மேல்புறத்திலும் பால் முற்றிய சுவையுள்ள கரும்பு வில்லைத் தமது இடது பாகத்திலுமாகப் பெற்றுள்ள, வளையல் நெருங்கிய முன்னங் கைகளையும் பருத்த தனங்களையும் உடைய மாதர்கள் மேல் மகரந்தம் நிறைந்த மலர்க் கணைகளை விடுவதன் பொருட்டு வரிசையாகக் கோத்துப் பிடித்த ஐந்து கணைகளை உடையவனும், முரசு, குடை, தென்றல், வசந்தம், விருது முதலிய வெற்றிக் கொடியுடைய சேனைகள் சூழ்ந்துள்ளவனுமாகிய மன்மதன் முன்னே செல்ல, சினம் மிகுந்த ஐயனார் அழகிய குதிரைமேல் ஏறி அரண்மனையில் தொடர்ந்துவர,

***'ஆனாப்போர் இந்திரன்'*** - *போர் ஆனா இந்திரன்; போரில் பின்வாங்காத ஆற்றலையுடைய தேவேந்திரன். மயிலேறு முருகனைப் பின்தொடர்ந்து யானைமீது இந்திரன் செல்கிறான். அமராவதி என்னும் தேவநகரை ஆள்பவன் அவன். இந்திராணியின் கணவன். ஐந்தரு நிழலில் அமர்பவன்; ஐந்திர வியாகரணம் செய்தவன்; தேவாசுரப் போரில் வென்ற தேவசேநாபதியாகிய முருகப் பெருமானுக்குத் தன் மகள் தேவயானையை மணம் முடித்துக் கொடுத்தவன். வச்சிராயுதத்தை உடையவன். ஐராவதம் என்னும் வெள்ளை யானையின் மீதேறிச் சிவபிரானின் பின்புறமிருந்து சேவை செய்து வருகிறான்.*

***'ஆனாத அன்னத்தேர் ஏறி அயன் வலப்பால் கைபோத'*** - *பிரமன் தன்னைவிட்டு நீங்காத அன்னவாகனத்தின் மேல் அமர்ந்து வலது பக்கத்தில் வர பிரமன் பொன்னிறமாய், தாடி, மீசை, நான்குமுகம், மேல் வலக்கையில் ஜபமாலை, இடக்கையில் தண்டாயுதம், கீழ் இடது கையில் சுருக்கு சுருவம், வலது கையில் கமண்டலம் உள்ளவராய் இருப்பார். கலைவாணியின் நாதர். சாவித்திரி, காயத்திரி என்னும் தேவியரும் உண்டு. சிவன் என் புத்திரன். என்னால் உலகம் உண்டாயிற்று எனச் செருக்குக் கொண்ட காலத்தில் சிவபிரான் ஐந்தாவது சிரத்தைக் கிள்ளி எறிய அக்கபாலத்தை மற்றவர் ருத்திரமூர்த்தியின் திருக்கரத்தில் கண்ட காலத்தில் அவர்களது செருக்கு அடங்கும் வகை தரிசிக்க வேண்டியவர்.*

*முருகப்பெருமான் வினாவிய பிரணவத்திற்குப் பொருள் கூறாது அவரால் சிறைக்குச் சென்று சிவபிரானால் மீண்டவர். பிரமதேவர் ஒரு காலத்தில் பரம சிவனாரின் வலப்புறத்தில் இருந்து உதித்தவர்; இதை அவர் என்றும் மறந்ததில்லை. எனவேதான் அன்னத்தில் அமர்ந்த அவர் அமலனின் வலப்பக்கமாகவே வருகிறார்.*

***'கல் நவிலும் திண்தோள் கருடன்'*** - *மலை எனச் சொல்லப்பெறும் வன்மை*

*வாய்ந்த தோள்களையுடைய கருடன். இவன் காசிபருக்கு விந்தையிடம் பிறந்தவன். பசியால் வருந்தியபோது தாயின் சொற்படி வடகிழக்கு சமுத்திரத்திலிருந்து சுக்கிரன் அல்லது பிரபாவக என்னும் பெயர் கொண்ட ஆமையையும் சுப்ரதீபகன் யானையையும் பூமியில் வைக்காமல் இமயமலையில் வைத்து உண்டவன். இவன் தனது தாயின் அடிமை நீக்கத் தெய்வ உலகம் சென்று அமுத கலசத்தைக் கிரகிக்கையில் இந்திரன் கோபித்து வச்சிராயுதத்தை எறிந்தான். அதைக் கண்ட கருடன் வச்சிரத்திற்கு மரியாதையாக ஓர் இறகைக் கொடுத்தான். இதனால் இந்திரன் களிப்படைந்து நட்புக்கொண்டு பாம்புகளைத் தின்னும் வரத்தை அளித்தான்.*

*கருடன் தேவாமிர்தத்துடன் தருப்பைப் புல்லைப் பூமியில் கொண்டு வந்து பதித்ததால் தருப்பை சுத்தமாயிற்றாம். ஒரு முறை காளியன் என்னும் நாகன் ரமணகத் தீவில் இருந்தவர்களை வருத்த அவர்களுக்கு அபயம் தந்த அந்தக் காளியனை யமுனை மருவில் ஓடும்படி செய்தவன்.*

*இவனது வலிமையைக் கண்டு திருமால் கேட்டுக் கொண்டதற்கிணங்க வாகனமும் கொடியும் ஆனவன். கண்ணன் புத்திரப்பேற்றின் பொருட்டு உபமன்னியுவிடம் சிவதீட்சை பெற்றுத் தவம் செய்கையில் துவாரகாபுரியை அரக்கர்கள் வளைக்க அவர்களைக் கொன்று கோட்டையைக் காத்தவன். இராவண வதத்தில் இந்திர சித்துடன் போர் செய்த இலக்குமணன் நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்தபோது போர்க்களத்திற்குச் சென்று நாகபாசத்தைப் போக்கி இராமபிரானைத் துதித்துச் சென்றவன். பாற்கடல் கடைந்த காலத்தில் விஷ்ணுவின் ஏவலால் மந்தர மலையை ஏந்தியவன். ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து கிரீடாசலம் கொண்டு வந்து பதித்துத் திருமாலை எழுந்தருளிவித்தவன். இதுவே திருவேங்கடமலை.*

*கருடனுக்குப் புள்ளரசு, ககபதி, நாகாரி, பெரிய திருவடி, கருத்மந்தன் எனவும் பெயர் உண்டு.*

*இத்தகு ஆற்றல் பெற்றவனாதலால் 'கன்னவிலும் திண்டோள் கருடன்' என்று கூறுகிறார் கழறிற்றறிவார் நாயனார்.*

***'மன்னியமால் இடப்பால் செல்ல'** - சிவசக்தி நான்கு விதமாக வேறுபடுவதாக சிவாகமம் செப்புகிறது.*

1. ***பார்வதி பரமயோகத்தில் பவானியாகிறாள்***
2. ***கோபம் வாங்கி எழும் காலத்தில் காளியாகிறாள்***
3. ***போர்க்களத்தில் துர்க்கையாகிறாள்.***
4. ***ஆண்மை வடிவை எண்ணும் சமயம் திருமால் ஆகிறாள்***

***சிவபெருமானுக்கு இடப்பாகம் உமாதேவி இருக்கும்போது சிவனின் வலப்பாகம் திருமால் இருப்பார். இறைவியைத் தன்னுள் கொண்டு ஈசன் வெளிப்படும் சமயம் இன்பம் மிகுந்து இறையனாரின் இடப்பக்கம் இருப்பார்***

*நாராயணர். இதனை நோக்கும்போது,*

> *"ஒருபால் உலகு அளந்த மாலவனாம்; மற்றை*
> *ஒருபால் உமையவளாம்; என்றால் - இருபாலும்*
> *நின்உருவம் ஆக நிறம்தெரிய மாட்டோமால்*
> *நின்உருவோ மின்உருவோ நேர்ந்து" (அற்புதத் திருவந்தாதி 41)*

*என்று காரைக்காலம்மையார் வேடிக்கையாக வினவுவது போல் பாடியுள்ளதும்,*

> *"மாதொரு பாலும் மாலொரு பாலும் மகிழ்கின்ற*
> *நாதனென் றேத்தும் நம்பரன் வைகும் நகர் போலும்*
> *மாதவி மேய வண்டிசை பாட மயிலாடப்*
> *போதலர் செம்பொன் புன்னை கொடுக்கும் புறவம்மே"*
>
> *(திருப்புறவம் - 1 ஆம் திருமுறை)*

*என்று திருஞானசம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியுள்ளதும் எண்ணி இன்புறத்தக்கன.*

*இறைவன் திருவுலா வரும் இப்போது இடப்பக்கத்தில் இறைவி இல்லை. எனவே, திருமால் கருடனில் அமர்ந்து இடப்பாக வழியாக ஈசனைத் தொடர்ந்து வருகிறார்.*

***'ஐங்கணையான் காமன் கொடிப்படை முன் போத'*** *- மீன்கொடி பறக்கும் தென்றல் தேரில் ஏறி கரும்புவில்லும் மலர்க்கணையும் ஏந்தி வருகிறான் மன்மதன். தாமரை போன்ற முகமும் மாம்பூவும் அசோகும் போன்ற நிறமும் முல்லை அரும்புகள் போன்ற பற்களும், குவளை போன்ற விழிகளும் ஆக, மலர்களையே அங்கமாகக் கொண்டவர் மங்கையர். எனவே, தங்களது உடலின் இடப்புறத்தில் கரும்புவில் உருவம் வரைந்திருப்பர். அந்நாளில் இது மரபாக இருந்து வந்தது. இன்று அந்த மரபு மறைந்து போயிற்று.*

*தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, குவளை என்பவை எனது கையில் இருந்த கணைகள். அந்தக் கணைகளை மங்கையர் தம் அங்கமாகக் கொண்டனர். அத்தோடல்லாமல் என் வில்லையும் அல்லவா கவர்ந்து கொள்கின்றனர். அவர்களைச் சும்மா விடக்கூடாது. என் கணைகளையும் வில்லையும் கைப்பற்றுவேன். அந்த மங்கையரை எதிர்த்து வெல்வேன் என்று கூறி வருவது போல் உள்ளதாம் மன்மதனின் வருகை! காமனது படைகள் மகளிர் குழாம். அவர்கள் ஆண்கள் மீது போர் செய்யச் செல்லும்போது காமன் அப்படைக்குத் தலைவனாய் வில்லும் அம்பும் கொண்டு செல்வான். ஆயினும் இப்பொழுது அந்தப்படை சிவபெருமான் மேல்வரக் காமன் அச்சத்தால் சிவபெருமானுக்கே துணை செய்பவனாய்த் தன் குறிப்பறியாது எதிர்த்து வரும் தன் படைகள் மேலேயே தன் அம்புகளை எய்ய வருகின்றான். 'காமன் தன் கொடிப்படைக்கு எதிராய்ப் போத' என்க.*

41. வேழ முகத்து விநாயகனை உள்ளுறுத்துச்
சூழ்வளைக்கைத் தொண்டைவாய்க் கெண்டையொண்கண் – தாழ்கூந்தல்

42. மங்கை எழுவருஞ் சூழ மடநீலி
சிங்க அடலேற்றின் மேற்செல்லத் – தங்கிய

43. விச்சா தரர்இயக்கர் கின்னரர் கிம்புருடர்
அச்சா ரணர்அரக்க ரோடுஅசுரர் – எச்சார்வும்

**வாசிக்கப்பட்ட வாத்தியங்கள்**

44. சல்லரி தாளம் தகுணிதம் தத்தளகம்
கல்லலகு கல்ல வடமொந்தை – நல்லிலயத்

---

*__‘கதக்காரி வாமன் புரவிமேல் வந்தணைய’__ - கதக்காரி - கோபத்தையும் கருநிறத்தையும் உடையவர் என்னும் பொருளில் சாத்தானைக் குறித்தது. பதம் - கோபம்; வாமம் - அழகு; ‘காரியாகிய வாமன்; என்க. சாத்தா - சாத்தன், ஐயனார் - இவர் அரிகரபுத்திரர். இவருக்கு ஆயுதம் வளை, செண்டு. வாகனம் குதிரை, யானை. ஒரு சோழன் இவரை வணங்கிச் செண்டு பெற்று மேருவிலிருந்த செல்வத்தைப் பெற்றான். அரி, அரர் கூடப் பிறந்ததால் இப்பெயர் பெற்றார். இவர் வளையை எடுக்க செண்டைப் பிடித்துக் காவியைக் கருத்தில் கொண்டு குதிரையின் மேல் ஏறிக்கடுகடுத்து வருகின்றார்.*

*__கண்ணி - 40-42 :__ நாமம் - அச்சம் ‘விநாயகனை உள்ளுறுத்துக் கதக் காரி செல்ல’ என மேலே கூட்டுக.*

*“மங்கை” என்பது அப்பருவத்தைக் குறித்தது. எழுவர் - சந்தமாதர். இவருள் காளியும் ஒருத்தியாயினும் அவளைத் தலைவியாக வேறு பிரித்துக் கூறுதலின் அவளுக்கு ஈடாகத் துர்க்கையைக் கொள்க.*

*எழுவர் மாதராவார் பிராம்மி, வைணவி, மாகேசுவரி, கௌமாரி, இந்திராணி, வாராகி, காளி. பிராம்மி, ‘அபிராமி’ என்றும், வைணவி ‘நாராயணி’ என்றும் சொல்லப்படுவர். நீலி - காளி. மடம் - இளமை.*

*1. பிராமி, 2. மகேச்சுவரி, 3. கௌமாரி, 4. நாராயணி, 5. வராகி, 6. இந்திராணி, 7. காளி.*

*__1. பிராமி :__ கலையில் சிறந்தவள். சிவந்த ஆபரணங்கள். சிவந்த பட்டுப்புடவை அணிபவள். பொன்னிறமேனியள். நான்கு முகம்; சடைமுடி; காதளவு ஓடிய எட்டு கண்கள்; வரத அபயகரம்; சுருக்கு ஜபமாலிகை வலக்கரத்திலும், தண்ட கமண்டலங்கள் இடக்கரத்திலும் உள்ளவள்; அன்ன வாகனம் கொண்டவள். சரஸ்வதியின் திருவுருவத்தால் சிறுபெண்ணின் உருவம் உடையவள். பத்மாசனப் பிரமரூபிணி என்னும் பிராமி. அன்னத்தில் அமர்ந்து அழகுற வருகிறாள்.*

***2. மகேஸ்வரி :*** *வெண்ணிற மேனியும் சடாமகுடத்துடன் கூறியவளாய்ச் சந்திர சடாதரியாய்க் கபாலம், சூலம், அபயவரதகரம், மணிமாலை, இடபக் கொடியுடன் பாம்பணி கொண்ட மகேஸ்வரி இடப வாகனத்தில் ஏறி வருகிறாள்.*

***3. கௌமாரி :*** *குங்கும நிறத்தினள்; செம்பட்டாடை அணிந்தவள், மணிமுடி சூடியவள், அங்குசம், வேல் முதலிய ஆயுதம் ஏந்தியவள், அணிகலன் பல அணிந்தவள், மயில் கொடி உடையவள்; பேராற்றல் கொண்ட கௌமாரி மயில் வாகனத்தில் ஏறி வருகிறாள்.*

***4. நாராயணி :*** *தாமரைக் கண்ணினள், சங்கு சக்கரம் கொண்டவள்; அபய கரம், கருடக் கொடியுடன் கருடனில் ஏறி வருகிறாள் நாராயணி.*

***5. வராகி :*** *பன்றி முகம் கொண்டவள்; கருநிறப்பட்டாடையும் அணிகலன் பலவும் அணிந்தவள்; சிலம்பணிந்த திருவடியள்; கலப்பையை, உலக்கையை ஆயுதமாகக் கொண்டவள்; சிங்க வாகனத்தில் ஊர்ந்து வருகிறாள், அபயவரத கரத்தினளும் பலவகைச் செல்வமும் படைத்த வராகி.*

***6. இந்திராணி :*** *வச்சிராயுதம் ஏந்தியவள்; அழகிய ஆடையை அணிந்த வரத அபயகரத்தினள்; யானைக்கொடி கொண்டவள்; இந்திராணி யானைமேல் ஏறிவருகிறாள்.*

***7. காளி :*** *தாருகாசுரனால் துன்பமடைந்த தேவர்கள் பெண் உருவம் எடுத்து சிவபெருமானை அடைந்து தமது குறைகளைக் கூறினார்கள். பெண்ணால் அன்றி வேறு எவராலும் இறவாத தாருகனை வெல்லுமாறு சிவபெருமான் சக்திக்குக் கட்டளையிட்டார். அப்போது தேவியின் ஒரு கலை சிவபெருமானின் நச்சுக்கறை படிந்து கனற் கண்ணில் பிறந்து வெளிப்பட்டது. அந்த உருகாளமாகிய விஷக்கறை படிந்து வந்ததால் காளி என்று பெயர்பெற்றது. இவ்வாறு பிறந்த காளி தனது கோபக்கனலால் தாருகனைப் பொசுக்கி நீறாக்கினாள். இவளிடம் பிறந்த கோபத்தீ குழந்தை உருவம் கொண்டது. இதைக் கண்ட காளி குழந்தைக்குப் பாலூட்டினாள். அதனால் விபரீதம் விளையாதபடி சிவபெருமான் குழந்தையையும் பாலையும் தம்மில் ஒடுக்கினார். ஒடுக்கிய சிவபெருமானிடமிருந்து எட்டு உருக்கொண்டு வைரவ மூர்த்தி தோன்றினார். காளி மூன்று கண்களைக் கொண்டவள்; சூலம், வாள், அம்பு, சக்கரம் ஒரு புறம்; பாசம், வில், சங்கு, பலகை ஒரு புறம், இவைகளைக் கொண்ட எட்டுக் கையினள்; சடை முடித்து, மங்கல அணி பல அணிந்து, எருமை ஊர்தியில் கனவேகத்தில் வருகிறாள் காளி.*

***'வேழமுகத்து விநாயகனை உள்ளுறுத்தி மங்கை எழுவரும் சூழ'*** *- சப்த மாதர்கள் எழுவரும் சத்திய நெறியினர். சங்கரன் உலாவில் பணி செய்ய வந்தவர்கள். சித்தைவிட்டு அகலாத ஆநந்தம், சத்தின் பூரிப்பில் சாரும்; அதுபோழ்து வாழும் ஓங்காரம் வட்டமிடும்; தனிப்பெரும் தலைமை தாங்க அதனிடம் இருந்து வேழமுக விநாயகர் என்று ஒரு வடிவம் வெளிப்படும்.*

*விக்கினம் கெடுக்கும் விமலன், இந்த அமலன்; உலாவில் விக்கினம் விளையாதபடி சப்தமாதர் நம்பன் கணபதியை நடு இருத்தினர்; வழிபட்டு அன்போடு வருகின்றார்கள் என்று அன்போடு ஓதுகிறார் நாயனார் அழகுமிளிர.*

***"மடநீலி சிங்க அடலேற்றின் மேல் செல்ல"*** *- துர்க்கை - காளியின் அம்சமான தேவி இவள் சகலசக்திகளுக்கும் அதிதேவதை. நூறு தோள்கள் கொண்டவள். எல்லா விதமான ஆயுதங்களையும் உடையவள். அறுபத்து நான்கு சக்தி பீடங்களுள் இவளுக்கென்று தனி இடம் ஒன்ற உண்டு. நீலநிறம் உடையவள்; எனவே, நீலி என்று பெயர் பெற்றவள். அச்சமூட்டும் ஆண் சிங்கத்தின் மேல் அமர்ந்து சப்தமாதர்க்கும் முன்னே செல்கிறாள்.*

***கண்ணி - 43-44 :*** *விச்சாதரர் முதல் அசுரர் ஈறாகச் சொல்லப்பட்டவர்கள் தேவ சாதியினர். இவர் முதலாகப் பதிணெண்கணங்கள் சில இடங்களில் சொல்லப்படும். விச்சாதரர் வித்தியாதரர். 'கந்திருவர்' என்றும் சொல்லப்படுவர். இயக்கர் - யட்சர். யட்சனுக்குப் பெண்பால் யட்சிணி. தேவ சாதியினருள் யட்சர் பேரழகுடையவர்களாகச் சொல்லப்படுவர். "அச்சாரணர்" என்பதில் அகரம் பண்டறி சுட்டு.*

***'வித்யாதரர்'*** *- விச்சாதரர் என்னும் இவர் பிரமனால் படைக்கப்பட்ட விண்ணவருள் ஒரு பகுதியர். மேகவாகனர். மரலிகாஞ்சனம் முதலிய வித்தை மலிந்தவர்.*

***இயக்கர், இராக்கதர்*** *- பிரமன் இருபகுதியினரையும் வித்தையிற் சிருட்டித்தான். உடனே ஒரு பகுதியினர் பிரமனை நோக்கிப் பட்சிக்க வேண்டும் என்றனர். மற்றவர் இரட்சிக்க வேண்டும் என்றனர். இப்படிப்பட்ட புதல்வரை நோக்கிப் பரமன் பட்சிக்கவேண்டும் என்பவர்களை இராக்கதர்களாகவும், இரட்சிக்க வேண்டும் என்பவர்களை இயக்கர்களாகவும் (இயட்சர்) ஆக என்றார் நான்முகன்.*

***கின்னரர்*** *- கின்னரப் பண் பாடுபவர்கள். எனவே, கின்னரர் என்று பெயர் பெற்றனர். மனிதர் போல இருப்பார்கள்.*

***கிம்புருடர்*** *- குதிரை முகம் கொண்டவர். கின்னரர் கிம்புருடர் இருவரும் நான்முகனின் திருவுருவிலிருந்து தோன்றியவர்கள்.*

***சாரணர்*** *- சரித்தல் - இயங்குதல். உலவுதல், இவர்கள் என்றும் பணிமுகமாகி இருப்பவர்கள்; தேவசாதியினர்; சரித்துக்கொண்டே இருப்பதால் இவர்கள் சாரணர் என்று பெயர் பெற்றனர்;*

***அசுரர்*** *- தேவர்க்கு எதிரானவர். சுரர்க்குப் பகைவர் அசுரர். சுரை - அமுதம்; அ - இல்லை; எனவே, அமுதபானம் இழந்தவர் என்னும் பொருளிலும் அவர்களை அசுரர் என்று அழைப்பது வழக்கம். பிரமன் சகனத்தில் உதித்து அப்பிரமனைப் பெண்ணாக நினைத்து இச்சித்தமையால் அசுரர் ஆயினர்.*

45. தட்டழி சங்கம் சலஞ்சலந் தண்ணுமை
கட்டழியாப் பேரி கரதாளம் – கொட்டும்

46. குடமுழவம் கொக்கரை வீணை குழல்யாழ்
இடமாம் தடாரி படகம் – இடவிய

47. மத்தளம் துந்துபி வாய்ந்த முருு(டு) இவற்றால்
எத்திசை தோறும் எழுந்தியம்ப – ஒத்துடனே

48. மங்கலம் பாடுவார் வந்திறைஞ்ச மல்லரும்
கிங்கரரும் எங்குங் கிலுகிலுப்பத் – தங்கிய

---

***கண்ணி - 44-47 :*** *எச்சார்வும் - எவ்விடத்திலும். சல்லரி முதல் முருடு ஈறாகச் சொல்லப்பட்டவை வாத்திய வகைகள். அவற்றுட் பெரும்பாலன தத்தம் ஓசை காரணமாகப் பெயர் பெற்றன. கல்லவடம் - இரத்தின மாலை. இதனை மொந்தைக்கு அடையாக்குக. இலயத்தட்டு, தாள அறுதி தோன்றத் தட்டுதல். சங்கு, அத்தட்டினைக் கடந்து ஒலித்தலால், "தட்டு அழி சங்கம்" என்றார். 'சலஞ்சலம்' என்பதும் ஒருவகைச் சங்கே. தாளம் - பிரம்ம தாளம். கட்டு அழியாப் பேரி - வார்க்கட்டுத் தளராத பேரிகை. கர தாளம் - கைத்தாளம். இது சிறிய அளவினதும், குவிந்த வடிவினதுமாய்ச் சிறிய அளவில் ஒலிப்பது. மகளிர் தனங்கட்கு உவமையாகச் சொல்லப்படும் தாளம் இதுவே. முன்னர்ச் சொல்லியது பெரிய அளவினதாய்ப் பேரோசையைத் தருவது. இயம்ப - ஒலிக்க.*

***விளக்கவுரை :*** *பரமன் உலாவரும் சமயம் பலவிதமான வாத்தியங்கள் எங்கும் முழக்கம் எழுப்புகின்றன. அந்த இசைக்கருவிகளின் உருவமும் பெயரும் கூட இன்று மக்களுக்குத் தெரியாது. இவைகளைத் தெய்வ வாச்சியங்கள் என்பர். இசைக் கருவிகள் கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் என மூன்று வகைப்படும்.*

1. *கீதாங்கம் - கீதத்திற்குப் பயன்படும்.*
2. *நிருத்தாங்கம் - நாட்டியத்திற்கு வாசிப்பது*
3. *உபயாங்கம் - இரண்டிற்கும் இசைப்பது*

*பரமனின் உலாவியலில் மூன்று அங்கங்களும் முழங்குகின்றன.*

*சல்லரி என்பது ஒருவகை பம்பை. தாளம் என்பது பெரிய தாளமாகும். இஃது இன்று பிரமதாளம் எனப்பெறும். தகுணிதம், தகுணிச்சம் என்றும் அழைக்கப்படும். தத்தளகம் என்பது ஒருவகைத் தாளக்கட்டு; தத்தம் தளங்க என்னும் ஒலியுடையது.*

> *"மத்தளம் தத்தம் மழலை ஒலி ததும்பத்*
> *தத்தளம் தத்தம் தளங்கவென"*

*என்பது சிவந்தெழுந்த பல்லவராயன் உலா. கல்லலகு என்பது கல்கல் என லகு*

ஓசையுடைய ஒரு பறையாகும். கல்லவடம் என்பது கல்லெனும் இசை எழுப்பும் கயிறு போன்றதொரு கருவி. மொந்தை என்பது ஒரு கண் பறை. தட்டழி என்பது நல்ல லயத்தை உடனே உண்டாக்கும் இசைக்கருவி. சங்கம் என்பது வலம்புரி. சலஞ்சலம் என்பது இடம்புரி. இதனை,

> "இப்பி ஆயிரமே சூழ்ந்தது இடம்புரி என்று கூறும்
> ஒப்பில் சங்கு ஆயிரம் சூழ் உறுவலம் புரிஎன்றோதும்
> அப்படி அதுவும் சூழ்ந்த சலஞ்சலம் ஆகும்"

என்னும் சூடாமணியால் அரிய சங்குகளின் வரலாற்றை அறியலாம்.

தண்ணுமை என்பது மிருது அங்கம் ஆன மிருதங்கம். பேரி என்பது பேரிகை. கொட்டும் கரதாளம் என்பது ஒன்றின் மேல் ஒன்று தட்டி ஒலியெழுப்பும் கைத்தாளம் ஆகும். குடமுழவம் என்பது குடமுழா; இக்கருவியி லிருந்து தொம் தாம் குமுகுமு என்று ஒலியெழும். இந்த இசைக்கருவியை வாசிப்பவன் வாணன். இவன் முப்புறத் தலைவருள் ஒருவன்.

> "தூக்கு நேர்பட ஆயிரம் கைகளால்
> தொம்மென முகந்தோறும்
> தாக்க வேறு வேறு எழுகுட முழவொலி
> தடங்கடல் ஒலி சாய்ப்ப"

என்பது திருவிளையாடல் புராணம்.

> "அருச்சனை விடா(து) அங்கு ஒருப்படு மூவரில்
> இருவரைக் காவல் மருவுதல் ஈந்து
> மற்றொரு வர்க்கு வைத்த நடம் அறிந்து
> குடமுழா இசைப்பப் பெரும் அருள் நல்கி"

என்கிறது கல்லாடம்.

> "மூஎயில் சென்ற ஞான்(று) உய்ந்த மூவரில்
> இருவர்நின் திருக்கோயிலின் வாய்தல்
> காவலாளர் என்று ஏவிய பின்னை
> ஒருவன் நீகரி காடரங் காக
> மானை நோக்கி ஓர்மாநடம் மகிழ
> மணிமுழா முழக்க அருள்செய்த
> தேவதேவநின் திருவடி அடைந்தேன்
> செழும்பொழில் திருப்புன்கூர் உளானே"
>
> - திருப்புன்கூர் பதிகம் - 8

என்று சுந்தரர் பாடுகிறார்.

கொக்கரை என்பது கொக்கரி என்ற பெயரும் உண்டு. இது ஒலியால்

*பிறந்த பெயர். குழல் என்பது புல்லாங்குழல். வீணை வேறு; யாழ் வேறு; மிக இனியன ஆதலின் 'வீணை குழல் யாழ்' என மூன்றையும் ஒருமிக்க உரைத்தார். தடாரி என்பது இரண்டு ஒத்துடைய தாளம். இது ஒலி ஊடுருவி வரும் கருவி. படகம் என்பது தம்பட்டம் என்னும் ஒரு வகை இசைக்கருவி. மத்தளம் கனஒலியை உடையது. துந்துபி, துந்தூ என்னும் அனுகரண ஒலியால் பிறந்த பெயர். முருடு என்பது நடைமுருகு எனவும் பெயர் பெறும். இது வயிரம் பாய்ந்த மரத்தால் செய்யப்பட்ட ஒருவகைக் கருவி என்பர்.*

*தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, மிடற்றுக் கருவி, கஞ்சக் கருவி எனப்பெறும் வாத்தியங்கள் எல்லாம் உலாவில் ஒலிக்கின்றன. விச்சாதரர் முதலிய பதினென் கணத்தலைவர் எல்லாத் திசையிலும் நிறைந்து இவ்வாத்திய ஓசைகளை எழுப்பினார் என்றுமாம்.*

***பதினெண்கணமாவன :*** *1. அமரர், 2. சித்தர், 3. அசுரர், 4. தைத்தியர், 5. கருடர், 6. சின்னரர், 7. நிருதர், 8. கிம்புருடர், 9. காந்தருவர், 10. இயக்கர், 11. விஞ்சையர், 12. பூதர், 13. பைசாசர், 14. சுந்தரர், 15. முனிவர், 16. உரகர், 17. ஆகாய வாசியர், 18. போகபூமியர்*

*எனப்படுவர். மல்லர், மல்யுத்தத்தில் தேர்ந்தவர். கிங்கரர் கைங்கரியம் செய்யும் தொழிலாளிகள். கிலுகிலுத்தல் என்பது கிக்குலு கிலுகிலு என்னும் ஓசைக்குறிப்பு. இவைகளை அடிஒற்றி,*

*"துத்தவகை கிள்ளை விளரி தாரம்*
*உழை இனிஓசை பண்கெழுமப் பாடி*
*சச்சரி கொக்கரை தக்கையோடு தகுணிதம்*
*துந்துபி தாளம் வீணை*
*மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்*
*தமருகம் குடமுழா மொந்தை வீணை*
*அத்தனை விரவினோ(டு) ஆடும் எங்கள்*
*அப்பனிடம் திருஆலங் காடே"*

*- மூத்த திருப்பதிகம் - 10*

*என்று காரைக்கால் அம்மையார் பாடுவதும் எண்ணி இன்புறத்தக்கது.*

***கண்ணி - 47-48 :*** *மங்கலம் பாடுவார்; சூதரும், மாகதரும், இவர்கள் முறையே திருவோலக்கத்தில் நின்றேத்துவாரும், இருந்தேத்து வாரும் ஆவர். மல்லர் - மெய்க்காப்பாளர். கிங்கரர் - தூதுவர். இவரெல்லாம் சிவ கணத்தவராவர். கிலுகிலுத்தல் - முணுமுணுத்தலும், அதட்டுதலும்.*

***கண்ணி - 49-50 :*** *இருது - ருது. இது தமிழில் 'பெரும் பொழுது' எனப்படும். அவற்றைக் கார் முதலாக (ஆவணி முதலாக) வைத்து எண்ணுதல் தமிழ் மரபு. வசந்தம் முதலாக வைத்து எண்ணுதல் வடநூல் வழக்கு. (வசந்தம், கிரீஷ்மம்,*

49. ஆறாம் இருதுவும், யோகும், அருந்தவமும்
மாறாத முத்திரையும், மந்திரமும் – ஈறார்ந்த

50. காலங்கள் மூன்றும் கணமும் குணங்களும்
வால கிலியரும் வந்தீண்டி – மேலை

**போற்றிப் பரவுதல்**

51. இமையோர் பெருமானே போற்றி! எழில்சேர்
உமையாள் மணவாளா போற்றி – எமைஆளும்

52. தீயாடி போற்றி! சிவனே அடிபோற்றி!
ஈசனே, எந்தாய், இறைபோற்றி! – தூயசீர்ச்

---

*வர்ஷம், சரத், ஹேமந்தம், சிசிரம்). வசந்தம் முதலிய ஆறும் சித்திரை முதல் இரண்டிரண்டு மாதங்களை யுடையன. பெரும் பொழுது கூறியதனானே சிறு பொழுதுகளும் கொள்ளப்படும். யோகு - யோகம். முத்திரை - சின்முத்திரை முதலிய கைக்குறிகள். கணம் க்ஷணம்) - நொடி இதனைக் கூறவே உபலக் கணத்தால் துடி, இலவம் முதலிய பிற நுட்பக்காலங்களும் கொள்ளப்படும். இருது முதலாக இதுகாறும் கூறப்பட்டன. அவற்றின் அதி தேவர்களையாம். வால்கிலியர் - பிரமனது மானச புத்திரனாகிய 'கிருது' என்பவனுக்கும், 'கிரியை' என்பவளுக்கும் பிறந்த அறுபதினாயிரவர் இவர் அங்குட்ட அளவினராய், வானப்பிரத்தர்களாய்ச் சிவநெறியில் நிற்பவர்கள் என்பர். ஈண்டி - நெருங்கி.*

***விளக்கவுரை : 'ஆறாம் இருதுவும்'** ஆறு பருவம் இரண்டு மாதங்கள் கொண்டது ஒரு பருவம். தமிழில் 'ருது' பெரும்பொழுது எனப்படும்.*

1. *ஆவணி, புரட்டாசி - கார்ப்பருவம்*
2. *ஐப்பசி, கார்த்திகை - கூதிர்ப்பருவம்*
3. *மார்கழி, தை - முன்பனிப்பருவம்*
4. *மாசி, பங்குனி - பின்பனிப்பருவம்*
5. *சித்திரை, வைகாசி - இளவேனில் பருவம்*
6. *ஆனி, ஆடி - முதிர்வேனில் பருவம்*

*இவ்வாறாக ஆறு பருவங்களுடன் ஒவ்வொரு ஆண்டும் நிறைவடையும் ஒவ்வொரு பருவத்திற்கு ஒவ்வொரு அதிதேவதை பருவ தேவதைகள் அறுவரும் பயபக்தியுடன் பரம சிவனை தரிசிக்க வந்துள்ளனர்.*

***'யோகும்'** - யோகங்கள். விஷ்கம்பம் முதல் வைதிருதி வரை இருபத்தியேழு யோகங்கள் இருக்கின்றன. அவை,*

*1. விட்கம்பம், 2. பிரீதி, 3. ஆயுஷ்மான், 4. சௌபாக்கியம், 5. சோபனம், 6. அதிகண்டம், 7. சுதர்மம், 8. திருதி, 9. சூலம், 10. கண்டகம், 11. விருத்தி, 12. துருத்தி, 13. வியாகாதம், 14. அரிடனம், 15. வச்சிரம், 16. சித்தி, 17. விதீபாதம், 18. வரியான், 19. பரீகம், 20. சிவம், 21. சித்தம், 22. சாத்தியம், 23. சுபம், 24. சுப்பிரமம், 25. பிரமம், 26. ஐந்திரம், 27. வைதிருதி.*

*என்பனவாம். இந்த யோகங்களின் ஆட்சி, காலம் முதலியவற்றை பஞ்சாங்கம் கணிப்பவர் மட்டும் இன்றுப் பயின்றுள்ளனர். இந்த 27 அதிதேவதைகளும் உலாவிற்கு வந்துள்ளனர்.*

***'அருந்தவமும்'*** *- தவம் - சாதனா சம்பந்தம் பலவாகும். அவைகளை மேற்கொண்ட அரிய தேவதைகள் அநேகர். தாங்கள் செய்த தவத்தின் பயனாக அவர்கள் சிவபெருமானைச் சேவித்து வருகின்றனர். தசரத ராமனின் தவக்கோலத்தைக் கண்டு, தவத்தின் முறை துறை அறிந்தது தவதேவதை என்று கசிந்து பாடுகிறார் கம்பர்.*

> *"இந்நளின நாட்டத்தான் தவம் செய்யத்*
> *தவம் செய்த தவம்என்"*

*இவ்வாறே புண்ணிய தேவதைகளும் பாவ தேவதைகளும் உள்ளன.*

> *"விரிந்திடுதீ வினைசெய்த வெவ்விய தீ வினையாலும்*
> *அருங்கடையின் மறையுரைசேய் அறம்செய்த அறத்தாலும்"*

*இராமன் அவதரித்தான் என்ற இராமாயணம் எடுத்துக் கூறுகிறது.*

***'மாறாத முத்திரையும்'*** *- முத்திரை, தேவர்களை மகிழ்ச்சி கொள்ளச் செய்தலாலும் அசுரர்களைத் துரத்தலாலும் உண்டான காரணப் பெயர் இது. இம்முத்திரைகள் ஆவாஹன முத்திரை, ஸ்தாபன முத்திரை, கன்னிதான முத்திரை, நிஷ்டுரை என்னும் முத்திரை, அவகுண்டன முத்திரை, தேனு முத்திரை அல்லது சுரபி முத்திரை என்பன. மகாமுத்திரை என்பது வலக்கால் நீட்டி இடப்பாற் குதித்து அழுத்தி, நீட்டிய தாளை வலக்கையால் பிடித்து, நாடி வளைத்து, ஓடுகின்ற பிராணவாயுவை மாறி மாறி விடும், நாடி சோதித்தல் கூட்டல் என்பதாம். நபோ முத்திரை என்பது நாக்கைக் கபாலத்துள் ஏற்றிப் புருவநடுவில் விழிகளை இருத்தி இருப்பதாகும். இவ்வாறு சிவவழி பாட்டில் கையாளும் முத்திரைகள் பல. ஒவ்வொரு முத்திரைக்கும் ஒரு தேவதை. அவர்கள் அனைவரும் தம்மை வாழ்விக்கும் உலாவைக் காணவந்துள்ளனர்.*

***'மந்திரமும்'*** *- மந்திரம். மந்திரம் என்பது மனனம் செய்தவனைக் காப்பது. மந்திரங்களை முறைப்படி தீட்சைபெற்று நியமுத்துடன் செபித்தால் எல்லாச் சித்திகளும் கிட்டும். செபிக்கப்படும் மந்திர தேவதைகள் நேரில் தோன்றி சகல சித்திகளையும் பிரசாதிப்பர். இதனால் வசீகரணம் முதலிய சித்திகள் உண்டாம். பரகாயப் பிரவேசமுண்டாம். சாப நிவர்த்தி சாதுர்யம் உண்டாம். இம் மந்திரம்*

*ஏழு கோடியாக விரிவுறும். அவற்றுள் பிரணவம், பீஜம், கீலகம், ருஷி முதலிய தனித்தனி வேறாம். அம் மந்திரங்கள் பலவகை. அவற்றுள் மகாமந்திரங்களை மந்திரம் உணர்ந்த ஆசிரியர்பால் கேட்டறிக. சின்முத்திரை, ஏகாட்சரம், திரியாட்சரம், பஞ்சாட்சரம், சடாட்சரம், அஷ்டாட்சரம் என்னும் சாந்த மந்திரங்கள் பல. இம்மந்திர அதிதேவதைகள், மகாதேவனின் உலாவைக் கண்டு மாட்சி பெற வருகின்றனர்.*

***'காலங்கள் மூன்றும்'** - காலம் - ஏழு கிழமைகள்; பன்னிரண்டு மாதங்கள்; இரண்டு அயனங்கள்; அறுபது ஆண்டுகள் என்பன. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலத்தும் இவை மாறி மாறி வரும். அவைகளின் பெயர்கள் அந்த அதிதேவதையின் பெயர்கள் தான். மதுரை மீனாட்சியம்மையின் திருமணத்தைக் காண அறுபது ஆண்டுகளும், அயனங்களும், மாதங்களும், பட்சங்களும், கிழமைகளும், பருவங்களும், மலைகளும், நதிகளும் வந்தன என்று திருவிளையாடல் புராணம் கூறும். பரமனின் உலாவைக் காணத் திரண்டு வருகின்றனர் அத்தேவதைகள்.*

***'கணமும்'** - கணங்கள் : கணம் என்பது கால நுட்பம். நான்கு நிமிடம் அல்லது முப்பது கலை கொண்ட கால அளவு. ஒவ்வொரு கணத்திலும் உயிர்களைக் கணதேவதைகள் காக்கின்றன. உலாவரும் சிவனை வணங்கத் திரண்டு வருகின்றனர் அத்தேவதைகள்.*

***'குணங்களும்'** - குணம். இது மூன்று வகைப்படும்.*

*1. சத்துவம் 2. இராசசம் (இராஜசம், இராசதம்) 3. தாமசம் (தாமதம்)*

*சத்துவம் ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறி அடக்கல் முதலியனவாம்.*

*இராசசம் மனவூக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி முதலியவாம்.*

*தாமசம் பேருண்டி, நெடுந்துயில், சோம்பல், நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை முதலியவாம்.*

*மூன்று குணங்களான இவை முறை மாறி வருவதும் உண்டு. அன்பும் பண்பும் வளர்ந்து அருள் குணம் வெளிப்படும் வரை முக்குண தேவதைகள் முன்னிற்பர். அரனின் உலாக் காண ஆர்வத்தோடு வருகின்றார்கள் அவர்கள்.*

*'வாலகிலியர்' - வாலகிலியர் என்பவர்கள் நான்முகனின் மானச புதல்வர். பிரமனின் மானஸ புத்திரனாகிய கிருது என்பவனுக்குப் பிறந்தவர்கள். இவர்களது தாய் கிரியை. இவர்கள் மொத்தம் அறுபதினாயிரம் பேர். இவர்களே வாலகிலியர் என்னும் பெயரில் வளர்ந்தவர்கள். இவர்களது உருவம் கட்டைவிரல் அளவுதான். பெருந்தவம் புரிந்தவர்கள். நாள்தோறும் சூரிய ரதத்தை வலம் செய்து கொண்டிருப்பவர்கள். இந்திரனைக் கருடனால் அவமானப்படும்படி சாபம்*

53. சங்கரனே போற்றி! சடாமகுடத் தாய்போற்றி!
பொங்கரவா பொன்னங் கழல்போற்றி! – அங்கொருநாள்

54. ஆய விழுப்போர் அருச்சுனன் ஆற்றற்குப்
பாசுபதம் ஈந்த பதம்போற்றி! தூய

55. மலைமேலாய் போற்றி! மயானத்தாய் வானோர்
தலைமேலாய் போற்றிதாள் போற்றி! – நிலைபோற்றி

---

*இட்டவர்கள். கருடனால் இவர்கள் இருந்த மரக்கிளையோடு அசையாது தூக்கப் பெற்று இமயமலையில் விடப்பெற்றவர்கள். இவர்கள் நான்முகனின் உரோமங்களில் இருந்து பிறந்தவர்கள் என்றும் கூறுவர். இவர்களும் ஆவலுடன் வருகின்றனர் உலாவைக் காண.*

***கண்ணி - 51-55 :*** *தேவர் பலரும் பெருமான் புறப்பாட்டின் பொழுது அவனைப் பலவகையால் போற்றி செய்து ஆரவாரித்துப் பூமழையைப் பொழிந்தமை கூறப்பட்டது.*

***தெளிவுரை :*** *(கண்ணி 51 முதல் 58 வரை) விண்ணுலகத்தில் உள்ள தேவர்களது தலைவரே! உமக்கே அடைக்கலம். அழகு பொருந்திய உமாதேவியாரின் மணவாளரே! உமக்கே அடைக்கலம். எம்மை ஆட்கொண்ட அழலாடும் பெருமானே! உமக்கே அடைக்கலம். சிவபெருமானே! உமது திருவடிகட்கு வணக்கம். அருட்செல்வனே! எங்கள் அப்பனே! இறைவனே! உமக்கே அடைக்கலம். தூய்மையான சிறப்புடைய இன்ப வடிவினனே! உமக்கே அடைக்கலம். சடைமுடியுடையவரே! உமக்கே அடைக்கலம். சீற்றம் மிக்க பாம்புப் பணிகளை அணிந்தவரே! பொன்னாலாகிய அழகிய வீரக்கழல் அணிந்த உமது திருவடிகளுக்கே அடைக்கலம். முன் ஒரு காலத்தில் மேன்மையான போர் செய்த பார்த்தனுடைய உறுதிக்கு வியந்து அவனுக்குப் பாசுபதாத்திரம் அளித்த உமது திருவடிகட்கு வணக்கம். தூய்மை பொருந்திய திருக்கயிலாய மலைமேல் வீற்றிருப்பவரே! அடைக்கலம். மயானத்தில் ஆடுபவரே! தேவர்கள் முடிமேல் இருப்பவரே! உமக்கே அடைக்கலம். உமது திருவடிகளுக்கு வணக்கம். தேவரீரது என்றுமுள சிறந்த நிலை பேறுடைமைக்கு வணக்கம் வணக்கம் என்று மலர்மாலை பொழிந்து, இவ்விசேடக் காட்சியால் ஐம்புலச் சேட்டை கலக்கம் கொள்ள, நான்கு திசைகளும், மற்ற எல்லாப் பக்கங்களிலும் நன்மை அதிகரிக்க, விடைக்கொடியும் பெரிய கொடிகளும், வெற்றிக்குடையும் இயல்பு உருவுடைய மயில் பீலியான குஞ்சங்களும் சூழ்ந்திருக்க, மணம் வீசும் மலர் கூடிய சிறந்த கருமையான கூந்தலையுடைய மாதர்களின் மனம் புதிய இன்பத்தை அனுபவித்தற்பொருட்டு அழகிய சிவபெருமான் விடைமேல் இருந்தபடியே உலாவரும் சமயம்;*

***விளக்கவுரை :*** *"இமையோர் பெருமானே" - இமயமலையில் வாழ்வதால் தேவர்கள் இமையவர் என்று பெயர் பெற்றனர். இமைக்காத கண்களை*

*உடையவர்களாதலால் இப்பெயர் பெற்றனர் என்றும் கூறுவர். பார்க்கும் இடம் எல்லாம் பரவெறியாக எங்கும் இமையாது பார்ப்பவர் என்பதாலும் இப்பெயர் வந்தது என்பர் சிலர். அந்த தேவர்கள் போற்றிப் புகழும் வழிபாட்டை என்றும் ஏற்பவன் இறைவன். எனவே, "இமையோர் பெருமானே" என்றார் சேரமான். திருக்காளத்தியைப் பாடும் போது சுந்தரர்,*

*"இமையோர் நாயகனே இறைவா என் இடர்த்துணையே*
*கமையார் கருணையினாய் கருமா முகில்போல் மிடற்றாய்*
*உமையோர் கூறு உடையாய் உருவே திருக்காளத்தியார்*
*அமைவே உன்னை அல்லால் அறிந்து ஏத்தமாட்டேனே"*

*(சுந்தரர் தேவாரம் 7-ஆம் திருமுறை, திருக்காளத்தி-2)*

*எனப் போற்றிப் புகழ்வார்.*

*"உமையாள் மணவாளா" உமா என்பது உயர்ந்த பிரணவ உயிர்ப்பாகும். (உ + ம் + அ = உமா) உமாதேவியை இறைவன் மணந்து என்றும் மணவாளனாக இருக்கிறான். இதனை "உமாஸஹாயம் பரமேச்வரம்!" என்று கைவல்ய உபநிடதம் கூறுகிறது. இறைவியுடன் இணைத்தே இறைவனை சைவக் குரவர்கள் போற்றிப் பாடினர்.*

*"உமையாள் ஒரு பாகமது ஆகச்*
*சமைவார் அவர் சார்வு இடமாகும்*
*அமையார் உடல்சோர் தருமுத்தம்*
*அமையா வரும் அம்தண் ஐயாறே"*

*(திருஞானசம்பந்தர் 1-ஆம் திருமுறை, திருவையாறு-5)*

***கண்ணி - 53 :*** *பொங்கு அரவா - சீற்றம் மிக்க பாம்பினை அணிந்தவனே.*

***கண்ணி - 54 :*** *ஆற்றல் - தவ வலிமை; பதம் - திருவடி. திருவருளைத் திருவடியாகக் கூறுதல் வழக்கு.*

***அருச்சுனனுக்குப் பாசுவதம் ஈந்தது :*** *அர்ச்சுனனுக்குப் பார்த்தன், விசயன், காண்டீபன் என்று பல பெயர்கள் உண்டு. அர்ச்சுனன் என்பது அர்ஜுனன் என்னும் வடசொல் திரிபு. இதற்கு வெண்ணிறம் கொண்டவன் என்பது பொருள். இது, முதலில் கார்த்தவீரியனுக்குப் பெயராக இருந்தது. பின்பு, அவனைப்போல் பலம்கொண்ட பார்த்தனுக்குப் பெயராயிற்று. இதனை உவம ஆகுபெயர் என்பர். அர்ஜுனன் கருமைநிறம் கொண்டவன். எனவே, அவனுக்கு இந்தப் பெயர் நிறம் பற்றி வந்தது என்று கூறமுடியாது.*

*"குருச்சுடர் மணிசெய் பச்சைக்*
*கொழுந்துடற் பொலிவு நோக்கி*
*அருச்சுனன் என்பார் ஈதுஎன்*
*அரும்பெயர் வந்த பான்மை"*

*என்னும் நல்லாப் பிள்ளை பாரதத்தால், பசுமை நிறம் பற்றி வந்த பெயர் என்பதும் ஒன்று. ஒருசிலர் முதலில் பிறந்தபோது வெண்ணிறமும், பிறகு கரிய நிறமும் பெற்றதனால் வந்த பெயர் என்பர்.*

*பாசுபதம் என்பது பசுபதியின் கணை. இதனை வெல்லும் ஆயுதம் வேறெதுவும் இல்லை என்பர். பாண்டவர்களுள் நடுவனான பார்த்தன் பாசுபதாஸ்திரத்தைப் பெற விரும்பினான். கயிலை மலையின் அடிவாரம் சென்று இடது காலை நிலத்தில் ஊன்றி, வலது பாதத்தை இடது தொடை மேல் வைத்து இருகைகளையும் கூப்பிய நிலையில் தலைமேல் தூக்கி வைத்தான். கண்களை இமைக்காமல் கதிரவனையே கண்ட நிலையில் கடும் தவம் புரிந்தான்.*

*இந்த தவத்தைக் குலைப்பதற்காக துரியோதனன் அசுரன் ஒருவனை ஏவினான். அசுரன் பன்றி உருவம் எடுத்துப் பாரதிர ஆரவாரம் செய்தான். அம்பிகையின் தூண்டுதலால் சிவபிரான் வேட வடிவம் தாங்கினான். அம்பிகை வேட்டுவச்சியானாள். முருகன் சேயாகித் தாயின் கரத்தில் தங்கினன். அனைவரும் அடிவாரத்திற்கு வந்தனர். பன்றியின் அட்டூழியத்தால் பார்த்தனனின் உடல் ஆடியது. கண் திறந்தான்; காண்டீபத்தை வீசினான். அந்தக் கணை பன்றியின் முகத்தில் பாய்ந்தது. பரமசிவன் விட்ட அம்பு பன்றியின் பின்புறம் பாய்ந்தது. பன்றி வீழ்ந்து இறந்தது.*

*சிவபிரான் “எங்கள் இலக்கு இப்பன்றி. இதை அடிக்க உனக்கு ஏதடா உரிமை?” என்று பார்த்தனிடம் சினந்தார். “அப்பன்றியை முதலில் அடித்தவன் நான். நீர் வேண்டுமானால் அப்பன்றியை எடுத்துக்கொண்டு போம்” என்றான் அர்ச்சுனன். சொற்போர் விற்போராகி மற்போரானது. பார்த்தனைப் பரமன் தன் பாதத்தால் விண்ணில் தூக்கி வீசினான். மேலேயிருந்து உருண்டு புரண்டு கீழே குதித்த விசயனுக்கு வியப்பு!*

*“பச்சைமயில் பாதியுடனே*
*துய்ய விடை மீதொரு செழுஞ்சுடர் எழுந்தது”*

*முக்கண்ணனைக் கண்டதும் அர்ச்சுனன் கதறியழுது கண்ணீரால் பரமனின் திருவடிகளைக் கழுவினான். தன்னைத் தூக்கி எறிந்த திருப்பாதங்களைக் கண்ணீரால் அபிடேகித்தான்.*

*“ஆடினன் களித்தனன் அயர்ந்து நின்றனன்*
*ஓடினன் குதித்தனன் உருகி மாழ்கினன்*
*பாடினன் பதைத்தனன் பவள மேனியை*
*நாடினன் நடுங்கினன் நயந்த சிந்தையன்”*

*உள்ளம் மகிழ்ந்த இறைவன் பார்த்தனுக்கு அவன் விரும்பிய பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்து உதவினான். இச்செய்தியைத் திருநாவுக்கரசர் பல பாடல்களில் குறிப்பிடுவார்.*

56. போற்றினைப் பூமாரி பெய்து புலன்கலங்க
நாற்றிசையும் எங்கும் நலம்பெருக, – ஏற்றுக்

57. கொடியும் பதாகையும் கொற்றக் குடையும்
வடிவுடைய தொங்கலுஞ் சூழக் – கடிகமழும்

58. பூமாண் கருங்குழலார் உள்ளம் புதிதுண்பான்
வாமான ஈசன் வரும்போழ்திற் – சேமேலே

---

*"பார்த்தனுக்கு அன்று நல்கிப் பாசுபதத்தை ஈந்தாய்"*

*"பார்த்தனோடு அமரர் பொழுது பத்திமை காண்பார் போலும்*
*கூர்த்தவாய் அம்புகோத்துக் குணங்களை அறிவார் போலும்"*

*"பார்த்தனுக்கு அருளும் வைத்தார் பாம்பு அரை ஆடவைத்தார்"*

*"பார்த்தனுக்கு அருள்வார் போலும் படர்சடை முடியர் போலும்"*

*இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தன்றோ*

*"பாசுபதம் ஈந்த பதம்போற்றி"*

*என்று பக்தர்கள் பரவசத்துடன் பாடுகின்றனர்.*

***கண்ணி - 54, 55 :*** *தூய மலை - வெண்மலை; கயிலாயம், மயானம், ஊழிமுடிந்த இடம், நிலை, நித்தியத்துவம்.*

*''தூயமலை மேலாய் திருக்கயிலாய மலையின் சிறப்பைத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சுந்தரரும் அற்புதமாகப் பாடியுள்ளார்கள். இவ்வின்னிசைப்பாக்கள் 1, 3, 4, 6 ஆம் திருமுறையாக வைக்கப்பட்டுள்ளன".*

*"காளமுகில் மூளும் இருள் கிளவிரிதாள கயிலாய மலையே"*

*"கற்றவர்கள் சொல் தொகையின் முற்றம் ஒளிபெற்ற*
*கயிலாய மலையே"*

*"கங்கையொடு பொங்கு சடை எங்கள் இறைதங்கு கயிலாய மலையே"*

*"கரியவனும் அரியமறை புரிபவனும் மருவு கயிலாய மலையே"*

*"கண்டவர்கள் கொண்டவர்கள் பண்டும் அறியாத கயிலாய மலையே"*

*என்று திருஞான சம்பந்தரும்,*

*"காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி*
*கயிலை மலையானே போற்றி போற்றி"*

*"கல் உயிராய் நின்ற கனலே போற்றி*
*கயிலை மலையானே போற்றி போற்றி"*

*என்று அப்பரும் அகமகிழ்ந்து போற்றுவர்.*

*சேக்கிழார் பெருமான் திருக்கயிலாய மலையை,*

*"பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்*
*பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது*

*தன்னை யார்க்கும் அறிவரியான் என்றும்*
*மன்னி வாழ்கயி  லைத்திரு மாமலை"*

*(பெரிய புராணம், திருமலைச்சிறப்பு-1)*

*என்று குறிப்பிடுவார்.*

*"கிஞ்சுகவாய் அஞ்சுகமே! கேடில் பெருந்துறைக்கோன்*
*மஞ்சன் மருவும் மலைபகராய் - நெஞ்சத்து*
*இருளகல வாள்வீசி இன்(பு)அமரும் முத்தி*
*அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து"*  *(திருத்தசாங்கம்-5)*

*என்று மாணிக்கவாசகப் பெருமான் பெருமையுடன் கூறுகிறார். திருக்கயிலாய மலை சுத்தமாயா வடிவம். பிரகிருதி மாலையாம் தூலப் பிரகிருதியையும், அசுத்த மாலையான சூக்குமப் பிரகிருதியையும் கடந்த மேல் நிலத்தில் பேரொளி மயமான ஓங்கார சுத்தமாயை என்னும் பரப்பிரகிருதியின் உச்சியில் சிவலோகம் உள்ளது. அதனால் அது அப்ராக்ருத கயிலாயம் என்றும் அழைக்கப்படும். அதன் அருமையை உணர்ந்தே "தூயமலை மேலோய்" என்கிறார் நாயனார்.*

*"மயானத்தாய்" சுடுகாட்டில் நடனமிடுவதைக் குறிப்பிடுகிறார். "சுடுகாடு மேவினீர்" என்பார் திருஞான சம்பந்தர். சுடுகாடு என்பது யுகாந்த காலத்தில் உலகங்கள் அனைத்தையும் எரித்தலால் விளையும் மாபெரும் சுடலை. "காடுடைய சுடலைப் பொடி பூசி" என்பார் சம்பந்தர்.*

*"எட்டி இலவம் ஈகை துரை காரை படர்ந்தொங்கும்*
*சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி சோர்ந்த குடர்கௌவப்*
*பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்*
*கொட்ட முழவங் கூளி பாடக் குழகன் ஆடுமே"*

*(திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் 13)*

*என்று பாடுகிறார் காரைக்கால் அம்மையார்.*

***கண்ணி - 56 :** "நாற்றிசையும் எங்கும்" என்றது, 'எந்தப் பக்கத்திலும், எந்த இடத்திலும்' என்றபடி.*

***கண்ணி - 56-57 :** ஏற்றுக் கொடி - இடபக் கொடி. இது சிவபெரு மானுக்கு உரியது. பதாகை - கொடி. பொதுப்படக் கூறியதனால் உடன் வந்த மால். அயன், இந்திரன் மற்றும் முருகன் முதலியோரது கொடிகளைக் கொள்க. வடிவு - அழகு. தொங்கல் - மாலை. கடி - நறுமணம்.*

***கண்ணி - 58 :** பூ மாண் கருங் குழலார் - பூவையணிந்த, மாட்சிமைப்பட்ட,*

**மகளிர் குழாங்கள்**

59. வாமான ஈசன் மறுவில்சீர் வானவர்தம்
கோமான் படைமுழக்கம் கேட்டலுமே – தூமாண்பில்

60. வானநீர் தாங்கி மறைஓம்பி வான்பிறையோ(டு)
ஊனமில் சூலம் உடையவாய் – ஈனமிலா

61. வெள்ளை யணிதலால் வேழத் துரிபோர்த்த
வள்ளலே போலும் வடிவுடைய – ஒள்ளிய

62. மாட நடுவில் மலர்ஆர் அமளியே
கூடிய போர்க்கள மாக்குறித்துக் – கேடில்

---

*கரிய கூந்தலையுடைய மகளிர். 'புதிதாக உண்ண' என ஆக்கம் வருவித்துரைக்க. உண்ணல் - கவர்தல். 'புதிதாக' என்றது இதுகாறும் இது நிகழாமையைக் குறித்தது. எனவே, 'மகளிர் உள்ளங்கள் எளிதில் உண்ணப்படும்' என்பது குறித்ததாயிற்று. 'வாம மான' என்பது "வாமான" எனக் குறைந்து நின்றது. வாமம் - அழகு. மானம் - பெருமை.*

***கண்ணி - 59 :*** *மறு இல் சீர் வானவர் - குற்றம் இல்லாத புகழையுடைய தேவர்.*

***கண்ணி - 60-62 :*** *மாளிகைக்கும், சிவபெருமானுக்கும் சிலேடை.*

*வான நீர் - ஆகாய கங்கை, மறை - சிவபெருமான். வேதங்களை அழியாமல் காக்கின்றான். மாளிகைகள் தம்முள் நிகழும் இரகசியங்களை வெளித் தோன்றாமல் காக்கின்றன. இருவரும் முடியில் பிறையை அணிகின்றனர். சூலம் - சிவபெருமான் சூலம் ஏந்தியுள்ளான். மாளிகைகள் (சூல் ஆம்) கருக்கொண்ட மேகங்களைத் தாங்குகின்றன. அம் - நீர். அஃது ஆகுபெயராய் மேகத்தைக் குறித்தது. ஈனம் - தாழ்வு. வெள்ளை - திருநீறு; சுதை வேழத்து உரி போர்த்த வள்ளல். சிவபெருமான். வடிவு - தோற்றம். ஒள்ளிய - ஒளி பொருந்திய. மாடம் -மேல் மாடம். அமளி - படுக்கை. அக்காலத்தில் அரசர்கள் போர் தொடங்கும் பொழுது. நாளை 'இன்ன நாள்' என்றும், களத்தை, 'இன்ன இடம்' முன்பே குறித்துக் கொள்வர். அவற்றுள் இடம் குறித்தலை, 'களம் குறித்தல்' எனக் கூறும் வழக்கம் பற்றி, "போர்க்களமாக் குறித்து" என்றார். போர், ஆடவரோடு ஆடும் கலவிப் போர்.*

*சிவபெருமான் உலாப் போதுங்கால் பல திறக்குழாங்கள் குழுமி நிற்கு மாயினும், உலாவால் மகளிர் குழாம் பட்ட பாட்டினை எடுத்துக் கூறுவதே இப்பிரபந்தம் ஆதலின், அவை பற்றியே குறிக்கின்றார்.*

**63.** சிலம்பு பறையாகச் சேயரிக்கண் அம்பா
விலங்கு கொடும்புருவம் வில்லா – நலந்திகழும்

**64.** கூழைபின் தாழ வளைஆர்ப்பக் கைபோந்து
கேழ்கிளரும் அல்குலாம் தேர்உந்திச் – சூழொளிய

**65.** கொங்கைமாப் பொங்கக் கொழுநர் மனம்கவர
அங்கம் பொருதசைந்த ஆயிழையார் – செங்கேழ்நற்

**66.** பொற்கலசத் துள்ளால் மணிநீர் முகம்சேர்த்தி
நற்பெருங் கோலம் மிகப்புனைந்து – பொற்புடைய

---

*"**ஒள்ளிய மாடம்**" - இறைவன் உலாச்சென்ற வழியெங்கும் வானளாவிய மாளிகைகள் உள்ளன. ஆகாய கங்கை ஒவ்வொரு மாளிகையும் தத்தம் தலையால் தாங்குவன போல் தோன்றுகின்றன. அவைகளில் இரகசிய அறைகள் பல உள்ளன. உரியவர்களைத் தவிர மற்றவர்கள் அவற்றை அறிய முடியாது. இதுவே மாளிகைகள் மறை ஓம்பும் மரபு. வானில் நீந்தும் வெண்மதி அந்த உயர்ந்த மாளிகைகளின் உச்சியில் இருப்பது போல் தோன்றுகிறது. மேகங்கள் ஒன்றுடன் ஒன்று உராய்வதால் உண்டாகும் இடிகளால் மாளிகைகள் இடிபடாமல் இருக்க அவற்றின்மேல் இடிதாங்கி என்னும் சூலம் உள்ளது. மாசிலா வெள்ளை நீறு பூசிய மாளிகைகள் புத்தம் புதியனவாய் விளங்குகின்றன.*

*உயர்ந்து நிமிர்ந்த மாளிகைகள் ஒவ்வொன்றும் கங்கையைத் தரித்து, மறை ஓம்பி, பிறை சூடி, சூலம் தாங்கி, வெண்ணீறணிந்த இறைவனை நினைவுபடுத்து கின்றன. இதனை, உயர்வு நவிற்சியும் ஒப்புவமையும் கலந்த அணி என்பதால் சிலேடை கலந்த கலவையணி என்பர். கொங்கைமா - யானை - யானைத் தந்தத்தோடு உவமிக்கப்படுதல் பற்றி யானையாயின.*

***கண்ணி - 63-65 :*** *மகளிர் ஆடவரோடு ஆடும் கலவியாகிய போருக்கு அவர்தம் காலில் அணிந்துள்ள சிலம்புகளே போர்ப் பறை. அவை அப்போர்க் காலத்து ஒலித்தல் இயல்பு.*

*விலங்கு கொடும் புருவம் - விலங்குபோல வளைவான புருவங்கள். அவைகளே வில், அவை அப்போர்க் காலத்தில் வளைதல் (நெறிதல்) இயல்பு.*

*கூழை, வளை இவை சிலேடை. கூழை - கூந்தல்; கூழைப் (பின்னணிப்) படை. தாழ அவிழ்ந்து அலைய - கலவிக் காலத்துக் கூந்தல் அலைதல் இயல்பு. அது பின்னணிப் படை முன்னணிப் படைக் கேற்பச் செயற்படுதலை ஒக்கின்றது.*

*வளை - கை வளையல்; சங்கு. இவை இரண்டும் ஒலித்தலைச் செய்யும். கை - பக்கம் போதரலாவது போர் செய்வார் வலஞ்செல்லுதலும் இடம் செல்லுதலும் இந்நிலை கலவியிடத்தும் பொருந்தும்.*

**எழுவகைப் பருவம்**

67. பேதை முதலாகப் பேரிளம்பெண் ஈறாக
மாதரவர் சொல்லார் மகிழ்ந்தீண்டிச் – சோதிசேர்

68. சூளிகையும் சூட்டும் சுளிகையும் சுட்டிகையும்
வாளிகையும் பொற்றோடும் மின்விலக – மாளிகையின்

69. மேல்ஏறி நின்று தொழுவார்; துயர்கொண்டு
மால்ஏறி நின்று மயங்குவார் – நூலேறு

---

*கேழ் கிளரும் - நிறம் மிக்க. 'நிறம்' என்றது 'திதலை' எனப்படும் நிறத்தினை. அல்குல் - பிருட்டம். 'துடி இடை' எனக் கூறுதற்கு ஏற்ப, நடுவில் இடை சுருங்கியிருக்க, மேலே ஆகமும், கீழே பிருட்டமும் அகன்றிருக்கும் நிலையில் பிருட்டம் தேர்த்தட்டோடு உவமிக்கப் படுதல் வழக்கமாயிற்று. உந்தி - செலுத்தி.*

*மா - யானை. யானைத் தந்தத்தோடு உவமிக்கப்படுதல் பற்றி யானையாயின. பொங்க - சினம் மிக; புளகிக்க.*

*"கொழுநர்" என்றது, அப்பொழுது உரிமை பெற்றோரை. அல்லாக்கால் கலவியாலே அவர் மனத்தைக் கவர்தல் வேண்டா என்க.*

*பொருது - போர் செய்து. 'பொருது அங்கம் அசைந்த' என்க. அங்கம் - உறுப்புக்கள். அசைந்த - சோர்ந்த.*

***கண்ணி - 66 :*** *மகளிர் காலையில் குளித்து ஒப்பனை செய்கின்றனர். 'மணி நீரைப் பொற்கலசத்துள்ளால் எடுத்து முகம் சேர்த்தி' என மாற்றியும், ஒருசொல் வருவித்து உரைக்க. "நீர் முகம் சேர்த்தி" என்றது, 'தலை முழுகி' என்றபடி. மணி நீர் - தெளிந்த நீர்.*

***கண்ணி - 67 :*** *பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறாக மகளிரது பருவம் ஏழாகச் சொல்லப்படும். அவை பற்றி வரும் பகுதிகளில் காண்க. மாது - அழகு; இனிமை. இவர்தல் - மீதூர்தல்.*

***கண்ணி - 68 :*** *சூளிகை - மேல் மாடத்தின் நெற்றி. சூட்டு - சிகரம். 'இங்கெல்லாம் மின்னல்போல ஒளிவீச' என்க. சுளிகை, சுட்டிகை, இவை மகளிர் நெற்றியில் அணியும் அணி வகைகள். வாளிகை - ஒருவகைக் காதணி. 'இவை மின் விலக' என்க.*

***கண்ணி - 69 :*** *மால் - மயக்கம்.*

***கண்ணி - 69-70 :*** *தாமம் - மாலை. நூல் ஏறு தாமம் - அருள் நூல்களில் எல்லாம் புகழ் இடம் பெற்று விளங்கும் கொன்றை மலர் மாலை. சடாதாரி - சடையை உடைய சிவபெருமான். யாமம் - இரவுப் பொழுது. அடும் - (எம்மைக்) கொல்லும்.*

70. தாமமே தந்து சடாதாரி நல்கானேல்,
யாமமேல் எம்மை அடும்என்பார் – காமவேள்

71. ஆம்என்பார் அன்றென்பார் ஐயுறுவார்; கையெறிவார்
தாம்முன்னை நாணோடு சங்கிழப்பார்; – பூமன்னும்

72. பொன்னரி மாலையைப் பூண்பார்அப் பூண்கொண்டு
துன்னரி மாலையாச் சூடுவார்; – முன்னம்

73. ஒருகண் எழுதிவிட்(டு) டொன்றெழுதா தோடித்
தெருவம் புகுவார்; திகைப்பார்; – அருகிருந்த

74. கண்ணாடி மேற்பஞ்சு பெய்வார் கிளியென்று
பண்ணாடிச் சொற்பந்துக் குற்றுரைப்பார்; – அண்ணல்மேற்

---

***கண்ணி - 70-71 :*** *சிலர், (அழகால்) 'இவன் மன்மதனே' என்பார். சிலர் அதனை மறுத்து, அங்ஙனம் கூறுவது பொருந்துவதன்று; (இவனது அழகு காமனுக்கு இல்லை - காமன் கரியன்; இவன் செய்யன்) என்பர். சிலர் 'இவன் வேறு யாவன்' என ஐயுறுவர். சிலர் ஆற்றாமையால் கையோடு கையை எறிவார். பலரும் முன்பே போய் விட்ட நாணத்தோடு, பின்பு தாம் அணிந்திருந்த சங்க வளையல்களையும் இழப்பர். வேள் - விருப்பம்*

***கண்ணி - 71, 72 :*** *பூ மன்னும் - அழகு நின்ற. பொன் அரி மாலை பல அணிகலங்களுள் ஒன்றாக மகளிர் கழுத்தில் அணியப்படுவது. அதனையே இப்பொழுது அவர்கள் மயக்கம் மிகுதியால் சிவபிரான் தம்மைத் தனக்கு உரியர் ஆக்கிக் கொள்ளக் கட்டும் மாங்கல்ய சூத்திரமாக (தாலிக்கயிறாக) நினைத்துத் தாங்களே எடுத்துப் புனைந்து கொள்வார்கள். 'துன் மாலை, அரி மாலை' எனத் தனித்தனி இயைக்க. துன் மாலை - இருவரும் ஒன்றுபடுதற்கு ஏதுவான மாலைத்தாலி, அரிமாலை அழகிய மாலை. அரி - அரித்தல் செய்யப்படுவது.*

***கண்ணி - 73 :*** *கண்களில் மைதீட்டத் தொடங்கித் தீட்டியவர்கள் ஒரு கண்ணிற்கு மட்டும் தீட்டிய, பொழுது உலா ஒலி கேட்டு அதனை விட்டுவிட்டு ஓடித் தெருவிலே வந்து நின்றார்கள். 'தெருவம்' என்பதில் அம், சாரியை.*

***கண்ணி - 74 :*** *மயக்கத்தால் நிலைக் கண்ணாடியை, 'படுக்கை' என்று நினைத்து, அதன்மேல் பஞ்சைச் சொரிந்தார்கள்.*

*பந்தினை, 'கிளி' என்று நினைத்து அதற்கு, 'சிவா, முக்கண்ணா, பிறை சூடி' என்றாற்போலும் சொற்களைச் சொல்லும்படி தங்கள் இசைபோலும் சொற்களைச் சொல்லிப் பயிற்றுவிப்பார்.*

***கண்ணி - 74, 75 :*** *அண்ணல், சிவபெருமான். மாசாலம் - பெருங் கூட்டம். கோலுதல் - குவித்தல். 'மகளிருடைய அனைத்துக் கண்களும் சிவபெருமான்*

75. கண்ணென்னும் மாசாலங் கோலிக் கருங்குழலார்
திண்ணம் நிறைந்தார் திறந்திட்டார்; – ஒண்ணிறத்த

### 1. பேதை

76. பேதைப் பருவம் பிழையாதாள் வெண்மணலால்
தூதைச் சிறுசோ றடுதொழிலாள்; – தீதில்

77. இடையாலும் ஏக்கழுத்தம் மாட்டாள்; நலஞ்சேர்
உடையாலும் உள்உருக்க கில்லாள்; – நடையாலும்

78. கௌவைநோய் காளையரைச் செய்யாள்; கதிர்முலைகள்
வெவ்வநோய் செய்யுந் தொழில்பூணாள்; செவ்வன்நேர்

---

*ஒருவன்மேலே சென்று குவிந்தன' என்றபடி. திண்ணம் நிறைந்தார் - 'இவனைப் பற்றி யல்லது தனியே மீளோம்' என்னும் உறுதியுடன் கூடி நின்றார்கள். 'திண்ணத்தோடு' என ஒடுருபு விரிக்க. அவர்கள் கருதியது கூடாமையால் திகைத்தார்கள்.*

***கண்ணி - 76 :*** *ஐந்து முதல் ஏழ் ஆண்டு முடியப் பேதைப் பருவம். இப்பருவத்தில் காமக் குறிப்புத் தோன்றாதாயினும் உலாப் பிரபந்தத்தில் மற்றைப் பருவ மகளிரோடு இப்பருவ மகளிரையும் கூட்டி நிரப்புதல் வழக்கு. இப்பிரபந்தம் பட்டாங் குரைப்பதின்றிப் புனைந்துரை வகையால் தலைவனைச் சிறப்பிப்பதே யாகலின்.*

*பிழையாமை - கடவாமை. தூதை - சிறுமட்கலம். 'பேதை சிற்றில் இழைத்துச் சிறுசோறட்டு விளையாடுவாள்' என்றபடி.*

***கண்ணி - 77 :*** *உம்மைகள் எச்சப் பொருள். ஏக்கழுத்தம் - செருக்கு; தன் பெண்மை நலத்தைத் தானே வியந்து செருக்குதல். இது முதலியன பேதைப் பருவத்தாளிடத்து இல்லாமை யறிக.*

*நலம் - அழகு. உடையால் உள் உருக்குதல். பொன்னும், மணியும் பொருந்திய உடைகளின்வழி உண்டாகும் செயற்கை அழகால் ஆடவரது உள்ளங்களை உருகச் செய்தல்.*

***கண்ணி - 78 :*** *கௌவை - பழிச்சொல். அஃது, இவன், 'தான் யார், இவள் யார்' என்று எண்ணாமல், பலருங்காண இவளை உற்று நோக்குகின்றான் - எனப் பலராலும் பழிக்கப்படுதல். 'கௌவையால் என உருபு விரித்து, 'நோய் செய்யாள்' என இயைக்க. நோய் செய்தல் - வருத்துதல் "காளையரை" என்பதை எல்லாவற்றோடும் கூட்டுக.*

*'கதிராகிய முலைகள்' என்க. கதிராதல், உண்மை தெரிக்கும் அளவாய்*

**79.** நோக்கிலும் நோய்நோக்கம் நோக்காள்; தன் செவ்வாயின்
வாக்கிற் பிறர்மனத்தும் வஞ்சியாள்; – பூக்குழலும்

**80.** பாடவம் தோன்ற முடியாள் இளவேய்த்தோள்
ஆடவர் தம்மை அயர்வுசெய்யாள்; – நாடோறும்

**81.** ஒன்றுரைத் தொன்றுன்னி ஒன்றுசெய் தொன்றின்கண்
சென்ற மனத்தினாளாஞ் சேயிழையாள் – நன்றாகத்

**82.** தாலி கழுத்தணிந்து சந்தனத்தால் மெய்பூசி
நீல அறுவை விரித்துடுத்துக் கோலஞ்சேர்

---

*இருத்தல். "முலைகள் தொழில் பூணாள்" எனச் சினை வினை முதல்மேல் நின்றது. வெவ்வ நோய் - கொடிய வருத்தம்.*

***கண்ணி - 78, 79 :*** *செவ்வன் - செவ்வையாக, நேர் நோக்கிலும் - ஆடவர் நேர்நின்று பார்த்தபோதிலும், நோய் நோக்கம் நோக்காள் - அவர்கள் உள்ளத்தில் காம நோய் உண்டாக நோக்கும் நோக்கமாக நோக்க அறியாள்.*

> *இருநோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒருநோக்கு*
> *நோய்நோக்(கு) ஒன்றுஅந்நோய் மருந்து.*[1]

*என்னும் குறளில், "நோய் நோக்கு" என்பதற்குப் பரிமேலழகர் உரைத்த உரையை நோக்குக. நோய் நோக்கம் - நோயை உண்டாக்கும் நோக்கம். "நோக்கமாக நோக்காள்" என ஆக்கம் வருவித்துரைக்க.*

*வாக்கின் - சொல்லால். சொல்லால் பிறர் மனத்து வஞ்சித்தலாவது, ஆடவன் ஒருவன் தேர், அல்லது குதிரை மேல் செல்லுதலைக் கண்டபொழுது அவனைக் காதலித்த காதல் காரணமாகக் கண் கலுழ்ந்து நின்றாளைத் தாயர் நோக்கி, 'ஏடி, என்ன கண் கலுழ் கின்றாய்' என்று உருத்து வினாயபொழுது 'அன்னாய், ஒன்றும் இல்லை; தேர், அல்லது குதிரை சென்ற வேகத்தால் எழுந்த தூசு கண் களில் வீழ்ந்து விட்டது. கண்கள் சுழலுகின்றன' என விடையிறுக்க, அவர்கள் உள்ளத்தில், 'இவள் நம்மை வஞ்சிக்கின்றாள்' என்னும் எண்ணம் தோன்றச் செய்தல். பிறர் மனத்தும் வஞ்சியாள் என்னும் உம்மை, 'தன் மனத்தும் வஞ்சனையிலள்' என இறந்தது தழுவிற்று.*

***கண்ணி - 79, 80 :*** *'குழலை முடியாள்' என்க. முடியாமைக்குக் காரணம் அவை முடிக்க வாராமை. பேதைப் பருவத்தாளை, 'முடி கூடாதவள்' என்றல் வழக்கு. பாடவம் - ஆரவாரம்; பகட்டு.*

*இள வேய் - முற்றாத, முளையாகிய மூங்கில். தோள்கள் அன்ன சிறிய ஆகலின் ஆடவர்க்கு விருப்பம் தாரா ஆயின.*

---

*[1] திருக்குறள் - 1091.*

**83.** பந்தரில் பாவைகொண்(டு) ஆடுமிப் பாவைக்குத்
தந்தையார் என்றொருத்தி தான்வினவ – அந்தமில்சீர்

**84.** ஈசன் எரியாடி என்ன அவனைஓர்
காய்சின மால்விடைமேல் கண்ணுற்றுத் தாய்சொல்

**85.** இக்கணக்கு நோக்காள் இவள்போல்வாள் காமநூல்
நற்கணக்கின் மேற்சிறிதே நாட்செய்தாள் – பொற்புடைய

---

***கண்ணி - 80, 81 :*** *'சொல்வது ஒன்று, நினைப்பது ஒன்று, அடுத்து விரும்புவது ஒன்று; இவ்வாறு நிலையாக ஒன்றிலும் நில்லாமை பேதைப் பருவத்து இயல்பு என்றபடி.*

***தெளிவுரை :*** *(கண்ணிகள் 76 முதல் 80 வரை) தூய ஒளியும் அறியாமைக்கு ஏதுவான ஏழுவயதும் கடவாதவள். சிறிய மண்பாத்திரத்திற் வெண்மையான மணலால் சிறுசோறு சமைக்கும் விளையாட்டுத் தொழிலை உடையவள். தீமையில்லாத இடுப்பினாலும் இறுமாந்திருத்தலைச் செய்யாள். அழகு மிக்க ஆடையாலும் கண்டவர் உள்ளத்தை உருகும்படி செய்யாதவள். ஆண் மக்கள் நடக்கும் அழகினாலும் வருந்தும்படி காம நோயைச் செய்யமாட்டாள். அரும்பிய முலைகளால் ஆடவர்க்குத் துன்ப நோய் செய்கின்ற தொழிலையும் மேற்கொள்ளாள். செவ்விதின் நேர்நின்று நோக்கினாலும் காமநோய் நேரும் வண்ணம் பார்க்கும் பார்வையை அறியாள். பவளம் போல் சிவந்த வாயிலிருந்து வரும் மொழியாலும் அயலாரது உள்ளத்தை வஞ்சிக்க அறியாள். மலர் சூடிய கூந்தலையும் திறமை விளங்க முடிக்க அறியாள். ஆண்மக்களை இளமையான மூங்கில் ஒத்த தோள்களால் மயக்கி அயர்ச்சியடையும்படி செய்யமாட்டாள்.*

***கண்ணி - 82 :*** *தாலி - நாபி அளவும் தொங்கவிடும் அணிகலன். அறுவை - துணி. பேதைப் பருவத்தாள் தெருப் புழுதியில் விளையாடுதல் பற்றி நீலத் துணியை உடுத்து விடுப்பர். 'அதுவும் ஒரு சுற்றாகவே இருக்கும்' என்றற்கு, "விரித்துடுத்து" என்றார். கோலம் - அழகு.*

***கண்ணி - 83, 84 :*** *"பாவை கொண்டு" என்பதை, 'பாவை கொள்ள' எனத் திரிக்க. கொள்ளுதல், கொண்டு விளையாடுதல். ஒருத்தி, ஊராருள் ஒருத்தி. தான், அசை. வினவ - குறும்பாகக் கேட்க. பேதைதன் தாய். 'இப்பாவைக்குத் தந்தை சிவபெருமான்தான்' அஃதாவது, 'கடவுள்தான்' என்று அவளும் குறும்பாக விடையிறுக்க. அந்தச் சிவபெருமான் அப்பொழுது; தற்செயலாய் ஒரு பெரிய இடப வாகனத்தின் மேல் அங்கு வந்தான்.*

> *காய் சினம், விடைக்கு இன அடை.*
> *பேதைப் பருவத்தாள் அவனைக் கண்ணாரக் கண்டாள்.*

***கண்ணி - 84, 85 :*** *ஆயினும் தாய் சொல்லிய சொல்லின் முறைமையை*

*முழுமையாக அறிதல் இவளைப்போன்ற பேதைப் பருவப் பெண்களுக்கு இயலாது. அஃதாவது, இல்லத்தில் தன் தாய் தன்னையும், மற்றும் குழவிகளையும் சீராட்டிப் பாராட்டுதலைப் பார்த்துத் தானும் ஒரு பாவையைத் தன்னுடைய மகவாகக் கொண்டு அவ்வாறு சீராட்டி விளையாடுகின்ற பேதைப் பெண், 'ஒரு மகவிற்குத் தாயாயினாள் என்றால், அதற்கு முன்னே அதற்குத் தங்கையாகக் கூடிய ஒருவனை மணந்திருக்க வேண்டுமன்றோ' என்னும் ஆழ்ந்த பொருளில் அயலாள் ஒருத்தி, 'இப்பாவைக்குத் தந்தை யார்' என்று குறும்பாகக் கேட்டாள். 'இந்தப் பேதைப் பெண்ணுக்கு இதற்குள் மணவாளன் ஏது' என்பதுபடத் தாய், 'கடவுள்தான் இப்பாவைக்குத் தந்தை' எனக் குறும்பாக விடையிறுத்தாள். இந்த நுட்பங்களைப் பேதை அறியமாட்டாள். ஆயினும் தாய் சொன்னபடி தெய்வச் செயலாகச் சிவபெருமான் அங்கு உலாப்போந்தான். பேதை மற்றவர்போலத் தானும் அவனைக் கண்டாள்.*

*'இவள் போல்வாள் நோக்காள்' என மாறிக் கூட்டி, 'ஆயினும்' என்பது வருவிக்க.*

*'தன் பாவைக்குத் தந்தை வேண்டும்' என்றும் 'அந்தத் தந்தை சிவபெருமான்தான்' என்று, தாய் கூறிவிட்டாள் - என்றும் இந்த முறைமை களுக்காகப் பேதை சிவபெருமானை விரும்பவில்லை. (அந்த முறைமையெல்லாம் அறியும் பருவம் அன்று அவள் பருவம்). ஆயினும் தன்னியல்பால் தானே சிவபெருமானைக் காதலிக்கின்ற முறைமையில் காதல் செய்வதற்கு நல்ல நேரத்தில் தொடக்கம் செய்தாள்.*

*'கணக்கு' இரண்டில் முன்னது முறைமை; பின்னது நூல். நாட் செய்தல் - நாள் கொள்ளுதல்; தொடங்குதல். பேதையின் காதல் நல்ல முறையில் நல்ல நேரத்தில் தொடங்கியது என்க. இதற்குமுன் இவள் 'காதல்' என்பதையே அறிவாள் என்பதைக் குறித்தபடி. காதல் என்பதையே அறியாதவளும் காதல் தோன்றப் பெற்றாள்; சிவபெருமானது திருவுலா அத்தன்மைத் தாய் இருந்தது. அவ்வுலாப் 'பத்தி' என்பதையே அறியாதவர்க்கும் பத்தியைத் தோற்றுவிக்கும் தன்மையது என்பது இதன் உள்ளுறை.*

***கண்ணிகள் 81-85 வரை :** ஒவ்வொரு நாளும் ஒன்று சொல்லி, சொல்லியதற்கு மாறாக அப்போதே வேறு ஒன்றை எண்ணி, உரைத்ததற்கும் நினைத்ததற்கும் மாறாக வேறு ஒன்றைச் செய்து, உரைத்த நினைத்த செய்த மூன்றிற்கும் மாறான வேறு ஒன்றினிடத்துச் சென்ற உள்ளங்களை ஒரே காலத்தில் உடையவளாம். செவ்விய ஆபரணங்களை அணிந்த பேதை இளம்பெண் ஒருத்தி, தனக்கு நலன் உண்டாக ஐம்படைத் தாலியை ஆன்றோர் இட்டபடி கழுத்தில் அணிந்து, உடல் எல்லாம் சந்தனம் பூசி, நீலச் சிற்றாடையை விரித்துக் கட்டிக் கொண்டு, இயற்கை அழகு அமைந்த பூப்பந்தல் கீழ், பதுமை போன்ற இச்சிறிய பெண் வைத்துக் கொண்டு விளையாடும் இந்தப் பொம்மைக்குத் தந்தை யாவர்? என்று ஒருத்தி கேட்க, அவ்வினாவிற்குத் தாயானவள் அளவிலாச் சிறப்புடைய*

**2. பெதும்பை**

86. பேரொளிசேர் காட்சிப் பெதும்பைப் பிராயத்தாள்
காரொளிசேர் மஞ்ஞைக் கவினியலாள் – சீரொளிய

87. தாமரை ஒன்றின் இரண்டு குழைஇரண்டு
காமருவு கெண்டை, ஓர் செந்தொண்டை, – தூமருவு

88. முத்தம் முரிவெஞ் சிலை, சுட்டி, செம்பவளம்
வைத்தது போலும் மதிமுகத்தாள் – ஒத்தமைந்த

89. கங்கணம் சேர்ந்திலங்கு கையாள், கதிர்மணியின்
கிங்கிணி சேர்ந்த திருந்தடியாள் – ஒண்கேழ்நல்

---

*அருட்செல்வன் எனப்பெறும் அழலாடும் பெருமான்தான இப்பதுமைக்குத் தந்தை என்று கூற, அதே நேரத்தில் உலாவந்த அப்பெருமானை, ஒப்பற்ற சினமிக்கு மதர்த்த விடைமேல் அப்பேதைச் சிறுமி கண்டு, தாய் விளையாட்டாகக் கூறிய சொற்களின் சிறந்த பொருட் நுட்பம் அறியாதவளாய், இப்பேதை காமனது நூலில் உரைத்த கணக்கின்மேல் சிறிது நாள்தான் பழகினவள் போன்ற உணர்வு உற்றனள்.*

***கண்ணி – 86 :*** *எட்டு முதல் பதினோர் ஆண்டு முடியப் பெதும்பைப் பருவம். 'பெதும்பை' என்பவள் எட்டு வயது முதல் பதினோறு வயது வரை உடையவள். உலகியலை உணராதவள் பேதை. உணர்ந்தும் உணராதவள் பெதும்பை. இவளுக்குப் பேதைகுணம் பாதி; மங்கைப் பெண் குணத்திற்பாதி; இரண்டும் கொண்ட இவளுக்குப் பெதும்பை என்று பெயரிடுவர். உலகியலை உணர்ந்தும் உணராத இவள் நிலையை எடுத்து விளக்கல் எளியது அன்று. அதனால்தான் பயனான உலா நூலைப் பாடுபவர் பெதும்பைப் பருவத்தை விளக்கி எப்படிப் பாடுவது என்று அறியாமல் இடர்ப்படுவர். இதை அறிந்தே "பேசும் உலாவில் பெதும்பை புலி" என்று ஔவையார் பாடினார். பேரொளி – மிக்க அழகு. சேர்தல் – ஒரு காலைக்கொருகால் மிகுதல். கார் ஒளி சேர் மஞ்ஞைக் கவின் இயலாள் – நீல ஒளி வளரப் பெறுகின்ற மயிலைப் போலும் அழகு வளர்தலையுடையவள். காரொளி – நீலநிறம். மஞ்ஞை – மயில். கவின் – அழகு.*

***கண்ணி – 87, 88 :*** *ஒரு தாமரை மலரிலே இருதளிர், இரு அழகிய கெண்டைமீன், ஒரு சிவந்த கொவ்வைக் கனி, முத்துக்கள், வளைந்த வில், 'சுட்டி' என்னும் அணிகலம், சிவந்த பவளம் இவைகளை ஒருங்கு வைத்தது போலும் நன்கு மதிக்கத்தக்க முகத்தையுடையவள். குழை – காதணி.*

*தளிர் காது; கெண்டை கண்கள்; கொவ்வைக் கனி இதழ்; முத்துக்கள் பற்கள்; வில் புருவம்; இவையெல்லாம் உருவக வகையால் கூறப்பட்டன. சுட்டியும் பவளமும் உவமையாற் கூறப்பட்டன. பவள படமும் அணிகலமாகக் கொள்க.*

**90.** அந்துகில் சூழ்ந்தசைந்த அல்குலாள், ஆய்பொதியில்
சந்தனம் தோய்ந்த தடந்தோளாள் – வந்து

**91.** திடரிட்ட திண்வரைக்கண் செய்த முலையாள்
கடல்பட்ட இன்னமுதம் அன்னாள், – மடல்பட்ட

---

***கண்ணி - 88, 89 :*** *ஒத்து அமைந்த - கைக்குப் பொருந்தி அமைந்த. கங்கணம் - காப்பு. பெதும்பை ஆதலின் வளை அணியாது, காப்பு அணிந்தாள்.*

*கதிர் மணி - ஒளி பொருந்திய இரத்தினம். கிங்கிணி - சதங்கை. இதுவும் பெதும்பைக்கு உரியது. முரி - வளைத்த.*

***கண்ணி - 89, 90 :*** *ஒண் கேழ் - ஒளி பொருந்திய நிறம். மேகலை யணியாது, துகில் மாத்திரமே உடுத்தாள். அசைதல் - இறுகக் கட்டப்படுதல். பேதை இவ்வாறு கட்டுதல் இல்லை. ஒண் கேழ் - ஒளிரும் நிறமுடைய.*

*ஆய் பொதியில் - தமிழை ஆராய்ந்த இடமாகிய பொதியில் மலை. 'அதன்கண் உண்டான சந்தன மரத்தின் தேய்வை' என்க. சந்தனத்தைத் தொய்யலாக எழுதாமல் வாளா பூசிக் கொண்டாள். கிங்கிணி - ஒருவகைக் காலணி.*

***கண்ணி - 90, 91 :*** *தம் இடத்தை விட்டு வந்து இங்கு எழுவதற்கு ஒளிந்துள்ள மலைகள் தாம் எழுவதற்குரிய காலத்தை எதிர் நோக்கிச் சிறிதே எட்டிப் பார்ப்பது போலும் கொங்கைகளையுடையவள்.*

*திடர் இடுதல் - மண்ணில் மறைந்திருத்தல். 'அது போன்ற நிலையினை யுடைய மலைகள்' என்க. கண் செய்தல் - எட்டிப் பார்த்தல். வழி கோலுதலும் ஆம். திடர் - மணற்குன்று.*

*கடல் பட்ட இன்னமுதம் - பாற்கடலில் உருவாகிக் காணப்பட்ட இனிய அமுதம்.*

***கண்ணி 86 முதல் 90 வரை :*** *அழகுடைய பேரொளியமைந்த தோற்றம் உள்ள பெதும்பைப் பருவ வயதினள் ஒருத்தி, நீலநிறம் பொருந்திய மயில் போன்ற அழகிய சாயலை உடையவள்; சிறந்த ஒளியினையுடைய ஒரு தாமரையில் (திருமுகத்தில் என்றபடி) காதணியாகிய இரு குழைகளும், இன்பம் பொருந்திய இரண்டு சேற்கெண்டை மீன்களும், அதரமாகிய சிவந்த ஒரு கொவ்வைக் கனியும், தூய்மை பொருந்திய பற்களாகிய முத்துக்களும், புருவமாகிய வளைந்த கொடிய வில்லும், சுட்டிகை என்ற ஆபரணமும், சிவந்த பவளநிறத் திலகமும் வைத்திருக்கும் திங்கள் போன்ற திருமுகமும் உடையவள். ஒன்றுபோல அமைந்து உள்ள கங்கணம் என்னும் சிறுவளை சேர்ந்து ஒளிரும் கரங்களை உடையவள். ஒளியமைந்த மணிகள் பதித்த கிண்கிணி என்னும் ஆபரணம் அணிந்த திருத்தமான கால்களை உடையவள். ஒளிரும் நிறமுடைய அழகிய ஆடை மொய்த்து அசைகின்ற நிதம்பம் உடையவள். தமிழ்ஆயும் பொதிகைமலையில்*

**92.** மாலை வளாய குழலாள், மணம்நாறு
சோலை இளங்கிளிபோல் தூமொழியாள், – சாலவும்

**93.** வஞ்சனை செய்து மனங்கவரும் வாட்கண்ணுக்(கு)
அஞ்சனத்தை யிட்டங்(கு) அழகாக்கி – எஞ்சா

**94.** மணிஆரம் பூண்டாழி மெல்விரலிற் சேர்த்தி
அணிஆர் வளைதோள்மேல் மின்ன – மணியார்ந்த

**95.** தூவெண் மணற்கொண்டு தோழியரும் தானுமாய்க்
காமன் உருவம் வரவெழுதிக் – காமன்

**96.** கருப்புச் சிலையும் மலர் அம்பும் தேரும்
ஒருப்பட்டு உடன்எழுதும் போழ்தில் – விருப்பூரும்

---

*விளைந்த சந்தனம் படிந்த விசாலித்த தோள்களையுடையவள்.*

***கண்ணி - 91, 92 :*** *மடல் பட்ட - பூவின் இதழ்கள் பொருந்திய. மாலையால் சுற்றிக் கட்டப்பட்ட கூந்தலையுடையவள்.*

*இளங் கிளி - நன்கு முதிராத கிளி. தூமொழி - வஞ்சனை கலவாத சொல்.*

***கண்ணி - 93 :*** *கண்கள் தம்மியல்பில் தாம் நின்றனவாயினும், காணும் காளையருள் சிலர் தம்மை அவள் விரும்பி நோக்குகின்றாளாகக் கருத நிற்றலை இங்கு, “வஞ்சனை” என்றார்.*

*இயல்பிலே கவர்ச்சியில்லாதவற்றை அஞ்சனம் தீட்டி அழகாக்கினாள்.*

***கண்ணி - 93, 94 :*** *எஞ்சா - அணிய வேண்டுவனவற்றுள் எதுவும் குறையாத. மணி - நவமணி, ஆழி - மோதிரம். வளை - தோள் வளை. தான் மங்கைப் பருவத்தள் அல்லாளாயினும் அப்பருவத்தாரோடு ஒப்பத் தோன்றும் ஆசையால் அவர்தம் அணிகலங்களையெல்லாம் தானும் அணிந்து ஒப்பனை செய்து கொண்டாள்.*

***கண்ணி - 94, 96 :*** *மணி ஆர்ந்த - அழகு நிறைந்த. ‘வெண்மணலை இடமாகக் கொண்டு, அதன்கண் எழுதினாள்’ என்க. மங்கையர்போல நன்கு ஒப்பனை செய்து கொண்டு தோழியருடன் தெருவில் வந்தவள், ‘தனது அழகுக்கு ஏற்ற காதலன் மன்மதன் ஒருவனே’ என்னும் எண்ணத்தினால் அவன் உருவத்தை இவள் வெண்மணலிலே எழுதிப் பார்க்க எழுதிக் கொண்டிருந்தாள். அதுபொழுது சிவபெருமான் தன் இயல்பிலே தான் இடப வாகனத்தின்மேல் அங்கு உலாப் போந்தான். அவனைக் கண்டதும் இப்பெதும்பை அவன் காமனிலும் மிக்க அழகுடையனாய் இருத்தலைக் கண்டு கரை கடந்த காதலை உடையளாய் நிலையழிந்து நின்றுவிட்டாள். கரும்பு + சிலை = கருப்புச் சிலை. சிலை - வில். மன்மதனுடைய தேர் தென்றற் காற்று. அஃது உருவம் இல்லதாயினும் அதன்*

*போக்கினைச் சில கீறல்களால் எழுதிக் காட்டுதல் உண்டு. ஒருப்பட்டு - காதலனாக ஏற்றுக் கொண்டு. உடன் - அவனுக்குரிய பொருள்கள் பலவற்றையும் தொகுத்து. ஊர்தல் - மீதூர்தல், 'மீதூர்தற்கு ஏதுவான தீர்த்தன்' என்க. தீர்த்தன் - பரிசுத்தன். வான மால் ஏறு - வானவருள் ஒருவனாகிய மாயோனாம் விடை. வானம் - உயர்வும் ஆம். ஆரம் - மாலை - ஆழி - மோதிரம்.*

*தான் - பெதும்பை. 'நன்று அறிவார் அமரச் சொன்ன' என்க. அமர - யாவரும் விரும்பும் வண்ணம். நல - மகளிர்க்கு உரியனவாகச் சொல்லப்பட்ட உறுப்பிலக்கணங்கள். நிறை - மனம். தன் இயல்பில் ஓடாதவாறு நிறுத்தும் ஆற்றல்.*

*கை வண்டு - வளையல். இது முன்னர்க் கூறப்படாமையால் இப்பொழுது மற்றை அணிகலன்களுடன் அணிந்து வந்தாள் என்க. கண் வண்டு, உருவகம். கண்களாகிய வண்டு. கலை - உடை. நெய் விண்ட - மண நெய் பூசப்பட்ட "நின்றொழிந்தாள்" என்பது ஒரு சொல்.*

***கண்ணி 91 முதல் 96 வரை :** பேதைப் பருவத்து இல்லாமல் இப்பெதும்பைப் பருவத்தின் வருங்காலத்தில் பெரிய மலையாவதற்கு இப்போதுதான் சிறிய மேடாகத் தோன்றியதோ எனும்படியான சூதாடு கருவி போன்ற தனங்களை உடையவள். கடலில் தோன்றிய இனிய அமுதம் போன்றவள். இதழ்விரித்து மலர்மாலை சூடிய கூந்தலையுடையவள்.*

*மணம் வீசும் பூஞ்சோலையில் உள்ள நன்குமுதிராதி கிளிபோன்ற வஞ்சனை கலவாத தூய மழலை மொழியினள். பெரிதும் வஞ்சகத்தைப் புரிந்து, ஆடவர் மனத்தைக் கவர்ந்து கொள்ளும் வாள்படை போலும் கண்களுக்கு மையெழுதி அவ்விடத்தில் அழகைத் தோற்றுவித்து, குறையாத மணிகள் கோத்த மாலையைக் கழுத்தில் அணிந்து மென்மையுள்ள விரல்களில் மோதிரமணிந்து, அலங்காரமான வளையெனும் கடகம் தோள் மீது ஒளிர, தோழியரும் தானுமாய் அழகு நிறைந்த தூய வெள்ளை மணல் மேல் இருந்து காமன் வடிவம் தோன்ற அம்மணல்மேல் எழுதி, காமனுடைய கரும்பு வில்லும் மலர்க்கணைகளும் தேரும் தோன்ற மனம் ஒன்றுபட்டு எழுதிக்கொண்டே இருக்கும்போது,*

***கண்ணி 97 முதல் 99 வரை :** எவர்க்கும் விருப்பம் ஊற்றெடுக்கும் தேன் நிறைந்த அழகிய கொன்றை மாலை சூடிய தூயோனாகிய சிவபெருமான் சிறந்த மதர்த்த விடையின் மேல் அமர்ந்து, தான் இருக்கும் அவ்வழியே உலாவர நோக்கி,*

*தான் வாழ்வதன் பொருட்டு, கல்வி கேள்விகளால் நலத்தை அறிந்த மேலோர் அருளிய நலம் இழந்து, எஞ்சி இருந்த அறிவையும் இழந்து, நிறைவுடைமையையும் இழந்து, மிகுதியாகக் கையில் உள்ள வளையல்களும் கீழ்விழ, கண்களாகிய வண்டும், அதாவது கருவிழியும் காதளவு ஓட, ஆடையும் ஒருதலைக் காமத்தால் அவிழ்ந்து விழ, நெய்ப்பு மிக்க மலரணிந்த கூந்தலையுடைய அப்பெதும்பை, விடை மேல் உள்ள பரமனைக் கண்டு*

97. தேனமருங் கொன்றையந்தார்த் தீர்த்தன் சிவலோகன்
வானமால் ஏற்றின்மேல் வந்தணையத் – தானமர

98. நன்றறிவார் சொன்ன நலந்தோற்றும் நாண்தோற்றும்
நின்றறிவு தோற்றும் நிறைதோற்றும் – நன்றாகக்

99. கைவண்டும் கண்வண்டும் ஓடக் கலைஓட
நெய்விண்ட பூங்குழலாள் நின்றொழிந்தாள் – மொய்கொண்ட

**3. மங்கை**

100. மங்கை இடம்கடவா மாண்பினாள் வானிழிந்த
கங்கைச் சுழியனைய உந்தியாள் – தங்கிய

101. அங்கை கமலம்; அடிகமலம்; மான்நோக்கி
கொங்கை கமலம்; முகம்கமலம் – பொங்கெழிலார்

---

*நின்றபடியே தன்னை மறந்தனள் ஆயினாள்.*

***கண்ணி - 99, 100 :*** *பன்னிரண்டு பதின்மூன்றாம் ஆண்டுகள் மங்கைப் பருவம், மங்கை இடம் - மங்கைப் பருவத்தை அடைந்தவள் இருக்க வேண்டிய இடம்.*

***கண்ணி - 101-103 :*** *மங்கையது உறுப்புக்களின் வருணனை. நோக்கு - பார்வை. இட்டிடை - சிறிய இடை. வஞ்சி - கொடி. பணைத் தோள் - பருத்த தோள். வேய் - மூங்கில். மட்டு விரி தேனோடு பூக்கள் மலர்கின்ற. அறல் - கருமணல்.*

***கண்ணி - 104 :*** *வாசிகை, வாசிகைபோல வளைத்துத் தலையில் சூடும் மாலை. கண்டி - கழுத்தணி.*

***கண்ணி 100 முதல் 105 வரை :*** *வயது 12 முதல் 13 வயது வரை நிறைந்த மங்கைப் பருவம் அகலாத மாண்புடைய ஒருத்தி விண்ணில் இருந்து இறங்கிய கங்கையின் நீர்ச்சுழியை ஒத்த கொப்பூழை உடையவள். சாமுத்ரிகப்படி அமைந்த அழகிய கைகளும் தாமரை, கால்களும் தாமரை, மான்போலும் மருண்ட பார்வையையுடைய அவளின் தனங்கள் இரண்டும் தாமரை, திருமுகமும் தாமரை;*

*மிக்க பேரழகு அமைந்து நெருங்கிய சிறிய இடையும் வஞ்சிக் கொடி; பெருமை மிக்க தோள்களும் மூங்கில்; எழுச்சி அமைந்த பட்டாடை உடுத்திய நிதம்பமும் தேரின் தட்டு; மணம் விரியும் கூந்தலும் கருமணல்; செவ்விய வாயும் பவளம்; அந்த வாயில் பொருந்திய அழகிய பற்களும் சிறந்த முத்துக்கள் ஆக விளங்கியவளாய் சிறப்பு பொருந்தியதும், வண்டுகள் மொய்த்ததும் ஆகிய மலர் வளர்ச்சி பெற்ற தொடுமாலையைச் சூட்டிக் கொண்டு, கண்டி என்னும்*

102. இட்டிடையும் வஞ்சி; இரும்பணைத்தோள் வேய்எழிலார்
பட்டுடைய அல்குலும் தேர்த்தட்டு – மட்டுவிரி

103. கூந்தல் அறல்பவளம் செய்யவாய் அவ்வாயில்
ஏய்ந்த மணிமுறுவல் இன்முத்தம் – வாய்ந்தசீர்

104. வண்டு வளாய வளர்வா சிகைசூட்டிக்
கண்டி கழுத்திற் கவின்சேர்த்திக் – குண்டலங்கள்

105. காதுக் கணிந்து கனமே கலைதிருத்திக்
தீதில் செழுங்கோலஞ் சித்திரித்து, – மாதராள்

106. பொற்கூட்டிற் பூவையை வாங்கி அதனோடும்
சொற்கோட்டி கொண்டிருந்த ஏல்வைக்கண் – நற்கோட்டு

107. வெள்ளி விலங்கல்மேல் வீற்றிருந்த ஞாயிறுபோல்
ஒள்ளிய மால்விடையை மேல்கொண்டு – தெள்ளியநீர்

108. தாழுஞ் சடையான் சடாமகுடம் தோன்றுதலும்
வாழுமே மம்மர் மனத்தளாய்ச் – சூழொளியான்

109. தார்நோக்கும் தன்தாரும் நோக்கும்; அவனுடைய
ஏர்நோக்கும்; தன்ன தொழில்நோக்கும் – பேரருளான்

110. தோள்நோக்கும் தன்தோளும் நோக்கும்; அவன்மார்பின்
நீள்நோக்கம் வைத்து நெடிதுயிர்த்து – நாண்நோக்காது

---

*ஆபரணத்தைக் கழுத்தில் அழகு பெறச் சேர்த்து, குண்டலங்களைச் செவியில் அணிந்து, பெரிய மேகலையைத் திருத்தமுற உடுத்தி, குற்றம் இல்லாத செழுமையான இயற்கை அழகுடன் சிறந்த செயற்கையழகையும் செய்து.*

***கண்ணி - 106 :*** *பூவை நாகணவாய்ப் புள். கோட்டி கொள்ளுதல் - திறம்படப் பேசுதலை மேற்கொள்ளல். ஏல்வை - பொழுது. சமயம். கோடு - சிகரம்.*

***கண்ணி - 107 :*** *விலங்கல் - மலை.*

***கண்ணி - 108 :*** *தாழ்தல் - தங்குதல். வாழுமே - உயிர் வாழ்வாளே! மம்மர் - மயக்கம்.*

***கண்ணி - 109, 110 :*** *'அவனுடைய அழகுக்கு ஒத்த அழகுடையவளாய் நான் இருக்கின்றேனா' என்பதை இருவர் தோற்றத்தையும் ஒப்புநோக்கும் முறையால் ஆராய்கின்றாள். ஆடவர் போக மாலையே 'தார்' எனப்பட, மகளிர் போகமாலை 'மாலை' எனப்படுமாயினும் அதனையும் பொதுப்பட இங்கு, 'தார்'*

111. உள்ளம் உருக ஒழியாத வேட்கையாம்
வெள்ளத் திடையழுந்தி வெய்துயிர்த்தாள் – ஒள்ளிய

### 4. மடந்தை

112. தீந்தமிழின் தெய்வ வடிவாய் திருந்தியசீர்
வாய்ந்த மடந்தைப் பிராயத்தாள் – ஏய்ந்தசீர்

113. ஈசன் சிலையும், எழில்வான் பவளமும்,
சேய்வலங்கை வேலும், திரள்முத்தும் – பாசிலைய

114. வஞ்சியும், வேயும், வளர்தா மரைமொட்டும்
மஞ்சில்வரும் மாமதிபோல் மண்டலமும் எஞ்சாப்

115. புருவமும், செவ்வாயும், கண்ணும் எயிறும்
உருவ நுசுப்பும்மென் தோளும், – மருவினிய

---

*என்றார். ஏர், ஏழில் இவை ஒருபொருட் சொற்கள். நெடிதுயிர்த்தல் - பெருமூச்சு விடல்.*

*ஒப்பு நோக்கியபின் ஒப்புத் துணிந்தவளாய், அவன் மார்பை அணைய விரைந்து, அது கூடாமையால் பெருமூச் செறிந்தாள்.*

***கண்ணி - 111 :*** *காதல் வெள்ளம் கரையிறந்ததாக அதனிடையே அகப்பட்டு ஆற்ற மாட்டாது வெப்பமாக மூச் செறிந்தாள்.*

***கண்ணி 106 முதல் 111 வரை :*** *பின் அம்மங்கை நல்லாள், பொன்னால் ஆகிய கூட்டில் இருந்த நாகணவாய்ப் பறவையைக் கையில் எடுத்து, அதற்குச் சொற்களைப் பேசப் பழக்கிக் கொண்டிருந்த சமயத்தில், சிறந்த சிகரங்களை யுடைய வெள்ளி மலையின் மேல் எழுந்தருளியிருந்த பரிதி போன்ற தூய்மையுள்ள மதர்த்த விடைமேல் அமர்ந்து உள்ள, தெளிவான கங்கை தங்கிய சடையுடைய, உலாவந்த சிவபிரானது சடைமுடி அம்மங்கையின் எதிரே தோன்றுதலும் உணர்வோடு வாழ்வாளோ? எனவே, உணர்வை இழப்பாள்.*

*மயக்கம் கொண்ட மனத்தை உடையவளாகி பேரொளி சூழ்ந்த வடிவினனாகிய பெருமான் சூடிய மாலையை நோக்குவாள்; தனது மாலையும் நோக்குவாள்; அதன்பின் அப்பரமனது அழகை நோக்குவாள்; தன்னுடைய அழகையும் நோக்குவாள்; பெருங்கருணைப் பெருமானது தோள்களை நோக்குவாள்; தனது தோள்களையும் நோக்குவாள்; இவ்வாறு பலமுறை ஒப்பு நோக்கிய பின் அப்பரமன் திருமார்பில் நீண்ட நேரம் பார்வையைச் செலுத்தி, அவன் கலப்பு எளிதில் கிடைக்குமோ என எண்ணிய ஏக்கத்தால் பெருமூச்சு விட்டாள்; பெண்களுக்கு உரிய நாணத்தையும் கவனியாமல் மனம் உருக நீங்காத ஆசை வெள்ளத்தில் அழுந்தி வெம்மை தோன்ற மீண்டும் ஒருமுறை பெருமூச்சு*

*விட்டு நின்றாள்;*

***கண்ணி - 112 :*** *பதினான்காம் ஆண்டு முதல் பத்தொன்பதாம் ஆண்டு முடிய மடந்தைப் பருவம்.*

*தமிழின் தெய்வம் - தமிழ்த் தெய்வம். இஃது இனிமையும், அழகும் பற்றி வந்த உவமை. 'இன்' வேண்டா வழிச் சாரியை. திருந்திய - பெண்மை நலம் நன்கமைந்த. சீர் - சிறப்பு. "ஏய்ந்த சீர்" என்பதனைச் சிலைக்கு அடையாக்குக.*

***விளக்கவுரை :*** *"தீந்தமிழின் தெய்வ வடிவாள்" மடந்தையின் இன்ப மயமான சாயலை உணர்த்தவே தீந்தமிழின் தெய்வ வடிவாள் என்கிறார் நாயனார். எவர்க்கும் எதையும் எளிதாக விளக்கும் ஒளியும், நாவின் அள்ளூரச் செய்யும் இனிமையும், தெய்வம் விரும்பும் இனிய ஓசையும் உடைய மொழியை, 'ஒள்ளிய தீந்தமிழ்' என்று உணர்த்தினார். இதய அநாகதத்தில் தங்கிய ஆன்ம உணர்வை, அத்தமிழின் சொரூபம் ஆனவள் என்று அறிவித்த அருமை என்றும் மறக்க முடிவதில்லை.*

*இதனையடுத்து 'திருந்திய சீர்வால் மடந்தை' என்று வரக்கூடிய பகுதி நம் நெஞ்சத்தை மகிழ்வித்துக் கைகுவிக்கத் தோன்றுமாறு செய்கின்றது. 'தமிழ் தழுவிய சாயலவர்' என்று பெண்மையைச் சிறப்பிக்கின்றது சீவக சிந்தாமணி; அது வெறும் பெண்மையின் செய்தி. இது தெய்வநலம். இறைவனின் வில்லும் முருகனின் வேலும், மடந்தையின் புருவத்திலும் கண்களிலும் புலனாகின்றன. அந்த வில்லும் வேலும் என்றைக்கும் எண்ணத் தக்கவையன்றோ!*

***கண்ணி - 113, 116 :*** *சிலை - வில், 'சிறந்த வில்' என்றற்கு "ஈசன் சிலை" என்றார். "சேய் வலங்கை வேல்" என்றதும் இது பற்றி. சேய் - முருகன். வலம் - வெற்றி. வெற்றியைத் தருவதனை 'வெற்றி' என்றே உபசரித்தார். இனி 'வலக்கை' என்பது மெலிந்து நின்றதாக உரைத்தலும் ஆம். மஞ்சு - மேகம். "மேகத்தோடு வரும் மதி" என்றது கூந்தலைக் குறித்தற்கு. மாமதி - நிறைமதி. போல், அசை.*

*சிலை, பவளம், வேல் முத்து, வஞ்சி (கொடி), வேய் (மூங்கில்), தாமரை மொட்டு, மாமதி இவைகளை நிரலே புருவம், செவ்வாய், கண், எயிறு (பல்), நுசுப்பு (இடை), தோள், கொங்கை, முகம் இவற்றுடன் பொருத்திக் கொள்க. சிலை முதலாக அனைத்திலும் இரண்டன் உருபு விரிக்க. உருவம் - அழகு. பங்கயப் போது - தாமரை மலர். சேவடி - சிவந்த பாதங்கள்.*

***கண்ணி - 117 :*** *குறங்கு - துடை; ஆழித்தேர் - சக்கரத்தையுடைய தேர்.*

***கண்ணி - 118, 119 :*** *திரு - அழகு. மற்றொரு மதியம் - வானத்தில் இயல்பாய் உள்ள சந்திரனுக்கு வேறான மற்றொரு சந்திரன். இது மயக்க அணி. நாள் மீன் - அசுவினி, பரணி முதலிய நட்சத்திரங்கள். 'அவைகட்குக் கணவன் சந்திரன்' என்பது புராணம். அதனால், 'அவை அங்ஙனம் மயங்கிச் சூழ்ந் தாற்போல்'*

116. கொங்கையும் வாண்முகமு மாக்கொண்டாள் கோலஞ்சேர்
பங்கயப் போதனைய சேவடியாள்; – ஒண்கேழல்

117. வாழைத்தண் டன்ன குறங்கினாள் வாய்ந்தசீர்
ஆழித்தேர்த் தட்டனைய அல்குலாள்; – ஊழித்

118. திருமதியம் மற்றொன்றாம் என்று முகத்தை
உருவுடைய நாண்மீன்சூழ்ந் தாற்போல் – பெருகொளிய

119. முத்தாரம் கண்டத் தணிந்தாள்; அணிகலங்கள்
மொய்த்தார வாரம் மிகப்பெருகி – வித்தகத்தால்

120. கள்ளுங் கடாமுங், கலவையுங் கைபோந்திட்டு
உள்ளும் புறமுஞ் செறிவமைத்துத் – தெள்ளொளிய

---

*என்பது தற்குறிப்பேற்ற அணி. கண்டம் - கழுத்து.*

*'அணிகலங்கள் மொய்த்தமையால் (நிறைந்தமையால்) ஆரவாரம் (புகழுரை) மிகப் பெருகி' என்க.*

***கண்ணி 112 முதல் 119 வரை :*** *தூய்மையுள்ள பொருள் துறை நிரம்பிய இனிய தெய்வத்தமிழின் வடிவினளான, திருத்தமான சிறப்பு அமைந்த மடந்தைப் பருவம் உடையவள் ஒருத்தி, சிறப்புப் பொருந்திய சிவபிரான் வில்லையும் எழில்மிக்க பவளத்தையும், முருகனுடைய வலத்திருக்கரத்து உள்ள வேற்படையும், திரட்சியான முத்துக்களையும் பசிய இலைகள் உள்ள வஞ்சிக் கொடியையும் மூங்கிலையும் வளர்ந்த தாமரை அரும்பையும் மேகத்தின் மேல் எழும் சிறந்த சந்திர மண்டலத்தையும் முறையே ஒத்துள்ள, தோலாத புருவமும், சிவந்த வாயும், கண்ணும், பற்களும் சிறுத்த இடையும், மேல் தோளும், சேர்ந்துள்ள இனிய தனங்களும் ஒளியுடைய முகமாகக் கொண்டு இருப்பவள்.*

*செயற்கை அழகு சேர்ந்த தாமரை மலரை ஒத்த சிவந்த பாதங்களை உடையவள். ஒளி மிக்க வாழைத்தண்டை ஒத்த தொடைய உடையவள். சிறப்பு அமைந்த சக்கரங்களையுடைய தேர்த்தட்டைப் போன்ற நிதம்பத்தையுடைய அம்மங்கை, முறையாக வளர்ந்த வேறு ஒரு முழுத் திங்கள் போலும் என்று மயங்கி நிறமுடைய விண்மீன்கள் அவள் முகத்தைச் சூழ்ந்திருப்பது போல், மிக்க ஒளி செய்கின்ற முத்து மாலைகளைக் கழுத்தில் அணிந்தாள். மற்ற ஆபரணங் களையும் நிரம்ப அணிந்து அந்த ஆபரணங்களால் ஆகிய பேரொளியை மிகுதியாகத் தோற்றுவித்து.*

***கண்ணி - 119, 122 :*** *வித்தகம் - சதுரப்பாடு; திறமை, கள் - தேன். அது பூ மாலையைக் குறித்தது. கடாம், இங்குக் கத்தூரி, இவை வேறு பொருளாம் நயம் தோற்றி நின்றன. கலவை - சந்தனக் கலவை - கைபோதரல் - தோழியர்களால் கொண்டு வரப்படுதல். அவைகளைக் கொண்டு வரும் தோழியர் இவளது*

121. காளிங்கம் சோதி கிடப்பத் தொடுத்தமைத்த
தாளின்பத் தாமம் நுதல்சேர்த்தித் – தோளெங்கும்

122. தண்ணறுஞ் சந்தனம்கொண் டப்பிச் சதிர்சாந்தை
வண்ணம் பெறமிசையே மட்டித்தாங்(கு) – ஒண்ணுதலாள்

123. தன்அமர் தோழியர்கள் சூழத் தவிசேறிப்
பின்னும்ஓர் காமரம் யாழமைத்து – மன்னும்

124. விடவண்ணக் கண்டத்து வேதியன்மேல் இட்ட
மடல்வண்ணம் பாடும் பொழுதுஈண்டு – அடல்வல்ல

125. வேல்வல்லான் வில்வல்லான் மெல்லியலார்க்(கு) எஞ்ஞான்றும்
மால்வல்லான் ஊர்கின்ற மால்விடையின் – கோல

---

*அருகிலும், சேய்மையிலும் நின்றதை 'உள்ளும், புறம்பும் செறிவு' என்றார். அவர் அங்ஙனம் நின்றது இவளை நோக்கியாகலின் "அமைத்து" என்றார்.*

*காளிங்கம் - நீலமணி. தாள் - அடிப்பாகம். 'தாளை யுடைய தாமம்' என்க. தாமம் - மாலை. நெற்றியிலும் ஓர் இரத்தினமாலை கட்டுவர். நுதல் - நெற்றி.*

*'தோள் எங்கும் அப்பி' என்க. தண் - குளிர்ச்சி. சதுர் - பெருமை. அது 'சதிர்' என மருவி வழங்கும். "வண்ணம் பெற" என்றதனால். சாந்து, 'செஞ்சாந்து' என்க. மட்டித்தல் - பூசுதல்.*

***கண்ணி 119 முதல் 122 வரை :*** *அறிவின் திறமையால் தேனையும் மான் மதத்தையும் கலவைச் சாந்தையும் யாவர்க்கும் தோன்றாதபடி பூசி, உள்ளத்தும் புறத்தும் நிறைவு கொண்டு, தெளிந்த ஒளியினையுடைய கலிங்க தேசப்பட்டுச் சேலை மிக்கு ஒளிர உடுத்தி, பொருந்திய நுதலணி வரிசைகளை நெற்றியில் சேர்த்து தோள் முழுதும் குளிர்ந்த மணம் வீசும் சந்தனத்தை எடுத்து நிரம்பப் பூசி, ஒளியுடைய புருவம் உள்ள அம்மடந்தை நல்லாள் அழகிய கூட்டுச் சாந்தைப் பொலிவுபெற மேலெல்லாம் அப்பிய வண்ணம்.*

***கண்ணி - 122 - 124 :*** *'தன் தோழியர்கள், அமர் தோழியர்கள்' என்க. அமர்தல் - விரும்புதல். தவிசு - ஆசனம். பின்னும் ஓர் காமரம் - முன்பாடியது போகப் பின்னும் ஓர் பண்ணினை 'யாழின்கண் அமைத்து' என்க. விரும்பும் பண்கள் தோற்றுமாறு இசைகள் வேறு வேறு வகையாக எழும்படி நரம்புகளைக் கட்டுதல் வேண்டும் ஆதலின் அதனை "அமைத்து" என்றார்.*

*மன்னும் விடம் - நிலைபெற்றுள்ள விடத்தைக் கொண்டுள்ள. வண்ணக் கண்டம் - கரிய கண்டம். வேதியன் - வேதத்தை ஓதுபவன்; சிவபெருமான்.*

126. மணியேறு கேட்டாங்கு நோக்குவாள் சால
அணிஏறு தோளானைக் கண்டாங்(கு) – அணியார்ந்த

127. கோட்டி ஒழிய எழுந்து குழைமுகத்தைக்
காட்டி நுதல்சிவப்ப வாய்துலக்கி – நாட்டார்கள்

128. எல்லாரும் கண்டார் எனக்கடவுள் இக்காயம்
நல்லாய் படுமேற் படுமென்று – மெல்லவே

129. செல்ல லுறும்; சரணம் கம்பிக்கும்; தன்னுறுநோய்
சொல்லலுறும் சொல்லி உடைசெறிக்கும் – நல்லாகம்

130. காண லுறும்;கண்கள் நீர்மல்கும்; காண்பார்முன்
நாண லுறும்நெஞ்சம் ஒட்டாது; – பூணாகம்

---

*மகளிர் மடல் பாடுதல் இல்லையெனினும் பலர் அறியப் படாமல் தான் இருக்குமிடத்திலே தோழியர் இடையே நகை உண்டாகும்படி தான் சிவபெருமான்மேல் கொண்ட காதலால் நாண் இறந்து பாடுவாள்போலப் பொய்யாகப் பாடத் தொடங்கினாள்.*

*மடலாவது, ஆடவன் ஒருவன் தான் காதலித்த கன்னிகை தனக்குக் கிட்டாமையால் ஆற்றாது தான் உயிர்விடும் நிலையில் உள்ளதைத் தெருக்கள் தோறும் சென்று தெரிவித்துப் பாடுதல். அது நாணத்தையே அணிகலமாகக் கொண்ட மகளிர்க்கு இயல்வதில்லை. அதனால் மகளிர் மடல் பாடியதாகத் தமிழில் இலக்கியம் இல்லை. ஆயினும் இவள் தன் இல்லத்திற்குள் தன் தோழியர் முன் வேடிக்கையாகச் சிவபெருமானை முன் வைத்து மடல் பாடத் தொடங்கினாள்.*

***கண்ணி - 124 - 126 :*** *ஈண்டு - 'அவள் பாடுகின்றாள்' என்றது 'இந்த நேரத்தில் கேட்டு' என்க. அடல் - பகைவரை வெல்லுதல். வேல், இங்கு முத்தலை வேல்; சூலம். வில் மேரு மலையாகில் வில், மால் வல்லான் - மயக்கத்தைத் தர வல்லவன். கோலம் - அழகு - மணி - தன் கழுத்தில் உள்ள மணி - விடையின் கழுத்தில் உள்ள மணி. ஏறு - அந்த மணியினின்றும் எழுந்து எங்கும் பரவுகின்ற ஓசை. ஆங்கு நோக்கு வாள் - அந்த ஓசை வந்த வழியைப் பார்க்கின்றவள்.*

*அணி - அழகு. ஆங்கு - அப்பொழுதே. அணி ஆர்ந்த கோட்டி - வரிசை வரிசையாய் அமர்ந்திருந்த தோழியர் கூட்டம்.*

***கண்ணி - 127, 128 :*** *குழை - காதணி. வாய் துலக்குதல் - இயல் பாகவே சிவந்திருக்கின்ற வாயை மேலும் சிவக்கும்படி தம்பலந்தின்னல். நுதல் - நெற்றி. அது முன்பே குங்குமத்தால் சிவந்துள்ளது. எனவே, 'நுதல் சிவப்ப வாய் துலக்கி முகத்தைக் காட்டி' என்க. கோட்டி - கூட்டம். வாய் துலக்கி - வாய் திறந்து. நாட்டார்கள் - ஊரார்கள்.*

*இவையெல்லாம் தனது காதற் குறிப்புத் தோன்றச் செய்தாள் ஆகலின், "நாட்டார்கள் எல்லாரும் கண்டார்" என்றார்.*

*பலரும் அறியத் தான் சிவபெருமானைக் காதலித்து நின்றமை யால், 'அவன் பேரருளாளன் ஆதலின் அவனும் எனது கருத்திற்கு உட்படுவான்; ஆயினும் என் ஆயத்தார் அதற்குத் தடையாய் இல்லாமல் இசைதல் வேண்டுதல்' என்பாள், "இங்கு ஆயம் நல்லாய்ப் படுமேற்படும்" என்றார். 'நல்லவாய்' என்பது "நல்லாய்" எனக் குறைந்து நின்றது.*

***கண்ணி 123 முதல் 129 வரை :** தன்னை விரும்பிய தோழிகள் சூழ்ந்திருக்க, ஒரு பீடத்தில் அமர்ந்து, உணர்வை ஒருமுகப்படுத்துகின்ற ஒப்பற்ற சீகாமரம் என்னும் பண்ணை வீணையில் சேர்த்து, பொருந்திய அழகுடைய திருநீலகண்டப் பெருமான் மேல் பாடியுள்ள மடல் வண்ணம் என்னும் பிரபந்தத்தைப் பாடிக்கொண்டே இருந்த சமயம், நெருங்கி வெல்லும், வன்மை வாய்ந்த வேற்படை ஏந்திய வல்லாளன், வில்படை ஏந்திய வில்லாளன் மென்மை இயல்புள்ள பெண்களுக்கு எக்காலத்தும் காம மயக்கம் செய்யும் வல்லாளன் ஏறிச் செலுத்துகின்ற மதர்த்த காளையின் கழுத்தில் கட்டிய அழகிய மணியின் பேரோசையைக் கேட்டதும், ஓசை உண்டான அவ்விடத்தை உற்றுப் பார்த்தவள், அழகு மிக்க தோள்களையுடைய, உலாவந்த பரமசிவனைக் கண்டாள்; கண்டதுமே, பொலிவு நிறைந்த கூட்டத்தை விட்டு எழுந்து குழைவு உடைய முகத்தைப் பொலிவு குன்றச் சுளித்து நெற்றி சிவப்பேற, வாய் திறந்து தோழியை நோக்கி, சிறந்த தோழியே. அந்த எனது பெருமான் இவ்விடத்தில் வந்ததை ஊரார் அனைவரும் பார்த்தார்கள். எம் இறைவன் யாவரும் நோக்கினராதலால் மென்மேலும் கண்ணெச்சில் படும்போலும், என்று இவ்வண்ணம் தோழியிடம் சொல்லிக்கொண்டே மெதுவாகப் பரமனை நோக்கிச் செல்ல அடியெடுத்து வைப்பாள்.*

***கண்ணி - 129, 130 :** "உறும்" என்பது முதலிய பலவற்றிற்கும் 'உறுவாள்' என்பதுபோலப் பொருள் உரைக்க. சரணம் கம்பிக்கும் - கால் நடுங்குவாள்; இஃது அவன் நிலை தளர்ந்தமையைக் குறித்தது. செறித்தல் - சரிந்து விழாதபடி இறுகக் கட்டுதல். ஆகம் - மார்பு. சிவனுடைய மார்பு.*

***கண்ணி - 130, 131 :** "நாணல் கூறும் நெஞ்சம்" பெயரெச்சத் தொடர். நெஞ்சம் ஒட்டாமையால் (தடுத்தலால்) தன் மார்பிலேயே தன் கையைத் தான் அணைத்துச் சிவனைத் தழுவியது பொய்யாய் இருத்தலால் 'இவன் என் கைக்கு அகப்படவில்லையே' என்று சொல்லி இவ்வாறு பெரிதும் அல்லற்படுவாள்.*

***கண்ணி - 131, 132 :** இவ்வாறு மூழ்கும் பெருந்துயரத்தால் அவள் தன்னுடைய மேனியை பொன்பூத்தமையால் கொன்றை மாலை போல ஆய்விட, தான் சிவபெருமான் அணிந்துள்ள கொன்றை மாலையாகிய அந்தப் பொன் போலும் பொருளைப் பெறவிரும்பும் காரணத்தால் புலம்பலாயினாள்.*

131. புல்லலுறும் 'அண்ணல்கை' வாரான் என் றிவ்வகையே
அல்ல லுறும்அழுந்தும் ஆழ்துயரால் – மெல்லியலாள்

132. தன்உருவம் பூங்கொன்றைத் தார்கொள்ளத் தான்கொன்றைப்
பொன்உருவங் கொண்டு புலம்புற்றாள் – பின்னொருத்தி

### 5. அரிவை

133. செங்கேழ்நல் தாமரைபோல் சீறடியாள் தீதிலா
அங்கேழ் அரிவைப் பிராயத்தாள் – ஒண்கேழ்நல்

134. திங்களும், தாரகையும், வில்லும் செழும்புயலும்
தங்கொளிசேர் செவ்வாயும் உண்மையால் – பொங்கொளிசேர்

135. மின்ஆர்வான் காட்டும் முகவொளியாள் மெய்ம்மையே
தன்ஆவார் இல்லாத் தகைமையாள் – எந்நாளும்

---

*"கொண்டு" என்பது மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு.*

***கண்ணி 130 முதல் 132 வரை :*** *நடக்கும் போதே இரண்டு கால்களும் நடுக்கம் அடைவாள்; தனக்கு நேர்ந்த காதல் நோயைத் தோழியிடம் சொல்லத் தொடங்குவாள்; சொல்லி அச்சொல்லுக்கும் தடை நேர்ப்படுத்திக் கொள்வாள்; இறைவனது சிவந்த திருமார்பை காணத் தொடங்குவாள். கண்ட அளவில் அத்திருமார்பின் அணைப்புத் தனக்கு வாய்க்காதோ என்று கண்களில் நீர் நிரம்பப் பெருக்குவாள்; உலாவந்த பெருமானைக் கண்டவுடன் எழுந்து வந்து தான் அடைந்த மாறுபாட்டைக் காண்பவர் எதிரில் மிகவும் நாணம் கொள்வாள். அதன் பின்னர், மனம் பொருந்தாது தன்னை விட்டுத் தலைவனை நோக்கி ஓடியதும், மயக்கத்தால் பரமசிவனார் வந்ததாகவும் தான் அவனை அணைக்கின்ற ஆர்வமும் தோன்ற, ஆபரணம் அணிந்த தன் மார்பைத் தானே தழுவுவாள்; பின்னர், நடந்ததை அறிந்து, பெருமான் தன் கைக்கு அகப்படமாட்டான் என்று எண்ணி இவ்வாறே பெரிதும் வருந்துவாள். மிக்க துன்பத்தால் நைகின்ற அம்மடந்தை தனது தேகத்தில் அப்பரமனது கொன்றை மலர் மாலையைச் சூட்டிக் கொள்ள நினைத்து, அதன் பயனோ என்று எண்ணும்படி, தான் உடம்பெல்லாம் பரவிய தேமலால் கொன்றையின் பொன்னிறத்தை அடைந்தவளாய்க் கதறலானாள்;*

***கண்ணி - 133 :*** *இருபது முதல் இருபத்தைந்தாம் ஆண்டு முடிய அரிவைப் பருவம்.*

*சீறடி - சிறிய பாதம். அம் - கேழ் - அழகிய நிறம். செங்கேழ் - சிவந்த நிறம். அஃதாவது, 'நிறத்தால் அழகு பெற்றவள்' என்றபடி.*

***கண்ணி - 134, 135 :*** *திங்கள் முகம்; தாரகை (விண்மீன் நெற்றியில்*

136. "இல்லாரை எல்லாரும் எள்குவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்"பென்னும் – சொல்லாலே

137. அல்குற்கு மேகலையைச் சூழ்ந்தாள் அணிமுலைமேல்
மல்கிய சாந்தொடு பூண்புனைந்து – நல்கூர்

138. இடைஇடையே உள்ளுருகக் கண்டாள் எழிலார்
நடைபெடை அன்னத்தை வென்றாள்; – அடியிணைமேல்

---

*அணிந்துள்ள முத்துப் பட்டம்; வில் புருவம்; புயல் (மேகம்) கூந்தல்; செவ்வாய் சிலேடை.*

*'செவ்வாய்' என்னும் கிரகம்; சிவந்த வாய். இவைகளால் வானத்தைத் தன்னிடமே விளங்கக் காட்டுவாள். மின் ஆர் - மின்னல் பொருந்திய; இதனை வானுக்கு அடையாகக் கொள்க. தன் ஆவார் - தன்னை யொப்பவர்.*

***கண்ணி - 136 :*** *சொல், திருக்குறள். சொல்லால் - சொல் சொல்லப்படுதலால். 'இயற்கை அழகு இருப்பினும் ஆடை அணிகலங்களாகிய செயற்கையழகு இல்லாவிடில் மற்றை மகளிர் இகழ்ச்சி செய்வார்கள்' என்று கருதி அவைகளை அணிந்தாள் என்க. எள்வர் - இகழ்வர்.*

***கண்ணி - 137 :*** *இடைப்பகுதியில் மேகலையாம் அணிகலனை அணிந்து மார்பில் சாந்து பூசி.*

***கண்ணி - 137, 138 :*** *நல்கூர்தல், வறுமை எய்தல். அஃது இங்கே சிறுகுதலைக் குறித்தது. இடையே - மேலும், கீழும் உள்ள உறுப்புக்கள் செழித்திருக்க அவைகளுக்கு இடையே துவண்டு மெலிய. கண்டாள் - செய்தாள். என்றது, இயற்கையைச் செயற்கை போலக் கூறியது.*

***கண்ணி 133 முதல் 138 வரை :*** *சிவந்த நிறமுடைய தாமரை மலர் போன்ற சிறிய பாதங்களை உடையவளான குற்றம் இல்லாத அழகிய சிறந்த அரிவைப் பருவம் உடைய வேறு ஒருத்தி, ஒண்மை நிறம் உடைய நிலாவும், நட்சத்திரங்களும், வானவில்லும், செழுமையுடைய மேகக்கூட்டமும், நிலைத்த ஒளி அமைந்த செவ்வாய்க் கிரகமும், ஆக இவையெல்லாம் கொண்டிருப்பதால் (இவை முறையே நெற்றி, முத்து மாலையும் பல் வரிசையும், புருவம், கூந்தல், வாய் ஆகியவற்றைக் குறிக்கும்) மிகுந்த ஒளிபொருந்திய மின்னல் அமைந்த வானத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ள திருமுகத்தை உடையவள்; மெய்ம்மையாகவே தனக்கு ஒப்பானவர் இல்லாத தகுதியை உடையவள்;*

*என்றைக்கும் பொருள் இல்லாத ஏழைகளை எத்தகையோரும் இகழ்வர், செல்வம் உடையவர்களை எல்லாரும் சிறப்பாக மதித்து வரவேற்பர் என்னும் சொற்களை அறிந்திருப்பதனால் தனக்கு எவரும் ஒப்பாக மாட்டார் என்னும் இயற்கை அழகு அமைந்தவளாயிருந்தாலும் செயற்கைக்குத் தான் இந்த உலகில்*

139. பாடகம் கொண்டு பரிசமைத்தாள் பன்மணிசேர்
சூடகம் முன்கை தொடர்வித்தாள்; – கேடில்சீர்ப்

140. பொன்அரி மாலை தலைக்கணிந்து பூண்கொண்டு
மன்னும் கழுத்தை மகிழ்வித்தாள்; – பொன்னனாள்

141. இன்னிசை வீணையை வாங்கி இமையவர்தம்
அண்ணல்மேல் தான்இட்ட ஆசையால் – முன்னமே

142. பாடல் தொடங்கும் பொழுதில் பரஞ்சோதி
கேடிலா மால்விடைமேல் தோன்றுதலும் – கூடிய

---

*மதிப்பு உள்ளது எனக் காட்டுபவள் போல், நிதம்பத்தைச் சூழ்ந்திருக்கும்படி மிக உயர்ந்த மேகலையைச் சுற்றிக் கட்டினாள்; அத்தோடில்லாமல் அழகிய தனங்களின் மேல் நிரம்பிய மணம் வீசும் கலவைச் சந்தனம் பூசி, பல ஆபரணங்களையும் அணிந்து, முன்னரேயே உள்ளதோ இல்லையோ என்னும்படியான மிகச்சிறுத்திருந்த இடை, மேன்மேலும் ஆபரணங்களை அணிந்த பாரம் தாங்காமல் வரவர வருந்தித் தேய்வடைந்தது என்னும்படி செய்தாள், அழகு நிறைந்த நடையால் பெண் அன்னத்தையும் வென்றவள்.*

***கண்ணி - 139 :*** *பரிசு அமைத்தாள் - தக்கபடி அமைத்தாள். சூடகம் - கைவளை. பாடகம் - கால்களில் அணியும் ஆபரணம்.*

***கண்ணி - 140 :*** *பொன் அரி மாலை - பொன்னால் அரிப்புத் தொழில் அமையச் செய்த மாலை. இது பெரும்பான்மை மார்பில் தொங்கவிடுவது. சிறுபான்மை தலையிலும் சுற்றப்படும். கழுத்துக்கு மகிழ்ச்சியில்லையாயினும் அதனைப் பொலிவித்தலை மகிழ் வித்ததாகக் கூறினார். பொன் அன்னாள் - இலக்குமி போன்றவள்.*

***கண்ணி - 141 :*** *வாங்கியது தோழியரிடமிருந்து. இமையவர்தம் அண்ணல் சிவபெருமான். 'அவன்மேல் தான் முன்னமே இட்ட ஆசையால்' என்க. இட்ட - வைத்த.*

***கண்ணி - 142 :*** *பரஞ்சோதி. சூரிய சந்திர அக்கினி ஒளிகளைக் காட்டிலும் மேலான ஒளிப்பிழம்பினன்.*

***கண்ணி 139 முதல் 142 வரை :*** *அன்னத்தை நடையில் வென்ற சிறப்புடைமை கருதி, தனது இரண்டு கால்களில் பாடகம் என்னும் ஆபரணத்தைத் தக்கபடி எடுத்து சிறப்புற அணிந்தாள்; பல மணிகள் பதித்த சூடகம் என்னும் வளையை முன்னங்கையில் தொடர்பு உண்டாகும்படி அணிந்தாள். கெடுதி இல்லாத, பெருமை உடைய பொன்னரிமாலையைத் தனது தலையில் அணிந்து, ஆபரணத்தை எடுத்து அணிந்து, தக்க ஆபரணம் அணியப் பெற்றேன் என்று எண்ணும்படி நிறைந்த கழுத்தை மகிழச் செய்தாள். (எனவே, கண்டாரம் முதலிய*

143. இன்னிசையும் இப்பிறப்பும் பேணும் இருந்தமிழும்
மன்னிய வீணையையுங் கைவிட்டுப் பொன்னனையீர்

144. இன்றன்றே காண்ப தெழில்நலங் கொள்ளேனேல்
நன்றன்றே பெண்மை நமக்கென்று சென்றவன்தன்

145. ஒண்களபம் ஆடும் ஒளிவாள் முகத்திரண்டு
கண்களபம் ஆடுவபோல் கட்டுரைத்தும் ஒண்கேழ்நல்

146. கூந்தல் அவிழ்க்கும் முடிக்கும் கலைதிருத்தும்
சாந்தம் திமிரும் முலையார்க்கும் பூந்துகிலைச்

---

*ஆபரணங்கள் கழுத்திற்கு அலங்காரமாகப் பூட்டப்பெற்றது என்றபடி).*

***கண்ணி - 143 :*** *இப்பிறப்பைக் கைவிட்டமையாவது, தன் மாட்டு வந்தவனை ஏற்றல், அல்லது, தான் பிறனிடம் செல்லாமையாகிய தனது வழக்கத்தைக் கைவிட்டமை. "தமிழ்" என்றது தமிழ் இசையை.*

***கண்ணி - 144 :*** *எழில் நலம் காண்பது இன்றன்றே - எழுச்சியுள்ள எனது அழகின் சிறப்பை அளந்தறியும் நாள் இன்றன்றோ - அஃதாவது, 'எனது அழகு சிவபெருமானது உள்ளத்தைக் கவரும் ஆற்றலுடையதா, இல்லையா - என்பதை அளந்தறிய வேண்டிய நாள் இன்றேயாம்' என்றாள்.*

*கொள்ளேனேல் - அவனது உள்ளத்தை யான் கவர்ந்து கொள்ளாவிடில். பெண்மை நமக்கு நன்று அன்று - நம்முடைய பெண்மை நலம் நமக்கு உதவுவதன்று. சென்றவன் - உலாப் போந்தவன் சிவபெருமான்.*

***கண்ணி - 145 :*** *ஒண்களபம் - சிவபெருமானது திருமேனியிலிருந்து காற்றிற் பறந்த திருநீறும், சந்தனச் சாந்தின் துகளும், 'இவற்றில் ஆடும்' என்க. ஆடும் - மூழ்குவாள். கண், அரிவை தன் கண்கள். (களவு) என்பது அம் பெற்ற 'களவம்' என வருவது எதுகை நோக்கி, "களபம்" எனத் திரிந்து நின்றது. களவு ஆடுவது போல் - நோக்கியும் நோக்காதது போல, "கண் களவு கொள்ளும் சிறு நோக்கம்"[1] என்றார் திருவள்ளுவரும், கட்டுரைத்தல் - தன் குறிப்பினை வெளிப்படுத்துதல்.*

***கண்ணி - 146 :*** *கலை - உடை. திமிர்தல் - பூசுதல். ஆர்த்தல் - கச்சினால் இறுகக் கட்டுதல். துகில் - உயர்ந்த ஆடை.*

***கண்ணி - 147 :*** *சூழும் - சுற்றுவாள். அயாவுயிர்த்தல் - பெரு மூச்செறிதல்.*

***கண்ணி - 148 :*** *அங்கை தொழுது வளை காத்தாள் - மற்றவருடன் கூடத் தானும் அகங்கைகளைக் குவித்துக் கும்பிட்டமையால் வளைகள் 'கழன்று வீழாதபடி காத்துக் கொண்டாள். ஆயினும் உடையை வீழாமல் காத்தாள் இல்லை. நலம் தோற்றாள் - அழகினை இழந்தாள்'.*

---

1. *திருக்குறள் - 1092.*

147. சூழும் அவிழ்க்கும் தொழும்அழும் சோர்துயருற்
றாழும் அழுந்தும் அயாவுயிர்க்கும் சூழொளிய.

148. அங்கை வளைதொழுது காத்தாள்; கலைகாவாள்;
நங்கை இவளும் நலம்தோற்றாள்; – அங்கொருத்தி

**6. தெரிவை**

149. ஆரா அமுதம் அவயவம் பெற்றனைய
சீரார் தெரிவைப் பிராயத்தாள்; – ஓரா

---

***கண்ணி 143 முதல் 148 வரை :*** *பண்கூட்டியபோது நேர்ந்த நயமான இசையையும் இந்தப் பெண்மைப் பிறப்பையும், மேற்கொண்ட மேன்மையான தமிழ் இசையையும் நிலைபெற்ற வீணையையும் கைநழுவச் சோரவிட்டு, திருமகளை ஒத்த தோழியர்களே! அழகு இன்றைக்குத்தான் அல்லவா பெருமானைக் கண்டதால் ஒப்பற்ற தன் பயனைக் கண்டதாயிற்று. இந்தத் தலைவனைக் கொள்ளேனாயின் இப்பெண்மைப் பிறப்பு நமக்கு இருந்தும் பயனில்லை அன்றோ என்று கூறியபடியே சென்று, அந்த இறைவனுடைய சிறந்த திருநீறு தோய்ந்த மிக்க ஒளியுடைய திருமுகத்தில் கலத்தல் செய்வது போல இரண்டு கண்களால் தன் கருத்தைக்கூறி,*

*ஒளியுடைய கருத்த நிறம் வாய்ந்த தனது கூந்தலை அவிழ்ப்பாள்; அவிழ்த்த கூந்தலை மீண்டும் வாரி எடுத்து முடிப்பாள்; ஆடையைத் திருத்தப் படுத்துவாள். சந்தனம் பூசும் மார்பகங்களை நெருக்குவாள். அழகிய ஆடையை எடுத்துக் கட்டுவாள். கட்டிய ஆடையை மீண்டும் அவிழ்ப்பாள். தலைவனை நோக்கித் தன் எண்ணத்தை நிறைவேற்றவேண்டும் என்னும் குறிப்பால் வணங்குவாள். தனது எண்ணம் நிறைவேறாதோ என்று அழுவாள். சோர்வடையும்படியான துன்பம் அடைந்து அத்துன்பக் கடலில் ஆழ்வாள். ஆழ்ந்த அதனைவிட்டு மீண்டு கரை ஏற இயலாதபடி அழுந்தி விடுவாள்; அயர்ச்சியோடு பெருமூச்சு விடுவாள்;*

*சூழ்ந்த ஒளியையுடைய அழகிய கைவளையல்களைக் கைகுவித்துத் தொழுததால் அந்த வளையல்களை கீழே விடாதபடி காத்தாள். ஆனால், ஒரு தலைக் காமத்தால் உடல் இளைக்க, ஆடையை நெகிழ்ந்து விழாதபடி காக்க முடியாதவள் ஆனாள். எனவே, பெண் மக்களில் சிறந்த இந்த அரிவையும் தனது பெண்மைக்கு உரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நலன் அனைத்தையும் இழந்தவளாகி நின்றிட்டாள்.*

***கண்ணி - 149 :*** *இருபத்தாறாவது முதல் முப்பத்தொன்றாம் ஆண்டு முடியத் தெரிவைப் பருவம்.*

*ஆர்தல் - நிரம்புதல். ஆராஅமுதம் - சுவை மிகுதியால் தெவிட்டாத அமுதம். அவயவம், உறுப்புக்கள் பலவும் நல்லனவாய் அமைந்த உடம்பு. இஃது*

150. மருளோசை யின்மழலை வாய்ச்சொலால் என்றும்
இருள்சீர் புலரியே ஒப்பாள்; – அருளாலே

151. வெப்பம் இளையவர்கட்(கு) ஆக்குதலால் உச்சியோ(டு)
ஒப்பமையக் கொள்ளும் உருவத்தாள் – வெப்பந்தீர்ந்(து)

152. அந்தளிர்போற் சேவடியும், அங்கையும் செம்மையால்
அந்திவான் காட்டும் அழகினாள்; அந்தமில்

153. சீரார் முகம்மதியம் ஆதலால் சேயிழையாள்
ஏரார் இரவின் எழில்கொண்டாள்; – சீராரும்

154. கண்ணார் பயோதரமும் நுண்ணிடையும் உண்மையால்
தண்ணிளங் காரின் சவிகொண்டாள்; – வண்ணஞ்சேர்

---

*ஆகுபெயர், உடம்பு, பெண் உடம்பு, 'அமுதம் உடம்பு பெற்றது போல்வாள்' என்றது இல் பொருள் உவமை. சீர்மை - செம்மை.*

***கண்ணி - 149, 150 :*** *ஓரா - பொருள் உணர வாராத மழலை - என்க. 'மழலையின் மருள் ஓசை வாய்ச் சொல்' என மாறுக. அஃதாவது, 'மழலை போலும் ஓசையையுடைய வாய்ச் சொல்' என்பதாம். இஃது இனிது பொருள் விளங்குதல் இன்மையும் இனிமை யுடைமையும் பற்றி வந்த உவமை. 'மங்கையரும், மடந்தையரும் வாய் திறந்து பேச மாட்டார்கள். பேரிளம் பெண் இனிது விளங்க எடுத்துப் பேசுவாள். தெரிவை இரண்டும் இன்றி இடைநிலையதாகப் பேசுவாள்' என்பதாம். "மருள்", உவம உருபு.*

*'இத்தன்மைத்தான சொல் விடியற் காலத்தை ஒக்கும்; அஃதாவது பொருள் விளங்கியும், விளங்காதும் நிற்கும்' என்பதாம்.*

***கண்ணி - 150, 151 :*** *அருள், இங்குக் காதற் குறிப்பு. உச்சி - உச்சிப் போது; நண்பகல். உருவம் - சாயல். "வெப்பம் தீர்ந்து" என்பது, அதன் எதிர்மறையாகி 'குளிர்ச்சியைத் தந்து' எனப் பொருள் தந்தது. இவ்வெச்சம் "செம்மை" என்புழித் தொக்கு நின்ற 'உடைமை' என்னும் வினைக் குறிப்புப் பெயர் கொண்டது.*

***கண்ணி - 152 :*** *'பாதமும், அகங்கையும் தளிர் போன்றுள்ளன' என்பதாம். செம்மை - செம்மை நிறம்.*

***கண்ணி - 152, 153 :*** *அந்தம் - எல்லை. சீர் - அழகு. இதுகாறும் ஒருத்தியே பல சிறுபொழுதுகளைப் போலத் தோன்றுதலைக் கூறினார். இனிப் பெரும் பொழுதுகளைப் போலத் தோன்றுதலைக் கூறுவார்.*

***கண்ணி - 154 :*** *"பயோதரம்" என்பது 'கொங்கை' எனவும், 'மேகம்' எனவும் இருபொருளைத் தரும் ஆதலால் அது சிலேடையாயிற்று. ஆகவே, "கண் ஆர்" என்பதை, 'வானமாகிய இடத்து நிறைந்த' என மேகத்திற்கும், 'கண்ணிற்கு*

***தீர்த்தம்*** *: பொன்முகலி ஆறு. இது இவ்வூரில் வடக்கு நோக்கிச் செல்லும் சிறப்புடையது. 2. பிரம தீர்த்தம் 3. சரசுவதி தீர்த்தம் 4. சூரிய தீர்த்தம் முதலியன.*

*திருமால், பிரமதேவர், திருமகள், கலைமகள், திக்குப் பாலகர் முதலான தேவர்களும், அகத்தியர், வசிட்டர் முதலான முனிவர்களும், முசுகுந்தச் சக்கரவர்த்தி, நக்கீரர் முதலான பெரியோர்களும், வழிபட்டுப் பேறுபெற்ற தலம். அன்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கும் கண்ணப்ப நாயனார் வழிபட்டு இறைவனுடைய வலப்பக்கத்தில் நிற்கும் பெருஞ்சிறப்பு வாய்ந்த பதி. கண்ணப்பரது திருத்தொண்டைப்பற்றி 'வாய்கலசமாக வழிபாடு செய்யும் வேடன் மலராகு நயனம், காய்கணையினாலிடந்து ஈசனடி கூடு காளத்தி மலையே' எனத் திருஞானசம்பந்தப் பெருமானும்,*

*'பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்*
*செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்*
*விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்*
*கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ'*

*என வாதவூரடிகளும் சிறப்பித்துப் பாடியுள்ளனர். இத்தலத்திற்கு வீரைநகர் ஆனந்தக் கூத்தர் பாடிய திருக்காளத்திப் புராணம் ஒன்றும் கருணைப் பிரகாசர், சிவப்பிரகாசர், வேலப்ப தேசிகர் இவர்கள் மூவரும் சேர்ந்து பாடிய தலபுராணம் ஒன்றும், சேறைக்கவிராசர் பாடிய உலாஒன்றும், நக்கீரதேவர் பாடிய கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி ஒன்றும் ஆக நான்கு நூல்கள் இருக்கின்றன. இவைகளன்றி ஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு. திருநாவுக்கரசு நாயனார் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக நான்கு பதிகங்கள் இருக்கின்றன.*

***கல்வெட்டு :***

*இவ்வூர்ப் பாடல்பெற்ற கோயிலில் சோழமன்னர்களில் முதலாம் இராஜராஜ சோழன், முதலாம் இராஜேந்திர சோழதேவன், முதலாம் இராஜாதிராஜ தேவன், இராஜகேசரி வர்மனாகிய வீரராஜேந்திரன், முதற் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன், திரிபுவனச் சக்கரவர்த்தி இராஜாதிராஜ தேவன், திரிபுவனச் சக்கரவர்த்தி வீரராஜேந்திர சோழதேவன், இவர்கள் காலங்களில் விஜயநகர வேந்தர்களில், வீரப்பிரதாப ஹரிஹரராயர், வீரப்பிரதாப தேவராயர், வீரப்பிரதாப வீரகிருஷ்ணன் தேவராயர், வீரசதாசிவ மகாராயர் முதலானோர் காலங்களிலும் காகதீய வம்சத்துக் கணபதி காலங்களிலும் மற்றும், விஜயகண்ட கோபால தேவன், ஆளும் திருக்காளத்தித் தேவனாகிய கண்டகோபாலன் இவர்கள் காலங்களிலும் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.*

*இக்கோயில் கல்வெட்டுக்களில் இறைவர் திருக்காளத்தி உடைய நாயனார், திருக்காளத்திச் சிவனார், ஆளுடையார், தென்கயிலாயமுடையார் என்னும்*

பெயர்களாலும், விடங்கர், சோதி விடங்கர் என்னும் பெயராலும் கூறப் பெற்றுள்ளனர்.

**திருவிழா**

திருக்காளத்தி உடையார்க்கு வைகாசியில் திருவிழா நடைபெற்று வந்தது. அவ்விழா முட்டாமல் நடைபெறுவதற்கு நரசிங்க காளத்தி தேவனான யாதவராசன் சயங்கொண்ட சோழமண்டலத்துத் திருவேங்கடக் கோட்டத்து கருப்பற்று நாட்டு வெண்ணெய் நல்லூரைத் தட்டார் பாட்டம், தறிஇறை, வெட்டி முட்டையாள், பட்டிக்காசு காணிக்கை, கன்மிப்பேறு மற்றும் எப்பேர்ப்பட்ட வரிகளும் அகப்பட தேவதானமாக விட்டிருந்தாள்.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோதிவிடங்கர். எட்டாந் திருநாளில் திருவீதிக்கு எழுந்தருளி, திருச்சாந்து கற்பூர வெள்ளைச் சாத்தித் திருவுலாப்புறம் செய்து, தோசை, திருக்கண்ணமுது இவைகளை அமுது செய்தருளுவது வழக்கம். அதன் பொருட்டுப் பொலியூட்டாக நூறு பணம் அளிக்கப் பெற்றிருந்தது. இக்கோயிலில் மாசித் திருவிழாவும் மிகச் சிறப்பாய் நடைபெற்று வந்தது. அவ்விழாவின் ஏழாம் நாளில் இமையோர்கள் நாயகர் திருவீதிக்கு எழுந்தருளி, திருக்கல்யாணம் பண்ணி, திருவூடல் தீர்த்து திருக்கோயில் வாசலில் பலிபீடத்தண்டையில், திருவாலத்தில் தட்டம் எடுத்த பிறகு அத்தேவர் தோசை அமுது செய்தருளுவது உண்டு. அதன் பொருட்டும் நிவந்தம் செய்யப் பெற்றிருந்தது.

**திருமடம்**

திருக்காளத்தி உடையார் கோயிலில் மலைமேல் ஒரு மடம் இருந்தது. அது சசிகுல சளுக்கி வீரநரசிங்க தேவன் திருக்காளத்தித் தேவனான யாதவராயனால் கட்டப்பெற்றது. அம்மடத்தில் மாகேஸ்வரருக்குச் சோறிட பெரும்பூண்டி நாட்டுப் பொன்னையன் பட்டு என்னும் ஊரின் நாற்பால் எல்லைக்கு உட்பட்ட நன்செய் புன்செய் நிலத்தை மேற்கூறப்பெற்ற வீரநரசிங்க தேவன் இராசராச தேவரின் 15ஆம் ஆண்டில் கொடுத்திருந்தான்.

இதுவன்றித் தியாகமேகன்மடம் ஒன்று இருந்தது. இதில் நாள் ஒன்றுக்கு முப்பது தேசாந்திரிகளுக்குச் சோறும், ஐந்து பிராமணர்களுக்கு அரிசியும் இடுவதற்கு உடலாக (மூலதனமாக) விசய கண்ட கோபால தேவரின் நான்காம் ஆண்டில் சயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழவளநாட்டுப் பேரூர் நாட்டு மதுரைவாய் திருநல்லுழான் திருநட்டப்பெருமாள் தியாகமேனன் நிவந்தம் அளித்திருந்தான்.

இக்கோயிலுக்கு வடக்குத் திருவீதியில் கூற்றுகைத்தான் சோமதேவர் மடம் என்று ஒன்று இருந்தது.

**திருநந்தவனம்**

*திருக்காளத்தி உடைய நாயனாரின் திருமலை அடிவாரத்தில் வீரநரசிங்க தேவன் திருநந்தவனம் என்னும் பெயருள்ள நந்தவனம் இருந்தது. அது சசிகுலசளுக்கி வீரநரசிங்க தேவனான யாதவராயனால் ஏற்படுத்தப்பட்டது. அதன் பொருட்டு வீரநரசிங்க தேவன் ஆற்றூர் நாட்டுக்கோன்பாக்கத்திலும், திருக்காளத்திப் புத்தூரிலும் நெல்வாயிலிலும், தனக்குக் கிடைக்கும் நன்செய் நிலத்தில் பத்தில் ஒன்றாய் வந்த பாடிகாவல் கடமை, பொன் ஆயம், நெல்லாயம் இவைகளை உடலாக விட்டிருந்தான். ஆலால சுந்தர நந்தவனம் என்று ஒன்று இருந்ததை முதற்குலோத்துங்க சோழனின் 49ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. ஒரு கமுகம் தோட்டத்திற்கு கண்ணப்ப தேவர் பெயர் வைக்கப் பெற்றிருந்தது.*

**நூற்றுக்கால் மண்டபமும், பெரியகோபுரமும்**

*இக்கோயிலிலுள்ள நூற்றுக்கால் மண்டபத்தையும், பெரிய கோபுரத்தையும் கட்டியவர் விஜயநகர வேந்தனாகிய வீரப்பிரதாப கிருஷ்ணதேவராயர் ஆவர். இதை இக்கோயிலில் சகம் 1438-இல் செதுக்கப்பட்ட தெலுங்குக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.*

**கண்ணப்பர் கோவில்**

*இக்கோவில் மண்டபமும் மண்டபத்தைச் சுற்றிய தாழ்வாரமும் ஆடவல்லான் கங்கை கொண்டானாகிய இருங்கோளன் தாயாராகிய புத்தங்கையாரால் கட்டப்பெற்றது.*

**இவ்வூரிலுள்ள வேறு கோயில்**

*இவ்வூரில் திருமணிக்கெங்கையுடைய வேறு கோயில் ஒன்று உண்டு. திரிபுவனச் சக்கரவர்த்தி வீரராஜேந்திர சோழதேவரின் பதினொன்றாம் ஆண்டில், சயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து வல்லம் நாட்டுப் பெருந்தண்டலத்துக் கோறுழான அமுதாழ்வான் மங்கை நாயகன் மழவராயனால் அக்கற்றளியும் திருமண்டபமும், சோபானமும் கட்டப்பெற்றதாகும்.*

*இக்கோயிலில் தனி இடத்தில் சசிகுலசளுக்கி தனிநின்று வென்றானாகிய வீரநரசிம்ம தேவனாகிய யாதவராசன் மல்லிகார்ச்சுனரை எழுந்தருளு வித்திருந்தான்.*

**இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு**

*இவ்வூர் சயங்கொண்ட சோழமண்டலத்து, திருவேங்கடக் கோட்டத்து, ஆற்றூர் நாட்டுத் திருக்காளத்தி என இக்கோயில் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்றுள்ளது. திருக்காளத்தி முதற் குலோத்துங்க சோழன் காலத்தில்*

*காளத்தியாகிய மும்முடிச் சோழபுரம் என்றும் வழங்கப்பெற்றிருந்தது.*

***பிறசெய்திகள்***

*முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் இக்கோயிலில் கிருத்திகைத் தீப விழாவைப்பற்றிக் கூறப்பெற்றுள்ளது. அதற்குக் கங்கைகொண்ட சோழ மிலாடுடையான் நிவந்தம் அளித்திருந்தான். கண்ணப்பர் பிறந்தநாடு பொத்தப்பி நாடு என்று சேக்கிழார் கூறியுள்ளார். அப்பொத்தப்பி நாடு இவ்வூர்க் கல்வெட்டிலும் குறிக்கப்பெற்றுள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாட்டுத் தொகையில் புரிசை நாட்டுப்புரிசை எனக் குறிப்பிட்டுள்ளார். அப்புரிசை நாடு மணவில் கோட்டத்தில் உள்ளது என்பதையும் இக்கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.*

*அளவு கருவிக்குக் காளத்தியுடையான் மரக்கால் என்றும், ஒரு தலைவனுக்குத் திருக்காளத்தி தேவன் என்றும், திருவிளக்குக்கு குடிகளில் ஒருவனுக்கு மன்றாடி காரிசாத்தன் திருக்காளத்தி கோன் என்றும் பெயர்கள் வைக்கப்பெற்றிருந்தன. மூன்றாம் பிராகாரத்தில் உள்ள மண்டபம் சின்னையா மண்டபம் எனப் பெயர் பெற்றுள்ளது.*

*திருநுந்தாவிளக்குகளுக்கும், திருமந்திர போனக புறத்திற்கும் நிபந்தங்கள் மிகுதியாக அளிக்கப்பெற்றுள்ளன. ஒரு நுந்தா விளக்கினுக்கு விடப்பெறும் சாவா மூவாப்பசு 32 - ஆகும். ஆடு ஆயின் 96 ஆகும். 96 - ஆடு விடுபவர் பொலிகிடா இரண்டும், பொலி மொத்தை இரண்டும் விடுவது வழக்கம்.*

*நுந்தா விளக்கேயன்றி சந்தி விளக்கும் வைப்பதுண்டு. ஒரு சந்தி விளக்குக்கு ஐந்து நற்பழங்காசு அளிப்பதுண்டு. 32 - பசுமாடு விடுபவர் ரிஷபம் ஒன்றையும் விடுவர்.*

*5 ஆண்டுகளுக்கு முன்பு மிகப்பெரிய வெளிப் பிரகார இராஜ கோபுரம் முற்றிலுமாக கீழே விழுந்துவிட ஆந்திர மாநில அரசு முழு முயற்சி செய்து அந்தக் கோபுரத்தை மீண்டும் கட்டியுள்ளது. தற்போது இந்தக்கோயில் ஆந்திர மாநில எல்லையில் ஆந்திர அரசின் நிர்வாகத்தின் கீழ் உள்ளது.*

***300. பொழிப்புரை :-*** *சொல், தூய்மையுடைய திரிசீலையாகவும், பொருள் நெய்யாகவும் என் நாக்கு நல்ல அகலாகவும் கொண்டு சொல்லுதற்கருமையான வெண்பா என்னும் விளக்கை, பெருமையுடைய கயிலை மலை மேல் எழுந்தருளியிருக்கும் உமாதேவியை இடப்பாகத்தில் கொண்டுள்ள சிவபெருமானுக்கு ஏற்றினேன்.*

***குறிப்புரை :-*** *"பெற்று" என்பதை "விளக்கா" என்பதன்பின் கூட்டுக. 'ஆக' என்னும் உருவக உருபு ஈறு குறைந்து நின்றது. வெண்பாவை விளக்காகக் கூறியது புற இருளைப் போக்கும் விளக்குப் போல் அக இருளாகிய அஞ்ஞானத்தை நீக்குதல் பற்றி. அதனால், இப்பிரபந்தத்தால் பெறும் பயன் அஞ்ஞான இருள்*

காளத்தி

301 பெற்ற பயன்இதுவே யன்றே பிறந்தியான்;
கற்றவர்கள் ஏத்துஞ்சீர்க் காளத்திக் – கொற்றவர்க்குத்
தோளாகத் தாடரவம் சூழ்ந்தணிந்த அம்மானுக்(கு)
ஆளாகப் பெற்றேன் அடைந்து. 2

---

*நீங்க, மெய்ஞ்ஞான ஒளியைப் பெறுதலாயிற்று. இடிஞ்சில் - அகல்.*

*எரிகின்ற திரிக்கு முதல் நெய்யாதல்போல விளங்குகின்ற சொல்லுக்கு முதல் பொருளாதல் பற்றி அவற்றை முறையே திரி நெய்களாகவும், நெய்யிற் பொருந்தி எரியும் திரிக்கு நிலைக்களன் அகலாதல் போலப் பொருளை விளக்கும் சொல்லுக்கு நிலைக்களன் நாவாதல் பற்றி அதனை அகலாகவும் திரி, நெய், அகல் இம்மூன்றானும் தோன்றுவது (ஒளிர்வது) விளக்காதல் போலச் சொல், பொருள், நா இம்மூன்றானும் தோன்றுவது இப்பிரபந்த வெண்பாக்கள் ஆதல்பற்றி அவற்றை விளக்காகவும் உருவகித்தார். சிவனுக்குச் செய்யும் திருப்பணிகளுள் திருவிளக்கேற்றும் பணி சிறப்புடைத்து. எனினும் புற இருளை நீக்கும் விளக்கை ஏற்றுதலினும் அக இருளை நீக்கும் இவ்விளக்கை ஏற்றியது மிகச் சிறந்த பணியாதலையறிக. வியல் - அகலம். அஃது உரிச்சொல் ஆதலின், அதன் ஈற்று லகரம் னகரமாய்த் திரிதல் புறநடையாற் பெறப்படும்.*

***301. பொழிப்புரை :-** நான் இவ்வுலகில் பிறந்து கற்றவர்கள் ஏத்துகின்ற சிறப்புடைய காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் வெற்றி பொருந்தியவரும் தோளிலும் மார்பிலும் ஆடுகின்ற பாம்பை அணிந்திருப்பவருமாகிய அம்மானுக்கு ஆளாக அடைந்தேன். இது யான் பெற்ற பெரும் பயன் அல்லவா? என்று முடிக்க*

***குறிப்புரை :-** 'யான் பிறந்து பெற்ற பயன் இதுவே' என மாற்றி, அதனை இறுதியிற் கூட்டுக. 'அம்மானையடைந்து அவனுக்கு ஆளாகப் பெற்றேன்' என்க. கொற்றவர் - அரசர்; உடையவர். "ஆடு அரவம்", வினைத்தொகை. "சூழ்ந்து" என்பதன்பின் 'இருக்க' என ஒரு சொல் வருவிக்க. அன்றி, "சூழ்ந்து" என்பதனைப் பிறவினையாகக் கோடலும் ஆம். ஆகம் - உடம்பு. அது முதலாகு பெயராய் அதன் உறுப்பைக் குறித்தது. 'ஆடு அரவத்தைத் தோளாகிய ஆகத்தில் சூழ்ந்து இருக்க அணிந்த அம்மான்' என்றபடி.*

***302. பொழிப்புரை :-** உன் உயிரைத் தோண்டி எடுத்துண்ண எண்ணிய கொடிய எமன், குடைந்து கண்ணால் பார்க்கும் சமயத்தில் கயிலாயத்து அண்ணலே பாதுகாப்பாவான் என்பதைக் கண்டீர்கள். ஆதலால் அந்தப் பெருமானையே அடைந்து பிழையுங்கள்.*

***குறிப்புரை :-** 'அவ்வம்மானை அடைந்து, உய்ம்மின்' எனச் சுட்டு வருவித்து*

கயிலை

302. அடைந்துய்ம்மின் அம்மானை; உம் ஆவி தன்னைக்
குடைந்துண்ண எண்ணியவெங் கூற்றங்கு – அடைந்தும்
கண்ணுளே பார்க்கும் பொழுது கயிலாயத்(து)
அண்ணலே கண்டீர் அரண். 3

காளத்தி

303. அரணம் ஒருமூன்றும் ஆரழலாய் வீழ
முரணம்பு கோத்த முதல்வன் – சரணமே
காணுமால் உற்(று) அன்றன் காளத்தி கைதொழுது
பேணுமால், உள்ளம் பெரிது. 4

---

*மாற்றி, இறுதிக்கண் கூட்டி யுரைக்க. "அடைந்து" என்றது, 'அதற்கு முன்னே அடைந்து' என்றபடி. எனவே, 'அதற்குமுன்னே' என்பது சொல்லெச்சமாம். குடைதல் உள்ளகத்துப் பற்றின்றி நீங்க வாங்குதல். உண்ணுதல், அழித்தலைக் குறிக்கும் இலக்கணச் சொல் அங்கு - உண்ணுதற்குரிய காலத்தில். "நுங்கண்" என்பதில் கண், ஏழன் உருபு. 'எண்ணிய கூற்று', எண்ணியதனை முடிக்க உள்ளிடத்தைப் பார்க்கும் என்க. கண்டீர், முன்னிலையசை. அரண் - பாதுகாப்பு.*

***303. பொழிப்புரை :-*** *மூன்று மதில்களும் நிறைந்த நெருப்பால் அழிய, வலிமையுள்ள கணையைத் தொடுத்த முதல்வன் சரணத்தைக் காண வேண்டும் என்னும் விருப்பம் கொண்டு சென்று அவனுடைய காளத்தி மலையைக் கைதொழுது வணங்க உள்ளம் பெரிதும் விரும்பும்.*

***குறிப்புரை :-*** *ஆர் அழல் - தணித்தற்கு அரிய நெருப்பு. முரண் - வலிமை. சரணம் - பாதம். காணும் மால் - காண எழுந்த மயக்கம் - பித்து; பேரவா பேணும் - மறவாது நினைக்கும். 'உள்ளம் பெரிது பேணும்' என இயைக்க. ஆல், அசை.*

***304. பொழிப்புரை :-*** *பெரியோர்களே! காணுங்கள், தேவர்களாலும் காண இயலாத தேவனும் மிகவும் சிவஞானப் பெருஞ் செல்வத்தினை யுடையவர்கள் வணங்குகின்ற திருக்கயிலையில் கோயில் கொண்டிருப்பவனுமாகிய சிவபெருமானை என் உள்ளத்தில் வீற்றிருக்குமாறு வைக்க என் உள்ளம் விழைகிறது என்க.*

***குறிப்புரை :-*** *பெரியவர் - பெரியவர்களே, (சிவனடியார்களே) இஃது அண்மை விளி காணீர் - அறிமின் இதனை இறுதிக்கண் கூட்டுக. இருத்துதல் - இருக்கவைத்தல் "இடம் போந்தது" என மாற்றுக. போந்தது - அமையப் பெற்றது. 'திருக்கயிலைக் கோனை இருத்துதற்கு மட்டுமே இடம் அமையப் பெற்றது;*

கயிலை

304. பெரியவர், காணீர்என் உள்ளத்தின் பெற்றி
தெரிவரிய தேவாதி தேவன் – பெரிதும்
திருத்தக்கோர் ஏத்தும் திருக்கயிலைக் கோனை
இருத்தத்தான் போந்த(து) இடம். 5

காளத்தி

305. இடப்பாகம் நீள்கோட் டிமவான் பயந்த
மடப்பாவை தன்வடிவே யானால், – விடப்பாற்
கருவடிசேர் கண்டத்தெம் காளத்தி ஆள்வார்க்(கு)
ஒருவடிவே அன்றால் உரு. 6

---

*மற்றொன்றை இருத்த இடம் அமையப் பெறவில்லை; இஃது என் உள்ளத்தின் பெற்றி; காணீர்' என வினை முடிக்க. பெற்றி - தன்மை. 'சிவபெருமானைத் தவிரப் பிறிதொன்றை நினையாத தன்மையுடைத்து' என நெஞ்சின் தன்மையைக் குறிப்பால் வியந்தவாறு. பிறிதொன்றற்கு இடம் அமையப் பெறாமையைக் குறை போலக் கூறினமையின், இது பழிப்பதுபோலப் புகழ்த்திறம் புனைந்ததாம். பெரிதும் தக்கோர் - மிகவும் தக வாய்க்கப் பெற்றவர். திரு - திருவருள். 'திரு பெரிதும் தக்கோர்' என மாறிக் கூட்டுக. "திருத்தக்கோர் ஏத்தும்" என்றமையால், முன்னர், "தெரிவரிய" என்றது, திருவாய்க்கப் பெறாதவரை நோக்கியாயிற்று.*

*305. பொழிப்புரை :- இறைவனது இடப்பாகம் நீண்ட சிகரங்களையுடைய இமவான் பயந்த உமாதேவியாரின் வடிவமாகும். நஞ்சின் பகுதியால் கருமை நிறம் கொண்ட கழுத்தினையுடைய காளத்தியப்பனுக்கு உருவம் ஒரு வடிவினை உடையதன்று.*

*குறிப்புரை :- விடப்பால் - நஞ்சு பொருந்திய பகுதி. 'விடப்பாலாய்' என ஆக்கம் வருவிக்க. வடி - வடிவு; கடைக் குறை. "பாகம்" என்பது ஆகுபெயராய், பாகமாகிய வடிவையே குறித்தது. 'இடப்பாகமாகிய வடிவம் பாவை வடிவேயானால், காளத்தி ஆள்வார்க்கு உரு ஒருவடிவே யன்று' (இருவடிவு) என்பதாம். இமம் - பனி. அஃது ஆகு பெயராய், அதனை உடைய மலையைக் குறித்தது. நீள் கோடு - உயர்ந்த சிகரங்கள். இது 'பனி' என்னும் ஆகுபெயரைச் சிறப்பியாது, அதன் பொருளைச் சிறப்பித்தலின், "நீள் கோட்டு இமம்" என்றது, இரு பெயரொட்டு ஆகுபெயர், அல்லது பின்மொழியாகுபெயர். இமவான் - இமயமலையைத் தனதாக உடையவன்; மலையரையன். மடம் - இளமை. தன், சாரியை. "ஆனால்" என்பது தெளிவின்கண் வந்தது.*

*306. பொழிப்புரை :- பல உருவங்கொண்டு அறிய முடியாதவாறு இருக்கும் ஒருவன் ஒரு பக்கத்தில் வீற்றிருப்பது, மணமுள்ள இனிய பூக்களைக் கையிற்*

கயிலை

**306.** உருவு பலகொண் டுணர்வரிதாய் நிற்கும்
ஒருவன் ஒருபால் இருக்கை – மருவினிய
பூக்கயிற்கொண் டெப்பொழுதும் புத்தேளிர் வந்திறைஞ்சும்
மாக்கயிலை என்னும் மலை. 7

காளத்தி

**307.** மலைவரும்போர் வானவரும், தானவரும் எல்லாம்
அலைகடல்வாய் நஞ்செழல்கண் டஞ்சி – நிலைதளரக்
கண்டமையால் தண்சாரற் காளத்தி ஆள்வார்நஞ்(சு)
உண்டமையால் உண்டிவ் வுலகு. 8

---

*கொண்டு எப்போதும் தேவர்கள் வந்து வணங்குகின்ற பெருமை பொருந்திய கயிலை என்னும் மலையாகும்.*

*குறிப்புரை :- "கொண்டு" என்பது, 'கொள்ளுதலால்' எனக் காரணப் பொருளில் வந்த செய்தென் எச்சம் "அரிது" என்பது அப்பண்பின்மேல் நின்று ஆகுபெயராய் அதனை உடையானைக் குறித்தது. பல்வேறு நிலைகளில் பல்வேறு வடிவங்களுடன் தோன்றுதலால், அவனை, இன்ன உரு உடையவன் என அறுதியிட்டுணர்தல் அரிது என்பதாம். பால் - இடம். 'ஒருபால் ஆக' என ஆக்கம் விரிக்க. இருக்கை - இருக்குமிடம். ஒருபாலாக இருக்கை என்றும் நீங்காது நிலையாய் இருக்குமிடம். மரு - நறுமணம். 'கையில்' என்பது 'கயில்' எனப் போலியாய் வந்தது.*

*307. பொழிப்புரை :- மலையானது வருதலைப் போல, தேவர்களும் அசுரர்களும் அலைகளையுடைய கடலிலிருந்து ஆலகால விஷம் வருவதைக் கண்டு பயந்து, நிலை தளர்வதைக் கண்டு குளிர்ந்த சாரலையுடைய காளத்தியப்பர் நஞ்சை உண்டமையால் இவ்வுலகு நிலை பெற்றிருக்கின்றது.*

*குறிப்புரை :- மலைவு அரும்போர் - வேறு இரு திறத்தினர் செய்தற்கரிய போர். அதனையுடையார் வானவரும், தானவரும். 'மாலை வரும் போல்' என்பது பாடம் அன்று. 'வானவரும், தானவரும் ஆகிய எல்லாரும்' என்க. எனவே எஞ்சினார் ஒருவரும் இல்லையாயிற்று. "எல்லாம் அஞ்சி நிலை தளர" என்றது, உலகம் நிலையாது அழியும் நிலையாமையைக் கண்ட காரணத்தால் அவர்கள்மேல் அருள் மீக்கூரச் சிவபெருமான் நஞ்சினை உண்டான்' என்றற்கு, "கண்டமையால் நஞ்சு உண்டமையால்" என்றார். 'காளத்தி ஆள்வார் நஞ்சு உண்டமையாலே இவ்வுலக்கு உளதாயிற்று' என்பது இனிது விளங்குதற் பொருட்டு முன் இரண்டு அடிகளைக் கூறினார். "உலகு" என்றது உயிர்த் தொகுதியை 'உண்டாயிற்று' என ஆக்கம் வருவிக்க.*

கயிலை

308. உலக மனைத்தினுக்கும் ஒண்ணுதல்மேல் இட்ட
திலக மெனப்பெறினும் சீசீ; – இலகியசீர்
ஈசா, திருக்கயிலை எம்பெருமான், என்றென்றே
பேசா திருப்பார் பிறப்பு. 9

---

*கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை*
*உண்மையான் உண்டிவ் வுலகு*[1].

*என உலகத்தின் நிலைபேற்றிற்கு கண்ணோட்டத்தினைக் காரணமாகக் கூறிய திருவள்ளுவர்,*

*அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு*
*ஐந்துசால்பு ஊன்றிய தூண்*[2].

*எனக் கண்ணோட்டத்தினைச் சால்பாகிய பாரத்தைத் தாங்கும் தூண்களுள் ஒன்றாகக் கூறி,*

*சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்*
*தாங்காது மன்னோ பொறை*[3].

*என, 'சான்றோர் தனது சான்றாண்மையைக் கைவிடின் உலகம் நிலை கலங்கிவிடும்' எனக் கூறியதையும், 'கண்ணோட்டத்தின் மேல் எல்லை நண்பர் பெயக் கண்டும் நஞ்சினை உண்டு அமைதலே'*[4] *எனக் கூறியதையும் ஊன்றியுணர்வார்க்கு இவ்வாசிரியர், "காளத்தி ஆள்வார் நஞ்சு உண்டமையால் உண்டிவ் வுலகு" எனக் கூறியது சிறிதும் வியப்பினைத் தராது. 'சிவபெருமானது திருவருளானே உலகம் உள்ளது' என்பது இவ்வெண்பாவின் ஆழ்ந்த பொருள்.*

***308. பொழிப்புரை :-** உலகம் அனைத்திற்கும் ஒளி பொருந்திய நெற்றியில் இட்ட திலகம் போன்று இருந்தாலும் பிறப்பு சீசீ என்று இகழத் தக்கது. விளங்குகின்ற சிறப்பினை உடைய ஈசன் திருக்கயிலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே என்று அறிவுடையோர் மவுனமாய் இருப்பர்.*

***குறிப்புரை :-** "எம்பெருமான்" என்றதும், "ஈசா" என்றதுபோல. 'எம்பெருமானே' என விளியேயாம். அடுக்குப் பன்மை பற்றி வந்தது. பேசுதல், இங்குத் துதித்தல். 'துதியா திருப்பார்' பிறப்புப் பிறவகையில் எல்லாம் உலகில் சிறந்து விளங்கிற்றாயினும் கண்ணிலா முகம்போல அருவருக்கப் படுவதேயாம்'*

---

1. *திருக்குறள் - 571*
2. *திருக்குறள் - 983*
3. *திருக்குறள் - 990*
4. *திருக்குறள் - 580*

காளத்தி

**309.** பிறப்புடையர், கற்றோர், பெருஞ்செல்வர், மற்றும்
சிறப்புடைய ரானாலும் சீசீ; – இறப்பில்
கடியார் நறுஞ்சோலைக் காளத்தி ஆள்வார்
அடியாரைப் பேணா தவர். **10**

கயிலை

**310.** அவரும் பிறந்தவராய்ப் போவார்கொல் ஆவி
எவரும் தொழுதேத்தும் எந்தை, – சிவம்மன்னு
தேக்குவார் சோலைத் திருக்கயிலை ஏத்தாதே
போக்குவார் வாளா பொழுது. **11**

---

*என்றபடி. "சீசீ" எனப்படுவதே' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

*309. **பொழிப்புரை :-** நற்குடிப் பிறப்புடையவர், கற்றவர், பெருஞ்செல்வர் மற்றும் சிறப்புடையர் ஆனாலும், அழிவில்லாத மணமிக்க சோலைகளையுடைய காளத்தி ஈஸ்வரனது அடியார்களை வழிபடாதவர்களின் பிறப்பு இகழத் தக்கது என்க.*

*குறிப்புரை :- பிறப்பு - குலம். அது தலைமை பற்றி மேற்குலத்தைக் குறித்தது. கற்றோர் - மிகக் கற்றவர். "சீசீ" என்பதற்கு, மேல் உரைத்தவாறு உரைக்க. இறப்பு - உயர்வு. 'தன்னின் உயர்ந்ததில்லாத காளத்தியாகிய தலம்' என்க. கடி - நறுமணம். நறு - நல்ல.*

*310. **பொழிப்புரை :-** எவரும் வணங்குகின்ற எம் தந்தையாகிய நன்மை நிலை பெற்ற தேன் ஒழுகுகின்ற பொழில்கள் நிறைந்த திருக்கயிலையை வணங்காமல் வீணாகக் காலத்தைக் கழிப்பவர் இவ்வுலகத்தில் பிறந்து நடமாடினாலும் பிணம் போல்வர் என்பது கருத்து.*

*குறிப்புரை :- 'சிலர்' என்னும் தோன்றா எழுவாய் வருவித்து, 'பொழுதுவாளா போக்குவார்; அவரும் பிறந்தாராய், ஆவிபோவார் கொல்' - என இயைத்து முடிக்க. ''ஆவி போவார்'' என்றது, 'இறப்பர்' என்னும் பொருட்டாய், 'இறத்தற்கே பிறந்தான்போலும்' எனப் பொருள் தந்தது. "பெயர்த்தும் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே"[1] என்னும் அப்பர் திருமொழியை இங்கு ஒப்பிட்டு நோக்குக. கொல், ஐயம் இன்றாயினும் உள்ளது போலக் கூறினமையின் ஐயப் பொருட்டு.*

*"அவரும்" என்னும் உம்மை, 'ஏத்துவாரோடு' என இறந்தது தழுவிற்று. சிவம் - மங்கலம். தேக்கு, ஒரு வகை மரம். வார் - நீண்ட.*

---

*1. திருமுறை - 6. 95. 6*

காளத்தி

**311.** **வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்**
**கோளர்கொல்; அந்தோ! கிறியப்பட்டார்; – கீளாடை**
**அண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுள்நின்ற**
**கண்ணப்ப ராவார் கதை.** **12**

---

*311. **பொழிப்புரை :-** மானிடர்கள் வீணாகக் காலத்தைக் கழிக்கின்றனர். பொய் வாழ்க்கையில் அகப்பட்டவர்கள் கேட்க மாட்டார்களோ! அந்தோ! கிழித்து உரித்த படியினால் வந்த ஆடையை யுடைய அண்ணற்கு நெருங்கிய அன்பராகில் காளத்தி கோயிலில் இருக்கின்ற கண்ணப்ப நாயனார் கதை போல் சிறப்பு உடையவர் ஆவார். (சுமார் 8 அடி உயரமுள்ள கண்ணப்பர் கற்சிலை காளத்தி கோயிலில் உள்ளது).*

***குறிப்புரை :-*** *"மானுடவர்" என்பதை முதலிற் கொள்க. பொழுது - கிடைக்கப் பெற்றுள்ள காலம், 'அதனை வாளா கழிக்கின்றார்; அந்தோ! கிறிப்பட்டார்; கண்ணப்பராவார் கதை கேளார்கொல்' என இயைத்து முடிக்க. காலம் இல்லாமற் போகவில்லை; கேட்டலைச் செய்தல் அரிதன்று; ஆயினும் கேட்டுப் பயனடைகின்றிலர்; கிறி - பொய்; உலக வாழ்க்கை. 'கிறிக்கண்பட்டார்' என ஏழாவது விரிக்க. அந்தோ, இரக்க இடைச்சொல், "ஆவார்" என்பது எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. "ஆவார்" என்ற எதிர்காலம் முக்காலத்திற்கும் பொதுவாய் நின்றது. 'ஒருபோதும் கேளார்போலும்' எனப் பொருள் தந்து நிற்றலின், ஐயப் பொருட்டு, 'கண்ணப்பர் கதையைக் கேட்டலாகிய சிறு முயற்சியைச் செய்து பெரும்பயன் பெறலாய் இருக்க. ஆறறிவு படைத்த மக்களிற் பலர் அதனைச் செய்யாது காலத்தை வீணே கழிக்கின்றனர்' என இரங்கியவாறு. கீள் - அரைநாண் அளவாகக் கட்டும் சீலை. 'கீளாகிய ஆடை' என்க.*

*312. **பொழிப்புரை :-** பாரதக் கதையில் கேளுங்கள். கயிலாயத்தை நோக்கி மிகுந்த இருளில் மாலின் பிறப்பாகிய கண்ணனோடும் சென்று, அழிவு படாத சிறப்பினையுடைய தூய்மை உடையவனாகிய சிவபெருமானிடம் பசுபதியாகிய இறைவன் கணையைப் பெற்று, போர்க்களத்தில் அருச்சுனன் முன்பு வெற்றி பெறவில்லையா?*

***குறிப்புரை :-*** *'பண்டு பார்த்தன் இருட்கண் கயிலாயம் நோக்கி மாலோடும் போய்த் தீர்த்தன்பால் பாசுபதம் பெற்றுச் செருக்களத்தில் வென்றிலனோ! (அதனைக்) கதையிலே கேளீர்' என இயைத்து முடிக்க.*

*கதை, பாரதக் கதை. பார்த்தன் (அருச்சுனன்) முதற்கண் பெற்ற பாசுபதாத்திரத்தை இந்திரன் பொருட்டாக, 'நிவாத கவசர், கால கேயர்' என்னும் அசுரர்மேல் ஏவி அவர்களை அழித்ததனால் அவ் அத்திரம் முண்டு கயிலாயத்திற்குச் சென்றுவிட, மறுபடியும் அவன் பதின்மூன்றாம் நாட் போர்*

கயிலை

312. கதையிலே கேளீர்; கயிலாயம் நோக்கிப்
புதையிருட்கண் மாலோடும் சென்று – சிதையாச்சீர்த்
தீர்த்தன்பால் பாசுபதம் பெற்றுச் செருக்களத்தில்
பார்த்தன்போர் வென்றிலனோ பண்டு. 13

---

*முடிந்தபின் இரவில் கண்ணனுடன் கயிலைக்குச் சென்று சிவபெருமானை வணங்கி அவ்அத்திரத்தைப் பெற்று வந்து, பதின்மூன்றாம் நாட்போரில் தான் செய்த சபதப்படியே, தன்மகன் அபிமன்னுவைக் கொன்ற சயந்திரதனைப் பதினாலாம் நாள் சூரியன் மறைவதற்குள் கொன்று வெற்றி பெற்றான். இக்கதையே இவ்வெண்பாவிற் குறிக்கப்பட்டது.*

*அருச்சுனன் சயந்திரதனைக் கொன்றதில் ஓர் அதிசயம் உண்டு. அருச்சுனன் செய்த சபதத்தைக் கேட்டுச் சயந்திரதன் தந்தை, 'தன் மகனை நாளைப் பகலுக்குள் எப்படியும் அருச்சுனன் கொன்று விடுவான்; அவனுக்குச் சிவன், மால் இருவர் துணைகளும் உண்டு' என்று அஞ்சி, சமந்த பஞ்சக மடுவில் இறங்கி, 'என் மகன் தலையைத் தரையில் எவன் வீழ்த்துகின்றானோ அவன் தலை அப்பொழுதே சுக்கு நூறாய் வெடித்துச் சிதறுக' என மந்திரம் செபித்துக் கொண்டிருந்தான் இறுதி நிலையில் அருச்சுனன் சயந்திரதன் தலையை அம்பினால் வீழ்த்த முயன்ற பொழுது, கண்ணன், 'இவன் தலையை வீழ்த்துதல் மட்டும் உனக்கு வெற்றியாகாது; அந்தத் தலை மடுவில் செபம் செய்து கொண்டிருக்கும் இவன் தந்தை கையில் போய்ச் சேர வேண்டும்' என்றான். அருச்சுனன் அப்பொழுது பாசுபதாத்திரத்தை எடுத்து மந்திரித்துத் தன் கருத்தை முடிக்க வேண்டி ஏவ, அது சயந்திரன் தலையைக் கொய்து கொண்டுபோய் கண்ணைமூடிக் கொண்டு செபம் செய்யும் அவன் தந்தை கையில் சேர்த்தது. அவன் 'ஏதோ பொருள்' என்று அந்தத் தலையைத் தரையிலே விடுத்தான். அதனால், அவனது மந்திர செபம் அவனுக்கே பலிக்க, அவன் தலை சுக்கு நூறாய் வெடித்துச் சிதறியது. இச்செயல் பாசுபதம் இல்லையேல் அருச்சுனனால் செய்திருக்க முடியாது அதனையே, "பாசுபதம் பெற்றுப் பார்த்தன் போர் வென்றிலனோ பண்டு" என இவ்வாசிரியர் சிறந்தெடுத்து மொழிந்தார். 'பெருமானை வணங்குவோர் செயற்கரிய செயலையும் செய்ய வல்லராவர்' என்பது இதன் கருத்து.*

*புதை யிருள் - மிக்க இருள். மால், கண்ணன். தீர்த்தன் - பரிசுத்தன்; சிவபெருமான். பார்த்தன் - அருச்சுனன்.*

*313. பொழிப்புரை :- முன்கால முதல் நினைந்து உன்னுடைய பாதங்களுக்கே வழிபாடு செய்யத் தொடர்ந்து பற்றுகின்ற என்னைக் கண்டு அருள் செய்யத் தயவு உண்டோ இல்லையோ சொல்வாயாக. காளத்தியில் குடி கொண்டிருப்பவனே உன் கருத்து யாது?*

காளத்தி

313. பண்டு தொடங்கியும், பாவித்தும் நின்கழற்கே
தொண்டு படுவான் தொடர்வேனைக் – கண்டுகொண்(டு)
ஆளத் தயாஉண்டோ, இல்லையோ ? சொல்லாயே
காளத்தி யாய்உன் கருத்து. 14

கயிலை

314. கருத்துக்குச் சேயையாய்க் காண்தக்கோர் காண
இருத்தி திருக்கயிலை என்றால் – ஒருத்தர்
அறிவான் உறுவார்க்(கு) அறியுமா றுண்டோ,
நெறிவார் சடையாய் நிலை! 15.

---

*குறிப்புரை :- "பண்டு" என்றது இளமைக் காலத்தை. 'தொடர்ந்து பாவித்தும்' என ஒருசொல் வருவிக்க. பாவித்தல் - நினைத்தல். இளமை தொட்டே இடைவிடாது நினைத்து வருதலை இவ்வாறு கூறினார். உம்மைகள் எண்ணும்மைகள். தொடர்தல் - பற்றி நிற்றல். "கண்டு கொண்டு" என்பதில் கொள். தற்பொருட்டுப் பொருண்மை விகுதி - அதனால், 'பிறர் வலிந்து காட்டாது, நீயே கண்டு' என்றாதாயிற்று 'வலிந்து காட்டின் தயா இல்லையாகும்' என்பது பற்றி, 'நீயே கண்டு கொண்டு ஆள வேண்டும்' என்றார். "சொல்லாயே" என்பதை இறுதியிற் கூட்டுக. ஏகாரம் இரண்டனுள் முன்னது பிரிநிலை. பின்னது அசை.*

*314. பொழிப்புரை :- எண்ணத்துக்குத் தொலைவானவனாகி, காணத் தகுதி உடையவர்கள் காண்பதற்குத் திருக்கயிலையில் இருப்பாய் என்றால் நன்றாக நீண்ட சடையினை உடையாய்! உன்னை அறிய விரும்புகின்றவர்களுக்கு அறியும் வழி உண்டோ?*

*குறிப்புரை :- "காண் தக்கோர் காண" எனப் பின்னர் வருதலால், முன்னர், "கருத்துக்கு" என்றது 'காணத் தகாதார் கருத்துக்கு' என்றதாயிற்று. தகுதி அன்பு.*

*"காண்டற் கரிய கடவுள் கண்டாய்;*
*கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்"[1]*

*என்ற அப்பர் திருமொழியையும் காண்க. இருத்தி - இருக்கின்றாய் 'திருக்கயிலைக்கண்' என ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'அறிவான் உறுவார் ஒருத்தர்க்கு' எனப் பின்முன்னாக வைத்து, உருபினை மாறிக் கூட்டுக. அறிவான் - அறிதற்கு. உறுவார் - முயல்வார், "நிலை அறியுமாறு உண்டோ" என முன்னே கூட்டி முடிக்க. "நெறி" என்பது, "சடை" என்பதனோடு, 'நெறித்த' என இறந்தகால வினைத்தொகைப் பொருட்டாய்த் தொக்கது. நெறித்தல் - மேடும், பள்ளமுமாய்,*

---

*1. திருமுறை - 6. 23. 1*

காளத்தி

**315.** நிலையில் பிறவி நெடுஞ்சுழியிற் பட்டுத்
தலைவ தடுமாறு கின்றேன்; – தொலைவின்றிப்
போந்தேறக் கைதாராய்; காளத்திப் புத்தேளிர்
வேந்தே இப் பாசத்தை விட்டு. **16**

கயிலை

**316.** பாசத்தை விட்டுநின் பாதத்தின் கீழே, என்
நேசத்தை வைக்க நினைகண்டாய்; – பாசத்தை
நீக்குமா வல்ல கயிலாயா, நீஎன்னைக்
காக்குமா(று) இத்தனையே காண். **17**

---

*நீண்டு வளர்தல். வார் - நீண்ட, உரிச்சொல். "சடையாய்" என்பது, முன்னிலை வினைக் குறிப்புப் பெயர். 'சடையாவது நிலை' என ஆறாவது விரிக்க. 'நிலையை' என இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. தகுதியில்லார்க்கு ஓரிடத்தும் காணப்படாது, தகுதியுடை யார்க்கும் திருக்கயிலையிலே காணப்படுகின்றாய். என்றால், 'இவ்வுலகிலே உன்னைக் கண்டுவிடலாம்' என நினைதல் எங்ஙனம் கூடும் - என்பதாம்.*

*315. **பொழிப்புரை :-** நிலையற்ற பிறவியாகிய நெடுஞ்சுழியில் அகப்பட்டு, தலைவனே! தடுமாறுகின்றேன். முடிவில்லாமல், வீடு பேறாகிய கரையில் வந்து ஏற கை கொடுப்பாயாக. காளத்தியில் எழுந்தருளி இருக்கும் தேவர்களுடைய அரசனே! இப்பாசத்தை விட்டுக் கடைத்தேற வழி செய்வாயாக என்பதாம்.*

***குறிப்புரை :-** "புத்தேளிர் வேந்து" என்பது, 'சிவன்' என்னும் ஒரு சொல் தன்மைத்தாய் நின்றது. "தலைவ" என்பதனையும் "வேந்தே" என்பதன் பின்னர்க் கூட்டுக. நிலை இல் பிறவி - ஒன்றாய் நில்லாது, பலவாய் விரைவில் மாறுபட்டு வரும் பிறவி. நெடுமை, பெருமை குறித்தது. சுழி - சுழல். தொலைவு இன்றி - அழிவு இல்லையாம்படி. 'கரை' என்பது வருவித்து, 'கரை போந்து ஏற' என்க. நீரில் விழ்ந்தாரைக் கரையில் நிற்போர் கைகொடுத்தே கரையேற்றுவர். ஆதலின், "கை தாராய்" என்றார். 'இப்பாசத்தை விட்டுப் போந்து ஏற' என்க. இப்பாசம், உலக வாழ்க்கை.*

*316. **பொழிப்புரை :-** உலகப் பற்றை விட்டு உன் பாதத்தின் கீழே என் அன்பை வைக்க அருள் செய்வாயாக. பாசத்தை நீக்கும் வல்லமை யுடைய கயிலாய வாசனே! நீ என்னைக் காக்கும் வழி இவ்வளவே.*

***குறிப்புரை :-** நேசம் - அன்பு. "பாசத்தை விட்டு" என்றது, 'பாசத்தின்மேல் நேசத்தை வைத்தலை விடுத்து' என்றபடி. எனவே, ''பாசம்'' என்றது உடம்பினையும், அதனோடு தொடர்புபட்ட பொருள்களையும் ஆயிற்று. "கீழ்"*

காளத்தி

**317.** காணா தலக்கின்றார் வானோர்கள் காளத்திப்
பூணார மார்பன்றன் பொற்பாதம்; — நாணாதே
கண்டிடுவான் யான்இருந்தேன், காணீர், கடல்நஞ்சை
உண்டிடுவான் றன்னை ஒருங்கு. **18**

கயிலை

**318.** ஒருங்கா(து) உடனேநின்(று) ஓர்ஐவர் எம்மை
நெருங்காமல் நித்தம், ஒருகால் — நெருங்கிக்
கருங்கலோங் கும்பற் கயிலாயம் மேயான்
வருங்கொலோ நம்பால் மதித்து. **19**

---

*என்றது ஆகுபெயராய். 'நிழல்' எனப் பொருள் தந்தது. 'கீழின் கண்ணே' என ஏழாவது விரிக்க. ஏகாரம், பிரிநிலை. 'நீக்குமாறு' என்பது கடைக்குறைந்தது செய்யுள் முடிபு. 'நினை' என்றதனால். 'நீ நினையாவிடில் அது கூடாது' என்பதும், 'நினையின் தப்பாது கூடும்' என்பதும் பெறப்பட்டன. "இத்தனையே" என்றது, 'இஃது ஒன்றே அனைத்தையும் தரும்' என்பது பற்றி. காண், முன்னிலை யசை.*

*317. பொழிப்புரை :- தேவர்கள் காளத்தியில் எழுந்தருளியிருக்கும் பூணுதற்குரிய அணிகலன்களைப் பூண்ட மார்பையுடையவனுடைய பொற் பாதங்களைக் காணாமல் வருந்துகின்றார்கள். கடலில் இருந்து எழுந்த ஆலகால விடத்தை உண்டவனை நான் நாணாமல் காணத் துணிந்திருக்கின்றேன். என்னுடைய அறியாமையை நோக்குங்கள்.*

*குறிப்புரை :- இவ்வெண்பாவினை, ''அன்பரீர்'' என, அடியவரை முன்னிலைப்படுத்து உரைக்க. 'காளத்தியான் பாதம் காணாது வானோர்கள் அலக்கின்றார்' யான் நாணாதே அவனை ஒருங்கு காண இருக்கின்றேன்' என இயைத்து உரைக்க. காணீர், முன்னிலையசை. அலக்கின்றார் - அலமருகின்றார். ஆரம், பாம்பாகிய ஆரம், பொற்பாதம், உவமத் தொகை. நாணுதலினின்றும் பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை. "உண்டிடுவான்" என்றது, 'உண்ண வல்லவன்' எனறபடி. மேல், பூண் ஆர மார்பன்" என்றமையால், "கடல் நஞ்சை உண்டிடு வான்" என்றது 'அவன்' என மேலே கூட்டி முடிக்க. கண்டிடுவான், வான் ஈற்று வினையெச்சம். "இருந்தேன்" என, முக்கால வினை இறந்த காலத்தில் வைத்துச் சொல்லப்பட்டது. 'வானவர் பாதத்தையே காணாது அலக்கின்றார்; யான் நாணாதே முற்றுங்காண இருக்கின்றேன்' என்றதனால், 'இஃது என் அவா இருந்தவாறு' என்பது குறிப்பெச்சமாயிற்று. 'ஆசை வெட்கம் அறியாது' என்பது பழமொழி.*

*318. பொழிப்புரை :- அடங்காமல் உடனிருந்தே ஐம்பொறிகள் எம்மை ஒரு பெற்றியாக வருத்தாது வேறுவேறு வகையாக வருத்தும்போது, நாள்தோறும்*

காளத்தி

**319.** **நம்பால் மதித்துறையும் காளத்தி நண்ணாதே**
**வம்பார் மலர்தூய் வணங்காதே, – நம்பா, நின்**
**சீலங்கள் ஏத்தாதே தீவினையேன் யானிருந்தேன்**
**காலங்கள் போன கழிந்து.** **20**

---

*ஒருகால் நெருங்கி, கரிய மலைகள் போல் உயர்ந்த யானைகள் சுற்றித் திரியும் கயிலாய மலையில் எழுந்தருளியவன் நம்பால் மதித்து வருவானோ?*

***குறிப்புரை :-*** *ஒருங்காது - ஒரு முகப்படாமல் (அவரவர் விரும்பியபடியே) உடனே - கூடவே. ஐவர், ஐம்புல வேடர். "நெருங்குதல்" இரண்டில் முன்னது வலிசெய்து வருத்துதல்; பின்னது கிட்டுதல். நித்தம் - நாள்தோறும். கருங்கல் - கரிய மலை. 'கருங்கல் போல ஓங்கும் உம்பல்களையுடைய கயிலாயம்' என்க. உம்பல் - யானை.*

*'ஓர் ஐவர்(எம்) உடனே நின்று, எம்மை நித்தம், ஒருங்காது, நெருங்காமல், கயிலாயம் மேயான் நம்பால் (நம்மை) மதித்து ஒருகால் நெருங்கி வருங்கொலோ' என இயைத்து முடிக்க.*

*ஒருங்காது வருந்துதலாவது ஐவரும் ஒரு பெற்றியாக வருத்தாது, அவரவர் வேறு வேறு வகையாக வருத்துதல். "நெருங்காமல்" என்பது, 'நெருங்க' என எதிர்காலப் பொருட்டாய் வரும் செயவென் எச்சத்தின் மறை, 'நெருங்காதபடி' என்பது பொருள், கொல், ஐய இடைச்சொல். ஓகாரம் அசை. "உடனே" என்னும் ஏகார வேறு நிற்றலினின்றும் பிரித்தலின் பிரிநிலை. மதித்து - பொருட் படுத்துதலைச் செய்து.*

*319. **பொழிப்புரை :-** சிவபெருமானே! நம்மிடம் மதித்தலைச் செய்து உறையும் காளத்தியை நெருங்காமலும் மணமுள்ள மலர்களைத் தூவி வணங்காமலும் உன்னுடைய நல்லியல்புகளைப் புகழாமலும் பாவியேனாகிய நான் வீணாக இருந்து விட்டேன். காலங்கள் கழிந்து போயின.*

***குறிப்புரை :-*** *"நம்பால்" என்பது 'எம்பால்' என்னும் பொருட்டாய் நின்றது. "மதித்து" என்பதற்கு, மேல் உரைத்தது உரைக்க. 'நீ உறையும் காளத்தி' என்க. வம்பு ஆர் - மணம் நிறைந்த. சீலங்கள் - குணங்களும், செயல்களும். ஏத்துதல் - புகழ்தல். 'தீவினையேனாகிய யான்' என்க. இருந்தேன் - வாளா இருந்தேன். காலங்கள், நாள்கள், 'போயின' என்பது இடைக் குறைந்து நின்றது. 'கழிந்து போயின' என்க. 'இனி இரங்கிப் பயன் என்' என்பது குறிப்பெச்சம். 'மேற் கூறியன பலவும் காலம் உள்ள பொழுதே செய்யத் தக்கன' என்பது கருத்து.*

*320. **பொழிப்புரை :-** கழிந்து போன நாட்களுக்காக நெஞ்சே நீ இரங்கினாய் இல்லை. எஞ்சியிருக்கும் நாட்கள் மேம்பாடு அடைந்து*

கயிலை

**320.** **கழிந்த; கழிகிலாய்; நெஞ்சே, கழியாது**
**ஒழிந்தநாள் மேற்பட் டுயர்ந்தோர் – மொழிந்தசீர்க்**
**கண்ணுதலான் எந்தை கயிலாய மால்வரையை**
**நண்ணுதலாம் நம்மை நமக்கு.** **21**

காளத்தி

**321.** **நமக்கிசைந்த வாநாமும் ஏத்தினால், நம்பர்**
**தமக்கழகு தாமே யறிவர் – அமைப்பொதும்பின்**
**கல்லவாம் நீடருவிக் காளத்தி யாள்வாரை**
**வல்லவா, நெஞ்சமே, வாழ்த்து.** **22**

---

*உயர்ந்தவர்கள் புகழ்ந்த சிறப்புக்களையுடைய நெற்றிக் கண்ணையுடைய எந்தையினது கயிலாய மலையைப் பொருந்துதல் நமக்கு நன்மை பயக்கும்.*

*குறிப்புரை :- "கழிந்த கழிகிலாய்" என்பதை இறுதியிற் கூட்டுக. கழியாது ஒழிந்தநாள் - வாளா கழியாது; உறுதி செயச் சென்ற நாள்கள். 'நாள்களில்' என ஏழாவது விரிக்க. "மேற்பட்டு உயர்ந்தோர்" என்பது ஒரு சொல் நீர்மைத்தாய் நின்றது. 'கயிலாய மால்வரையை நண்ணுதல் நமக்கு நன்மையாம்; ஆயினும் நாள்கள் கழிந்தன. நீ இருந்த இடத்தை விட்டுப் பெயர்ந்திலை' என்க.*

*321. பொழிப்புரை :- நமக்குப் பொருந்தியபடி நாம் வழிபட்டால் இறைவன் தமக்கு அழகாகிய காரியத்தைச் செய்யத் தாமே அறிவார். மூங்கிற் புதர் நிறைந்த கற்களை உடைய நீண்ட அருவிகளையுடைய காளத்தி நாதரை இயன்றபடி நெஞ்சமே வாழ்த்து.*

*குறிப்புரை :- 'நெஞ்சே, அமைப் பொதும்பின்' எனத் தொடங்கி யுரைக்க. அமை - மூங்கில். பொதும்பு - மரச் செறிவு. 'மூங்கிலையுடைய மரச் செறிவை யுடைய காளத்தி' என்க. இன், சாரியை; கல்லவாம் 'கல்' என்னும் ஓசையை உடைய அருவி, வல்லவா - இயன்ற அளவு. (ஏன் எனில்) நம்பர் தமக்கு அழகு தாமே அறிவார் - **சிவபெருமான் தாம் செய்யத் தக்கதைத் தாமேயறிவார்; நாம் அவருக்குச் சொல்லத் தேவையில்லை. அஃது, 'இவரால் இயன்றது இவ்வளவுதான். ஆகவே, இவர்க்கு வேண்டுவதை நாம் அருள வேண்டுவது தான்' என்பது**. "இசைந்தவா" என்பதும், 'இயன்ற அளவு' என்றதேயாம். "நமக்கு இசைந்தவா நாமும் ஏத்தினால்" என்றது அனுவாதம். உம்மை, 'அவரும் அறிந்து செய்வார்' என எதிரது தழுவிற்று, 'தன் கடன் அடியேனையும் தாங்குதல்'[1] என அருளிச் செய்தமை காண்க. **'இறைவனது பெருமையை முற்ற அறிந்து வாழ்த்துவார்***

---

*1. திருமுறை - 5. 19. 9*

கயிலை

**322.** **வாழ்த்துவாய்; வாழ்த்தா தொழிவாய்; மறுசுழியிட்டு**
**ஆழ்த்துவாய்; அஃதறிவாய் நீயன்றே! – யாழ்த்தகைய**
**வண்டார் பொழிற்கயிலை வாழ்கென் றிருப்பதே**
**கண்டாய் அடியேன் கடன்.** **23**

---

ஒருவரும் இல்லை. அதனால், அவரவரும் தாம் தாம் அறிந்த அளவில் வாழ்த்துதல் வேண்டும்' என்பது கருத்து.

*322. **பொழிப்புரை :-** "வாழ்த்துவாய் வாழ்த்தாமல் இருந்து விடுவாய். மறுபிறவியாகிய சுழியின் கண் சேர்த்து அழுத்துவாய். அதை அறிபவன் நீதானே. வீணையின் அழகையுடைய வண்டுகள் நிறைந்த சோலைகளையுடைய கயிலை வாழ்வதாக" என்று இருப்பதே அடியேன் கடனாகும். வண்டுகள் பாடும் இசை யாழிசை போன்றிருத்தலின் யாழ்த்தகைய வண்டு என்றார்.*

***குறிப்புரை :-*** *வாழ்த்துதல் - வாழப் பண்ணுதல். வாழ்த்தா தொழிதல் - வாழப் பண்ணுதலைச் செய்யாமை. சுழி - சுழல். மறு சுழி - ஒன்றின்மேல் மற்றொன்றாய் வரும் சுழல். 'சுழியின்கண்' என ஏழாவது விரிக்க அஃது - மேற் கூறிய மூன்றனுள் செய்யத்தக்கது. அறிவாய் நீ அன்றே - அறிபவன் நீயேயல்லது, பிறர் யார்! 'பிறர் ஒருவரும் இல்லையாதலின், உனக்கு அதனை அறிவிப்பாரும் இல்லை' என்பது கருத்து. ஒன்றனைச் செய்தல். செய்யாமை, வேறொன்று செய்தல்' என்னும் இம் மூன்றனுள் ஒன்றைத் தான் விரும்பிய வண்ணம் செய்பவனே முதல்வன் (கருத்தா) ஆவன்; அத்தகைய முதல்வன் நீயே - என்பார் இங்ஙனம் மூன்று வகையாகக் கூறினார். இம்மூன்றும் முறையே, 'கர்த்திருத்வம், அகர்த்திருத்வம், அந்யதாகர்த் திருத்தவம்' - என வடமொழியில் சொல்லப்படும். இம்மூன்றனையும் குறிக்கும் முறையில்தான் ஔவையார்,*

> *'ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்*
> *அன்றிஅதுவரினும் வந்தெய்தும்; - ஒன்றை*
> *நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்*
> *எனை ஆளும் ஈசன் செயல்'[1]*

*எனக் கூறினார். 'உலகியல் என்னும் வெள்ளத்திலிருந்து என்னை எடுத்துக் கரையேற்று' என்றோ, 'வேண்டா; கரை யேற்றாதே' என்றோ, 'மேலும் ஆழத்தில் அமிழ்த்திவிடு' என்றோ உனக்கு விதிக்க நான் யார்? தக்கதை நீயே அறிந்து செய்வாயன்றோ - என்பது கருத்து.*

*'யாழ்த் தகைய ஆக' என ஆக்கம் வருவிக்க. 'வண்டு ஆர்க்கும் பொழில்' என்க. ஆர்த்தல் - ஒலித்தல். (உன்கடனை நீ அறிவாய்)* ***'கயிலை வாழ்க! கயிலாயன்***

---

*1.* *நல்வழி*

காளத்தி

**323.** **கடநாகம் ஊடாடும் காளத்திக் கோனைக்**
**கடனாகக் கைதொழுவார்க் கில்லை; — இடம்நாடி**
**இந்நாட்டிற் கேவந்(து)இங்(கு) ஈண்டிற்றுக் கொண்டுபோய்**
**அந்நாட்டில் உண்டுழலு மாறு.** **24**

---

*வாழ்க!!' - என்பன போல இயன்ற அளவு உன்னை வாழ்த்தியிருத்தலே எனது* ***கடன்;*** *அதனை நான் செய்தல் வேண்டும் என்றபடி* ***"என் கடன் பணி செய்து கிடப்பதே"***[2] *என்றமை காண்க. கண்டாய், முன்னிலை யசை.*

*323.* ***பொழிப்புரை :-*** *மத யானைகள் சுற்றித் திரிதற்கு இடமாகிய காளத்தி மலைக்குத் தலைவனைக் கடமையாகக் கை தொழுவார்க்கு, இடம் நாடி இவ்வுலகில் வந்து பிறந்து மிகுதியாகச் சேர்த்துக் கொண்டு போய் மறுமையில் உண்டு வருந்துமாறு இல்லை என முடிக்க.*

***குறிப்புரை :-*** *"இல்லை" என்பதை இறுதிக்கண் கூட்டுக. நாகம் - யானை. கடநாகம் - மதத்தையுடைய யானை. ஊடு ஆடும் - உள் இடங்களில் உலாவுகின்ற காளத்தி. கடனாக - கடமையாக; நியமமாக. இடம் - பிறப்பெடுக்கும் இடம். இந்நாடு, மண்ணுலகம். ஈண்டிற்று - திரண்டது, வினைக் கூட்டம். வினையாலணையும் பெயர்; சாதியொருமை, 'ஈண்டிற்றை' என இரண்டாவது விரிக்க. அந்நாடு, சுவர்க்க நரகங்கள்.*

*மண்ணுலகம் நல், தீ வினைகளை* ***ஈட்டும்*** *இடம் அதனால் இதனை* ***'கரும பூமி'*** *என்பர். சுவர்க்க நரகங்கள் வினைப் பயன்களை நுகரும் இடம் அதனால் அவற்றைப்* ***'போக பூமி'*** *என்பர்.* ***சிவபெருமானை வணங்குவார் இந்த இருவகைப் பூமியிலும் செல்லாது சிவலோகத்தை அடைவர்*** *ஆதலின், 'காளத்திக் கோனைக் கடனாகக் கைதொழுவார்க்கு இந்நாட்டிற்கு வந்து ஈட்டுதலும், அந்நாட்டிற் சென்று நுகர்தலும் இல்லை' என்றார்.*

*324.* ***பொழிப்புரை :-*** *மறுபடியும் பிறந்து இடை வழியில் நல்வினை தீவினைகட்கு ஈடாக விண்ணுலகிலும் நிரயத்திலும் ஏறியிறங்குகின்ற இதனை யல்லாமல், மனம் தெளிவடைந்து திருக்கயிலையை ஏத்தாவிடில் பாதுகாவலால் யார்க்கும் இருத்தல் இல்லை. இதை நீங்கள் கண்டு தெளிவீர்களாக.*

***குறிப்புரை :-*** *'உலகீர்' என முன்னிலை வருவித்து, 'தேறித் திருக் கயிலை ஏத்திரேல்' என்பதை முதற்கண் கூட்டியும், 'யார்க்கும் சேமத்தால் இனிது இருக்கை இலை' என மாற்றியும் உரைக்க.*

*தேறி - (உயர்ந்தோர் சொல்லைத்) தெளிந்து, 'இடை' இரண்டும் ஏழன் உருபு. மாறிப் பிறத்தல், உயர் பிறவியிலும், தாழ்பிறவியிலும் மாறி மாறிப் பிறத்தல் வழி - இனிது செல்லும் வழி. யாறு - வெள்ளத்திலும் அகப்பட்டு அல்லல்*

---

*2. திருமுறை - 5. 19. 9*

கயிலை

**324.** மாறிப் பிறந்து, வழியிடை யாற்றிடை
ஏறி யிழியும் இதுவல்லால், – தேறித்
திருக்கயிலை ஏத்தீரேல், சேமத்தால் யார்க்கும்
இருக்கையிலை கண்டீர் இனிது. **25**

காளத்தி

**325.** இனிதே பிறவி இனமரங்கள் ஏறிக்
கனிதேர் கடுவன்கள் தம்மில் – முனிவாய்ப்
பிணிங்கிவரும் தண்சாரல் காளத்தி பேணி
வணங்கவல்ல ராயின் மகிழ்ந்து. **26**

---

*உறும் யாறு, 'வழியிடை ஏறி, யாற்றிடை, இழியும்' என நிரல்நிறையாகக் கொள்க. முன்னது உயர் பிறப்பிற் பிறத்தலையும், பின்னது தாழ் பிறப்பிற் பிறத்தலையும் குறித்தன. வெள்ளத்தில் அகப்பட்டவர்க்கேயன்றி, இருக்கும் இடம் இன்றி, ஓயாது வழி நடப்பார்க்கும் உளதாவது அல்லலேயன்றி அமைதியன்று. அதனால் இரண்டுமே துன்பமாம். சேமம் - பாதுகாவலோடு கூடிய, வாழும் இடம். "காலத்தினாற் செய்த நன்றி"[1] என்பது போல, "சேமத்தால்" என்பது வேற்றுமை மயக்கம். இருக்கை - அமைதியுடன் இருத்தல்; தொழிற் பெயர். கண்டீர், முன்னிலையசை. 'சிவபெருமானைத் துதிப்பார்க்கல்லது அமைதி கிட்டாது' என்றபடி.*

> *'தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தாற்க் கல்லால்*
> *மனக்கவலை மாற்றல் அரிது'[2]*

*என்னும் பொது மறையையும் காண்க.*

*325. பொழிப்புரை :- கூட்டமாகிய மரங்களில் ஏறி, பழங்களைத் தேடுகின்ற ஆண் குரங்குகள் தம்மில் சினங் கொண்டு, மாறுபட்டு வரும் குளிர்ந்த சாரல்களை உடைய காளத்தியை விரும்பி வணங்க வல்லராயின் பிறவி இனிதே என்று கூட்டுக.*

*குறிப்புரை :- 'பிறவியே இனிது' என ஏகாரத்தை மாற்றி வைத்து, இறுதிக்கண் கூட்டுக. வீட்டினின்றும் பிரித்தலின் ஏகாரம், பிரிநிலை. இனம் - பல்வேறு இனம். 'தேர் கடுவன்கள் ஏறித் தம்மில் பிணங்கி வரும் சாரல் காளத்தி' என்க. கடுவன் - ஆண் குரங்கு. முனிவு - கோபம். (மக்கள்) காளத்தி பேணி மகிழ்ந்து வணங்க வல்லாராயின் (அவர்கட்கு) அப்பிறவியே இனிது - என்க. 'வீடு வேண்டா' என்பதாம். 'வீட்டின் பயன் அப்பிறப்பிலே உள்ளது' என்றபடி.*

---

1. *திருக்குறள் - 102*
2. *திருக்குறள் - 7*

கயிலை

**326.** மகிழ்ந்தலரும் வண்கொன்றை மேலே மனமாய்
நெகிழ்ந்து நெகிழ்ந்துள்ளே நெக்குத் – திகழ்ந்திலங்கும்
விண்ணுறங்கா வோங்கும் வியன்கயிலை மேயாய்என்
பெண்ணுறங்காள்; என்செய்கேன் – பேசு. **27**

காளத்தி

**327.** பேசும் பரிசறியாள் பேதை பிறர்க்கெல்லாம்
ஏசும் பரிசானாளே; பாவம்! – மாசுனைநீர்
காம்பையலைத் தாலிக்கும் காளத்தி என்றென்று
பூம்பயலை மெய்ம்முழுதும் போர்த்து. **28**

---

*'தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்றன்*
*திருநடம் கும்பிடப் பெற்று,*
*மண்ணிலே வந்த பிறவியே எனக்கு*
*வாலிதாம் இன்பமாம்'*[3]

*என்றது காண்க.*

*326. பொழிப்புரை :- அலருகின்ற வண்கொன்றை மேல் மனமாக மகிழ்ந்து மிகுதியான தளர்ச்சியை அடைந்து, உருகி, திகழ்ந்து இலங்கும் விண்ணையளாவ அழகிய பொழில் மேலெழும் வியன் கயிலையில் இருப்பவனே! என் பெண் உறங்கவில்லை. என்ன செய்வேன்? சொல்வாயாக.*

*குறிப்புரை :- 'திகழ்ந்திலங்கும். என் பெண்' என்பதை முதலிற் கூட்டுக. மகிழ்தல், இங்கு விரும்புதலைக் குறித்தது. 'விண் நிறத்தோடு' என்று ஓடுருபு தொகுக்கப்பட்டது. விண்ணின் நிறம் புகைமை. அஃது இங்கு இருளைக் குறித்தது. கா - சோலை.*

*இது கயிலைப் பெருமான்மேல் காதல் கொண்டாள் ஒருத்தி தன் செவிலித்தாய் கூற்று.*

*327. பொழிப்புரை :- இவள் பேசும் வகையறியாத பேதைப் பெண். பிறரால் பழி தூற்றப்படும் தன்மை யுடையவள் ஆனாள். ஐயோ பாவம் பெரிய சுனை நீர்க்கு மூங்கில் அசைத்து ஒலிக்கும் காளத்தி என்று அடிக்கடி கூறுவாள். அழகிய பசலை உடல் முழுதும் போர்த்து ஏசும் பரிசானாள் என முடிக்க.*

*குறிப்புரை :- "மா சுனை நீர்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. காம்பு - மூங்கில். ஆலித்தல் - ஒலித்தல். பூம் பசலை - பூப் போலும் பசலை. 'பூ, பீர்க்கம் பூ' என்பது மரபு பற்றிக் கொள்ளப்படும். போர்த்து - போர்க்கப்பட்டு. பேசும் பரிசு - வேறொன்றைப் பற்றியும் பேசும் தன்மை. "பேதை" என்றது*

---

*3. பெரியபுராணம் - தடுத்தாட்கொண்டது - 107*

கயிலை

328. போர்த்த களிற்றுரியும், பூண்ட பொறியரவும்
தீர்த்த மகளிருந்த செஞ்சடையும் – மூர்த்தி
குயிலாய மென்மொழியாள் கூறாய வாறும்
கயிலாயா, யான்காணக் காட்டு. **29**

காளத்தி

329. காட்டில் நடம்ஆடிக் கங்காளர் ஆகிப் போய்
நாட்டிற் பலிதிரிந்து நாள்தோறும் – ஓட்டுண்பார்
ஆனாலும் என்கொலோ, காளத்தி ஆள்வாரை
வானோர் வணங்குமா வந்து. **30**

---

*சிலேடை. பரிசு - தன்மை. 'தன்மையுடையளாயினார்' என்க. ஏகாரம், தேற்றம் "பாவம்" என்பது, இரக்கம் பற்றி வந்தது. இதுவும் மேலைத் துறை.*

*328. **பொழிப்புரை :-** போர்த்துள்ளது யானைத்தோல், பூண்பது புள்ளி களையுடைய பாம்பு. சடையில் இருப்பவள் கங்கை. குயில் போல இனிமையாகப் பேசும் மொழியை உடைய உமாதேவியை இடப்பாகத்தில் கொண்ட மூர்த்தியாகிய கயிலைவாசா! இந்தக் கோலத்தை யான் காணக் காட்டுவாயாக.*

*குறிப்புரை :- "போர்வையாகப் போர்த்த" எனவும், 'பூணாகப் பூண்ட' எனவும் உரைக்க. உரி - தோல், பொறி - புள்ளி. தீர்த்த மகள், கங்கை. மூர்த்தி - வடிவம். இதனை முதற்கண் வைத்து, "கூறும் ஆய வாறு" என உம்மையை மாறிக் கூட்டி, 'ஆயவாறு காட்டு' என முடிக்க. இது சிவபெருமானது உருவத்தை நினையும் பாட்டாய் அமைதலை யறிக.*

*329. **பொழிப்புரை :-** புறங் காட்டில் நடமாடி, முழு எலும்புக் கூடாகி, பிறகு ஊர்களில் பிச்சை எடுத்துத் திரிந்து நாள் தோறும் ஓட்டிலே உணவு கொள்வார். என்றாலும் காளத்திநாதரைத் தேவர்கள் வணங்குவதற்காக வருவது யாது காரணம் கருதி என்பதாம்? ஓட்டுண்பார் - பிரம கபாலத்தில் பிச்சை ஏற்று உண்பார்.*

*குறிப்புரை :- கங்காளர் - எலும்புக் கூட்டைத் தோளில் கொண்டவர். 'நாட்டில் போய்த் திரிந்து' என்க. பலி - பிச்சை. 'பிச்சைக்கு' என நான்காவது விரிக்க. 'நாள்தோறும் போய்' எனக் கூட்டுக. ஓட்டு - ஓட்டின்கண். ஓடு, தலைஓடு 'வணங்குமாறு' 'வணங்குமா' எனச் செய்யுள் முடிபு எய்தி நின்றது. "என்கொலோ" என்றது, 'இவரது செயலின் உண்மையை உணர்ந்ததனால்' என்பதனைக் குறிப்பாற் புலப்படுத்தியது.*

*'அவனும்ஓர் ஐயம்உண்ணி; அதள்ஆடை யாவ(து)*
*அதன்மேல்ஓர் ஆட லரவம்;*

கயிலை

**330.** வந்தமரர் ஏத்தும் மடைக்கூழும் வார்சடைமேல்
கொந்தவிழும் மாலை கொடுத்தார்கொல்! – வந்தித்து
வால்உகுத்த வண்கயிலைக் கோமான் மணிமுடிமேல்
பால்உகுத்த மாணிக்குப் பண்டு. **31**

---

*கவணளவுள்ள வுள்கு கரிகாடு கோயில்;*
*கலனாவது ஓடு; கருதில்*
*அவனது பெற்றி கண்டும், அவன்நீர்மை கண்டும்*
*அகன்நேர்வர் தேவ ரவரே'*[1]

*என அப்பர் பெருமானும் அருளிச் செய்தமை காண்க.*

*கங்காளம் தாங்கியது முதலியவற்றின் உண்மைகளை,*

*'நங்காய்,இ தென்னதவம்! நரம்போ டெலும்பணிந்து*
*கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ,*
*கங்காளம் ஆமாகேள்; காலாந் தரத்திருவர்*
*தங்காலம் செய்யத் தரித்தனன்காண் சாழலோ'*[2]

*என்பது முதலியவற்றான் அறிக. 'வானோர் வணங்குவர்' என்றத னால், உண்மை யுணராதவரெல்லாம் இவரது செயலைக் கண்டு இவரை, 'பித்தர்' என்று இகழவே செய்வர் என்பது போந்தது.*

*'பித்தரே என்றும்மைப் பேசுவர் பிறரெல்லாம்'*[3]

*என்றார் ஆளுடைய நம்பிகள்.*

*'இவரைப்பொருள்உணர மாட்டாதா ரெல்லாம்*
*இவரை இகழ்வதே கண்டீர்'*[4]

*என்றார் காரைக்கால் அம்மையார்.*

*330. பொழிப்புரை :- தேவர்கள் வந்து வணங்குகின்ற பரிகல சேடமும் நீண்ட சடை மேல் கொத்துக்கள் விரிகின்ற நிருமாலிய மாலையும் கொடுத்தார் அல்லவா? அது என் கருதி? வணங்கி வெள்ளொளியைப் பரப்புகிற வளம் பொருந்திய கயிலைக் கோன் தம் முடிமேல் பாலைத் திருமுழுக் காட்டிய பிரமசாரியாகிய சண்டேசுரருக்குக் கொடுத்தது ஏன் என முடிக்க.*

---

1. *திருமுறை - 4. 8. 1*
2. *திருவாசகம் - திருச்சாழல்*
3. *திருமுறை - 7. 29. 1*
4. *அற்புதத் திருவந்தாதி - 29*

காளத்தி

**331.** **பண்டிதுவே; அன்றா கில், கேளீர்கொல் பல்சருகு**
**கொண்டிலங்கத் தும்பின்னூற் கூடிழைப்பக் – கண்டு**
**நலந்திக் கெலாம்ஏத்தும் காளத்தி நாதர்**
**சிலந்திக்குச் செய்த சிறப்பு.** **32**

---

*குறிப்புரை :- "மடை" என்பது, 'நிவேதனம்' எனச் சிறப்புப் பெயராயும், "கூழ்" என்பது 'உணவு' என்னும் பொதுப் பெயராயும் நின்று, இருபெயர் ஒட்டாய் வந்தன. "மாலை" என்பதிலும் எண்ணும்மை விரிக்க. கொல், அசை. வால் உகுத்த - வெள்ளொளியை எங்கும் வீசுகின்ற. மாணி - பிரமசாரி. இதில் சண்டேசுர நாயனாரது வரலாறு குறிக்கப்பட்டது. அதனைத் திருத்தொண்டர் புராணத்துட் காண்க.*

*331. பொழிப்புரை :- இது மட்டும் அன்று. கேளுங்கள். ஆராயுங்கால் பல சருகு கொண்டிலங்க சிலந்திவாயின் நூலால் கூடு கட்டக் கண்டு நன்மையை எடுத்துப் புகழும் காளத்தி நாதர் சிலந்திக்குச் செய்த சிறப்புக் கேளீர் கொல் எனக் கூட்டுக. கேளீர் கொல் - கேட்டிலீரோ? சிலந்திக்குச் செய்த சிறப்பென்றது சிலந்தியைக் கோச் செங்கட் சோழராகப் பிறக்கச் செய்த சிறப்பை.*

*குறிப்புரை :- "பல் சருகு" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. கொண்டு - மேற்கூரையாகக் கொண்டு. இலிங்கம் - திருவானைக்கா வெண்ணாவலின்கீழ் உள்ள இலிங்கம். பின் நூல் - பின்னுகின்ற நூலால் கூடு. பக்தர் நலம் - நலம் செய்வதாகிய கருணை. 'அதனை திக்கெலாம் ஏத்தும் காளத்தி நாதன்' என்க. சிலந்திக்குச் செய்த சிறப்பாவது சோழ மன்னனாகப் பிறக்கச் செய்தமை. அம்மன்னனே திருவானைக்கா முதலான எழுபது தலங்களில் சிவபிரானுக்கு மாடக் கோயில் எடுத்த கோச்செங்கணான். "பண்டு இதுவே" என்பதை 'இது பண்டே' என மாற்றி ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. 'பண்டு' என்பது பெயர்த் தன்மைப்பட்டு, பண்டு நிகழ்ந்த செயலைக் குறித்தது. 'சிறப்பாகிய இது' என இயைக்க அன்றாகில் - 'அவ்வாறு ஒன்று நிகழ்ந்ததில்லை' என்று எவரேனும் கூறுவீராயின். கேளீர்கொல் - செவிப்பொறி இல்லீர் போலும்! கொல், ஐய இடைச்சொல். 'இந் நிகழ்ச்சி நாடறிந்த பெருவழக்காய் இருக்க, அதனை, 'இல்லை' எனச் சொல்லிப் பிணங்குவார் உளராயின் அவர் செவிப்பொறி இல்லா தவரேயாவர்' என்றபடி. **'சிவபிரானுக்கு அன்புடன் சிறு பணி செய்யினும் அவன் பெரும்பயன் தருவன்' என்பது கருத்து**.*

*332. பொழிப்புரை :- செய்த சிறப்பை எண்ணினால் எப்படி முடிவு பெறும்? என்பதைச் சென்றடைந்து கைதொழுவார்க்கு எங்கள் கயிலாயர் சிறிது போதில் அருள் செய்வார். தனது பாதங்களை வணங்கிய பாலகனாகிய மார்க்கண்டேய னுக்காக நமனைக் காய்ந்தார் அல்லவா? காண்பீர்களாக.*

கயிலை

**332.** **செய்த சிறப்பெண்ணில், எங்குலக்கும் ? சென்றடைந்து**
**கைதொழுவார்க்(கு) எந்தை கயிலாயர்; – நொய்தளவில்**
**காலற்காய்ந் தாரன்றே காணீர்! கழல்தொழுத**
**பாலற்காய் அன்று பரிந்து.** **33**

காளத்தி

**333.** **பரிந்துரைப்பார் சொற்கேளாள்; எம்பெருமான் பாதம்**
**பிரிந்திருக்க கில்லாமை பேசும் – புரிந்தமரர்**
**நாதா, வா, காளத்தி நம்பா, வா என்றென்றென**
**மாதாவா உற்ற மயல்.** **34**

---

*குறிப்புரை :- 'கழல் தொழுது பாலற்காய் அன்று பரிந்து நொய்தளவில் காலற் காய்ந்தாரன்றே! சென்று அடைந்து கைதொழுவார்க்கு எந்தை கயிலாயர் செய்த சிறப்பு எண்ணில் எங்கு உலக்கும்? என இயைத்துக் கொள்க. காணீர், முன்னிலையசை. இதில் மார்க்கண்டேயருக்கு அருள்செய்த வரலாறு குறிக்கப்பட்டது. எண்ணில் - எண்ணால் கூறி வரையறுக்கப்புகின். எங்கு உலக்கும் - எங்கே போய் முடியும்? 'ஓரிடத்தும் முடியாது, எணிலவாய் மிகும்' என்றாம். மேல், சண்டேசர், கோச்செங்கணான் இவர்கட்குச் செய்த சிறப்பையும், இங்கு மார்க்கண்டேயர்க்குச் செய்த சிறப்பையும் கூறினார். 'இப்படி எத்தனைப் பேருக்கு என்னென்ன சிறப்புச் செய்தார்' என வினாவு வார்க்கு விடையும் இதிலே கூறினார். "எந்தை கயிலாயர்" என்பது பன்மை யொருமை மயக்கம். நொய்தளவில் - சிறிது நேரத்திற்குள். பரிந்து - அருள் கூர்ந்து.*

*333. பொழிப்புரை :- என் மகள், அந்தோ, அடைந்த மயல் எத்தகையது என்று சொல்கிறேன். கேளுங்கள். அன்பு கொண்டு கூறுவார் சொல்லைக் கேட்க மாட்டாள். எம்பெருமானது பாதத்தைப் பிரிந்திருக்க முடியாமல் பேசுவாள். விரும்பித் தேவர்களின் நாதா வா, காளத்தி நம்பா வா, என்று பேசும் என முடிக்க.*

*குறிப்புரை :- "என் மாது" என்பதை முதலிலும், "பேசும்" என்பதை "என்றென்று" என்பதன் பின்னும் கூட்டி (இவள்) 'உற்ற மயல், ஆஆ' என முடிக்க. பரிந்து - அன்பு கொண்டு உரைப்பார் சொல்லாவன, 'அவன் உனக்கு எளியனல்லன்; அவனை நீ அடைதல் இயலாது' என்றல் போல்வன. 'பிரிந்திருக்க கில்லாமையால்' என உருபு விரிக்க. பேசும் - பேசுவாள். 'பிரிந்த' என்பதன் இறுதிநிலை தொகுத்தலாயிற்று. புரிதல் - விரும்புதல். "ஆஆ" என்பதன்பின் 'என இரங்கத்தக்கது' என ஒரு சொல் வருவித்து முடிக்க. இதுவும் மேற்போந்தன போலச் செவிலி கூற்று. **'சிவனிடத்து அன்பு கொண்டோர் அதனை விலக்கச் சொல்வார் கூற்றைக் கேளார்' என்பது இதன் உள்ளுறை.***

கயிலை

**334.** **மயலைத் தவிர்க்கநீ வாராய்! ஒரு மூன்(று)**
**எயிலைப் பொடியாக எய்தாய்; – கயிலைப்**
**பருப்பதவா, நின்னுடைய பாதத்தின் கீழே**
**யிருப்பதவா வுற்றாள் இவள்.** **35**

காளத்தி

**335.** **இவளுக்கு நல்லவா றெண்ணுதிரேல், இன்றே**
**தவளப் பொடியிவள்மேல் சாத்தி, – இவளுக்குக்**
**காட்டுமின்கள் காளத்தி; காட்டிக் கமழ்கொன்றை**
**சூட்டுமின்கள்; தீரும் துயர்.** **36**

---

*334. **பொழிப்புரை :-** இவள் மையலைத் தீர்க்க வருவாயாக. ஒப்பற்ற மூன்று மதில்களை அழித்தவனே! கயிலை மலையை உடையவனே! உன்னுடைய பாதத்தின் கீழே இருப்பதற்கு இவள் விரும்புகின்றாள்.*

***குறிப்புரை :-*** *"கயிலைப் பருப்பதவா" என்பது முதலாகத் தொடங்கி, இறுதியில், "மயலைத் தவிர்க்க வாராய்" என முடிக்க. பருப்பதம் - மலை. அஃது அடியாகப் பிறந்த 'பருப்பதன்' என்னும் பெயர் ஓர் அகரம் விரித்தல் பெற்று, 'பருப்பதவன்' என வந்தது, உன் பக்கத்திலே கூட இருக்க இவள் விரும்பவில்லை; பாதத்தின் கீழேயிருக்க விரும்பினாள்' என்க. "நீ ஒரு மூன்று எயிலைப் பொடியாக எய்தாய்" என்றது, 'தேவர் பொருட்டு அதனைச் செய்த அருளுடையையன்றோ? இவட்கு இது நீ செய்யலாகாதோ' என்றபடி. 'இருப்பது' என்பது தொழிற்பெயர். 'இருப்பதற்கு' என நான்காவது விரித்து, அதனை, 'அவாவைப் பொருந்தினாள்' என்க. இவ்வாறன்றி, "அவா உற்றார்" என்பதனை 'அவாவினாள்' என ஒரு சொ நீர்மைத்தாகக் கொண்டு, 'அவாவை' என இரண்டாவது விரிப்பினும் ஆம். இதுவும் செவிலி கூற்றே.*

*335. **பொழிப்புரை :-** இவளுக்கு நன்மையான செய்கையைச் செய்ய எண்ணினால் இன்றே திருநீற்றை இவள் மேல் சாத்தி, இவளுக்குத் திருக்காளத்தி மலையைக் காட்டுங்கள். மணம் வீசுகின்ற கொன்றை மாலையை அணியுங்கள். இவளது துயர் தீரும். அதாவது துன்பம் நீங்கும் என்றபடி. இது செவிலி கூற்று.*

***குறிப்புரை :-*** *இன்றே - இப்பொழுதே. தவளப்பொடி - வெண்பொடி; திருநீறு. 'சந்தனத்தைப் பூசி இவள் உடல் வெப்பத்தைத் தணிக்க நினையாதீர்கள்' என்பதாம். 'அது இவளுக்கு மேலும் வெம்மையைத் தரும்' என்பது குறிப்பு. 'காளத்தி காட்டுமின்கள்' என்க. இப்பாட்டு தலைவிதன் வேற்றுமைக்குக் காரணம் அறியாது செவிலியும், நற்றாயும் அதனைப் பரிகரிக்க முயல்கையில் பாங்கி அறத்தொடு நின்றது.*

கயிலை

**336.** துயர்க்கெலாம் கூடாய தோற்குரம்பை புக்கு
மயக்கில் வழிகாண மாட்டேன்; – வியற்கொடும்போர்
ஏற்றானே! வண்கயிலை எம்மானே! என்கொலோ
மேற்றான் இதற்கு விளைவு! **37**

காளத்தி

**337.** விளையும் வினை அரவின் வெய்ய விடத்தைக்
களைமினோ! காளத்தி ஆள்வார் – வளைவில்
திருந்தியசீர் 'ஈசன்' திருநாமம் என்னும்
மருந்தினைநீர் வாயிலே வைத்து. **38**

---

*சிவனடியார்கட்குச் சிவன்பணி கூடாமையால் உளதாகும் வருத்தம் பிறிதொன்றால் தீராமை இதன் உள்ளுறை.*

*336. **பொழிப்புரை :-** துன்பக் கூடாகிய, தோலாற செய்த சிறுகுடிலாகிய உடல் புகுந்து, மயக்கமில்லாத வழியைக் காண மாட்டாதவனாக உள்ளேன். பெருமையுள்ள கொடும் போரைச் செய்யும் காளையை வாகனமாக உடையவனே! வளம் பொருந்திய கயிலை எம்மானே. இனிமேலாயினும் இதற்கு என்ன முடிவு என்று கூறுவாயாக! கடைத்தேறும் வழியாது என்பதாம்.*

***குறிப்புரை :-** "வியற் கொடும் போர்... எம்மானே" என்பது தொடங்கி, 'இதற்கு, மேல் விளைவு என்கொலோ' என முடிக்க.*

*வியல் - பெரிய. "வியல் கொடும் போர்" எனபது ஏற்றிற்கு இன அடை. ஏறு - இடபம். குரம்பை - குடில். தோற் குரம்பை - தோலால் மூடப்பட்ட குடில்; உடம்பு. மயக்கில் - மயக்கத்தால், வழி - செல்லத்தக்க வழி "இது" என்றது மாட்டாமையை. "இதற்கு விளைவு" என்பதில் நான்காவது, 'அவர்க்கு ஆகும் அக்காரியம்' என்பதுபோல மூன்றாவதன் பொருட்டு. மேல் விளைவு - பின் விளைவு. தான், அசை, கொல், ஐயம். ஓ, அசை. 'இவ் அறியாமை அறியாமையே யாகப் பிறவியே விளையுமோ! உனது அருளால் இது நீங்கி அறிவு தோன்ற, உனது திருவடிப்பேறு விளையுமோ! அறிகின்றிலேன்' என்பதாம்.*

*337. **பொழிப்புரை :-** வினைகளாகிய பாம்பின் கொடிய விஷத்தை வேரறப் போக்குங்கள். திருக்காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் பெருமானே! கோடுதல் இல்லாத திருத்தாகிய சிறப்புடைய ஈசன் திருநாமம் என்னும் மருந்தினை உபதேசிப்பாயாக. வாயில் வைத்துக் களைமின் என்று கூட்டுக.*

***குறிப்புரை :-** "வினை அரவு", "திருநாமம் என்னும் மருந்து" - இவை உருவகங்கள். விளையும் வினை, பிராரத்த வினை. அதனை "அரவு" என்றதனால், "அதன் விடம்" என்றது, அது விளையும் பொழுது உளவாகின்ற இன்பத் துன்ப*

கயிலை

**338.** வாயிலே வைக்கு மளவில் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்குமே; – தூயவே
கம்பெருமா தேவியோடு மன்னு, கயிலாயத்(து)
எம்பெருமான் ஓர்அஞ் செழுத்து. **39**

---

*அனுபவங்களால் தோன்றும் ஆகாமியத்தையாம். "திருவாஞ்சியத்துறையும் - ஒருவனார் அடியாரை ஊழ்வினை நலிய ஓட்டாரே"[1] என்று அருளிச்செய்தது இது நோக்கி. "களைமின்" என்பதை இறுதிக்கண் கூட்டுக. ஓகாரம், அசை. 'ஆள்வாரது' என ஆறாவது விரிக்க. வளைவு - கோட்டம்; அஃதாவது, மெய்யான. சீர் - புகழ். 'சீரை விளக்கும் திருநாமம்' என்க. 'ஈசன் ஆம் திருநாமம்' என ஒற்றுமைப் பொருட்டாகிய ஆக்கம் விரிக்க. ஈசன் - ஐசுவரியத்தையுடையவன். இஃது உபலக்கணமாய் ஏனை பல பெயர்களையும் குறிக்கும். 'சிவபெருமானது பொருள் சேர்ந்த புகழை எப்பொழுதும் சொல்லுதலே வினை நீக்கத்திற்கு வழி' என்றபடி.*

*'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'[2]*

*என்னும் பொது மறையையும் காண்க. 'மருந்துகள் யாவும் உள் விழுங்கவே நோயைத் தீர்க்கும். இஃது அவ்வாறின்றி, வாயில் வைத்த அளவே நோயைத் தீர்ப்பதோர் அதிசய மருந்து என்னும் நயத்தைத் தோற்றுவித்தமையறிக. புகழ்கள் சொல்லப்படுதல் வாயினாலே யன்றோ! இவ்வாறே, வருகின்ற வெண்பாவில், "வாயிலே வைக்கு மளவில் மருந்தாகி" என ஓதுதல் காண்க.*

*338. பொழிப்புரை :- தூய்மையுடைய திருவேகம்பரே! தேவியோடு நிலை பெற்றிருக்கும் கயிலாயத்து எம்பெருமானே! <u>திரு ஐந்தெழுத்தை உபதேசித்த அளவில் அது மருந்தாகி, கொடிய பிறவி நோயைத் தீர்க்கும்.</u>*

*குறிப்புரை :- "தூய" என்பது, வேறுபடுதல் இன்மையைக் குறித்தது. 'பெருமாதேவியொடு தூய ஏகமாய்மன்னு எம் பெருமான்' என ஆக்கம் வருவித்துரைக்க. தலைவராயினார்க்குத் தேவியாயினாரை 'மாதேவி' என்றல் வழக்காதலின் தலைவர்க்கெல்லாம் தலைவனுக்குத் தேவியாயினாளை, "பெருமாதேவி" என்றார். 'அஞ்செழுத்து ஆகித் தீர்க்கும்' என முடிக்க. "அஞ்செழுத்து" என்பது தொகைக் குறிப்பாய், "நமச்சிவாய" என்பவற்றைக் குறித்தல் மரபு வழியால் பெறப்பட்டது. மரபு சைவாகம மரபு. <u>பிறவியை நோயாக உருவகித்தற்கு ஏற்ப அஞ்செழுத்தை மருந்தாக உருவகிக்கின்றார்</u>. ஆகலின் அதற்கேற்ப, <u>'வாயாலே சொல்லுமளவில்'</u> என்னாது, <u>"வாயிலே வைக்குமளவில்"</u>*

---

1. *திருமுறை - 7. 76. 1*
2. *திருக்குறள் - 5*

காளத்தி

**339. அஞ்செழுத்துங் கண்டீர் அருமறைகளா வனவும்**
**அஞ்செழுத்தும் கற்க அணித்தாகும் – நஞ்சவித்த**
**காளத்தி யாருக்கும் காண்டற் கரிதாய்ப்போய்**
**நீளத்தே நின்ற நெறி. 40**

என்றார். வாயிலே வைத்த அளவில் நோய் நீங்குதல் கூறப்பட்டமையால், பின்னும் பின்னும் **பேணி ஒழுக ஒழுகப் பேரின்பம் பெருகுதல் பெறப்பட்டது**. இவ்வஞ் செழுத்தின் பெருமையே திருமுறைகளில் எங்கும் விரித்துப் பேசப்படுதல் வெளிப்படை. அவ்வாற்றானே இங்கும் பேசப்பட்டது. **'பிறவி நோயாதல் தெளிவாதல் போல, அஞ்செழுத்தே அந்நோய்க்கு மருந்தாதல் தெளிவு'** என்பதாம்.

*339. பொழிப்புரை :-* நஞ்சின் வேகத்தைத் தணித்த, திருக்காளத்தியில் எழுந்தருளிய திருக்காளத்தி நாதரைக் காண முடியாத அளவு நீளத்தே நின்ற நெறி, அஞ்செழுத்தும் கற்க அணித்தாகும். அஞ்செழுத்தே அறுமறைகளாகும் என்பதைக் காணுங்கள்.

*குறிப்புரை :-* அஞ்செழுத்தும் ஏற்ற பெற்றியால் சொற்களுக்கு உறுப்பாதலேயன்றி, இறைவனது அருளாணையால் அஞ்சு பதங்களுமாதல் பற்றி, "அஞ்செழுத்தும் என முற்றும்மை கொடுத்தார். துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்"[1] என்னும் திருப்பதிகத்திலும்,

'ஏதும் ஒன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செழுத் தும்உணர் வார்கட்குப்
பேத மின்றி அவரவ ருள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே'[2]

என்றாற்போலும் இடங்களிலும் 'அஞ்செழுத்தும்' என உம்மை கொடுத்தே ஓதப்பட்டன. "அந்தியும் நண்பகலும்" அஞ்சு பதம் சொல்லி[3] என்பதில் அஞ்செழுத்தும் அஞ்சு பதங்களாதல் குறித்தருளப்பட்டது.

இனி, இங்கு மேலை வெண்பாவிலும், "அஞ்சினால் உய்க்கும் வண்ணம் காட்டினாய்க் கச்சம் தீர்ந்தேன்"[4] "அஞ்செழுத்து - ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்"[5] என்றாற் போலும் இடங்களிலும் உம்மையின்றியே ஓதப்பட்டது.

அஞ்செழுத்தும் சொற்கு உறுப்பாய் நிற்க அதனாலாம் தொடர்மொழி, 'சிவனுக்கு வணக்கம்' என்னும் ஒரு பொருளையே தந்து, சிவன் வணங்கப்படுபவனும், உயிர்கள் அவனை வணங்குவனவும் ஆகின்ற முறைமையை

1. திருமுறை - 3. 32. 1
2. திருமுறை - 5. 59. 1
3. திருமுறை - 7. 83. 1
4. திருமுறை - 4. 26. 5
5. பெரியபுராணம் - சம்பந்தர் - 216

உணர்த்தி நிற்கும். இது பொதுவாக யாவராலும் ஓதத் தக்கதாதல் பற்றி, 'தூய பஞ்சாக்கரம்' (பருவைந்தெழுத்து) எனவும், அஞ்செழுத்தும் அஞ்சு பதங்களாய் நின்று அஞ்சு பொருளை உணர்த்துதல் உபதேச முறையால் பெற்றுச் சிறந்தாரால் ஓதப்படுதலின் 'சூக்கும பஞ்சாக்கரம்' (நுண்ணைந்தெழுத்து) எனவும் சொல்லப்படும். முன்னது நகாரம் முதலாகவும், பின்னது சிகாரம் முதலாகவும் வரும்.

அஞ்செழுத்தும் அஞ்சு பதம் ஆதல் ஆணையாற்கொள்வதல்லது, வழக்கினாற் கொள்வதன்று. அதனால், 'இவை போல்வன வழக்குநூல் வரையறைக்கு உட்படா' என்பதை ஆசிரியர் தொல்காப்பியனார்,

> 'மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
> அன்றி அனைத்தும் கடப்பா டிலவே'[6]

எனப் புறனடுத்தோதினார்.

அருமறைகள் - பொருள் உணர்தற்கு அரிய இறைவன் நூல்கள். அந்நூல்களில் பரக்க வரும் பொருள் அனைத்தையும் இவ் அஞ்செழுத்து அடக்கி நிற்றலின் "அஞ்செழுத்துமே அருமறைகள் ஆம்" என்றார்.

> 'அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
> அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்'[7]

எனவும்,

> 'அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
> பொருள் நூல் தெரியப் புகின்'[8]

எனவும் வரும் சாத்திர மொழிகளையும் காண்க. கற்றல் - ஓதியுணர்தல்.

"போய்" என்றது, 'நீங்கி' என்றபடி. 'நிறத்தொடு' என ஒடு உருபு விரிக்க. ஏகாரம், அசை. "ஆவனவும்" என்றதனோடு இயைய, 'அஞ்செழுத்தும் கற்க, நெறி அணித்தாதலும்' என எண்ணும்மை விரித்து, 'இரண்டும் ஆகும்' என்க. ஆகும் முடியும். காளத்தியாருக்கும் காண்டற்கு அரிதாய், நீளத்தே நின்ற நெறியாவது, பகலவன் தனது கதிர்களைப் பரக்க வீசிய போதிலும் அவற்றை ஏற்க மாட்டாது இருளில் மூழ்கியிருக்கும் படலம் படர்ந்த கண்போலக் காளத்தி நாதர் தமது திருவருள் நோக்கினைச் செலுத்திய போதிலும் அதனை எய்தமாட்டாது அறியாமையில் அழுந்தியிருக்கும் பெத்தான்ம நிலை. அந்நெறியும் அணித்தாத லாவது அவ்வாறான அறியாமை நீங்க, காளத்தி நாதரது திருவருளை எய்துதல். 'இந்நிலை அஞ்செழுத்தை ஓதி உணர்தலால் உளதாம்' என்றபடி, கண்டீர் , முன்னிலை யசை.

---

6. தொல். சொல். எச்சவியல் நூ. 53-56
7. உண்மை விளக்கம் - 44
8. திருவருட்பயன் - 81

கயிலை

340. நெறிவார் சடையாய் நிலையின்மை நீஒன்(று)
அறியாய்கொல்! அந்தோ! அயர்ந்தாள்; – நெறியில்
கனைத்தருவி தூங்கும் கயிலாயா நின்னை
நினைத்தருவி கண்சோர நின்று. 41

காளத்தி
(ஆற்றாமை கூறுதல்)

341. நின்றும் இருந்தும், கிடந்தும், நடந்தும்யாம்
என்றும் நினைந்தாலும் என்கொலோ! – சென்றுதன்
தாள்வா னவர் இறைஞ்சும் தண்சாரற் காளத்தி
ஆள்வான் அருளாத வாறு. 42

---

***340. பொழிப்புரை :-*** *வழியில் ஒலி செய்யும் அருவி தூங்கும் கயிலாயா! நின்னை நினைத்து என் மகள் கண்ணீர் அருவியாக வெளிப்பட நின்று சோர்ந்தாள். நெறித்த நீண்ட சடையை யுடையவனே! அவள் இறந்துபடுவாள் என்பதை நீ அறியாயா? வந்து அருள் செய்வாயாக என்பதாம்.*

***குறிப்புரை :-*** *"நெறி வார் சடை" என்பதற்கு மேல் உரைக்கப்பட்டது[1]. 'இவளது நிலையின்மை' என அந்த ஒரு சொல் வருவிக்க. நிலை - நிலைபேறு. அஃது இன்மையாவது இறந்துபாடு, ஒன்று - சிறிது. 'ஒன்றும்' என இழிவு சிறப்பும்மை விரிக்க. நெறியில் - வழியில். 'நெறியில் தூங்கும்' என இயையும். 'கண் அருவி சோர நின்று அயர்ந்தாள்' எனக் கூட்டி முடிக்க. அயர்தல் - சோர்தல். இதுவும் செவிலி கூற்று.*

***341. பொழிப்புரை :-*** *குளிர்ந்த சாரலையுடைய காளத்தியப்பரே! தேவர்கள் வந்து வணங்கியும் அவர்களுக்கு இன்னும் அருள் செய்யாத காரணம் என்ன? அவர்களே பயன் பெறாதபோது நாங்கள் நின்றும், இருந்தும் கிடந்தும், நடந்தும் இடையறாது நினைந்தும் யாது பயன்?*

***குறிப்புரை :-*** *"என் கொலோ" என்பதனை இறுதிக் கண் கூட்டுக. நிற்றல் முதலியன அத்தொழில் நிகழும் காலத்தைக் குறித்தன. 'தன் தாள் வானவர் சென்று இறைஞ்சும் காளத்தி ஆள்வான்' என இயைக்க. ஆறு - காரணம். கொல், ஐயம், ஓ அசை. "அருளாதவாறு என்கொல்" என்றது, அருளைப் பெறுதற்கண் எழுந்த வேட்கை மிகுதியால். அங்ஙனம் கூறியதனானே, 'நினைந்தார்க்கு அவன் அருளாமை இல்லை' என்பது பெறப்பட்டது. அருளும் காலத்தை அவன் அறிதலன்றிப் பிறர் அறியுமாறில்லை.*

---

*1. வெண்பா - 15*

கயிலை

(ஆற்றினமை கூறுதல்)

**342.** **அருளாத வாறுண்டே! யார்க்கேனும் ஆக;**
**இருளார் கறைமிடற்றெம் ஈசன் – பொருளாய்ந்து**
**மெய்ம்மையே உன்னில் வியன்கயிலை மேயான்வந்(து)**
**இம்மையே தீர்க்கும் இடர்.** **43**

காளத்தி

**343.** **இடரீர் உமக்கோர் இடம்நாடிக் கொண்டு**
**நடவீரோ காலத்தால்; நாங்கள் – கடல்வாய்க்**
**கருப்பட்டோங்(கு) ஒண்முகில்சேர் காளத்தி காண**
**ஒருப்பட்டோம் கண்டீர் உணர்ந்து.** **44**

---

*342. **பொழிப்புரை :-** இருளைப் போற் பொருந்திய நஞ்சுக் கறையமைந்த கழுத்தையுடைய ஈசன் உண்மையாக எண்ணினால் யார்க்கேனும் அருள் செய்யாமல் இருந்ததுண்டா? ஆகவே கயிலை வாசன் வந்து இப்பிறப்பிலேயே நம் இடரைத் தீர்ப்பார் என்று அறிக.*

***குறிப்புரை :-*** *பொருள் - பொருளியல்பு. அஃதாவது, அவனது இயல்பு, ஆய்தல், ஆய்ந்து உணர்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. இதனை முதலிலும், "யார்க்கேனும் ஆக" என்பதை உன்னில் என்பதன் பின்னும் வைத்து, 'எம் ஈசன் அருளாதவாறு உண்டே' என முடிக்க. 'எமக்கு அருளாதவாறு' என ஒரு சொல் வருவிக்க. "யார்க்கேனும்" என்றது, 'உயர்வு தாழ்வு நோக்காது' என்றபடி. எனவே, 'எமக்கு அருளா தொழிதல் இல்லை' என்றதாம். மேலை வெண்பாவால் ஆற்றாமை கூறிய நாயனார் இவ்வெண்பாவில் ஆற்றினமை கூறினார். "எம் ஈசன்" என்றது, 'அவன்' என்னும் அளவாய் நின்றது.*

*343. **பொழிப்புரை :-** கடலிடத்து சூல்கொண்டு மேலெழுந்து மேகங்கள் சேர்கின்ற காளத்தியைக் காண நாங்கள் மனம் துணிந்தோம். ஆகவே துயர் உறுத்தும் துன்பங்களே! உமக்கோர் இடம் நாடிக் கொண்டு நடவீரோ? செல்லுங்கள் என்றபடி.*

***குறிப்புரை :-*** *"உமக்கு ஓர் இடம் நாடிக்கொண்டு காலத்தால் நடவீர்" என்பதனை இறுதிக்கண் வைத்துரைக்க. "இடரீர்" என உயர் திணையாகக் கூறியது இகழ்ச்சிக் குறிப்பு. இடராவன பலவற்றையும் நோக்கிப் பன்மையாற் கூறினார். "நாடிக்கொண்டு" என்பது ஒரு சொல். "காலத்தால்" என்பது வேற்றுமை மயக்கம்.. கருதப்படுதல் - நீரை நிரம்ப முகத்தல். ஒருப்படுதல் - மனம் இசைதல். கண்டீர், முன்னிலை யசை. 'உணர்ந்து நடவீர்' என இயையும். 'இடராவனவற்றிற்கு இடம் காளத்தி காணாதாரேயன்றிக் கண்டவரல்லர்' என்பது கருத்து.*

கயிலை

344. உணருங்கால் ஒன்றை ஒருத்தெரியக் காட்டாய்;
புணருங்கால் ஆரமுதே போலும்; – இணரில்
கனியவாம் சோலைக் கயிலாயம் மேயாய்,
இனியவா காண்நின் இயல்பு. 45

காளத்தி

345. நின்னியல்பை யாரே அறிவார், நினையுங்கால்!
மன்னியசீர்க் காளத்தி மன்னவனே! – நின்னில்
வெளிப்படுவ ஏழுலகும் மீண்டே ஒருகால்
ஒளிப்பதுவுமா னால்; உரை. 46

---

*344. **பொழிப்புரை :-** அறியுமிடத்து ஒன்றை வடிவம் தெரியுமாறு காட்டு வாயாக. புணருங்கால் ஆரமுதே போலும் பூங்கொத்துக்களையுடைய சோலைகள் நிறைந்த கயிலாயத்தில் உள்ளவனே! நின் இயல்பு இனிமை உடையதாகும்.*

*__குறிப்புரை :-__ இணரில் கனிய - கொத்துக்களில் கனிகளையுடைய. உணருங்கள் - நினைக்கப் புகும் பொழுதும். 'உரு ஒன்றைத் தெரியக் காட்டாய்' என்க (உரு இன்றியே உன்னைப் புணர வல்லவர்) புணருங்கால் நின் இயல்பு ஆரமுதே போலும், (ஆதலின்) இனியவா காண் (நின் இயல்புகள்) மிக இனியவாமாற்றை நீ அறிவாயாக.*

*'இனியவாறு' என்பது ஈறு குறைந்து செய்யுள் முடிபு எய்தி நின்றது. ஆறு - தன்மை அஃது அதனை உடையவற்றைக் குறித்தது. "இனியவா" என்றது உண்மையேயாயினும், "உருத்தெரியக் காட்டாய்" என்றதனால், நகையாடல் போலக் கூறப்பட்டது. புணர்தல் - தழுவுதல். "புணருங்கால் இன்பம் தரும் பொருள்கள் யாவும் வேறுபட்ட பல உருவுடையனவாயே இருக்க, நீ யாதோர் உருவும் இன்றியே, புணருங்கால் பேரின்பம் தருபவனாய் உள்ளாய்" என வியந்து கூறியவாறு. **'சிவனது இன்பம் ஐம்புல இன்பம் போலாது, அவற்றின் வேறு பட்டதோர் இயல்பிற்று' என்பதாம்.** "காண்" என்றது, புதிதாகக் கண்டவர் அதனை முன்னமே கண்டவர்க்கு அறிவித்தல் போன்றதொரு வழக்கு. 'போல்வாய்' எனப்பாடம் ஓதுதலும் ஆம்.*

*345. **பொழிப்புரை :-** நிலை பெற்ற சிறப்பமைந்த காளத்தி மன்னவனே! நினையுமிடத்து உன் பெருமையை யார் அறிய வல்லார்? உன்னிடத்திலிருந்து ஏழு உலகங்களும் தோன்றுகின்றன. மறுபடியும் அவை உன்னிடத்திலேயே ஒடுங்குகின்றன. ஆகவே உன் பெருமையை அளவிட முடியுமோ என்றபடி.*

*__குறிப்புரை :-__ "மன்னிய சீர்" என்பது முதலாகத் தொடங்கி, 'நினையுங்கால் நின்னியல்பை அறிவார் யாரே? உரை' என முடிக்க. மன்னியசீர் - நிலைபெற்ற*

கயிலை

**346.** உரையும் பொருளும், உடலும் உயிரும்,
விரையும் மலரும்போல்; விம்மிப் – புரையின்றி
சென்றவா றோங்கும் திருக்கயிலை எம்பெருமான்
நின்றவா றெங்கும் நிறைந்து. **47**

---

*புகழ். 'என்றும் நிலைபெற்றிருத்தலால் பெற்ற புகழ்' என்க. 'நின்னினின்றும் வெளிப்படுவனாகிய ஏழுலகும்' என உரைக்க. நின்னில், நீக்கப் பொருட்கண் வந்த ஐந்தாம் வேற்றுமை. இதனை ஏழாம் வேற்றுமையாக்கி, "ஒளிப்பதுவும்" என்பதனோடும் கூட்டுக. "மீண்டே ஒருகால்" என்றதனால், 'முன்பு ஒருகால் வெளிப் படுவ' என்பது வருவிக்க. 'ஏழுலகும் முன்பு ஒருகால் நின்னினின்று வெளிப்பட்டு, மீண்டு ஒருகால் நின்னிடமே ஒளிப்படுவ ஆனால்' என ஓதற்பாலதனைச் செய்யுள் நோக்கி இவ்வாறு ஓதினார் "நின்னில் வெளிப்படு ஏழுலகும்" என்பது உடம்பொடு புணர்த்தது. "ஒளிப்பது" என்பது தொழிற்பெயர். அஃது ஆகுபெயராய் அதனையுடைய உலகங்களின்மேல் நின்றது உம்மை. இறந்தது தழுவியது. "ஆனால்" என்பது தெளிவின்கண் வந்தது. தோன்றி ஒடுங்குவனவாகிய அனைத்துப் பொருள்கட்கும் இறைவன் நிலைக்களமாய் இருத்தலின், அவனது அளவை அத்தோன்றி ஒடுங்கும் பொருள்களில் ஒருவராய் உள்ள எவர் அறிதல் கூடும்? ஒருவரும் அறிதல் கூடாது என்பதாம். 'தோன்றி ஒடுங்கும் பொருள்கள் அனைத்திற்கும் இறைவன் நிலைக் களம்' என்பதை மெய்கண்ட தேவர், "வித்துண்டா மூலம் முளைத்தவா"[1] என விளக்கினார். இதனையே பிற்காலத்தில் பட்டினத்து அடிகளும்,*

*'நுரையும், திரையும், நொப்புறு கொட்பும்
வரையில் சீகா வாரியும் குரைகடல்
பெருத்தும், சிறுத்தும் பிறங்குவ தோன்றி
எண்ணில வாகி யிருங்கடல் அடங்கும்
தம்மைபோலச் சராசரம் அனைத்தும்
நின்னிடைத் தோன்றி, நின்னிடை அடங்கும், நீ
ஒன்றினும் தோன்றாய், ஒன்றினும் அடங்காய்'[2]*

*என அருளிச் செய்தார்.*

*346. பொழிப்புரை :- உரையும் பொருளும் போலவும், உடலும் உயிரும் போலவும், மணமும் மலரும் போலவும் பெருகி, குற்றமில்லாமல் சென்றவாறு ஓங்கும் திருக்கயிலை எம்பெருமான் எங்கும் நிறைந்து நிற்கின்றான் என்பதாம்.*

*குறிப்புரை :- புரை - குற்றம், அஃது இங்கு, 'தடை' எனப்பொருள் தந்தது.*

---

1. *சிவஞானபோதம் - சூ.1 அதி 2*
2. *கோயில் நான்மணிமாலை - 24*

காளத்தி

**347.** நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும், ஒன்றின்
மறைந்தைம் புலன்காண வாராய்; – சிறந்த
கணியாரும் தண்சாரற் காளத்தி ஆள்வாய்;
பணியாயால்; என்முன் பரிசு. **48**

---

*விம்மி - பருத்து. "சென்றவாறு" என்பது 'தான் வேண்டிய வாறு' என்றபடி. ஓங்குதல். உயர்தல். 'விம்மி ஓங்கும் திருக்கயிலை... எம்பெருமான் எங்கும் நிறைந்து நின்றவாறு, உரையும் பொருளும் போல்....' என இயைத்து முடிக்க. "எங்கும்" என்பதன்பின் 'எல்லாப் பொருளிலும்' என ஒருசொல் வருவிக்க. உரை - சொல், விரை - மணம், "போல்" என்னும் முதல் நிலை, 'போல்வது' என முற்றுப் பொருள் தந்தது, "பெறுவது கொள்வாரும், கள்வரும் நேர்"[1] என்பதில் "நேர்" என்றது போல, இறைவன் எல்லாப் பொருளிலும் அது அதுவாய்; வேற்றுமையின்றிக் கலந்து நிற்றற்கு சொல்லும் பொருளும் முதலிய மூன்று உவமைகளைக் கூறினார். அவை பொதுப் படப் பிரிப்பற்றதாம் நிலையை உணர்த்தி நின்றன. இறைவன் இவ்வாறு நிற்கும் நிலையே உபநிடதங்களில் 'அத்துவிதம்' எனப்படுகின்றது என்பதைப் பிற்காலத்தில் மெய்கண்ட தேவர் தமது சிவஞான போத நூலாலும், அதன் வார்த்திகத்தாலும் விளக்கினார்.*

*347. **பொழிப்புரை :-** நீ எங்கும் நிறைந்து நின்றாலும், ஒன்றில் மறைந்து ஐம்புலன்களும் காண வருவாயாக, சிறந்த வேங்கை மரங்கள் நிறைந்த குளிர்ந்த சாரலையுடைய காளத்தி மலையை ஆள்பவனே! காட்சி தருவாயாக. ஒன்றில் என்றது கல் மரம் முதலிய யாதேனும் ஒன்றில் என்றபடி.*

*__குறிப்புரை :-__ "சிறந்த.... ஆள்வாய்" என்பதை முதலிற் கொண்டு, இறுதியில் 'முன் பரிசு என்? பணியாய்' என மாற்றி முடிக்க. "பார் அவன் காண்; பாரதனில் பயிர் ஆனான்காண்; பயிர் வளர்க்கும் துளி அவன்காண்; துளியில் நின்ற - நீர் அவன்காண்"[2] என்றாற்போலப் பல இடங்களிலும் 'எல்லாப் பொருளும் அவனே' என்றல், மேலை வெண்பாவிற் கூறியவாறு, எங்கும், எல்லாப் பொருளிலும் உடலில் உயிர்போல வேற்றுமையின்றி அது அதுவேயாய்க் கலந்து நிற்கும் கலப்பு நோக்கியே என்பது, "நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும்" என்றமையால் விளங்கும். 'மறைந்து, ஐம்புலன் ஒன்றின் காண வாராய்' என இயைக்க **'உடலில் உயிர் எங்கும் நிறைந்து நிற்பினும் ஐம் பொறியில் ஒன்றிற்கும் புலனாகாது மறைந்து நிற்றல் போல, எல்லாப் பொருளிலும் நீ நிறைந்து நிற்பினும் ஐம்பொறிகளில் ஒன்றிற் புலனாகாதே மறைந்து நிற்கின்றாய்; உன்னை முன் பரிசு (நாங்கள் நினைக்கும் முறைமை) யாது? பணித்தருள்' என்பது இவ்வெண்பா வின் சிறந்த பொருள்.** நினைத்தல் மனத்தின் தொழிலாயினும் அஃது*

---

1. *திருக்குறள் - 813*
2. *திருமுறை - 6. 86. 6*

கயிலை

**348.** பரிசறியேன்; பற்றிலேன்; கற்றிலேன்; முற்றும்
கரியுரியாய் பாதமே கண்டாய்; – திரியும்
புரம்மாளச் செற்றவனே! பொற்கயிலை மன்னும்
பரமா! அடியேற்குப் பற்று. **49**

---

*ஐம்பொறிகள் உணர்ந்தவற்றையே நினைத்தலல்லது, அவற்றிற்கு உணர வராத பொருளை நினைக்கவல்லது அன்று ஆதலின், "ஐம்புலன் ஒன்றின் காணவாராய்; உன்னை நாங்கள் நினைக்கும் பரிசு என்" என்றார். 'கருவிகள் வழியாக நினைக்க முயலாமல் அருள் வழியால் நினைக்கின் காணப்படுவான்' என்பது, "பணியாய்" என்றதனாற் போதரும் குறிப்புப் பொருள். புலன், பொறிகளை உணர்த்தலின் ஆகுபெயர். காண்டல் - புலப்பட உணர்தல். கணி, வேங்கை மரம், ஆல், அசை.*

*348. பொழிப்புரை :- உன் பரிசு முற்றும் அறியேன். எதிலும் பற்றில்லாதவன். கற்றறியாதவன். யானைத் தோலைப் போர்த்தவனே! யாண்டும் உலாவும் திரிபுரங்களை எரித்தவனே! பொற்கயிலையில் நிலையாகவுள்ள மேலானவனே! அடியேற்குப் பற்று உன் பாதமே. அறிவாயாக.*

*குறிப்புரை :- "திரியும் புரம்" என்பது முதலாகத் தொடங்கி இறுதியில் 'அடியேற்குப் பற்றுக் கண்டாய்' என முடிக்க. பரிசு - பொருள்களின் நன்மை தீமை, அவற்றைப் பகுத்தறியும் அறிவிலேன் என்றபடி, அறிவில்லாமையால் பற்றத் தகுவதனைப் பற்றிலேன். கற்றிலேன் - அறிந்து பற்றினவர்களை அடைந்து கேட்டும் உணர்ந்திலேன். 'கரி உரியாய் பாதமே அடியேற்கு முற்றும் பற்று' என இயைக்க. முற்றும் பற்ற - முற்றுமான (முழுமையான) துணை. 'வேறு துணை ஒன்றும் இன்று' என்பதாம். "பரிசறியேன்" என்பது முதலாகக் கூறியன, "யானாக அத்தன்மையைப் பெறும் ஆற்றல் இலேன்" என்றபடி. உன் பாதமே துணை என அடைந்தேன்' என்பதாம். இனி உன் திருவுள்ளம் இருந்தவாறு செய்க என்பது குறிப்பெச்சம்.*

*"கரி உரியாய்" என்பது முன்னிலை வினைக்குறிப்புப் பெயர். கண்டாய், முன்னிலையசை. திரிபுரம் என்பது, 'திரியும் புரம்' என வினைத்தொகையும் ஆம் என்பது இது போலும் திருமுறை ஆட்சியால் அறிக. திரியும் புரம் வானத்தில் உலாவுகின்ற கோட்டை மதில்கள்.*

*349. பொழிப்புரை :- எல்லா உயிர்களுக்கும் எந்தை பசுபதியே. அவன் இளம் பிறையைச் சூடியவன். வற்றாததாகிய கங்கையைச் சடையில் வைத்திருப்பவன். காளத்தியுள் நின்ற மங்கைசேர்மன். பற்றாவான் என்க, பற்று - பற்றுக்கோடு.*

*குறிப்புரை :- 'எவ்வுயிர்க்கும் பற்றாவான்' என எடுத்துக் கொண்டு. "பசுபதி" முதலிய பெயர்கள் பலவற்றோடும் முடிக்க. பற்று - துணை. பெத்தம், முத்தி*

காளத்தி

**349.** பற்றாவான் எவ்வுயிர்க்கும் எந்தை பசுபதியே
முற்றாவெண் திங்கள் முளைசூடி; — வற்றாவாம்
கங்கைசேர் செஞ்சடையான்; காளத்தி யுள்நின்ற
மங்கைசேர் பாகத்து மன். **50**

கயிலை

**350.** மன்னா! கயிலாய! மாமுத்தம் மாணிக்கம்
பொன்னா மாக்கொண்டு பூணாதே — எந்நாளும்
மின்செய்வார் செஞ்சடையாய்; வெள்ளெலும்பு பூண்கின்ற(கு)
என்செய்வான் ? எந்தாய்! இயம்பு. **51**

---

*என்னும் இரு நிலைகளிலும் எஞ்ஞான்றும் துணையாவான் பசுபதி முதலிய வகையிற் சொல்லப்படும் சிவன் ஒருவனே என்பதாம். பசுபதி - உயிர்கள் எல்லாவற்றிற்கும் தலைவன். இப்பெயர் சிவன் ஒருவனுக்கே உரியதாதலை நோக்குக. ஆதல் - பெருகுதல் "வற்றா" என்னும் பன்மை காலம் பற்றி வந்தது. 'காலந்தோறும் பெருகும்' என்க. மன் - உடையவன்.*

*350. **பொழிப்புரை :-** நிலை பேறுடையவனே! (எல்லா உலகங்கட்கும் மன்னனாக இருப்பவனே எனினுமாம்). கயிலாயத்திலுள்ள சிறந்த முத்து மாணிக்கம் பொன் முதலியவற்றை ஆரமாகக் கொண்டு பூணாமல் எப்போதும் ஒளி செய்கின்ற செஞ்சடையை உடையவனே. வெள்ளெலும்பு பூண்கின்ற காரணம் என்ன? என்ன செய்யும் பொருட்டு இவ்வாறு இருக்கிறாய்?*

***குறிப்புரை :-** மன்னன் - அனைத்துயிரையும் ஆள்பவன். மாமுத்தம், மாணிக்கம் என்பவற்றில் 'இவைகளை' என ஒருசொல் வருவிக்க. பொன் - அழகு. "மின் செய்" என்பதில் செய், உவம உருபு. செய்வான், வான் ஈற்று வினையெச்சம். செய்தல், பயன் தருதல் 'பூணாமைக்குக் காரணம், அவைகளால் தான் சிறக்க வேண்டுவதொரு குறையில்லாமை' என்பதும், 'பூணுதல், தனது நித்தியத் தன்மையை உணர்த்துதற் பயன் நோக்கி' என்பதும் குறிப்புக்கள். "முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா; யாரே அழகுக்கு அழகு செய்வார்"[1] எனப் பிற்காலத்து ஆசிரியரும் கூறினார்.*

*351. **பொழிப்புரை :-** பிற கடவுளரிடத்தில் என்ன பயன் கருதிப் பற்றுக் கொண்டாய்? தோள்களில் பாம்பைக் கட்டியவனே. காளத்தி அம்மானே என்று எப்போதும் துதி செய்யாமல் வீணாகக் காலங் கழிக்கின்றாய். மட நெஞ்சே! சொல்வாயாக.*

***குறிப்புரை :-** 'மட நெஞ்சே, புயம் பாம்பால்... இருந்து ஏனோர் பால்..*

---

*1. நீதிநெறி விளக்கம் - 12*

காளத்தி

351. இயம்பாய்; மடநெஞ்சே! ஏனோர்பால் என்ன
பயம்பார்த்துப் பற்றுவான் உற்றாய்? – புயம்பாம்பால்
ஆர்த்தானே! காளத்தி அம்மானே என்றென்றே
ஏத்தாதே வாளா இருந்து. 52

கயிலை

352. இருந்தவா காணீர்; இதுவென்ன மாயம்!
அருந்தண் கயிலாயத் தண்ணல் – வருந்திப்போய்த்
தானாளும் பிச்சை புகும்போலும்! தன் அடியார்
வானாள, மண்ணாள வைத்து. 53

---

*உற்றாய்? இயம்பாய்' என இயைத்துக் கொள்க. பயம் - பயன். பார்த்து - எதிர் நோக்கி, பற்றுவான் - பற்றுதற் பொருட்டு. புயம் - தோள். ஆர்த்தல் - கட்டுதல். 'புயத்தைப் பாம்பாலே ஆர்த்தானே' என்க. "என்ன பயம் பார்த்து உற்றாய்" என்னும் வினா, 'அவரால் கிடைப்பது யாதும் இல்லை' என்னும் குறிப்புடைத்தாய் நின்றது. 'காளத்தி அம்மான் பணியில் வாளா இருந்து, ஏனோர்பால் பயம் பார்த்து உற்றமையால் நீ அறிவினை இழந்தாய்' என்பது தோன்ற "மட நெஞ்சே" என்றார்.*

*352. பொழிப்புரை :- அருமையான குளிர்ந்த கயிலாயத்து அண்ணல் தன் அடியார்கள் விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் ஆளுமாறு விட்டு விட்டு, தான் வருந்தி சென்று பிச்சையேற்று உண்பான் போலும். இந்தச் செய்தி இருந்த விதத்தைப் பாருங்கள்.*

*குறிப்புரை :- 'கயிலாயத்து அண்ணல், தன் அடியார் வான் ஆளவும், மண் ஆளவும் வைத்து, தான் நாளும் வருந்திப் போய் பிச்சை புகும்போலும்! இது என்ன மாயம்! ஆயினும் இருந்தவா காணீர்' என இயைத்து முடிக்க. முதற்கண், 'தொண்டர்காள்' என முன்னிலை வருவிக்க. 'இருந்தவாறு' என்பது குறைந்து நின்றது. மாயம் - அதிசயம், 'ஆயினும் நிகழலே செய்கின்றது' என்பதை "இருந்தவர்" என்றார். "ஆள" இரண்டும் வினைக்கண் வந்த செவ்வெண். வான் ஆள வைத்தலும், மண் ஆள வைத்தலும் அவரவர் செய்த தவத்திற்கு ஏற்பவாம்.* **'வேண்டுவார் வேண்டும் பயனை வழங்குபவன் பிச்சை புகுகின்றான்'** *என்றால், அஃது அதிசயமே யாயினும், ஊன்றி நோக்கின் அது தன்பொருட்டாகாது பிறர் பொருட்டாய், இயற்கையாய்விடும் - என்பது கருத்து. இவற்குப் பிச்சையிடுவார், 'தந்தவன் தண்டல் செய்கின்றான்' என்னும் உணர்வு தோன்றப் பற்றறுதல் பயன் என்க.*

*353. பொழிப்புரை :- பாதுகாத்து வைக்கப்பட்ட செல்வமே! என்னுடைய*

காளத்தி

353. வைத்த இருநிதியே, என்னுடைய வாழ்முதலே
நித்திலமே, காளத்தி நீள்சுடரே – மொய்த்தொளிசேர்
அக்காலத் தாசை அடிநாயேன்; காணுங்கால்
எக்காலத் தெப்பிறவி யான். 54

கயிலை

354. 'யானென்றும் தானென்(று) இரண்டில்லை' என்பதனை
யானென்றுங் கண்டிருப்பனா னாலும் – தேனுண்(டு)
அளிகள்தாம் பாடும் அகன்கயிலை மேயான்
தெளிகொடான், மாயங்கள் செய்து. 55

---

*வாழ் முதலே! முத்துப் போன்றவனே! காளத்தியின் ஒளிச் சுடரே! இனி வரப்போகும் காலத்தில் என் ஆசை யாதெனில் நான் எப்பிறப்பை எடுப்பேன் என்பதாகும். எத்தகைய பிறப்பையும் எடுக்க மாட்டேன் என்றபடி.*

*குறிப்புரை :-* "வைத்த.... சுடரே, யான் காணுங்கால் எக்காலத்து, எப்பிறவி, ஒளி மொய்த்துச் சேர் அக்காலத்து அடிநாயேன் ஆசை" என இயைத்து முடிக்க.

வைத்த - சேமித்து வைத்த. இரு - பெரிய. வாழ் முதல் - வாழ்விற்கு முதல். நித்திலம் - முத்து. வைத்த நிதி, இளைத்த காலத்தில் உதவும். வாழ்விற்கு முதலாலேதான் வாழ்வு உளதாகின்றது. நித்திலம் - அழகைத் தரும். 'இறைவன் இம்மூன்றும் போல்பவனாய் உள்ளான்' என்பதாம். 'காலம்' என்பது அம்முக்குறைந்து, "கால்" என நின்றது. "பிறவி" என்பதும் ஆகுபெயராய், அஃது உள்ள காலத்தையே குறித்தது. "ஆசை" என்பதன் பின் 'உள்ளது' என்னும் பயனிலை எஞ்சி நின்றது. 'யான் உன்னை நேரே காணுங்காலம், எந்தக் காலத்தில் உளதாகின்ற எனது பிறவிக் காலமோ அந்தக் காலத்தையே அடியேன் அவாவி நிற்கின்றேன்' என்பது இவ்வெண்பாவின் திரண்ட பொருள். 'அந்தக் காலமே எனக்கு ஒளி மிக்க காலமாகும்' என்பதும் கூறப்பட்டது.

*354. பொழிப்புரை :-* அடியேன் என்றும், கயிலாயன் அடியேன் என்றும், இரண்டில்லை, என்பதை யான் உறுதியாகக் கொண்டிருப்பினும் தேனை உண்டு வண்டுகள் பாடும் விசாலமான கயிலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனே! மாயங்கள் செய்யும் அக்கயிலை மேயான் எனக்கு மயக்கத்தை உண்டாக்கி விடுவான் என்றபடி.

*குறிப்புரை :-* "தானென்று" என்பதில் "யானென்றும்" என்பதிற் போல எண்ணும்மை விரிக்க. இரண்டு இல்லை - வேறு வேறாய்ப் பிரிந்து நிற்றல் இல்லை. 'உடலும், உயிரும் போல் இருவரும் ஒன்றியே உள்ளேம்' என்றபடி. 'இவ்வாறு நாங்கள் இருவரும் ஒன்றியிருப்பினும் அவர் என்னோடு இருக்கும்

காளத்தி

355. மாயங்கள் செய்துஐவர் சொன்ன வழிநின்று
காயங்கொண் டாடல் கணக்கன்று; – காயமே
நிற்பதன் றாதலால் காளத்தி நின்மலன்சீர்
கற்பதே கண்டீர் கணக்கு. **56**

---

*இருப்பினை யான் உணராதபடி அவன் எனது அறிவை மறைத்தல் செய்கின்றான்' என்பது பிற்கூற்றின் பொருள். தெளி - தெளிவு. மாயம் - மறைத்தல் 'இரண்டில்லை' என்பது கலைஞானத்தால் உணர வருகின்றது. அவ்வுணர்வு பேதைப் பெண் காம நூற்பொருளை உணர்வது போல்வதேயன்றி, அனுபவ உணர்வு அன்றாகலானும், அனுபவ உணர்வு அவன் அருளவே வரும் ஆகலானும்,*

*.................................. இரண்டில்லை என்பதனை*
*யான் என்றும் கண்டிருப்பன் ஆனாலும் -*
*கயிலை மேயான்*
*மாயங்கள் செய்து தெளிகொடான்*

*என்றார். எனவே, "கண்டிருப்பன்" என்பது கலைஞானத்தையும் "தெளி" என்றது அனுபவ ஞானத்தையும் ஆயின. இறுதியில், 'யான் செய்வது என்' என்னும் குறிப்பெச்சம் வருவிக்க.*

*தெளிவித்தலே இறைவனுக்கு இயல்பாவதன்றி, மறைத்தல் அவனுக்கு இயல்பன்று ஆயினும், உடல் நலத்தையே செய்கின்ற மருத்துவன் கழலையைப் போக்கக் கருவியாற் கீறி அழ வைப்பது போல, அவன் (இறைவன்) ஆணவத்தை மெலிவித்தற்கு அதனது மறைக்கும் ஆற்றலைச் செயற்படுத்தலையே, அவனே மறைத்தலைச் செய்வதாக நூல்கள் கூறும். அவனது ஆற்றல் (சக்தி) ஆணவம் முதலிய மலங்களைச் செயற்படுத்தி மறைப்பினை உண்டாக்கும் பொழுது, 'திரோதான சத்தி' என்றும், மலம் நீங்கியபின் தன்னைக் காட்டியருளும் பொழுது 'அருட் சத்தி' என்றும் பெயர் பெறும். இரண்டும் செயலால் வேறாவன அல்லது பொருளால் வேறல்ல; ஒன்றேயாம். இரண்டும் கருணையேயன்றி, எதுவும் கொடிதன்று, திரோதான சத்தி மறக் கருணை; அருட் சத்தி அறக் கருணை, மறக் கருணையாவது, செயலால் வன்கண்மையுடையது போன்று, பயனால் நலம் செய்வது; அறக்கருணையாவது, செயல், பயன் இரண்டினாலும் இனிதாவது.*

*355. பொழிப்புரை :- உலகில் பிறந்து, ஐம்புலன் சொன்ன வழி நடந்து உடம்பைப் பாராட்டுதல் நல்ல வழக்கமன்று. இந்த, உடம்பு நிலை பெற்றிருக்காது ஆதலால், காளத்தி நின்மலன் சீர் கற்பதே கணக்கு என்பதாம். அதாவது கடவுளைப் போற்றுவதே உய்யும் வழி என்பதை உணர்வாயாக.*

*குறிப்புரை :- முதற்கண், 'உலகீர்' என்னும் முன்னிலை வருவிக்க. "ஐவர்" என்பதை முதலிற் கொள்க. ஐவர் - ஐம்புலக் கள்வர். மாயம் - வஞ்சனை;*

கயிலை

**356.** கணக்கிட்டுக் கொண்டிருந்து காலனார் நம்மை
வணக்கி வலைப்படா முன்னம், – பிணக்கின்றிக்
காலத்தால், நெஞ்சே, கயிலாயம் மேவியநற்
சூலத்தான் பாதம் தொழு. **57**

காளத்தி

**357.** தொழுவாள்; பெறாளே; தோள்வளையும்; தோற்றாள்
மழுவாளன் காளத்தி வாழ்த்தி – எழுவாள்;
நறுமா மலர்க்கொன்றை நம்முன்னே நாளைப்
பெறுமாறு காணீர்என் பெண். **58**

---

*அஃதாவது நல்லவர்போல் காட்டித் தீமையில் வீழ்த்துதல். 'கள்வர்' என்றதற்கு ஏற்ப. "சொன்ன" என்றாராயினும் 'செலுத்தியது' என்பதே பொருள். காயம் - உடம்பு. 'காயத்தை' என உருபு விரிக்க. கொண்டாடுதல் - பாராட்டுதல். அது இயன்ற மட்டும் பேணிக் காத்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. கணக்கு முறைமை. "கணக்கு அன்று" என்பதன்பின். 'ஏன் எனில்' என்பது வருவிக்க. காயமே - காயமோ. சீர் - புகழ். கற்பது - பலகாலும் சொல்லுதல். கண்டீர், முன்னிலை யசை.*

*356. **பொழிப்புரை :-** உலக வாழ்க்கையைச் சதமென்று நம்பி வாழ்ந்து, எமன் நம்மை வணங்கச் செய்து பாசவலையிற் அகல் படுத்துவதற்கு முன்பாக, மாறுபாடு இல்லாமல், காலம் இருக்கும் போதே சூலப்படையை உடைய சிவபெருமான் பாதங்களைத் தொழுவாயாக.*

*__குறிப்புரை :-__ வணக்கி - தாம் சொன்ன படி கேட்க வைத்து, 'படுத்தல்' என்பதில் பிறவினை விகுதி தொகுக்கப்பட்டு, "படா" என வந்தது. பிணக்கு மாறுபாடான எண்ணம். காலத்தால் - காலத்தின்கண், 'இளமையிலே' என்றபடி, வேற்றுமை மயக்கம்.*

*357. **பொழிப்புரை :-** என் மகள், மழுவேந்தியவனது காளத்தியை வாழ்த்தித் தொழுவாள். கைவளைகளைத் தோற்பாள். அவள் திரும்பப் பெற மாட்டாளோ? நாளைய தினம் உன் மணம் பொருந்திய மலர்க் கொன்றையைப் பெறுமாறு அருள் செய்வாயாக. அப்போதுதான் அவள் எழுவாள்.*

*__குறிப்புரை :-__ 'என் பெண் மழுவாளன் காளத்தி வாழ்த்தி எழுவாள்; தொழுவாள்; தன் தோள்வளையும் தோற்றாள். ஆயினும் நறுமாமலர்க்கொன்றை பெறாளே; (இன்று இல்லை என்றாலும்) நாளை நம் முன்னே (அதனைப்) பெறுமாறு காணீர்' எனக் கூட்டிப் பொருள் கொள்க. "பொருளே" என்னும் ஏகாரம் தேற்றம். எழுவாள் - துயில் ஒழிவாள். இதுவும் செவிலி கூற்று. காப்பு*

கயிலை

358. பெண்இன்(று) அயலார்முன் பேதை; பிறைசூடி,
கண்நின்ற நெற்றிக் கயிலைக்கோன், – உண்ணின்ற
காமந்தான் மீதூர நைவாட்குன் கார்க்கொன்றைத்
தாமம்தா, மற்றிவளைச் சார்ந்து. 59

காளத்தி

359. சார்ந்தாரை எவ்விடத்தும் காப்பனவும் சார்ந்தன்பு
கூர்ந்தார்க்கு முத்தி கொடுப்பனவும், – கூர்ந்துள்ளே
மூளத் தியானிப்பார் முன்வந்து நிற்பனவும்
காளத்தி யார்தம் கழல். 60

---

*மிகுதி முதலியவற்றுள் யாதானும் ஒரு காரணத்தால் தலைவி வேறுபட்டவழி, 'இஃது எற்றி னான் ஆயிற்று' எனத்தாயர் ஆராய்வுவழித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றவாறே செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நின்றது. செவிலி தலைவியை "என் பெண்" என்று எடுத்துக் கூறியது, அவள் மாட்டுத் தனக்கு உள்ள அன்பின் மிகுதி தோன்றுதற்கு. செவிலி ஆயத்தாரையும் உளப்படுத்து, "காணீர்" என்றாள். சிவபெருமானை வாழ்த்தியெழுதலும், தொழுதலும் உடையராய்ப் பேரன்பு செய்வார் வினை நீக்கம் பெற்று என்றாயினும் ஒருநாள் அவனைத் தலைப்படவே செய்தல் இதன் உள்ளுறை.*

*358. பொழிப்புரை :- பேதைப் பெண்ணாகிய இவள், அயலார் முன் பிறைசூடியவனும் நெற்றிக் கண்ணை உடையவனுமாகிய கயிலை நாதனாகிய உன் மீது கொண்ட காமத்தால் நைகின்றாள். ஆகையால் அவளைச் சார்ந்து கார்க் கொன்றைத் தாமத்தை அவளுக்குத் தருவாயாக.*

*குறிப்புரை :- 'பிறை சூடியே, கயிலைக் கோனே' என இரு விளிகளையும் முதற்கண் வைத்து, "பெண்" என்பதன்முன் 'என்' என்பதும், "பேதை" என்பதன்பின் 'ஆயினாள்' என்பதும் வருவிக்க. தான், அசை. மீதூர்தல் - புறத்தார்க்குப் புலனாகுமாறு மிகுதல் - எனவே, நாணழிந்தாளாம். தாமம் - மாலை. மற்று. அசை. சார்தல் - பக்கத்தே வருதல். இது "மாலையிரத்தல்" என்னும் துறை. தோழிமேல் வருவது இங்குச் செவிலி மேலாதாய் வந்தது. இது தூதிடையாடலின்[1] வகை. எனவே, பெருந்திணையாம். மெய்யுணர்வாசிரியர் மெய்யுணர் மாணாக்கர் பொருட்டு இறைவனையிரத்தல் இதன் உள்ளுறை.*

*359. பொழிப்புரை :- தம்மைப் பற்றுக் கோடாக அடைந்தாரை எல்லா இடங்களிலும் காப்பனவும், சார்ந்து அன்பு மிகுந்தவர்க்கு முத்தி கொடுப்பனவும்*

---

*1. புறப் பொருள் வெண்பா மாலை -பெருந்திணைப் படலம்.*

கயிலை

**360. தங்கழல்கள் ஆர்ப்ப, விளக்குச் சலன் சலன் என்(று)**
**அங்கழல்கள் ஆர்ப்ப அனலேந்திப் பொங்ககலத்(து)**
**ஆர்த்தா டரவம், அகன்கயிலை மேயாய், நீ**
**கூத்தாடல் மேவியவா, கூறு. 61**

---

*உள்ளே அன்பு பற்றுமாறு தியானிப்பவர்களுக்கு முன் வந்து நிற்பனவும் காளத்தியார் தம் கழல்களே என்றவாறு.*

*குறிப்புரை :- "அன்பு" என்றதை, 'அன்பு கூர்ந்து' என மீட்டும் கூட்டுக. மூளத்தியானித்தல் - ஆழத் தியானித்தல்.*

*360. **பொழிப்புரை :-** வீரக் கழல்கள் ஒலிக்கவும் விளக்குச் சலசல என்று அழல்கள் ஒலிக்கவும், அனலை ஏந்தி, உன் மார்பகத்தில் படமெடுத்து ஆடுகிற பாம்பைக் கட்டி அகன்ற கயிலையில் மேவி இருப்பவனே கூத்தாடல் பொருந்திய விதத்தைக் கூறுவாயாக.*

*குறிப்புரை :- "அகன் கயிலை மேயாய்" என்பதனை முதலிற் கொள்க. தங்கு அழல்கள் ஆர்ப்ப - ஆங்காங்கு எரியும் நெருப்புக்கள் தம் ஒலியை எழுப்ப. "சலன்சலன்" என்பது ஒலிக்குறிப்பு. அம் - அழகிய. "விளக்குப் போலும் அனலை ஏந்தி" என இயைக்க. பொங்கு அகலத்து ஆடு அரவம் ஆர்த்து - அழகு மிகுந்த மார்பின்கண் படம் எடுத்து ஆடுகின்ற பாம்பைக் கட்டி, மேவியவா - விரும்பியவாறு. 'அரசர் முதலியோரை மகிழ்வித்துப் பொருளும், புகழும் பெற வேண்டுவார் செய்யும் செயலை நீ மேற்கொண்டவாறு என்? அதனை நீ கூறு' என்பதாம். 'உனது இயல்புகளைக் கூத்துச் செய்கைகளால் உணர்த்திப் பக்குவிகளை ஆட்கொள்ளவே மேற்கொண்டாய் போலும்' என்பது குறிப்பு.*

*'ஆடும் எனவும் அருங்கூற்றம் உதைத்து வேதம்*
*பாடும் எனவும் புகழ் அல்லது பாவம் நீங்கக்*
*கேடும் பிறப்பும் அறுக்கும் எனக் கேட்டீ ராகில்*
*நாடுந் தொழிலார்க்(கு) அருளல்லது நாட்டலாமே'[1]*

*எனத் திருஞானசம்பந்தர் அருளிச் செய்தமை காண்க.*

*361. **பொழிப்புரை :-** நீல நிறமுடைய முகில்கள் வந்து படிகின்ற உயர்ந்த சிகரங்களையும் அருவிகளையும் உடைய காளத்தியில் எழுந்தருளியிருக்கும் செஞ்சடையினையுடைய எம் ஈசனது திறத்தை, கோலச் சிறுகிளியே உன் பொன் வாயால் தனியாக வந்து மெல்லெனவே கூறுவாயாக.*

*குறிப்புரை :- 'கோலச் சிறுகிளியே, (நீ) வேறாக வந்திருந்து, நின்*

---

1. *திருமுறை 3. 54. 6.*

காளத்தி

**361.** **கூறாய்நின் பொன்வாயால் கோலச்; சிறுகிளியே**
**வேறாக வந்திருந்து மெல்லனவே – நீல்தாவும்**
**மஞ்சடையும் நீள்குடுமி வாளருவிக் காளத்திச்**
**செஞ்சடைஎம் ஈசன் திறம்.** **62**

கயிலை

**362.** **ஈசன் திறமே நினைந்துருகும் எம்மைப்போல்**
**மாசில் நிறத்த மடக்குருகே, – கூசி**
**இருத்தியாய் நீயும் இருங்கயிலை மேயாற்(கு)**
**அருத்தியாய்க் காமுற்றா யாம்.** **63**

---

*பொன்வாயால், எம் ஈசன் திறம் மெல்லெனவே கூறாய்' இயைத்துக் கொள்க. பொன் - அருமை. இதனைப் பேசுதல் பற்றிக் கொள்க. கோலம் - அழகு. வேறாக - தனியாக. வந்து இருந்து - யான் இருக்கும் இடத்திற்கு வந்து இருந்து. நீறாவும் + நீல் தாரும் - நீல நிறம் பொருந்திய. மஞ்சு - மேகம். குடுமி - சிகரம். வாள் - ஒளி. இது காளத்திப் பெருமான் மேல் காதல் கொண்டாள் ஒருத்தி தனது ஆற்றாமையால் தான் வளர்க்கும் கிளியை நோக்கிக் கூறி இரங்கியது. 'ஈசன் வாராவிடினும் அவன் திறத்தை பிறர் சொல்லக் கேட்பின் ஆற்றுதல் உண்டாகும்' என்பது கருத்து. திறம் - குணம். தன் சொல்லைக் கேட்டலும், கேட்டு மறுமொழி கூறுதலும் இல்லாதனவற்றைத் தனது ஆற்றாமையால் அவற்றையுடையனபோல வைத்து இங்ஙனம் கூறுவனவற்றை, 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்பர். இறைவனிடத்தில் பேரன்பு கொண்டவர்களும் அஃறிணைப் பொருள்களை நோக்கி இவ்வாறு கூறுதல் உண்டு.*

*362. பொழிப்புரை :- குற்றமற்ற நிறத்தையுடைய இளமையுடைய நாரையே! ஈசன் திறமே நினைந்து எம்மைப் போல நீயும் உருகுகின்றாய். அதனால் கூச்சத்துடன் இருக்கிறாய். கயிலையில் மேவியிருப்பவனைக் காதலிக்கின்றாய். உன் விருப்பம் நிறைவேற வேண்டும்.*

*குறிப்புரை :- "மாசில் நிறத்த மடக் குருகே" என்பதனை முதலிற் கொள்க. மாசில் நிறம் - வெண்ணிறம். மடம் - இளமை. குருகு - பறவை அஃது இங்கு நீர்நிலையைச் சார்ந்து வாழும் பறவையைக் குறித்தது. 'நீயும் எம்மைப்போல் கூசி இருத்தியாய்' என இயைக்க. கூசியிருத்தல் - ஒடுங்கியிருத்தல். 'இருத்தி' என்னும் முன்னிலை வினையாலணையும் பெயர், 'ஆயினமையால்' என்னும் காரணப் பொருளில் வந்த "ஆய்" என்னும் செய்தென் எச்சத்தை ஏற்று, "ஆம்" என்பதனோடு முடிந்தது. அருத்தி - விருப்பம். அருத்தியுடையதனை "அருத்தி" என்றது உபசார வழக்கு 'காமம் உற்றாய்' என்பது 'காமுற்றாய்' எனக் குறைந்து நின்றது. "ஆம்" என்பது, 'அவன் கொடுத்தானாம்; நான் வாங்கினேனாம்'*

காளத்தி

**363.** காமுற்றா யாமன்றே காளத்தி யான்கழற்கே!
யாமுற்ற துற்றாய்; இருங்கடலே, – யாமத்து
ஞாலத் துயிரெல்லாம் கண்துஞ்சும் நள்ளிருள்கூர்
காலத்தும் துஞ்சாதுன் கண். **64**

கயிலை

**364.** கண்ணும் கருத்துங் கயிலாய ரேஎமக்கென்(று)
எண்ணி யிருப்பவன்யான் எப்பொழுதும்; – நண்ணும்
பொறியா டரவசைத்த பூதப் படையார்
அறியார்கொல்! நெஞ்சே, அவர். **65**

---

*என்றல்போல மேவாமைப் பொருளில் வந்தது. எனவே, ஈற்றடி நகையுள்ளுறுத்த கூற்றாம். அங்ஙனமாயினும் தனது நிலைமையை அதன் மேல் ஏற்றிக் கூறியத னால், ஆற்றாமை மிக்க தலைவிக்கு ஓர் ஆற்றுதல் பிறந்தது. இதுவும் காமம் மிக்க கழிபடர் கிளவி.*

*363. **பொழிப்புரை :-** இருங் கடலே! நீ காளத்தியான் கழற்கே காமுற்றாய். யாம் அடைந்த நிலையை நீயும் அடைந்திருக்கிறாய். இந்த நள்ளிரவில் உலகத்து உயிர்கள் எல்லாம் உறங்கும். இந்த நடுயாமத்திலும் உன் கண்கள் உறங்க வில்லையே! சற்று உறங்குவாயாக என்பதாம்.*

*குறிப்புரை :- 'இருங் கடலே. இருள்கூர் யாமக் காலத்தும் உன் கண் துஞ்சாது. (ஆகலின் நீயும்) யாம் உள்ளது உற்றாய். (அதனால் நீயும்) காளத்தியான் கழற்கே காமுற்றாயாமன்றே' எனக் கூட்டி முடிக்க.*

*கழற்கு - கழலைப் பெறுதற்கு. இரு - பெரிய. யாமம் - இடையாமம். அது துயிலுக்குச் சிறந்த காலம் ஆதலின் உம்மை உயர்வு சிறப்பு. "யாமத்து" என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை. "காலத்தும்" என்பதன் பின் 'ஒலிக்கின்றாய் ஆதலின்' என்பது வருவிக்க. உற்றது - உற்ற துன்பம்.*

*364. **பொழிப்புரை :-** நெஞ்சமே! யான் எப்போதும் கண்ணும் கருத்தும் கயிலாயரே எமக்கு என்று எண்ணி இருக்கின்றேன். புள்ளிகளையுடைய, ஆடுகின்ற, பாம்பைக் கட்டியவரும் பூதப்படையாருமாகிய அவர் என் நிலையை அறியவில்லை போலும்.*

*குறிப்புரை :- 'நெஞ்சே, யான் எப்பொழுதும்' என்று எடுத்துக்கொண்டு, 'படையராகிய அவர் அறியார்கொல்' என முடிக்க. கொல். ஐயம். ஐயத்திற்குக் காரணம் எதிர்ப்படாமை. பொறி - புள்ளி.*

*365. பொழிப்புரை :- நஞ்சு பொருந்திய கண்டத்தையுடைய காளத்தி*

காளத்தி

**365.** நெஞ்சே அவர்கண்டாய் நேரே நினைவாரை
அஞ்சேல்என் றாட்கொண் டருள்செய்வார் நஞ்சேயும்
கண்டத்தார் காளத்தி ஆள்வார் கழல்கண்டீர்
அண்டத்தார் சூடும் அலர். **66**

கயிலை

**366.** அலரோன், நெடுமால், அமரர்கோன், மற்றும்
பலராய்ப் படைத்துக்காத் தாண்டு – புலர்காலத்(து)
ஒன்றாகி மீண்டு பலவாகி நிற்கின்றான்
குன்றாத சீர்க்கயிலைக் கோ. **67**

---

*ஆள்வார் கழல்தான் தேவர்கள் சூடும் மலராகும். அவரை அணுகித் துதிப்பவர்களை அஞ்சாதே என்று ஆட்கொண்டு அருள் செய்வார். ஆதலால் நெஞ்சமே! அவரே கதி என்று காண்பாயாக.*

*குறிப்புரை :- முற்பகுதியை; தம் நெஞ்சை நோக்கியும், பிற் பகுதியை உலகரை நோக்கியும் கூறியவாறாகக் கொள்க. 'நினைவாரை, நேரே 'அஞ்சேல்' என்று ஆட்கொண்டு அருள் செய்வார் - எனவும், 'அண்டத்தார் சூடும் அலர் காளத்தி ஆள்வார் கழல்' எனவும் இயைக்க. "அஞ்சேல்" என்பது வேறு முடிபு ஆகலின் இட வழுவின்று. சூடுதல் - தலைமேற் கொள்ளல். கண்டாய், கண்டீர், முன்னிலை யசைகள்.*

*366. பொழிப்புரை :- குன்றாத சீர்கயிலைக்கோ, பிரமன், திருமால், இந்திரன் ஆகியோரைப் படைத்துக் காத்து ஆண்டு, யுக காலத்தில் ஒடுக்கி, மீண்டும் பலவாகி நிற்கின்றான். இது இறைவனுடைய சிறப்பைக் கூறியதாகும்.*

*குறிப்புரை :- ஈற்றடியை முதலிற் கொள்க. "அலரோன்" முதலிய மூவர்க்கும் படைத்தல் முதலிய மூன்றனையும் நிரலே கொள்க. 'ஆளுதல், அமரரை' என்க. "மற்றும் பலர்" என்றதற்கு தேவர் பலருள் அவரவர்க்கு உரிய தொழிலைக் கொள்க. 'தேவரை அணு பக்கமாக நோக்கின் பலராயினும், சம்பு பக்கமாக நோக்கின் சிவன் ஒருவனே யாம்' என்பது கருத்து. இதனால், 'தேவராவார் அதிகாரக மூர்த்திகள்' என்பது விளங்கும். புலர் காலம் - ஒடுக்கக் காலம், 'அப்பொழுது செயல் இன்மையின் தான் மட்டுமே உளன்' என்பதும், 'மீண்டு' என்றது, 'மறுபடைப்புக் காலத்தில்' என்றபடி. 'பரம்பொருள் ஒன்றோ, பலவோ' என ஐயுறுவார்க்கு, **'ஒடுக்கக் காலத்து ஒன்றாகித் தோற்றக் காலத்தில் பலவாகும்'** எனவும், **'அவ்வாறாகின்றவன் சிவனே'** எனவும் கூறியவாறு.*

*367. பொழிப்புரை :- வில்லில் தொடுத்த மலர் அம்புகளைக் கொண்டு காமன் காளத்திக் கூத்தன் மேல் அன்று குறித்து எய்யவும், இறைவன் திருக்கண்*

காளத்தி

367. கோத்த மலர்வாளி கொண்டனங்கன் காளத்திக்
கூத்தன்மேல் அன்று குறித்தெய்யப் – பார்த்தலுமே
பண்பொழியாக் கோபத்தீப் பற்றுதலும் பற்றற்று
வெண்பொடியாய் வீழ்ந்திலனோ வெந்து. 68

கயிலை

368. வெந்திறல்வேல் பார்த்தற் கருள்செய்வான் வேண்டிஓர்
செந்தறுகண் கேழல் திறம்புரிந்து – வந்தருளும்
கானவனாம் கோலம்யான் காணக் கயிலாயா
வானவர்தம் கோமானே, வா. 69

---

*களைத் திறந்து பார்த்ததும் குணம் நீங்காத கோபத் தீ சுற்றியது. ஓர் ஆதரவும் இல்லாமல் அவன் வெந்து சாம்பலானான்.*

*குறிப்புரை :- 'எத்துணைப் பேரையோ வென்றவர் எத்துணையோ பேர் இருப்பினும் காமனை வென்றவர் ஒருவரும் இலர்; அவனை வென்றவன் சிவன் ஒருவனே' என்பது உணர்த்தியவாறு. 'சிவனடியார்களும் காமனை வென்றார் எனின், அவரும் சிவனது அருளாலே வெல்லுதலின், அவர் வெற்றியும் சிவன் வெற்றியேயாம் என்க. பண்பு, குற்றம் செய்தாரை ஒறுத்துத் திருத்தும் குணம். 'அக் குணத்தோடு கூடியதே சிவனது கோபம்' என்றபடி. அனங்கன் - உருவிலி; மன்மதன். பற்று அற்று - துணையில்லாமல். அஃதாவது 'காப்பவர் இல்லாமல்' என்றபடி.*

*368. பொழிப்புரை :- வெந்திறல்வேல் அருச்சுனனுக்கு, அருள் செய்வதற்காக, ஒப்பற்ற அஞ்சாமையையுடைய பன்றியைக் காரணமாக வைத்து வந்த வேடுவனாம் கோலத்தையாம் காண, கயிலாயா, வானவர்தம் கோமானே வருவாயாக.*

*குறிப்புரை :- 'அஞ்சாமை' என்னும் பொருட்டாகிய "தறுகண்" என்பது ஒரு சொல்லாயினும் பிரித்துக் கூட்டல் முறைமையால் "கண்" என்பதனைத் தனிச்சொல்லாகப் பிரித்து, "செம்மை" என்பதனோடும் கூட்டுக. கேழல் - பன்றி. கேழல் திறம் - கேழலைக் கொல்லும் செயல் திறம். புரிந்து - செய்து. கானவன் - வேடன். கோலம் - வேடம். பார்த்தனைக் கொல்லச் சென்ற பன்றியைக் கொல்லும் முகத்தால் சிவ பெருமான் அவனோடு போர்புரியும் திருவிளையாடலைச் செய்து அவனுக்குப் பாசுபதம் அளித்த வரலாற்றைப் பாரதம் கூறும். அச்செயல் அப்பெருமானது எளிவந்த கருணையை இனிது விளக்கி நிற்றலின், அந்த வடிவத்தைக் காண்பதில் இவ்வாசிரியர் அவாமிக்குடையாராயினார் என்க. பார்த்தன் - அருச்சுனன்.*

காளத்தி

**369.** **வாமான்தேர் வல்ல வயப்போர் விசயனைப்போல்**
**தாமார் உலகில் தவமுடையார்! – தாம்யார்க்கும்**
**காண்டற் கரியராய்க் காளத்தி யாள்வாரைத்**
**தீண்டத்தான் பெற்றமையாற் சென்று.** **70**

கயிலை

**370.** **சென்றிறைஞ்சும் வானோர்தம் சிந்தைக்கும் சேயராய்,**
**என்றும் அடியார்க்கு முன்னிற்பர்; – நன்று**
**கனியவாம் சோலைக் கயிலாயம் மேயார்;**
**இனியவா பத்தர்க் கிவர்.** **71**

---

*369. **பொழிப்புரை :-** தாவிச் செல்லும் குதிரைகள் பூட்டப்பட்ட தேரை யுடைய வெற்றியையுடைய போர்த்திறன் கொண்ட அருச்சுனனைப் போல் இவ்வுலகில் தவமுடையர் யாருளர்? நம்மால் காண்டற்கு அரியராய்க் காளத்தி ஆள்வாரை நாம் தீண்டப் பெற்றமையால் சென்று காண்போமாக.*

***குறிப்புரை :-** வா மான் - தாவிச் செல்லுகின்ற குதிரை. வயம் - வெற்றி. விசயன் - அருச்சுனன். "தாம்" இரண்டில் முன்னது சாரியை 'தவம் உடையார் தாம் உலகில் ஆர்' என மாற்றி யுரைக்க. தாம் - படர்க்கைப் பன்மை இருதிணைப் பொதுப் பெயர். அஃது எழு வாயாய் நின்று பின் வந்த "அரியராய்" என்னும் பயனிலை கொண்டு முடிந்தது. 'தான் சென்று தீண்டப் பெற்றமையால், விசயனைப் போல் தவம் உடையார் உலகில் ஆர்' என்க. சிவபெருமான் பலருக்கு அருள் புரியினும், மெய் தீண்டல் மிக அரிதாம். நாயன்மாருள்ளும் அப்பேறு மிகச் சிலர்க்கே கிடைத்தது. **<u>'பார்த்தன் சிவபெருமானோடு மற்போர் தொடங்கித் கட்டிப் புரண்டான்' என்றால், அவன் செய்த தவம் மிக மிகப் பெரிதேயாம்.</u>** அதனால்தான் திருமுறைகளில் அவன் பல இடங்களில் எடுத்துப் பாராட்டப் படுகின்றான். ''அருச்சுனற்குப் பாசுபதம் கொடுத்தானை. என்மனத்தே வைத்தேனே"[1] "பார்த்தனுக் கன்று நல்கிப் பாசுபதத்தை யீந்தாய். தீர்த்தனே நின்றன் பாதத் திறமலால் திறம் இலேனே"[2] என்றாற்போல வருவன பலவும் காண்க.*

*370. **பொழிப்புரை :-** சென்று வழிபாடு செய்யும் தேவர்களுடைய சிந்தைக்கும் எட்டாதவர். ஆனால் அவர் அடியார்கள் துதிக்கும்போது வந்து முன் நிற்பார். நல்ல கனிகள் நிறைந்த சோலைகளையுடைய கயிலாயத்தில் மேவி இருப்பவராகிய இவர் பக்தர்களுக்கு இனியவர்.*

***குறிப்புரை :-** "கனியவாம் சோலைக் கயிலாயம் மேயார்" என்பதை முதலில்*

---

1. *திருமுறை - 4. 7. 10*
2. *திருமுறை - 4. 63. 8*

காளத்தி

**371. இவரே முதல்தேவர்; எல்லார்க்கும் மிக்கார்;**
**இவர் அல்லர் என்றிருக்க வேண்டா; – கவராதே**
**காதலித்தின் றேத்துதிரேல், காளத்தி யாள்வார்நீர்**
**ஆதரித்த தெய்வமே யாம். 72**

---

*வைத்து, "இவர் பத்தர்க்கு இனியவா நன்று" என முடிக்க. "கனியவாம் சோலைக் கயிலாயம்" என்பதற்குப் பொருள் மேலே[3] உரைக்கப்பட்டது. "சிவபெருமான் பலர்க்கும் மிகச் சேயனாயினும், அடியார்க்கு மிக அணியனாயிருத்தல் மிக நல்லதாகின்றது என்றபடி. "ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்"[1] எனத் தொடங்கும் புறப்பாடலில் ஔவையார் அதியமானைப் பாராட்டியது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*371. பொழிப்புரை :- முதன்மை அமைந்த தேவர் இவரே. எல்லார்க்கும் மேலானவர் இவரல்லர் என்று இருந்து விட வேண்டா. மனம் வேறுபடாமல் பேரன்பு செய்து இன்றிலிருந்தே வழிபடுவீரானால் நீர் விரும்பிய தேவர் காளத்தி நாதரே என்று அறிவீர்.*

*குறிப்புரை :- 'திருக்காளத்தி மலையைத் தமதாகக் கொண்டு ஆளும் தேவராகிய இவரே' என எடுத்துக்கொண்டு உரைக்க. செய்யுளாகலின் சுட்டுப் பெயர் முன்வந்தது. முதல் தேவர் - தலைமைக் கடவுள். எனவே, 'தேவர் பிறர் யாவரும் இவர்தம் பணிக் கடவுளர்' என்பது போந்தது 'இங்ஙனமாகவே - இவர் எல்லாரினும் மேலானவர் - என்பது சொல்ல வேண்டா' என்பது கருத்தாகலின் "எல்லார்க்கும் மிக்கார்" என்றது முடிந்தது முடித்தலாம். 'அன்னரல்லர்' என வருவிக்க. இருத்தல் - அறியாமையுட் பட்டிருத்தல். "இவர் அல்லர் என்று இருக்க வேண்டா" என்றது, மேலதனை எதிர்மறை முகத்தால் வலியுறுத்தியதேயாம். கவர்தல் - இரண்டு படுதல்; ஐயுறுதல் "கவராதே தொழும் அடியார்" என அப்பரும் அருளிச் செய்தார்[2]. ஆதரித்தல் - விரும்புதல். ஆதரித்த தெய்வம் - இட்ட தெய்வம். வேறு வேறு தெய்வங்களை விரும்புதல், 'வேறு வேறு பயன்களை அது அதுவே தரும்' என்னும் எண்ணத்தினாலேயாம். 'அனைத்துப் பயனையும் இவர் ஒருவரே தருதல் உண்மையாகலின், அனைத்துத் தெய்வங்களும் இவர் ஒருவரேயாவர்' என்றார். 'ஆம்' என்பது உயர்திணை ஒருமையாய் நின்றமையின் பன்மையொருமை மயக்கமாம்.*

*372. பொழிப்புரை :- ஆமென்று, நாளை உளவென்று வாழ்வில் இப்போது*

---

*3. திருமுறை - 4. 7. 10*

*1. புறநானூறு*

*2. திருமுறை - 6. 61. 3.*

கயிலை

372. ஆம்என்று 'நாளை உள' என்று வாழ்விலே
தாம்இன்று வீழ்தல் தவமன்று; – யாமென்றும்
இம்மாய வாழ்வினையே பேணா(து) இருங்கயிலை
அம்மானைச் சேர்வ தறிவு. 73

---

*வீழ்ந்து அழுந்துதல் தவமாகாது, யாம் எப்போதும் இந்த நிலையில்லாத வாழ்வைப் போற்றிக் கொண்டிராமல் திருக்கயிலை அம்மானை அடைவதே அறிவாகும்.*

*குறிப்புரை :- 'நாளை உள என்று" என்பதை முதலிலே கொள்க. நாளை - நாளை - என்று தொடர்ந்து வரும் நாள்கள் பல உள; ஆகையால், நாம் செய்ய வேண்டுவதை நாளைச் செய்து கொள்ள முடியும் என்று எண்ணி, (தாம்) மக்கள் பலரும், 'இன்று' என எண்ணப் படும் நாள்களில் உலக மயக்கிலே வீழ்தல் அறிவுடைமையன்று. (ஏனெனில், "இன்றைக்கு இருந்தாரை நாளைக் கிருப்பர் என்று எண்ணவோ திடம் இல்லை"[3] ஆதலின், மனமே) நாம் எந்த ஒரு நாளிலும் இந்த நிலையற்ற வாழ்வை விரும்பாமல், பெரிய கயிலாய மலையில் வீற்றிருக்கும் தலைவனைப் புகலிடமாக அடைந்திருத்தலே அறிவுடைமையாகும் - என வேண்டும் சொற்கள் வருவித்து உரைத்துக் கொள்க.*

*'தவம் ஒன்றே தக்கது' என்பார், தக்கதனை இங்கு "தவம்" என்றார் அஃது இங்கு அதற்குக் காரணமாகிய அறியாமை மேல் நின்றதைப் பின் "அறிவு" என்றது பற்றி அறிக.*

*அன்றறிவாம் என்பது அறம் செய்க[4]*

*என்ற திருவள்ளுவர் வாய்மொழியும் காண்க. 'தகவன்று' எனப் பாடம் ஓதுதலும் ஆம்.*

*373. பொழிப்புரை :- தெரிந்தோ தெரியாமலோ செய்து மிகுதியாகப் பொருந்தி யிருக்கின்ற தீவினைகள் எல்லாம் நல்ல நெறியில் நின்று மேகங்கள் சேர்கின்ற காளத்தி நாதனது பாதங்களைப் பணிந்து பொன் முகலியாற்றில் நீராடினால் போகும்.*

*குறிப்புரை :- அறியாது செய்யும் வினை 'அபுத்தி பூர்வ வினை' என்றும், அறிந்து செய்யும் வினை, 'புத்தி பூர்வ வினை' என்றும் சொல்லப்படும். செய்து - செய்தலால். செறிதல் - திரளுதல். கொடுமை மிகுதி பற்றித் தீவினையையே*

---

*3. "தாயுமானவர் பாடல் - சச்சிதானந்தம் சிவம்"*

*4. திருக்குறள் - 36*

காளத்தி

**373.** அறியாம லேனும், அறிந்தேனும் செய்து
செறிகின்ற தீவினைகள் எல்லாம் – நெறிநின்று
நன்முகில்சேர் காளத்தி நாதன் அடிபணிந்து
பொன்முகலி ஆடுதலும் போம். **74**

கயிலை

**374.** போகின்ற மாமுகிலே, பொற்கயிலை வெற்பளவும்
ஏகின் றெமக்காக; எம்பெருமான் – ஏகினால்
உண்ணப் படாநஞ்சம் உண்டாற்கென் உள்ளுறுநோய்
விண்ணப்பஞ் செய்கண்டாய் வேறு. **75**

---

*கூறினாராயினும் நல்வினையும் உடன் கொள்ளப்படும். பொன்முகலி, திருக்காளத்தி மலையைச் சார ஓடும் யாறு. திருக்காளத்திப் பெருமானது திருவருளால் அவ்வாறு பெற்றுள்ள சிறப்பை உணர்த்தியவாறு. 'நெறிநின்று ஆடுதல்' என இயையும். நெறி நிற்றல், திருமுழுக்காடும் முறைவழி நிற்றல். 'அம்முறைகளுள் தலையாயது சிவவணக்கம்' என்றற்கு. ''காளத்திநாதன் அடிபணிந்து ஆடுதல்" என்றார்.*

*374. பொழிப்புரை :- விண்ணிற் செல்கின்ற மேகங்களே, பொற்கயிலை மலைவரையில் செல்வீர்களாயின், எமக்காக அந்த எம்பெருமானிடம் செல்ல நேர்ந்தால், எவரும் உண்ணுதல் இல்லாத விடத்தை உண்டவற்கு, என் உள்ளே பொருந்திய காம நோய் பற்றி, தனியாக விண்ணப்பம் செய்வீர்களாக.*

*குறிப்புரை :- "கயிலை வெற்பளவும்" என்பதனால், 'வடக்கு நோக்கிப் போகின்ற மாமுகிலே' என்க. எனவே இது வேனிற் காலத்துத் தென்றலால் வருந்தினவள் கூற்றாம். காலத்தால் இது பாலைத் திணை. "எமக்காக இன்று கயிலை வெற்பளவும் ஏகு; ஏகினால்" என்க. எமக்கு என்பது ஒருமைப் பன்மை மயக்கம். எம் பெருமானாகிய உண்டாற்கு என் நோயை வேறு விண்ணப்பம் செய்' என இயைத்து முடிக்க. வேறு - சிறப்பாக 'பொதுவாக நீ விண்ணப்பிக்க வேண்டியவற்றை விண்ணப்பித்தபின், தனியாகச் சிறந்தெடுத்து விண்ணப்பம் செய்' என்றபடி. உள் உறு நோய் - பிறர்க்கு வெளிப்படுத்தலாகாது, உள்ளே மறைத்து வைக்கப்படுகின்ற நோய். கண்டாய், முன்னிலை யசை. இது மேகவிடு தூது. 'உண்ணப்படா நஞ்சை உண்டாற்கு என்னை ஏற்றுக் கொள்ளுதல் ஏலாததன்று' என்பதைக் கூறுக - என்பது குறிப்பு. இஃது உடம்பொடு புணர்த்தல்.*

*375. பொழிப்புரை :- தனியாகவாயினும் காக்க வேண்டிய நிலையிலுள்ள எனக்கு அருள் செய்யாமல் இருப்பது ஏன்? இது பாவமல்லவா? உமாதேவியை இடப்பாகத்தில் கொண்டு காளத்தி மலையை ஆட்சி செய்பவனே, காளை*

காளத்தி

**375.** வேறேயும் காக்கத் தகுவேனே; மெல்லியலாள்
கூறேயும் காளத்திக் கொற்றவனே! – ஏறேறும்
அன்பா! அடியேற்(கு) அருளா(து) ஒழிகின்ற(து)
என்பாவ மேயன்றோ! இன்று. **76**

கயிலை

**376.** இன்று தொடங்கிப் பணிசெய்வேன் யானுனக்(கு)
என்றும், இளமதியே; எம்பெருமான் – என்றும்என்
னுட்காதல் உண்மை, உயர்கயிலை மேயாற்குத்
திட்காதே விண்ணப்பஞ் செய். **77**

---

*ஊர்தியை உடைய அன்பனே! இது உனக்கு நீதியோ? என்றபடி.*

***குறிப்புரை :-*** *"கொற்றவனே, அன்பா" என்னும் விளிகளை முதலிற் கொள்க. "தகுவேனே" என்னும் ஏகாரம் தேற்றம். இதன்பின், 'ஆயினும்' என சொல் வருவிக்க. வேறே - சிறப்பாக. இஃது அளியளாம் காரணத்தால் அமைந்தது. உம்மை சிறப்பு. 'தகுவேனை' என்பது பாடம் அன்று. மெல்லியலாள், உமை. ஏறு - இடபம். 'இன்று அருளாது ஒழிகின்றது' எனக் கூட்டுக. "இன்று" என்பது, 'அருளுவதே உனக்கு என்றும் இயல்பு' என்பதைக் குறித்து நின்றது. ஒழிகின்ற தன் காரணத்தை. "ஒழிகின்றது" எனக் காரியமாக உபசரித்தார். இது தலைவி தனது வேட்கையைத் தானே தலைவனிடம் கூறி. 'வேட்கை முந்துறத்தல்' என்னும் பெருந்திணைத் துறை[1].*

*376. **பொழிப்புரை :-** பிறைத் திங்களே! இன்று தொடங்கி எப்போதும் உனக்கு யான் பணி செய்வேன். உயர் கயிலையில் மேவி யிருப்பவருக்கு என் நெஞ்சத்தில் காதலிக்கும் உண்மையை அந்த எம்பெருமானுக்கு அஞ்சாமல் விண்ணப்பம் செய்வாயாக.*

***குறிப்புரை :-*** *(இளமதி, பெருமான் அணிந்த பிறை. பலர், பெருமான் ஊறும் விடையை நோக்கி, 'நீ எம்பக்கல் வருங்கால்மெல்ல நட' என வேண்டிக் கொள்ளுதல்போல, இவள், பெருமான் அணிந்துள்ள பிறையை நோக்கி வேண்டுகின்றாள்). 'இளமதியே, இன்று தொடங்கி, யான் உனக்கு என்றும் பணி செய்வேன்; என்றும் என்னுள் காதல் உண்மையினை எம்பெருமானாகிய கயிலை மேயாற்கு விண்ணப்பம் செய்' என இயைத்து முடிக்க. "உள்" என்பது இடப் பெயர். அஃது ஆகுபெயராய் ஆங்கு உள்ள நெஞ்சத்தைக் குறித்தது. திட்குதல் - நாத்தடைப்படுதல். இது, 'திக்குதல்' என வழங்குகின்றது.*

---

1. *புறப் பொருள் வெண்பா மாலை*

காளத்தி

377. செய்ய சடைமுடிஎன் செல்வனையான் கண்டெனது
கையறவும், உள்மெலிவும் யான்காட்டப் – பையவே
காரேறு பூஞ்சோலைக் காளத்தி யாள்வார்தம்
போரேறே இத்தெருவே போது. 78

கயிலை

378. போது நெறியனவே பேசி, நின் பொன்வாயால்
ஊதத் தருவன் ஒளிவண்டே, – காதலால்
கண்டார் வணங்கும் கயிலாயத் தெம்பெருமான்
வண்தார்மோந்(து) என்குழற்கே வா. 79

---

*பிறைநுதல் வண்ணம் ஆகின்று; அப்பிறை*
*பதினெண் கணனும் ஏத்தவும் படுமே.*

*என்ப ஆகலின், அப்பிறைக்கு என்றும் பணிசெய்வதாகக் கூறியதில் புதிது ஒன்றும் இல்லை.*

*377. **பொழிப்புரை :-** சிவந்த சடை முடியையுடைய என் செல்வனை யான் கண்டு, எனது துன்பத்தையும் மனமெலிவையும் யான் காட்டுவதற்காக, மேகங்கள் படிகின்ற காளத்தி ஆள்வார்தம் போர்க் காளையே, மெதுவாக இத்தெருவில் போவாயாக.*

***குறிப்புரை :-** கையறவு - செயலற்ற நிலை. உள் மெலிவு - மனச் சோர்வு. யான் காட்ட - நான் நேரே புலப்படுத்தற் பொருட்டு. 'இத் தெருவே பையவே போது' என்க. கார் - மேகம். 'தெருவின்கண்ணே' என உருபு விரிக்க. மேலை வெண்பாவின் உரையிற் கூறியபடி இவள் பெருமான் ஊர்ந்துவரும் விடையை நோக்கி வேண்டினாள். போது - வா; இது 'புகுது' என்பதன் மரூஉ.*

*378. **பொழிப்புரை :-** ஒளி வண்டே! நீ சென்று முறையாகப் பேசி, உன் பொன் வாயால் ஊதத் தருவேன். காதலால் கண்டார் வணங்கும் கயிலாயத்து எம்பெருமானுடைய வளவிய கொன்றை மலர் மாலையை மோந்து என் குழற்கு வருவாயாக.*

***குறிப்புரை :-** "ஒளி வண்டே" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. குழற்கு - குழற்கண்; வேற்றுமை மயக்கம். 'பெருமான் தாரினை மோந்து மீண்டு குழற்கண் வந்தால், குழலும் அத்தாரின் மணத்தினைப் பெற்று, அத்தாரினைச் சூடியதுபோல் ஆகும்' என்னும் கருத்தால் அவ்வாறு செய்யுமாறு கூறினாள். இதுவும் அவளது ஆற்றாமையால் சொல்லிய சொல்லேயாகும். ஆகவே, 'அது பயனுடைய செயல்தானா' என்னும் வினா எழவில்லை. போது நெறியான -*

காளத்தி

**379.** வாவா! மணிவாயால்! மாவின் தளிர்கோதிக்
கூவா திருந்த குயிற்பிள்ளாய்! – ஓவாதே;
பூமாம் பொழில்உடுத்த பொன்மதில்சூழ் காளத்திக்
கோமான் வர, ஒருகாற் கூவு. **80.**

---

*சென்று திரும்பிய வகையில் நிகழ்ந்த செயல்கள். 'பேசி ஊத' என. பொன், ஒளி இவை 'அழகு' என்னும் பொருளன. 'பொன் போலும் வாய்' என உவமையாக்கலும் ஆம். 'ஊதுதற்குரிய பக்குவத்தில் பல மலர்களைப் பறித்துப் பரிசாகத் தருவேன்' என்க. 'உண்ணத் தருவன், தின்னத் தருவன்' என்பன போல, "ஊதத் தருவன்" என்பது செயப்படுபொருள் தொக்கு நிற்க வந்தது.*

*379. பொழிப்புரை :- மாந்தளிர் நீங்காமல் இருக்கும் அழகிய மாஞ்சோலையாற் சூழப்பட்ட பொன் மதில்களையுடைய காளத்திக் கோமான் வர குயிற் பிள்ளாய் ஒருகாற் கூவு. உன் மணி வாயால் மாவின தளிர் கோதிக் கூவாதிருந்த குயிற் பிள்ளாய் வருவாயாக. ஒரு முறை கூவுவாயாக என முடிக்க.*

*குறிப்புரை :- "வா வா" என்னும் அடுக்குத் தொடரை, "பிள்ளாய்" என்பதன்பின் கூட்டியுரைக்க. 'மணிவாயால் ஓவாதே தளிர்கோதிக் கொண்டு' என்க. பூ - அழகு. அன்றி, 'பூம்பொழில், மாம்பொழில்' என இயைத்துரைப்பினும் ஆம். வர - வருமாறு. அஃதாவது, 'நின்பொருட்டாக இறந்து படுவாள் ஒருத்தியைக் காக்க வா எனல். "கூவு" என்பதன்பின் 'அமையும்' என்பது வருவித்து முடிக்க. 'அவன் பேரருளாளன் ஆதலின் ஒருகாற் கூடவே அமையும்' என்பதாம். அடுக்கு, விரைவு பற்றி வந்தது. பிள்ளைப் பிராணிகளில் குயிலும் ஒன்றாதல் பற்றி, "பிள்ளாய்" என்றாள். "வா இங்கே நீ குயிற் பிள்ளாய்"[1] எனத் திருவாசகத்தும் வந்தது.*

*380. பொழிப்புரை :- பொற் கயிலை எம்பெருமான் சிறந்த அன்பினால் புலிக்கால் முனிவராகிய வியாக்கிர பாதரின் மகனாகிய உபமன்யு, பாலுக்காக அழுதவுடன், திருப்பாற் கடலுக்குச் சென்று அவனைக் கூடுக என்று பாற்கடலை ஏவினான்.*

*குறிப்புரை :- கூவுதல் - அழைத்தல். "கூவுதலும்" என்பதன்பின், 'வர' என ஒரு சொல் வருவிக்க. "மேவிய சீர்" என்பது முதலாகத் தொடங்கி, "எம்பெருமான்" என்பதை, "வேண்டுதலும்" என்பதன் பின்னர்க் கூட்டியுரைக்க. புலிக்காலன் - வியாக்கிர பாத முனிவர். பாலன் - அவர் மகன் உபமன்னிய முனிவர் "பாலன் பால் தன்பால்" என்பவற்றில் "பால்" ஏழன் உருபு. 'பாலன் பசிக்குப் பால் வேண்டப் பாற்கடலையே அழைத்துக் கொடுத்த பெருமான் கயிலைப் பெருமான்' என அவனது அருளையும், ஆற்றலையும் வியந்து கூறியவாறு.*

---

*1. குயிற் பத்து - 8*

கயிலை

380. கூவுதலும், 'பாற்கடலே சென்றவனைக் கூடுக' என்(று)
ஏவினான் பொற்கயிலை எம்பெருமான்; மேவியசீர்
அன்பால் புலிக்காலன் பாலன்பால் ஆசையினால்
தன்பால்பால் வேண்டுதலும் தான். 81

காளத்தி

381. தானே உலகாள்வான்; தான்கண்ட வா, வழக்கம்
ஆனான்மற் றார்இதனை அன்(று) என்பார் – வானோர்
களைகண்தா னாய்நின்ற காளத்தி யாள்வார்
வளைகொண்டார்; மால்தந்தார்; வந்து. 82

---

*உபமன்னிய முனிவர்க்காகச் சிவபெருமான் பாற்கடலை அழைத்து கொடுக்க. அதனை அவர் உண்டு மகிழ்ந்த வரலாற்றைக் கோயிற் புராணத்துட்[1] காண்க. "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்"[2] என்னும் திருப்பல்லாண்டினையும், "அத்தர் தந்த அருட்பாற் கடல் உண்டு - சித்தம் ஆர்ந்து தெவிட்டி வளர்ந்தவன்"[3] என்னும் திருத்தொண்டர் புராணத்தையும் காண்க.*

*381. பொழிப்புரை :- தேவர்களின் பற்றுக் கோடாக நின்ற காளத்தி மலையை ஆட்சி செய்பவர் வந்து என் கைவளையல்களைக் கொண்டதோடு காம மயக்கத்தையும் தந்தார். தானே உலகை ஆள்வதற்காகத் தான் கண்ட வண்ணம் வழங்குதலை உடையவன் ஆயின், யார் இதனை அன்று என்பார்?*

*குறிப்புரை :- "வானோர்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. களைகண் - பற்றுக்கோடு, முன்னர்ப் பன்மையாகக் கொள்ள வைத்துப் பின் மூன்று இடங்களில் "தான்" என ஒருமையாகக் கூறியது. 'இப் பெருந்தகைமை யுடையார் தமக்கு அடாதது செய்தார்' என்பது தோன்றுதற்கு.*

> *'எனைத்துணையரா யினும் என்னாம் தினைத்துணையும்*
> *தேரான் பிறன்இல் புகல்' (குறள். 144)*

*என்பதிற்போந்த பால் மயக்கம்போல. தான் கண்ட வா - தான் கருதிய வாறே. வழக்கம் - தனது இயற்கை. ஆனான் - நீங்கான், 'அன்று' எனல். 'இது தகாது' என இடித்துரைத்தல்.*

*382. பொழிப்புரை :- இராவணன் வந்து வண்கயிலை மால்வரையைத் தன் தோள் வலிமையைப் பெரிதெனக் கருதி, தோண்டினான். அவ்வாறு*

---

1. *வியாக்கிர பாதச் சருக்கம் - 24, 25*
2. *பாட்டு - 297 (ஒன்பதாந் திருமுறை)*
3. *திருமலை சருக்கம் - திருமலைச்சிறப்பு - 15*

கயிலை

382. வந்தோர் அரக்கனார் வண்கயிலை மால்வரையைத்
தந்தோள் வலியினையே தாம்கருதி – அந்தோ!
இடந்தார் இடந்திட் டிடார்க்கீழ் எலிபோற்
கிடந்தார் வலியெலாங் கெட்டு. **83**

காளத்தி

383. கெட்ட அரக்கரே, வேதியரே, கேளீர்கொல்!
பட்டதுவும் ஓராது பண்டொருநாள் – ஒட்டக்
கலந்தரனார் காளத்தி யாள்வார்மேற் சென்று
சலந்தரனார் பட்டதுவும் தாம். **84**

---

*தோண்டியபோது பொறியிற் அகப்பட்ட எலிபோல் வலியெலாம் கெட்டுக் கிடந்தான். வருந்தினான் என்றபடி.*

*குறிப்புரை :- ஓர் அரக்கனார், இராவணன். ஆர் விகுதி இழிவு குறித்து நின்றது. இடந்தார் - பெயர்த்தார். 'அடார்' என்பது இங்கு "இடார்" என வந்தது. 'பாறங்கல்' என்பது பொருள். முன்னதற்கு முன் வெண்பாவில், வணங்கினார்க்கு அருளல் சொல்லப்பட்டது. இவ் வெண்பாவில் தருக்கினாரைத் தெறல் சொல்லப்பட்டது. அந்தோ, இரக்கக் குறிப்பு.*

*383. பொழிப்புரை :- தீய அரக்கர்களே, வேதியர்களே, கேளுங்கள்! பட்ட பாட்டையும் எண்ணிப் பாராமல் முன்பொரு காலத்தில் நெருங்கக் கூடிக் காளத்தி நாதன் மீது சென்று சலந்தரன் என்னும் அவுணன் பட்டதையும் கேளீர் எனக் கூட்டுக. வேதியர் என்பது தாருகாவனத்து இருடிகளை.*

*குறிப்புரை :- கெட்ட - தீமையை மிக உடைமையால், பெருமையை முற்ற இழந்த. வேதியர். மீமாஞ்சை மதத்தவர். அவர் தாருகாவன முனிவர் போன்றவர். பட்டது - அசுரர் பலர் அழிந்தமை. 'பண்டு ஒருநாள் சலந்தரனால், (முன்பு பலர்) பட்டதுவும் ஓராது, அரனார்மேல் ஒட்டக் கலந்து சென்று தாம் பட்டதுவும் கேளீர் கொல்? என இயைத்து முடிக்க. ஒட்டுதல் - வஞ்சினம் கூறிப் போர் தொடங்குதல். கலந்து - உடன்பட்டு, 'சலந்தரன்' என்னும் அசுரன் பட்டதாவது, சக்கரத்தால் தலை அறுபட்டு வீழ்ந்தது, எல்லாரையும் வென்று செருக்கு மிக்க சலந்தராசுரன் சிவபெருமானை வெல்லக் கருதி அவர் மேல் சென்றபொழுது, அவர் மண்ணிற் கீறிய சக்கரத்தை எடுத்துத் தலையறுப்புண்டு அழிந்த வரலாற்றைக் கந்த புராணத்துட் காண்க. சிவ பெருமானை - இயல்பாகவே ஏலாது எதிர்க்கும் வேதியரை நோக்கிக் கூற வந்தவர், அசுரருட் சிலரும் அத்தன்மையர் ஆதல் பற்றி, அவர்களையும் உடன் நோக்கிக் கூறினார். அரனாராகிய 'காளத்தி ஆள்வார் மேல்' என்க.*

கயிலை

**384.** **தாம்பட்டது ஒன்றும் அறியார்கொல்! சார்வரே!**
**காம்புற்ற செந்நெற் கயிலைக்கோன் – பாம்புற்ற**
**ஆரத்தான் பத்தர்க் கருகணையார் காலனார்**
**தூரத்தே போவார் தொழுது.** **85**

காளத்தி

**385.** **தொழுது, நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்**
**வழுவில்சீர்க் காளத்தி மன்னன் – பழுதிலாப்**
**பத்தர்களைக் கண்டால், பணிந்தகலப் போமின்கள்**
**எத்தனையும் சேய்த்தாக என்று.** **86**

---

*384. **பொழிப்புரை :-** மூங்கிலில் தோன்றிய செந்நெல் கிடக்கும் கயிலைக் கோன். அவர் பாம்பணிந்த சிவபெருமான். எமன் அவருடைய அடியார்களை நெருங்கமாட்டான். தொழுது தூரத்தே போவான். அவன் முன்பு தான் பட்ட துன்பத்தை அறியானோ என்றபடி. மார்க்கண்டேயர் வரலாற்றை நினைவு கூர்கிறார்.*

*__குறிப்புரை :-__ ஈற்றடியை இறுதியிற் கூட்டுக. அங்ஙனம் கூட்டுதற்குமுன் 'காலனார் பத்தர்க்கு அருகு அணையார்; தொழுது தூரத்தே போவார்' என இயைத்துக்கொள்க. காம்பு - மூங்கில். 'அதினின்றும் விளைந்த நல்ல நெல்லையுடைய கயிலை' என்க. "போவார்" என்பதன்பின், 'ஆம்! முன்பு தான் பட்டதைச் சிறிதாயினும் அறியாது போவாரல்லர்; அதனால் அருகு சார்வாரோ' என ஏதுக் கூறி முடிக்க. முன்புபட்டது[1], மார்கண்டேயர்மேற் சென்று உதையுண்டது இவ் வரலாறும் கந்தபுராணத்துட் கூறப்பட்டது[2]. 'கொல்' என்னும் ஐய இடைச் சொல் எதிர்மறை வினையோடு பொருந்த உடன்பாடாய தேற்றத்தை உணர்த்திற்று. "சார்வரே" என்னும் ஏகாரம் வினாப் பொருட்டாய், எதிர்மறைப் பொருளைத் தந்தது. "காலனார்" என்னும் பன்மை இழிவு குறித்து நின்றது. இழிவாவது மார்க்கண்டேயர் மேல் தன் நிலைமையறியாது சென்று கெட்டது.*

*385. **பொழிப்புரை :-** "குற்றமற்ற சிறப்புக்களையுடைய காளத்தி மன்னனது பழுதில்லாத அன்பர்களைக் கண்டால், அவர்களைப் பணிந்து விலகிச் செல்லுங்கள். எவ்வளவு தூரமாயினும் தொலைவாகச் செல்லுங்கள்" என்று எமன் தன் தூதுவர்க்குச் சொல்லுவான்.*

*__குறிப்புரை :-__ "நமனும்" என்பதை முதலிலும், "சொல்லும்" என்பதை ஈற்றிலும் வைத்துரைக்க. அங்ஙனம் உரைக்குங்கால் "பணிந்து எத்தனையும்*

---

1. *அசுர காண்டம் - ததீசி உத்தரப் படலம்*
2. *அசுர காண்டம்*

கயிலை

386. வென்றைந்தும் காமாதி வேரறுத்து, மெல்லவே
ஒன்ற நினைதிரேல், ஒன்றலாம்; – சென்றங்கை
மானுடையான், என்னை உடையான் வடகயிலை
தானுடையான் தன்னுடைய தாள். 87

காளத்தி

387. தாளொன்றால் பாதாளம் ஊடுருவத், தண்விசும்பில்,
தாளொன்றால் அண்டம் கடந்துருவித் – தோளொன்றால்,
திக்கனைத்தும் போர்க்கும் திறற்காளி காளத்தி
நக்கனைத்தான் கண்ட நடம். 88

---

*சேய்த்தாக அகலப் போமின்கள்" என்க. "நமனும்" என்னும் உம்மை, உயர்வு சிறப்பு. தொழுதல். பத்தரைத் திசை நோக்கியாம். எத்தனையும் சேய்த்து ஆக - நீவிர் செல்லுமிடம் எவ்வளவு தொலைவாக முடியுமோ அவ்வளவு தொலைவு ஆகும்படி. **"சிவனடியாரை நமன் தூதுவர் அணுகார்"**. பிறவி எடுத்த வினைப்பயன் முழுதும் நுகர்ந்து நிறைவெய்திய பின் அந்தவுயிரைச் சிவகணங்கள் நமன் தூதுவரைப் போல சுவர்க்க நரகங்களுக்கு இட்டுச் செல்லாமல் புறவழிச் சாலையில் கயிலைக்கு அழைத்துச் செல்லும் என்பது கருத்து.*

***386. பொழிப்புரை :-*** *ஐம்பொறிகளையும் வெற்றி கொண்டு, காமம் முதலிய அறுபகைகளையும் வேரோடு களைந்து, மெதுவாகப் பொருந்த நினைந் தீர்களானால் போய்ச் சேரலாம். (நினைதிரேல் தாள் ஒன்றலாம் என்க). கையில் மானை ஏந்தியவனும் என்னை ஆட்கொண்டவனும் வட கயிலையை இருப்பிடமாகக் கொண்டவனுமான அவனைக் காணுங்கள் என்று அவனது தாளின் சிறப்பைக் கூறினார்.*

***குறிப்புரை :-*** *'ஐந்தும் வென்று' என்க. ஐந்து, ஐம்புலன். காமாதி - காமம் முதலிய அறு பகைகள். அவை காமம், குரோதம். உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. இவை அவா, வெகுளி, இவறன்மை, மயக்கம், செருக்கு, அழுக்காறு என்பனவாம். 'இவைகளை வேரறுத்து' என்க. ஒன்ற - பொருந்த. 'தாளில் ஒன்ற' எனவும் 'சென்று ஒன்றலாம்' எனவும் இயையும், "தான்" எழுவாய் வேற்றுமை. "உடையான்" என்னும் குறிப்பு வினைப் பயனிலையைக் கொண்டது.*

***387. பொழிப்புரை :-*** *திருக்காளத்தியில் எழுந்தருளிய சிரிப்புக்கு இடமாகிய சிவபெருமான் காளியோடு நடனம் ஆடும்போது, பாதம் ஒன்றால் பாதாளம் ஊடுருவ, தண்விசும்பில் தாள் ஒன்றால் அண்டம் கடந்துருவி, தோள் ஒன்றால் திக்கனைத்தும் போர்க்கும்.*

*சிவபெருமான் காளியோடு ஆடிய நடனக் காட்சியை விவரித்துள்ளார் ஆசிரியர்.*

கயிலை

388. நடம்ஆடும் சங்கரன்தாள் நான்முகனும் காணான்;
படம்ஆடும் பாம்பணையான் காணான்; — விடம்மேவும்
காரேறு கண்டன் கயிலாயன் றன்உருவை
யாரே அறிவார் இசைந்து. **89**

---

***குறிப்புரை :-*** *"திறல் காளி" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. "கண்ட" என்பது, 'உண்டாக்கிய' என்னும் பொருட்டாய், 'செய்வித்த' எனப் பொருள் தந்து, "நக்கனை" என்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. செய்வித்தமையாவது, செய்ததற்கு ஏதுவாய் நின்றமை, 'தாருகன்' என்னும் அசுரனை அழித்த காளி, அதனால், செருக்கி உலகத்திற்கு ஊறு உண்டாக்கச் சிவபெருமான் அவளோடு நடனப் போர் செய்து, அவள் நாணிச் செருக்கொழியப் பண்ணினான் என்பது புராணம். ''தாருகன் - பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்''[1] என இளங்கோவடிகளும் கூறினார். அப்பர் தமது தச புராணத் திருப்பதிகத்து நான்காவது திருப்பாடலில் இவ்வரலாற்றைக் குறித்தருளினார். 'இந்நடனம் ஊர்த்துவ தாண்டவம்' என்பதை "தண் விசும்பில் - தாள் ஒன்றால் அண்டம் கடந்துருவி"[2] எனக் குறித்தருளினார். அஃதாவது ஒருகாலை ஆகாயம் நோக்கிச் செல்ல உயரத் தூக்கி ஆடிய நடனம். 'இந்நடனம் திருவாலங் காட்டில் நிகழ்ந்தது' என்பது ஐதிகம். முதற்கண் இறைவன் மேல் வைத்து "ஊடுருவ" என்றார். போர்க்கும் - மறைக்கும். 'இறைவன் பாதாளம் ஊடுருவும்படி தான் அண்டம் கடந்து உருவித்திக்கனைத்தும் போர்க்கும்' - என இயைத்து முடிக்க.*

***388. பொழிப்புரை :-*** *நடனமாடும் சங்கரனுடைய பாதத்தைப் பிரமனும், காணவில்லை; படமாடுகின்ற பாம்பைப் படுக்கையாகவுடைய திருமாலும் காணவில்லை. அப்படியிருக்க நஞ்சு பொருந்திய கருநிறங் கொண்ட கழுத்தையுடைய கயிலாய நாதனுடைய உருவை யார் இசைந்து அறிவார்?*

***குறிப்புரை :-*** *நான்முகன் (பிரமன்) 'முன்னே முடியைக் கண்டு விட்டுப் பின்னே அடியைக் காண்பேன்'[2] என முயன்று, முதல் முயற்சியிலே தோல்வி யுற்றமை பற்றி "தாள் நான்முகனும் காணான்" என்றார். தாளைப் பாம்பணையான் (மாயோன்) தேடிக் காணாது எய்த்தமை வெளிப்படை. காணாமைக் குறை இனிது புலப்பட வேண்டித் தனித்தனித் தொடராகக் கூறினார். தன், சாரியை, 'இசைந்து அறிவார்' என மாற்றுக. இசைதல் - தம் இச்சையாகத் தாமே காண நினைத்தல். "யாரே அறிவார்" - என்னும் வினா, அறிவார் ஒருவரும் இன்மையைக் குறித்தது. 'அவனே காட்டினாலன்றித் தாமாக ஒருவரும் காண மாட்டார்' என்பது கருத்து.*

---

1. *சிலப்பதிகாரம் - மதுரைக் காண்டம் - வழக்குரை காதை*
2. *திருமுறை - 6. 95. 3*

காளத்தி

**389.** **இசையும்தன் கோலத்தை யான்காண வேண்டி**
**வசையில்சீர்க் காளத்தி மன்னன் – அசைவின்றிக்**
**காட்டுமேல், காட்டிக் காலந்தென்னைத் தன்னோடும்**
**கூட்டுமேல், கூடவே கூடு.** **90**

---

*காண்பார் ஆர்? கண்ணுதலாய்க்*
*காட்டாக் காலே.*

*என்னும் அருட்டிரு மொழியைக் காண்க. இக்கருத்தினை வரும் வெண்பாவில் வெளிப்பட எடுத்துக் கூறுவார்.*

*389. **பொழிப்புரை :-** ஒரு பெண் கூடல் இழைக்கும் போது சொல்வது இது, கூடல் - மணலில் சுழித்துப் பார்க்கும் நிமித்தம். கூடற் சுழியே நீ கூடுவாயாக என்று வேண்டிக் கொள்வது, காளத்தி நாதன் தன் கோலத்தை யான் காண வேண்டிக் காட்டு. மேல், காட்டிக் கலந்தென்னைத் தன்னோடும் கூட்டு. மேல் கூடலே கூடு என்கிறாள்.*

***குறிப்புரை :-** இசையும் - தானே தன் இச்சைப்படி ஏற்கின்ற. கோலம் - வடிவம். எனவே, தனக்கு உருவத்தைப் பிறர் படைத்துத் தர வேண்டாமை விளங்கிற்று. "வேண்டி" என்பதற்கு, 'தான் வேண்டி' என உரைக்க. வசை - குற்றம் அசைவு - தளர்ச்சி அஃதாவது, அருள் பண்ணாமை, "கூடலே" என்பதை முதலிற் கொள்க. "காட்டி" என்றது அனுவாதம். கலத்தல் - எதிர்ப்படுதல். "காட்டுமேல், கூட்டுமேல்" என்பன, 'அவைகளை அவன் செய்தல் உண்டாகும் எனின்' என்னும் பொருள்.*

*அகப்பொருள் நிகழ்ச்சிகளில் தலைவனைப் பிரிந்து ஆற்றாத தலைவி தலைவனது வருகை குறித்துப் பார்க்கும் குறிகளுள் கூடல் இழைத்தல் ஒன்று. அஃதாவது, கண்ணை மூடியிருந்து நிலத்தில் மணலின் மேல் வலக்கைச் சுட்டு விரலால் ஒரு வட்டம் வரைதல், வரைந்துவிட்டு விழித்துப் பார்க்கும் பொழுது வட்டத்தின் இரு முனைகளும் ஒன்று கூட, வட்டம் குறையின்றி நன்கு அமைந்திருப்பின் 'தலைவன் விரைவில் வந்து சேர்வான்' என்பதும், இருமுனைகளும் வேறு வேறாய்ப் போய்விட்டிருப்பின் 'தலைவன் அண்மையில் வாரான்' என்பதும் முடிவுகளாகும். இம்முடிவுகளில் அக்கால மக்கட்கு முழு நம்பிக்கையிருந்தது. இருமுனைகளும் ஒன்று கூடும்படி வரைதலால் அந்த வட்டத்திற்கே 'கூடல்' என்பதும், அதனை வரைதற்கு, 'கூடல் இழைத்தல்' என்பதும், பெயர்களாயின.*

*'நீடு நெஞ்சுள் நினைந்து, கண் நீர்மல்கும்*
*ஓடும் மாலினொடு, ஒண்கொடி மாதராள்*
*மாடம் நீள்மரு கற்பெரு மான்வரின்*

கயிலை

**390.** கூடி யிருந்து, பிறர்செய்யுங் குற்றங்கள்
நாடித்தம் குற்றங்கள் நாடாதே – வாடி
வடகயிலை ஏத்தாதே வாழ்ந்திடுவான் வேண்டில்,
அடகயில, ஆரமுதை விட்டு. **91**

---

*கூடு நீஎன்று கூடல் இழைக்குமே'*[1]

*என அப்பர் பெருமானும் அருளிச் செய்தார். ஆகவே, இப்பாட்டு காளத்திப் பெருமான் மேல் காதல் கொண்டு ஆற்றாளாய தலைமகள் ஒருத்தி, 'அவன் முற்றறிவும், பேரருளும் உடையன் ஆதலின் தன்னைக் காதலித்தார் முன் தான் விரைய வந்து அருள் பண்ணுவான்' - என்னும் உறுதிப்பாடு உடையளாய், 'ஆயினும் அதனைக் கூடல் இழைத்துக் காண்போம்' எனக் கருதி அங்ஙனம் இழைக்கின்றாள் கூற்றாயிற்று. ஆயினும், உண்மையில் இஃது ஆசிரியரது பேரன்பினை, இம்முறையால் வெளிப்படுத்திய கூற்றேயாதல் தெளிவு. இரு வேறிடங்களில் விலகியுள்ளவர் விரைய ஓரிடத்தில் ஒன்று கூடுதலை அறிவித்தற்கு, இருமுனைகள் வேற்றுமை தோன்றாது ஒன்று கூடும் வட்டம் மிகச் சிறந்த குறியாயிற்று.*

***390. பொழிப்புரை :-** கூடியிருந்து, பிறர் செய்யும் குற்றங்களை மட்டும் நாடி, தம் குற்றங்களை நாடாமல் வாடி, வட கயிலையை ஏத்தாமல் வாழ வேண்டுமானால் அருமையான அமுதத்தைவிட்டு இலையை உண்பாராக.*

***குறிப்புரை :-** "இருந்து, நாடி" என்னும் எச்ச வினைகளால் புறங்கூறுவாரது இயல்பினை விளக்கியவாறு. "தம் குற்றங்கள் நாடாதே" என்பதனை முதற்கண் வைத்து உரைக்க.*

*'ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்*
*தீதுண்டோ மன்னும் உயிர்க்கு'*[2]

*என்னும் குறளுக்குப் பரிமேலழகர், 'தம் குற்றங்களில் பிற குற்றங்களைக் காணாது, புறங்கூறலாகிய அந்தக் குற்றத்தைக் கண்டாலே போதும்' என்பது பட உரைத்தமையும் இங்கு நோக்கத்தக்கது. நாடுதல் - ஆராய்தல். ஆராயுங்கால் சிலரைப் பற்றிப் புறங்கூறப் பொருள் கிடைக்காமலே போகலாம் அப்பொழுது அவர்கட்கு அது பற்றித் துன்பமும் உண்டாகலாம் என்பது பற்றி, "நாடி பாடி" என்றார். "ஏத்தாதே வாழ்ந்திடுவான்" என்றது, காலம் முழுவதையும் இப்படிப் பட்ட செயல்களிலே கழித்தலைக் குறித்தது. வான் ஈற்று வினையெச்சம் இங்குத் தொழிற் பெயர்ப் பொருட்டாய் நின்றது. வேண்டுதல் - விரும்புதல். அடகு -*

---

1. *திருமுறை - 5. 88. 8*
2. *திருக்குறள் - 190*

காளத்தி

**391.** விட்டாவி போக, உடல்கிடந்து வெந்தீயிற்
பட்டாங்கு வேமாறு பார்த்திருந்தும் ஒட்டாவாம்
கள்அலைக்கும் பூஞ்சோலைக் காளத்தி யுள்நின்ற
வள்ளலைச்சென் றேத்த மனம். **92**

கயிலை

**392.** மனம்முற்றும் மையலாய் மாதரார் தங்கள்
கனம்உற்றும் காமத்தே வீழ்வர் – புனமுற்(று)
இனக்குறவர் ஏத்தும் இருங்கயிலை மேயான்
றனக்குறவு செய்கலா தார். **93**

---

*இலை. அயிலுதல் - உண்ணுதல். 'அமுதை விட்டு அடகு அயிலல்' என்பது, 'கனியிருப்பக் காய் கவர்தல்' என்பதனோடு ஒத்த ஒரு பழமொழி "அயில" என்பது 'உண்பார்களாக' என அகர ஈற்று வியங்கோள். "அயில்வார்களாக" என்றது, 'அயில்கின்றவர்களோடு ஒத்த அறிவனர்தாம்' என்றபடி. 'ஏத்தாதே வாழ்ந்திடச் சிலர் விரும்புவார்களாயின், அவர் அமுதை விட்டு அடகு அயில்வார்களாக' என்க. இதனால், 'திருவருள்வழி வாராத இன்பம் இன்பமன்று' என்பது கூறப்பட்டது.*

*391. **பொழிப்புரை :-** உயிர்விட்டுப் போக, உடல் தனியாகக் கிடந்து வெம்மையான தீயில் பட்டு எரிவதைப் பார்த்தும், தேன் சிந்தும் பூஞ்சோலைகள் நிறைந்த காளத்தி மலையில் கோயில் கொண்டிருக்கும் வள்ளலைச் சென்று மனம் போற்றவில்லையே என்று ஏங்குகிறார்.*

***குறிப்புரை :-*** *'ஆவி விட்டுப் போக' என மாற்றிக் கொள்க. "உடல்" எனப் பின்னர் வருதலால், விடுதல், உடலை விடுதலாயிற்று. பட்டு - பொருந்தி. ஆங்கு - அதன்கண், பார்த்தல், பல இடங்களில் பல முறை நிகழக் காண்டல். 'பார்த்திருந்தும் (மக்களுடைய) மனங்கள் சென்று வள்ளலை ஏத்த ஒட்டா' என இயைக்க. ஒட்டுதல் - ஒருப்படுதல். ஆம். அசை. 'இஃது அவர்களது வினையிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். இவ் எச்சத்தால், இரங்குதல் பெறப்பட்டது. "பார்த்திருந்தும்" என்றது, 'காட்சியளவையானே உணர்ந்தும்' என்றபடி. "சுடலை சேர்வது சொற்பிரமாணமே"[1] என அருளிச் செய்தார் அப்பர்.*

*392. **பொழிப்புரை :-** மனம் முழுவதும் மையலாய் மாதர்கள் தங்கள் பெருத்த காமத்தில் வீழ்வார்கள். புனத்திற்குச் சென்று கூட்டமான குறவர்கள் வழிபாடு செய்யும் பெரிய கயிலையில் மேவியிருக்கின்ற இறைவனுக்கு வணங்கி வழிபாடு செய்யவில்லையே என ஏங்குகிறார்.*

---

1. *திருமுறை 5. 90. 4*

காளத்தி

393. தாழ்ந்த சடையும், தவளத் திருநீறும்
சூழ்ந்த புல்அதளும், சூழ்அரவும், – சேர்ந்து
நெருக்கி வானோர் இறைஞ்சும் காளத்தி ஆள்வார்க்(கு)
இருக்கும், மா கோலங்கள் ஏற்று. 94

***குறிப்புரை :–*** *"புனம் முற்றும்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. அங்ஙனம் உரைக்குங்கால் "தாழ்ந்து" என்பதை "மையலாய்" என்பதன் பின் கூட்டி அவ்விரண்டையும் "வீழ்வர்" என்பதற்கு முன்னே கூட்டுக. புனம் முற்று இனக் குறவர் - தினைப் புனங்களில் நிறைந்துள்ள, கூட்டமான குறவர், தன். சாரியை - உற செய்தல் ஆளாக்கிக் கொள்ளுதல். கனம் - சுமை. 'சுமையாக உற்றும்' என ஆக்கம் விரிக்க, சுமையாக உறுதலாவது உண்டியும், உறையுளும், மருந்தும் ஆகியவற்றால் புறந்தருதலேயன்றி, ஆடை அணிகலங்களால் சிறப்புச் செய்தலும் கடமையாகி விடுதல். 'மாதாரர் கனம் ஆக' என இயையும். "தங்கள்" என்றது உறவு செய்கலாதாரை. 'தங்கட்கு' என நான்காவது விரிக்க. தாழ்தல் - அழுந்துதல். "மனம் முற்றும் மையலாய்" என்றது, 'அறிவை முற்றிலும் இழந்து' என்றபடி.*

*'மக்களே மணந்த தாரம் அவ்வயிற் றவரை ஓம்பும்*
*சிக்குளே அழுந்தி, ஈசன் திறம்படேன்'*[2]

*என்னும் அப்பர் திருமொழியைக் காண்க. 'அஃது உலகியலின் இயல் பினை விரித்தது' என்பது உணரமாட்டாதார், 'அவர் தாமே மக்களையும், தாரத்தையும் உடையராய் இருந்தார்' எனக் கூறிக் குற்றப்படுவர். 'உலகியலை யான் மேற் கொள்ளா தொழியினும் உடல் ஓம்பலை ஒழிய மாட்டாமையின் உலகியலில் நின்றாரோடு ஒத்தவனாகின்றேன்' என்றபடி. "இனக் குறவர் ஏத்தும்" என்றது, கல்லா மாக்களாகிய குறவராயினும் முன்னைத் தவத்தால் கயிலையருகில் வாழப் பெற்றுச் சிவனை ஏத்துகின்றனர்; 'கற்றறிந்தேம்; நல்லொழுக்கம் உடையேம்' எனச் செருக்குவார் அது செய்யாது, காமத்தே வீழ்கின்றார் - என்பது தோன்றுதற்கு.*

***393. பொழிப்புரை :–*** *நீண்டு தொங்குகின்ற சடையும், வெண்மையான திருநீறும், இடையில் கட்டியுள்ள புலித் தோலும், சூழ்ந்துள்ள பாம்பும் சேர்ந்து, நெருங்கித் தேவர்கள் வணங்குகின்ற காளத்தி மலையை ஆட்சி செய்யும் எம்பெருமானுக்கு அழகாகத் தோற்றமளிக்கும்.*

***குறிப்புரை :–*** *'சடை முதலியன காளத்தி ஆள்வார்க்கு மாகோலங்களாக ஏற்று இருக்கும்' என இயைத்து முடிக்க. 'வானோர் (தம்முள்) நெருக்கிச் சேர்ந்து இறைஞ்சும்' என்க. 'கோலங்களாக' என ஆக்கம் விரிக்க. ஏற்று - ஏற்கப்பட்டு, சிவபிரானது திருக்கோலத்தை வருணித்தவாறு. தவளம் - வெண்மை. அதள் - தோல்.*

*2. திருமுறை 4. 79. 2*

கயிலை

394. ஏற்றின் மணியே அமையாதோ! ஈர்ஞ்சடைமேல்
வீற்றிருந்த வெண்மதியும் வேண்டுமோ! – ஆற்றருவி
கன்மேற்பட் டார்க்கும் கயிலாயத் தெம்பெருமான்
என்மேற் படைவிடுப்பாற்(கு) ஈங்கு. 95

---

*394. **பொழிப்புரை :-** என்மேல் மலர் அம்புகளைப் பெய்யும் காமனுக்கு இறைவனது ஊர்தியாகிய காளையின் மணியே போதாதோ? குளிர்ந்த சடா மகுடத்தின் மேல் கொலு வீற்றிருக்கும் பிறைச் சந்திரனும் வேண்டுமோ? ஆறாகிய அருவிகள் விழும் ஒலியினையுடைய கயிலாயத்து எம்பெருமானும் வேண்டுமோ? காமுற்ற மாதர்க்கு மணியோசையும் நிலவொளியும் துன்பந்தரும் என்க.*

***குறிப்புரை :-*** *ஈற்றடியை முதலிலே கொண்டு, அதன்பின், 'ஆற்று அருவி... எம்பெருமான்' என்பதை வைத்து உரைக்க. ஏறு - இடபம்.*

*பகற் காலத்தில் வெளியே சென்று மேய்கின்ற ஆன் நிரைகள் மாலைக் காலத்தில் ஊரை அடையும் பொழுது எருதுகளின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணிகள் ஒலிக்கும். அவ்வொலி இராக்காலத்தின் வருகையை அறிவிக்கும் அறிகுறிகள் ஆதலின், தலைவரைப் பிரிந்து தனித்திருக்கும் தலைவியர்க்கு அது வருத்தத்தை மிகுவிக்கும். அதனால், ஆற்றாமையுடைய தலைவியாரால் வெறுக்கப்படும் பொருள்களுள் காளைகளின் கழுத்தில் உள்ள மணியும் ஒன்றாம். அம் முறைமை பற்றி வீதியில் திருவுலாப் போதுகின்ற சிவபெருமானது இடபத்தின் கழுத்தில் ஒலிக்கும் மணியையும் அவர் மேற்கொண்ட காதலால் வருந்தும் தலைவி வெறுத்துக் கூறினாள். 'எம்பெருமானது ஏற்றின்' என ஆறாவது விரித்தும். 'அவனது ஈர்ஞ் சடைமேல்' என ஒரு சொல் வருவித்தும் உரைக்க. ''மணியே'' என்னும் ஏகாரம் பிறவற்றினின்றும் பிரித்தலின் பிரிநிலை. அமையாதோ - போதாதோ. கங்கை நீரால் சடை ஈர்ஞ்சடை (குளிர்ந்த சடை) யாயிற்று. ஏற்றின் மணியைவிட வெண்மதியையே பெரிதும் வெறுத்தாள்.*

*படை - ஐங்கணை. அவற்றை விடுப்பவன் மன்மதன். அவனுக்கு உதவி செய்வன ஏற்றின் மணியும், ஈர்ஞ்சடைமேல் வெண்மதியும், "ஈங்கு" என்றது, 'வாழ் இடமே மன்மதனது போர்க்களமாகி விட்ட இந்த இடத்தில்' என்றபடி.*

*ஆற்று அருவி - ஆறுபோலப் பாய்கின்ற அருவிகள். கல் - பாறைகள். ஆர்த்தல் - ஒலித்தல்.*

*"எம்பெருமான்" என்பதை ஆறன் உருபேற்றதாகக் கொள்ளாது, விரியாகக் கொண்டு, 'நும் ஏற்றின்' எனவும், 'நும் சடைமேல்' எனவும் உரைப்பினும் ஆம்.*

காளத்தி

395. 'ஈங்கேவா' என்றருளி, என்மனத்தில் எப்பொழுதும்
நீங்காமல் நீவந்து நின்றாலும் – தீங்கை
அடுகின்ற காளத்தி ஆள்வாய், நான் நல்ல
பணிகின்ற வண்ணம் பணி. **96**

கயிலை

396. பணியாது முன்இவனைப் பாவியேன் வாளா
கணியாது காலங் கழித்தேன்; – அணியும்
கருமா மிடற்றெம் கயிலாயத் தெங்கள்
பெருமான தில்லை பிழை. **97**

---

***395. பொழிப்புரை :-*** *இங்கே வருவாயாக என்று அருள் செய்து, என் மனத்தில் எப்போதும் நீங்காமல் நீ வந்து நின்றாலும் தீங்கைச் சிதைக்கின்ற காளத்தி மலையானே! நான் வந்து உன்னை வணங்குமாறு செய்வாயாக என்பதாம். எனக்கு நன்மையுண்டாகக் கட்டளையிட்டருள் என்றும் கூறலாம்.*

***குறிப்புரை :-*** *'தீங்கை அடுகின்ற காளத்தி ஆள்வாய், நீ என் மனத்தில் எப்பொழுதும் நீங்காமல் (நின்று), - ஈங்கே வா - என்று அருளி வந்து நின்றாலும், நான் நல்லவாறு பணிகின்ற வண்ணம் பணி' எனக் கூட்டி ஓரோர் சொல் வருவித்து முடிக்க.*

*அடுதல் - போக்குதல். "அருளி" என்னும் எச்சம், 'நடந்து வந்தான், ஓடி வந்தான்' என்பவற்றிற்போல வருதல் தொழிலோடு உடன் நிகழும் அடையாய் வந்தது. வந்து - எதிர் வந்து. மனத்தில் நீங்காமல் நிற்றல், இடையறாது நினைத்தலால் ஆம். நினைவு பாவனையாகலின், நேர்வருதல் உண்மையாகக் கொள்ளப்படும். **<u>'கருணை மிகுதியால் நீ நேர்வந்து நிற்பினும், அங்ஙனம் நிற்கும் பொழுது பணிய வேண்டிய முறைகளை நான் அறியேன். அதனால், அதனையும் நீயே அறிவித்தருளல் வேண்டும்' என்றபடி.</u>** "தொண்டனேன் பணியுமா பணியே"[1] என்றது இப்பொருட்டாயும் நிற்கும். "காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக் காலே"[2] என்றமையும் அறியற் பாற்று. ஈற்றடி மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது. 'படுகின்ற' எனப் பாடம் ஓதி, 'நல்ல செயல்களைப் பொருந்துகின்ற வண்ணம்' என உரைப்பினும் ஆம்.*

***396. பொழிப்புரை :-*** *பாவியேனாகிய நான் முன் இவனைப் பணியாமலும் மதியாமலும் வீணாகக் காலத்தைக் கழித்து விட்டேன். இந்தத் தவறு, அழகாகப்*

---

1. *திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா - 1.2*
2. *திருமுறை 6. 95. 3*

காளத்தி

**397.** **பிழைப்புவாய்ப் பொன்றறியேன்; பித்தேறி னாற்போல்**
**அழைப்பதே கண்டாய் அடியேன்; – அழைத்தாலும்**
**என்னா தரவேகொண் டின்பொழில்சூழ் காளத்தி**
**மன்னா தருவாய் வரம்.** **98**

---

*பொருந்தும் கருமையான கழுத்தையுடைய கயிலாயப் பெருமானுடையதன்று. என்னுடையதேயாம் என்க.*

***குறிப்புரை :-*** *'பாவியேன், இவனை முன் பணியாது, கணியாது வாளா காலங் கழித்தேன். அதனால், எங்கள் பெருமானது பிழை இல்லை' என இயைத்து முடிக்க.*

*கணித்தல் - எண்ணுதல்; பலமுறை நினைத்தல். செய்யுளாகலின், "இவன்" என்னும் சுட்டுப் பெயர் முன் வந்தது. அணிதல் - அழகு செய்தல், 'பெருமானது பிழையாக ஒன்றேனும் இல்லை' என்றதனால், 'எல்லாம் எனது பிழையே' என்றதாயிற்று. இக்கருத்தினைப் பட்டினத்து அடிகள், "பாவிகள் தமதே பாவம்" எனவும், "அறுசுவை அடிசில் அட்டினி திருப்பப் புசியா தொருவான் பசியால் வருந்துதல் - அயினியின் குற்றம் அன்று"[1] என்பது முதலிய உவமைகளாலும் விளக்கியருளுதல் காண்க.*

*397. **பொழிப்புரை :-** குற்றமும், குணமும் அறியாதவனாய் உள்ளேன். பைத்தியம் பிடித்தவனைப் போல் அடியேன் அழைக்கின்றேன். காண்பாயாக. நான் அழைத்தாலும் என்னுடைய விருப்பத்தை ஏற்றுக் கொண்டு இனிய பொழில்கள் சூழ்ந்த காளத்தி மன்னா! வரம் தருவாயாக.*

***குறிப்புரை :-*** *பிழைப்பு - குற்றம் செய்தல். இது, 'பிழைத்தல்' எனவும் வரும், வாய்ப்பு - பொருந்துதல். இவை இரண்டும் ஒன்றற்கு ஒன்று மறுதலையாய் நேர்மையினின்று விலகுதலையும், நேர்மையில் நிற்றலையும் குறிக்கும். இத்தொழிற் பெயர்கள் ஆகுபெயராய், அச்செயல்களால் விளையும் செயப்படு பொருள்களை உணர்த்தும். இவை, நூல்களில் சொல்லப்பட்ட விதி விலக்குக்களை இங்குக் குறித்தன.*

*'பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன்'[2]*

*என ஆளுடை அடிகளும் அருளிச் செய்தார். 'இவற்றுள் ஒன்றையும் அறியேன்'*

---

1. *திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 16*
2. *திருவாசகம் - போற்றித் திருவகவல் - 219*

கயிலை

398. வரமாவ தெல்லாம் வடகயிலை மன்னும்
பரமா, உன் பாதார விந்தம் – சிரம்ஆர
ஏத்திடும்போ தாகவந்(து) என்மனத்தில் எப்பொழுதும்
வாய்த்திடுநீ வேண்டேன்யான் மற்று. 99

காளத்தி

399. மற்றுப் பலிபிதற்ற வேண்டா மடநெஞ்சே!
கற்றைச் சடையண்ணல், காளத்தி – நெற்றிக்கண்
ஆரா அமுதின் திருநாமம் அஞ்செழுத்தும்
சோராமல் எப்பொழுதுஞ் சொல். 100

**திருச்சிற்றம்பலம்.**

---

*என்க. அழைத்தல் - விரித்தல். அஃதாவது 'அப்பா, ஐயா, ஆண்டானே, கடவுளே' என்றாற் போலக் கூப்பிடுதல், 'அஃதொன்றை மட்டுமே நான் அறிவேன்' என்பதாம். 'அடியேன் செய்வது அழைப்பதே' என ஒரு சொல் வருவிக்க. "அழைத்தாலும்" என்றது, 'அஃது ஒன்றையே நான் செய்தாலும்' என்றபடி. ஆதரவு - அன்பு. 'அறிவிலனாயினும், அன்புடையன்' எனக் கொண்டு இரங்கியருளல் வேண்டும் என்றபடி. கண்டாய், முன்னிலையசை.*

*398. பொழிப்புரை :- வடகயிலை மன்னும் மேலானவனே! நான் வேண்டுவது எல்லாம் உன் திருவடித் தாமரையே யாகும். தலையார வணங்கும் போது என் மனத்தில் எப்போதும் உன் திருவடித் தாமரையை வைத்திடு. வேறு எதுவும் வேண்டேன்.*

*குறிப்புரை :- 'யான் வேண்டும் வரமாவதெல்லாம்' என்க. "வட கயிலை மன்னும் பரமா" என்பதை முதலிற் கொள்க. "ஆவ தெல்லாம்" என்பது ஒருமைப் பன்மை மயக்கம். சிரம் ஆர - தலை ஆர; என்றதனால். 'வணங்கி' என்பது வருவிக்க. ஆர்தல் - பயனால் நிரம்புதல். "தலையாரக் கும்பிட்டு"[1] என அப்பர் பெருமானும் அருளிச் செய்தார். "ஆக" என்னும் செயவென் எச்சம், 'பொழுது சாய வந்தான்' என்பது போல அக்காலத்தை உணர்த்தி நின்றது. "எப் பொழுதும்" என்றது. 'எத்தனை முறையாயினும்' என்றபடி, "நீ" என்பதன்பின், "எல்லாம்" என்ற எழுவாய்க்குப் பயனிலையாகிய 'அதுவே' என்பது வருவிக்க. மற்று - பிற வரங்கள். 'மாற்று யான் வேண்டேன்' என மாற்றுக. வாய்த்தல் - நேர்படுதல். 'வைத்திடு' என்பது பாடம் அன்று.*

---

1. *திருமுறை - 6. 31. 3*

***399. பொழிப்புரை :-*** *மட நெஞ்சே! இன்னும் பல பிதற்ற வேண்டாம். கற்றைச் சடையண்ணல் காளத்தி நெற்றிக்கண் தெவிட்டாத அமுது. அவனுடைய திருநாமமாகிய ஐந்தெழுத்தை மறவாமல் எப்பொழுதும் சொல்வாயாக!*

***குறிப்புரை :-*** *"மற்றுப் பல பிதற்ற வேண்டா" என்பதை இறுதிக் கண் கூட்டியுரைக்க. மடமை - அறியாமை. அஃதாவது, 'பிறவற்றைச் சொல்லுதலால் பயன் உண்டாகும்' எனக் கருதுதல். அது பிழையாதல் பற்றி அவற்றை, பிதற்றுதலாகக் கூறினார். 'காளத்தி அமுது' என இயையும். அமுது போல்வானை "அமுது" என்றது உவம ஆகு பெயர். ஆராமை - நிரம்பாமை; தெவிட்டாமை அஞ்செழுத்தின் சிறப்பு. மேல் இரு வெண்பாக்களில்[2] சொல்லப்பட்டது. சொல்லும் பொருளுமே தூத்திரியும் நெய்யுமா" என்று தொடங்கியவர், திருநாம அஞ்செழுத்தைச் சோராமல் எப்பொழுதும் சொல்வதில் முடித்தருளிய அருமை அறிந்து பயன் கொள்ளத்தக்கது.*

***கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி முற்றிற்று***

---

*2. வெண்பா 39. 40*

## 10. நக்கீரதேவ நாயனார்

*அருளிச்செய்த*

## திருஈங்கோய்மலை எழுபது

*இறைவன் திருவுளங்கொண்டு எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் பற்பல. அவற்றுள் ஒன்று திருஈங்கோய் மலை என்பது. இதனைத் திருலிங்கநாதமலை என்றும், வெங்கமலை என்றும் கூறுவர். இத்தலத்திற்கு நமது சைவ சமய குரவர்களுள் சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்று உண்டு. மாணிக்கவாசகரும் இத்தலத்தைப் பற்றிக் குறிப்பிட்ட இடங்களும் திருவாசகத்திலும் திருக்கோவையாரிலும் உண்டு. கீர்த்தித் திருவகவலில், "ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்" என்றும், போற்றித் திருவகவலில், "ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி" என்றும் திருவாசகத்திலும், "இடபங்கொடி ஏற்றிவந்து அம்பலத்துள் ஏறும் அரன் மன்னும் ஈங்கோய்மலை" என்றும், "ஈங்கோயில் சிறந்து சிற்றம்பலத்தாடும் எம் கூத்தப் பிரான்" என்றும் திருக்கோவையாரிலும் வருதல் காண்க. இத்தலத்தில் அகத்தியர் ஈ உருவாய் இருந்து இறைவனைப் பூசித்ததாகப் புராணம் கூறும். இதனால் இது ஈங்கோய்மலை என்ற பெயரைப் பெற்றது. கோய் என்பதற்குரிய பொருள்களில் குகை என்பதும் ஒரு பொருளாதலின், குகைகளையுடைய மலை என்ற பொருளில் கோய் மலை ஆயிற்று. பின்னர் அதுவே ஈங்கோய் மலை என்றாயிற்று. ஓசைநயம் பற்றி ஈங்கோய்மலை என்பது ஈங்கோய் என்றாயிற்று.*

*திருச்சிராப்பள்ளி ஈரோட்டுப் பாதையில் உள்ள குளித்தலை ரயில் அடிக்கு வடக்கேயுள்ள அகண்ட காவிரியைக் கடந்து இத்தலத்தை அடைதல் வேண்டும். அகண்ட காவிரியைக் கடக்கப் படகு வசதி உண்டு. அப்படி இரண்டு கல் கடந்து முசிறி என்னும் இடத்தை அடைதல் வேண்டும். அங்கிருந்து கல் சாலை வழியே மேற்கு நோக்கி மூன்று மைல் கடந்தால் இத்தலத்தை அடையலாம். இங்குள்ள இறைவரது திருப்பெயர் மரகதாசலர் என்பது. இறைவியின் திருநாமம் மரகதவல்லி என்றும், மரகதாம்பிகை என்றும் வழங்கப்படுகிறது. கல்வெட்டு, இறைவர் திருப்பெயரைத் திருவீங்கோயூருடையார் என்று குறிப்பிடுகிறது. இத்திருத்தலத்தில் நக்கீர தேவர்க்கும் திருவுருவம் உண்டு. இத்தலத்தின் தீர்த்தம் அமிர்த தீர்த்தம் எனப்படுகிறது. கோயில் சிறிய குன்றின்மேல் உள்ளது.*

*இத்தலத்துடன் இணைத்து இதனருகில் உள்ள வேறு இரண்டு தலங்களைக் கூறுவதுண்டு. அவை கடம்பந்துறை, திருவாட்போக்கி என்பன. திருக்கடம்பந்துறையினைக் காலையிலும், திருவாட்போக்கியினை நண்பகலிலும், திருஈங்கோய் மலையினை மாலையிலும் ஒரே நாளில் கண்டு தரிசித்துப் போற்றினால் பெரும் பேறு உண்டு என்பர். இது குறித்தே, "காலைக்கடம்பர், மத்தியானச் சொக்கர், மாலைத் திருலிங்கநாதர்" என்ற பழமொழியும் வழங்கி வருகின்றது. இவ்வாறு இன்றும் கார்த்திகைச் சோம வாரங்களில் வணங்கி வருகின்றனர்.*

*திருஈங்கோய் மலை, காவிரியின் வடகரைத் தலங்கள் அறுபத்து மூன்றில் இறுதியானதாக அமைந்துள்ளது. அதனை முன்பே சிறப்பித்துப் பாடியவர் நக்கீரதேவ நாயனார். அவரைப் பற்றிய குறிப்புக்கள், 'கயிலை பாதி காளத்தி பாதி யந்தாதி'க் குறிப்பில் தரப்பட்டன.*

*'திருஈங்கோய்மலை எழுபது' - என்பதில் "எழுபது" என்பது எண்ணாகு பெயராய் அத்துணையான வெண்பாக்களைக் குறித்துப் பின் கருவி யாகுபெயராய் அவற்றாலாகிய பிரபந்தத்தைக் குறித்தலின் இருமடியாகுபெயர். நூறு, ஐம்பது, முப்பது ஆகிய பாக்களாலன்றி அறுபது, எழுபது ஆகிய பாக்களாலும் முற்காலத்தில் பிரபந்தங்கள் யாக்கப்பட்டன. அவ்வழக்கம் இக்காலத்தில் மறைந்துவிட்டது. இதன்கண் வரும் எழுபது வெண்பாக்களும் திருஈங்கோய் மலையின் சிறப்பையே கூறி, அது சிவபெருமானது இடமாக விளங்கும் தலைமைப் பாட்டினைக் குறிக்கின்றன.*

*திருஈங்கோய் மலையில் எழுந்தருளியுள்ள முழுமுதற் கடவுளான சிவபிரான் மீது பாடப்பெற்ற எழுபது வெண்பாக்களைக் கொண்ட நூலாதலின் இப்பெயர் பெற்றது. பெருமான் மரகதக் கல்லால் அமைந்தவர். சிவபிரான் ஓங்காரமாகிய பிரணவ வடிவாய் விளங்குதலாலும், எல்லா உயிர்களுக்கும் தோன்றத் துணையாக இருத்தலாலும், அவ்வுயிர்கட்கு வரும் துன்ப துயரங்களைப் போக்கி நல்லருள் பரிபாலிப்பதாலும், தன்னை அன்பினால் வழிபட்டுப் போற்றும் கவலையை அகற்றுதலாலும், உயிர்த் தொகைகட்கு நலமே விளைத்தற் பொருட்டு மறையையும் மற்றைய கலைகளையும் அருளிச் செய்தலுமாகிய திருவருட் செயல்களை நக்கீரர் மனமுருகி இன்பத்தமிழில் பாராட்டுகின்றார்.*

### நூலில் நுவலுஞ் செய்திகள்

***சிவனார் மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரத்தை எரித்தது; அடியவனுக்காகக் காலனை உதைத்தது; காமனை எரித்தது; பிறைமதியைச் சடையில் அணிந்து தேயாமல் பாதுகாத்தது; கங்கைப் பெருக்கைச் சடையில் கொண்டது; ஆலின் கீழ் அருந்தவ முனிவர்களுக்கு அறம் உரைத்தது; ஆலகால நஞ்சினை உண்டு திருநீலகண்டனாகக் காட்சி தந்தது போன்ற செய்திகளை இந்நற்றமிழ் நூலில் நக்கீரர் நவில்கின்றார்.***

***ஈங்கோய் மலை குறிஞ்சி நிலமாகலின் ஆங்கு வாழும் குறவர், குறத்தியர், யானை, புலி, கேழல், ஆளி, அரி, மயில், மரை முதலியனவற்றைப் பேசுகின்றார். இந்நூலிலுள்ள பாடல்கள் அகர வரிசையில் அமைந்துள்ள அற்புதத்தைக் கற்பார் ஊன்றிப் பார்த்திட அறியலாம்.***

***திருச்சிற்றம்பலம்***

**ஓங்காரமாய் நிற்கும் மலை**

**400.** **அடியும் முடியும் அரியும் அயனும்**
**படியும் விசும்பும் பாய்ந்தேறி – நொடியுங்கால்**
**இன்ன தெனஅறியா *ஈங்கோயே* ஓங்காரம்**
**மன்னதென நின்றான் மலை.** **1**

---

*400. குறிப்புரை :- படி - பூமி, விசும்பு - ஆகாயம், நொடியுங்கால் - சொல்லும்போது, மன்னது - நிலைபெற்றது, ஓங்காரம் - பிரணவம், அன்னது எனக்கொண்டு போன்றது என்றும் பொருள் காண்பர்.*

***விளக்கவுரை :-*** *ஒருசமயம் அரியாம் திருமாலும், அயனாம் பிரமனும் முறையே இறைவனது திருவடியையும் திருமுடியையும் காணப் பன்றி வடிவும், அன்ன வடிவும் கொண்டு பூமியை அகழ்ந்தும், ஆகாயத்தில் பறந்தும் சென்றனர். அங்ஙனம் சென்றும் அடிமுடி காணாது திரும்பினர். இந்நிகழ்ச்சியே முதல் மூன்றடிகளில் கூறப்பட்டுள்ளன. இருவரும் தேடியதை முறைப்படுத்திச் செய்யுள் கூறுதலின், இதில் நிரல், நிரை அணி அமைந்து இருப்பதைக் காணலாம். ஈங்கோயே என்று ஈண்டு மலையைக் குறிப்பிட்டிருப்பது இங்குள்ள இறைவனைக் குறித்தற்கே ஆகும். ஆகவே, ஈங்கோய் இடவாகு பெயராகும். அடிமுடி அறிய ஒண்ணா நிலையில் நின்ற இடம் திருவண்ணாமலை என்றாலும், ஈங்கோய் மலையில் நிகழ்ந்துபோலக் கூறி இருப்பது எங்கும் அவ்விறைவனே இருப்பவன் என்பதைக் காட்டுதற்கே ஆம். மேலும் ஓர் இடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை மற்றோர் இடத்தில் நிகழ்ந்ததாகக் கூறும் மரபு பற்றியுமாம். ஓங்காரம் மன்னது என்பது இறைவன் ஓங்கார வடிவமாய் நிலைபெற்றிருப்பதும் இந்த மலையே என்பதை விளக்குவதாகும். ஓங்காரமாம் பிரணவம் பரப்பிரணவம், அபரப்பிரணவம் என இருவகைப்படும். பரப்பிரணவம் என்பது, சச்சிதானந்த சொரூபமாகிய சிவமே இன்பத்தைப் பெருக்கும் தலைமையோடு பொருந்தியது. அபரப்பிரணவம் என்பது மாயா வடிவமாய்ச் சப்த வடிவமாய்ச் சிவ தத்துவ உண்மை ஞானமாகிய தலைமையை உண்டாக்கி ஆன்மாக்களுக்கு எல்லா நன்மைகளையும் தருவது. இந்த அபரப்பிரணவம் பரப்பிரணவத்தை அடையக் கருவி ஆகும். அபரப்பிரணவம் வாசகம்; பரப்பிரணவம் வாக்கியம் (பொருள்). ஓங்காரத்தின் ஒலிவடிவம் இறைவன் எல்லா உயிர்களையும் தொழிற்படுத்துகின்றான் என்பதையும், ஓங்காரத்தின் வரிவடிவம் எல்லா உயிர்களிடத்தும் இறைவன் என்றும் நீங்காமல் உறைகிறான் என்பதையும் காட்டுவதாகும்.*

இங்கே கூறப்பட்ட பொருட் சுருக்கத்தைத் திருமூலர்,

ஓங்காரத் துள்ளே உதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே

எனக் கூறியுள்ளார். இங்ஙனமெல்லாம் பொருள் தரும் நிலையில் "ஓங்கார மன்னது நின்றான் மலை" என்ற தொடர் அமைந்துளது.

அயனும் அரியும் முடியடி தேடியதையும் திருமந்திரம்,

பிரமனும் மாலும் பிரானேநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடிதேடி அரற்றிநின் றாரே

என்று கூறுகிறது. அடிமுடி தேடியும் காணாமைக்குத் திருக்கோவையார்க்கு உரைகண்ட பேராசிரியர் கூறும் காரணம் பொருட் செறிவுடன் காணப்படுகிறது. அது, "புரங் கடந்தான் அடிகளைக் காணுமாறு, வழிபட்டுக் காண்கையாவது, அன்னத்திற்குத் தாமரையும், பன்றிக்குக் காடும் ஆதலால் இவர் இங்ஙனம் தத்தம் நிலைப்பரிசே தேடுதல். இவ்வாறு தேடாது தமது அகங்காரத்தினால் மாறுபட்டுப் பன்றி தாமரையும், அன்னம் காடுமாகப் படர்ந்து தேடுதலால் கண்டிலர். இது நெறியல்லா நெறியாயினவாறு" என்பது, திருக்கோவையார் 86ஆம் பாட்டு உரை.

சைவ எல்லப்ப நாவலர்த் திருவருணைக் கலம்பகத்தில் கூறும் காரணம்:

ஞானக்கண் அதுகொண்டு நாடுமாறு உணராதே
ஏனத்தின் வடிவாகி எகினத்தின் வடிவாகி
அடிதேடி வருவல்என அவனியெலாம் முழுதிடந்து
முடிதேடி வருவல்என முதண்டம்மிசை பறந்தும்
காணரிய ஒருபொருளாய்

என்பது. வெண்பாவின் முதல் மூன்றடியின் கருத்தை அப்படியே தழுவித் திருஞானசம்பந்தர் திருஈங்கோய்மலைப் பதிகத்தில் "செம்மையுற அரியோ டயனும் அறியா வண்ணம் அளவில் பெருமையோடு எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் ஈங்கோய் மலையாரே'' என்று பாடி உணர்த்தியுள்ளார். வில்லிபுத்தூரார் தமது பாரதத்தில் இந்த உண்மையினை நன்கு யாவரும் உணர, ''ஓரேனம் தனத்தேட ஒளித்தருளும் இருபாதத் தொருவன்'' என்று பாடியுமுள்ளார். ஏனம் ஈண்டுத் திருமாலாகிய பன்றி. இவ்வுண்மைகளை உணராத ஒருசிலர், இது கற்பனை என்று கழறா நிற்பர். அவர்கள் உரை, வெற்றுரையென விடுக்க. நக்கீரர் போற்றித் திருக்கலிவெண்பாவிலும்

**மலையை வில்லாய் வளைத்தான் மலை**

401. அந்தவிள மாக்குழவி ஆயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்துக் குறமகளிர் – சந்தின்
இலைவளைக்கை யால்கொடுக்கும் *ஈங்கோயே* மேரு
மலைவளைக்கை வில்லி மலை. 2

---

*பன்றித் திருஉருவாய்க் காணாத பாதங்கள்*
*நின்றவா நின்ற நிலைபோற்றி*
*புண்டரிகத் துள்இருந்த புத்தேள் கழுகுருவாய்*
*அண்டரண்டம் ஊடுருவ ஆங்கோடிப் பண்டொருநாள்*
*காணான் இழியக் கனக முடிகவித்துக்*
*கோணாது நின்ற குறிபோற்றி!*

*என்று பாடியுள்ளார். இவற்றைவிட வேறு சான்றுகள் என்ன வேண்டும்?*

***401. குறிப்புரை :-*** *மா - சிறந்த, குழவி - மான்குட்டி, மாக்குழவி என்பதற்கே மான்குட்டி என்றும் பொருள் காணலாம். (மா என்னும் விலங்கின் பொதுச் சொல் ஈண்டு மானைக் குறித்து நின்றது) ஆயம் - தன் இனமாகிய கூட்டம், கொந்து - பூங்கொத்து, அவிழ் - சிந்தும், சந்தின் இலை - சந்தனத் தழை, வளை - வளையல், வளைக்கை - வளைத்தலைச் செய்த கை. வில்லி மலை ஈங்கோயே என முடிக்க. வில்லி - வில்லையுடையவன்.*

***விளக்கவுரை :-*** *ஈண்டுச் சந்தனத் தழையைத் தேனில் தோய்த்து மான்குட்டிக்குக் குறமகளிர் தேன் கொடுக்கும் நிலையைக் கூறியதுபோலச் சுந்தரரும் திருப்பருப்பத மலைத் தேவாரத்தில், குறவர்கள் யானைக்குத் தேன் ஈந்ததை,*

*ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலில் திரியத்*
*தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி*
*மானக்குற அடல்வேடர்கள் இலையால்கலை கோலித்*
*தேனைப்பிழிந் தினிதூட்டிடும் சீபர்ப்பத மலையே*

*என்று பாடியுள்ளார். ஈங்கோய் ஈண்டு மலைநிலையிலேயே குறிக்கப்பட்டுள்ளது. முப்புரங்களை அழிக்குங்கால் இறைவன் மேருமலையை வளைத்து வில்லாகக் கொண்டான். இரண்டாவது வளை என்னும் மொழி வளைத்தல் என்ற பொருளில் அமைந்துளது. மேருமலை வளைந்து இறைவனுக்கு வில்லாய் விளங்கும் நிலையினைச் சுவைபடக் குமரகுருபரர்,*

*பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்கும்மெய்ப் பாதியும்அத்*
*தார்பெற்ற வேணியும் தந்தார் தியாகர் தடம்புயத்தின்*
*சீர்பெற் றிலேம்என்று நாணால் வணங்கிச் சிலைஎனவும்*

**நோய் தீர்ப்பான் மலை**

**402.** அம்பவள வாய்மகளிர் அம்மனைக்குத் தம்மனையைச்
செம்பவளம் தாளன்னச் சீர்க்குறத்தி – கொம்பின்
இறுதலையி னால்கிளைக்கும் ஈங்கோயே நம்மேல்
மறுதலைநோய் தீர்ப்பான் மலை. **3**

---

*பேர்பெற்ற தால்பொன் மலைகுனித் தார்எம்பி ரான்என்பரே*

*என்று பாடிக் களித்தார். தேன், மலைநாட்டுப் பொருள்களில் ஒன்று. மிகுதியாகவும் கிடைக்கக்கூடியது. ஆதலினால்தான் உண்ணும் வேற்றுப் பொருள்களையும் தேனுடன் கலந்து உண்ணுதல் குறிஞ்சிநில மக்களின் இயல்பாயது. ஆறாவது பாடலிலும் மந்தி நான்ற நறவத்தை விரலால் தேன்தோய்த்தூட்டும் என்றும் கூறியிருப்பதையும் அறியவும். "வரை செய் மாக்களிறு இளைவெதிர் வளர்முளை அளைமிகு தேன் தோய்த்துப் பிரசவாரிதன் இளம்பிடிக்கு அருள்செய்யும்" என்பது பெரிய திருமொழி. ஈங்கோய் மலையில் குறவரும் அருளுடையவர்.*

***402. குறிப்புரை :-** அம் - அழகிய, அம்மனைக்கு - அம்மனை என்னும் விளையாட்டிற்கு, தம் + அனை - தம்முடைய தாயை, அன்னை என்பது செய்யுள் விவகாரத்தால் அனை என நின்றது. கொம்பு - கிளை, இறுதலை - நுனி, முனை. கிளைக்கும் - நிலத்தைக் கீறும், மறுதலை - உடல்நிலைக்கு மாறாக வரும்.*

***விளக்கவுரை :-** குறத்தியர்தம் உதடு இயற்கையிலேயே செம்மை நிறம் பெற்று விளங்குதலின் "அம்பவள வாய் மகளிர்" என்று வர்ணிக்கப்பட்டது. அம்மானை என்பது ஒருவகை விளையாட்டைக் குறிக்கும் சொல். அஃது ஈண்டு அம்மனை என நிற்கிறது. இதனை மும்மகளிர் கூடி விளையாடுவர். அவர்களுள் ஒருத்தி ஒரு கருத்தைக் கூறிக் காயை மேலே எறியும்பொழுது, ஒருத்தி அதனை ஐயம் உற்று வினாவுவாள் போன்று வினாவிக் காயை எறிவள். அவ்வினாவுக்கு விடை கூறுவாள் போன்று மூன்றாமவள் கூறிக் காயை எறிவள். இதனைக் கீழ்வரும் அம்மானைப் பாட்டு ஒன்றால் தெளியலாம்.*

*மாசிலாத் தென்விரிஞ்சை மார்க்க சகாயலிங்கர்
வேசையர்பால் தூதுசொல்லி மீண்டனர்காண் அம்மானை
வேசையர்பால் தூதுசொல்லி மீண்டனரே யாமாயின்
விசைமுனை வெட்கம் அவர்க்கிலையே அம்மானை
இல்லாமல் தலைஇறக்கம் ஏன்வந்த தம்மானை.*

*(விரிஞ்சிபுரத்துச் சிவலிங்கம் ஒரு பிராம்மணச் சிறுவனுக்காக முடி சாய்த்து இருத்தலின், இங்ஙனம் கற்பித்து பாடப்பட்டது). அம்மானை ஆடும்போது, முத்து, பவழம், மாணிக்கம் ஆகிய பொருள்கள் ஆடும் காய்களாக அமைவது*

**மாகடல் விடமுண்டான் மலை**

**403.** அரிகரியைக் கண்டஇடத் தஞ்சலுப்பாய் ஓடப்
பிரிவரிய தன்பிடியைப் பேணிக் – கரிபெரிதும்
கையெடுத்து நீட்டிக் கதம்சிறக்கும் ஈங்கோயே
மையடுத்த கண்டன் மலை. **4**

---

*உண்டு. இதனை மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழின் தொடர்களால் தெளியலாம். அவை முத்தம் அழுத்திய அம்மனை, தொத்து மணி; திரளில் செயும் அம்மனை, வித்துருமத்தில் இழைத்தவும் (வித் துருமம் - பவழம்) என்பன. அம்மானை ஆடுங்கால் மகளிர் பாடிக்கொண்டு ஆடுவர் என்பது, "கருந்தடங் கண்ணார் கழல்பந் தம்மானைப் பாட்டயரும் கழுமலமே" என்ற சம்பந்தர் தேவாரத்தால் தெரியவருகிறது. இறைவன் ஆன்மாக்களைப் பற்றும் நோயைத் தீர்க்கவல்லான் என்பது, "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்தன்னை" என்ற அப்பர் தேவாரத்தால் அறியக் கிடக்கிறது. உயிரைப் பிடித்துள்ள பிறவிநோய், உடலைப் பிடித்துள்ள வினை நோய் ஆகிய இரண்டையும் தீர்க்க வல்லான்.*

***403. குறிப்புரை :-*** *அரி - சிங்கம், கரி - ஆண் யானை, பிடி - பெண் யானை, பேணி - காத்து, கதம் - கோபம், மை - விடம், அடுத்த - சேர்ந்த, கண்டன் - கழுத்தையுடைய இறைவன், அஞ்சலுப்பாய் - அஞ்சுதலுடனும் அலுப்புடனுமாய். **ஈங்கோய் மலை வாழ் அஃறிணை உயிர்களும் அன்பு வாழ்க்கை வாழ்கின்றன என்பதாம்**. கரி, பிடி, களிறு, நாகம், கைம்மா, பகடு, வேழம் என்ற சொற்கள் பொதுவாக யானையைக் குறிப்பன.*

***விளக்கவுரை :-*** *கண்ட இடத்து என்பது கண்டவுடனே என்ற விரைவு குறித்து நின்றது. பிரிவரிய பிடி என்றதால் ஆண் யானை பெண் யானையினிடத்துக் கொண்டுள்ள அன்பு புலனாகிறது. யானைகள் கோபம் கொள்ளும்போது தமது கையைத் தூக்கித் தமது சினத்தைக் காட்டுதல் அவற்றின் இயல்பு. இதனைத்தான் கைஎடுத்து நீட்டிக் கதம் சிறக்கும் என்று ஈண்டுக் கூறியுள்ளனர். சுந்தரரும், கைநீட்டித் தம் கோபத்தை யானைகள் காட்டும் நிலையினைத் தமது பாடலில்,*

> *மாற்றுக்களிறு அடைந்தாய்என்று மதவேழம் கைஎடுத்து*
> *மூற்றிக்கன லுமிழ்ந்து மதம்பொழிந்தும் முகம்சுழியத்*

*எனப் பாடியுள்ளார்.*

*திருப்பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த விடத்தை இறைவன் தனது கழுத்தில் அமைத்துக் கொண்டமையின், "மை அடுத்த கண்டன்" எனப்பட்டது.*

*யானைக்கும் சிங்கத்திற்கும் எப்போதும் பகைமையுண்டு. யானை சிங்கத்தை கனவில் காணினும் அஞ்சும் என்ற பொருளில் சிங்கசொப்பனம் என்னும்*

**மறலியை உதைத்தான் மலை**

404. அரியும் உழுவையும் ஆளியுமே ஈண்டப்
பரியிட்டுப் பன்மலர்கொண் டேறிச் – சொரிய
எரியாடி கண்டுகக்கும் ஈங்கோயே கூற்றம்
திரியாமல் செற்றான் சிலம்பு. 5

---

*தொடரும் வழக்கில் உளது. அங்ஙனம் இருக்கச் சிங்கம் யானையைக் கண்டதும் அச்சத்தினால் ஓடியது. இதனால் ஈங்கோய்மலையின் சிறப்பை ஈண்டுக் காட்டினர் போலும்.*

*அ என்பது அந்த என்ற பொருளின் வந்த சுட்டெழுத்தாம். கொடுவிலங்கி னின்றும் தன் பிடியைக் காக்கும் நிலையினை "இலங்கு மருப்பு யானை குறும்பொறை மருங்கின் அமர்துணைத் தழீஇ கொடுவரி இரும்புலி காக்கும்" (குறுந்), "மடப்பிடி வலிக்கு வரம்பாகிய கணவன் ஓம்பலின், ஒண்கேழ் வயப்புலி பாய்ந்தென" (மலைபடு) களிற்றினிடத்துப் பிடியினிடம் உள்ள அன்பு இத்தகையது என்பதைப் "பிரிவரியதன் பிடி" என்ற தொடரில் காணலாம். யானை தன் மெய்ப்பாட்டினை உணர்த்தும்போது தன் கையை மேலே தூக்கிப் பிளிறுதல் இயற்கை. இதனைக் குறுந்தொகை "களிறுதன் உயங்குநடை மடப்பிடி வருத்தம் நோனாது.... அண்ணாந்து அழுங்கல் நெஞ்சமொடு முழங்கும்" என்கிறது. "மையடுத்த கண்டம்" "திருநீலகண்டமாகும்". இக்கண்டம் கறுக்கவில்லை என்றால், தேவர்களின் மனைவிமார் விதவைகளாகி அழுது அரற்றி இருப்பர். இதனைக் குமரகுருபரர் அழகுபட "நாயகன் கண்டம் கராதேல் அந்நாட்டு அமரர் சேயிழை மாதருக்குச் செங்கைகளும், கொங்கைகளும் சிவக்கும்போலும்" என்றும், "நஞ்சுண்டு, பித்துண்டு நாம் தேவர் என்பார், தம்பாவையர்க் கன்று காதோலை பாலித்த தயவாளர்" என்றும் பாடியுள்ளார். "கருநட்ட கண்டன்" என்றனர் அப்பர். "அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்டு", தம் கண்டத்தினைக் கருமையாகக் காட்டுதலின், அது அந்தணரால் போற்றப்படுதலைப் புறநானூறு,*

> *"கறைமிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை*
> *மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே"*

*என்று பாராட்டுகின்றது. பாகவதமும் சிவபெருமானே முழுமுதற் பரம்பொருள் என்னும் தொனி உண்டாகும் வண்ணம் "ஈசன்" என்ற சொல்லை அமைத்து, மையுண்ட கண்டத்தைச் சிறப்பிக்க "விடமும்வந் தீசன்கோல மிடற்றி னில் நீலவண்ணம், வடிவுபெற்று அணியதாகி வயங்கிற்றுப் பெரிதுமென்றால், கொடியரும் பெருமையோரைக் கூடின் வெங் கோதுநீங்கி, ஒடிவரும் நலம்பெற்று உய்தல் உரைப்ப தென் உலகில் அம்மா" என்று பாடிப் போற்றுகிறது.*

***404. குறிப்புரை :-** **உழுவை - புலி, ஆளி - யானை போன்ற ஒருவகை விலங்கு; சிங்கத்தில் ஒருவகை எனினும் ஆம். ஈண்ட - நெருங்க, பரியிட்டு - அன்பு கொண்டு, எரியாடி - இறைவன், உகக்கும் - விரும்பும், கூற்றம் - இயமன்,***

*செற்றான் - அழித்தான், சிலம்பு - மலை. பரிவு என்பது பரி என ஈற்றுக் குறையாக நின்றது. சிலம்பு, வெற்பு, பொருப்பு, வரை, பர்வதம், குன்று, கடறு, நாகம் - இவையனைத்தும் மலையைக் குறிப்பன.*

***விளக்கவுரை :-** ஆளி என்பது யாளி என்றும் கூறப்படும். அஃறிணை உயிர்களும் இறைவனைப் பூசித்திருப்பதைப் பல திருக்கோவில்களுக்கு அமைந்த பெயரால் அறியலாம். சீகாளத்தி என்னும் தலம் சிலந்தி, பாம்பு, யானை பூசித் திருப்பதனால் அமைந்த திருப்பெயராகும்; ஆகவே, ஈண்டு விலங்குகள் பன்மலர் இட்டுச் சொரிந்தது அவை வழிபடலைக் காட்டுவதாகும். சம்பந்தர் திருமுதுகுன்றப் பதிகத்தில் குரங்குகள் மலர்கொண்டு வணங்கியதை,*

*மந்தி ஏறிஇன மாமலர்கள் பலகொண்டு*
*முந்தித் தொழுது வணங்கும் கோயில் முதுகுன்றே*

*என்றனர்.*

*யானை வழிபட்டதையும் சம்பந்தர் "பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்தில் பொலிய ஏந்திக் கூந்தல் பிடியும் களிறும் உடன்வணங்கும் குறும்பலா" என்றும், புலியும், மானும் வழிபட்டதை "புலியும் மானும் அல்லாத சாதிகளும் அம்கழல்மேல் கைகூப்ப... அருள்புரியும் திருநணாவே" என்றும் பாடியுள்ளார்.*

***எரி ஆடி என்பது இறைவன் கையில் மழுவேந்தி ஆடுதலைக் குறிப்பது என்பதைவிட, அக்கினி முழுக்கு ஆடியவன் என்பதே சிறப்புடைப் பொருள். இறைவனது முழுக்குக்குரிய பொருள்களுள் அக்கினியும் ஒன்று என்பது அப்பரது திருப்புகலூர்த் தேவாரத்தில் வரும்**, "அங்கமே பூண்டாய் அனல் ஆடினாய் ஆதிரையாய்" என்பதனால் தெளியலாம். அனல் ஆடினாய் என்பதற்கு அக்கினி திருமஞ்சனத்தையே குறிக்கும் என்பது தட்சயாகப் பரணி; காளிக்குக் கூளி கூறியது என்ற பகுதியில் 88-வது பாட்டில் வரும் "ஆடும் மஞ்சனம்" என்பதற்கு அக்கினி எனப் பொருள் கூறப்பட்டது கொண்டு தெளிக. இயமன் திரியாமல் செற்றலாவது அடியார்கள் பக்கம் இனிப் போகாமல்படி அவனை இறைவன் உதைத்துக் கீழே சாய்த்ததாகும். மார்க்கண்டேயனைக் காக்கும் பொருட்டு இறைவன் இயமனை உதைத்த வரலாறு இதில் கூறப்பட்டுள்ளது.*

*மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டைஉன்னிப்*
*பார்க்கில்அன் பர்க்குஎன்ன பயங்காண் பராபரமே*

*என்பது தாயுமானார் கருத்து. **இறைவனுக்குத் தன்னை அன்புடன் மலர் இட்டுப் பூசிப்பாரிடம் மகிழ்ச்சி உண்டு. இதனால் தான் "கண்டு உகக்கும்" எனப்பட்டது**. அன்பு இன்றேல்,*

*பொக்கம் மிக்கவர் பூவும் நீரும்கண்டு*
*நக்கு நிற்பர் அவர்தமை நாணியே.*

**நம் வினைநீக்கும் நம்பன் மலை**

**405.** ஆளி தொடர அரிதொடர ஆங்குடனே
வாளி கொடுதொடரும் மாக்குறவர் – கோளின்
இடுசிலையி னால்புடைக்கும் ஈங்கோயே நம்மேல்
கொடுவினைகள் வீட்டுவிப்பான் குன்று. **6**

---

***405. குறிப்புரை :–*** *வாளி -அம்பு, மா - பெரிய, கோளின் - வலிமையுடன், இடு - தோளில் இட்ட, சிலை - வில், புடைக்கும் - அடிக்கும், வீட்டுவிப்பான் - அழிப்பவன். ஆளி - யாழி எனப்படும் விலங்கு. கோயில் தூண்களின் மேல் பகுதியில் இவை சிற்பமாக செதுக்கப்பட்டிருக்கும்.*

***விளக்கவுரை :–*** *வேடர்கள் வேட்டைமேல் நாட்டமுடையவர்கள். அவர்கள் விலங்குகள் தொடர்வதைக் கண்டு தாமும் தொடர்ந்து செல்பவர்கள். இதனைப் புறநானூறு செவ்வனே "நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்; கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவன்" என்று எடுத்து மொழிகிறது. இக் கருத்தே ஈண்டு "வாளி கொடுதொடரும் மாக்குறவர்" எனப்பட்டது. இவ்வேடர்கள் வாளிகொடு தொடர்வதால் விலங்குகள் அஞ்சி ஓடும் என்பதைத் திருஞானசம்பந்தர், "வலிய சிலை வேடுவர்கள் ஆடவர்கள் நீடுவரை யூடுவரலால், கரியினொடு வலிஉழுவை அரியினமும் வெருவுகா ளத்திமலையே" என்று பாடினர். எய்த அம்பு குறி தவறியபோது வில்லால் அடித்துக் கொல்வது வேடர் இயல்பு. ஆதலின் சிலையினால் புடைக்கும் என்றனர். வீட்டுவிப்பான் - பிறவினை வினையாலணையும் பெயர். இறைவன் வினைகளை வீட்டுவிப்பான் என்பதை "அடியார்மேல் பையநின்ற வினை மாற்றுவார்", "பந்தித்து நின்ற பழவினைகள் தீர்ப்பான்", "முந்திய வல்வினைகள் தீர்ப்பான் பந்தித்த வல்வினை பற்றறப் பிறவிப் படுகடல் பரப்புத் தவிர்ப்பான்", "பாட்டும் பாடிப் பரவித் திரிவார், ஈட்டும் வினைகள் தீர்ப்பான்" என்பன போன்ற திருமுறை திருவாக்குகளைக் கொண்டு தெளியலாம்.*

***406. குறிப்புரை :–*** *வெடி - வெடி போன்ற ஓசை, படு - உண்டாகும், கவண்கல் - பறவை, விலங்குகளை ஓட்ட வீசி எறியும் கல், கழை - மூங்கில், வேழம் - யானை, ஏங்கு - ஒலிக்கும்.*

***விளக்கவுரை :–*** *யானை தினையைத் தின்னுதல் உண்டு. அவ்வாறு தின்ன வருகையில் குறவர் கவண்கல் எறிவர். இதனை "புனஞ்சூழ் குறவர் உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ அகன்மலை இறும்பில் துவன்றிய யானைப் பகல்நிலை தவிர்க்கும் கவண் உமிழ் கடுங்கல்" (மலைபடு), "இலங்கொளி மருப்பில் கைம்மா உளம்புநர் புலங்கடி கவணையில் பூஞ்சினை உதிர்க்கும்!", "பிடியொடு மேயும் செய்புன் யானை அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன் நெடுவரை ஆனினிப்பணவை ஏறிக் கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின்" (கலி), "இரவின் மேயல் மரூஉம் யானைக் கால்வல் இயக்கம் ஒற்றி நடுநாள், வரையிடைக்*

**மூங்கில் முத்துதிர்க்கும் மலை**

**406.** இடிதினைதின் வேழம் கடியக் குறவர்
வெடிபடு வெங்கவண்கல் ஊன்ற – நெடுநெடென
நீண்ட கழை முத்துதிர்க்கும் ஈங்கோயே ஏங்குமணி
பூண்ட கழைஏறி பொருப்பு. 7

---

*கழுதின் வன்கைக் கானவன், கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்", "தினைமேய் யானை சினன் திரிந்து ஓடக் கல்லுயர் கழுத்தில் சேணோன் எறிந்த வல்லாய்க் கவணின் கடுவெடி ஒல்லென்" (அகநா.) முதலான நூல்களிலும் காணலாம். கவண்கல் ஊன்றுவதால் வேங்கை மரம் மலர்களைச் சிதறும் என்பதை, "கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின், இறுவரை வேங்கையின் ஒள்வீசிதறி" எனக் குறிஞ்சிப் பாட்டும் கூறுகிறது. இவ்வாறே கலித்தொகையும் "கவணையில் பூஞ்சினை உதிர்க்கும்" என்கிறது. முத்துக்கள் பிறக்கும் இடம் இருபது. இதனை,*

> *தந்தி வராகம் மருப்புஇப்பி பூகம் தனிக்கதலி*
> *நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினமின்னார்*
> *கந்தரம் சாலிகழை கன்னல் ஆவின்பல் கட்செவிகார்*
> *இந்து உடும்பு கராம் முத்தை ஈனும் இருபதுமே*

*என்று இரத்தினச் சுருக்கம் கூறுகிறது.*

*"எழுதுதடந் தோட்கு உடைந்த தடம்பணையும், பணை மென் முலைக்கு, உடைந்த சினைமா மருப்பும் தரும் முத்து" எனக் குமரகுருபரரும் கூறியுள்ளார். ஆகவே, மூங்கில் ஈண்டு முத்து உதிர்த்தது. ஏங்கு என்னும் அடையினைக் "கழை" என்பதன் அடையாகக் கொள்க. கழை முத்துக்களையுடைமையின் 'மணிபூண்ட கழை' என்றார். இறைவன் மூங்கிலில் தோன்றினான் என்பதைத் திருநெல்வேலி புராணத்தால் தெளியலாம். இதனால், திருநெல்வேலி வேணுவனம் என்றும் கூறப்படும். ஈண்டுள்ள இறைவர் வேணுவனநாதர் என்றும் கூறப்படுவார். இராமச்சந்திரக் கவிராயர் வேடிக்கையாக இறைவர் மூங்கிலில் தோன்றியதை ''மூங்கிலிலே ஒளிந்திருந்தான் முக்கண்சாமி'' என்று பாடினார். இந்தக் குறிப்பினால்தான் ''மணிபூண்ட கழை ஏறி'' என்று ஈண்டு இறைவன் குறிப்பிடப்பட்டான்.*

*407. குறிப்புரை :- ஈன்ற - குழந்தையைப் பெற்றெடுத்த, நான்ற - தொங்கிய, கறிக்கு - மிளகுக் கொடியில், அசலை - ஒருவகைத் தாவரம், ஊன்றவைத்து - வேகவைத்து, வெற்பு - மலை, அன்ன - போன்ற.*

***விளக்கவுரை** :- மலையில் மிளகு வளரும். இதனைக் "கடிவளர் அடுக்கம்" எனக் குறுந்தொகையிலும், ''கறிவளர் சாந்தம்'', ''கறிஇவர் சிலம்பு'' என அகநானூற்றிலும், ஐங்குறுநூற்றிலும் முறையே காணலாம். கருஉயிர்த்தவர்கள் உடல்நலத்தின் பொருட்டுத் தக்க உணவைக் கொடுப்பர் முதியோர். அம்முறையில்*

**செஞ்சடையான் சிலம்பு**

**407.** ஈன்ற குறமகளிர்க் கேழை முதுகுறத்தி
நான்றகறிக் கேறசலை நற்கிழங் – கூன்றவைத்
தென்னன்னை உண்ணென் றெடுத்துரைக்கும் ஈங்கோயே
மின்னன்ன செஞ்சடையான் வெற்பு. **8**

**408.** ஈன்ற குழவிக்கு மந்தி இறுவரைமேல்
நான்ற நறவத்தைத் தான்நணுகித் – தோன்ற
விரலால்தேன் தோய்த்தூட்டும் ஈங்கோயே நம்மேல்
வரலாம்நோய் தீர்ப்பான் மலை. **9**

---

*முதுகுறத்தி அசலை நற்கிழங்கை ஈந்தனள். இங்ஙனம் கொடுத்துக் கைவந்தவள் என்பது தோன்ற முதுகுறத்தி என்றனர். கம்பரும் குழந்தைகட்குத் தாயர் ஊட்டியதை,*

*தாலி ஐம்படை தழுவு மார்பிடை*
*மாலை வாயமு தொழுகு மக்களைப்*
*பாலி னூட்டுவார் செங்கைப் பங்கையம்*
*வானி லாவுறக் குவிவ மானுமே*

*என்றனர். அன்பின் மிகுதியால் தன் மகளை என் அன்னை என்று விளித்தனள். குறுந்தொகையில் தலைவி தோழியை "அன்னாய் இவன் ஓர் இளமாணாக்கன்" என்று விளித்துள்ளாள். இறைவன் சடை மின் அன்னது'' என்பதை ஞானசம்பந்தர், ''மின்இயல் செஞ்சடைமேல் விளங்கும் மத்தம்'' என்று பாடியுள்ளார். தாய்மார் தம் குழந்தைகள் வளர உணவை உண் என்று கூறி ஊட்டுவர் என்பதை ''பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால் விரிகதிர்ப் பொன்கலத்து ஒருகை ஏந்தி உண்" என்று வரும் தொடரால் நற்றிணையில் காணலாம். கறிக்கு ஏறு என்பதைக் கறியில் ஏறும் எனப் பொருள் கொள்ளுதல் வேண்டும். ஏழன் உருபு நிற்க வேண்டிய இடத்து நான்கன் உருபு வந்துள்ளது. "யாதன் உருபில் கூறிற்றாயினும் பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்" (தொல். வே. ம.) என்பது விதி.*

*408. குறிப்புரை :- குழவி - குட்டி, மந்தி - பெண் குரங்கு, இறுவரை - மலையின் உச்சி, இறு - முன, வரை - மலை, நறவம் - தேன் அடை, நான்ற - தொங்கிக் கொண்டிருந்த.*

*விளக்கவுரை :- தேனீக்கள் தமது தேன்கூட்டை மக்கள் எளிதில் எடுக்கா வண்ணம் இருக்க மிக உயரத்தில் கட்டுவது இயல்பு. "தாமரைத் தண்தாது ஊதி மீமிசை சாந்தின் தொடுத்த தீந்தேன்" என்பது நற்றிணை. அதனால்தான் இறு வரைமேல் நான்ற நறவம் எனப்பட்டது. ஆனால், குரங்குகள் எந்த உயரத்தையும் எளிதில் அடைந்துவிடும். தேன், உடல் உரத்துக்கும் நோய் நீக்கத்திற்கும் உரிய*

**மயிலோன் தந்தை மலை**

**409.** உண்டிருந்த தேனை அறுபதங்கள் ஊடிப்போய்ப்
பண்டிருந்த யாழ்முரலப் பைம்பொழில்வாய்க் – கண்டிருந்த
மாமயில்கள் ஆடி மருங்குவரும் ஈங்கோயே
பூமயிலி தாதை பொருப்பு. **10**

---

*பொருள். ஆகவே, குரங்கு தான் பெற்ற குழவி நன்கு உரம் பெற்று உடல் வளர்ச்சியுற்று வளரத் தேனை ஊட்டியது. விலங்குகளும் பறவைகளும் தம் குட்டிகளுக்கும், குஞ்சுகளுக்கும் பரிந்து ஊட்டுவதைச் சங்கநூல்களில் பல இடங்களிலும் காணலாம். "துய்த்தலை மந்தி கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி, வீங்கு அரைஞெமுங்க வாங்க வாங்கித் தீம்பால் கல்லா வன் பறழ்க்கை நிறை பிறியும்'' என்றும், ''இரைதேடும் தடந் தாள் நாரை ஐயசிறு கட்செங் கடைச்சிறுமீன் மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத் தாய்ப்பயிர் பிள்ளைவாய்ப் படச் சொரியும்" என்று நற்றிணையிலும், "ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து அளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை பிள்ளை உள்வாய்ச் செரீஇய இரைகொண்டமையின் விரையு மால் செலவே'' என்று குறுந்தொகையிலும், "பல்சிறைப் புறவம் பரிந்துடன் ஆடி, அல்வாய்க் கொண்ட வாரிரை அமிழ்தம், செவ்வாய்ப் பார்ப்பிற்குச் சேர்ந்தவண் சொரிதலின்" எனப் பெருங்காதையிலும், பெரிய திருமொழியில், "பறவைதன் பார்ப்புக்கு இரைதேடிக் கொணர்வன", "பள்ளச் செறுவில் கயல்உகளப் பழனக் கழனி அதனுள்போய்ப், புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும்" எனவும் வருதல் காண்க. நம்மேல் வரலாம் நோய்கள் பல. அந்நோய்கள் யாவை என்பதை அருணகிரியார், "வாதம் பித்த மிடாவயி றீளைகள், சீதம் பற்சனி சூலைம கோதரம், மாசங் கட்கொரு மூல வியாதிகள் - குளிர்காசம்" என்றும், "இருமலும் ரோக முயலகன் வாதம், எரிகுண நாசி - விடமேநீர், இழிவு விடாத தலைவலி சோகை, எழுகள மாலை - இவையோடே" எனவும், "இளைப்புச் சோகைகள் வாதம் விலாவலி, உளப்புச் சூலயோடே வலுவாகிய இரைப்புக் கேவலம் மூலவி யாதியொடண்டவாதம் குலைப்புக் காய்கனல் நீர்இழி வீளையொ டளைப்புக் காதடை கூனல்வி சூசிகை குருட்டுக் கால்முடம் ஊமையுள் ஊடறு கண்டமாலை" எனவும் எடுத்துக் காட்டியுள்ளார். இறைவன் "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராய்நோய் தீர்த்தருள வல்லான்" (அப்பர்). "மருந்தவை மந்திரம் மறுமை நன்னெறி அவை" (சம்பந்தர்) என்று நோய் தீர்ப்பதைத் திருமுறைகள் கூறுதலின் "வருநோய் தீர்ப்பான் மலை" எனப்பட்டது.*

*409. குறிப்புரை :- அறுபதங்கள் - வண்டுகள், ஊடி - பிணங்கி, பண்டு - பழமையாகவே, யாழ் - நரம்புக் கருவிகளில் ஒன்று, யாழ்முரல - யாழ்போல இசையை எழுப்ப, பொழில்வாய் - சோலையில், மா - சிறந்த, மருங்கு - பக்கத்தே, பூ - அழகிய, மயிலி - மயில் வாகனமுடைய முருகன், தாதை - தந்தை, பொருப்பு - மலை.*

**கோளரவன் குன்று**

410. ஊடிப் பிடிஉறங்க ஒண்கதலி வண்கனிகள்
நாடிக் களிறு நயந்தெடுத்துக் – கூடிக்
குணமருட்டிக் கொண்டாடும் ஈங்கோயே வானோர்
குணமருட்டும் கோளரவன் குன்று. 11

---

***விளக்கவுரை :–*** *ஆறு பாதங்களைப் பெற்றது வண்டு ஆதலின் அறுபதங்கள் எனப்பட்டன. "அறுபதம் பண்பாட" என்பது சுந்தரர் வாக்கு. வண்டுகளின் ஒலி யாழ் இசைபோல இருந்தமையின் யாழ் முரல என்றார்.*

*"மழலை, வண்டினம் யாழ் செய்ய பொங்கர், வண்டினம் நல்யாழ் செய்ய" என மணிமேகலையிலும், "நரம்பின் இம்மென இமிரும் மாதர்வண்டு" எனக் குறிஞ்சிப் பாட்டிலும், "இன வண்டு யாழ் செய" எனச் சிலம்பிலும் வருதல் காண்க. யாழ் இன்று நேற்றுத் தோன்றியதன்று. இது தொன்றுதொட்டுள்ள இசைக்கருவி யாகும். இதனை "யாழின் பகுதியொடு" என்று தொல்காப்பியம், "துறையமை நல்வாழ்த்துணையையோர்" என்று களவியல், "யாழ் இனிது என்ப" என்று குறள் முதலான பழம்பெரும் நூல்கள் குறிப்பிடுதல் காண்க. இது குறித்தே "பண்டிருந்த யாழ்" எனப்பட்டது. இவ்யாழ் பேரியாழ் (21 நரம்பு கொண்டது). மகரயாழ் (19 நரம்பு), சகோடயாழ் (14 நரம்பு), செங்கோட்டியாழ் (7 நரம்பு), சுரையாழ் (1 நரம்பு) எனப்படும். யாழ் வேறு வீணை வேறு என்பதை ஈண்டு உணர்தல் நல்லது. ''இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்'' என்பது மணிமொழியார் வாக்கு. வண்டு யாழ்போல முரலுதலைச் சம்பந்தர் "கொம்பார் சோலை கோல வண்டு யாழ் செய் குற்றாலம்" என்றனர். வண்டு செவ்வழிபாடும் என்றும் கூறியுள்ளார். வண்டொலிக்கேற்ப மயில்கள் ஆடுதல் இயல்பு. "வண்டு பாட மயில் ஆல" என்று சம்பந்தரும், "ஆறுபதம் பண்பாட அணிமயில்கள் நடமாடும் அணி பொழில்" என்று சுந்தரரும், "அணிகிளர் கலாவம் அது விரித்து இயலும் மணிபுரை எருத்தின் மஞ்சை" என்று நற்றிணையும் குறிப்பிடுதலைக் காண்க. முருகப்பெருமானுக்கு மயில்ஊர்தியாகும். **மயில்ஊர்தியினைச் சூரபதுமன் மயிலாக அமைவதற்கு முன்பே இந்திரனால் முருகனுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது என்பதைப் பரிபாடல், "வானத்து வளங்கெழுச் செல்வன் தன் மெய்யில் பிரித்துத் திகழ்பொறிப் பீலி அணிமயில் கொடுத்தோன்" என்கிறது.** "ஆட்படு நெறியில் சேர்த்தும் ஆதியின் ஊழ்தந்துய்க்கத் தாட்படை மயூரமாகித் தன்னிகரில்லாச் சூர்க்காட்படை உளத்தனாகிக் கடவுளர் இரியல் போக ஞாட்பியல் செருக்கில் வந்தான் ஞானநாயகன் தன் முன்னம்" என்கிறது கந்த புராணம். இதனை வாகனமாகக் கொண்டான் என்பதையும் இந்நூல் "சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னாப், பார்த்திசை வானம் முற்றும் பரிஎன நடத்த லுற்றான்" என்றது. மயில் "பலநிறம் மிடைந்த விழுசிறை அலர்ந்த பருமயில்" (திருப்) ஆதலின். "பூமயிலி" என்றனர். முருகனது தந்தை சிவபெருமான் என்பதை "ஆல்கெழு கடவுள் புதல்வ" என்றும், "ஈசன் மகனே" என்றும் நக்கீரர்*

*திருமுருகாற்றுப்படையில் கூறியுள்ளார். "நம் செந்தில் மேய வள்ளிமணாளர்க்குத் தாதை" என அப்பரும், "குமரன் தாதை" எனச் சம்பந்தரும், "அங்கை வேலான் குமரன்பிள்ளை" எனச் சுந்தரரும் கூறுதல் காண்க.*

***410. குறிப்புரை :-*** *ஊடி - பிணங்கி, பிடி - பெண் யானை, ஒண்கதலி - ஒளியுடைய வாழை, வண்கனி - வளமான பழங்கள், நாடி - தேடி, களிறு - ஆண் யானை, நயந்து - விருப்பங்கொண்டு, குணமருட்டி - குணத்தை மாறுபடுத்தி, வானோர் - தேவர், மருட்டும் - அச்சுறுத்தும், கோள் - உயிர்களைக் கடித்து உயிரைக் கொள்ளும், அரவன் - பாம்பாபரணனாம் சிவபெருமான்.*

***விளக்கவுரை :-*** *வாழை, மா, பலா என்பன முக்கனிகள் என்று சிறப்புப் பெற்றமையின், ஈண்டுக் கதலி ஒண்கதலி எனப்பட்டது. "முப்பழமொடு பால்அன்னம்" என்பது தனிப்பாடல். முக்கனிகளின் சிறப்பைப் பிரபுலிங்கலீலை, "முக்கனிகளுள் சுவை முதிர்ச்சி பெற்றுள்ளது எக்கனி அதனைநீர் இயம்புவீர் என்பார்" என்கிறது. (முக்கனிகளும் முதிர்ந்த சுவையுடையன என்பது கருத்து). சுவைமிக்க கனி ஆதலின், "வண்கனிகள்" என்றனர். தன் பிடி ஊடி உறங்குதலால் அதற்கு மகிழ்வு தந்து கூடவேண்டி இருத்தலின், கனிகளை நயந்து எடுத்து வந்தது. தம் துணைகட்கு உணவு தேடிவந்து ஊட்டுதலைச் சங்க நூல்களில் பரக்கக் காணலாம். "கனிகவின் திதைய வாங்கிக் கொண்டுதன், தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்" என்றும், "இன்னா வேனில் இன்துணை ஆரமுளசினை யாஅத்துப் பொளிபிளந் தூட்ட" என்றும் அகநானூற்றிலும், "பிடிபசி களையப் பெருங்கை வேழம் மென்சினையாஅம் பொளிக்கும்" என்று குறுந்தொகையிலும், "அலவன்தன் சீர்ப்பெடையின் வாய்வுண் டனையதோர் நாவல் கனிநனி நல்க" எனத் திருக்கோவையாரிலும், ஆணுக்குப் பெண் உணவு தருதலைச் சுந்தரர், "மந்தி கடுவனுக்கு உண்பழம் நாடி மலைப்புறம் முந்தி" என்றும் கூறி இருத்தலைக் காண்க.*

> *ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்*
> *கூடி முயங்கப் பெறின்*

*என்பது திருக்குறள். ஆதலின் ஈண்டு, ஊடி என்றும், கூடி என்றும் இருசொற்கள் அமைந்திருத்தலை நோக்குக. கூடியபின் கொண்டாடுதல் ஆண்களின் இயல்பு. இதனைத் திருக்கோவையார் சுவைபட,*

> *உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச்*
> *சிற்றம் பலத்தொருவன்*
> *குணம்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ்*
> *வாய்இக் கொடியிடைதோள்*
> *புணர்ந்தால் புணருந் தொறும்பெரும்*
> *போகப்பின் னும்புதிராய்*
> *மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல்*
> *வளர்கின்றதே.*

*என்றும்,*

*சிட்டர்கொண் டாடும் துறைசைத் திரவியத்*
*தியாகர்வெற்பில்*
*சட்டக ஏற்புத் துளைதொறும் தித்திக்கத்*
*தாமரைநீள்*
*மொட்டென்ற பூண்முலை யாள்எனக் கீந்த*
*முருக்கலர்வாய்*
*மட்டின் சுவைக்குஇன்ன மட்டென்று சொல்ல*
*வரம்பில்லையே.*

*என்றும்,*

*கற்கண்டு வெற்பின் மதுக்கொண்டல் பெய்து கரைந்தொழுக*
*நிற்கின்ற வாறொக்கும் நீக்கற் றிரண்டற்ற நேசமொடு*
*மற்கண்டர் கோகழிச் செம்பொன் தியாகர் அடுக்கலிதான்*
*பொற்கென்ற பூண்முலை யாளைக் கலந்து புலந்ததுவே*

*என்றும்,*

*முத்தமிழ் தெள்ளும் திருவா வடுதுறை முக்கண்நக்கர்*
*அத்தர்நெஞ் சம்பொன் தியாகேசர் வெற்பில் அணியிழைநின்*
*வித்தக அங்குல் நடந்தேரைக் கண்டுமுன் வெங்கிஅன்றோ*
*சித்தசன் தேர்இன்னும் காற்றாய் விசும்பில் திரிகின்றதே*

*என்றும் துறைசைக்கோவையில் புணர்ந்தோர் கொண்டாடும் முறைகள் கூறப்பட்டிருப்பதைக் காண்க. இறைவன் எவ்வுயிர்க்கும் இயல்பானவன் ஆதலின், அவன் பாம்பினை ஆபரணமாகப் பூண்டுள்ளவன். பாம்பு என்றால் படையும் நடுங்கும் ஆதலின் வானோர் குணம் மருட்டும் கோளரவன் என்றனர். பாம்பைக் கண்டு அஞ்சுதலைச் சுந்தரர் "ஆர்த்திட்டதும் பாம்பு கைக்கொண்டதும் பாம்பு அடிகேள் உமக்காட்செய அஞ்சுதுமே" என்றனர்.*

*இறைவன் பாம்பினை அணியாகக் கொண்ட காரணத்தை வேடிக்கையாக சொக்கநாதப் புலவர்,*

*ஓட்டாக ஓட்டியும் கால்பொன்னின்*
*மாப்பொன்னு பாவமதர்த்*
*தெட்டா திரான்பணி செய்யா*
*திரான்செம்பொன் மேருவினைக்*
*கட்டாகக் கட்டிக் கடுகள*
*வாநறை கட்டவல்ல*
*தட்டானுக்குப் பயந்தல்ல வோஅணிந்*
*தான்சிவன் சர்ப்பத்தையே.*

*என்றார்.*

**மதில் எறிந்தான் மலை**

411. எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்
கையில் கணைகளைந்து கன்னிமான் – பையப்போ
என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே **தூங்கெயில்கள்**
சென்றன்று வென்றான் சிலம்பு. 12

---

*இறைவன் பாம்பு ஆபரணம் பூண்டிருந்தற்குத் தத்துவ நூல்கள் கூறும் காரணம் தலைசிறந்ததாகும். காமிக ஆகமம் "கம்பீர வடிவமான நாக சத்தியானது யாவற்றையும் நியமிப்பது" என்று கூறுகிறது. அப்பர் பெருமானார்,*

*போர்ப்பனை யானை உரித்த பிராஅன் பொரிவாய்அரவம்*
*சேர்ப்பது வானத் திரைகடல் சூழ்உல கம்இதனைக்*
*காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூர்இருந்த*
*கூர்ப்படை ஒள்வாள் மழுவனை யாம்அண்டர் கூறுவதே*

*என்றனர்.*

*ஆகவே,* ***உலகம் உண்டாகவும் ஒடுங்கவும் தானே ஆதிகாரணன் என்பதை ஆன்மாக்கள் அறியக் குண்டலி சக்தி உருவமான பாம்பை இறைவன் அணிந்துள்ளான் என்பதே உண்மைக் கருத்தாகும்.***

***411. குறிப்புரை :-*** *எய்ய - விடுக்க, தொடுத்தோன் - அம்பினை வில்லில் பூட்டிய குறவன், நோக்கு - கண், கணை - அம்பு, கன்னிமான் - இளைய மான், பைய - மெல்ல, தூங்கு - தொங்கும், எயில்கள் - கோட்டைகள்.*

***விளக்கவுரை :-*** *ஆடவர் பெண்கள்பால் வைத்த நேயத்தால் அவர்களின் காதலிமார் உறுப்புக்களைப் போன்ற பொருள்களைக் கண்ட இடத்தில் அவற்றிற்கு ஊறு செய்யமாட்டார்கள் என்பதே இப்பாடலின் மூன்றடிகளின் உட்பொருள்.*

*கண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினார்*
*வண்ணவாள் முகமென மரையி னுள்புகார்*

*என்பது சீவக சிந்தாமணி.*

*பண்கள்வாய் மிழற்றும் இன்சொல்*
*கடைசியர் பரந்து நீண்ட*
*கண்கைகால் முகம்வாய் ஒக்கும்*
*களைஅலால் களைஇ லாமை*
*உண்கள்வார் கடைவாய் மள்ளர்*
*களைகிலா துலாவி நிற்பார்*
*பெண்கள்பால் வைத்த நேயம்*
*பிழைப்பரோ சிறியோர் பெற்றால்.*

*என்பது கம்பர் வாக்கு.*

*குறவன், தன் காதலியிடத்து வைத்த பற்றினால் தான் அம்புகொண்டு எய்ய எண்ணிய மானின் கண்கள் தன் காதலியின் கண்போல் இருந்தமையின்,* ***'எய்யாமல் பையப்போ என்றான்'*** *என்ற இடம் பாராட்டற்குரியது. திருக்கோவையாரிலும் இக்கருத்து, ''கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையா, மானமர் நோக்கியர் நோக்கு என மான்நல் தொடைமடக்கும்'' என்று கூறப்படுகிறது. ஈண்டு, "அறத்திற்கே அன்புசார் பென்ப, அறியார் மறத்திற்கும் அஃதே துணை" என்ற குறளை நினைவுபடுத்துக் கொள்ளுதல் வேண்டும். மேற்படி கோவையடிகட்கு விளக்கம் தரும்போது, "கொலைத் தொழிலாளரும் தம் துணைவியரோடு ஒப்பவற்றிற்கும் இடர் செய்யாத வெற்பர்" என்று பேராசிரியர் எழுதிப் போந்தார். மாதர் கண்களுக்கு மான் கண் உவமை. "மான் அமரும் மென்விழி, மானி னேர் விழி மாதராய்" என்று ஞானசம்பந்தர் கண்களை வர்ணித்திருப்பதைக் காண்க. தூங்கெயில் செற்றது என்பது திரிபுராதிகளின் இயங்கும் மூன்று கோட்டைகளை அழித்த வரலாறாகும். "சென்று... வென்றான்" என்பதில் போரிட்டு வென்றான் இல்லை; சென்றதும் வென்றான் என்று நயம் இருத்தல் காண்க. ஏனெனில், சிரித்தே புரத்தை எரித்துவிட்டனன். இதனால்தான், "மேலைப்புரத்தைச் சிரித்தெரித்தீர்" என்றார் சைவ எல்லப்ப நாவலர்.*

*குமரகுருபரர் "ஒன்னார்தம் பொன் எயில் தீ மடுத்தது இன்ன கையே" என்று கூறினர். இறைவன் முப்புரம் எரித்த வரலாற்றைச் சைவத் திருமுறைகள் பல்லாற்றானும் குறிப்பிட்டுள்ளன. "மூவார் புரங்கள் எரித்த அன்று" என்றும், "திரிபுரம் ஒரு கொடியினில் எரி சென்று கொள்வகை சிறுமுறுவல் கொடு ஒளிபெற நிறைவன்" எனவும் சம்பந்தர் கூறுவதைக் காணவும், "ஈரம்பு கண்டிலேம் ஏகம்பர் தம்கையில், ஓரம்பே முப்புரம் உந்தீபற, ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற" என்பர் மணிமொழியார்.* ***இதனை வேடிக்கையாகச் சொக்கநாதப் புலவர்,***

> *சொல்லுக் கினிய கழுக்குன்ற ரேஉமைக் கொல்லுஎன்றால்*
> *அல்லல் பிழைப்புப் பிழைத்துவிட் டீர்முப்பு ராதியர்மேல்*
> *வில்லைக் குனித்துஎய்ய மாட்டாமல் நீர் அந்த வேளைதனில்*
> ***பல்லைத் திறந்துவிட் டீர்இது வோநும் படைத்தொழிலே***

*என்று பாடினர். முப்புரங்களை எரித்ததன் தத்துவம் இன்னது என்பதைத் திருமூலர், "முப்புரம் ஆவது மும்மல காரியம் அப்புரம் எய்தமை ஆர்அறி வாறே" என்றார். தூங்கெயில் என்னும் விண்ணில் இயங்கும் கோட்டைப் பண்டைக்காலத்தே இருந்தது என்பதையும் அதனை நம் தமிழ்நாட்டு மன்னர்கள் அழித்தனர் என்பதும் சங்கநூலால் அறியவருகின்றது. "தூங்கெயில் எறிந்த நின்னூங்கனோர்" என்பது புறம். "தூங்கெயில் எறிந்த தொடி விளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன் சீற்றம் விறல் விசும்பின் தூங்கும் எயிலும் தொலைத்தவாறு" என்பது பழமொழி நானூறு. "தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்" என்பது சிலம்பு. "தூங்கெயில் எறிந்த தொடித் தோட் செம்பியன்" என்பது மணிமேகலை.*

### வினை வீட்டுவிப்பான் வெற்பு

**412.** **ஏழை இளமாதே என்னொடுநீ போதென்று**
**கூழை முதுவேடன் கொண்டுபோய் – வேழ**
**இனைக்குவால் வீட்டுவிக்கும் ஈங்கோயே நந்தம்**
**வினைக்குவால் வீட்டுவிப்பான் வெற்பு.** **13**

---

*412.* **குறிப்புரை :-** *போது - வா, கூழை - மந்தமான, வேழம் - யானை, குவால் - கூட்டம் மிகுதி, வீட்டுவிப்பான் - போக்குவிப்பான், இனை - வருத்தம், வினை - தீவினை.*

**விளக்கவுரை :-** *ஏழை என்றது அறிவும் செல்வமும் குறைந்த நிலையைக் குறிக்கவேயாகும். போதுக என்பது பாட்டில் போது என்று ஈறு குறைந்து நின்றது.* **வயது மிக்க காரணத்தால் நடையும் பேச்சும் குறைந்து காணப்படலின் கூழை என்ற அடைமொழி கொடுத்தனர்.** *யானையைக் கண்டால் இளம் பெண்களுக்கு மிகுந்த அச்சமே. வள்ளி யானையைக் கண்டதும் முருகனைத் தழுவியதைக் கந்தபுராணம்,*

*அவ்வேலை யில்வள்ளி*
*அச்சமொடு மீட்டுதவம்*
*பொய்வேடம் கொண்டுநின்ற*
*புங்கவன் தன் பால்அணுக*
*இவ்வேழம் காத்தருள்க*
*எந்தைநீர் சொன்னபடி*
*செய்வேன் எனஒருபால்*
*சேர்ந்துதழீஇக் கொண்டனளே.*

*என்று குறிப்பிடுகின்றது.*

*இறைவன் வினைத் தொகுதியைப் போக்கவல்லவன் என்பதை நமது திருமுறை ஆசிரியர்கள் நன்கு எடுத்து மொழிந்துள்ளனர்.*

*“அடியார்மேல் பையநின்ற வினை மாற்றுவர்”*

*“பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பான்”*

*“முந்திய நல்வினைகள் தீர்ப்பான்”*

*“பரவித்திரிவார் ஈட்டும் வினைகள் தீர்ப்பார்”*

*என்று முறையே சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடிய தொடர்களைக் காணவும்.*

*413.* **குறிப்புரை :-** *ஏனம் - பன்றி, உழுத - கிளறிய, இனம் - கூட்டம், கானவர் - வேடர், கூனல் - வளைந்த, இறுக்கம் - மலைச்சோளம், வெதுப்பும் - சூடேற்றும், மறுக்கங்கள் - துன்பங்கள்.*

**துன்பம் தீர்ப்பான் மலை**

**413.** **ஏனம் உழுத புழுதி இனமணியைக்**
**கானவர்தம் மக்கள் கனல்எனக் – கூனல்**
**இறுக்கம் கதிர்வெதுப்பும் ஈங்கோயே நம்மேல்**
**மறுக்கங்கள் தீர்ப்பான் மலை.** **14**

---

***விளக்கவுரை :-*** *இனி வரக்கடவதாகிய துன்பம் தீர்ப்பவன் இறைவன் என்றதால் முன்செய்த வினையைத் தீர்த்தவன் என்பது சொல்லாமலே விளங்குவதாயிற்று.*

*வாட்டம் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே*
*வாட்டம் தீர்த்திடும் வான்மையூர் ஈசனே*
*வாடிய வாட்டம் தவிர்ப்பான்*
*மருளாதார் தம்மனத்தில் வாட்டம் தீர்ப்பாய்*

*என்று திருமுறைகள் கூறுமாற்றை அறியவும். "மலையில் நாகங்கள் உலாவும். அவை ரத்தினங்களைக் கக்கும். அவை இலை தழைகளால் மூடப்பட்டிருக்கும். அவற்றைக் கிளற அவை வெளிப்படும். அம் மணிகள் செந்நிறத் தோற்றம் உடைமையின் கனல்போல இருந்தன என்பதாம். சோளத்தைச் சுட்டுச் சாப்பிடுதல் மக்கள் வழக்கம் ஆதலின், அம்மணியினை நெருப்பெனக் கருதி அதில் காய்ச்சினர் வேடர் மக்கள்".*

*மலையில் மணிகள் இருப்பதை நமது சங்க இலக்கியங்கள் இனிதின் எடுத்து இயம்புகின்றன.*

*மணி நெடுங்குன்று என்று ஐங்குறுநூறும், மாமலை பயந்த காமருமணி என்று புறநானூறும், மணிநெடுங்குன்று என்று குறுந்தொகையும் கூறுதல் காண்க. இவ்வாறு மணிகள் இருப்பதன் காரணத்தைச் சம்பந்தர் "எழில் ஏனம் உழுத கதிர்மணியின் ஒளிகள்" என்று குறிப்பிடுகின்றனர். இக்கருத்தே, "ஏனம் உழுத புழுதி இனமணி" என்னும் தொடரில் உளது. மேலும் நிலத்தை அகழ்வதால் ஒளிய மணியைப் பெறுதலை, "பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினோடு கண்ணகல் தூமணிபெறூஉம்'' என்று குறுந்தொகையிலும், ''அகழ்வேல் கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப" என்று அகத்திலும் வருதல் காணலாம்.*

*414. **குறிப்புரை :-** கிளைத்த - தோண்ட, மா - பெரிய, சிறந்த; கானல் - காடு. ஒளி, எரி - தீ, இரிய - ஓட, முல்லை - முல்லை மலர், நகும் - சிரிக்கும், வினை - பாவங்கள், செற்று - அழித்து, உகப்பான் - விரும்புபவன்.*

***விளக்கவுரை :-*** *மணிகள் செந்நிறமாதலின் பவளம் உவமை ஆயிற்று. முன் பாடலில், மணியைத் தீ என்று கொண்டு அதனைப் பயன்படுத்தியதாக கூறிய*

**வினை அழிப்பான் வெற்பு**

414. ஏனம் கிளைத்த இனபவள மாமணிகள்
கானல் எரிபரப்பக் கண்டஞ்சி – யானை
இனம்இரிய முல்லைநகும் ஈங்கோயே நம்மேல்
வினைஇரியச் செற்றுகந்தான் வெற்பு. 15

---

*கவி, ஈண்டு அம்மணியாம் நெருப்பினைக் கண்டு யானைகள் அஞ்சினவாகக் குறிப்பிடுகின்றனர். முல்லைகள் மலர்ந்துள்ளன. அம்மலர்ச்சி, யானைகள் ஓடுதலைக் கண்டு முல்லை சிரித்தல் போன்றது என்பது ஓர் அழகு. முல்லை பல்லுக்கு உவமை. இது போல, முத்துச் சிரித்ததாகச் சம்பந்தரும்,*

*விடமுண்ட மிடற்றண்ணல்*
*வெண்காட்டின் தண்புறவின்*
*மடல்விண்ட முடத்தாழை*
*மலர்நிழலைக் குருகென்று*
*தடமண்டு துறைக்கெண்டை*
*தாமரையின் பூமறையக்*
*கடல்விண்ட கதிர்முத்தம்*
*நகைகாட்டும் காட்சியதே.*

*என்று பாடியுள்ளனர்.*

*யானை தீயைக் கண்டு அஞ்சும் என்பது குறுந்தொகையில், "ஏனல்அம் சிறுதினை காக்கும் சேணோன் ஞெகிழியில் பெயர்ந்த நெடுநல் யானை, மீன்படு சுடரொளி வெரூஉம்" என வரும் அடிகளில் காண்க. யானை ஒளியுடைய பொருளையும் கண்டு அஞ்சும் என்பதை ஆழ்வார்,*

*பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ*
*வெருவிப் புனம்துறந்த வேழம் - இருவிசும்பில்*
*மீன்வீழக் கண்டஞ்சும் வேங்கடமே மேலசுரர்*
*கோன்வீழக் கண்டுகந்தான் குன்று*

*என்று பாடினர்.*

***415. குறிப்புரை :-** கணை - அம்பு, கேழல் - பன்றி, செகுத்து - அழித்து, அளரி - சிங்கம், அரி - குரங்கு, வெருவும் - அஞ்சும், கோளரி - நரசிங்கமாகிய திருமால்.*

***விளக்கவுரை :-** இரணியன், தன்னை விலங்குகளோ, மக்களாலோ கொல்லக்கூடாது என்ற வரம் பெற்றவன். ஆகவே, அவனைக் கொல்ல விலங்கு வடிவும், மக்கள் வடிவுமான நரசிம்ம வடிவுடன் தோன்றி அவனைத் திருமால்*

**நரசிங்கம் காணா மலை**

**415.** ஒருகணையும் கேழல் உயிர்செகுத்துக் கையில்
இருகணையும் ஆனைமேல் எய்ய – அருகணையும்
ஆளரிதான் ஓட அரிவெருவும் ஈங்கோயே
கோளரிக்கும் காண்பரியான் குன்று. **16**

---

*கொன்றனர். அத்தகைய திருமாலால் காணரியன் இறைவன் என்பது ஈற்றடியின் விளக்கம். "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடி" என்பது வாதவூரர் வாக்கு. சிங்கம் உயிர்களைக் கொல்லும் தன்மையது. அதாவது வதைத்து உண்ணக்கூடியது ஆதலின் "கோள்அரி" என்றனர். கொள் என்னும் முதல்நிலை திரிந்த தொழிற்பெயர், கோள் என முதல்நிலை திரிந்து நின்றது. அம்பு பன்றியின் உயிரைக் கொன்றது. பின் இருகணைகள் ஆனையின்மீது எய்யப்பட்டன. இவற்றைக் கண்டு ஆளரியாம் சிங்கம் ஓடியது; மற்றொரு பக்கம் இந்நிகழ்ச்சி களைக் கண்டு சிங்கம் அஞ்சியது. பூமியில் சாயச் செய்து, பன்றியைத் தரையில் உருளப் பண்ணிய இந்நிகழ்ச்சிகள் ஒரே சமயத்தில் நிகழ்ந்தனவாகக் கவி கூறிக் களிக்கின்றார். இவ்வாறே ஒரே சமயத்தில் நிகழ்ந்த செயலைப் புறநானூற்றுப் பாடல்,*

> *வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி*
> *பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப்*
> *புழல்தலைப் புகர்க்கலை உருட்டி உரல்தலைக்*
> *கேழல் பன்றி வீழ அயல*
> *தாழல் புற்றத் துடும்பில் செற்றும்*
> *வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்*

*என்று எடுத்து மொழிகிறது.*

*ஈண்டு வல்வில் ஓரி தனது அம்பால் யானையைக் கீழே விழச் செய்து, புலியை இறக்கச் செய்து, மானைத் தரையில் உருட்டியும், பன்றியையும் பூமியில் சாயச் செய்து, உடும்பையும் எய்து நின்றான் என அவன் ஒருங்கே செய்த செய்தி நிரல்படக் கூறியதையும் ஒப்பிடவே இது காட்டப்பட்டது.*

***416. குறிப்புரை :-*** **இலவம் - இலவமரம், தண் போதை - குளிர்ந்த மலரை, தூங்குவது - தொங்குவது, கொள்ளி - நெருப்பு, கடுவன் - ஆண் குரங்கு, இறுத்து - ஒடித்து, ஓச்சும் - ஓட்டும், குழை - காது குண்டலம், இறுத்த - தங்கிய.**

***விளக்கவுரை :-*** **இலவமரம் உயர்ந்து வளர்தலின், "ஓங்கிப் பரந்து எழுந்த" என்ற அடைகளைக் கொடுத்தனர். இறைவன் காதில் குண்டலங்களாகக் கொண்டிருப்பவை இரு கந்தவர்களே ஆவர். இறைவன் ஏழிசையாய் இசைப்பயனாய் இருத்தலின் எப்போதும் இசையினைக் கேட்டு இன்புற இவ்வாறு கொண்டனன். இருபத்தொன்றாம் நூற்றாண்டில் இளைஞர்கள்**

**குழைக் காதன் குன்று**

416. ஓங்கிப் பரந்தெழுந்த ஒலிஇலவத் தன்போதைத்
தூங்குவதோர் கொள்ளி எனக்கடுவன் – மூங்கில்
தழைஇறுத்துக் கொண்டோச்சும் ஈங்கோயே சங்கக்
குழைஇறுத்த காதுடையான் குன்று. 17

**சிங்கம் காணாச் சிலம்பு**

417. **ஓடும் முகிலை உகிரால்** இறஊன்றி
மாடுபுக வான்கை மிகமடுத்து – நீடருவி
மாச்சீயம் உண்டு மனங்களிக்கும் ஈங்கோயே
கோச்சீயம் காண்பரியான் குன்று. 18

---

*அலைபேசி ஒலிப்பான் கருவிகளை இருகாதிலும் அணிந்து கொண்டு இருபத்து நான்கு மணி நேரமும் திரைப்படப் பாடல்களைக் கேட்டுக் கொண்டிருப்பது போல என்று கொள்ளலாம்.*

*இலவம் எரிபோன்று இலங்குவது என்பதை ஐங்குறுநூறு "எரிப்பூ இலவத் தூழ்கழி பன்மலர்" என்று கூறுகிறது. சிந்தாமணியிலும் இலவம்பூ எரிபோன்றது என்பதை "எரிமுளைப்பப் போன்றும் தோன்றும் இலவம்" என்று கூறுதல் காண்க. "மலர்ந்த முகையி இலவம்.... அஞ்சார் நெடுங்கொடி பொற்பத் தோன்றி" எனவும், "பெருவிழா விளக்கம் போலப் பலவுடன் இலை இலை மலர்ந்த இலவம்" எனவும் அகநானூறும் கூறுவதையும் அறியலாம். குரங்கு சேஷ்டை என்று கூறுவது மரபு. ஐங்குறுநூற்றில், குரங்கு நீரில் எழும் குமிழ்களைச் சிறுகோல்கொண்டு புடைக்கும் என்பதைக் ''குரங்கின் தலைவன் இரு மயிர்க்கடுவன், சூரல் அம்சிறு கோல்கொண்டு வியல்அறை மாரி மொக்குள் புடைக்கும்" என்ற பாடலில் காணலாம். ஈண்டுக் குரங்கு இலவம் பூவைத் தீ என்று கொண்டு மூங்கில் தழையால் ஓங்கி வீசுகிறது.*

*இறைவன் காதில் குண்டலங்களுடன் விளங்குவதை, "சங்க வெண் தோடு சரிந்திலங்கச் சதுர்வெண்பளிக்குக் குழை காதில் மின்னிடுமே", "தாழ் மகரக் குழையும் தோடும் அணிந்த திருக்காதானை'' என்று திருமுறைகளில் கூறப்பட்டுள்ளனவற்றைக் காணவும்.*

*417. குறிப்புரை :- முகில் - மேகம், உகிர் - நகம், இற - சிறிது அழிய, மாடு - பக்கத்தே, வான் - அழகிய, சிறந்த; மடுத்து - உண்டு, குடித்து; மா - பெரிய, சீயம் - சிங்கம், கோ - சிறந்த, திருமாலாகிய நரசிங்கமூர்த்தி.*

*விளக்கவுரை :- மலை உயரமானது. அவ்வுயரிடத்தில் சிங்கம் உலாவுகிறது. அம்மலையில் மேகம் தவழுகிறது. அத் தவழ் மேகத்தையே சிங்கம் தன் நகத்தால் கீறுகிறது. இதனால் மலையின் உயரம் கூறியவாறாம்.*

**நான்மறைக்கு ஈறுகண்டான் மலை**

**418.** கண்ட கனிநுகர்ந்த மந்தி கருஞ்சுனைநீர்
உண்டு குளிர்ந்திலஎன் றூடிப்போய் – **கொண்டல்**
**இறைக்கீறி வாய்மடுக்கும்** ஈங்கோயே நான்கு
மறைக்கீறு கண்டான் மலை. **19**

---

*சிங்கத்தின் முன்னங்கால்கள் அதற்குக் கைகளாகவும் உதவும். உண்டு என்றது பசிக்குத் தேவையானதைச் சாப்பிட்டு என்றபடி. விலங்கு அரசன் சிங்கம் ஆதலின், மாச்சீயம் என்றனர். கோச்சீயம் என்பதன் காரணத்தை முன்பாடலில் காண்க. திருமால் சிங்க வடிவம் கொண்டதனால் கோச்சீயம் என்றனர்.*

*ஆவலோடும், அவசரத்தோடும் சிங்கம் நீரைப் பருகினதால் மிகமடுத்து என்றனர். இவ்வாறு உணவுப்பொருள் கிட்டியபோது ஆவலுடனும் அவசரத்துடனும் உண்பதைப் பரஞ்சோதியாரும்,*

> *அத்த யிர்பதக் கிடங்கரில் அலைகடல் கலக்கும்*
> *மத்தெ னக்கரம் புதைத்தெடுத்து எடுத்துவாய் மடுத்துத்*
> *துய்த்தி டப்பசி விடுத்தது*

*என்று பாடியுள்ளனர்.*

*418. குறிப்புரை :-* நுகர்ந்த - உண்ட, மந்தி - பெண்குரங்கு, கருஞ்சுனை - பெரிய நீர்ச்சுனை, கொண்டல் - மேகம், இறை - சிறிது, நான்கு மறை - நான்கு வேதம், ஈறு - முடிவு.

*விளக்கவுரை :-* உண்ட பிறகு நீர் அருந்துதல் வழக்கம். ஆதலின், குரங்கு கனி நுகர்ந்ததும் சுனைநீரைப் பருகியது. அப்படிப் பருகியும் வயிறு குளிராமையால் மேகத்தைக் கீறி அதன்வழி வரும் நீரைப் பருகியது எனக் குரங்கின் குறும்பைக் கூறினர். ஊடுதல் ஈண்டு காதலர்களிடை உண்டாகும் பிணக்கம் அன்று, கோபம் என்ற பொருளில் அமைந்துள்ளது. இறைவன், ''வெந்த பொடி பூசிய வேத முதல்வன்''. ''விருத்தனை வேதவித்தை'', "விண்ணிலார் அறிகிலா வேதவேதாந்தன்'', "வேதமும் வேள்வியும் ஆயினார்", "வேத மொழியினர்" என்று தேவார, திருவாசகம் குறிப்பிடுதலின், இறைவனை மறைக்கீறு கண்டான் என்றனர். குறுந்தொகையில், "பல்லில் சேர்ந்த பழம் ஆர்இனக் கலை" என்றும், "தேக்கொக்கும் அருந்தும்.... கடுவனும்" என்றும் குரங்குகள் பலாவையும் மாவையும் அருந்துதல் கூறப்பட்டமையின் ஈண்டு "கண்ட கனி நுகர்ந்த மந்தி" என்றனர். சுனைநீர் ஒளி மிகுதியும் பெறாது உள்ளடங்கி இருந்தமையின், கருஞ்சுனைநீர் என்றனர் எனினும் ஆம். குரங்குகள் மேகத்தைப் புடைத்தல் இயல்பு. இதனை ஐங்குறுநூறு, "மந்திக்

**மைக்கண்டன் மலை**

**419.** **கருங்களிற்றின் வெண்கொம்பால் கல்உரல்வாய் நல்லார்**
**பெருந்தினைவெண் பிண்டி இடிப்ப – வருங்குறவன்**
**கைக்கொணரும் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே**
**மைக்கொணரும் கண்டன் மலை.** **20**

---

*காதலன் முறிமேய் கடுவன்; தண்கமழ் நறைக்கொடி கொண்ட வியலறைப் பொங்கல் இளமழை புடைக்கும்" என்கிறது. இக்கருத்தினைப் போன்றதே "கொண்டல் இறைக்கீறி" என்பது.*

*419. **குறிப்புரை :-** களிறு - ஆண் யானை, கொம்பு - தந்தம், நல்லார் - பெண்கள், பிண்டி - மா, மை - விடத்தின் கருமை, கண்டன் - கழுத்துடையோன்.*

*விளக்கவுரை :- வேடுவப் பெண்கள் கல் உரலில் தினை இடித்தல் இயல்பு. இவ்வாறே குற்றாலக் குறவஞ்சியிலும், "கிம்புரியின் கொம்பொடிந்து வேம்புதினை இடிப்போம்" எனக் கூறப்பட்டுள்ளது. தினையும் தேனும் கலந்து உண்ணுதல் மறவர் இயல்பு. ஆதலின் செந்தேன் கலந்துண்ணும் என்றனர். குமரகுருபரரும், ''செழுந்தினையும் நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்'' என்றனர். இறைவனுக்குக் கண்டம் செந்நிறமானதே என்றாலும், தேவர் உய்ய நஞ்சம் உண்டலின் கருநிறம் ஆயிற்று. ஆகவே, மைக்கொணரும் கண்டன் என்றனர். **கண்டத்தைக் கருமை ஆக்கிக்கொண்டது அவனது கருணையே ஆகும்**. "நஞ்சுண்டு, பித்துண்டு, நம்தேவர் என்பார் தம் பாவையர்க்கு அன்று காதோலை பாவித்த தயவாளர்" என்றும், "நாயகன் கண்டம் கறாதேல் அந்நாட்டமரர் சேயிழை மாதர்க்குச் செங்கைகளும் கொங்கைகளும் சிவக்கும்" என்றும் கூறினர் குமரகுருபரர். இறைவன் மைக்கண்டன் ஆனதால் **அவனது சாவா மூவா முழுமுதல் தன்மையை உணர்த்தியவாறுமாம். இதனை இளங்கோ அடிகள், "விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"** என்றனர்.*

*யானைத் தந்தத்தால் பாறை உரலில் உணவுப் பொருள்களை இடித்து எடுப்பார் என்பதைச் சிந்தாமணி,*

> *யானைவெண் மருப்புஉலக்கை*
> *அறைஉரலை வனம்இடித்த*
> *தேனெய்வா சவற்குஉவவித்*
> *தீங்கனிவா ழையின்பழனும்*
> *ஊனைஉண் டவர்உருகும்*
> *பசுந்தினைப்பிண் டியும்ஒருங்கே*
> *மானின்நோக் கியர்நோக்கி*
> *வழிதொறும்ஈவ தவ்வழியே*

*என்று எடுத்து மொழிகிறது. இதில் தேனும் மாவும் கலந்து உண்ணும்பொருட்டு*

## குராமலர் நிறைந்த செஞ்சடையான் குன்று

420. கனைய பலாங்கனிகள் கல்இளையர் தொக்க
நனைய கலத்துரத்தில் ஏந்தி – மனைகள்
வரவிரும்பி ஆய்பார்க்கும் ஈங்கோயே பாங்கார்
குரவரும்பு செஞ்சடையான் குன்று. 21

---

*ஈவது குறிப்பிடப்பட்டதையும் காணலாம். யானைக் கோடு உலக்கையாகக் கூறப்படுதலை மேலும் "முத்தார் மருப்பின் வகைசால் உலக்கை வயின் வயின் ஒச்சி வயக்களிற்றுக் கோடு உலக்கையாக" என்று கலியிலும், "வேழத்துப்பணை, மருப்பு உலக்கையின் அறை உரல் நிறைய" என்று பெருங்காதையிலும் குறிப்பிடப்பட்டுள்ளன.*

*420. **குறிப்புரை :-** கனைய - திரண்ட, பலாம் கனி - பலாப்பழம், கல் இளையர் - மலைவாழ் இளைஞர், நனை - பூ அரும்பு, உரம் - மார்பு, ஆய் - தாய், பாங்கு - அழகு, ஆர் - பொருந்திய, குரவு - குரா மலர்.*

***விளக்கவுரை :-** மலைவாசிகள் மலர்களைக் காதில் புனைதலும், பூ அரும்புகளை மார்பில் ஒட்ட வைத்தலும் இயல்பு ஆதலின் அவர்கள் மார்பை நனை உரம் என்றனர். மார்பின் பரந்த நிலையினைக் காட்ட அகலத்து உரம் என்றனர். சுமை மிக்க பொருளை மார்பில் சாய்த்து அணைத்துக் கொணர்தல் இயல்பு ஆதலின், உரத்தில் ஏந்தி என்றனர். சிறுவர்கள் பாரமான பொருளைத் தாங்கி வருதலின், அதனை உடனே வாங்கத் தாயர் வெளியில் காத்திருந்தனர் என்பார், "ஆய் பார்க்கும்" என்றனர். இறைவன் குராமலரைச் சூடியுள்ளான் என்பதை அப்பரும், "குராமலரோடு அராமதியம் சடைமேல் கொண்டார்" என்றனர். இறைவன் திருமுடி குரவ மலர்க்கே அன்றிப் பன்மலர்க்கும் இடமாதலைத் திருமுறைகள், "வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம் பொன் இயன்ற சடை" என்றும், "கோடலொடு கோங்கவை குலாவுமுடி" என்றும், "கொய்ம்மலர் துழாய் வன்னி மத்தமும் கூவிளமும் பெய்மலர் வேய்ந்த விரிசடைக் கற்றை" என்றும் கூறுகின்றன.*

*421. **குறிப்புரை :-** கடம் - மதநீர், கண் வளர - உறங்க, கார்நிறம் - கருநிறம், ஆர்ப்ப - ஒலிக்க, சுடர் - ஒளிவிடும், குழையார் - காதணி அணிந்த பெண்கள், எழவு - எழுதல், மடக்கிளிகள் - இளங்கிளிகள், ஆல் - கல்லால மரம், நால்வேதம் - அறம், பொருள், இன்பம், வீடு பற்றிய நூல்.*

***விளக்கவுரை :-** குறமாதர்கள் பாடல் பாடுதலில் வல்லவர்கள். அவர்கள் பாடும்போது யானை முதலியன அப்படியே மயங்கி உறங்கும். இதனை,*

*ஒலியல் வார்மயிர் உளறினள் கொடிச்சி*
*பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்*

### நால்வேதம் உரைத்தான் வெற்பு

**421.** கடக்களிறு கண்வளரக் கார்நிறவண் டார்ப்பச்
சுடர்க்குழையார் பாட்டெழவு கேட்டு – மடக்கிளிகள்
கீதம் தெரிந்துரைக்கும் ஈங்கோயே ஆல்கீழ்நால்
வேதம் தெரிந்துரைப்பான் வெற்பு. **22**

---

*குரலும் கொள்ளாது நிலையிலும் பெயராது*
*படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்என*
*மறம்புகல் மதகளிறு உறங்கும்*

*என்று அகநானூறு குறிப்பிடும் ஆற்றால் தெளியலாம். சொன்னதைக் கேட்டு அப்படியே திருப்பிச் சொல்லும் இயல்புடையவை கிளிகள். இதனைத்தான் "கிளிகள் கீதம் தெரிந்துரைக்கும்" என்றனர். கிளிகள் சொன்னதைத் திருப்பிச் சொல்வதைத் திருஞானசம்பந்தர், "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு, வேரிமலி பொழில் கிள்ளை வேதங்கள் பொருள் சொல்லும் மிழலை யாமே" என்றனர். இறைவன் கல்லால மரத்தின்கீழ்ச் சனகாதி முனிவர்க்கு உரைத்தவை அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையே ஆகும். இதனை மாணிக்கவாசகர் தெளிவுபட,*

*அருந்தவர்க்கு ஆலின்கீழ் அறமுதலா நான்கனையும்*
*இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடி*
*அருந்தவர்க் கறமுதல்நான் கன்றருளிச் செய்திலரேல்*
*திருந்தவர்க்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ*

*என்றனர். அந் நால்பொருளே நால்வேதம் எனப்படும். இதனை மேலும் வற்புறுத்தவே திருவாதவூரர்,*

*நன்றாக நால்வர்க்கு **நான்மறையின் உட்பொருளை***
***அன்றாலின் கீழிருந்து** அங்குஅறம் உரைத்தான்*

*என்றனர். இதுவே உண்மைப் பொருளாகும் என்பதனைத் திருஞானசம்பந்தரும், "ஏரிசையும் வட ஆலின் கீழ் இருந்தங்கு ஈர்இருவருக்கு இரங்கி நின்று, நேரியநான் மறைப்பொருளை உரைத்துஒளிசேர் நெறிஅளித்தோன்" என்றனர். இக்கருத்தின் கருவே ஈண்டு, "ஆல்கீழ் நால்வேதம் தெரிந்துரைப்பான்" என்பதாகும். உரைத்தான் எனற் பாலது உரைப்பான் என்றது காலவழுஅமைதி என்க.*

*422. குறிப்புரை :- சூல் - கருக்கொண்ட, பிடி - பெண்யானை, கார் யானை - ஆண்யானை, சந்தம் - சந்தனத் தழை, இறுத்து - ஒடித்து, செறுத்த - கோபங்கொண்ட, கடம் - மதநீர், தடத்த - பருத்த, தோல் - யானை, உரிவை - தோலை, மிடற்றினான் - கண்டத்தையுடைய இறைவன், மருவும் - சேர்ந்திருக்கும்.*

**விடமுண்டகண்டன் வெற்பு**

**422.** **கறுத்தமுலைச் சூல்பிடிக்குக் கார்யானை சந்தம்**
**இறுத்துக்கை நீட்டும்ஈங் கோயே – செறுத்த**
**கடதடத்த தோலுரிவைக் காப்பமையப் போர்த்த**
**விடமிடற்றி னான்மருவும் வெற்பு.** **23**

---

***விளக்கவுரை :-*** *யானை தன் பெண்யானைக்குத் தழையினை ஒடித்துக் கொடுக்கும் என்பது பற்றிய குறிப்புக்கள் சங்க நூல்களில் பல இடத்தும் கூறப்பட்டிருப்பதைக் கீழ்வரும் எடுத்துக்காட்டுக்களால் அறியலாம்.*

*யானைதன்,*
*கொன்மருப்பு ஒடியக் குத்திச் சினம்சிறந்து*
*இன்னா வேனில் இன்துணை அயர*
*முளிசினை யாஅத்துப் பொளிபிளந்து ஊட்ட*

*எனவும்,*

*புன்தலை மடப்பிடி உணீஇயர் அம்குழை*
*நெடுநிலை யாஅம் ஒற்றி நனைகவுள்*
*படிஞிமிறு கடியும் களிறே*

*எனவும் அகநானூற்றில் வருதல் காண்க. மேலும்,*

*கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇய*
*பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை*

*என்று நற்றிணையிலும் வருதல் காண்க.*

*இதனால்,* ***அஃறிணைப் பொருள்களும் காதல் உணர்ச்சியில் உயர்திணைப் பொருள்களினும் தாழ்ந்தவை அல்ல என்பதை அறியலாம்.*** *இறைவன், கயாசுரன் என்பவனது தோலை உரித்துப் போர்த்துக்கொண்டவன் ஆதலின், "தோல் உரிவைக் காப்பு அமையப் போர்த்த" என்றனர். அதாவது, கயாசுரன் என்பவன் யானை வடிவேற்றவன். அவன் தேவர்களோடு பொருது துன்புறுத்தி வந்தனன். இதனைக் கண்ட அருந்தவசிகள் அஞ்சிக் காசியை அடைந்தனர். அங்கும் இவ்வசுரன் தொடர்ந்தனன். இறைவன் உக்கிரப் பெருவடிவு உற்று அவனைத் திருவடியால் உதைத்தனர்; சிரத்தை மிதித்தனர்; திருநகங்களால் பிளந்து தோலை உரித்து உத்தரியமாகப் போர்த்துக் கொண்டனர். இதனால் இறைவன் கஜாயுத்த மூர்த்தி என்ற திருப்பெயர் பெற்றனர். இதனைக் கந்தபுராணம், "ஐயன் மிக்கதன் கதிரினைக் குருதிநீர் அறாது மையல் யானைவன் தோலைமேல் கொண்டனன் மறைத்தான்" என்கிறது. இறைவன் தேவர்களை முனிவர்களைத் தவசிகளைக் காக்கப் போர்த்தமையின் "காப்பு அமைய" என்றனர்.*

**காம தகன மூர்த்தி மலை**

**423.** **கங்குல் இரைதேடும் காகோ தரம்கேழல்**
**கொம்பின் இடைக்கிடந்த கூர்மணியைப் – பொங்கி**
**உருமென்று புற்றடையும் ஈங்கோயே காமன்**
**வெருவொன்றக் கண்சிவந்தான் வெற்பு.** **24**

---

*423. **குறிப்புரை :-** கங்குல் - இரவு, காகோதரம் - பாம்பு, கேழல் - பன்றி, கொம்பு - தந்தம், கூர் - ஒளிமிக்க, உரும் - இடி, வெரு - அச்சம், ஒன்ற - பொருந்த.*

***விளக்கவுரை :-*** *பாம்புகள் இரை தேட இரவில் வெளிவரும். அதுபோல பன்றி தம் கொம்பால் பூமியைக் கிளறியபோது மறைந்திருந்த இரத்தினம் அதன் கொம்பில் ஒளிவிட்டுக் கொண்டிருக்கும். அவ்வொளி பாம்புக்கு மின்னல்போலத் தோன்றும். ஆதலால் அது இரை தேடுதலையும் விடுத்துப் புற்றில் ஒடுங்கும் என்று அழகுபடக் கூறப்பட்டுள்ளது. எவர்க்கும் இன்பம் எழுப்பலின் மன்மதன் காமன் எனப்பட்டான். வெருவுதல் என்பது வெரு என நின்றது, முதல்நிலைத் தொழிற்பெயராகும்.*

*இறைவன் யோகநிலையில் இருந்தபோது, அவ் யோக நிலையினைக் கலைத்துப் போகநிலையினை ஊட்டத் தேவர்கள் மன்மதனை ஏவினர். அவன் கரும்பு வில்லை வளைத்து, அரும்பு நாணில் மலர் அம்புகளை இறைவன்மீது எய்தபோது இறைவன் சிறிது விழித்துப்பார்க்க, அதினின்று எழுந்த தீ அவன் உடலைச் சாம்பர் ஆக்கியது. இதனால் இறைவனுக்குக் காம தகன மூர்த்தி என்ற பெயர் உண்டாயது. இவ்வரலாறே "காமன் வெருஒன்றக் கண் சிவந்தான்" என்ற தொடரில் உள்ளது.*

*இவ்வரலாற்றை நன்கு தெளிவுபடச் சுந்தரரும்,*

*இழித்துகந்தீர் முன்னைவேடம் இமையவர்க்கும்*
*உரைகள் பேணா*
*தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட உயர்தவத்தை*
*அமரர் வேண்ட*
*அழிக்கவந்த காமவேளை அவனுடைய*
*தாதை காண*
*விழித்துகந்த வெற்றிஎன்னே வேலைசூழ்வெண்*
*காட னீரே*

*என்று அருளிப் போந்தனர்.*

*பாம்பு இடிக்கு அஞ்சும் என்ற குறிப்பினைச் சங்க நூலில் பல இடங்களிலும் காணலாம். "ஈர்ங்குரல் உருமி ஆர்கலி நல்ஏறு பாம்புகவின்*

### வெண்ணீற்றான் வெற்பு

**424.** **கலவிக் களிறசைந்த காற்றெங்கும் காணா**
**திலைகைக்கொண் டேந்திக்கால் வீச – உலவிச்சென்**
**றொண்பிடிகாற் றேற்றுகக்கும் ஈங்கோயே பாங்காய**
**வெண்பொடிநீற் றான்மருவும் வெற்பு.** **25**

---

*அழிக்கும்” என்று குறுந்தொகையிலும், “திருமணி அரவுத் தேர்ந்து உறல் உருமுச் சிவந்து எறியும் ஓங்குவரை” என்று நற்றிணையிலும், “பாம்பின் பைபட இடிக்கும் கடுங்குரல் ஏற்றொடு” என அகநானூற்றிலும் வருதலைக் காணலாம்.*

*424. குறிப்புரை :- கலவி - புணர்ச்சியை விரும்பிய, களிறு - யானை, கால் - காற்று எழ, பிடி - பெண்யானை, உகக்கும் - மகிழும், பாங்காய - அழகாகிய, மருவும் - சேர்ந்திருக்கும், வெற்பு - மலை.*

***விளக்கவுரை :-*** *புணர்ச்சிக்குப் பின் சோர்வு உண்டாதல் இயல்பு. அதனால் காற்றுப்பெறாது பிடி சோர்ந்தது. அந்நிலையில் ஆண்யானை இலையை வீசிக் காற்றை எழுப்பிப் பெண் யானையின் களைப்பை நீக்கியது. அக்காற்றை ஏற்று அப்பெண் யானையும் மகிழ்ந்தது. திருநீறு இறைவன் திருமேனியில் நின்று தோன்றியது என்பது சாத்திர விதி. இதனைச் சிதம்பர சுவாமிகள், “ஆதிபகவன் வடிவில் பூத்து” என்று கூறுமாற்றால் தெளியலாம்.* ***இந்த நீற்றைப் பூசுதலால் உடல் தூய்மை, செல்வப் பேறு, நிலையாமையின் உணர்ச்சி, உடல் அழகு முதலான நிலைகள் ஏற்படும் என்பதை உணர்த்தவே இறைவன் தானே அதனை அணிந்துகாட்டி, மக்களையும் அணியச் செய்கின்றான் என்ற குறிப்பே, “வெண்பொடி நீற்றான்” எனப்பட்டது.*** *திருமாலும் இத் திருநீற்றையே புனைந்து திகழ்கிறான் என்பதை நம்மாழ்வாரும், “கரிய மேனிமிசை வெளிய நீறுசிறிதே இடும் பெரிய கோலத் தடங்கண் விண்ணோர் பெருமான்'' என்று குறிப்பிட்டுள்ளார். இத் திருநீறு, பேய்பிசாசு அண்டாதிருக்க இடப்படுவது என்ற குறிப்பில் அவரே, “கவளக் கடாக்களிற்றை அட்டபிரான் திருநாமத்தால், தவளப் பொடிக்கொண்டு நீர் இட்டிடுமின் தணியுமே” என்றும் பாடியுள்ளனர். கம்பரும், சீதைக்குத் திருநீறு இட்டதைக் காப்புச் செய்து என்றனர்.*

*அஃறிணைப் பொருள்கள் காதலினால் தமது பெண் இனத்திற்குப் பெரிதும் அன்புகாட்டித் துணைபுரிதல் பற்றிய குறிப்பு சங்க நூல்களில் பல இடங்களில் வருகின்றன.*

> *துடிஅடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்*
> *பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறு;*
>
> *அன்புகொள் மடப்பெடை அசைஇ வருத்தத்தை*

**நீங்காத மான் பிடித்த கையான் மலை**

**425.** கன்னிப் பிடிமுதுகில் கப்பருவ முட்பருகி
அன்னைக் குடிவர லாறஞ்சிப் – பின்னரே
ஏன்றருக்கி மாதவம்செய் ஈங்கோயே **நீங்காத**
**மான்தரித்த கையான் மலை.** **26**

---

*மென்சிறக ரால்ஆற்றும் புறவு;*

*இன்னிழல் இன்மையால் வருந்திய மடப்பிடிக்குத்*
*தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலை*

*என்று கலித்தொகையில் வருதல் காண்க. இதே கருத்தைச் சிந்தாமணி,*

*குழவிப் பிடிகுஞ் சரம்மாழ் கும்எனத்*
*தழுவிச் சுடுவெவ் வழல்தாங் குவன*
*கெழுவிப் பெடையைக் கிளர்சேவல் தழீஇத்*
*தொழுதிச் சிறகில் துயர்ஆற் றுவன.*

*கலையின் பிணைகன் றிடும்என் றுகசிந்து*
*இலையின் நிழல்அவ் வயின்இன் மையினால்*
*நிலையின் நிழல்தான் அதுகொ டுத்து*
*உலையும் வெயில்நின்று உருகும்…*

*என்று செப்புகிறது.*

*425. குறிப்புரை :- கன்னி - இளைய, பிடி - பெண்யானை, கப்பருவ - கிளை தாக்கியதால், பருகி - தைத்து, அன்னை - தாய் யானை, குடி - தங்கி இருக்கும் இடம், ஏன்று - ஏற்று, அருக்கி - தவிர்த்து, மா - சிறந்த.*

**விளக்கவுரை :-** *இறைவன் என்றும் உள்ளவன். அவன் இருக்கும் அளவும் அவனிடம் பொருந்தப்பெற்ற பொருள்களும் உண்டு. உலக முடிவில் அவை யாவும் கூட அழிவனவே. என்றாலும் அதுபோது உள்ளவர் இறைவனாம் இறையே ஆவர். இந்த உண்மையினைக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்தாலும், உரை விளக்கத்தாலும் நன்கு உணரலாம். அதனால்தான் ஈண்டு ஆசிரியர்* **“நீங்காத மான் தரித்த கை”** *என்றனர்.*

*கன்னிப் பிடி என்றது இளைய பெண்யானை ஆகும். அது வெளியில் இரை தேடச் சென்றது. அது செல்லும் இடமோ மரஞ்செடி அடர்ந்த காடு. சில மரக்கிளைகளில் முள்ளும் உண்டு. ஆகவே, அக்கிளையின் முள் அதன் முதுகில் நன்கு பதிந்துவிட்டது. அந்தத் தொந்தரவுடன் தன் தாய்ப் பிடியுள்ள இடத்திற்கு வர முயன்றது. இடையே ஆறு நீர் பெருகி ஓட ஆரம்பித்தது. ஆகவே, அவ்வாற்றைக் கடக்க இயலாமல் அஞ்சியது. இரை தேடச் சென்ற போது நீர்*

**மனக்கவலை தீர்ப்பான் மலை**

**426.** **கள்ள முதுமறவர் காட்டகத்து மாவேட்டை**
**கொள்ளென் றழைத்த குரல்கேட்டுத் – துள்ளி**
**இனக்கவலை பாய்ந்தோடும் ஈங்கோயே நீங்காத**
**மனக்கவலை தீர்ப்பான் மலை.** **27**

---

*ஓட்டம் மிகுதியும் இன்றி மீண்டபோது ஓட்டம் மிக இருந்த காரணத்தால்தான் ஆற்றிற்கு அஞ்ச வேண்டியதாயிற்று. அதனால் ஆற்றின் மறுகரையிலேயே தங்கியது. அப்படி இருந்தது தவம் செய்வதுபோல் காணப்பட்டது. இது குறித்தே, "மாதவம் செய்" என்று ஆசிரியர் குறிப்பிட்டனர்.*

*426. **குறிப்புரை :-** மறவர் - வேடர், மா - விலங்குகள் இனம், மான் மரை முதலான விலங்குகள், கவலை - பல கவர்ந்த வழிகளில்.*

***விளக்கவுரை :-** வேடர்கள் வேட்டை ஆடுகையில் வெளிவராது அங்கங்கே பதுங்கிக் கிடக்கும் விலங்குகள் வெளிவர ஓசையை எழுப்புவர். அவை வெளிவருகையில் அவற்றை வேட்டையாடிக் கொல்வர். இதனைச் சேக்கிழார்,*

*வெய்யமாள முப்பஏவி வெற்பராயம் ஓடிநேர்*
*எய்யும்வாளி முன்தெரிந்து கொண்டுசெல்ல எங்ஙணும்*
*மொய்குரல்து டிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்*
*கைவிளித்துஅ திர்த்துமாள மூப்பினார்கள் கானெலாம்*

*என்று அழகுறப் பாடிக் காட்டினர். இக்கருத்தைத்தான் ''மாவேட்டை கொள்என்று அழைத்த குரல் கேட்டு... பாய்ந்தோடும்" என்றனர். விலங்குகட்கு ஒரே பீதி உண்டானமையின் "துள்ளி ஓடும்" என்றனர். இறைவன் மனக்கவலை தீர்ப்பவன் என்பதை, அப்பர் "அருந்துணையை அடியார்கள் அல்லல் தீர்க்கும் அருமருந்தை" என்றதும் காண்க. இக்கருத்தே "மனக்கவலை தீர்ப்பான்" என்ற தொடரில் உள்ளது. துன்பம் தீர்ந்து இன்பக் கரையில் இறைவன் நம்மை ஏற்றுவன் என்பதையும் அப்பர், "துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை, இன்பக் கரை முகந்து ஏற்றும் திறத்தன'' என்றும் அறிவித்துள்ளனர்.*

*மறவர் வேட்டையின் பொருட்டுக் கவண் ஒலி எழுப்பின் விலங்குகள் அஞ்சும் என்பதை, "குறவர் உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ, அகல்மலை இறும்பில் துவன்றிய யானைப் பகல்நிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல்" என்று மலைபடுகடாத்தும், "கவண்விசைக் கடிஇடிக் கனைசுடர் அமையத்து வழங்கல் செல்லாது இரவுப் புனம்மேய்ந்த உரவுச் சினவேழம்" என்றும், "தினைமேய் யானை இனன்இரிந் தோடக், கல்லுயர் கழுதில் சேணோன் எறிந்த, வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லெனை, மறப்புலி உரற வாரணம் கதற, நனவுறு*

**மூவெயில் அழிய அம்பு கோத்தான் மலை**

**427.** கல்லைப் புனம்ஏய்ந்து கார்க்கொன்றைத் தார்போர்த்துக்
கொல்லை எழுந்த கொழும்புறவின் – முல்லையும்கண்
பல்லரும்பு மொய்த்தீனும் ஈங்கோயே மூவெயிலும்
கொல்லரும்பக் கோல்கோத்தான் குன்று. **28**

---

*கட்சி நன்மயில் ஆல, மலையுடன் வெரூஉ மாக்கல் வெற்பு" என்று அகநானூறும் கூறுதல் காண்க. இங்ஙனம் பெருவிலங்குகள் பயந்து ஓடுமெனில் மானும் மரையும் பசுவும் ஓடியதில் வியப்புண்டோ! பதுங்கி விலங்குகளைப் படுத்தலின் முதுகுறவர் என்றனர். முதுகுறவர் தளர்ந்திருந்தமையின் பிறரை ஏவினர் போலும்! அதனால்தான் "கொள்" என்று கூறினர்.*

*427. **குறிப்புரை :-** கல்லை - கல்லையுடைய, புனம் - காடு, ஏய்ந்து - பொருந்தப்பெற்ற, தார் - மாலை, புறவு - காடு, அங்கண் - அங்கு, மூ - மூன்று, எயில் - கோட்டை, அரும்ப - தோன்ற, கோல் - அம்பு, கொல்லை - புன்செய் நிலம்.*

*__விளக்கவுரை :-__ காடானது கற்களைப் பொருந்தப்பெற்றுக் கொன்றை மலர் மலரப்பெற்று முல்லை மலர்களின் அரும்புகள் பற்களைப்போல அரும்பி இருந்தது என்பதே முதல் மூன்று அடிகளின் திரண்ட பொருள். கொன்றை மலர்ந்து விளங்குதலைக் குறுந்தொகை, "கொன்றை கல் பிறங்கு அத்தம்" என்றும், "பிடவும் கொன்றையும் கோடலும் மடவ ஆகலின் மலர்ந்த பலவே" என நற்றிணையிலும் வருதலைக் காணலாம். கொன்றை மாலைபோல விளங்கும் என்பதை ஐங்குறுநூறு, "ஏதில் பெய்ம்மழை காரென மயங்கிய, பேதையங் கொன்றைக் கோதை" என்றும், "குறும்பல் கோதை கொன்றை மலர" என்றும் கூறுதல் காண்க. இது குறித்தே, "கொன்றைத் தார்" என்றனர். முல்லை அரும்பு பல்லைப் போன்றது என்பதை நமது சங்க நூல்களில் பல இடங்களிலும் காணலாம். "பூங்கொடி முல்லைத் தொகுமுகை இலங்கு எயிறாக" என்று குறுந்தொகையிலும், "முல்லை இலங்கு எயிறு ஈன" என்று கார் நாற்பதிலும், "கார்க்கொடி முல்லை எயிறு ஈன" என ஐங்குறுநூற்றிலும், "கார்செய் புறவில் கவினிக் கொடிமுல்லை கூர்எயிறு ஈன" எனக் கைந்நிலையிலும் வருதலைக் காண்க.*

*இறைவன் முப்புரங்களைச் செற்றான் என்பதை ஆசிரியர் மிகவும் நயம்படக் "கோல் கோத்தான்" என்றனர். கோத்தான் என்பதனால் அவன் அதை விடுத்திலன் என்பது பெறப்படுகிறது. இவ்வாறே மணிமொழியாரும்,*

*வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவாறு உந்தீபற*

**பாம்பைப் பூண்டான் பர்வதம்**

**428.** கல்லாக் குரங்கு பளிங்கில் கனிகாட்ட
எல்லாக் குரங்கும் உடன்ஈண்டி – வல்லே
இருந்துகிரால் கல்கிளைக்கும் ஈங்கோயே மேனி
பொருந்தஅராப் பூண்டான் பொருப்பு. **29**

---

*ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தம்கையில்*
*ஓரம்பே முப்புரம் உந்தீபற*
*ஒன்றும் பெருமிகை உந்தீபற*

*தச்சு விடுத்தலும் தாம்அடி இட்டலும்*
*அச்சு முறிந்ததென்று உந்தீபற*
*அழிந்தன முப்புரம் உந்தீபற*

*என்று பாடியுள்ளனர். இவற்றில் இறைவன் அம்பு எய்து அழித்தனன் என்ற குறிப்பு இன்மையைக் காண்க. இறைவன் தன் முறுவலால் அழித்தான் என்பதே இதன் உட்கிடை. மேலும் முப்புரம் எரித்தது புராண முறைப்படி ஒருபுறம் இருக்க, உண்மை உணருங்கால் மும்மலங்களை அழித்தான் என்பதே ஆகும். இதனைத் திருமூலர்,*

*அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்*
*முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புரம் ஆவன மும்மல காரியம்*
*அப்புரம் செற்றமை யார்அறி வாறே.*

*என்று நன்கு விளக்கியுள்ளனர்.*

*428. குறிப்புரை :- உடன் ஈண்டி - ஒன்றுசேரக் கூடி, வல்லே - உடனே, உகிரால் - நகத்தால், கிளைக்கும் - கிளறும், மேனி - உடல், அரா - பாம்பு, பொருப்பு - மலை.*

***விளக்கவுரை :-*** *குரங்குகள் குறும்பு மிக உடையவை. ஈண்டு ஒரு சிறு குரங்கு மரத்தில் இருந்துகொண்டு கனிக் கொத்தைக் கையில் கொண்டு, பளிங்குக் கல்லில் அக்கொத்தின் நிழல் படியும்படி காட்டியது. அந்நிழலை உண்மைப் பழக் கொத்தெனக் கொண்ட ஏனைய குரங்குகள் அதனைப் பெற வேண்டி ஒன்று கூடித் தம் நகங்களால் அப்பளிங்கைக் கீறத் தொடங்கின. இதுவே முதல் இரண்டடிகளின் கருத்து. கல்லாக் குரங்கு என்றது சிறு குரங்கு என்ற குறிப்பாகும்.*

*இறைவன் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன்; விருப்பு வெறுப்பு அற்றவன்; எல்லா உயிர்களிடத்தும் ஒரே தன்மையைக் காட்டவல்லவன். அதனால்தான் விஷம் உள்ள பாம்பையும் தன் உடலில் ஆபரணமாகப்*

*பூண்டுள்ளான். "பொங்கரவம்... பூண்பதுவும் கொண்டென்னை, ஈசன்அவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான்'' என்று மணிமொழியார் கூறியுள்ளனர். இக்காரணம் பற்றி மட்டும் அன்று. நாகசக்தி எவற்றையும் நியமிப்பது என்னும் கருத்தை வலியுறுத்தவே நாகத்தை இறைவன் பூண்டனன் என்று காமிகாகமம் கூறுகிறது. இதுதான் கருத்து என்பது அப்பரது வாக்காகிய,*

*போர்ப்பனை யானை உரித்த பிரான்பொரி வாய்அரவம்*
*சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்இதனைக்*
*காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூரிருந்த*
*கூர்ப்படை ஒள்வாள் மழுவனை யாம்அண்டர் கூறுவதே*

*என்பதனால் தெளியலாம். இதனால் உலகம் தோன்றவும் ஒடுங்கவும் இறைவனே காரணன் என்பதை அறிவிக்கவே குண்டலினி சக்தி உருவமான பாம்பை அணிந்துள்ளான் என்பதை உணர்தல் வேண்டும். புராணக்காரர்கள், கருடனுக்கு அஞ்சிய நாகங்கள் சிவபெருமானைச் சரண் புக அவற்றை ஆபரணமாகப் பூண்டு அபயம் அளித்தான் என்றும், அதனால் இறைவன் புஜங்க லளித மூர்த்தி என்ற பெயரைப் பெற்றனன் என்றும், தாருகா வனத்து இருடியர்கள் தம் மனைவியர் கற்பை இறைவர் கெடுத்தனர் என்று சினம் கொண்டு, கொலை வேள்வி செய்து சர்ப்பங்களை உண்டாக்கி, இறைவனைக் கொல்ல ஏவியபோது, அவற்றை ஏற்று, அணிகலனாக இறைவன் பூண்டு கொண்டனன்; இதனால் இறைவன் புஜங்கத்திராஸ மூர்த்தி என்று ஆயினன் என்றும் கூறுவர். இவற்றை எல்லாம் உள்அடக்கிக் கந்தபுராணம்,*

*ஏந்திய பின்னர் வேள்வி*
*எரியதற்கு இடையே எண்ணிப்*
*பாந்தளங் கொழுந்து தீயோர்*
*பணியினால் சீற்றம் கொண்டு*
*போந்தன அவற்றை மாயோன்*
*புள்ளினுக்கு அஞ்சித் தன்பால்*
*சேர்ந்ததோர் பணிக ளோடு*
*செவ்விதின் புனைந்தான் எங்கோன்*

*என்று குறிப்பிடுகிறது. இவற்றையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கித் தனிப்பாடல் நகைச்சுவை ததும்பும்படி,*

*ஒட்டாக வொட்டியும் கால்பொன்னில் மாப்பொன்*
*னுபாயமதத்*
*தெட்டா திரான்பணி செய்யா திரான்செம்பொன்*
*மேருவினைக்*
*கட்டாகக் கட்டிக் கடுகள வாநிறை*
*காட்ட வல்ல*
*தட்டானுக் கஞ்சியல் லோஅணிந் தான்சிவன்*

**பிறை அணிந்தான் பெருமை**

**429.** **கண்கொண் டவிர்மணியின் நாப்பண் கருங்கேழல்**
**வெண்கோடு வீழ்ந்த வியன்சாரல் – தண்கோ**
**டிளம்பிறைசேர் வான்கடுக்கும் ஈங்கோயே வேதம்**
**விளம்பிறைசேர் வான்கடுக்கும் வெற்பு.** **30**

---

*சர்ப்பத்தையே*

*என்று குறிப்பிடுகிறது. இன்னோர் அன்ன அரும்பொருள்களை உள்ளடக்கிய தொடரே, "மேனிப் பொருந்த அராப் பூண்டான்" என்பது. கல்லாக் குரங்குகள் செய்யும் குறும்பைப் பலவகையில் சங்கநூல் கூறும். "கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு இருவெதிர் ஈர்ங்கழை ஏறிச் சிறிகோல் மதி புடைப்பது" என்பது ஐங்குறுநூறு.*

*429. குறிப்புரை :- கண் கொண்டு - கண்களைப் பறித்துக்கொண்டு, அவிர் - ஒளிவிடும். நாப்பண் - இடையில், நடுவே; கேழல் - பன்றி, கோடு - தந்தம், வியன் - பரந்த, வான் - ஆகாயம், கடுக்கும் - ஒக்கும், மிகும்; இறை - இறைவன், சிவபெருமான்.*

***விளக்கவுரை*** *:- பன்றி கோட்டுக்கு இடையே இரத்தின மணி கிடத்தல் இளஞ் சந்திரன் பொருந்திய ஆகாயம் போன்றது என்கிறார். ஈண்டு வியன்சாரல் ஆகாயமாகவும், பன்றிக் கொம்பு சந்திரனாகவும், மணி நட்சத்திரமாகவும் விளங்குகின்றன என ஆசிரியர் குறிப்பிடுகிறார். இதுபோன்ற உவமைகளைச் சங்க நூல்களில் பரக்கக் காணலாம். "இளம்பிறை அன்ன* ***கோட்ட கேழல்"*** ***என்பது ஐங்குறுநூறு.***

*இறைவனை வேதங்கள் புகழ்ந்த வண்ணம் இருக்கும். தேவாரத் திருமுறைகளாகிய திராவிட வேதங்கள் அவனைப் புகழ்வது நாம் அறிந்த தாகும். வடமொழி வேதங்களும் அவனையே முழுமுதற் பரம்பொருளென விளம்புகிறது. இதனைக் கீழ்வரும் வாக்கியங்களால் நன்கு உணரலாம்; "பசுக்களுக்குப் பதி ஆவான் உருத்திரபதி" என்று ரிக் வேதமும், "பதியாகிய சிவபெருமானை அறிந்தவர்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் நீங்கி, இறப்புப் பிறப்பு அற்று வீடு பெறுவர்" என்று சுவேதாசுவத உபநிடதமும் உரைக்கின்றன. இருக்கு வேதத்தின் மூன்றாம் மண்டலத்தில் கூறப்படும் காயத்திரி வணக்கம்* ***பர்க்கன்*** *வணக்கம் ஆகும்.* ***பர்க்கன்*** *சிவன் என்பதை மைத்திரியாயணி உபநிடதமும், நிகண்டும் உணர்த்துகின்றன. மேலும், சுவேதாசுவத உபநிடதம் "இவ்வுலகங்களனைத்தும் ஆற்றலால் இயக்கும் இறைவன் உருத்திரன். அவனுக்கு வேறாக இரண்டாம் இறைவன் ஒருவன் இலன்" என்று திட்டவட்டமாகக் கூறுகிறது. இத்துடன் ரிக் வேதம், "பாட்டுக்களுக்கும் வேள்விகளுக்கும் முதல்வன்" என்கிறது. இந்த இருக்கே, "உருத்திரரே தேவர்கட்கு மேலானவர்; புகழ் உடையவர்; வன்மையுடையவர்"*

## கொன்றைச் சடையான் குன்று

**430.** **காந்தளம் கைத்தலங்கள் காட்டக் களிமஞ்ஞை**
**கூந்தல் விரித்துடனே கூத்தாடச் – சாய்ந்திரங்கி**
**ஏர்க்கொன்றை பொன்கொடுக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்**
**கார்க்கொன்றை ஏற்றான் கடறு.** **31**

---

என்கிறது. இக்கருத்துக்களைக் கொண்டதே "வேதம் விளம்பும் இறை" என்பது. ஈங்கோய் மலையின் உயர்வை மிகுதிப்படுத்திக் கூறவே வானை மிகுத்துச் செல்லும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கடுக்கும் என்பது மிகும் என்ற பொருளதாம்.

*430. **குறிப்புரை :-** காந்தள் - ஒருவகை மலர், அம் - அழகிய, கைத்தலம் - கை, களி - மகிழ்வு கொண்ட, மஞ்ஞை - மயில், கூந்தல் - தோகை, இரங்கி - இரக்கம் கொண்டு, ஏர் - அழகிய, ஏற்றான் - வைத்தவன், கடறு - மலை.*

***விளக்கவுரை :-*** *காந்தள் பெரிதும் கார்காலத்தில் மலரத் தக்கவை. அங்ஙனம் மலர்ந்திருத்தலை மயில்கள் கண்டதும் கார்காலம் வந்துவிட்டதாக மகிழ்வு கொண்டு தம் தோகைகளை விரித்து ஆடத் தொடங்கின. அவ்வாட்டத்தைக் கண்டு பரிசளிப்பன போல - பொன் சொரிவன போல - கொன்றை மலர்கள் அம்மலையில் சிந்தி இருந்தன.* ***இவ்வாறு கொன்றை பொன்போல பரிசளிக்கப்படும் பொருளாகக் கற்பித்துப் பாடுவது புலவர்கள் இயல்பு.*** *இதனைச் சம்பந்தரும், "வரைசேரும் முகில்முழவ மயில்கள் பல நடமாட வண்டு பாட, விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள் கைஏற்கும் மிழலையாமே" என்று அழகுபடப் பாடியுள்ளனர். நச்சினார்க்கினியர், "கொய்ம்மலர்க் கொன்றை மாலை குளிர்மதிக் கண்ணியாற்கு" என்னும் சிந்தாமணித் தொடர்க்குப் பொருள் கூறுகையில் இறைவனுக்கு அடையாள மலர் கொன்றை. ஆகவே, அதனை அவன் சூடியுள்ளான் என்று கூறுகிறார். புறநானூறும் இக்குறிப்பைச் செவ்வனே,*

> *கண்ணி கார்நறுங் கொன்றை*
> *வண்ண மார்பில் தாரும் கொன்றை*

*என்று கூறுகிறது.*

*கொன்றை இறைவனைப் போலவும் காட்சி அளிக்கும் என்பதை,*

> *சென்றணைந்த ஆனாயர்*
> *செய்தவிரைத் தாமம்என*
> *மன்றல்மலர்த் துணர்தூக்கி*
> *மருங்குதாழ் சடையார்போல்*
> *நின்றநறும் கொன்றையினை*
> *நேர்நோக்கி நின்றுருகி*
> *ஒன்றியசிந் தையில்அன்பை*

**மைக்கண்டன் மலை**

431. குறமகளிர் கூடிக் கொழுந்தினைகள் குத்தி
நறவமாக் கஞ்சங்கள் நாடிச் – சிறுகுறவர்
கைந்நீட்டி உண்ணக் களித்துவக்கும் ஈங்கோயே
மைந்நீட்டும் கண்டன் மலை. 32

---

*உடையவர்பால் மடைதிறந்தார்*

*என்று சேக்கிழார் கூறினார்.*

*கொன்றை கார்காலத்தில் மலர்வது என்பது சங்க நூலால் அறிய வரும் உண்மை. இதனைக் குறுந்தொகை, "புதுப்பூங் கொன்றைக் கானம்* ***கார்எனக்*** *கூறினும் என்றும் ஏதில" எனக் கூறுதல் காண்க. ஐங்குறுநூறு இக்கருத்தைக் "கார்க் கொன்றை" என்றும், புறநானூறு "கார் நறும் கொன்றை" என்றும், அகநானூறு "காரவிர் கொன்றை" என்றும், தேவாரம் "காரார் பூங்கொன்றை" என்றும் கூறுகின்றன.*

*கொன்றை பொன்போலவுள்ளது என்பதையும் சங்க நூலில் காணலாம்.*

*கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி*
*கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர்*
*பொன்பெய் பேழை மூய்திறந்தன்ன*

*என்பது குறுந்தொகை. "பொன்வீக் கொன்றை" என்பது நற்றிணை. கம்பன் தனது நூலில்,*

*நன்னெடும் காந்தள் போதின்*
*நறைவிரி கடுக்கை மென்பூந்*
*துன்னிய கோபத் தோடும்*
*தோன்றிய தோற்றம் தும்பி*
*இன்னிசை முரல்வ நோக்கி*
*இருநில மலர்க்கை ஏந்திப்*
*பொன்னொடும் காசை ஈட்டிக்*
*கொடுப்பதே போன்ற தன்றே.*

*என்று கூறி இருப்பது காண்க.*

*காந்தள் கைபோல மலரும் என்பதை, "கைபோல் பூத்த கமழ்குலைக் காந்தள்" என்று பரிபாடலிலும், "காந்தட் பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" என்று பெருங்கதையிலும், "கைம்மலர்க் காந்தள்" என்று சிந்தாமணியிலும் வருதலைக் கொண்டு தெளியலாம்.*

*கார்காலத்தில் மயில் ஆடுதலை, "மடவ வாழி மஞ்ஞை மாயினம், கால*

**மலையால் மும்மதிலை வென்றான் மலை**

**432.** **கூழை முதுமந்தி கோல்கொண்டு தேன்பாய**
**ஏழை இளமந்தி சென்றிருந்து – வாழை**
**இலையால்தேன் உண்டுவக்கும் ஈங்கோயே இஞ்சி**
**சிலையால்தான் செற்றான் சிலம்பு.** **33**

---

*மாரி பெய்தென அதன்எதிர் ஆலலும் ஆலின'' என்ற குறுந்தொகைப் பாடலாலும், "பொய்இடி அதிற் குரல்வாய் செத்து ஆலும் இளமயில்" என்ற நற்றிணைப் பாடலாலும் உணரலாம்.*

*431. **குறிப்புரை :-** நறவம் - தேன், மா - சிறந்த, கஞ்சங்கள் - தாமரை மலர்கள், உவக்கும் - மகிழும், மை - விடம்.*

***விளக்கவுரை :-** குறமகளிர் தினை குற்றல் இயல்பு. இது முன்பே வந்தது. மகளிர் குற்றும் அழகைச் சிலம்பு, "பாடல் சால் முற்றம் பவழ உலக்கையால் மாட மகளிர் குறுவர்" எனவும், மலைபடுகடாம், "சந்துரல் பெய்து தசைகால் அணிமுத்தம் வஞ்சி மகளிர் குறுவர்" எனவும் கூறுகின்றன. தினையினைச் சுவைபடுத்த அதில் தேன் கலத்தலும் அவர்கள்தம் இயல்பு. ஆகவே, அதில் தேனைக் கலக்கத் தேன் உள்ள மலராகிய தாமரையினைக் குறமளிர் தேடினார்கள். அதன்பின் தமது சிறு குறப்பிள்ளைகள் உண்ணத் தருவர். வருகிறவர்கட்கும் தேனையும் தினையையும் ஈதலை, "மானக் குறப்பெண் குடிஇருந்த கன்னி புனத்துத் தினைமாக் கமழ்தேன் தெளிவும் உண்டு சுவை கண்டாய்" என்று முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத்தமிழிலும், "தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த வள்ளி" என்று கந்தர் கலிவெண்பாவிலும் வருதல் காணலாம்.*

***ஈதலில் மிகவும் மகிழ்வு உண்டு ஆதலின் "களித்து உவக்கும்" எனப்பட்டது.** "களித்துவக்கும்'' என்பது ஒருபொருட் பன்மொழி. "ஈத்துவக்கும் இன்பம்'' என்றனர் வள்ளுவரும். இறைவனது குரல்வளை நீண்டு இருத்தலின் "மைந்நீட்டும்" என்றனர். தமிழ் இலக்கியங்களில் கருமை, பச்சை, நீலம் இவற்றை ஒன்றுபோலக் கூறும் மரபு உண்டு. ஆதலின் ஈண்டு விடத்தை "மை" என்று கூறிக் கருமை நிறத்தை நினைவூட்டினர்.*

*432. **குறிப்புரை :-** கூழை - அறிவு குறைந்த, மந்தி - பெண் குரங்கு, இஞ்சி - மும்மலைகளை, சிலை - வில், செற்றான் - அழித்தான், சிலம்பு - மலை.*

***விளக்கவுரை :-** குரங்குகள் மனித இயல்பைப் பெரிதும் பெற்றவை. நாம் பருகும்போது ஒரு பாத்திரத்தைப் பயன்படுத்துகிறோம். குரங்கும் பருகப் பாத்திரமாக இலையைப் பயன்படுத்தும். இங்கு வாழையிலையினைப் பருகப் பாத்திரமாகப் பயன்படுத்தியது. மனிதன், குரங்கு, எலி இவை மூன்றிற்கும் 75000 ஆண்டுகட்கு முன் ஒரே மூதாதையர் இருந்தனர் என்று விஞ்ஞானம் கூறுகிறது.*

**நோய் களைவான் மலை**

**433.** **கொல்லை இளவேங்கைக் கொத்திறுத்துக் கொண்டுசுனை**
**மல்லநீர் மஞ்சனமா நாட்டிக்கொண் – டொல்லை**
**இருங்கைக் களிறேறும் ஈங்கோயே மேனோய்**
**வருங்கைக் களைவான் மலை.** **34**

---

*நற்றிணை, குரங்கு நீர் பருகுதற்கு மேற்கொண்ட முறையினை நன்கு எடுத்து மொழியும்போது,*

*புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை*
*முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தள்*
*குலைவாய் தோயும் கொழுமடல்*
*அம்மடல் பட்ட அருவித் தீநீர்*
*செம்முக மந்தி ஆரும்*

*என்கிறது.*

*மந்தி தனது இளமந்தி உண்ணப் பெரிதும் கவலை எடுத்துக்கொண்டு செயல் புரிவதையும் நற்றிணை,*

*துய்த்தலை மந்தி*
*கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி*
*வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்*
*கல்லா வன்பறழ்க் கைந்நிறையப் பிழையும்*

*என்கிறது.*

*இஞ்சி ஈண்டு மூன்று மதில்களால் ஆன கோட்டையாகும். மூன்று கோட்டைகளையும் செற்றான் என்பது அக்கோட்டைகட்குரியவர்களை அழித்தான் என்பதாம். மூவர் ஆவார் வித்தியுன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் என்பவர்கள். இதைப்பற்றிய விளக்கம் முன்பே கூறப்பட்டது. ஆண்டுக் காணவும்.*

*433. குறிப்புரை :- கொல்லை - தோட்டங்கள், இறுத்து - ஒடித்து, மல்ல - வளமான, மஞ்சனமா - முழுக்காக, ஒல்லை - விரைவாக, இருங்கை - பெரிய கை, கை - சிறுமை (நோய்).*

***விளக்கவுரை** :- யானைகள் குறிஞ்சி நிலக் கருப்பொருள்கள். அவைகள் மலையில் இங்குமங்கும் திரிந்துகொண்டிருக்கும். மக்கட்கு உள்ள வினைகள் மூன்று. ஒன்று, முன்பே அமைந்த வினை; அடுத்தது, சேர்த்துக்கொள்ளும் வினை; மூன்றாவதாக அமைவது, வரக்கூடுவதாகிய வினை. இவற்றையே முறையாகப் பிராரத்த வினை, சஞ்சித வினை, ஆகாமிய வினை என்று சமயப் பேரறிஞர்கள் கூறுவர். இறைவன் முன்வினையையும் சேர்வினையையும் தீர்ப்பதோடு, இனிவரும் வினையையும் தீர்ப்பவனாக இருத்தலின், அவனது கருணை நமக்குப் புலனாகிறது.*

## குறித்த வரம் கொடுப்பான் குன்று

**434.** **கொவ்வைக் கனிவாய்க் குறமகளிர் கூந்தல்சேர்**
**கவ்வைக் கடிபிடிக்கும் காதன்மையால் – செவ்வை**
**எறித்தமலர் கொண்டுவிடும் ஈங்கோயே அன்பர்**
**குறித்தவரம் தான்கொடுப்பான் குன்று.** **35**

---

இது குறித்தே "மேல்நோய் வரும் கை களைவான்" என்றனர்.

| | | | |
|---|---|---|---|
| பழைய வினை | பிராரத்தம் → | புண்ணியம் → | பாவம் |
| ஈட்டும் புது வினை | ஆகாமியம் → | நன்மை → | தீமை |
| நுகர்ந்ததுபோகச் சேகரிக்கும் வினை | சஞ்சிதக்குவியல் → | நல்வினை → | தீவினை |

434. **குறிப்புரை :-** கூந்தல் - யானையின் கழுத்து மயிர், கவ்வை - துன்பம், கடி - விரைவாக வந்த, பிடிக்கு - பெண்யானைக்கு, காதன்மை - அன்பு - செவ்வை - செம்மையாக, எறித்த - முறித்த.

**விளக்கவுரை :-** மாதர்களின் வாய்இதழ் இயற்கைச் செந்நிறம் உற்று இருத்தலின், ஈண்டு கொவ்வைக் கனி அவர்களின் இதழ்கட்கு உவமை ஆயிற்று. "தொண்டைக் கனிவாய்" என்றார் புகழேந்தியாரும். "தொண்டைவாய் அமுதிட்டு என்றன்பால் தோயீர்" என்று குமரகுருபரரும் கூறினர். குறவர்களும் குறச் சிறுவர்களும் யானைகளோடு பெரிதும் பழகுகிறவர்கள் ஆதலின், அவர்கள் அவற்றிற்கு அஞ்சுவதில்லை. ஆனால் அவற்றிற்குச் சந்தர்ப்பங்களில் உதவியே புரிவர். ஈண்டுக் குறமகளிர் யானைகள் உண்ண மரத்தின் மலரைக் கொண்டுவிட்டதைக் காணலாம். இவ்வாறு குறவர்கள் யானைகட்கு உதவி புரிதலைச் சுந்தரரும் வேடர் இனத்தவர் யானைகட்கு உதவுதலை அழகுற,

> ஆனைக்குலம் இழிந்தோடிதன் பிடிசூழலில் திரியத்
> தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
> மானக்குற அடல்வேடர்கள் இலையால்கலை கோலித்
> தேனைப்பிழிந் தினிதூட்டிடும் சீபர்ப்பத மலையே

எனப் பாடியுள்ளார்.

**சங்கரன் என்னும் சொல்லுக்கு இன்பத்தைத் தருபவன் என்பது பொருள்.** அவன் அவரவர்கட்கு இன்பத்தைத் தருபவன் ஆதலின் "அன்பர் குறித்த வரம் தான்கொடுப்பான்" என்றனர். **இதனால்தான் அப்பரும் ''வேண்டுவார் வேண்டுவன ஈவான் கண்டாய்" என்றனர். வள்ளலாரும் "வேண்டிய நான் வேண்டியவாறு எனக்கருளும் தெய்வம்" என்றனர்.** இப்பாடலில் காதன்மையால் என்னும் சீரில் உள்ள ஒற்றை நீக்கி அலகிட வேண்டும்.

**மாலை தரித்தான் மலை**

**435.** **கொடுவில் சிலைவேடர் கொல்லை புகாமல்**
**படுகுழிகள் கல்லுதல்பார்த் தஞ்சி – நெடுநாகம்**
**தண்டூன்றிச் செல்லும்சீர் ஈங்கோயே தாழ்சடைமேல்**
**வண்டூன்றும் தாரான் மலை.** **36**

**தீங்கினைத் தீர்ப்பான் மலை**

**436.** **கோங்கின் அரும்பழித்த கொங்கைக் குறமகளிர்**
**வேங்கைமணி நீழல் விளையாடி – வேங்கை**
**வரவதனைக் கண்டிரியும் ஈங்கோயே தீங்கு**
**வரவதனைக் காப்பான் மலை.** **37**

---

*435. **குறிப்புரை :-** கொடு - வளைந்த, கொடிய; கொல்லை - தோட்டம். படு - ஆழமான, கல்லுதல் - தோண்டுதல், நாகம் - யானை, தாரான் - மாலையையுடையவன், சிலை - வில், தண்டு - கோல்.*

***விளக்கவுரை** :- யானைகளைப் பிடிக்கப் பள்ளம் தோண்டி வைப்பர். ஆகவே, பள்ளங்களைக் கண்டால் யானைகளுக்கு அச்சமே உண்டாகும். இந்நிலையில் வேடர்கள் பூமியைத் தோண்டுதல் கண்ட ஈங்கோய்மலை யானைகள் அஞ்சி ஓடின என்பது ஈண்டுக் கூறப்படுகிறது. **இறைவனது சடை ஞானத்திற்கு அறிகுறி. "நுண்சிகை ஞானமாம்" என்பது திருமந்திரம்.** இதனால், அவன் ஞான உருவப் பேரறிவு உடையவன் என்பது பெறப்படுகிறது. **இறைவனது சடை ஈண்டுத் தொங்குதலின் தாழ்சடை என்றனர். இறைவன் அணிந்துள்ள மாலைகள் புத்தம் புதியன என்ற குறிப்பில் வண்டு ஊன்றும் தாரான் என்றனர்.** புதிய மலரில் அன்றோ வண்டுகள் மொய்க்கும்? இறைவன் திருமுடி பல மலர்கட்கு உறைவிடம். "வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம் பொன் இயல் சடையில் பொலிவித்த புராணனார்" என்பது சம்பந்தர் வாக்கு.*

*வேடர் நிலத்தை அகழ்தலைப் பற்றிய குறிப்பினைக் குறுந்தொகையில் "குன்றத்துப் பழங்குழி அகழ்ந்த கானவன்" என்றும், அகநானூற்றில் "பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய, செறிமடை அம்பின் வல்வில் கானவன், பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு, நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்" என்றும் கூறுகின்றன. யானை அஞ்சி ஓடுதலைக் குறிஞ்சிப் பாட்டில், "மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிரக், கார்பெயல் உருமில் பிளிறிச் சீர்த்தக, இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்திச் சினம்திகழ் கடாஅம் செருக்கி மரம்கொல் புனமயல் வேழம் மடங்கலின் எதிர்தர" என்று கூறப்பட்டுள்ளது.*

*436. **குறிப்புரை :-** கோங்கு - கோங்கு மலர், அழித்த - வென்ற, கொங்கை*

**விடமுண்டான் மலை**

**437. சந்தனப் பூம்தழையைச் செந்தேனில் தோய்த்தியானை**
**மந்த மடப்பிடியின் வாய்கொடுப்ப – வந்ததன்**
**கண்களிக்கத் தான்களிக்கும் ஈங்கோயே தேங்காதே**
**விண்களிக்க நஞ்சுண்டான் வெற்பு. 38**

---

*- முலை, வேங்கை - வேங்கை மரம், மணி - அழகிய, வேங்கை - புலி, இரியும் - ஓடும்.*

***விளக்கவுரை :-*** *கோங்கின் அரும்பு மாதர்களின் முலைக்கு உவமையாகக் கூறப்படுவது மரபு. இதனைத் திருக்கோவையாரில் நன்கு அழகுறக் "கோங்கு" என்றே கூறி முலையினைக் குறித்துள்ளனர்.*

*கோங்கரும்பு போன்றது முலை என்ற வர்ணனை, "இலை இலஞ்சினை இனவண் டார்ப்ப, முலையேர் மென்முகை அவிழ்ந்த கோங்கு'' எனக் குறுந்தொகையிலும், ''கோங்கின் குவிமுகிழ் இளமுலை'' எனத் திருமுருகாற்றுப்படையிலும், ''கோங்கின் அவிர்முகை எள்ளிப் பூணகத் தொடுங்கிய வெம்முலை" எனச் சிறுபாணாற்றிலும், "முதிர் கோங்கின் முகைஎன... பெருத்த நின் இளமுலை" எனக் கலியிலும், "கோங்கு முகைத்தன்ன குவிமுலை" என அகத்தும், "கோங்கின் முகை வனப்பு எய்திய இளமுலை" எனப் புறத்தும் வருதலைக் காணலாம்.*

*வேங்கை மரத்தின் நிழலில் மகளிர் விளையாடுதலைப் பற்றிய குறிப்புக்கள் பலவற்றைச் சங்க நூல்களில் காணலாம்.*

*மலைப் பெண்கள் வேங்கை மரத்தின் நிழலில் ஆடிப்பாடி மலர் கொய்து ஓசை செய்து கொண்டிருப்பர் என்பதை, "சிறாஅர் மன்ற வேங்கை மலர்பதி நோக்கி, ஏறாதிட்ட ஏமப்பூசல்" என்று குறுந்தொகையும், "கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப் பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள் இன்னா இசைய பூசல் பயிற்ற" என்று அகமும், "தலைநாள் பூத்த பொன்இணர் வேங்கை மலைமார் இடூஉம் ஏமப் பூசல்" என்று மலைபடுகடாமும், "கருங்கால் வேங்கை இருஞ்சினைப் பொங்கர் நறும்பூக் கொய்யும் பூசல்" என்று மதுரைக் காஞ்சியும் கூறுவதனால் தெளியலாம். இங்கு ஓசை என்றதன் காரணம் பூக் கொய்யும்போதும், விளையாடும் போதும் எழும் ஓசையாகும்.*

*வேங்கைமரம் குறிஞ்சிநிலக் கருப்பொருள்களில் ஒன்று. அவ்வாறே வேங்கை விலங்கும் அப்பொருள்களில் ஒன்றாகும். ஆகவே, அவ்வேங்கை வரவும் மகளிர் ஓடத் தொடங்கினர் என்றனர். இறைவன் அன்பர்கட்குத் துன்பம் வருங் காலங்களிலெல்லாம் காத்து அருள்பவன் ஆவன். "நஞ்சும் அமுதாக்குவித்தார் நனிப்பள்ளி அடிகளாரே'', ''தோன்றாத் துணையாய் இருந்தனன்தன் அடியோங்கட்கே" என்று அப்பர் இதுகுறித்தே பாடியுள்ளனர்.*

***437. குறிப்புரை :-*** *மந்த - மெல்ல நடக்கும், மடப்பிடி - இளைய பெண் யானை, விண் - விண்ணில் உள்ள தேவர்கள், நஞ்சு - விஷம்.*

***விளக்கவுரை :-*** *தழைக்கு இனிமை ஊட்டத் தேனில் சந்தனத் தழை தோய்த்து எடுக்கப்பட்டது. ஆண்யானை பெண்யானையின்மீது கொண்ட காதல் பெருக்கினால் அதற்குச் சந்தனத் தழையினை உண்ணக் கொடுத்தது. அப்படிக் கொடுத்த போது அப் பெண்யானை உண்டு களித்ததைக் கண்டு இதுவும் களித்ததாம். காதலர் இருவர்க்குள் இன்பமோ துன்பமோ ஒன்றாய்த் தானே வரும்? இதனை மணிமொழியார்,*

*காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந்*
*தாங்கிருவர்*
*ஆகத் துளோருயிர் கண்டனம் யாம்இன்றி*
*யாவையுமாம்*
*ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பலவன்*
*மலையில்*
*தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வரும்இன்ப*
*துன்பங்களே*

*என்றனர்.*

*இவ்வாறு பெண்யானைக்கு கொடுத்து உதவுவதை, "பிடிபசி களைஇயப் பெருங்கை வேழம் மென்சினை யாஅம் பொளிக்கும் அன்பினை" எனக் குறுந்தொகையிலும், "யானை தன் கொல்மருப்பு ஒடியக் குத்திச் சினம் சிறந்து இன்னா வேனில் இன்துணை ஆர, முளிசினை யாஅத்துப் பொளி பிளந்து ஊட்ட" என அகத்தும் வருதல் காணலாம். யானை தனது பெண்யானையை உண்பிப்பதிலேயே கருத்துக்கொண்டது என்பதைக் கலியில், "துடிஅடிக் கயம்தலை கலக்கிய சின்னீரைப்* ***பிடியூட்டிப் பின்உண்ணும் களிறு"*** *என்று கூறப்படுகிறது.* ***<u>அஃறிணை உயிர்கள் தம் பிணையிடத்துக் கொண்ட அன்பினை</u>*** *ஐந்திணை ஐம்பது, "சுனைவாய்ச் சிறுநீரை எய்தாது என்று எண்ணிப், பிணைமான் இனிதுண்ண வேண்டிக் கலைமாத்தன் கள்ளத்தின் ஊச்சும்" என்று காட்டுகிறது.*

*விடத்தை உண்பது என்றால் எவர்க்குமே அச்சமும் தயக்கமும் உண்டாகும். ஆனால் இறைவர் சிறிதும் தேங்காது அவ்விடத்தை உண்டனர் என்று கூறி அவர்தம் கருணையினைத் தெரிவித்தனர் ஈண்டு ஆசிரியர். திருப்பாற்கடல் விடம் வேகத்துடன் வந்தது. அதன் வேகத்தை அப்பர் குறிப்பிடும்போது,*

*பருவரை ஒன்றுசுற்றி அரவம் கைவிட்ட*
*இமையோர் இரிந்து பயமாய்த்*
*திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு*
*சுடுவான் எழுந்த விசைபோய்ப்*

**மலைமகள் மணாளன் மலை**

**438.** **சந்தின் இலையதனுள் தண்பிண்டி தேன்கலந்து**
**கொந்திஇனி துண்ணக் குறமகளிர் – மந்தி**
**இளமகளிர் வாய்க்கொடுத்துண் ஈங்கோயே வெற்பின்**
**வளமகளிர் பாகன் மலை.** **39**

---

*பெருகிடம் மற்றிதற்குஓர் பிதிகாரம் ஒன்றை*
*அருளாய் பிரானே எனவும்*
*அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்ட*
*அவன் அண்டர் அண்டர் அரசே*

*என்றனர். அத்தகைய விடத்தை இறைவன் உண்டு நம்மை வாழுமாறு செய்தனனே என்று தேவர்கள் களித்தமையின் "விண் களிக்க" என்றனர்.*

*438. **குறிப்புரை :-** சந்து - சந்தன மரம், பிண்டி - மா, மந்தி - பெண் குரங்கு, வெற்பின் வளமகளிர் - பர்வத ராசன் மகளான பார்வதி.*

***விளக்கவுரை :-** குறிஞ்சி நிலத்தவர்க்கு உண்பொருளாக அமைந்தவற்றுள் தேனும்/ தினைமாவும் முதன்மையாகும். அவற்றைச் சந்தனத் தழையில் கலந்து பெண்குரங்குகள் உண்ணக் குறமகளிரும் இளமகளிரும் கொடுத்தனர் என்று அழகுற ஈண்டுக் குறிப்பிட்டனர். மந்தி என்பது பெண் குரங்கு. ஆகவே, பெண்களே அப் பெண்குரங்குக்குக் கொடுத்தனர் என்பது ஓர் இயற்கை நயமாகும். இனம் இனத்தையன்றோ சாரும்? ஈண்டு மற்றுமோர் இனிய கருத்தும் "உண்" என்னும் சொல்லில் அமைந்து கிடக்கிறது. அதாவது உண்பதற்கு முன் பிறர்க்குக் கொடுத்து உண்ணுதல் வேண்டும் என்பது, "ஐயம் இட்டு உண்" என்பது ஔவையார் மொழி அன்றோ? மேலும், "விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற்று அன்று'' என்பது வள்ளுவர் வாக்கன்றோ?*

***பெண் என்னும் சொல்லே பெட்பு என்ற சொல்லின் பொருளைக் கொண்டு வழங்கப் பெறுவது. பெட்பு என்பதன் பொருள் அன்பு, அருள் என்பதாகும். ஆகவே, அவர்கள் அன்புடையர், அருளுடையர் ஆகின்றனர். இவ்வன்பும், அருளும் அவர்களை இரக்கமுடையவராகச் செய்கின்றன.** இதனால்தான் அஃறிணைப் பொருள்களிடம் இரக்கம் கொண்டு உண்பொருள் கொடுத்து உவக்கின்றனர். ஈண்டு இள மந்திக்கு ஈவதை ஆசிரியர் குறிப்பிட்டதுபோல், கிளிக்கு ஈவதைத் திருஞான சம்பந்தர்,*

*சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்*
*முறையாலே உணத் தருவேன்*

*என்று பாடி மகிழ்கின்றார்.*

**குமரன் தாதையின் குன்று**

**439.** சாரல் குறத்தியர்கள் தண்மருப்பால் வெண்பிண்டி
சேரத் தருக்கி மதுக்கலந்து – வீரத்
தமர்இனிதா உண்ணும்சீர் ஈங்கோயே இன்பக்
**குமரர்முது தாதையார் குன்று.** **40**

---

*இவ்வாறு மாதர்கள் ஊட்டுதலின் இவர்கள் "ஓம்பு தாய்" என்ற உயரிய பெயரையும் பெறுகின்றனர். இதனைச் சிந்தாமணி ஆசிரியர்,*

*தீம்பால் பசியில் இருந்த செவ்வாய்ச்*
*சிறுபைங் கிளிதன்*
*ஓம்பு தாய்நீர் குடைய ஒழிக்கும்*
*வண்ணம் நாடிப்*
*பாம்பால் என்ன வெருவிப் பைம்பொன்*
*தோடு கழலக்*
*காம்பே தோளி நடுங்கிக் கரைசேர்*
*பவளைக் காண்மின்*

*என்று சித்திரித்துள்ளார்.*

*இறைவி வெற்பின் வளமகளிர் என்பது உபசாரம். இறைவனிடம் பிரியா நிலையில் இருப்பவள் உமை. இறைவன் தனது வாம பாகத்தில் (இடப்பக்கத்தில்) உள்ள தோளைப் பார்த்தபோது அதனினின்று வந்தவள் இறைவி. அவ்வுருவையே தமது இடப்புறத்தில் இருத்திக்கொண்டனர். இதனால் அவர் உமேச மூர்த்தி என்ற பெயரைப் பெற்றனர். உமையாவாள் அருள் பண்பே ஆவாள். "அருளது சத்தியாகும்" என்பது சித்தாந்தம். "மேனாள் அகிலம் தரமெல்லியலா ஆனா அருள்தன்னை அளித்தொருபால் தானாக இருத்திய தையல்" என்பது கந்த புராணம். இது குறித்தே, "அருட்கருணை தானாய தவவல்லி" என்றனர் சேக்கிழார். இறைவனே தேவி அருள்வடிவினள் என்று குறிப்பிட்டதை,*

*தந்துழி ஈசன் தன்னைத் தனையரும் அயனும் மாலும்*
*வந்தனை செய்து போற்ற மாயவன் வதனம் நோக்கி*
*நந்தம தருள தாகும் நங்கையோ டினிது சேர்ந்தாம்*

*என்று கந்த புராணம் கூறுமாற்றால் தெளியலாம். இவற்றை எல்லாம் உட்கொண்ட குறிப்பே, ''வெற்பின் வளமகளிர் பாகன்'' என்ற அடியில் அமைந்துள்ளது.*

*439. **குறிப்புரை :-** மருப்பு - தந்தம், பிண்டி - மா, தருக்கி - செருக்கி, மது - தேன், தமர் - உறவினர், இன்பக் குமரன் - முருகன், தாதை - தந்தை.*

***விளக்கவுரை :-** குறத்தியர் தினை இடிக்கப் பயன்படுத்தும் உலக்கை*

*யானைத் தந்தம். இதனை, "யானைவெண் மருப் புலக்கை" என்ற சிந்தாமணியிலும், "வயக்களிற்றின் கோடு உலக்கை" என்றும், "முத்தார் மருப்பின் வகைசால் உலக்கை" என்றும் கலித்தொகையாலும் தெளியலாம். பெருங்காதையும், "வேழத்துப் பணைமருப்பின் வகைசால் உலக்கை" என்கிறது. தினைமா இடித்து எடுத்தபோது வெண்ணிறத்துடன் இருத்தலின் வெண்மா எனப்பட்டது. தினைமாவும் தேனும் எளிதில் கிடைக்கும் பேறு பெற்றவர் குறவர் ஆதலின் அவர்களின் அந்நிலை குறித்து, "தருக்கி" என்றனர்.*

*குறவர்கள் அஞ்சா நெஞ்சினர். அவர்கள் எத்தகைய கொடிய விலங்குகட்கும் சிறிதும் அஞ்சாதவர்கள். அவர்களது அஞ்சாமையினை, "வீரத் தமர்" என்ற தொடரால் குறிப்பிட்டனர். இவர்களது கவணொலியினைக் கேட்டாலே விலங்குகள் அஞ்சி ஓடுதலை, "குறவர் உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ அகன்மலை இறும்பில் துவன்றிய யானைப் பகனிலை தளர்க்கும் கவண்உமிழ் கடுங்கல், இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லெனக் கருவிரல் ஊகம் பார்ப்போடு இரிய" என்று மலைபடுகடாத்துக் கூறியிருத்தல் காண்க. இவர்களது கவண் ஓசை கேட்டு விலங்கும் பறவையும் வெரூஉம் என்பதை, "தினைமேல் யானை இனன்இரிந் தோடக் கல்லுயர் கழுத்தில் சேணோன் எறிந்த, வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென, மறப்புலி உரற வாரணம் கதற, கனவுறு கட்சி நன்மயில் ஆல, மலையுடன் வெரூஉம்" என அகத்தும் காணலாம். மேலும், இவர்களது கவண் ஓசை கேட்டு யானைகள் வெளிவரா என்பதையும் அகம், "காம்பின் வனகழை அடைந்த கவண்விசைக் கடிஇடிக் கனைசுடர் அமையத்து வழங்கல் செல்லாது இரவுப் புனம் மேய்ந்த உரவுச் சினவேழம்" என்று கூறுகிறது. இவர்களது வீரத்தை, "வன்கைக் கானவன் கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல் உடுவுறு கணையில் போகிச் சாரல் வேங்கை விரிஇணர் சிதறித் தேன்சிதையூஉப் பலவின் பழத்துள் தளிரும்" என்று அகம் அறிவிப்பது கொண்டும் தெளியலாம். இக்கருத்துக்களை எல்லாம் உள்ளடக்கிக் கொண்டுள்ளதே* ***"வீரத் தமர்" என்ற*** *தொடர்.*

***முருகு என்னும் சொல் இறைமை, மணம், அழகு, இளமை என்னும் பொருள்களுக்கு இடனாய் உள்ளது. இப்பொருள்களை ஒருசேரக் கொண்டவனே முருகன். அவனே குமரன். இத்தகையனாயின் அவன் இன்பக் குமரன் என்பதில் எள்ளளவு ஐயம் உண்டோ? அவனது இன்பத் தோற்றத்தைக் காண்பதையே மகிழ்வாக்கொண்ட அருணகிரியார், பிரமன் குமரனைக் காணப் பலகண் படைத்திலன் என்பதைச் "செங்கோடனைச் சென்று கண்டுதொழ நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே" என்று கூறியுள்ளனர். அதன் கருத்து முருகனது இன்பத் தோற்றத்தை உணர்த்த வேண்டி என்க. திருமகள் முருகனது முகத்தழகையும், திருமால் கண்ணழகையும், இந்திரன் வேலழகையும், கலைமகள் சொல்லழகையும், இறைவன் சொற்பொருள் அழகையும், பிரமன் செய்கை அழகையும், செங்கை அழகையும், இறைவி பின் அழகையும், அடியார் திருவடி அழகையும் காண்பார் எனக் கூறுதலால் அவன் இன்பக் குமரனே***

## கொன்றையணிந்தான் குன்று

**440.** தாய்ஓங்கித் தாமடரும் தண்சாரல் ஒண்கானம்
வேய்ஓங்கி முத்தம் எதிர்பிதுங்கித் – தீஓங்கிக்
கண்கன்றித் தீவிளைக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்
வண்கொன்றைத் தாரான் வரை. **41**

---

ஆவான். "அஞ்சக்கரப்பரத் தொட்டிலில் சதுர்வேதமான வடமொரு நாலையும் ஆதியுடன் இச்சை ஞானங் கிரியை நாமமுற்றருள் வளர்ந்தொளிர் சத்திகள் தஞ்சக் கரம்கொடு பிடித்தங் கசைத்திடத் தகுபரையும் ஆதிசிவனும் தாமுள மகிழ்ந்துறச் சோமன்என நிலவுபொழி தவளயானைக் கடவுளும் விபுதர்களும் பிரமரும், வேணி முனிவரரும் அருள்ஞான முனிவராதி வியனுலகரும் பரவவே செஞ்சக்கரப் பரிதி என நிலவு போரூர செங்கீரை ஆடியருளே திமிரமலம் அகலவரு குமர சரவண முருக செங்கீரை ஆடியருளே" என்ற சிதம்பர சுவாமிகள் திருவாக்கால் முருகன் இன்பக் குமரன் ஆதலைக் காணலாம். இறைவன் ஆதி அந்தம் அற்றவன்; போக்கும் வரவும் இல்லாப் புண்ணியன். புறநானூற்றில் இறைவன் நிமிர்சடை முதுமுதல்வன் என்ற தொடரில் காணப்படுதல் கொண்டும், "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி" என்று அப்பர் வாக்கில் வருதல் கொண்டும், "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே" என்று மணிமொழியாரும் கூறுமாற்றாலும் இறைவனது முதுமையும் பழமையும் நன்கு தெளிவாகும். "பழையன் காண்க, பரமன் காண்க" என்றும் கூறியுள்ளனர் மணிமொழியார். இது குறித்தே **"முதுதாதை"** என்றனர்.

*440.* ***குறிப்புரை :-*** *தாய் - விண்ணையும் தாவி, அடரும் - அடர்ந்திருக்கும், ஒண் கானம் - ஒளியுடைய காடு, வேய் - மூங்கில், கண் - கணுக்கள், கன்றி - மங்கச் செய்து, வண்கொன்றை - வளமான கொன்றை, தாரான் - மாலை அணிந்தவன், வரை - மலை.*

***விளக்கவுரை :-*** *ஈங்கோய் மலையின் உயர்ச்சியினை உணர்த்தத் தாய் ஓங்கி என்றார். சாரல், மரஞ் செடி கொடிகளால் அடர்ந்திருத்தலின் அடரும் என்றனர். காட்டில் சோதி மரங்கள் உண்டு. அதனாலும், மணியாலும், தவசியர் ஒளியாலும் கானம் ஒளியுடனும் திகழும் என்றார். இதனைப் பெரிய புராணம்,*

*செந்தழல் ஒளியில் பொங்கும்*
*தீபமா மரங்க ளாலும்*
*மந்திகள் முழையில் வைத்த*
*மணிவிளக் கொளிக ளாலும்*
*ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார்*
*அரும்பெருஞ் சோதி யாலும்*
*எந்தையார் திருக்கா ளத்தி*
*மலையினில் இரவொன் றில்லை*

## பொன்மேனிப் பெம்மான் பொருப்பு

441. செடிமுட்டச் சிங்கத்தின் சீற்றத்தீக் கஞ்சிப்
பிடியட்ட மாக்களிறு போந்து – கடமுட்டி
என்னேசீ என்றும்சீர் ஈங்கோயே ஏந்தழலின்
பொன்னோ் அனையான் பொருப்பு. 42

---

*என்கிறது. மூங்கிலில் முத்து உண்டு என்பதை, "கழை சொரி தரளக் குன்று" என்று பெரிய புராணத் தொடர் குறிப்பிடுகிறது.*

*காட்டில் மரங்கள் உராய்வதால் தீ பற்றி எரியும். அத் தீ காண்பார் கண்களைக் கன்றவும் செய்யும். ஆதலின் கண் கன்றி என்றனர். கணுக்கள் உராய்ந்து தீ உண்டாதலும் உண்டு என்று பொருள் காணினும் காணலாம். கொன்றை மலர் பொன்னிறமுடையது. அதனால் அதனைப் பொன் எனவே புகழ்ந்து, அது சொரிதலைப் பொன் சொரிதலாகப் புலவர் கற்பித்துப் பாடுவர். ஆதலின் வண்கொன்றை என்றனர். கொன்றையின் சிறப்பு, அதனை இறைவன் அணிந்திருப்பதன் காரணம் முன்பே கூறப்பட்டன.*

*441. குறிப்புரை :- சீற்றம் - அடங்காக் கோபம், பிடி - பெண் யானையை, அட்ட - அழித்த, மா - பெரிய, களிறு - யானை, போந்து - அவ்விடம் விட்டு நீங்கி, கடம் - மதநீர், ஏர் - அழகு, அனையான் - போன்றவன், பொருப்பு - மலை.*

***விளக்கவுரை*** *:- சிங்கம் கானத்தில் செடிகளுக்கு இடையே செல்லும்போது, செடி அதனை முட்டுகிறது. அதனால் அதற்குக் கோபம் எழுகிறது. அக்கோபம் தன்னைக் கண்டுதான் எழுகிறது என்று யானை எண்ணி அந்த இடத்தை விட்டு நீங்குகிறது. இந்த யானை மதமிக்க யானை. அதனால் தன் இனமாகிய பெண் யானையை அழித்து வந்தது. அந்நிலையில் தான் சினம் மிக்க சிங்கத்தைக் கண்டு அஞ்சி ஓடுகிறது. அப்படி ஓடும்போது தன்னிடம் தோன்றிய மதநீரால் தடைப்பட்டு நிற்கிறது. இத்தகைய நிகழ்ச்சிகளையே ஆசிரியர் இப்பாடலில் சித்திரிக்கிறார். இறைவன் தீவண்ணன். இதனால் தான் ஒரு புலவர், "உலையில் இருப்பு வண்ணத்துப் பொன் மேனியன்" என்றனர். திருமுறையில், "பொன் ஒளிகொள் மேனி", "பொன் நேர்தரு மேனியன்", "பொன்னார் மேனியன்", "செம்பொன் மேனி" என்று இறைவன் மேனி புகழப்பட்டுள்ளதைக் காண்க.*

*இதனை உணர்த்தவே, "ஏந்தழலின் பொன்னேர் அனையான்" என்றனர். இறைவனது அழகை வியந்த பொன்னனையாள் கன்னம் கிள்ளி முத்தம் கொண்டதைத் திருவிளையாடற் புராணம்,*

*மழவிடை யுடையான் மேனி*
*வனப்பினை நோக்கி அச்சோ*

**மதியணிந்தான் மலை**

**442.** சுனைநீடு தாமரையின் தாதளைந்து சோதிப்
புனைநீடு பொன்நிறத்த வண்டு – மனைநீடி
மன்னி மணம்புணரும் ஈங்கோயே மாமதியம்
சென்னி அணிந்தான் சிலம்பு. **43**

---

*அழகிய பிரானோ என்ற*
*அள்ளிமுத் தம்கொண் டன்பில்*
*பழகிய பரனை ஆனாப்*
*பரிவினால் பதிட்டை செய்து*
*விழவுதேர் நடாத்திச் சின்னாள்*
*கழிந்தபின் வீடு பெற்றாள்*

*என்கிறது.*

*442.* **குறிப்புரை :-** *தாது - மகரந்தப்பொடி, அளைந்து - படிந்து, புனை - அலங்கரித்தல், மனை - வீடு, மன்னி - நிலைத்து இருந்து, மா - சிறந்த, மதியம் - சந்திரன், சென்னி - முடி.*

**விளக்கவுரை :-** *தாமரைகள் தடாகங்களிலே அன்றி மலைச்சுனைகளிலும் மலரும் ஆதலின் சுனைநீடு தாமரை என்றனர். தாமரைகளில் மகரந்தம் மிகுதியும் உண்டு. அம் மகரந்தப் பொடி பொன்னிறத்தது. புகழேந்தியாரும், "பொன்னுடைய வாசப் பொகுட்டு மலர்" என்றனர். பொன் ஈண்டு மகரந்தப் பொடியாகும். வண்டுகள் தேனைப் பருக மலரைக் குடையும். அதுபோது அதன்மீது மகரந்தப் பொடிகள் படியும். அந்தத் தோற்றம் பொன்னிற வண்டுபோல் தோன்றும். இவ்வாறு வண்டின் உரு மாறுபடுதலைச் சம்பந்தர்,*

*சேறாடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு*
*சிவந்த வண்டு*
*வேறாய வுருவாகிச் செவ்வழி பண்பாடும்*
*மிழலை யாமே*

*என்று அழகுறப் பாடியுள்ளார். நக்கீரர் தாமரைத் தாதை ஆடியதைக் கூறினர்; சம்பந்தர் செங்கழுநீர் மலரின் தாதை ஆடியதைக் கூறினர்.*

*இயற்கைச் சூழலில் மணம் நிகழ்வதைப் புலவர்கள் புனைந்து பாடுதல் மரபு. சம்பந்தர் இதனை,*

*தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கம்திகழச்*
*சலசத் தீயுள்*
*மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணம்செய்யும்*

**கலை கண்டான் கடறு**

**443.** **செந்தினையின் வெண்பிண்டி பச்சைத்தே னால்குழைத்து**
**வந்த விருந்தூட்டும் மணிக்குறத்தி – பந்தியாத்**
**தேக்கிலைகள் இட்டுச் சிறப்புரைக்கும் ஈங்கோயே**
**மாக்கலைகள் வைத்தான் மலை.** **44**

---

*மிழலை யாமே*

*என்றனர். கம்பரும், "குயில்இனம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை" என்றனர்.*

*மதியமே ஈண்டுப் பிறைச்சந்திரனே யாகும். அப் பிறை இறைவன் முடியில் இருக்கும் பேறு பெற்றமையின் ''மாமதியம்'' என்றனர். அப் பிறை புகழப்படுதலைப் புறநானூறு, "பிறைநுதல் வண்ணம் ஆகின்று, அப்பிறைப் பதினெண் கணனும் ஏத்தவும் படுமே" என்றது, சிலம்பிலும், "குழவித் திங்கள் இமையவர் ஏத்த அழகொடு முடித்த அருமைத்து" என்று வருகின்றது.*

*443. **குறிப்புரை :-** பிண்டி - மா, குழைத்து - கலந்து, மணி - மணிகள் அணிந்த, பந்தியா வரிசையாக, மா - சிறந்த, கலைகள் - அறுபத்து நான்கு கலைகளை.*

***விளக்கவுரை :-*** *குறிஞ்சி நிலக் கருப்பொருள்களுள் தேக்கு மரமும் ஒன்று. சம்பந்தரும், "சந்தமார் அகிலொடு சாதித் தேக்கு மரம்" என்று தேக்கு இருத்தலைக் கூறியுள்ளார். விருந்தினரைத் தேனும் தினைமாவும் ஈந்து வருவிருந்தை உண்பித்தலைப் பலபடி குறிஞ்சிநில மக்கள் வாழ்க்கையில் காணலாம். "செழுந்தினையும் நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போம்" எனக் குறத்தி கூறுவதாகக் குமரகுருபரர் கூறுகிறார். "வந்த விருந்து" என்னும் தொடர்,*

*செல்விருந்து ஓம்பி 'வருவிருந்து' பார்த்திருப்பான்*
*நல்விருந்து வானத் தவர்க்கு*

*என்னும் குறளை நினைவூட்டுகின்றது. குறத்தியர் பெரிதும் கறுத்து இருப்பர். அக் கருமையும் பெருமை தந்து அழகையும் தரும். ஆதலின் மணிக் குறத்தி என்றனர். பல மணி மாலைகளை அணிந்த என்றலுமாம். குறிஞ்சி நில மக்கட்குப் பெரிதும் உண்கலமாக உதவுவது தேக்கிலையே ஆகும். வந்த விருந்தினரை இலையிட்டு உண்பித்து வந்ததே நந்தம் தமிழரின் மரபாக இருந்தது. இதனை, "கதலி நீண்ட குருத்தினை விரித்து" என்று சேக்கிழார் கூறுமாற்றால் தெளியலாம். வந்த விருந்தினரை உண்பிக்கும்போது முகமலர்ந்து உபசரித்து உண்மை பேசி உண்பிக்க வேண்டுவதும் மரபே. விருந்து செய்விப்பவர் வந்த விருந்தினர்க்கு உணவின் சிறப்பைக் கூறுதல் வேண்டும். இதனைக்* ***கண்ணப்ப நாயனார் இறைவனுக்கு உணவு ஊட்டும்போது, "தேனும் உடன் கலந்து இது தித்திக்கும்"***

## குரவை ஆடி குன்று

**444.** **தடம்குடைந்த கொங்கைக் குறமகளிர் தங்கள்**
**இடம்புகுந்தங் கின்னறவம் மாந்தி – உடன்கலந்து**
**மாக்குரவை ஆடி மகிழ்ந்துவரும் ஈங்கோயே**
**கோக்குரவை ஆடிகொழுங் குன்று.** **45**

---

*என்று கூறியதாகக் குன்றைக் கோமகனார் கூறியுள்ளனர்.* ஆகவேதான், "இட்டுச் சிறப்புரைக்கும்" என்றனர். உலகு நன்கனம் நடைபெற இறைவன் எல்லாக் கலைகளையும் அமைத்தவனாவான். **"அருமறை அங்கம், ஆகமம் வகுத்தவன்"** என்றும், "உலகத்து எண்ணில் பொருளாயவை படைத்த இமையோர்கள் பெருமான்" என்றும் சம்பந்தர் அறிவிப்பதை நினைவுகூர்தல் வேண்டும்.

*444.* ***குறிப்புரை :-*** *தடம் - குளம், குடைந்த - நீராடிய, கொங்கை - முலை, நறவம் - தேன், மாந்தி - பருகி, மா - சிறந்த, குரவை - குரவைக் கூத்து.*

***விளக்கவுரை :-*** *மாதர்கள் குளங்களில் குடைந்து ஆடுதலைப் புலவர்கள் அழகுபடப் பாடி மகிழ்வர். மணிமொழியார், "மொய்யார் தடம்பொய்கை புக்குமுகே ரென்னக் கையால் குடைந்து" என்றும், "பொங்கு மடுவில் புகப் பாய்ந்து பாய்ந்துநம் சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக் கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப் பங்கயப் பூம்புனல் பாய்ந்துஆடு" என்றும் பாடியுள்ளனர். சுந்தரரும், "கோல்வளையார் குடைந்தாடும் கொள்ளிடத்தின் கரை" என்று மாதர் நீராடலைப் பாடியுள்ளனர். மாதர்கள் நறவம் மாந்துதல் இயல்பு. இதனைக் காவியத்தில் தனிப்பட்ட முறையில் உணர்த்தும் பொருட்டே உண்டாட்டுப் படலம் என்ற பெயரில் கம்பனும் பாடியுள்ளான். கந்த புராணத்திலும், பரஞ்சோதியார் திருவிளையாடலிலும் இதன் விரிவைப் பலபடக் காணலாம். அப் பாடல்கள் இலக்கியச் சுவைமிக்கு இனிது விளங்கும்.*

*திருந்திழை மார்சிலர் செவ்வித் தேறலை*
*அருந்தினர் வெறுத்தனர் அமுதம் தன்னையும்*
*பொருந்திடு கணவரைப் புணரும் ஆசையால்*
*வருந்தினர் தழலென மதியை உன்னுவார்*

*என்பது கந்தபுராணம்.*

*மின்என நுடங்கு கின்ற*
*மருங்குலாள் ஒருத்தி வெள்ளை*
*இன்அமிழ் தனைய இன்சொல்*
*இடைதடு மாறி என்னே*
*வன்னமே கலையை நீக்கி*
*மலர்த்தொடை அல்குல் சூழ்ந்தாள்*

*பொன்அரி ஆடை கொண்டு*
*புரிகுழல் புனையல் உற்றாள்*

*என்பது கம்பராமாயணம்.*

*பொன்னினும் வெள்ளி யானும்*
*பளிங்கினும் புலவன் செய்த*
*நன்னிறக் கலத்தில் கூர்வாள்*
*நட்டென வாக்கிச் சேடி*
*மின்னனார் அளித்த தேறல்*
*சிறுதுளி விரலில் தெள்ளித்*
*துன்னிவீழ் களிவண் டோச்சித்*
*தொண்டையம் கனிவாய் வைப்பார்.*

*சாடியூன் நறவம் உண்டாள்*
*தன்னுரு வேறு பாட்டை*
*ஆடியுள் நோக்கி நானோ*
*அல்லனோ எனைத்தான் கைக்கொண்டு*
*ஓடினார் பிறரும் உண்டே*
*உயர்அன்னான் வந்துஇங்கு என்னைத்*
*தேடினென் செய்கேன் என்னைத்*
*தேடித்தா சேடி என்றாள்.*

*என்று பரஞ்சோதியார் பாடினார். ஆகவேதான் "இந்நறவம் மாந்தி" என்றனர் ஈண்டு. குரவை என்பது ஒருவகைக் கூத்து. இதனை ஒற்றைப்பட்ட எண்ணுப்பட்ட மாதர்கள் ஒருவர் ஒருவரைக் கைகோத்து ஆடி மகிழ்வர். இவ்வாறு ஆடுவதைச் சிலம்பின் வாயிலாக அறிவிப்பதுகொண்டு தெளியலாம். குரவை என்பது, "எழுவர் மங்கையர் செந்நிலை மண்டலக் கைகோத்து, அந்நிலை கொட்ப நின்றாடலாகும்" என்றதைக் காண்க. இவ்வாடலைப் பற்றி மேலும் அங்குக் கூறும்போது, "குரவை என்பது கூறுங் காலைச் செய்தோர் செய்த காமமும் விறலும், எய்த உரைக்கும் இயல்பிற் றென்ப" என்றிருத்தலின் இது மாக்குரவை என இங்குச் சிறப்பிக்கப்பட்டது.*

*இறைவனும் ஆடல் புரிபவன். **அவனது ஆடல், மக்கள் ஆடுவது போன்றதன்று. அரும்பெரும் செயல் குறித்து ஆடப்படுவது.** ஆகவே, அது கோக்குரவை ஆயிற்று. ஈண்டுக் குரவை கூத்து என்பதைக் குறிக்க அமைந்துள்ளது. அக்கூத்து, ஆனந்தக்கூத்து, காளிகா கூத்து, கௌரி கூத்து, சந்தியாக் கூத்து, சங்காரக் கூத்து, திரிபுரக் கூத்து, ஊர்த்துவக் கூத்து, கொடுகொட்டிக் கூத்து, பாண்டரங்கக் கூத்து, காபாலக் கூத்து ஆகப் பல இருத்தலின் கோக்குரவை என்றனர்.*

***445. குறிப்புரை :-** தாம் - தாவும், மரையின் - மானின், தகைத்த - தடுத்த,*

## வாட்டம் தீர்ப்பான் வெற்பு

**445.** **தாமரையின் தாள்தகைத்த தாமரைகள் தாள்தகையத்**
**தாமரையில் பாய்ந்துகளும் தண்புறவில் – தாமரையின்**
**ஈட்டம் புலிசிதறும் ஈங்கோயே எவ்வுயிர்க்கும்**
**வாட்டங்கள் தீர்ப்பான் மலை.** **46**

*தாள் - பாதம், தண்டு; தகைய - அடங்க, உகளும் - துள்ளும், புறவு - காடு, ஈட்டம் - கூட்டம். முதலில் வரும் தாமரை - தா - மரை - தாவுகின்ற மான் என்றும், இரண்டாவது வரும் தாமரை - தாமரை மலர் என்றும் பொருள் கொள்க.*

***விளக்கவுரை :-*** *முதல் இரண்டு அடிகளில் மான்கள் துள்ளி ஓடும் செயல் குறிப்பிடப்பட்டுள்ளது. தாவும் மான்களின் கால்களை நீரில் முளைத்த தாமரை களின் தண்டுகள் தடுக்கின்றன. அத் தடுப்புக்களையும் பாராமல் மான்கள் அத் தாமரைத் தண்டுகளையும் தடுத்துப் பாய்கின்றன. மான்கள் துள்ளி ஓடுதலின் உகளும் என்றனர். "மான்கன்று துள்ள" என்றார் திருஞான சம்பந்தர். இவ்வாறு துள்ளி விளையாடும் மான்கள் புலியைக் கண்டதும் சிதறி ஓடிவிடுகின்றன என்பார், "மரையின் ஈட்டம் புலி சிதறும்" என்றனர். ஈட்டம் என்றதனால் பல மான்கள் என்பது பெற்றாம். அப் பல மான்களும் ஒரு புலியைக் கண்டதும் ஓடின. ஆகவே, பல மான்கள் இருப்பினும் ஒரு புலியின் முன் ஒன்றும் செய்ய இயலாது என்பது அறிதற்பாற்று. இதனைப் புறத்தில் ஔவையார் அழகுபட, "அடைமல்கு குளவியொடு கமழும் சாரல் மறப்புலி உடலின் மான்கணம் உளவோ" என்று பாடியுள்ளனர். தனிப்பாடலில், "மான் நிற்குமோ இந்த வாளரி வேங்கைமுன்" என்ற பாடலும் உள்ளது. இறைவன் எவ்வுயிர்க்கும் வாட்டங்கள் தீர்ப்பான் என்பது உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணை உயிர்களின் வாட்டம் தீர்ப்பான் என்பதாம்.*

> *ஏன மென்பறழ் உறுகண்நோய்க் கிரங்கினார் இச்சை*
> *ஆன அன்புதந் தத்துயர் அகற்றுவான் ஈன்ற*
> *மான அன்புடைப் பேடையின் வடிவெடுத் தயரும்*
> *கான வன்பறழ் கலங்கஓர் கலங்கநேர் வந்தார்*

*என்பதனால் பன்றிக் குட்டிக்குப் பரமன் முலை கொடுத்துக் காத்தனன் என்பதைத் திருவிளையாடல் புராணத்தால் தெளியலாம். "புலிமுலை புல்வாய்க்கு அருளினைப் போற்றி" என்று மணிமொழியார் கூறுவதால் மான்கன்றுக்கும் இறைவன் அருள்புரிந்ததை உணரலாம்.*

*இறைவன் தன்னை அடைந்த அன்பர்களின் வாட்டங்களைத் தீர்ப்பதையே உரிமையாகக் கொண்டனர் என்பதை நமது திருமுறைகள், "வாட்டம் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே" என்றும், "வாட்டம் தீர்த்திடும் வான்மையூர் ஈசனே" என்றும்,*

**கூற்றைச் செற்றான் குன்று**

**446.** **தெள்ளகட்ட பூஞ்சுனைய தாமரையின் தேமலர்வாய்**
**வள்ளவட்டப் பாழி மடலேறி – வெள்ளகட்ட**
**காராமை கண்படுக்கும் ஈங்கோயே வெங்கூற்றைச்**
**சேராமல் செற்றான் சிலம்பு.** **47**

---

*"வாடிய வாட்டம் தவிர்ப்பான்" என்றும் கூறுவனவாற்றால் உணரலாம்.*

*446. **குறிப்புரை :-** அகட்ட - வயிற்றினையுடைய, தே - தேன், வள்ளம் - தொன்னை, கிண்ணம்; பாழி - பெருமை, காராமை - கரிய ஆமை, கண்படுக்கும் - உறங்கும், கூற்றை - எமனை, செற்றான் - அழித்தவன்.*

*__விளக்கவுரை :-__ சுனை நன்கு பள்ளமாகவும் வட்டமாகவும் இருந்தமையின் வயிற்றினை உவமை கூறினர். மேலும், அச்சுனை தெளிந்த நீரையும், தாமரை மலர்களையும் கொண்டிருந்தது. நீர் நிறைந்துள்ள இடங்களில் ஆமைகளும் வாழ்ந்து கொண்டிருக்கும். ஈண்டு ஆமை சுனையில் இருத்தலைக் கவி கூறுகிறார். வெள் அகட்ட, கார் ஆமை என்னும் தொடர்கள் நிறத்தின் வேறுபாட்டை உணர்த்தி முரண் தொடை அமைப்பினை உணர்த்தி நிற்கின்றன. உயிர் இனங்கள் இங்ஙன் குளிர்ந்த இடத்தில் உறங்கும் என்பதைக் கம்பரும்,*

*நீரிடை உறங்கும் சங்கம்*
*நிழலிடை உறங்கும் மேதி*
*தாரிடை உறங்கும் வண்டு*
*தாமரை உறங்கும் செய்யாள்*
*'தூரிடை உறங்கும் ஆமை'*
*துறையிடை உறங்கும் சிப்பி*
*போரிடை உறங்கும் அன்னம்*
*பொழிலிடை உறங்கும் தோணி*

*என்று பாடியுள்ளார்.*

*இறைவன் அடியார்களின் யமபயத்தை ஒழிப்பவன். மார்க்கண்டேயனை எமனிடமிருந்து காப்பற்றியதை நாம் அறிவோம். இதனைக் கந்த புராணம்,*

*மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்தன்*
*உயிர்வவ்வப்*
*பதைத்தான் என்னா உன்னிவெ குண்டான்*
*பதிமூன்றும்*
*சிதைத்தான் வாமச் சேவடி தன்னால்*

**விடம் உண்டான் மலை**

**447.** தேன்மருவு பூஞ்சுனைகள் புக்குச் செழுஞ்சாந்தின்
கான் அமர்கல் பேரழகு கண்குளிர – மேனின்
றருவிகள்தாம் வந்திழியும் ஈங்கோயே வானோர்
வெருவுகடல் நஞ்சுண்டான் வெற்பு. **48**

---

*சிறிதுந்தி*
*உதைத்தான் கூற்றன் விண்முகில் போல்மண்*
*ணுறவீழ்ந்தான்*

*என்று கூறுகிறது. இக்காரணம் கொண்டே இறைவன் காலாந்தக மூர்த்தி என்றும், காலகாலன் என்றும் அழைக்கப்பட்டு வருகின்றான். "மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டை உன்னி, பார்க்கின் தொண்டர்க்கு என்ன பயங்காண் பராபரமே" என்று தாயுமானவர் கூறியதையும் ஈண்டுக் காண்போமாக. அக்குறிப்பே "வெங்கூற்றைச் சேராமல் செற்றான்" எனப்பட்டுள்ளது.*

*447. **குறிப்புரை :-** மருவு - சேரும், சந்து - சந்தன மரம், கான் - காடு, அமர் - பொருந்திய, கல் - மலை, இழியும் - ஒழுகும், வானோர் - தேவர், வெருவு - அஞ்சும், நஞ்சு - விடம், வெற்பு - மலை.*

***விளக்கவுரை :-*** *சுனைகளில் மலர்கள் மலர்ந்திருக்கும். மலர் மலர்ந்தால் அதில் தேன் இருத்தல் இயல்பு. ஆகவே, "தேன்மருவு பூஞ்சுனைகள்" என்றனர். அல்லது தேன் மருவு என்பதைப் பூவுக்கு அடையாக்கிப் பொருள் காணினும் தக்கதே. சந்தனமரம் மணமும் உறுதியும் பெற்றிருத்தலின், செழுஞ்சாந்து எனப்பட்டது. இயற்கைப் பொருளைக் காண்பது கண்களுக்கு ஒரு நல்விருந்தாகும். அதிலும், அருவி வந்து விழும் காட்சி அழகுடையது. ஆகவே, "கண் குளிர இழியும்" என்றனர். ஈண்டு ஒரு கருத்தை நம் உள்ளத்தில் நன்கு பதிவு செய்து கொள்ளுதல் வேண்டும். அருவி என்பதே சொல். இதனை மறந்து நீர்வீழ்ச்சி என்றே வழங்கி வருகின்றோம். இது Water falls என்பதன் மொழிபெயர்ப்பே அன்றி வேறன்று. மொழிபெயர்த்துக் கொள்வதில் தவறு இல்லைதான். என்றாலும், ஒருசிலர் நீர்வீழ்ச்சியினைக் குறிக்கத் தமிழ்மொழியில் சொல் இல்லை என்று சொட்டுச் சொல்வர். மலைவீழ் அருவி மேல் இருந்து கீழே விழும்போது,*

*முழங்குதிரைப் புனல்அருவி*
*கழங்கெனமுத் தாடும்*
*முற்றம்எங்கும் பரந்துபெண்கள்*
*சிற்றிலைக்கொண் டோடும்*

*ஆதலின், "கண்குளிர அருவிகள்தாம் வந்திழியும்" என்றது பொருத்தமானது.*

*அருவிகள் மலையினின்று ஒழுகுதலின் அழகைச் சங்க நூல்கள் அழகுறக்*

**அமரர் சீராட்ட நின்றான் மலை**

**448.** தேன்பலவின் வான்சுளைகள் செம்முகத்த பைங்குரங்கு
தான்கொணர்ந்து மக்கள்கை யில்கொடுத்து – வான்குணங்கள்
பாராட்டி ஊட்டும்சீர் ஈங்கோயே பாங்கமரர்
சீராட்ட நின்றான் சிலம்பு. **49**

---

*காட்டுகின்றன. "இழுமென் இழிதரும் அருவி" என்பது திருமுருகாற்றுப்படை. "மால்வரை இழிதரும் தூவெள் அருவி" என்றும், "கருவி மாமழை வீழ்ந்தென அருவி விடரகத்து இயம்பும்" என்றும் குறுந்தொகையில் வருதல் காண்க. சீவக சிந்தாமணியில், "இழியும் வெள்ளரு வித்திரள் யாவையும், குழுவின் மாடத் துகில்கொடி போன்றவே" என்று உள்ளது.*

*448. குறிப்புரை :- வான் - சிறந்த, பாங்கு - பக்கத்தில், அமரர் - தேவர், சிலம்பு - மலை.*

***விளக்கவுரை** :- வாழை, மா, பலா என்பன தமிழ்நாட்டுப் பழங்களில் மிகச் சிறந்தனவாகக் குறிப்பிடப்பட்டு வருபவை. இப்பழங்களைக் குறிப்பிடவே முப்பழம் என்ற தொடரும் இலக்கியங்களில் பயின்று வருகின்றது. முப்பழம் என்னும் தொகைக் குறிப்பு இம் மூன்று பழங்களைத் தவிர்த்து வேறு எவற்றையும் குறித்திடாது. "முப்பழமொடு பால் அன்னம்" என்ற தொடரைக் காணவும். இப்பழங்களுள் எப்பழம் சுவை மிக்கது என்று சொல்லவும் அரிது. இக்கருத்தைக் கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிரகாசர் தமது பிரபுலிங்க லீலையில் தக்க இடத்தில் விளக்கியுள்ளனர். மாயை ஆலயத்திற்குச் செல்கின்றாள். அதுபோது பல மாதர்களும் உடன் செல்கின்றனர். ஒவ்வொரு மாதராரும் அழகால் சிறந்து விளங்கினர். அத்தகைய அழகுடைய அணங்குகளைக் கண்டவர்கள் தம் பக்கலில் இருந்தவரிடம், 'இப் பெண்கள் குழாத்துள் அழகு மிக்கவர் யார்?' என்று கேட்டபோது, பக்கத்தில் இருந்தவர் அளித்த விடை, "முக்கனிகளுள் சுவை மிக்குளது எக்கனி" என்பது. இதன்மூலம் நாம் அறிவது முப்பழங்களுள் சுவைமிக்கது இது என்று உணர முடியாததுபோல இன்னார் தாம் அழகுடையவர் என்பது உணர முடியாது என்பதாம். ஆதலால்தான், "தேன்பலவின் வான்சுளைகள்" என்றனர். அஃறிணைப் பொருள்கட்குத் தம் குழந்தைகளிடத்து அன்புடைமையினை இப்பாடலில் நன்கு காணலாம். அஃறிணைப் பொருள்கள் பலாவின் சுளைகளைத் தம் மக்கட்கு ஈவதைக் குறித்துப் பாடப்பட்ட பாடல்களை நமது சங்க நூல்களில் பல இடங்களிலும் காணலாம். நற்றிணையில்,*

*உடங்கிரை தேடும் தடந்தாள் நாரை*
*ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்*
*மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்*
*தாய்பயிர் பிள்ளை வாய்படச் சொரியும்*

### வினை நீக்குவான் மலை

**449.** தோகை மயில்இனங்கள் சூழ்ந்து மணிவரைமேல்
ஓகை செறிஆயத் தோடாட – நாகம்
இனவளையில் புக்கொளிக்கும் ஈங்கோயே நம்மேல்
வினைவளையச் செற்றுகந்தான் வெற்பு. **50**

---

என்று காணப்படுகிறது. ஆழ்வார் தம் குஞ்சுகளுக்குப் பறவை இரை தேடுதலை,

*பள்ளச் செறுவில் கயலுகளப்*
*பழனக் கழனி அதனுள்போய்ப்*
*புள்ளுப் பிள்ளைக் கிரைதேடும்*
*புள்ளம் பூதங் குடியானே*

என்றனர். நற்றிணையில் குரங்கு தன் குட்டிக்கு ஆவின் பாலைப் பிழிந்து ஊட்டும் என்பதை, "மந்தி... வீங்குசுறை ஞெமுங்க வாங்கித் தீம்பால் கல்லா வன்பிறழக் கைந்நிறை பிழியும்'' என வருவதையும் காண்க. ஊட்டுகிறபோது அக் குட்டிகளைப் பாராட்டி உண்பிப்பது சுவை தரும் செய்தி ஆகும். இறைவன் தேவர்கள் பாராட்ட நிற்பதைப் பிரபுலிங்க லீலையில் பலபடப் பாடியுள்ளார் சிவப்பிரகாசர்.

*449. குறிப்புரை :- மணி - அழகிய, வரை - மலை, ஓகை - மகிழ்ச்சி, செறி - நிறைந்த, ஆயம் - கூட்டம், நாகம் - பாம்பு, வளைய - குனிந்து ஓட, செற்று - அழித்து, உகந்தான் - மகிழ்ந்தான், வெற்பு - மலை.*

**விளக்கவுரை** *:- மலைகளில் மூங்கில் முத்தும், யானைத் தந்தங்களின் முத்தும், நாகரத்தினங்களும் இருப்பனவாகப் புலவர்கள் கூறுவர். நவமணிகளில் முத்தும் ஒன்று அன்றோ? மயில்கட்கு மேகத்தைக் கண்டதும் பெருமகிழ்ச்சி எழும். இது மலையாதலின் மேகங்கள் தவழ்ந்து வரும். அதுபோல மயில்கள் தம் தோகை விரித்து மகிழ்வுடன் ஆடும். தனித்து ஆடுவதோடு அல்லாமல் தம் இனத்துடனும் ஆடி மகிழ்தலின், "ஆயத்தோடு ஆட" என்றனர். மயிலுக்கும் பாம்புக்கும் பகை. மயிலைக் கண்டதும் பாம்பு அஞ்சும். எனவே, மலைப் பாங்கரில் மயில் மகிழ்வுடன் ஆடுதலைக் கண்ட பாம்பு அஞ்சித் தன் வளையில் சென்று ஒளிந்துகொள்கிறது என்பார், ''ஆட நாகம் வளையில் ஒளிக்கும்'' என்றனர். ஈண்டு மகிழ்வையும், அச்சத்தையும் ஒருங்கே அமைத்துக் காட்டிய நயம் உணர்தற்குரியது.*

*மயிலைக் கண்டு நாகம் அஞ்சும் என்பதை மிக்க சுவை தரும் முறையில் அப்பர்,*

*நாகத்தை நங்கை அஞ்ச நங்கையை மஞ்சை என்று*

**கங்கைச் சடையான் மலை**

**450.** நறவம் நனிமாந்தி நள்இருட்கண் ஏனம்
இறவில் இயங்குவான் பார்த்துக் – குறவர்
இரைத்துவலை தைத்திருக்கும் ஈங்கோயே நங்கை
விரைத்துவலைச் செஞ்சடையான் வெற்பு. **51**

---

*வேகத்தைத் தவிர நாகம் வேழத்தின் உரிவை போர்த்துப்*
*பாகத்தின் நிமிர்தல் செய்யாத் திங்களை மீன்என் றஞ்சி*
*ஆகத்தில் கிடந்த நாகம் அடங்கும்ஆ ரூர னார்க்கே*

*என்று பாடிக் களித்துள்ளார்.*

***இறைவன் நமது பாவங்களை நம்மைக் கண்டு வளைந்து ஓடச் செய்பவன்*** *என்பது முன்னரும் கூறப்பட்டுள்ளது.* ***பயந்து ஓடுபவர் வளைந்து ஓடுதல் இயல்பாதலின் "வினை வளைய" என்றனர்.*** *பிறர்க்கு வந்த துயரை ஒருவன் களைவானானால் களைந்தவனுக்கு மகிழ்வு உண்டாதல் இயல்பே. ஆகவே, இறைவனும் தன் அன்பர்களின் வினைகளை அழித்து விடுதலின் மகிழ்வு கொள்ளுகின்றான் என்பார், "செற்று உகந்தான்" என்றனர்.*

*450.* ***குறிப்புரை :-*** *நறவம் - தேன், நனி - மிகுதியும், மாந்தி - குடித்து, நள் - நடு, அல்லது நள் என்னும் ஓசை; ஏனம் - பன்றி, இயங்குவான் - நடமாடுவதை, விரை - மணம், துவலை - நீர்த் துவலை, வெற்பு - மலை.*

***விளக்கவுரை :-*** *தேன் மிக்க இனிமையுள்ள பொருள். அதனை உயர்திணை மக்களும், அஃறிணை உயிரினங்களும் பருகிப் பரவசமுறும். ஈண்டுப் பன்றி மிகுதியும் பருகியதை ஆசிரியர் குறிப்பிடுகிறார். பன்றிகள் இதனைப் பருகியதோடு அமையாமல், தினைப்புனங்களையும் மேயச் செல்லும். அதனால் தினைப்புனங்கட்கு அழிவு நேரிடும். இதனைத் தடுக்கும் பொருட்டுக் குறவர் பொறி அமைத்து ஏனத்தைப் பிடிப்பர். இதனை நற்றிணையில், "மேவல் சிறுகண் பன்றி ஓங்கும் வியன்புனம் படீஇயர் வீங்குபொறி" என வருதல்கொண்டு காணலாம். இறைவன் தனது சடையில் கங்கையைச் சூடியுள்ளான். பகீரதன் வேண்டுகோட்கு இணங்கிக் கங்கையை இறைவன் தலையில் சூடியுள்ளான் என்பதைச் சுந்தரர்,*

*போர்த்த நீள்செவி யாளர் அந்தணர்க்குப்*
*பொழில்கொள் ஆலநிழற் கீழ்அறம் புரிந்து*
*பார்த்தனுக் கன்று பாசுபதம் கொடுத்தருளிப்*
*பண்டு பகீரதன் வேண்ட*
*ஆர்த்துவந்து இழியும் நல்கங்கை நங்கையாளை*
*நின்ச டைமிசைக் கரந்த*
*தீர்த்த னேநின் திருவடி அடைந்தேன்*

### தீ ஏந்தியின் சிலம்பு

451. நாகம் முழைநுழைந்த நாகம்போய் நன்வனத்தில்
நாகம் விழுங்க நடுக்குற்று – நாகந்தான்
மாக்கையால் மஞ்சுரிஞ்சும் ஈங்கோயே ஓங்கியசெந்
தீக்கையால் ஏந்தி சிலம்பு. 52

---

*செழும்பொழில் திருப்புன்கூ ருளானே*

*என்று பாடிப் பணிந்துள்ளார்.*

*கச்சியப்ப சிவாசாரியார்,*

*அந்நதி மூன்று தன்னில் அயன்நகர் புகுந்த கங்கை*
*தன்னரும் திறலின் மிக்க பகீரதன் தவத்தால் மீளப்*
*பின்னரும் இமையா முக்கண் பெருந்தகை முடிமேல் தாங்கி*
*இந்நில வரைப்பில்செல்ல இறைஅதில் விடுத்தல்செய்தான்*

*என்று கூறியுள்ளனர். இதனால் இறைவர்க்குக் கங்காதரமூர்த்தி என்றும், கங்கா விசர்ச்சன மூர்த்தி என்றும் திருநாமங்கள் உண்டாயின. இறைவன் கங்கையின் வேகத்தை அடக்கிச் சடையில் வைத்துச் சிறு அளவில் விடுத்திலர் எனில் உலகமே வெள்ளக்காடாகிவிடும் என்பர் மணிமொழியார். இதனை அவர்,*

*மலைமகளை ஒருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி*
*சலமுகத்தால் அவன்தலையில் பாயுமது என்னேடீ*
*சலமுகத்தால் அவன்தலையில் பாய்ந்திலனேல் தரணிஎல்லாம்*
*பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ*

*என்று உணர்த்தியுள்ளனர். இவற்றை எல்லாம் உள்ளடக்கியதே, "நங்கை விரைத்துவலைச் செஞ்சடையான்" என்னும் தொடர்.*

*451. குறிப்புரை :- நாகம் - மலை, முழை - குகை, நாகம் - யானை, நாகம் - பாம்பு, மா - பெரிய, மஞ்சு - மேகத்தை, சிலம்பு - மலை, ஏந்தி - ஏந்தியுள்ள இறைவன்.*

*விளக்கவுரை :- நாகம் என்னும் சொல் பலபொருள் தரும் ஒருசொல். மலை, பாம்பு, யானை முதலான பொருள்கள் இதற்கு உண்டு. முப்பொருளும் ஈண்டு விரவ இச்சொல் ஆளப்பட்டுள்ளது. யானைகள் மலைக் குகைகளில் நுழைந்து வரும். ஆகவே, நாகம் முழை நுழைந்த நாகம் என்றனர். முன்னுள்ள நாகம் மலையையும், பின்னுள்ள நாகம் யானையையும் சுட்டி நிற்பதைக் காணலாம். இப் பொருள் நயத்தை, இராமனது நடையினைக் கூறவந்த கம்பர், "நாகமும் நாகமும் நாண நடந்தான்" என்று பாடியுள்ளார். மலைகளில் பாம்புகள் மிகுதி. அவற்றுள் மிகப் பெரிய பாம்பும் உண்டு. அது மலைப்பாம்பு என்ற*

## விடை ஊர்தியான் வெற்பு

**452.** நாகம் களிறுநுங்க நல்உழுவை தாமரையின்
ஆகம் தழுவி அசைவெய்த – மேகம்
கருவிடைக்கண் நீர்சோறும் ஈங்கோயே ஓங்கு
பொருவிடைக்கண் ஊர்வான் பொருப்பு. **53**

---

*கூறப்படும். அப்பாம்பு யானையையும் விழுங்க வல்லது. அவ்வாறு ஈண்டு அப்பாம்பு யானையை விழுங்கியதை ஆசிரியர் குறிப்பிடுகிறார். அதுபோது யானை அஞ்சி நடுங்கித் தன் துதிக்கையினை மேலே உயர்த்திப் பிளிறுவதை ஆசிரியர் ஈண்டுக் கூறுகிறார். யானையின் கை மேகத்தை உரிஞ்சும் என்றது ஈங்கோய் மலையின் உயர்ச்சியை உணர்த்தியதாகும். இறைவன் திருக்கரங்கள் ஒவ்வொரு பொருளுக்கும் இருப்பிடமாகும். அம்முறையில் தீயையும் தனது திருக்கரத்தில் வைத்துள்ளமையின் தீக்கையால் ஏந்தி என்றனர். இறைவன் தீயினைக் கையில் வைத்திருப்பதும் காரணங் கருதியாகும். இத்தீயினை அவன் ஏந்தி இருப்பது அவனது ஐந்தொழில்களில் ஒடுக்கும் தொழிலைக் காட்டும் குறிப்பே ஆகும். "அரன் அங்கிதன்னில் அறையில் சங்காரம்" என்று திருமூலர் கூறுகிறார். உண்மை விளக்க ஆசிரியரும், "ஆற்றியிடும் அங்கியிலே சங்காரம்" என்றனர். மேலும் அவர் குறிப்பிடும்போது, இத்தீ இறைவனது ஐந்தெழுத்தாகிய 'நமசிவய' என்பதில் நகரத்தைக் குறிக்கும் என்பார், "அங்கி நகரம்" என்பர். வல்வினையைச் சுடுதற்கும் இருப்பது என்பார், "வல்வினையைச் சுட்டு" என்பர். காமிக ஆகமம், "ஒடுக்குதல் தொழில் செய்யும் சத்தியான இந்தச் சுடர் மகாமாயையின் மேலிருக்கிற பொருள்களை வெளிப்படுத்துகிறதாயும் பாசங்களை எரித்துச் சாம்பராக்குகிறதாயும் உள்ளது" என்று கூறுவதையும் கருதல் வேண்டும். இவ்வுட்பொருள் கொண்டே "தீக்கையால் ஏந்தி" என்ற தொடர் விளங்குகின்றது.*

*452. குறிப்புரை :- நுங்க - அழிக்க, களிறு - ஆண்யானை, உழுவை - புலி, தாம் - தாவும், மரை - மான், ஆகம் - உடல், அசைவு - சோர்வு, எய்த - அடைய, கருவிடை - நீரைக் கருவாகக் கொண்ட இடத்தில், பொருவிடை - போர்புரியும் எருது, ஊர்வான் - ஏறி ஊர்ந்து வருபவன், பொருப்பு - மலை.*

***விளக்கவுரை** :- மலையில் பல நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. ஒருசார் பாம்பு யானையை அழிக்கிறது. இதனை மலைபடுகடாம், "மைந்து பலிசினத்த களிறு பதன் அழிக்கும் துஞ்சு மரம் கடுக்கும் மாசுணம்" என்றும், நற்றிணை, "களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்" என்றும், அகம், "வெண்கோட்டி யானை விளிபடத் துறவும் அகல்வாய்ப் பாந்தள்" என்றும் கூறுவன காண்க. ஒருபக்கம் புலி மானினைக் கொன்று, அதன் உடலைத் தழுவிச் சோர்ந்து நிற்கிறது. இவை உண்மையில் எவரும் இரங்கத்தக்க காட்சிகளாகும். இக்காட்சியினைக் கண்டபோது கல்நெஞ்சினரும் கண்ணீர் சிந்துவர். ஈண்டு மேகம் கண்ணீர்*

**கங்கை ஏற்றான் கடறு**

**453.** பணவநிலைப் புற்றின் பழஞ்சோற் றமலை
கணவன் இடந்தட்ட கட்டி – உணவேண்டி
எண்கங்கை ஏற்றிருக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்
வண்கங்கை ஏற்றான் மலை. **54**

---

*சிந்தியதாகக் கவி பாடுகிறார். துன்பம் கண்டுழி அஃறிணைப் பொருள்களும் கண்ணீர் சிந்தும் என்று கற்பித்துப் புலவர் பாடுவர். இறைவனது வாகனம் எருது. இதனைக் கம்பரும், "இறைவனது ஊர்தி இரிடபம்" என்றார். மணிமொழியார்,*

*இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே*
*ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதுஎன்னே - எப்போதும்*
*தேன்புரையும் சிந்தையராய்த் தெய்வப்பெண் ணேத் திசைப்ப*
*ஆன்புரவி யூரும் மகிழ்ந்து*

*என்பர்.*

*இறைவனுக்கு இரண்டு விடைகள் உண்டு. ஒன்று தரும விடை. அதாவது, தரும தேவதையே விடை வடிவு கொண்டு இறைவனைத் தாங்கி நிற்றல். மற்றொன்று, மால் விடை என்பது. இறைவன் திரிபுரம் எரித்தபோது திருமால் இடபமாய்த் தாங்கினமையின் அவனுக்கு மால்விடை ஆயிற்று. இதனை மணிமொழியாரும்,*

*கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேறாதே*
*இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ*
*தடமதில்கள் அவைமூன்றும் தழல்எரித்த அந்நாளில்*
*இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ*

*என்றருளியுள்ளனர். இதனைக் கந்த புராணம் - உபதேச காண்டம்,*

*சத்தி யோர்புடை இருக்கவும் யானும்ஓர் சத்தி*
*ஒத்தி டப்புரிந் தருளினை அதுபோல் உடையாய்*
*வித்த கத்தனி யேறுளை யாயினும் வினையேன்*
*அத்த னித்திறம் ஏறெனத் தாங்குதற் கருளாய்*

*என்று திருமால் வேண்டி விடையாயினதைக் கூறுகிறது.*

*தரும தேவதை தான் எக்காலத்தும் இறவாதிருக்கும் பொருட்டு இடப வடிவுடன் இறைவனிடம் சென்று தன்மீது வீற்றிருக்குமாறு வேண்ட, இறைவரும் திருவருள் பாலித்து அத் தருமவிடையினையும் ஊர்தியாகக் கொண்டார். இதனையும் உபதேச காண்டம்,*

*ஆறு லாம்சடை யண்ணலைச் சேர்வனேல்*
*ஈறி லாதென்றும் உய்ந்திடு வேன்எனாத்*

**தேவர் அறியா மலை**

**454.** **பன்றிப் பருக்கோட்டால் பாருழுத பைம்புழுதித்**
**தென்றி மணிகிடப்பத் தீயென்று – கன்றிக்**
**கரிவெருவிக் கான்படரும் ஈங்கோயே வானோர்**
**மருவரியான் மன்னும் மலை.** **55**

---

*தேறி யேஅறத் தெய்வதம் செங்கணான்*
*ஏற தாய்யொர் எழிலுருக் கொண்டதே*

***என்கிறது. இக்காரணங்களால் இறைவனுக்கு இடபாரூட மூர்த்தி, இடபாந்திக மூர்த்தி என்ற திருநாமங்கள் உண்டு. இக்கருத்துக்களை உள்அடக்கியதே, "ஓங்கு பொருவிடைக் கண் ஊர்வான்" என்னும் தொடராகும்.***

*453. **குறிப்புரை :-** பணவ நிலை - சுவர் போன்ற தோற்றமுடைய, அமலை - மிகுதி, செறிவு; இடந்து - தோண்டி, அட்ட - சமைத்த, எண்கு - கரடி, அங்கை - அழகிய கை.*

***விளக்கவுரை** :- பாம்புப் புற்று உயரமாக இருக்கும். அத்தோற்றம் சுவர் போன்று காணப்படும். ஆகவே, அதனைப் "பணவ நிலை" என்றனர். கரடிகள் பாம்புப் புற்றினை அகழ்ந்து உண்ணுதல் உண்டு. ஆகவே, "பழஞ்சோற்று அமலை" என்றனர். பெரும்புற்றினின்று எடுத்து உண்ணுதலின் அமலை என்ற சொல்லைப் பயன்படுத்தினர். அமலை ஈண்டுப் புற்றாஞ் சோற்றின் செறிவை உணர்த்த அமைந்துள்ளது. புற்றுச்சோறு என்றே அகநானூற்றில், "ஈயல் புறத் தீர்ப்புறத் திறுத்த குரும்பி வல்சி" என்று கூறப்பட்டுள்ளது.*

*கங்கையை ஏற்கும் வன்மை இறைவனுக்குத்தான் உண்டு. இதனைத் திருமுறை ஆசிரியர்கள் அழகுறப் பலவாறு குறிப்பிட்டுள்ளனர். "மையறு மனத்தனாய பகீரதன் வரங்கள் வேண்ட, ஐயமில் அமரர் ஏத்த ஆயிர முகம தாகி, வையகம் நெளியப் பாய வானவந் திழிகங்கை" என்றும், "பண்டு பகீரதன் வேண்ட ஆர்த்து வந்து இழியும் புனல் கங்கை நங்கையாளை நின் சடைமிசைக் கரந்த தீர்த்தன்" என்றும் வருதலைக் காண்க. பகீரதனிடம் இறைவன் ஒருவனே கங்கையைத் தாங்கவல்லான் என்பதை,*

*மாக நன்னதி புவியிடை வருகின்மற் றவள்தன்*
*வேகம் ஆற்றுதல் **<u>கண்ணுதற்</u> கன்றிவே றரிதால்***
*தோகை பாகனை நோக்கிநீ அருந்தவம் தொடங்கென்*
*றேகி னானுல **கனைத்தும்எவ் வுயிர்களும் ஈந்தான்***

*என்று பிரமன் வாக்காகக் கம்பர் கூறியுள்ளனர்.*

*454. **குறிப்புரை :-** பருக்கோடு - பருத்த தந்தம், பார் - நிலம், உழுத - கிளைத்த, புழுதி - மண், தென்றி - சிதறி, கன்றி - கோபித்து, கரி - யானை,*

**மூவெயில் முறித்தான் மலை**

**455.** பாறைமிசை தன்நிழலைக் கண்டு பகடென்று
சீறி மருப்பொசித்த செம்முகமாத் – தேறிக்கொண்டு
எல்லே பிடிஎன்னும் ஈங்கோயே மூவெயிலும்
வில்லே கொடுவெகுண்டான் வெற்பு. **56**

---

*வெருவி - பயந்து, கான் - காட்டில், படரும் - செல்லும், வானோர் - தேவர்கள், மருவு - நெருங்குதற்கு, அரியான் - அருமையானவன், மன்னும் - நிலைத்து நிற்கும்.*

*விளக்கவுரை :- பன்றிகள் சிலவற்றிற்கு யானைகட்கு உள்ளது போலக் கொம்புகள் உண்டு. அதனால்தான், "பன்றிப் பருக்கோடு" என்றனர். பன்றிகள் தம் கொம்பால் பூமியின் மண்ணைக் கிளறும். அதுபோது பாம்பின் ரத்தினங்கள் வெளிப்படும். அவை செந்நிறத்தன ஆகலின் அவற்றை நெருப்பென்று யானைகள் கருதி ஓட்டம் எடுக்கும். இக்காட்சியே ஈண்டுக் கூறப்பட்டுள்ளது.*

*ஏனல்அம் சிறுதினை காக்கும் சேணோன்*
*ஞெகிழியில் பெயர்ந்த நெடுநல் யானை*
*மீன்படு சுடரொடு வெரூஉம்*

*என்று குறுந்தொகையிலும், யானை தீக்கு அஞ்சும், ஓடும் என்பதற்காகவே தீப்பந்தம் பிடிப்பர் மறவர் என்ற கருத்துப்பட்ட அடிகளாக, "ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர் களிறென ஆர்ப்பவர்" என்று கலித்தொகையிலும் வருதலைக் காணலாம்.*

*இறைவன் தேவர்களாலும் நெருங்குதற்கு அரியனாய் இருப்பவன். அவன் அரிதற்கரியான் என்பதை மணிமொழியார்,*

*திசைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும்*
*முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும்*
*ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்துத்*
*துற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும்*
*மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும்*
*இத்தந் திரத்தில், காண்டும்என்று இருந்தோர்க்கு*
*அத்தந் திரத்தில் அவ்வயின் ஒளித்தும்*

*என்று பாடுமாற்றைக் காணலாம். "மலரவன் மால்எண் வசுக்கள் ஏகாதசர்கள் இரைக்கும் அமிர்தர்க்கு அறிய ஒண்ணான்" என்று அப்பர்பெருமானார் தேவர்கள் அறியப்படாத நிலையினைப் பாடுவார் ஆயினர். இக்குறிப்பே ஈற்றடி குறிப்பதாகும்.*

*455. குறிப்புரை :- பகடு - யானை, மருப்பு - தந்தம், ஒசித்த - ஒடித்துக்*

*கொண்ட, மா - யானை, பிடி - பெண் யானை, எயில் - கோட்டை, மூ - மூன்று, கொடு - கொண்டு, வெகுண்டான் - கோபித்து அழித்தவன், வெற்பு - மலை.*

***விளக்கவுரை*** *:- மனமயக்கம் உற்றவர் தன்னிழலையே வேற்றொருவன் உருவம் என்று கொண்டு அதனோடு முரண்டுதல் உண்டு. மணிமேகலையில்,*

*பண்பில் கிளவி பலரொடும் உரைத்தாங்கு*
*அழூஉம் விழூஉம் அரற்றும் கூஉம்*
*தொழூஉம் எழூஉம் சுழலலும் சுழலும்*
*ஓடலும் ஓடும் ஒருசிறை ஒதுங்கி*
*நாடலும் நீடும் நிழலொடு மறலும்*

*என்று காணப்படுகிறது. கம்பரும்,*

*விடன்ஒக்கும் நெடிய நோக்கின்*
*அமிழ்தொக்கும் இன்சொல் ஆர்தல்*
*மடன்ஒக்கும் மடனும் உண்டே*
*வாணுதல் ஒருத்தி காணாத்*
*தடனொக்கும் நிழலைப் பொன்செய்*
*தண்ணறும் தேறல் வள்ளித்*
*துடன்ஒக்க உவந்து நீயும்*
*உண்ணுதி தோழி என்றாள்*

*என்று கள்ளுண்டு மயங்கிய மாதின் செயலைக் குறித்துப் பாடினர். ஈண்டு யானை தன்னிழலைக் கண்டு அது மற்றொரு யானை எனக் கொண்டு, சீறியதாகக் கவி கூறியுள்ளார். சீறினமைக்குக் காரணம் அஃது ஓர் ஆண்யானை என்று கருதியதாகும். பின்னர் அந்நிழலைப் பிடி என்று கருதினதாம். என்னே, மனமயக்கத்தின் நிலை! எல்லே என்பது உணர்ச்சி வயத்தால் எழுந்ததோர் இடைச்சொல்லாகும். யானை கல்லொடு மோதிக் கொம்பினை ஒடித்துக் கொள்ளும் என்பதை, "சுரம்செல் யானைக் கல்லுரு கோட்டிற்று" என்று குறுந்தொகையில் காணலாம்.*

*இறைவன் எய்த கோட்டைகள் மூன்று. அவற்றை வில் கொண்டு எய்தான் என்பது உபசாரமே அன்றி உண்மை அன்று. அவனது புன்முறுவலே புரத்தை அழித்தது. இதனை அழகுபடக் குமரகுருபரர். இறைவன் வில்லைச் சுமந்தது வீணே என்பார்போல்,*

*வில்மதனை வென்றது அவர் விழியே, ஒன்னார்தம்*
*பொன்னெயில் தீமடுத்தது இன்னகையே பூமிசையோன்*
*தார்முடி கொய்தது கூர்உகிரே ஆருயிர்உண்*
*கூற்றுயிர் உண்டது அடித்தலமே ஏற்றான்*

**அருள்குன்றாய் நின்றான் மலை**

**456.** பிடிபிரிந்த வேழம் பெருந்திசைநான் கோடிப்
படிமுகிலைப் பல்காலும் பார்த்திட் – டிடரா
இருமருப்பைக் கைகாட்டும் ஈங்கோயே வானோர்
குருவருள்குன் றாய்நின்றான் குன்று. **57**

---

*பரசும் பினாகமும் சூலமும் என்னே*
*கரமலர் சேப்பக் கொளல்*

*என்று பாடியுள்ளனர். இவரை அடிஒற்றிச் சைவ எல்லப்ப நாவலரும்,*

*காலில் துலங்கும் நகத்தாலும்*
*கையில் பொலிகூர் நகத்தாலும்*
*சீலத் தரக்கன் உரங்கொண்டீர்*
*திசைமா முகன்தன் சிரங்கொண்டீர்*
*மேலைப் புரத்தைச் சிரித்தெரித்தீர்*
*விதிவேள் புரத்தை விழித்தெரித்தீர்*
*சூலப் படையேன் மழுப்படையேன்*
*சுமந்தீர் அருணை அமர்ந்தீரே*

*என்று பாடியுள்ளார். மேலும், மேருமலை இறைவரது தோளுக்கு நிகர் ஆகாத நிலையினால் வணங்கி அவரது தோளில் அமர்ந்திருக்க வில்லாயது என்று கற்பனை செய்தும் குமரகுருபரர்,*

*பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்கும்மெய்ப்*
*பாதியும்அத்*
*தார்பெற்ற வேணியும் தந்தார் தியாகர்*
*தடம்புயத்தின்*
*சீர்பெற் றிலோம்என்று நாணால் வணங்கிச்*
*சிலைஎனவும்*
*பேர்பெற்ற தால்பொன் மலைகுனித் தார்எம்பி*
*ரான்என்பரே*

*என்று பாடியுள்ளனர். இறைவன் மூவெயிலும் வெகுண்டு அழித்தான் என்பதன் தத்துவப் பொருள், மும்மலங்களை வெகுண்டு அழித்தவன் என்பதாகும். இதனைத் திருமந்திரம்,*

*அப்பணி செஞ்சடை ஆதி புரா தனன்*
*முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புர மாவன மும்மல காரியம்*
*அப்புரம் எய்ததை யார்அறி வாரே*

*என்று கூறுகிறது. இக்கருத்துக்களே, “மூவெயிலும் வெகுண்டான்” என்பதில் அடங்கியுள்ளது.*

***456. குறிப்புரை :-*** *பிடி - பெண்யானை, வேழம் - ஆண்யானை, படி - படிந்த, முகிலை - மேகத்தை, பல்காலும் - பலமுறையும், இடரா - துன்புற்று.*

***விளக்கவுரை :-*** *திசைகள் பத்தாகவும், எட்டாகவும், நான்காகவும் பிரித்துக் கூறப்படுதல் உண்டு. ஆகவே, நான்காகப் பிரிக்கப்பட்டதனைப் “பெருந்திசை” என்றனர். மேகங்கள் சூல் கொண்டபோது கருநிறத்துடன் விளங்கும் அத் தோற்றம் பிடியினைப் பிரிந்த யானைக்குத் தன் பிடியைப்போல் காணப்பட்டது. அதனால் அதனை அழைப்பதுபோலத் தன் கையை உயர்த்திக் காட்டியது என்பதே பாட்டின் முற்பகுதியின் கருத்து. இதனால் ஈங்கோய் மலையின் உயரத்தினையும், மேகம் அதன்மீது வந்து படிதலையும் ஒருங்கே உரைத்தருளினர். இவ்வாறு மேகத்தைப் பிடி என்று கருதி, யானை தன் கைநீட்டி அழைத்தலைக் கம்பர்,*

*பிளிறு மேகத்தைப் பிடிஎனப் பெரும்பணைத் தடக்கைக்*
*களிறு நீட்டும்அச் சித்திர கூடத்தைக் கண்டார்*

*எனப் பாடியுள்ளனர்.*

*இறைவன் பக்குவப்பட்ட உயிர்கட்குக் குருவாய் வந்து அருள் செய்யும் இயல்பினன். பக்குவப்படாத வழியும் குருவாய் வந்து அருள்புரிபவன். இதனைச் சிவஞான சித்தி*

*மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி*
*வளர்ந்துஅவனை அறியாது மயங்கி நிற்பப்*
*பின்னவனும் என்மகன்நீ என்றுஅவரில் பிரித்துப்*
*பெருமையொடும் தானாக்கிப் பேணு மாப்போல்*
*துன்னிஐம் புலவேடர் சுழலில் பட்டுத்*
*துணைவனையும் அறியாது துயருறும்தொல் உயிரை*
*மன்னும்அருட் குருவாகி வந்துஅவரின் நீக்கி*
*மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பர்*

*என்று நன்கு எடுத்து ஓதும் ஆற்றால் தெளியலாம். குருவாவான் சிவனே என்பது சித்தாந்தத் துணிபு. திருமூலர் இதனைத் தெளிவுற,*

*குருவே சிவமெனக் கூறினன் நந்தி*
*குருவே சிவமென் பதுகுறித் தோரார்*
*குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்*
*குருவே உரைஉணர் வற்றதோர் கோவே*

*என்று கூறியுள்ளார். இது குறித்தே, “வானோர் குருவருள் குன்றாய் நின்றான்”*

**மந்தி நக்கிருக்கும் மலை**

**457.** பொருத கரியின் முரிமருப்பில் போந்து
சொரிமுத்தைத் தூநீர்என் றெண்ணிக் – கருமந்தி
முக்கிவிக்கி நக்கிருக்கும் ஈங்கோயே மூவெயிலும்
திக்குகக்கச் செற்றான் சிலம்பு. **58**

---

*என்றனர். வானோர்க்குக் குரு என்றதனால் மக்கட்கும் குருவாவான் அவனே என்பது தானே பெறப்பட்டதைத் தெளியவும்.*

*457. **குறிப்புரை :-** பொருத - போரிட்ட, கரி - யானை, முரி - வளைந்த, மருப்பு - தந்தம், போந்து - வெளி வந்து, தூ - தூய்மையான, மந்தி - பெண் குரங்கு, நக்கு - சிரித்து, திக்கு - திசைகளில் உள்ள யாவரும், உகக்க - மகிழ, செற்றான் - அழித்தவனான இறைவன், சிலம்பு - மலை.*

*__விளக்கவுரை :-__ ஈண்டு ஒரு குரங்கின் செயல் நகைச்சுவைபடக் கூறப்பட்டுள்ளது. யானைகள் மதங்கொண்டால் சும்மா இரா. ஒன்றோடு ஒன்று சண்டையிட்டுக் கொள்ளும். அதுபோது அவற்றின் தந்தங்கள் முறிபடும். முறிபட்டபோது அம்மருப்பில் உள்ள முத்துக்கள் கீழே சிந்தும். முத்துக்கள் பிறக்கும் இடங்கள் சில உண்டு. அவற்றைப் புலவர்கள் நன்கு எடுத்து இயம்பியுள்ளனர். இரத்தினச் சுருக்கம் என்னும் நூலில்,*

*தந்தி வராக மருப்புஇப்பி பூகம் தனிக்கதலி*
*நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினம்மின்னார்*
*கந்தரம் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்*
*இந்து உடும்பு கராம்முத்தை ஈனும் இருபதுமே*

*என்று கூறப்பட்டுள்ளது. குமரகுருபரர் மீனாட்சி அம்மன் வாய்முத்தைப் பற்றிச் சிறப்பிக்கும்போது,*

*கொழுது மதர்வண்டு உழக்கும்குழல்*
*கோதைக்கு உடைந்த கொண்டலும்நின்*
*குதலைக் கிளிமென் மொழிக்குஉடைந்த*
*குறுங்கண் கரும்பும் கூன்பிறைக்கோடு*
*உழுத பொலன்சீ றடிக்குஉடைந்த*
*செந்தா மரையும் பசுங்கழுத்துக்கு*
*உடைந்த கமஞ்சூல் சங்கும்ஒழுகு*
*ஒளிய கமுகும் அழகுதொய்யில்*

*எழுது தடந்தோட்கு உடைந்ததடம்*
*பணையும் பணைமென் முலைக்குஉடைந்த*

**எயில் எரித்தான் மலை**

**458.** மறவெங் களிற்றின் மருப்புகுத்த முத்தம்
குறவர் சிறார்குடங்கைக் கொண்டு — நறவம்
இளவெயில்தீ அட்டென்னும் ஈங்கோயே மூன்று
வளவெயில்தீ யிட்டான் மலை. **59**

---

*இணைமா மருப்பும் தரும்முத்துஉன்*
*திருமுத்து ஒவ்வா.*

*என்று அழகுறப் பாடினர். இங்ஙனமே பகழிக்கூத்தரும் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழில் முருகன் வாய்முத்தத்தைப் புகழ்ந்துள்ளார்.*

*இதனால்தான், "மருப்பில் சொரிமுத்து" என்றனர். முத்து வெண்ணிறமானது. அவ்வெண்ணிறம் குரங்குக்கு நீர்போல் தோற்றம் அளிக்கிறது. அதனால் அதனைக் பருகப் படாதபாடு பட்டதாக ஆசிரியர் சுவைபடப் பாடியுள்ளனர். முப்புரங்கள் அழிவினால் திசைகள் மகிழ்ந்தன என்பது திசையில் உள்ளவர்கள் மகிழ்ந்தனர் என்பதாம். அப் புரங்கட்கு உரியவர்கள் தாரகாட்சன், கமலாட்சன், வித்யுந்மாலி என்பவர்கள். இவர்கள் தேவர்கள். இருடிகட்குப் பெருந்துன்பம் செய்தனர் ஆதலின், அவர்கள் அழிக்கப்பட்டபின் திசையில் உள்ளார் மகிழ்ந்தனர். ஆதலின், ''திக்கு உகக்கச் செற்றான்'' என்றனர். இதனால் இறைவர்க்குத் திரிபுராந்தகமூர்த்தி என்ற திருநாமம் ஏற்பட்டது.*

*458. குறிப்புரை :- மறம் - கோபம்கொண்ட, களிற்றின் - ஆண்யானையின், மருப்பு - தந்தம், உகுத்த - சிந்திய, சிறார் - சிறுவர்கள், குடங்கை - உள்ளங்கை, நறவம் - தேன், எயில் - கோட்டை, அட்டு - இட்டு, காய்ச்சுதல்.*

*விளக்கவுரை :- யானைத் தந்தத்தில் முத்து உண்டாதலை முன் பாட்டில் நன்கு விளக்கப்பட்டது. ஆண்டு, குரங்குகள் முத்தின் ஒளியை நீராகக் கொண்டு நக்கியதாகப் புலவர் கூறினர். ஈண்டு, குறச்சிறார் அம் முத்தொளியை இளம் தீயாகக் கருதி அதில் தேனைக் காய்ச்ச எண்ணுவதாகக் கூறுகிறார். முத்து பலவகைப்படும். அதனை,*

*பால்முத்தம் வருணன் முத்தம்*
*பகல்முத்தம் பகலோன் முத்தம்*
*மான்முத்தம் நீல முத்தம்*
*மாசறு குருதி முத்தம்*
*கான்முத்தம் பசிய முத்தம்*
*காலன்தன் முத்தம் தேவர்*
*கோன்முத்தம் பொன்போல் முத்தம்*
*குணங்களும் பயனும் சொல்வார்*

*என்று திருவிளையாடல் கூறுதல் காண்க. பகலோன் முத்தம் என்ற ஒன்று*

**மான் ஏந்திய கையான் மலை**

**459.** மலைதிரிந்த மாக்குறவன் மான்கொணர நோக்கிச்
சிலைநுதலிச் சீறிச் சிலைத்துக் – **கலைபிரிய**
**இம்மான் கொணர்தல் இழுக்கென்னும் ஈங்கோயே**
மெய்ம்மான் புணர்ந்தகையான் வெற்பு. **60**

---

*இருப்பதனால் அதனை இளவெயில்தீ போன்றது என்று ஆசிரியர் கூறினார் போலும்! பால்முத்தம் ஆதலின் அதன் வெண்ணிறத்தைக் குரங்கு தூயநீராகக் கருதியது.*

*திரிபுராதிகள் கொண்ட எயில்கள் வெறும் மண்ணாலும் கல்லாலும் ஆயவை அல்ல. அவை இரும்பு, வெள்ளி, பொன்னால் ஆயவை. ஆகவேதான், "வள எயில்" என்றனர். மேலும், அம் மூவெயில்கள் நகர் போன்று இருந்தமையின் வள எயில் என்றார் எனினும் அமையும். "காவல் மிக்க மாநகர் காய்ந்துவெம் கனல்படக் கோவம் மிக்க நெற்றி யான்" என்ற சம்பந்தர் வாக்கையும் உணர்க. அம் மும்மதில் காவல் வளனும், வன்மை வளனும் பெற்றிருந்தமையின் வளஎயில் என்றார் என்றலும் ஆம். இந்தக் குறிப்பையும் ஆளுடைய பிள்ளையார், "பார் இதனை நலிந்துஅமரர் பயம் எய்தச் சயம்எய்தும் பரிசுஅமரர் போர்இசையும் புரம்மூன் றும் பொன்றஒரு சிலைவளைத்தோன்" என்றனர்.*

*459. குறிப்புரை :- சிலை - வில் போன்ற, நுதலி - நெற்றியினையுடைய குறத்தி, சிலைத்து - ஓசைகொண்டு பேசி, கலை - ஆண்மான், புணர்ந்த - சேர்ந்த, வெற்பு - மலை.*

*விளக்கவுரை :- குறவர்கள் தமது தொழில் காரணமாக மலையில் திரிவர். இவரே திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தில், "திருவது பொருபுலி குமிறும் பொருப்பிடைக் காடே" என்றனர். குறத்தியின் கோபத்திற்குக் காரணம், பெண்மானைப் பிரித்துவிட்டு ஆண்மானைக் கொணர்ந்ததனால் ஆகும். இது, "கலைபிரிய இம்மான் கொணர்தல் இழுக்கு" என்று அவள் கூறுவதிலிருந்து தெரிகிறது.* ***ஆணும் பெண்ணும் கலந்து இனிது வாழ்வதே இன்ப வாழ்வு.*** *ஒருவரை விட்டு ஒருவர் பிரியின் துன்பமே அல்லாமல் இன்பம் எய்தாது. இவ் வுண்மையை,*

> ***காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந்***
> *தாங்கிருவர்*
> *ஆகத் துளோருயிர் கண்டனம் யாம்இன்றி*
> *யாவையுமாம்*
> *ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பலவன்*
> *மலையில்*
> ***தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வரும்இன்ப***

**பொன் நிற வெண்ணீற்றான் வெற்பு**

**460.** மரை அதளும் ஆடும் மயில்இறகும் வேய்ந்த
புரைஇதணம் பூங்கொடியார் புக்கு – நுரைசிறந்த
இன்நறவுண் டாடி இசைமுரலும் ஈங்கோயே
பொன்நிற வெண் ணீற்றான் பொருப்பு. **61**

---

*துன்பங்களே*

*என்னும் திருக்கோவையார் பாடல் நன்கு விளக்கி நிற்கிறது. இதனை உட்கொண்டதே முன் மூன்றடிகளின் கருத்து. அஃறிணைக்கும் இக் காதல் உணர்ச்சி உண்டு என்பதை நக்கீரர் குறத்தி வாயிலாக உணர்த்தியது மிகமிகப் பாராட்டற்குரியது.*

*இறைவனது திருக்கரத்தில் மான் உண்டு. அந்த மானினைத் தன் திருக்கரத்தில் கொண்டிருப்பதற்கும் ஒரு கருத்து உண்டு. அதன் கருத்து, வேதத்தின் நாயகன் தான் என்பதை அறிவிப்பதற்காகும். இதனை நமக்கு தெளிவுறுத்திய பெருமை பட்டினத்தடிகளைச் சாரும். அவர்,*

*வேத மான்மறி ஏந்துதல் மற்றதன்*
*நாதன் தான்என நவிற்றும் மாறே*

*என்று கூறியிருப்பதைக் காண்க.*

*இறைவன் தன் கரத்தினில் மான் தரித்திருப்பதைக் கற்பனை அழகு தோன்ற சிவப்பிரகாசர்,*

*நாகம் தருங்கொடி கண்களை நாணியே*
*முகம்திரும் பும்முறை யில்திரும் பும்மான்*

*என்று பாடுகிறார்.*

*மான் வேட்டையினைக் குறிஞ்சிவாழ் மக்கள் புரிதலைக் குறுந்தொகையிலும்,*

*வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த*
*நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த*
*புன்கண் மடமான் நேர்படத் தன்னையர்*
*சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்தி*

*என்று வருதல்கொண்டு அறியலாம்.*

*460.* ***குறிப்புரை :-*** *மரை - மான், அதள் - தோல், வேய்ந்த - சூடிய, புரை - உயரமான, இதணம் - பரண், கொடியார் - பெண்கள், நறவு - தேன், முரலும்*

- பாடும், பொருப்பு - மலை.

**விளக்கவுரை :-** குறவர் மகளிர்க்கு மான்தோலும் ஆடையாக அமையும். இது குறித்தே, "மரை அதளும்" என்றனர். இறகைத் தலையில் இவர்கள் சூட்டிக் கொள்வர். இந்நிலையிலும் அவர்கள் அழகுடன் துலங்குவர் ஆதலின், ''பூங்கொடியார்'' என்றனர். இவர்கள் தினைப்புனம் காக்கப் பரணில் அமர்த்தப்படுதல் உண்டு. இவ்வாறே வேடர் வளர்ப்புப் பெண்ணாகிய வள்ளியம்மையார் பரணில் அமர்த்தப்பட்ட நிலை குறித்து அருணகிரியார்,

ஆடிய மயிலினை ஒப்புற்று
பீலியும் இலையும் உடுத்திட்டு
ஆரினும் அழகுமி கப்பெற்று - யவனாளும்
ஆகிய இதண்மிசை யற்றிட்டு
மானினம் மருளவி ழித்திட்டு
ஆயுத கவணொரு கைச்சுற்றி - விளையாடும்
வேடுவர் சிறுமி ஒருத்தி

என்று பாடியுள்ளனர்.

குறிஞ்சி நிலத்தில் தேன் மிகுதியும் கிடைக்கும். ஆகவே, அதனைப் பருகி அந்நில மக்கள் பரவசம் உறுவர். அப்படி உண்டு ஆனந்தத்தால் பாடியும் மகிழ்வர். இவ்வாறு பாடி மகிழ்தலை அகநானூறு,

ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட

என்கிறது.

இவற்றை எல்லாம் உணர்த்துவதே மூன்றாவது அடி ஆகும். இறைவன் மேனி தீவண்ணம். ஆகவே, அதனைப் பொன்னிறம் என்றும் புலவர் கூறுவர். அதன்மீது நீற்றையணிந்து பொலிதலின், "பொன்நிற வெண்ணீற்றான்" என்றனர். "பொன் ஒளிகொள் மேனி" என்றும், "முற்றும் வெண்ணீறணிந்த திருமேனி" என்றும் திருமுறை கூறுவதையும் காணலாம். **இறைவன் திருநீறு பராசத்தியாகும். "பாராவணம் ஆவது நீறு" என்றனர் சம்பந்தர்.** "பாசத்தை ஒழிப்பதும் நீறு. பாசமும் அங்கு அதுகழியப் பண்ணும் திருவெண்ணீறு" என்பது கோயில் புராணம்.

இறைவன் உடம்பு அம்மை அப்பன் உடம்பு. இங்ஙனம் பெற்றுள்ளமைக்குக் காரணம் உண்டு. பிருங்கி மகரிஷி இறைவனை வணங்கி, இறைவியை வணங்காதிருந்தனர். தான் தனித்திருப்பதனால் அன்றோ இவ்வாறு பிருங்கி வணங்கிலன் என்று சினந்த இறைவி, தவத்தை மேற்கொண்டாள். சிவபெருமான் தவம் செய்துகொண்டிருந்த உமாதேவியாரை அடைந்து, யாது வரம் வேண்டுமெனக் கேட்டபோது இறைவி, "உமது வாமபாகத்தில் யான் இணைந்து

**மாதை இடத்துடையான் மலை**

**461.** மலையர் கிளிகடிய மற்றப் புறமே
கலைகள் வருவனகள் கண்டு – சிலையை
இருந்தெடுத்துக் கோல்தெரியும் ஈங்கோயே மாதைப்
புரிந்திடத்துக் கொண்டான் பொருப்பு. **62**

---

*இருக்கவேண்டும். இதுவே எனது வேண்டுகோள்" என்றனள். இறைவனும் அதற்கு இசைந்து, தான் வலப்பாகமாகவும், இறைவி இடப்பாகமாகவும் அமைய அம்மை அப்பனாக விளங்கி யாவர்க்கும் காட்சி நல்கினன். இதனால் இறைவர் அர்த்தநாரீசுரர் என்ற திருப்பெயரும் கொண்டனர். இதனைக் காஞ்சி புராணம்,*

*உமையும் தானும் வேறன்மை*
*உருவின் இடத்துத் தெளிப்பான்போல்*
*இமைய மயிலை ஒருபாதி*
*வடிவில் நிறுவி நால்கரத்தும்*
*அமைய வனசம் திரிசூலம்*
*அபய வரதம் இவைதாங்கி*
*நமையும் உய்யக் கொண்டருளும்*
*நாரி பாகன் திருவுருவம்*

*என்று பாடிக் காட்டுகிறது. "பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே" என்றனர் சம்பந்தர். இந்த அம்மை அப்பர் வடிவை மணிமொழியார்,*

*தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூ தாய் கோத்தும்பீ*

*என்று தெரிவிப்பாராயினர். இக்கருத்துக்களைத் தன்னுள் அடக்கியுள்ளதே, "மாதைப் புரிந்திடத்துக் கொண்டான்" என்னும் தொடர்.*

***461. குறிப்புரை :-** மலையர் - வேடர், கடிய - ஓட்ட, கலைகள் - மான்கள், வருவனகள் - வருவனவற்றை, சிலை - வில்லை, கோல் - அம்பு, மாது - பார்வதி, புரிந்து - விரும்பி, பொருப்பு - மலை.*

***விளக்கவுரை :-** மலைநாடு தினை விளைதற்குரிய இடம். அத்தினைகள் நன்கு முதிர்ந்து கதிர்களைக் கொண்டு திகழும் போது, கிளிகள் அவற்றை உண்ண வரும். அதுபோது அவற்றைக் குறவர் ஓட்டுவர். இதனைக் கந்த புராணத்தில்,*

*பூவைகாள் செங்கண் புறவங்காள் ஆலோலம்*
*தூவிமா மஞ்ஞைகாள் சொற்கிளிகாள் ஆலோலம்*

### கூனல்பிறை அணிந்தான் குன்று

**462.** மத்தக் கரிமுகத்தை வாளரிகள் பீறஒளிர்
முத்தம் பனிநிகர்க்கும் மொய்ம்பிற்றால் – அத்தகைய
ஏனல் புனம்நீடும் ஈங்கோயே தேங்குபுனல்
கூனல் பிறைஅணிந்தான் குன்று. **63**

---

*கூவல்சேர் வுற்ற குயிலினங்காள் ஆலோலம்*
*சேவல்காள் ஆலோலம் என்றாள் திருந்திழையாள்*

*இவ்வாறு கிளி கடியப்பட்டதைக் காணலாம். மலையர் எனப் பொதுப்படக் கூறியதனால் ஆண், பெண் இருபாலரையும் கொள்க. மான்களும் அத்தினையை மேய வரும். அவற்றையும் கடிவர். அவற்றைக் கடிய அம்பைத் தேர்ந்தெடுப்பர். இக்கருத்தே முதல் மூன்றடிகளில் உள்ளது.*

*இங்குள்ள, "மாதைப் புரிந்திடத்துக் கொண்டான்" என்பதன் விளக்கம் 61-வது பாட்டில் எழுதப்பட்டுள்ளது. ஆண்டுக் காண்க.*

*வேடர் மானை எய்தலை அகத்தும், "அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை, விளை அம்பின் வில்லேர்" என நற்றிணையிலும் குறிப்பிடப்படுகிறது. அதனால் தான், "கோல் தெரியும்" என்றனர்.*

*462. குறிப்புரை :- மத்தம் - செருக்கு, வாள் அரிகள் - சிங்கங்கள், பீற - கிழிக்க, மொய்ம்பிற்றால் - வன்மையுடையது, ஏனல் - தினை, புனம் - வயல், புனல் - நீர், கூனல் - வளைந்த.*

***விளக்கவுரை*** *:- யானைகளும் சிங்கங்களும் காட்டகத்துப் போர் புரிதல் இயல்பே. அக்குறிப்பே ஈண்டுச் சிங்கம் யானையின் முகத்தைக் கீறியதாகக் கவி கூறியுள்ளனர்.*

*மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி*
*முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞரேரெனத்*
*தலைக்கோள் வேட்டம் களிறட்டு*

*என்று பொருநர் ஆற்றுப்படையில் வருதல் காண்க.*

*கருமை நிறமுடைமையின் கரி என்ற பெயர் யானைக்கு உளதாயிற்று. வாள் ஈண்டு நகங்களை உணர்த்தும் சொல்லாய் நிற்கிறது. வாள் என்னும் சொல் கூர்மை என்னும் பொருளைத் தரும். ஆகவே, கூர்மையான நகங்களை உணர்த்தியது. வாள்ஒளி என்னும் பொருளையும் தரும் ஆதலின் ஒளியுடைய சிங்கம் எனினும் ஆம். முத்துக்கள் வெண்ணிறமுடையவை. அவை கீழே சிந்திக் கிடப்பது பனித்துளிகள் படர்ந்து இருப்பதுபோலக் காட்சி அளித்தது. ஈங்கோய் மலை சார்ந்த தலம். மலை குறிஞ்சி நிலத்தைச் சார்ந்தது. குறிஞ்சியோ*

**கூற்றம் வீழக் குமைத்தான் குன்று**

**463.** மந்தி இனங்கள் மணிவரையின் உச்சிமேல்
முந்தி இருந்து முறைமுறையே – நந்தி
அளந்தாடி ஆலிக்கும் ஈங்கோயே கூற்றம்
வளைந்தோடச் செற்றான் மலை. **64**

---

*திணைப்புனங்களையுடையது என்பது கவிகளின் கருத்து. ஆகவே, "ஏனல் புனம் நீடும்" என்றனர்.*

*இறைவன் தனது சடையில் புனலைக் கொண்டிருக்கும் காரணத்தை முன்பே உணர்ந்துள்ளோம். புனலுடன் பிறையையும் அணிந்துள்ளவன் என்பார், "புனல் கூனல் பிறை அணிந்தான்" என்றனர். பிறையினை இறைவன் சூடியதற்கும் காரணம் உண்டு. தட்சன் தன் மக்கள் இருபத்தெழுவரையும் சந்திரனுக்கு மண முடித்தான். சந்திரன் அவ்விருபத்தெழுவருள் கார்த்திகை, ரோகிணி ஆகிய இருவரிடமே அன்பும் காதலும் கொண்டனன். அதனால் தட்சன் சினந்து, "நாளுக்கு ஒரு கலையாகக் குறைந்து இறக்க" என்று அவனைச் சபித்தான். அச் சாபத்தால் நாளும் அவன் தேய்ந்து வருதல் கண்டு அஞ்சித் தான் ஒரு கலையாகி நிற்கும் நிலையில் எத்தேவரை அடைந்து சரண்புக்கும் நன்மை ஏற்படாமல், இறைவனைச் சரண்புக, இறைவன் தனது சடையில் அவனைத் தரித்து, நாளும் ஒரு கலையாக வளரும் பேற்றை அருளினன். இதனால் சந்திரசேகரன் என்ற திருப்பெயரையும் இறைவன் பெற்றனன். இதனைக் கந்தபுராணம்,*

*தீர்ந்தன அன்றியே திங்கள் தன்னிடை*
*ஆர்ந்திடு கலையினை அங்கை யில்கொளா*
*வார்ந்திடும் சடைமிசை வயங்கச் சேர்த்தினான்*
*சார்ந்தில தவவழித் தக்கன் சாபமே.*

*எந்தை அவ்வழி மதியினை நோக்கிநீ யாதும்*
*சிந்தை செய்திடேல்! எம்முடிச் சேர்த்திய சிறப்பால்*
*அந்தம் இல்லைஇக் கலைஇவண் இருந்திடும் அதனால்*
*வந்து தோன்றும்நின் கலைஎலாம் நாள்தொறும் மரபால்*

*என்று கூறுவதைக் காணலாம். இக்காரணம் புராண காரணம். தத்துவக் காரணமாவது, இறைவனது முற்றறிவைக் காட்டும் குறிப்பாகும். இவ்வாறு காமிக ஆகமம் கூறுவதை ஆண்டுக் காண்க. இதுதான் உண்மை என்பதைப் பட்டினத்தடிகள், "தூமதி சடைமிசை சூடுதல் தூநெறி, யாம்மதி யாம்என அமைத்த ஆறே" என்று குறிப்பிடுவார் ஆயினர். இறைவன் சடைமுடி எல்லா வற்றிற்கும் இடமாய் அமைந்திருப்பது என அப்பர் பாடியதை ஈண்டு நினைவு கூர்தல் நலமே.*

**கங்கை வைத்தான் கடறு**

**464.** மந்தி மகஇனங்கள் வண்பலவின் ஒண்சுளைக்கண்
முந்திப் பறித்த முறியதனுள் – சிந்திப்போய்த்
தேனாறு பாயும்சீர் ஈங்கோயே செஞ்சடைமேல்
வானாறு வைத்தான் மலை. **65**

---

*கங்கைக்கு வேலை அரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்*
*திங்கட்கு வானம் திருவொற்றி யூரான் திருமுடியே.*

*463. **குறிப்புரை :-** மந்தி - பெண்குரங்கு, வரை - மலை, நந்தி - செருக்கி, தூண்டி; அளைந்து - தழுவி, ஆலிக்கும் - ஆரவாரிக்கும், கூற்றம் - யமன், செற்றான் - அழித்த இறைவன்.*

***விளக்கவுரை :-** குரங்குகள் மலை உச்சிக்குச் சென்றதும் ஒன்றை ஒன்று தழுவி விளையாட விரும்பின. அங்ஙனமே தம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டன என்பார், ''அளைந்து ஆடி ஆலிக்கும்'' என்றனர். ஆணும் பெண்ணுமாகத் தழுவி ஆடுதற்கு எவரும் காணாத மறைவிடம் தேவைப்படுதல் இன்றியமையாதது. ஆகவே, மந்தி இனங்கள் மணி வரையின் உச்சிக்குச் சென்று இருந்தன என்றனர். ஒன்றை ஒன்று தழுவி ஆடுகையில் ஒன்றை ஒன்று முந்தாமல் முறை முறையே நின்று தழுவின என்று அஃறிணை உயிர்களின் ஒழுங்கையும் அறிவித்துள்ளனர். சில குரங்குகள் தழுவி ஆடாது வாளா இருந்திருக்கவும் கூடும். அத்தகைய குரங்குகளையும் சில குரங்குகள் தூண்டி ஆடச் செய்தன என்பதைக் காட்டவே, ''நந்தி'' என்ற சொல்லை அமைத்தனர். நந்தி என்னும் சொல் செருக்குதல் என்ற பொருளையும் தருதலின் செருக்கியும் ஆடின என்றும் அறிவிப்பார் ஆயினர். செருக்குதலும் தூண்டுதலும் கொண்டு ஆடுதலின் மகிழ்வு மிகுதியும் உண்டாயின. அதனால் ஆரவாரமும் உடன் உண்டாயது என்பார், "ஆலிக்கும்" என்றும் குறிப்பிட்டுள்ளனர். இயமனைச் செற்ற குறிப்பு முன்னமே விளக்கப்பட்டது. ஆண்டுக் காண்க.*

*464. **குறிப்புரை :-** மந்தி மகவு - குரங்கின் குட்டிகள், முந்தி - முன், முறி - முறிவுண்ட, வான்ஆறு - ஆகாய கங்கை.*

***விளக்கவுரை :-** குரங்குக் குட்டிகளின் சேட்டைகளைக் கவி குறிப்பிடுகின்றார். பலா குறிஞ்சிநிலக் கருப்பொருள்களில் ஒன்று. அப் பலாப்பழங்கள் நன்கு முதிர்ந்து பழுத்து இருந்தமையினை வண் பலா என்றும், அவற்றின் சுளைகளை ஒண்சுளை என்றும் கூறியுள்ளனர். அச் சுளைகளினின்று தேன் பெருகி ஆறாக ஓடியது என்றது உயர்வுநவிற்சி அணி ஆகும்.*

*இறைவன் தனது சடையில் ஆகாய கங்கையை வைத்தமை முன்பே கூறப்பட்டுள்ளது; ஆண்டுக் காண்க. ஆனால், ஆகாய கங்கை என்று கூறியதற்குக்*

### முப்புரிநூல் அணிந்தான் பொருப்பு

**465.** முள்ஆர்ந்த வெள்இலவம் ஏறி வெறியாது
கள்ஆர்ந்த பூப்படியும் கார்மயில்தான் – ஒள்ளார்
எரிநடுவுள் பெண்கொடியார் ஏய்க்கும் ஈங்கோயே
புரிநெடுநூல் மார்பன் பொருப்பு. **66**

---

*காரணம் உண்டு. ஒருமுறை இறைவி இறைவனது சோமசூரியர்களுக்கு ஒளி தரும் கண்களைத் தனது இரு கரங்களால் மூட, அக் கரத்தின் விரல்களில் வியர்வை தோன்றின. அவற்றை உதறிய போது கங்கைநீராக ஆகாய வழியே வந்து பரந்தமையின் அது ஆகாய கங்கை என்று பெயர் பெற்றது. ஆகவே, "வான்ஆறு" என்றனர்.*

*465. குறிப்புரை :- ஆர்ந்த - நிறைந்த, இலவம் - இலவ மரம், வெறி யாது - மயக்கம் உறாது, ஆர்ந்த - நிறைந்த, கள் - தேன், ஒள் - ஒளி, ஆர் - பொருந்திய, எரி - தீ, ஏய்க்கும் - ஒத்திருக்கும், புரி - முறுக்கு ஏறிய, நூல் - பூணூல், பொருப்பு - மலை.*

***விளக்கவுரை*** *:- கார்காலம் கண்டபோது களித்தாடுதலின் கார்மயில் என்றனர். இலவமரப் பூ செந்நிறத்தது. அதன் மீது மயில் அமர்ந்திருத்தல், தீயின் நடுவே ஒரு பெண்கொடி அமர்ந்திருத்தல் போன்றது என்று அறிவித்திருப்பது அழகுடைத்தது. மயில் பெண்கட்கு உவமை ஆகும் பொருள்களில் ஒன்று ஆதலின், ஈண்டும் மயிலைப் பெண்கொடியார் என்றனர்.*

*இறைவன் முப்புரிநூல் அணிந்த மார்பினன் என்பதைச் சைவ சமய நூல்கள் கூறுவதைப் பரக்கக் காணலாம். "பொடி புல்கு மார்பினில் புரிபுல்கு நூல்" என்று சம்பந்தரும், "பொடி விளங்கு முந்நூல்சேர் மார்பர்" என்று அப்பரும், "முப்புரிநூல் வரைமார்பில் முயங்கக் கொண்டார்" என்று சுந்தரரும் பாடுமாற்றால் தெளியலாம். இதனையே ஈண்டு, "புரிநெடுநூல் மார்பினன்" என்றனர்.*

*இலவம்பூ செந்நிறத்தது ஆதலின் அதனைத் தீ என்றும், அங்குள்ள மயிலைத் தீயில் இருப்பது போலவும், அங்ஙனம் இருத்தல் பெண் ஒருத்தி தீயில் இருப்பது போலவும் ஆசிரியர் குறிப்பிட்டார். இதனையே வேறுபடுத்திச் சங்க நூல்கள் கூறுகின்றன. அதாவது, வேங்கை மரத்தில் மயில் இருத்தல், பெண்கள் பூக்கொய்ய மரத்தில் இருப்பதுபோல என்பர்.*

*அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை*
*மேக்கெழு பெருஞ்சினை இருந்த தோகை*
*பூக்கொய் மகளிரில் தோன்றும் நாடன்*

*என்பது குறுந்தொகை.*

**மன்மதனை மாய்த்தான் மலை**

**466.** **வளர்ந்த இளங்கன்னி மாங்கொம்பின் கொங்கை**
**அளைந்து வடுப்படுப்பான் வேண்டி – இளந்தென்றல்**
**எல்லிப் புகநுழையும் ஈங்கோயே தீங்கரும்பு**
**வில்லிக்குக் கூற்றானான் வெற்பு.** **67**

---

*விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை*
*பூக்கொய் மகளிரிற் தோன்றும்*

*என்பது ஐங்குறுநூறு.*

*466.* ***குறிப்புரை :-*** *கொங்கை - பூந்தாதை, அளைந்து - படிந்து, எல்லி - இரவு, வில்லி - மன்மதன், கூற்றானான் - இயமனான இறைவன், வெற்பு - மலை, வடுப்படுப்பான் வேண்டி - மாவடுவை உண்டாக்க வேண்டி.*

**விளக்கவுரை :-** *மாமரம் பூத்துக் காய்ப்பது வேனில் காலத்தில் என்பதை நாம் அறிவோம். வேனில் காலமே இளந்தென்றலின் ஏற்றம் மிக்க காலம். அத்தென்றல் புகுந்து உலாவும் அழகை ஈண்டு அறிவிக்கின்றார் ஆசிரியர். அப்படி அறிவிக்கும்போது, தென்றல் மாமரத்தின் மகரந்தத்தில் நன்கு படிந்து மாம்பிஞ்சைத் தோற்றுவிக்கின்றது என்கிறார். அத்தென்றல் இரவுப்போதே அன்றிப் பகற்போது புகுந்து உலாவுகிறது என்பார், "எல்லிப் புக நுழையும்" என்றனர். எல்லி என்னும் சொல் இரவு, பகல் இரண்டிற்கும் உரியது.*

*இறைவன் புராரி என்ற பெயர் பெற்றதுபோல் காமாரி என்ற பெயரையும் பெற்றவன். அதாவது, காமனை அழித்தவன் என்பதாகும். இதனால் காமதஹன மூர்த்தி என்ற பெயரும் இறைவனுக்கு உண்டு. இறைவன் யோக மூர்த்தியாய்ச் சனகாதி முனிவர்கள் பொருட்டுச் சிலபொழுது அமர்ந்தான். அதனால் அவ் யோகத்தைக் கலைத்துப் போகத்தையூட்ட தேவர்கள் மன்மதனை ஏவினர். அவன் சென்று கரும்பு வில்லில் அரும்பு அம்பினைத் தொடுத்து எய்தபோது, இறைவர் கண்விழித்து அவனை எரித்துச் சாம்பராக்கினர். இதனைச் சம்பந்த பெருமான்,*

*விண்ணவர்கள் வெற்பரசு பெற்றமகள் மெய்த்தேன்*
*பண்ணமரும் மென்மொழியி னாளைஅணை விப்பான்*
*எண்ணிவழு காமனுடல் வேவஎரி காலும்*
*கண்ணவ னிருப்பது கருப்பறிய லூரே*

*என்றும், சுந்தரர்*

*இழித்துகந்நீர் முன்னைவேடம் இமையவர்க்கு உரைகள்பேணா*
*தொழித்துகந்த முன்கொண்ட உயர்தவத்தை அமரர்வேண்ட*

**துன்பம் தீர்ப்பான் மலை**

**467.** வான மதிதடவல் உற்ற இளமந்தி
கான முதுவேயின் கண்ஏறித் – தானங்
கிருந்துயரக் கைந்நீட்டும் ஈங்கோயே நம்மேல்
வருந்துயரம் தீர்ப்பான் மலை. **68**

---

*அழிக்கவந்த காமவேளை அவனுடைய தாதைகாண*
*விழித்துகந்தீர் வெற்றிஎன்னே வேலைசூழ்வெண் காடனீரே*

*என்றும் பாடியுள்ளனர். இதுவே, "தீங்கரும்பு வில்லிக்குக் கூற்றானான்" என்பதில் அடங்கிய பொருளாகும்.*

*இளந்தென்றல் மெல்லப் புகுதலை இளங்கோ அடிகள் அழகுற,*

*கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்*
*மயன்விதித் தன்ன மணிக்கால் அமளிமிசை*
*நெடுநிலை மாடத்து இடைநிலத்து இருந்துழிக்*
*கருநீர் ஆம்பல் முழுநெறிக் குவளை*
*அரும்புபொதி அவிழ்ந்த சுரும்புமிர் தாமரை*
*வயல்பூ வாசம் அளைஇ அயல்பூ*
*தேக்கு தாழை விரியல் வெண்தோட்டுக்*
*கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்*
*தாதுதேர்ந் துண்டு மாதர்வாள் முகத்துப்*
*புரிகுழல் அளகத்துப் புகலேக் கற்றுத்*
*திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து*
*மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த*
*கோலச் சாளரக் குறுங்கண் நுழைந்து*
*வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்*

*என்று பாடியிருப்பதைப் படித்து இன்புறுதல் வேண்டும்.*

*467. **குறிப்புரை :-** மதி - சந்திரன், மந்தி - பெண்குரங்கு, வேயின் கண் - மூங்கில்மேல்.*

***விளக்கவுரை :-** வானத்தில் உள்ள சந்திரனை மந்தி தடவியது என்று கூறியது, மலையின் உயரத்தின் மிகுதியை உணர்த்துதற்காகும். இவ்வாறு கூறியது உயர்வுநவிற்சி அணி என்க. இவ்வாறு மலையின் உயர்வை உயர்வுநவிற்சியணி தோன்றப் புலவர்கள் பாடுதல் இயல்பு.*

**பொன் தாளான் பொருப்பு**

**468.** வேய்வனத்துள் யானை தினைகவர வேறிருந்து
காய்வனத்தே வேடன் கணைவிசைப்ப – வேயணைத்து
மாப்பிடிமுன் ஓட்டும் ஈங்கோயே மறைபரவும்
பூப்பிடிபொன் தாளான் பொருப்பு. **69**

---

*வாடப் பசித்த வரிஉழுவை வாலாட்டி*
*மேடத்தைப் பார்த்துருமும் வேங்கடமே*

*என்று திருவேங்கடமாலை ஆசிரியர் கூறுதலைக் காண்க. "தான் அங்கு இருந்து" எனப் பிரிக்க. வேயின்கண் : கண் ஏழன் உருபு. இளங்கன்று பயம் அறியாது என்பதால், இளமந்தியும் பயன் அறியாது, மூங்கிலின் உச்சியை அடைந்தது. மூங்கில் ஒடியாது இருக்க முதுமூங்கில்மேல் ஏறியதும் மந்தியின் பண்பைப் காட்டுகிறது. வருகின்ற துயரத்தைத் தீர்ப்பவன் ஆதலின் அதற்கேற்ப எதிர்காலத்தில் தீர்ப்பான் என்றனர். எதிர்காலத்தே கூறினாலும், வந்த வினையைத் தீர்த்தவன் என்றும், வருகின்ற வினையைத் தீர்க்கின்றவன் என்றும் கொள்க.*

*குரங்குகள் மூங்கில் ஏறி உயரப் போதலைக் குறுந்தொகை,*

*பலவின் சேர்ந்த பழமார் இனக்கலை*
*சிலைவில் கானவன் செந்தொடை வெரீஇச் -*
*செருவுறு குதிரையில் பொங்கிச் சாரல்*
*இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்*

*என்று குறிப்பிடுகிறது.*

*குரங்குக் குட்டிகள் மதியைத் தடவுவதைப்போல புடைத்தலை ஐங்குறுநூறு,*

*கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு*
*இருவெதிர் ஈர்ங்கழை ஏறிச் சிறுகோல்*
*மதி புடைப்பது*

*என்று பாடிக் காட்டுகிறது. குரங்குக் குட்டிகள் மூங்கிலில் பாய்ந்து ஏறுதலையும் ஐங்குறுநூறு,*

*சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்*
*குரங்கின் வன்பறழ் பாய்ந்து*

*என்று கூறுகிறது.*

### திங்கட் சடையான் வெற்பு

**469.** வழகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்தீ
முழுகியதென் றஞ்சிமுது மந்தி – பழகி
எழுந்தெழுந்து கைநெரிக்கும் ஈங்கோயே திங்கள்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று. **70**

---

*468. **குறிப்புரை :-** வேய் - மூங்கில், கணை - அம்பு. விசைப்ப - வேகமாகச் செலுத்த, மறை - வேதம், பரவும் - துதிக்கும், பொன் - மகரந்தப்பொடி, பொருப்பு - மலை.*

***விளக்கவுரை :-*** *யானைகள் தினைகளைக் கவர வருதல் உண்டு. அதுபோது பரண்மீது தினைப்புனம் காப்பவர் அவற்றை நெருங்க ஒட்டாமல் ஓட்டுவர். இவ்வாறு கவர வந்த யானை கவராது உறக்கங்கொண்டதை அகநானூறு அழகுபட,*

*ஒலியல் வார்மயில் உளரினள் கொடிச்சி*
*பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்*
*குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது*
*படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென*
*மறம்புகல் மழகளிறு உறங்கும்*

*என்று உரைக்கின்றது. யானை தினையை உண்ணும் வாய்ப்பினைப் பெறாததனால், உண்ணுதற்கு மூங்கிலை ஒடித்துக் கொண்டு சென்றது என்பது, "வேய் அணைத்து" என்பதால் தெரிகிறது. வேடன் அம்பு எய்து தன்னைக் கொன்றுவிடுவானோ என்று அஞ்சி, முன்னே தன் பிடியை ஓட்டித் தான் பின்னே வந்தது என்பார், "மாப்பிடி முன்ஓட்டும்" என்றார். யானை பிடியைக் காத்து ஓடுதலை,*

*யானை, குறும்பொறை மருங்கின் அமர்துணை தழீஇக்*
*கொடுவரி இரும்புலி காக்கும்*

*என்று குறுந்தொகையிலும்,*

*ஈன்றணி இரும்பிடி தழீஇக் களிறுதன்*
*தூங்குநடைக் குழவி துயில்புறம் காப்பஎன்று*
*களிறதர்ப் படுத்த கல்லுயர் கவாஅன்*

*என்று அகத்தும் வருதல் காண்க. ஈண்டு வேடரது கணையின் விசைக்கு யானை பிடியைக் காத்துச் சென்றது என்றாலும், சங்க நூல்களின் வாயிலாக,* ***யானை எந்தச் சமயத்தும் தம் பிடியைக் காக்கும் என்பதை அறிதல் வேண்டும்.***

வேதங்கள் இறைவனைப் பலபடியாகப் போற்றும். "வேதங்கள் ஐயா என" என்பர் மணிமொழியார். "ஆர்அறிவார் என அனந்த மறை ஓலமிடும்" என்பர் தாயுமானார். "இருக்காதி சதுர்மறையும் இசைப்பதுநின் பலபேதம்" என்பர் சைவ எல்லப்ப நாவலர். இறைவனைப் பாதத்தில் மலர் இட்டுப் பரவுதலின், அம்மலர்கள் அப் பாதங்களைப் பிடித்துள்ளமையின், "பூப்பிடி" என்றார். "இட்டுக் கொள்வன பூவுள நீருள" என்றார் அப்பரும். "ஆராலும் அளவிடுதற் கரியஉனை ஒருகரத்து நீராலும் மலராலும் நெஞ்சுருகப் பணலாமே" என்றார் சைவ எல்லப்ப நாவலர். இறைவன் அழகிய தாளுடையவன் என்பார், "பொன் தாளான்" என்றனர். அழகு எழுதலாக அருட்சேவடி என்பர் அப்பர்.

**469. குறிப்புரை :-** வழகு - மென்மை, அழகு; மந்தி - பெண்குரங்கு, நெரிக்கும் - பிசையும், திங்கட் கொழுந்து - பிறைச் சந்திரன்.

**விளக்கவுரை :-** காந்தள் மலர் செந்நிறமுடையது. ஆகவே, அதன்மீது வண்டு மொய்த்தலை, நெருப்பின்மீது வண்டு மூழ்கியதாகக் குரங்கு கருதிவிட்டது. காந்தட்பூ நெருப்புக்கு உவமையாக வருவதை இலக்கியங்களில் காணலாம். "சுடர்ப் பூங் காந்தள்" என்பது திருமுருகாற்றுப்படை. "தீயின் அன்னவொண் செங்காந்தள்" என்பது மலைபடுகடாம். "தண்காந்தள் பூத்தழல்போல் விரியும்" என்பது பாண்டிக்கோவை. ஆகவே, ஈண்டுக் காந்தள் தீயாகக் கூறப்பட்டது. காந்தள் மலரில் கருவண்டு இருப்பதைத் தீயில் வண்டு மூழ்கியதாகக் கூறப்பட்டது குறித்தும் நம் நூல்கள் குறிப்பிடாமல் இல்லை. யாப்பருங்கல விருத்தியின் மேற்கோள் பாடல் ஒன்று இதே கருத்தில், அழகுற, "குழல் இசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தள் குலைமேல் பாய, அழல்எரியின் மூழ்கினவால்" என்று காட்டப்பட்டுள்ளது.

காந்தளைத் தீயாகக் குரங்கு கருதியது மயக்க அணியின் பாற்படும். ஆபத்துக் காலத்தில் ஒன்றும் செய்ய இயலாது கை நெரித்தல் இயற்கை. முதுமந்தி ஆதலின், இரக்கங் கொண்டது போலும்! 66-வது செய்யுளில் மயில் கள்ளார்ந்த பூப்படிந்து எரி நடுவண் பட்ட பெண்கொடிபோல் விளங்கியதாகக் கூறியுள்ளார். எழுந்தெழுந்து நெரித்தல் குரங்கின் குறும்பைக் காட்டுகிறது. இறைவன் சடையில் சூடியுள்ளது பிறைச்சந்திரனே ஆதலின், ''திங்கட் கொழுந்து எழுந்த'' எனப்பட்டது. "முதிரும் சடை இளவெண் பிறை முடிமேல் கொள" என்றார் சம்பந்தரும். இறைவன் செஞ்சடை எவ்வெவற்றிற்கு எவ்வெவ்வாறாக உள்ளது என்பதை அழகுற அப்பர் பெருமானார்,

> அங்கண் கடுக்கைக்கு முல்லைப் புறவம் முறுவல்செய்யும்
> பைங்கண் தலைக்குச் சுடலைக் களரி பருமணிசேர்

என்றனர்.

## ஈங்கோய் மலையின் இயற்கை எழில்கள்

*மான்கள் தம் குட்டிகளுடன் திரிகையில் சிற்சில சமயங்களில், அக்குட்டிகள் தம் பெற்றோரைப் பிரிந்து தனியே இருக்கையில் குறமகளிர், சந்தன இலையினைத் தேனில் தோய்த்து அக்குட்டிகட்குக் கொடுப்பர். குறச் சிறுமியர் அம் மான்குட்டிகளுடன் என்றும் விளையாட்டினை ஆட விரும்புவர். அங்ஙனம் ஆடுதற்குப் பவழக்காய் தேவை ஆனதால், அதனைத் தருமாறு தம் தாய்மாரைக் கேட்பர். அந்நிலையில் அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றத் தாய்மார்கள் மரக்கொம்பு கொண்டு நிலத்தைக் கிளறுவர். அங்ஙனம் கிளறுதலின் நோக்கம் பவழத்தை எடுத்தற்காகும். (பவழம் கடல்படு பொருளே ஆயினும், திணைமயக்கம் கருதி மலைபடு பொருளாக ஈண்டு ஆசிரியர் அமைத்தனர்).*

*சிங்கம் யானையைக் கண்டதும் அதன்மீது பாய ஓடும். அந்த நிலையில் ஆண்யானை தன்னை மட்டும் சிங்கத்தினின்று காத்துக் கொள்ளாமல் தன் மனைவியான பெண்யானையையும் காத்து, தனக்குச் சிங்கத்தினிடம் உள்ள கோபத்தைக் காட்டும் வகையில் தன் துதிக்கையை மேலே தூக்கிப் பிளிறும்.*

*சிங்கம், புலி, ஆளி பல மலர்களைக் கொண்டு மலைமீது ஏறிச் சொரியும். அது கண்டு இறைவர் மகிழ்வர். வேடர்கள், ஆளி, சிங்கம் ஒன்றன்பின் ஒன்று ஓடுவதைக் கண்டு, அவற்றை எய்ய அம்புகளைக் கொண்டு தொடர்வர்; வில்லால் தாக்குவர்.*

*யானைகள் தினைகளைக் கவர வரும்; அவற்றை விலக்க வேடர்கள் கவண் கல்லை ஊன்றி எறிவர். அக்கல், மூங்கில்களின்மீது பட்டதும் அம்மூங்கில்கள் முத்துக்களை உதிர்க்கும்.*

*தாய்க் குறத்தியர் தம் மகள் குழந்தையைப் பெற்றெடுக்கும்போது அசலைக் கிழங்கை வேகவைத்து உண்ணுமாறு வேண்டுவர்.*

*குரங்குகள் தாம் பெற்ற குட்டிகளுக்கு மலைத் தேனில் தம் விரலையிட்டுத் தோய்த்து ஊட்டும்.*

*ஆண் வண்டுகள் தமது பெண் வண்டுகள் தமக்குத் தேனைத் தராமல் தாம் மட்டும் உண்டு இருந்தபோது, அவற்றினிடம் ஊடல் கொண்டு, சோலைகளில் சென்று யாழ்போல ஒலி செய்ய, அதனைக் கேட்ட மயில்கள் ஆடிக் கொண்டிருக்கும்.*

*பெண்யானை ஆண்யானையுடன் பிணக்கம் கொண்டு உறங்கும். அதுபோது ஆண்யானை வாழைக்கனிகளைத் தேடிக் கொண்டுவந்து பெண் யானைக்குக் கொடுத்து ஊடல் தீர்ந்து கூடிக் கொண்டாடும்.*

*வேடர்கள் மானைக் கொல்லத் தம் கையில் உள்ள அம்பை எடுப்பர். அந்நிலையில் மானின் பார்வையை உற்றுக் கவனித்து, அது தன் மனைவியரின்*

*பார்வைபோல் இருத்தலை உணர்ந்து, எடுத்த அம்பைத் தூணியில் இட்டு, மானைப் பார்த்து, 'மெல்ல போ' என்று கைகாட்டிப் பாவனை செய்வர்.*

*யானையின் கூட்டத்தைக் கண்டு இளம்பெண் அஞ்சுவள். அதனைக் கண்ட வேடன், அப்பெண்ணை அழைத்துச் சென்று யானைக் கூட்டத்தைச் சிதறடிப்பான்.*

*பன்றிகள் தம் கொம்பால் பூமியைக் கிளறும். அந்த இடங்களில் செம்மணிகள் காணப்படும். அவற்றை வேடர்களின் சிறுவர் நெருப்பு என்று எண்ணி மலைச்சோளத்தை அதில் காட்டிச் சுடுவர். இவ்வாறே பன்றிகள் கிளறிய நிலத்தில் பவழங்கள் காடு முழுமையும் ஒளிபரப்ப, அதனை உண்மையான நெருப்பென்றே எண்ணிய யானைக் கூட்டம் ஓட்டம் எடுக்கும். அவ்வாறு ஓடுதலைக் கண்டு நகைப்பனபோல முல்லை மலர்கள் மலர்ந்திருக்கும்.*

*வேடர்கள் ஓர் அம்பால் பன்றியை எய்து கொன்று, இரண்டு அம்புகளை யானைமேல் எறிய, அதனைக் கண்ட ஆளரி ஓடும்; சிங்கம் அஞ்சும்.*

*இலவ மரம் உயர்ந்து பரந்து வளர்ந்திருக்கும். அதில் இலவம் பழம் பழுத்துத் தொங்கிக் கொண்டிருக்கும். அங்ஙனம் தொங்குவதைக் கண்ட குரங்கு, கொள்ளிக்கட்டைதான் இங்ஙனம் தொங்குகின்றதோ என்று மயங்கி, மூங்கில் தழைகளை ஒடித்து, நெருப்பை அணைப்பதுபோல் ஓச்சும்.*

*சிங்கம் ஆகாயத்தில் ஓடும் மேகத்தைத் தன் நகத்தால் கீறும். அப்போது மழை மலைமீது பொழிய, அது அருவியாக வருகையில் அந்நீரைப் பருகும்.*

*குரங்குகள் கண்ட கண்ட கனிகளை உண்டு சுனைநீரைப் பருகும். பருகியும், நீர்வேட்கை தீராமையால் - வயிறு குளிராமையால் - மேகத்தைக் கீறி வாய்வைத்து மழைநீரைப் பருகும்.*

*பெண்கள் கல்உரலில் தினையையிட்டு யானைத் தந்தத்தால் மாவாக இடிப்பர். குறவர் கொணர்ந்த தேனுடன் கலந்து உண்பர்.*

*இளைஞர் பருத்த பலாப் பழத்தைத் தம் மார்பகத்தில் பொருந்தக் கொணர்வர். இவர்களின் வரவைத் தாய்மார் எதிர்நோக்கி இருப்பர்.*

*யானைகள் உறங்கும். வண்டுகள் ஒலிக்கும். மலைப்பெண்கள் பாடுவர். கிளிகள் கீதத்தைக் கேட்டுத் தாமும் பாடும். பெண்யானைக்கு ஆண்யானை சந்தனத் தழைகளை ஒடித்துப் போடும்.*

*இரவில் பாம்புகள் இரைதேடப் புறப்படும். அதுபோது பன்றிகள் நிலத்தைக் கிளறியதால் வெளிப்பட்ட செம்மணிகள் அப்பன்றியின் கொம்பினிடை விளக்கொளிபோல ஒளிவிட்டுக் கொண்டிருக்கும். அவற்றைக் கண்ட பாம்புகள் இடிபோலும் என்று அஞ்சி இரை தேடுவதையும் விட்டுவிட்டுப் புற்றை அடையும்.*

*ஆண்யானையும் பெண்யானையும் இன்பப் புணர்ச்சி கொள்ளும். அதனால் அவற்றிற்குக் களைப்புத் தோன்றும். இந்நிலையில் காற்றும் வீசாது. அதுபோது ஆண்யானை இலைகொண்டு வீசிக் காற்றை எழுப்பும். பெண்யானை அக்காற்றைத் துய்த்து மகிழும்.*

*மரம் ஏறுதல் முதலானவற்றைக் கற்காத சிறு குரங்கு பளிங்கின்மீது தான் பறித்த பழத்தின் நிழலைக் காட்டக் கண்ட மற்றைய குரங்குகள், பளிங்கினுள் பழம் இருப்பதாக நினைத்துத் தம் கைந்நகத்தால் அப் பளிங்கைக் கீறும்.*

*காட்டில் விலங்குகள் பூமியைக் கிளறியதால், நிலத்தில் மறைந்து கிடந்த ஒளிமணிகள் வெளியில் கிடக்கும். அவற்றின் அருகே பன்றியின் தந்தங்கள் கிடக்கும். அத்தோற்றம், ஆகாயத்தில் பிறைச்சந்திரன் விளங்குதல்போல் காணப்படும்.*

*காந்தள் மலர்கள் மலர்ந்து மாதர்களின் கைத்தலம்போல விளங்கும். அதுபோது மயில்கள், இது கார்காலம் அன்றோ என்று எண்ணித் தோகை விரித்து ஆடும். இங்ஙனம் மயில் ஆடுதலைக் கண்ட கொன்றை, பரிசு தருதல்போல தனது மலர்களைச் சொரிந்து நிற்கும்.*

*குறமகளிர் தினையை இடிப்பர். இடித்த தினையுடன் தேனைக் கலக்கத் தாமரையினை நாடிச் சென்று தேனைப் பெற்றுக் கலந்து சிறு குறப்பிள்ளைகள் கையில் கொடுப்பர்; அவர்கள் உண்பதைக் கண்டு களிப்பர்.*

*கிழக் குரங்கு கையில் கழிகொண்டு தேன்கூட்டைப் புடைக்க அதிலிருந்து தேன் ஒழுகும். அத்தேனை இளைய குரங்குகள் வாழை இலையில் ஏற்றுப் பருகி மகிழும்.*

*யானைகள் வேங்கை மரத்தின் கிளைகளை முறித்துக்கொண்டு மலைச்சுனையில் நீராடிவிட்டு மலைமேல் ஏறிச் செல்லும். குறப்பெண்கள் பெண்யானைகள் மீது கொண்ட அன்பால், அவைகள் உண்ண மலர்களைக் கிளையுடன் விடுவர்.*

*வேடர்கள் யானைகளைப் பிடிக்கப் பள்ளம் தோண்டுவர். அதனைக் கண்ட யானை தினைக்கொல்லையை அடைய அஞ்சி ஓடும்.*

*குறமகளிர் வேங்கைமரத்தின் நிழலில் விளையாடிக் கொண்டிருப்பர். அதுபோது வேங்கைப்புலி வருவதைக் கண்டு அஞ்சி ஓடுவர்.*

*ஆண்யானை சந்தனத் தழையைத் தேனில் தோய்த்துப் பெண்யானையின் வாயில் கொடுக்கும். அப்பெண்யானை உண்ணுதலைக் கண்ட ஆண்யானை மகிழ்வு கொள்ளும்.*

*சந்தன இலையில் தினைமாவுடன் தேனையும் கலந்து குறமகளிர் குரங்குக்கும், தம் இளமகளிர்க்கும் கொடுத்து உண்பர்.*

*மலைச் சாரலில் வாழும் குறத்தியர்கள் யானைத் தந்தத்தால் தினைமா இடித்துத் தேனைக் கலந்து  தமது வீரமிக்க உறவுமுறையினருடன் உண்பர்.*

*சாரல் அடர்ந்திருக்கும். மரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கும். மூங்கில்கள் முத்தை உதிர்க்கும். மூங்கிலில் தீப்பிடித்து எரியும்.*

*யானை சிங்கத்தின் கோபத்திற்கு அஞ்சித் தன் பிடியைத் தாக்கும். பின் தான் செய்த அறிவற்ற செயலுக்குத் தானே வருந்தும்.*

*வண்டுகள் தாமரையின் மகரந்தப் பொடிகளைத் தம் உடம்பில் பூசப்பெற்று மணத்துடன் விளங்கும்.*

*குறத்தியர் தினைமாவுடன் தேன் கலந்து தேக்கு இலையில் இட்டு, வந்த விருந்தினருக்கு ஊட்டுவர். குறத்தியர் குளத்தில் குளிப்பர். பின் தம் இல்லம் புகுந்து தேனைப் பருகுவர். அதன் பின் குரவைக் கூத்தில் ஈடுபடுவர். மகிழ்வுடன் விளங்குவர்.*

*தாமரைகள் மான்களின் காலை அவை ஓட்டம் எடா வண்ணம் தடுக்கும். என்றாலும், மான்கள் தாமரைத் தாள்களை மிதித்து ஓடும். இந்நிலையில் புலிகளும் பாய்ந்து அம் மான்களை ஓடுமாறு செய்யும்.*

*சுனையில் தாமரை மலர்ந்திருக்கும். அத் தாமரையின் மடலில் கரிய ஆமைகள் ஏறிப் படுத்து உறங்கும்.*

*குரங்குகள் பலாச்சுளைகளைக் கொண்டுவந்து தம் மக்கள் கையில் கொடுத்து ஊட்டும்.*

*அருவிகள் மேல்நின்று கீழே விழும்.*

*மயில் கூட்டங்கள் மலைமீது மகிழ்வுகொண்டு ஆடும். பாம்புகள் மயிலைக் கண்டு வளையில் புகுந்து ஒளிந்துகொள்ளும்.*

*பன்றிகள் தேனை மிகுதியும் குடித்து, இரவில் திரியும். இப்படித் திரியும் பன்றியைப் பிடிக்க வலைவீசி இருப்பர்.*

*யானை மலையின் குகையில் ஒரு பாம்பு யானையை விழுங்குதல் கண்டு பயந்து தன் கையால் மேக நீரை உறிஞ்சும். பாம்பு யானையை அழிக்கும்.*

*புலி மானைக் கொன்று அதன் உடலைத் தழுவி நிற்கும்.*

*மேகம் நீரைச் சொரியும்.*

*கரடி பாம்புப் புற்றைப் பெயர்த்துப் பெயர்த்துப் பெண் கரடிக்குக் கொடுக்க, அதனை ஏற்றுப் பெண்கரடி நிற்கும்.*

*பன்றி தன் தந்தத்தால் நிலத்தைக் கிளற, மணிகள் வெளிப்படும். அவை செந்நிறமாக ஒளி விட்டமையின், தீ என்று எண்ணிய யானை அஞ்சிக் காட்டில் ஓடும்.*

*ஆண்யானை பாறையில் தன் நிழலையே தான் கண்டு, அது வேறு ஒரு யானை என்று நினைத்து, அந்நிழலுடன் பொருது தன் தந்தங்களை ஒடித்துக் கொள்ளும். அதன்பின்னும் அது தன் நிழல் என்று உணராமல் தன் பெண்யானை என்று எண்ணிக் கொள்ளும். யானை தனது பெண் யானை தன்னை விட்டுப் பிரிந்து சென்றதால் அதனைத் தேட நான்கு திசையும் ஓடும். அகப்படாமையால் மேகத்தைப் பார்த்து, அதுதான் பெண்யானை எனக் கொண்டு தன் கையை உயர்த்திக் காட்டி அழைக்கும்.*

*யானை தன்னை எதிர்த்த விலங்குடன் போரிட்டதால் தந்தம் முறிந்து? அதிலிருந்து முத்துக்கள் சிதறும். அம் முத்து வெண்ணிறம் ஆதலின் அதனை நீர் என்று பிறழ எண்ணிய குரங்கு முக்கி விக்கி நக்கும். யானையின் தந்தங்களிலிருந்து உதிர்ந்த முத்தைக் குறவர் சிறுவர் கைக்கொள்வர்.*

*குறவன் மலையில் திரிந்து பெண்மானைப் பிடித்துக்கொண்டு வீட்டிற்கு வருவான். அதுபோது குறத்தி குறவனைப் பார்த்து, "ஐயோ! ஆண்மானைப் பிரிந்து இப் பெண்மானை ஏன் கொணர்ந்தனை?" என்று கோபித்துக் கொள்வள்.*

*மலைப் பெண்கள் மான்தோல், மயில் இறகு அணிந்திருப்பர். பரண்மீது அமர்ந்து, தேன் உண்டு ஆடிப்பாடி மகிழ்வர். கிளிகள் தினையை உண்ண வரும். அவற்றை ஓட்டியபின், மான்கள் வரும். அவற்றையும் ஓட்ட வேடர்கள் அம்பினை ஆராய்வர். சிங்கங்கள் யானையின் முகத்தைக் கிழிக்கும். அதுபோது மத்தகத்திலிருந்து முத்துச் சொரியும். அவை பனி போல் காட்சி அளிக்கும். தினைப்புனம் மிக்கு இருக்கும். குரங்குக் கூட்டங்கள் மலை உச்சியை அடையும். அங்கிருந்து ஆடிக்கொண்டு ஆரவாரம் செய்யும். குரங்கின் குட்டிகள் பலாவின் சுளைகளைப் பறிக்கும். அதிலிருந்து தேன் ஒழுகும். அது தேனாறுபோலக் காட்சி அளிக்கும். மயில் இலவ மரத்தின் பழங்களின் நடுவில் அமர்ந்திருக்கும். அக் காட்சி, தீ நடுவே பெண் ஒருத்தி இருப்பதுபோல் காணப்படும்.*

*குரங்கு ஆகாயத்தில் உள்ள சந்திரனைத் தடவ மூங்கில் மீது ஏறிக் கையை நீட்டும். மூங்கில் காட்டில் யானை தினை கவரும். அதனை ஓட்ட வேடன் அம்பை விசையாக எறிய யானைகள் ஓடும். காந்தள் மலர்மீது கருவண்டுகள் படிந்திருக்கும். அக்காட்சி, வண்டுகள் தீயில் மூழ்கியதுபோல இருந்தமையின் குரங்கு, 'ஐயோ! வண்டு தீயில் மூழ்கியதே' என்று எழுந்து எழுந்து கைநெரித்துக் குதிக்கும்.*

# பலவகைக் குறிப்புகள்

## *இறைவனைப் பற்றிய குறிப்புக்கள்*

*ஓங்காரமாய் நின்றவன் 1. திருமால், பிரமன் இருவரால் அறியப்படாதவன் 1. மேருவை வளைத்து வில்லாகக் கொண்டவன் 2. நம் நோயைத் தீர்ப்பவன் 3, 9, 34, 46. விடம் பொருந்திய கழுத்தவன் 4, 20, 23, 32, 38. இயமனை அழித்தவன் 5, 47, 64. நம் வினைகளைத் தீர்ப்பவன் 6, 13, 14, 15, 37, 50, 68. மூங்கிலில் ஒளிந்திருப்பவன் 7. மீன் போன்ற சடையன் 8. முருகனது தந்தை 10, 40. பாம்பை அணிந்தவன் 11, 29. மூன்று கோட்டைகளை அழித்தவன் 12, 28, 33, 56, 59. திருமாலாம் நரசிங்கத்தால் காணப்படாதவன் 16, 18. சங்குகளால் ஆன குண்டலம் அணிந்தவன் 17. நான்கு வேதங்களின் முடிவு கண்டவன் 19. குரவு அரும்பு அணிந்த சடையான் 21. கல்லால மரத்தின்கீழ் சனகாதி முனிவர்க்கு வேதம் நான்கை அறிவித்தவன் 22. மன்மதனைக் கோபித்து எரித்தவன் 24, 67. வெண்ணீற்றை அணிந்தவன் 25. கையில் மானைத் தரித்தவன் 26, 60. மனக்கவலை தீர்ப்பவன் 27. வேதம் விளம்பியவன் 30. சடையில் கொன்றையணிந்தவன் 31, 41. அன்பர் வேண்டும் வரம் தருபவன் 35. வண்டுமொய்க்கும் மாலை அணிந்த சடையன் 36. மலைமகள் பாகன் 36, 62. தீப்போலும் நிறத்தவன் 42. சந்திரனைச் சடையில் தரித்தவன் 43, 63, 70. பெரிய கலைகளைப் படைத்தவன் 44. குரவை ஆடியவன் 45. தேவர்கள் தன் சீரைப் பாராட்ட இருந்தவன் 48. சடையில் கங்கையாற்றைத் தரித்தவன் 45, 51, 54. பூணலை மார்பில் கொண்டவன் 66. பொன்தாள் உடையவன் 69. கையில் மழுவாம் தீயை ஏந்தியவன் 52. இடபத்தை ஊர்பவன் 53. தேவர்களால் நெருங்குதற்கு அரியவன் 55. தேவர்கட்குக் குருவாய் நின்றவன் 59.*

### *புராணக் கதைகள்*

*மாலும், பிரமனும் அடிமுடி தேடியது 1. மேருவை வில்லாக வளைத்தது 2. விடத்தைச் சிவபெருமான் உண்டது 4, 20, 23, 32, 38. இயமனை அழித்தது 5, 47, 64. முப்புரங்களை அழித்தது 12, 28, 33. திருமாலால் காணப்படாதது 16 18. மன்மதனை அழித்தது 24, 67. மலைமகளை இடப்பாகம் கொண்டது 39, 62. சந்திரனைச் சடையில் சூடியது 43, 63, 70. சடையில் கங்கை தரித்தது 65.*

## *முருகப் பெருமானைப் பற்றிய குறிப்பு*

*அழகிய மயில் ஊர்தியுடையவன் 10. இன்பக் குமரன் 40. சிவபெருமானுக்கு திருமகன் 10, 40.*

## *உமாதேவியாரைப் பற்றிய குறிப்பு*

*மலையரசன் மகள் 39. இறைவன் இடப்பாகம் இடங் கொண்டவள் 39, 62.*

### திருமாலைப் பற்றிய குறிப்பு

*இறைவனது அடியைக் காணாதவன் 1, 16, 18. கோளரியாய் அமைந்தவன் 16, 18.*

### அயனைப் பற்றிய குறிப்பு

*இறைவனது முடியைக் காணாதவன் 1.*

### இயமனைப் பற்றிய குறிப்பு

*இறைவனால் அழிக்கப்பட்டவன் 5, 47.*

### மன்மதனைப் பற்றிய குறிப்பு

*காமன் கடவுளின் நெற்றிக் கண்ணால் அழிக்கப்பட்டான் 24, 67. கரும்பு வில்லையுடையவன் 63.*

### விலங்குகள்

*மான்கள் 3, 12. சிங்கம் 4, 5, 6, 16, 18, 42. புலி 5, 46. யானை 4, 7, 11, 13, 15, 16, 20, 22, 25, 26, 34, 35. குரங்குகள் 9, 17, 19, 29, 33, 70. பன்றி 14, 15, 16, 24, 30, 48, 65, 69.*

### பறவைகள்

*அறுபதங்கள் 10. மயில்கள் 10, 30, 66. கிளிகள் 22, 50.*

*பாம்பு 24. வண்டுகள் 70, 43. ஆளி 6. ஆமை 46.*

### மக்களைப் பற்றிய குறிப்பு

*குறத்தி 3, 8, 12, 40, 44. குறவர் 6, 7, 20. வேடன் 13. கானவர் தம் மக்கள் 14. நல்லார் 20. குறமகளிர் 2, 35, 37, 39, 45.*

### மாஞ்செடி கொடிகள் முதலியன

*சந்தனம் 2, 23, 38, 39. பவழம் 3. தினை 7, 20, 32, 44. மூங்கில் 7, 17, 41, 69. மிளகு 8. அசலை 8. வாழை 11, 33. மலைச்சோளம் 14. முல்லை 15, 28. இலவம் 17, 66. பலா 21, 65. குரவு 21. கொன்றை 28, 31. காந்தள் 31, 70. தாமரை 32, 43, 46, 47. வேங்கை 34, 37. கொவ்வைக் கனி 35. கோங்கு 37. தேக்கு 44. மா 67.*

### முத்தும் பவழமும்

*பவழம் 3, 15. முத்து 7, 41, 63.*

### மான்களின் செயல்

*மான் தன் இனம் விட்டுப் பிரிந்து திரியும் 2. தாமரையுள் பாய்ந்து உகளும் 46. தினையைத் தின்ன கலைமான்கள் வரும் 62.*

***குறத்தியர் செயல்***

*குறமகளிர் தன் ஆயம் பிரிந்த மான்குட்டிக்குச் சந்தனத் தழையினைத் தேனில் தோய்த்துத் தருவர் 2. குறப் பெண்கள் அம்மனை ஆடப் பவழத்தைத் தன் தாய்மாரைத் தருமாறு கேட்பர். அதுபோது அத்தாயர் கோல்கொண்டு பவழம் தேட நிலத்தைக் கிளறுவர் 3. முதுகுறத்தி தன் பெண் கரு உயிர்த்தபோது அசலைக் கிழங்கை வேகவைத்துத் தருவள் 8. மான்போன்ற கண்களையுடையவர் 12. யானையின் கொம்புகொண்டு கல் உரலில் தினை இடிப்பர் 22. சுடர்க்குழை அணிந்தவர்; பாட்டுப் பாடுபவர் 22. கஞ்சுகங்களைத் தேடுவர் 32. கொவ்வைக்கனி போன்ற வாயுடையவர் 35. பெண்யானைக்குக் கிளைகளில் உள்ள பூவை உண்ண வளைப்பர் 35. கொங்குபோன்ற கொங்கையுடையவர் 37. வேங்கை மர நிழலில் ஆடுவர் 37. சந்தனத் தழையில் தினைமாவுடன் தேன் கலந்து இனிது உண்பர் 39. தினையை யானை மருப்பால் இடித்துத் தேன் கலந்து தமருடன் உண்பர் 40. தினைமாவில் தேன் கலந்து வந்த விருந்தினரை ஊட்டுவர் 44. பருத்த கொங்கையர்; தேன் பருகிக் குரவை ஆடுவர் 45. மாமரத்தின் மகரந்தத்தை மார்பில் பூசிக்கொள்வர் 67. குறவர்தம் சிறுவர் முத்துக்களைக் கைக்கொண்டு செல்வர் 59. குறவன் பெண் மானைக் கொண்டுவர, குறத்தி ஏன் கலைமானைப் பிரித்து இப் பெண் மானைக் கொணர்ந்துளாய் என்று சீறிச் சினப்பள் 60. மான் தோல், மயில் இறகு இவற்றால் அமைந்த பரண்மீது குறப்பெண்கள் இருந்து தேன் பருகிப் பாடிக் கொண்டிருப்பர் 61. குறவர் தினை காக்கையில் கிளிகளை ஓட்டியபின் மான்கள் வர அவற்றையும் ஓட்ட அம்புகளைத் தேர்ந்தெடுப்பர் 62.*

***குறவர் செயல்கள்***

*சிங்கங்கள், ஆளிகள் மலையில் தொடர்ந்து போதலைக் கண்ட குறவர்கள் அவற்றை அம்பு எய்து கொல்ல அம்பு கைக்கொண்டு அவற்றின் பின் செல்வர் 6. யானை தினைப்புனம் மேய வருதலைக் கண்டு கவண்கல் கொண்டு அதன்பின் விசையுடன் எறிவர். அக்கல் மூங்கில்களில் பட்டு முத்துக்கள் சிதறும் 7. மானைக் கண்டதும் இவர்கள் அதனை அம்பு எய்து கொல்லத் துணிந்து பின் அதன் கண், தனது மனைவியின் கண் போன்று இருந்தது கண்டு எடுத்த அம்பை தூணியில் இட்டு அம்மானை மெல்லச் செல்ல என்று விடுப்பர் 12. யானையைக் கண்டு அஞ்சிய இளைய பெண்ணைக் கண்டு வயது முதிர்ந்தவர்கள் அவளை உடன் அழைத்துச் சென்று அவளது அச்சத்தைப் போக்குவர் 13. ஒரு கணையால் பன்றியைக் கொன்றும், ஏனைய இரு கண்களால் யானையினை எய்யவும் இவற்றைக் கண்டு சிங்கங்கள் ஓடச் செய்வர் 16. இவர்கள் விலங்கு வேட்டை குறித்துப் பேசும் குரல் கேட்டு மான்கள் பாய்ந்து ஓடும் 27. இவர்கள் தினைப்புனம் செல்லாது ஆழமான குழிகளை வெட்டுவர்; இவற்றைக் கண்ட*

*யானைகள் தம்மைப் பிடிக்கவே பள்ளம் தோண்டுகின்றனர் என்று ஓட்டம் பிடிக்கும் 36. மலையில் திரிந்து அலைந்த இவர்கள் பெண்மானை உயிருடன் பிடித்து வருவர். அதைக் கண்டு கலைமானைப் பிரித்து இப்பெடைமானை ஏன் கொணர்ந்தனை எனக் குறத்தியர் சீறுவர் 60. தினை கவர வரும் கிளியை ஓட்டுவர். மான்கள் கவர வருமேல் அவற்றை ஓட்ட அம்பு எடுப்பர் 62. யானை தினை கவர வரும்; அதுபோது அம்பு எடுத்து விசையுடன் எய்யக் குறிபார்ப்பதை அறிந்து யானை தன் பிடியுடன் ஓடும் 69.*

***யானையின் செயல்கள்***

***தன்னைக் கண்டு ஓடிவந்த சிங்கத்தினின்றும் தான் பிழைத்துப் போவது மட்டும் இன்றித் தன் பிடியையும் காத்துத் தன் கோபத்தைக் காட்டத் தன் கையை மேலே உயர்த்திப் பிளிறும் 4. தினையைத் தின்னும் 27. தினை கவரும் 69. பெண் யானை ஊடல் கொண்டு உறங்கும்போது ஆண்யானை வாழைக் கனிகளைக் கொணர்ந்து பிடியுடன் கொண்டாடும் 11. பன்றி கிளறியதால் தோன்றிய மணிகளைத் தீ என்று மயங்கி யானை நிற்கும் 15. யானை உறங்கிக் கொண்டு இருக்கும் 22. கருக்கொண்ட பிடிக்குக் களிறு சந்தனத் தழையை உண்ண நீட்டும் 23. யானை காற்றில்லாது வருந்தும் தன் பிடிக்கு இலைகளைக்கொண்டு காற்றை எழுப்பி மகிழச் செய்யும் 25. யானை சந்தனத் தழையைத் தேனில் தோய்த்துப் பிடியின் வாயில் கொடுக்கும் 38. சிங்கத்தின் சீற்றத்திற்கு அஞ்சிய யானை தன் பிடியை அட்டும்; பின், தன் செயலைத் தானே வெறுக்கும் 42. பாம்பு ஒரு யானையை விழுங்கக் கண்ட ஒரு யானை நடுக்குற்று மேகத்தைத் தன் கையால் உறிஞ்சும் 52. தன் நிழலையே வேறு ஒரு யானை என்று மயங்கிய யானை அந்நிழலைச் சீறித் தன் மருப்பை ஒடித்துக் கொள்ளும் 56. சண்டையிட்ட யானை தன் முத்தை உதிர்த்து நிற்கும் 58, 59. மேகத்தைப் பலமுறை உற்றுக் கவனித்த யானை அது தன் பிடி என எண்ணி அழைக்கும் வகையில் கையை நீட்டும் 57.***

***சிங்கத்தின் செயல்கள்***

***யானையைக் கண்ட இடத்து அதனைத் தாக்க ஓடும் 4. மலைமீது இவரும் 5. வேடர் அம்பு கொண்டு தொடர ஓடும் 16. அருவி நீரை மடுக்கும் 18. மேகத்தைக் கீறும் 18. சிங்கம் யானையைக் கண்டு சீற்றம் கொள்ளும் 42. யானையின் முகத்தைப் பீறும் 63.***

***பன்றியின் செய்கைகள்***

***பன்றி தன் கொம்பால் நிலத்தைக் கிளறும் 14, 15, 55. வளைந்த பிறைச் சந்திரனைப் போன்ற தந்தங்களையுடையது 4. தேனைப் பருகும் 51.***

***கரடியின் செயல்***

*கரடி பாம்புப் புற்றை உண்ணும் 54.*

***மயிலின் செயல்***

*வண்டு பாட மயில் ஆடும் 10. காந்தள் மலரக் கண்ட மயில்கள் தம் தோகை விரித்தாடும். மயில்கள் இலவம் பூவில் படிதல் தீயின் நடுவில் பெண் இருத்தல் போல இருக்கும்.*

***குரங்குகளின் செயல்***

*குரங்கு தான் பெற்ற குட்டிக்குத் தேனில் விரலைத் தோய்த்து ஊட்டும் 9. இலவம் மரத்தில் தொங்குவதை நெருப்புத்தான் தொங்குகிறது என்று எண்ணி அதனை மூங்கில் தழையால் அணைக்க ஓச்சும் 17. கண்ட கனிகளை நுகரும் 19. சுனைநீர் குடிக்கும் 19. வேட்கை தீராது மேகத்தைக் கீறிக் குடிக்கும் 19. குட்டிக் குரங்கு பளிங்கில் கனிகளைத் தோற்றுவிக்க அந்நிழல்பழத்தை உண்மைப்பழம் என்று எண்ணிக் குரங்குகள் வந்து பளிங்கைத் தம் நகத்தால் கீறும் 29. கோலைக் கொண்டு தேன்கூட்டை உடைக்கும் 33. தேன்கூட்டினின்றும் ஒழுகும் தேனை வாழை இலையால் குட்டிகள் உண்ணும் 33. பலாச்சுளைகளைக் கொண்டுவந்து தம் மக்களுக்குக் கொடுத்து ஊட்டும் 48. மலையின் உச்சியில் ஏறி ஆடி ஆரவாரம் செய்யும் 64. பலாப்பழங்களைப் பறிக்கும் 65. ஆகாயத்தில் உள்ள சந்திரனைக் கையால் தடவ மூங்கில்மேல் ஏறும் 68. அங்கிருந்து கையை நீட்டும் 68. காந்தள் மலர்மேல் வண்டுகள் மொய்த்திருப்பதைக் கண்ட குரங்கு, வண்டுகள் நெருப்பில் விழுந்துவிட்டன என்று எழுந்து எழுந்து கையை நெரிக்கும் 70.*

***வண்டுகளின் செயல்கள்***

*வண்டுகள் ஒலித்துக்கொண்டு இருக்கும் 22. தாமரையின் மகரந்தப் பொடியைப் பூசிக் கொண்டு பொன்னிறத்துடன் விளங்கும் 43. காந்தள் மலரில் மொய்த்திருக்கும் 70.*

## 11. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை

### *1. திருவலஞ்சுழிப் பெருமை*

*கடல்நீரை முகந்து மேகமாகி மின்னி மேற்குத் தொடர்ச்சி மலையில் மழை பொழிந்து பாயும் காவிரியாறாகிய பெண் வலமாகச் சுழித்துப் பாய்தலின் இவ்வூருக்குத் திருவலஞ்சுழி எனும் பெயர் ஏற்படலாயிற்று என்ற பெயர்க் காரணத்தை இந்நூலின் முதற்பாடல் புலப்படுத்துகிறது. கடல் போன்ற நீர்வள மிக்க வலஞ்சுழி (3) (4); திருவலஞ்சுழியிலுள்ள சோலைகள் மிக அடர்த்தியாகத் திருமாலின் நிறம் போன்று பசுமையாகக் காட்சியளிக்கின்றன (6), வலஞ்சுழி அணிதிகழ் தோற்றத்து அம்கயம் (மேன்மையான குளம்) (7), திருவலஞ்சுழியில் சங்குகள் நிறைந்துள்ளன. அலைகள் வீசிக்கொண்டேயுள்ளன. கப்பல்கள் மலிந்து காணப்பெறும் துறைகள் பலவுள்ளன (9), பிறைச்சந்திரனைத் தலையில் சூடிக் கொண்டும் இடபத்தை ஊர்தியாகக் கொண்டுமுள்ள சிவனதிருப்பிடம் வீங்குபுனலையுடைய வலஞ்சுழி (10), திருவலஞ்சுழியில் எப்போதும் மேகங்களால் சூழப்பெற்ற சோலைகள் நிறைந்துள்ளன (11), திருவலஞ்சுழியில் வயல்களில் கரும்புகள் நிறைந்துள்ளன (13), பாய்நீர் வலஞ்சுழி (14) எனப் பல பாடல்களிலும் திருவலஞ்சுழியின் நீர்வளம் மிகச் சிறப்பாகப் போற்றப் பெறுதலைக் கண்டின்புறலாம். இத்தலம் கும்பகோணம் - தஞ்சை நெடுஞ்சாலையில் சுவாமிமலை அருகில் உள்ளது.*

### *2. புராண வரலாறுகள்*

*திருமாலும் பிரமனும் சிவபெருமானின் அடியையும் முடியையும் தேட முற்பட்டுக் காண இயலா நிலையினராயினர் என்னும் வரலாற்றை வானோரும் காணாத செம்பொன் கழல் (2) என்பதாலும் தழல் வண்ணம் கண்டே தளர்ந்தார் இருவர் (3) என அவ்விருவர்களுக்கும் திருவண்ணாமலையில் சிவபெருமான் தீப்பிழம்பாய்க் காட்சியளித்த சிறப்பினையும் (6) இந்நூல் குறிப்பிடுகிறது. பிறைச் சந்திரன் சிவபெருமானிடம் தக்கன் சாபத்துக்கு அஞ்சி அடைக்கலம் புகுந்ததையும் பெருமான் அச்சந்திரனைத் தலையில் சூடி அருள் பாலித்ததையும் இந்நூலின் 5, 12 ஆம் செய்யுள்களில் காணலாம். சிவபெருமான் தாருகா வனத்துள்ள முனிவர்களின் ஆணவத்தை அடக்க முற்பட்டுப் பிச்சைக்காகச் சென்றமையை 8 ஆம் பாடல் தெரிவிக்கிறது. திரிபுரம் எரிப்பதற்கு "நகரெரிய அம்பாய்ந்தவன்" என இந்நூலின் 15 ஆம் செய்யுளில் ஆசிரியர் குறிப்பிடுகிறார். இவை போன்று பல வரலாறுகளைக் குறிப்பிட்டு அவற்றால் சிவபெருமானின் சிறப்புப் பேசப் பெறுகின்றது.*

### *3. அகப்பொருட்டுறைகள்*

*இந்நூலில் அகப்பொருட்டுறையமைந்த பாடல்கள் பல உள்ளன. பாங்கன் தலைவனை வியத்தலும் (4) தலைவன்பால் காதல் கொண்ட தலைவியின் நிலை பற்றித் தோழி கூற்றாக ஐந்தாம் செய்யுளும் காணப் பெறுகின்றன. பாசறையிலிருந்த தலைவன் கார்ப்பருவம் கண்டு உள்ளமழிந்து தலைவியை நினைத்துப் புலம்பலும் (6) ஆறு பார்த்துற்ற அச்சக் கிளவியாக தோழி தலைவனை இரவு விலக்கல் என்னுந்துறை ஏழாம் பாடலாகவும் மிளிர்கின்றன. தலைவனை நினைத்துத் தலைவி வருந்தி பாங்கியொடு கூறலும் (8) தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் பெருமையைக் கூறப் புகுந்து இவ்விடத்து இவ்வியற்று என்னும் துறையும் அமைந்துள்ளன. (9) தலைவன் தலைவியைச் சந்தித்த இடங்கண்டு மறுகலும் (10) தலைவி தலைவனை நினைந்து அழுங்கலும் (11) உடன் போக்கின் கண் தலைவனுடன் சென்ற தலைவியைத் தேடிச் சென்ற செவிலித் தாய்க்குக் கண்டோர் கூற்றாக ஓர் அருமையான செய்யுளும் (12) அமைந்துள்ளன. வாயில் புக்க பாணனுக்குத் தலைவி கூற்றாக அமைந்தது 13 ஆம் செய்யுளாகும். தலைவன்பால் தலைவி கொண்ட காதலை நினைந்து தோழி கூற்றாகவுள்ளது. 14 ஆம் செய்யுளாகும்.*

*இந்நூலிலுள்ள அகப்பொருட்டுறைச் செய்யுள்கள் யாவும் திருக்கோவையார்ச் செய்யுள்கள் போல மேலெழுந்தவாரியாய் அகப்பொருள் துறைபோன்று காணப்பெற்றாலும் திருவலஞ்சுழிப் பெருமானையே தலைவனாகக் கொண்டு அவன் புகழ் பேசப் பெற்ற நிலையில் பல செய்யுள் களிருத்தலைக் கூர்ந்து நோக்கிற் புலனாம். ஆகவே இந்நூலை, இறைவன் பால் உயிர்களைப் பத்தியிலீடுபடுத்தும் ஒரு சிறந்த காமஞ்சான்ற ஞானப் பனுவல் எனக் கூறலாம். நெஞ்சறிவுறுத்தல் எனும் துறையில் புறப்பொருட் பகுதியாகவும் ஒரு பாடல் காணப் பெறுகின்றது.*

### *4. யாப்புச் சிறப்பு*

*மும்மணிக்கோவை என்ற பெயருக்கேற்ப அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் முறைவைப்பில் இந்நூல் அமைந்திருக்கிறது. இந்நூலில் பத்தாம் பாடலில் 5ஆம் அடியில் தனிச்சொல் வந்துள்ளமையைக் காணலாம். இவ்வாறே 13ஆம் செய்யுளிலும் 5ஆம் அடியிலும் 9ஆம் அடியிலும் தனிச்சொற்கள் பெற்று வந்துள்ளன. இவ்வாறு அகவலில் இடையே தனிச்சொல் பெற்று வருவது பண்டைத் தமிழ்ச் சான்றோர் நூல்களில் அருகிக் காண வருதலின் இந்நூலாசிரியர், அவர்கள் வழியைப் பின்பற்றி இந்நூல் செய்ய முற்பட்டாரெனக் கூறலாம். பாடல்கள் யாவும் சிறந்த நடையுடன் காணப் பெறுகின்றன.*

### *5. அணிகள்*

*இந்நூலில் மூன்றாம் செய்யுளில் வண்ணம் என்னும் சொல் பன்முறைப் பல பொருள்களில் பயின்று வந்து சொற்பொருட் பின்வருநிலையணியாக விளங்கிப் படிப்போருக்கு மிக மகிழ்ச்சியையூட்டுகிறது. ஆறாம் பாடல் முற்றுவமையணி பெற்று விளங்குகிறது. ஏழாம் பாடல் இயல்பு நவிற்சியணி கொண்டு சிறப்புற அமைந்துள்ளது. எட்டாம் பாடல் மயக்க அணியும் சிலேடை யணியும் கொண்டு விளங்குகிறது. 9ஆம் பாடலில் ஆறு முதல் ஒன்று ஈறாக இறங்கு வரிசையில் எண்கள் பயின்று வந்து எண்ணலங்காரமாகக் காட்சியளிப்பதைக் கண்டின்புறலாம். 11ஆம் செய்யுள் ஐய அணியாகும். 13ஆம் பாடல் வஞ்சப்புகழ்ச்சியணி. மேலும் உவமையணியும் கலந்து வந்துள்ளது. இவ்வாறு அணி நயங்கள் பலவற்றையும் இந்நூலில் கண்டின்புறலாம்.*

### *6. சைவ சித்தாந்தக் கருத்துகள்*

*இறைவன் திருவடியே உலக வளத்துக்கு மூல காரணமாதலின் அதனை வணங்க வேண்டும் (1), இறைவனை மனம் வாக்குக் காயங்களாலும் சுத்தியாய் வழிபடின் நற்பேறுகிட்டும் (2), இறைவனை நினைந்து அன்பால் வழிபடின் அவனருள் கிட்டும். ஆணவ முனைப்புடன் வழிபடின் துன்புற ஏதுவாகும் (3), உமாதேவியின் அருளுள்ளத்தையும் பிற சிறப்பியல்புகளையும் கண்டு இவற்றின் மூலமாக இறைவனின் பெருமையை இப்பாடல் புலப்படுத்துகிறது (4), சிவபெருமான் அன்பர்களைக் காத்தலையே தன் கடமையாகக் கொண்டவன் (5), இறைவன் உயிர்களுக்கு அவரவர்களின் பக்குவ நிலைக்கேற்ப அருள் சுரப்பான் (7), இறைவனை நம்பின் அவன் அவர்களை ஆட்கொள்வதுறுதி. அவன் எங்கும் நிறைந்தவன். அப்பாலுக்கு அப்பாலாயும் விளங்குபவன். மேலும் இறைவன் பெருமையை இறைவிக்கு ஏற்றிக் கூறி சிவமும் சத்தியும் ஒன்றே என்னும் உண்மையை இச்செய்யுள் (9) விளக்குகிறது. இறைவனைத் தொழுதல், துதித்தல் முதலியவற்றால் வழிபடுவதை விட ஞானமார்க்கமாகிய அழுந்த நினைத்தல் மூலம் சிறப்பு நிலை எய்தலாம் (11), இறைவன் பேரருளாளன், அவனை நினைத்தால் பலன் கிட்டுவதுறுதி. மேலும் சத்தியும் சிவமும் ஒன்றே. அவை ஒன்றியிருந்தே உலகை இயக்குகின்றன (12) இறைவனிடம் உண்மையன்பு காட்டினால் தன்னை மறந்த நிலைகிட்டும் (14), இறைவனை வணங்குவதே உயிர்களின் சிறந்த கடமையாகும் என்பன போன்ற பல கருத்துகள் இந்நூலில் யாண்டும் காணப் பெறுகின்றன. இவை அறிவுக்கு மிகச் சிறந்த விருந்தாயமைவன என்பதுறுதியாகும்.*

### *7. மேற்கோள் எடுத்தாண்ட நூல்கள்*

*புறநானூறு*
*மர்ரே இராசம் பதிப்பு (1958)*
*சென்னை - 28.*

*குறுந்தொகை*
*மர்ரே இராசம் பதிப்பு (1957)*
*சென்னை - 28.*

*தேவாரம் அடங்கன் முறை*
*மயிலைகிழார் இளமுருகனார் பதிப்பு (1953)*
*சென்னை - 4.*

*திருக்கோவையார் உரையுடன்*
*திருவாவடுதுறை யாதீனம் (1965)*
*சென்னை - 4.*

*பதினோராந் திருமுறை*
*காசிமடத்து வெளியீடு*
*திருப்பனந்தாள் (1950)*

*திருக்குறள் பரிமேலழகருரையுடன்*
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (1937)*
*சென்னை - 1.*

*நம்பியகப் பொருள்*
*மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு*
*மதுரை.*

*நான்மணிக்கடிகை*
*மர்ரே இராசம் பதிப்பு (1959)*
*சென்னை - 28.*

*நக்கீரதேவ நாயனார் பாடிய திருவலஞ்சுழி மும்மணிக்கோவையில் முப்பது பாடல்கள் இல்லாமல் பதினைந்து பாடல்களே உள்ளன. மும்மணிக்கோவை என்னும் பிரபந்தத்திற்கு இவர் காலத்தில் பாடல் எண்ணிக்கை வரையறை நிலைபெற வில்லையோ? அல்லது இவர் பாடியதில் பதினைந்து பாடல்கள் நமக்குக் கிட்டாமற் போயினயோ என்ற ஐயமும் எழுகின்றன. ஆனாலும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது.*

உ
*திருச்சிற்றம்பலம்*

# 11. நக்கீரதேவ நாயனார் அருளிச் செய்த திருவலஞ்சுழி மும்மணிக் கோவை

## அகவல்

470 வணங்குதும் வாழி நெஞ்சே புணர்ந்துடன்
பொருகடல் முகந்து கருமுகிற் கணம்நல்
படஅர வொடுங்க மின்னிக் குடவரைப்
பொழிந்து கொழித்துஇழி அருவி குணகடல்
மடுக்கும் காவிரி மடந்தை வார்புனல்
உடுத்த மணிநீர் வலஞ்சுழி
அணிநீர்க் கொன்றை அண்ணலது அடியே (1)

### சொற்பொருள்

*நெஞ்சமே* - *மனமே!*
*கருமுகிற் கணம்* - *கரிய மேகக்கூட்டம்*
*பொருகடல்* - *அலைமோதும் கடலில்*
*புணர்ந்து* - *கலந்து*
*உடன்முகந்து* - *(அதிலுள்ள நீரை) ஆவியாக்கி மொண்டு கொண்டு*
*நல்பட அரவு* - *சிறந்த படத்தை எடுக்கும் தன்மையுடன் நல்ல பாம்பானது*
*ஒடுங்க* - *(பயந்து) பதுங்குமாறு*
*மின்னி* - *மின்னலை மின்னிடச் செய்து*
*குடவரைப் பொழிந்து* - *மேற்குத் திக்கிலுள்ள குடகு மலையில் மழையைச் சொரிந்து*
*கொழித்து* - *(அம்மலைபடு பொருள்களை எல்லாம்) வாரிக்கொண்டு வந்து*
*இழி அருவி* - *(மலையினின்றும்) அருவியாகக் கீழே விழுந்து*
*குணகடல்* - *கிழக்குப் பக்கமுள்ள கடலில்*
*மடுக்கும்* - *போய்க் கலக்கும் தன்மை வாய்ந்து*
*காவிரி மடந்தி* - *காவிரித்தாய் என்னும் ஆறாகப் பெயர் பெற்றுள்ளது*

| | |
|---|---|
| வார்புனல் | - (அதன்) நிறைந்த வெள்ளத்தால் |
| உடுத்த | - சூழப்பெற்று |
| மணிநீர் | - மாணிக்கங்களை வாரிக் கொண்டுவரும் நீர் வளம் பொருந்திய |
| வலஞ்சுழி | - திருவலஞ்சுழி என்னும் பதியிலுள்ள |
| அணிநீர் | - அழகிய தூய்மையுள்ள கங்காநதியின் நீரையும் |
| கொன்றை | - கொன்றை மாலையையும் |
| அண்ணலது | - (சடையில் தாங்கிய) சிவபெருமானின் |
| அடியே | - திருவடியிணைகளையே |
| வணங்குதும் | - நாம் வணங்குவோமாக என்றவாறு |

(வாழி - அசைநிலை)

**விளக்கம்**

கருமுகிற்கணம் புணர்ந்து முகந்து மின்னி பொழிந்து கொழித்து மடுக்கும் காவிரி எனக் கூட்டிப் பொருள் காணப்பெற்றது. நெஞ்சறிவுறுத்தல் என்னும் துறையின்படி இறைவனை வணங்கற்குரிய காரணங்களைக் கூறி மனத்திற்கு அறிவுறுத்தும் தன்மையினை இச்செய்யுளில் சிறப்புறக் காணலாம். மழையின்றி மாநிலத்தார்க்கில்லை. (நான்மணிக்கடிகை 46) ஆதலின் அதற்கு மூலமாயிருப்பது மேகம். ஆகவே அதனையே நீர்வளத்துக்கு முதற்காரணமாகக் கூறப்பட்டது. மழை எவ்வாறு பெய்கிறது என்பதனைத் தற்காலத்து அறிவியல் நூல் வல்லார் கூறும் கருத்துக்களையெல்லாம் செம்மையாக அக்காலத்தேயே இந்நூலாசிரியர் நக்கீர தேவ நாயனார் அழகு பெறக்கூறும் நயத்தினை இப்பாடலில் கண்டின்புறலாம். வாழி என்பதனை வாழ்வாயாக என்று மனத்தைத் தன்வயப்படுத்துவதற்காகக் கூறப்பெறும் சொல்லாகக் கொள்ளினும் அமையும். அசை நிலையாகவும் கொள்ளலாம். நற்பட அரவு என்பது ஈண்டு மிகவும் விடம் பொருந்திய நல்ல பாம்பினைக் குறித்தது. காராட்டை வெள்ளாடென்றாற் போல இது மங்கல வழக்காம். வலஞ்சுழி என்பது இவ்வூருக்குரிய காரணப் பெயர். இவ்வூரை வலமாகச் சுற்றிச் சுழிகளோடு செல்வதால் திருவலஞ்சுழியாம். “காவிரிமடந்தை வார்புனல் உடுத்த மணிநீர் வலஞ்சுழி” என்பதால் இவ்வுண்மை பெறப்படும். காவிரியாறு தோற்றத்தினின்று கடலில் சங்கமமாகும் வரை மேற்கொள்ளும் செயல்கள் யாவற்றையும் இச்செய்யுள் சிறப்புற எடுத்தியம்புகின்றது. அணிநீர்க் கொன்றை என்பதில் நீர் என்பது ஈண்டு கங்காதேவியைக் குறித்துள்ளது. அண்ணல் ஆண்பாற்குரிய சிறப்புப் பெயர் ஈண்டுச் சிவபெருமானைக் குறித்து வந்துளது. அடியே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருள் தந்து அவனுடைய திருவடியைத் தவிர வேறு ஒன்றும் உய்தி காட்ட வல்லது அன்று என்பதைச் சுட்டுகிறது. ஆகவே நாடு செழிக்க நீர்வளம் வேண்டும். அவ்வளம் பெற இறைவன்

***திருவடியிணைகளை முக்கரணத் தூய்மையாலும் வணங்க வேண்டும் என்னும் உண்மை பெறப்பட்டது.***

***கருத்து***

*மனமே! காவிரி நதியால் சூழப்பெற்ற திருவலஞ்சுழியிலுள்ள இறைவனின் திருவடிகளை வணங்கினால் நாடு செழிப்படைவதோடன்றிப் பல நன்மைகளையும் யாவரும் பெறலாம். ஆதலின் வணங்குவாயாக என்பதாம்.*

## வெண்பா

**471** **அடிப்போது தம்தலைவைத்து அவ்வடிகள் உன்னிக்**
**கடிப்போது கைக்கொண்டார் கண்டார் – முடிப்போதா**
**வாள் நாகம் சூடும் வலஞ்சுழியான் வானோரும்**
**காணாத செம்பொன் கழல். (2)**

### சொற்பொருள்

| | |
|---|---|
| *அடிப்போது* | - *(இறைவனது) திருவடியிணைகளாய மலர்களை* |
| *தம்தலைவைத்து* | - *(வீழ்ந்து வணங்குவதால்) தம் சிரசின் மேல் தாங்கிக் கொண்டும்* |
| *அவ்வடிகள்* | - *அத்திருவடி மலர்களையே* |
| *உன்னி* | - *இடைவிடாது மனத்தால் நினைத்தும்* |
| *கடிப்போது* | - *வாசனைமிக்க பூக்களால்* |
| *கைக்கொண்டார்* | - *(அப்பெருமானை) வழிபடும் ஒழுகலாற்றினையும் நியமமாகக் கொண்டவர்கள்* |
| *முடிப்போதா* | - *தம் சடையில் அணியத்தக்க மலராக* |
| *வாள்நாகம்* | - *விடம் கொண்ட கொடுமை வாய்ந்த பாம்பினை* |
| *சூடும்* | - *அணிந்து கொண்ட* |
| *வலஞ்சுழியான்* | - *திருவலஞ்சுழி என்னும் பதியில் எழுந்தருளியுள்ள இறைவனின்* |
| *வானோரும்* | - *(திருமால் பிரமன் முதலிய) தேவர்களாலும் கூட* |
| *காணாத* | - *தேடி அடைய முடியாத* |
| *செம்பொன்* | - *செம்மை வாய்ந்த மேலான* |
| *கழல்* | - *திருவடி ஞானத்தை* |
| *கண்டார்* | - *அடைந்து நுகரும் பேறு பெற்றவர்களாவார்கள் என்றவாறு* |

**விளக்கம்**

*இறைவனை வழிபடும்போது மனம், மொழி, மெய் என்னும் திரிகரண சுத்தியாய் வழிபட வேண்டும். மனம் ஒன்று நினைக்க, வாய் வேறொன்று பேச, கை ஒன்று செய்து கொண்டிருக்கக் கூடாது. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் ஒருமித்து அவனை வழிபட்டால்தான் உண்மைப் பலன் கிட்டும். தற்காலத்து இத்தகைய உண்மை வழிபாடின்மையாலேயே மக்கள் முழுப்பலன் பெறுவாரிலராயினர். அடிப்போது தம் தலைவைத்தல், வீழ்ந்து வணங்குதலாகிய காயத்தாலாய வழிபாடுகளாம். அவ்வடிகள் உன்னலாவது பெருமானை மனத்தால் இடைவிடாது நினைத்தலாய மனத்தாலாய வழிபாட்டினைக் குறிக்கும். கடி - வாசனை; உன்னுதல் - இடைவிடாது நினைத்தல். கடிப்போது கைக் கொள்ளுதலாவது வாசனையுள்ள பூக்களால் அவனை அர்ச்சிக்கும் நியமமாய வாக்காலாய வழிபாடாம். திருமுடியில் பெரும்பாலும் பூவினையே மக்கள் அணிவர். பெருமான் பாம்பினை அணிந்துளார். ஆதலின் அது அவருக்கு மலராயிற்று. இறைவன் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் என்று உணர்தற்கெட்டா அளப்பருந்தன்மை வாய்ந்தவன். முற்றுமுணர்தற்கரியன். அப்பாலுக்கப்பாலாய் விளங்குபவன் என்ற உண்மையை, உணர்த்தவே திருமாலும் பிரமனும் அடிமுடி காணாத வரலாறு எழுந்தது. வானோர்களுள் திருமால் பிரமன் முதலியோர் தலைமையிடத்தைப் பெற்றவர்களாதலின் வானோரும் என்று உம்மை கொடுத்து ஆசிரியர் கூறியது நினைந்து இன்புறற்குரியது. உம்மை உயர்வு சிறப்பு. கண்டார் என்பது அனுபவித்துணர்ந்து இன்புற்றார் என்பதாம். "திறவோர்காட்சியின் தெளிந்தனமாதலின்" (புறம். 192) என்னுமிடத்து காட்சி என்பது அனுபவ நூலினைச் சுட்டுதல் காண்க. தேடித் தேடொணாத் தேவனை என்னுளே தேடிக்கண்டு கொண்டேன் என்னும் அப்பர் பெருமான் அருமைத் திருவாக்கும் காண்க. கழல் ஈண்டு திருவடி ஞானத்தைச் சுட்டியது. அதனை அடைதலே உயிர்கள் உணர்ந்து இன்புறற்குரிய ஒப்பற்ற பேறாகும்.*

**கருத்து**

*திருவலஞ்சுழியிலுள்ள பெருமானை முக்கரணங்களாலும் தூய்மையோடு வழிபட்டால் அவன் திருவடி ஞானத்தைப் பெற்றின்பந்துய்ப்பதுறுதி என்பதாம்.*

## கட்டளைக் கலித்துறை

**472** **கழல் வண்ண மும்சடைக் கற்றையும் மற்றவர் காண கில்லாத்**
**தழல் வண்ணங் கண்டே தளர்ந்தார் இருவரந்தாமரையின்**
**நிழல் வண்ணம் பொன்வண்ணம் நீர்நிற வண்ணம் நெடிய வண்ணம்**
**அழல் வண்ணம் முந்நீர் வலஞ்சுழி யாள்கின்ற அண்ணலையே.** **(3)**

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| *அம்* | - | *அழகிய* |
| *தாமரையின்* | - | *தாமரைப் பூப் போன்ற திருவடியின்* |
| *நிழல் வண்ணம்* | - | *குளிர்ந்த தன்மையினையும்* |
| *பொன் வண்ணம்* | - | *பொன் போன்று ஒளிமிக்க மேனியின் இயல்பையும்* |
| *நீர்நிற வண்ணம்* | - | *தூய்மையான நீரைப் போன்ற பண்பினையும்* |
| *நெடிய வண்ணம்* | - | *உயர்ந் தோங்கிய உருவ மாட்சியையும்* |
| *அழல் வண்ணம்* | - | *நெருப்பைப் போன்று கொழுந்து விட்டுப் பிரகாசிக்கும் தன்மையினையும் பெற்றுள* |
| *முந்நீர்* | - | *கடல் போன்று பரந்த நீர் வளமிக்க* |
| *வலஞ்சுழி* | - | *திரு வலஞ்சுழியில்* |
| *ஆள்கின்ற* | - | *வீற்றிருந்து அருள் பாலிக்கின்ற* |
| *அண்ணலையே* | - | *சிறந்த சிவபெருமானின்* |
| *கழல் வண்ணமும்* | - | *திருவடிச் சிறப்பினையும்* |
| *சடைக் கற்றையும்* | - | *திருமுடியிலுள்ள சடா பாரத்தையும்* |
| *இருவர்* | - | *(இறைவன் அருளுக்குரியராகாது தருக்கியுள்ள) திருமாலும் பிரமனும் (எவ்வளவோ முயன்று தேடியும்)* |
| *மற்றவர்* | - | *அவ்விருவர்களும்* |
| *காணகில்லார்* | - | *காண இயலா நிலையினர் ஆயினர்* |
| *தழல் வண்ணம்* | - | *சிவபெருமான் தீப்பிழம்பாக வெளிப்பட்ட காட்சியினைக்* |
| *கண்டே* | - | *கண்ணுற்று* |
| *தளர்ந்தார்* | - | *(தாங்கள் கருதிய திருவடியும் திருமுடியும் அன்பர்கட்கில்லாது மற்றவர்கட்கு எளிதில் கை கூடுவதன்று என்பதையுணர்ந்து தங்கள் அறியாமையை நினைந்து கழி விரக்கமுற்று) வருந்தினார்கள் என்றவாறு.* |

### விளக்கம்

**வண்ணம் - *தன்மை, சிறப்பு, நிறம், காட்சி முதலிய பல பொருள்கள் தரத்தக்கதொரு சொல்லாகும். சிவபெருமான் அளவற்ற பெருமைகளையுடையவ னாதலின் அவைகளுள் சில சிறப்புகளை மாத்திரம் ஆசிரியர் நக்கீர தேவ***

*நாயனார் இச்செய்யுளில் குறிப்பிடுகின்றார். நிழல் - குளிர்ச்சி. அன்பால் தொழுவாரைத் தன் திருவடி நிழலிலிருக்கச் செய்து ஆட்கொள்ளும் தன்மை வாய்ந்தவனாதலின் நிழல் எப்பொழுதும் ஒரே தன்மைத்தாயிருக்க வல்ல இன்பத்தைத் தரும் குளிர்ச்சிக்காயிற்று. பொன்வண்ணம் என்பது ஒளிமிக்க நிலையின் பெருமையான நிறத்தை உணர்த்த வந்துளது. பொன்னார் மேனியனே, பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி முதலிய அருட் சான்றோர்களின் பெருவாக்குகளையும் ஓர்ந்துணர்ந்து கொளல் நன்று. நிலத்தியல்பால் நீர் திரியும் தன்மை வாய்ந்தது. செம்புலப் பெயல் நீர் போல என்னும் சங்கச்சான்றோர் ஆட்சியும் காண்க. ஆகவே நீர் தனக்கென ஓர் நிறமில்லாததாய்தான் சார்ந்ததன் வண்ணம் ஆகி அதன் வாயிலாய் மக்களுக்கு உதவுகின்றது. அதைப் போன்றே இறைவனும் உயிர்களின் தன்மைக்கேற்ப வினைகளை நுகரச்செய்து அவைகளை ஆட்கொளும் தன்மை வாய்ந்தவனாதலின் பெருமானுடைய வண்ணத்தை நீர் நிறவண்ணமென்றார். நெடிய வண்ணம் என்பது அண்டமாய் அவனியாகி அதற்கப்பாலும் நீண்டுநின்ற எங்கும் நிறைந்த ஒப்பற்ற பெருமையினைச் சுட்டுகிறது. அழல் வண்ணம் என்பது எரிபோல் மேனி பொருந்திய பிரான் திறத்தனைக் குறிப்பிடுகின்றது. முந்நீர் - கடல், ஆற்றுநீர், ஊற்று நீர், மழை நீர் என்னும் மூன்றும் கொண்டதாதலின் முந்நீர் என்று கடலுக்காயிற்று. திருவலஞ்சுழி அருகு காவிரி கடல் போன்று பரந்து காணப்பெறுதலின் முந்நீர் வலஞ்சுழியென்றார். கழல் வண்ணமும் சடைக் கற்றையும் என்பது திருமால் அடிதேடிய வரலாற்றையும் பிரமன் முடிதேடிய வரலாற்றையும் குறிப்பாய்ச் சுட்டுகிறது. காண நினைத்தது அடியும் முடியும் கண்டது அடியும் முடியுமற்ற சோதிப்பிழம்பு. தங்கள் எண்ணம் கைகூடவில்லை. காரணம் அன்பால் ஏற்படாது ஆணவத்தால் ஏற்பட்ட எண்ணமாதலின் பெருமான் தன் உருவைக் காட்டாது அப்பாலுக்கப்பலாயினா னென்க. இருப்பினும் தன் உண்மையாற்றலையும் அவர்கள் உணரவேண்டுமெனக் கருதி தழல் வண்ணம் காட்டினா னென்க. அத்தழல் வண்ணமும் இதற்கு முன் இத்தகைய வடிவத்தைக் காணவில்லையே என்று வியப்புறும் நிலையில் காணகில்லார் என்றும் தழல் வண்ணம் என்றும் கூறிய நயமும் காண்க. தளர்தல் - வருந்துதல், நினைந்தது முடியவில்லையெனில் வருந்துதல் உலகியல்பு. அதனைப் போன்று திருமாலும் பிரமனும் வருந்தினா ரென்க. காணகில்லாத்தழல் வண்ணம் என்றும் பாட வேறுபாடுண்டு.*

***கருத்து***

***சிவபெருமான் அளவிட்டுரைக்கவொண்ணாப் பேராற்றல் வாய்ந்தவன். அவனைத் தங்கள் தன் முனைப்பால் அடியும் முடியும் கண்டுவிடுவோம் என்று முனைந்த திருமாலும் பிரமனும் காண இயலாது வருந்தினர். ஆகவே தன் முனைப்புள்ளவர்களுக்கு அவனருள் கிட்டாது என்பதாம்.***

## அகவல்

473 அண்ணலது பெருமை கண்டனம் கண்ணுதல்
கடவுள் மன்னிய தடமல்கு வலஞ்சுழிப்
பனிப்பொருள் பயந்து பல்லவம் பழிக்கும்
திகழ்ஒளி முறுவல் தேமொழிச் செவ்வாய்த்
திருந்துஇருங் குழலியைக் கண்டு
வருந்தியென் உள்ளம் வந்த அப்போதே. (4)

### சொற்பொருள்

*நுதல்* - *நெற்றி*
*கண்ணுதல்* - *நெற்றியில் கண்ணைப் பெற்ற*
*கடவுள்* - *சிவபெருமான்*
*மன்னிய* - *நிலை பெற்று அருள் பாலித்து விளங்கும்*
*தடம் மல்கு* - *நீர் நிலைகள் நிறைந்த*
*வலஞ்சுழி* - *திருவலஞ்சுழியில்*
*பனிப் பொருள்* - *(தலைவியின் முகமாகிய மதியைக் கண்டது) குளிர்ச்சியாகிய அருளைத்*
*பயந்து* - *தந்து*
*பல்லவம்* - *(திருமேனியழகைக் கண்டதும்) இளந் தளிரையும்*
*பழிக்கும்* - *வெறுத்தொதுக்கும் மென்மை வாய்ந்ததுமாய்*
*திகழ் ஒளி* - *விளங்கும் பிரகாசம் பொருந்திய*
*முறுவல்* - *பற்களையும்*
*தேமொழி* - *இனிமை ததும்பும் சொற்களைக் கூறும்*
*செவ்வாய்* - *(பவளம் போன்ற) சிவந்த வாயையுடைய*
*திருந்து* - *நன்கு கோதி முடிக்கப்பெற்ற*
*இரும்* - *கருமை வாய்ந்த*
*குழலியைக் கண்டு* - *கூந்தலையுடைய தலைவியைப் பார்த்ததும்*
*வருந்தி* - *(தலைவனைப் பழித்துரைத்தமைக்காகக்) கழிவிரக்கமுற்று*
*என் உள்ளம்* - *என் மனமானது (தலைவன் தலைவியைப் பார்த்து அவள் பால் உறையாது)*
*வந்த* - *திரும்பி வந்த*
*அப்போதே* - *அச்சமயத்திலேயே*

*அண்ணலது - மிகவும் சிறந்த அத்தலைவனுடைய*
*பெருமை - சிறப்பினை*
*கண்டனம் - நன்கு தெரிந்து கொண்டேன் என்றவாறு.*

**விளக்கம்**

***இச்செய்யுள் அகப்பொருள் பகுதியில் பாங்கற் கூட்டம் என்னும் பிரிவின் பாற்பட்டது. கற்றறிபாங்கன், தலைவன் தலைவியை நினைந்து மிகவும் துன்புற்று மெலிந்து விட்டானே என்று கருதி அவனை இடித்துரைத்தான். பின்னர் அவன் வேண்டுதலின் பேரில் தலைவியினிடத்திற் சென்று அவளைப் பார்த்ததும் தான் தலைவனை இகழ்ந்துரைத்தது தவறு என்றுணர்ந்தான். தலைவியின் பெருமை மிகவும் சிறந்தது. இத்தகைய தலைவியைக் கண்டு அங்கேயே தங்கிவிடாமல் திரும்பி வந்ததே தலைவனின் பெருமையைத் தெள்ளிதின் எடுத்துக் காட்டும் என்னும் பொருளமைய பாங்கன் தலைவனை வியத்தல் என்னுந்துறையில் இப்பாடல் அமைந்துள்ளது.***

*தடம் - குளம்; ஈண்டு பொதுவாய் நீர் நிலைகளைக் குறித்தது காவிரியால் நீர்வளமிக்கிருத்தலினென்க. தலைவியின் முகத்தோற்றமே அருள் சுரந்த பான்மை வாய்ந்ததாய்க் காணப்பெறுகிறது என்பதையே ஆசிரியர் பனிப்பொருள் பயந்து என்றார். பனி - குளிர்ச்சி. அதன்பொருளாய் அமைவது அருளேயாகும். பல்லவம் - தளிர். பழித்தல் - ஒத்து நிற்க ஆற்றாது பின்னடைந்து நிற்கும் நிலை முறுவல் - பல்; புன்னகையினையும் குறிக்கும். இன்சொல் கூறலைத்தன்பாற் கொண்டதாலும் செம்மைநிறத்தை இயல்பாகவே பெற்றிருத்தலானும் செவ்வாய் என்றார். இருமை - கருமை. கூந்தலுக்குரிய சிறப்புகள் யாவற்றையும் பெற்றிருந்தாளாதலின் தலைவி திருந்திருங் குழலி எனப்பட்டாள்.*

*தலைவனைப் பாங்கன் இடித்துரைத்து இகழ்ந்ததற்காகவும் தலைவியின் பேரழகு கண்டாரை வருத்தும் தன்மை வாய்த்திருந்ததாலும் வருந்தி என்பதை இரண்டிடத்தும் இயைத்துப் பொருள் காண்க. தலைவன் தலைவியிடத்தேயே தங்கி விடாமல் தன் மனத்தைத் திருப்பிக் கொண்டு வந்தாலும் பாங்கன் தலைவியைப் பார்த்துத் திரும்பி வந்த பின்னும் என்பதைக் குறிக்கவே வந்த அப்போதே என்று கூறினார். அண்ணல் - சிறந்த தலைவன் (ஆண்களில் சிறந்தோன்). அண்ணலது பெருமையாவது மனத்தைத் தன் வழிப்படுத்து அது போகும் வழி போகாது திருப்பியதோடன்றித் தலைவியைக் கற்பு நெறிப்படிப் பலரறியத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் கடப்பாட்டினை மனத்துட் கொண்டு திரும்பி வந்த நிலைமையாம். இச்செய்யுள் பொதுவாய் அகப்பொருள் பகுதியாய்க் காணப்பெறினும்* ***இறைவனின் பெருமையையும் அவன் சக்தியாய உமையம்மையின் பெருமையையும் உணர்த்தலை ஓர்ந்துணர்க.***

***கருத்து***

*திருவலஞ்சுழிப் பெருமான் ஒப்பற்ற ஆற்றலையுடைய உமையம்மையைக் கொண்டுள்ளானாதலின் அவனது சிறப்பு அளவிட்டுரைக்குந் தன்மையதன்று என்பதாம்.*

## வெண்பா

**474** **போதெலாம் பூங்கொன்றை கொண்டிருந்த பூங்கொன்றைத்**
**தாதெலாம் தன்மேனித் தைவருமால் – தீதின்**
**மறைக்கண்டன் வானோன் வலஞ்சுழியான் சென்னிப்**
**பிறைக்கண்டம் கண்டு அணைந்த பெண்.** **(5)**

**சொற்பொருள்**

| | |
|---|---|
| *தீதுஇல்* | - *தீமை இல்லாத* |
| *மறை* | - *வேதத்தையே* |
| *கண்டன்* | - *கழுத்தில் எப்போதும் கொண்டிருப்பவனும்* |
| *வானோன்* | - *தலையாய தேவாதி தேவனும்* |
| *வலஞ்சுழியான்* | - *திருவலஞ்சுழி என்னும் பதியில் வீற்றிருப்பவனுமாகிய பெருமானின்* |
| *சென்னி* | - *தலைமீது* |
| *பிறைக்கண்டம்* | - *நிலாத்துண்டமாய இளம் பிறையைப்* |
| *கண்டு* | - *பார்த்து* |
| *அணைந்தபெண்* | - *விரும்பி அவன்பால் சென்ற தலைவி* |
| *போதெலாம்* | - *எல்லாப் பூக்களுள்ளும் சிறந்ததாக விளங்கும்* |
| *பூங்கொன்றை* | - *அழகிய கொன்றைப் பூவினையே தான் அணியத் தக்கதாக* |
| *கொண்டு* | - *மேற்கொண்டு (அவ்வாறு)* |
| *இருந்த* | - *அணிந்திருந்த* |
| *பூங்கொன்றை* | - *அழகிய கொன்றைப் பூக்களிலிருந்த* |
| *தாதெலாம்* | - *மகரந்தப்பொடிகள் எல்லாவற்றையும்* |
| *தன்மேனி* | - *(அத்தலைவன் மாட்டுள்ள பேரன்பினால்) தன் உடம்பு முழுவதும்* |
| *தைவருமால்* | - *தடவிக் கொண்டு (தன்னுடம்பு) பொன் வண்ணம் கொண்டிருப்பதை அறிந்து) இன்புற்றாள் என்றவாறு.* |

**விளக்கம்**

*இச்செய்யுள் தலைவன்பால் தலைவி கொண்டிருந்த ஆராக் காதலைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றது. கண்டம் - கழுத்து. கண்டன் - கழுத்தையுடையவன். சிவபெருமான் உயிர்கள் உய்யும் பொருட்டு ஆலகால விடத்தைத் தம் கழுத்தில் ஏற்றுக் கொண்டாலும் அதனால் இறைவனுக்கு ஒன்றும் தீங்கு நேரிடவில்லையாதலாலும் அக்கழுத்தினின்று எப்பொழுதும் வேதவொலி வெளிவந்து கொண்டேயிருப்பதாலும் தீதின்மறைக் கண்டன் என்றார். வேதியா வேதகீதா விண்ணவர் அண்ணா என்னும் தமிழ்மறையையும் சிந்திக்கவும். வானோர் என்று தேவர்கள் யாவரையும் பொதுப்படக் கூறாது இறைவனின் சிறப்பியல்பைக் குறிக்கவே வானோன் என்றார். இறைவன் தன்னிடம் அடைக்கலம் என்று வந்தவர்களை ஆட்கொள்ளும் தன்மையை இயல்பாகவே வாய்க்கப் பெற்றவனாதலின் அதைக் குறிப்பிடுவான் வேண்டியே சென்னிப் பிறைக்கண்டம் என்று முன் பிறைச் சந்திரனை அடைக்கலமாக ஏற்று ஆட்கொண்ட பெருமையைச் சுட்டினாரென்க. தலைவி பிறைக்கு அருள் சுரந்ததை நினைத்து தானும் பெருமானிடம் அடைக்கலம் அடைந்தால் அவன் ஆட்கொள்வான் எனக் கருதி அணைந்தாள் என்க. தன் காதல் மேலீட்டால் தலைவன் உவந்து அணிந்த கொன்றைப் பூவையே விரும்பி தலைவியும் அணிந்து கொண்டாள். அத்துடனின்றி அக்கொன்றைப் பூவிலுள்ள மகரந்தப் பொடியைத் தன் உடம்பெல்லாம் பூசிக் கொண்டு தலைவன் பொன் வண்ணத்தைத் தன் மேனியில் கண்டு மகிழ்ந்தாள் என்க. தாது - மகரந்தப்பொடி. தை தருதல் - தடவுதல். பிறைக்கண்டம் - இளம் பிறைச் சந்திரன்.*

**கருத்து**

*திருவலஞ்சுழிப் பெருமானையே நினைந்து வழிபட்டுச் சரணுற்றால் அவன் அருளால் நற்பேறு பெறலாம் என்பதாம்.*

## கட்டளைக் கலித்துறை

**475** பெண்கொண் டிருந்து வருந்துங்கொ லாம்பெரு மான் திருமால்
வண்கொண்ட சோலை வலஞ்சுழி யான்மதி சூடி நெற்றிக்
கண்கொண்ட கோபம் கலந்தன போல்மின்னிக் கார்ப் புனத்துப்
பண்கொண்டு வண்டினம் பாடநின் றார்த்தன பன் முகிலே. **(6)**

### சொற்பொருள்

| | |
|---|---|
| *பன்முகில்* | - *நிறைந்த மேகக் கூட்டம்* |
| *பெருமான்* | - *அகிலசராசரங்களுக் கெல்லாம் தலைவனும்* |
| *திருமால்* | - *கண்ணனைப் போன்று* |

| | | |
|---|---|---|
| *வண்* | - | *வளப்பமான பசுமை நிறம்* |
| *கொண்ட சோலை* | - | *அமைந்த அடர்ந்த சோலைகள் நிறைந்த* |
| *வலஞ்சுழியான்* | - | *திருவலஞ்சுழி என்னும் பதியில் வீற்றிருப்பவனும்* |
| *மதிசூடி* | - | *சந்திரனைத் திருமுடியில் அணிந்துள்ளவனுமான சிவனின்* |
| *நெற்றிக்கண்* | - | *நெற்றிக் கண்ணிலிருந்து* |
| *கொண்ட* | - | *தோன்றிய* |
| *கோபம்* | - | *சினக்கனல்* |
| *கலந்தன போல்* | - | *சேர்ந்ததைப் போன்று* |
| *மின்னி* | - | *மின்னலைச் செய்து* |
| *கார்ப்புனத்து* | - | *கரிய காவற் காட்டில்* |
| *வண்டினம்* | - | *வண்டுகளின் கூட்டம்* |
| *பண் கொண்டு* | - | *இசை கலந்த ரீங்கார ஓசைகளைச் செய்து* |
| *பாட* | - | *பாடுவதைப் போன்று* |
| *நின்று ஆர்த்தன* | - | *தொடர்ந்து நிலையாக ஒலித்தன* |
| *பெண்* | - | *(இவற்றைக் கண்ட) தலைவி* |
| *கொண்டு* | - | *(தன் மனத்தில் கலக்கத்தை) மேற் கொண்டு* |
| *இருந்து* | - | *தனித்திருந்து* |
| *வருந்துங் கொலாம்* | - | *ஏங்கிக் கொண்டிருப்பாளே (என்று தலைவன் பாசறையில் தலைவியை நினைத்துப் புலம்பினான்) என்றவாறு.* |

**விளக்கம்**

***பிரிவின் கண் சென்ற தலைவன் பாசறையிலிருந்த ஞான்று தலைவியை நினைத்துப் புலம்பியதாக உள்ளது இச்செய்யுள். தலைவன் பாசறைப் புலம்பல் என்னும் துறையாம். சிவபெருமானே முழு முதற் கடவுள் என்பதைக் குறிப்பிடவே பெருமான் என்றார். பெருமான், பெம்மான், பிரான் என்பன யாவும் சிவபெருமானைக் குறிப்பனவாம். திருமால் நீல மேகச் சாமள வண்ணன். ஆதலின் அவன் நிறம் போன்று திருவலஞ்சுழியிலுள்ள சோலைகள் அடர்த்தியாய்க் காணப் பெற்று வளப்பத்துடன் பசுமை நிறமும் பெற்றுள்ளன என்பதையே திருமால் வண் கொண்ட சோலை என்னும் தொடர் குறிப்பிடுகிறது. மதிசூடியது இறைவனின் இரக்கவுள்ளத்தையும் அடைக்கலங் காக்கும் இயல்பையும் குறிக்கும். திருந்த மதிசூடி தெண்ணீர் சடைக்கரந்து என்னும் சம்பந்தப் பெருமான்***

*வாக்கினையுமோர்க. அவ்விரக்கவுள்ளத்தினனாயினும் வாய்ப்பு நேருங்காலத்துக் கடுங்கோபம் கொள்ளும் பண்பும் உள்ளவன் என்பதையே நெற்றிக் கண் கொண்ட கோபம் என்னும் தொடரால் ஆசிரியர் குறிக்கிறார். மேகக் கூட்டம் மின்னுவது நெற்றிக் கண்ணிலிருந்து கோபக்கனல் சிந்துவது போலுள்ள தென்க. மின்னலுக்கப்புறம் இடிஒலி கேட்கப் பெறுவதியல்பு. அதற்கு அடர்ந்த சோலையிலுள்ள வண்டுக் கூட்டத்தின் இசைப் பேரொலியை உவமையாக்கிய சிறப்பு நயம் உளங்கொளத்தக்கது. இதிலிருந்து வண்டுகள் மிகுதியும் அவற்றின் ஒருமித்த இசையொலிச் செறிவும் இடியொலி ஒப்ப இருந்தன என்னும் உயர்வுச் சிறப்பு அறிந்து மகிழ்தற்குரியது. தலைவியைத் தலைவன் தனித்திருக்கும் படி பிரிந்துள்ளான். அவ்வமயம் முகில் மின்னி இடித்து ஆர்ப்பரிக்கின்றது. கார்காலம் வந்துவிட்டதே தலைவனைக் காணவில்லையே என நினைத்துத் தலைவி வருந்துவாளே என பாசறையிலுள்ள தலைவன் தலைவியின் நிலை கருதிப் புலம்புகிறான். அந்நிலையை பெண் கொண்டிருந்து வருந்துங்கொல் என்னும் தொடர் குறிப்பிடுகிறது. கொல், ஆம் என்பன அசைநிலைகள். வண்வளப்பம், வண்ணம் என இருவேறு பொருள் கொள்ளலாம். இம்மும்மணிக் கோவை பல அகத்துறைப் பாடல்களைப் பெற்று அவ்வச்செய்யுள்கள்தோறும் சிவபெருமான் பெருமையைத் திருக்கோவையார் போன்று வலியுறுத்தும் மாண்பினைத் தெள்ளிதின் உணரலாம்.*

**கருத்து**

***தலைவி தலைவனை நினைத்து வருந்தத் தக்க சூழ்நிலைகளைப் பெற்றுள்ளாள். அவள் வாடாத நிலையில் ஆட்கொள்ள வேண்டும் என்பதாம்.***

## அகவல்

**476** **முகிற் கணம் முழங்க முனிந்த வேழம்**
**எயிற்றிடை அடக்கிய வெகுளி ஆற்ற**
**அணிநடை மடப்பிடி அருகுவந் தணைதரும்**
**சாரல் தண்பொழில் அணைந்து சோரும்**
**தேன்உகு தண்தழை செறிதரு வனத்தில்**
**சருவரி வாரல்எம் பெருமநீர் மல்கு**
**சடைமுடி ஒருவன் மருவிய வலஞ்சுழி**
**அணிதிகழ் தோற்றத் தங்கயத் தெழுந்த**
**மணிநீர்க் குவளை அன்ன**
**அணிநீர்க் கருங்கண் ஆயிழை பொருட்டே.** **(7)**

## சொற்பொருள்

| | |
|---|---|
| எம்பெருமான் | - எங்கள் தலைவனே! |
| நீர்மல்கு | - கங்கை நீரைப் பெற்று |
| சடைமுடி | - சடா பாரத்தைக் கிரீடமாகக் கொண்டுள்ள |
| ஒருவன் | - ஒப்பற்ற பெருமானாகிய தலைவன் |
| மருவிய | - விருப்புற்றுத் தங்கிய |
| வலஞ்சுழி | - திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் |
| அணிதிகழ் | - அழகோடு பொருந்தும் |
| தோற்றத்து | - சிறந்த காட்சிகள் வாய்ந்துள |
| அம்கயத்து | - மேன்மையான குளத்தின் கண் |
| எழுந்த | - தோன்றிய |
| மணி நீர் | - மணி போலும் நிறத்தினையுடைய |
| குவளை அன்ன | - குவளை பூப் போன்று |
| அணி நீர் | - சிறந்த தன்மையோடு கூடிய |
| கருங் கண் | - கரிய கண்ணையும் |
| ஆயிழை பொருட்டே | - சிறந்த ஆபரணங்களையும் கொண்ட தலைவியைக் கருதி |
| முகிற்கணம் | - மேகக் கூட்டம் |
| முழங்க | - இரைச்சலிடவும் |
| முனிந்த | - அது கண்டு பொறாத |
| வேழம் | - ஆண் யானையானது |
| எயிற்றிடை | - தன் தந்தங்களினிடையே |
| அடக்கிய | - அமைதியாகத் |
| வெகுளி ஆற்ற | - தன் கோபத்தை அடக்கிக் கொண்டு |
| அணி நடை | - அழகிய நடையுடன் கூடிய |
| மடப்பிடி | - இளமையான பெண் யானையின் |
| அருகுவந்து | - பக்கலில் சார்ந்து |
| அணைதரும் | - பொருந்தியிருக்கும் |
| சாரல் | - மலைச் சரிவுகளும் |
| தண்பொழில் | - குளிர்ச்சியான சோலையில் |
| அணைந்து | - தங்கி |
| சோரும் தேன் | - பிலிற்றுகின்ற தேன் துளிகள் |
| உகும் | - சொட்டுகின்ற |

| | |
|---|---|
| *தண்தழை* | - *குளிர்ந்த இலைகளும்* |
| *செறிதரு* | - *நிறைந்த* |
| *வனத்தில்* | - *காட்டில்* |
| *சருவரி* | - *இராக்காலத்தில்* |
| *வாரல்* | - *வாராதே (என்று தோழி தலைவனிடம் கூறினாள்) என்றவாறு.* |

**விளக்கம்**

*இரவில் தலைவியிடம் வரக் கருதிய தலைவனை வாராதே என்னும் பொருளமைய இச்செய்யுள் ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி என்னும் துறையில் அமைந்துள்ளது. சடையே இறைவன் அருளுடையவன் என்பதைக் குறிக்கும். நீர்மல்குசடை என்பது இறைவனின் பேரருள் தன்மையை விளக்க வந்தது. ஒருவன் - ஒப்பற்றவன். திருவலஞ்சுழி நீர்வளமிக்க பதி என்பதை அணி திகழ் தோற்றத்தங்கயம் உடையது என்றார். நீர்மை - தன்மை, இரத்தின ஒளி, நிறம் எனப் பல பொருள் பயக்கும் ஒரு சொல்லாகும். நீர்க்குவளையென்பது குவளைப் பூவின் மணிபோலும் அழகிய நிறத்தைக் குறிக்க வந்தது. அணி நீர்க்கருங்கண் என்பன தலைவியின் கண் சிறப்புக் கருதி வந்தன. ஆயிழை வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகித் தலைவியைக் குறித்துள்ளது. தலைவி பொருட்டு மலைச் சாரலிலுள்ள காட்டில் இரவுக் காலத்தில் வாராதே ஏதங்கள் பல நிகழலாம் எனப் பாங்கி தலைவனிடம் கூறுகிறாள். வேழம் - ஆண் யானை. முகிற்கூட்ட ஒலி கேட்டுச் சினந்த வேழம் அச்சினத்தை அடக்கிக் கொண்டு பிடியருகு சென்றதாகக் கூறும் அழகு சிறந்துள்ளது. சினத்தால் பல்லைக் கடித்தல் முதலிய குறிகளைக் காட்டுவது உயிர்கள் இயல்பு. அவ்வாறு குறிப்புக் காட்டாது வேழம் தந்தத்தில் அச்சினத்தை அடக்கிக் கொண்டுள்ளது என்று ஆசிரியர் கூறுகிறார். சாரல் - மலைச்சரிவு. "வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கை..... குற்றாலம்" என்னும் தமிழ்மறை வாக்கையுமுணர்க. மலைச்சரிவை ஒட்டி தழைகள் நிறைந்து வெயில் நுழைய இயலாதவாறு அடர்த்தியான கானக முள்ளது என்பதைக் குறிப்பிப்பான் வேண்டி தண்டழை செறிதரு வனம் என்றார். அவ்வனத்தில் தேன் சொட்டும் தழை என்றது அப்பொழிலின் சிறப்பைச் சுட்டியுள்ளது. சோரும் என்பதற்குப் பதில் சேரும் என்ற பாடபேதமும் சில பிரதிகளில் காணக் கிடக்கின்றது. சருவரி - இரவு. வாரல் - அல்லீற்று எதிர் மறை வியங்கோள் வினைமுற்று; வாராதே என்னும் பொருள் பயந்துள்ளமை காண்க. இச்செய்யுள் இயல்பு நவிற்சியணி.*

**கருத்து**

*பெருமானே! உன்னை நினைந்துருகும் அடியார் பொருட்டு பக்குவம் வாய்ந்த காலத்து வந்து அருள் சுரக்க என்பதாம்.*

## வெண்பா

477 பொருட்டக்கீர் சில்பலிக்கென் றில்புகுந்தீ ரேனும்
அருட்டக்கீர் யாதுமூ ரென்றேன் – மருட்டக்க
மாமறையம் என்றார் வலஞ்சுழிநம் வாழ்வென்றார்
தாமறைந்தார் காணேன்கைச் சங்கு. (8)

### சொற்பொருள்

| | |
|---|---|
| *பொருள்* | - *எல்லாப் பொருள்களையும் பெற்ற* |
| *தக்கீர்* | - *தகுதி வாய்ந்த பெரியவரே!* |
| *சில்பலிக்கு என்று* | - *சிறிது உணவு கருதி* |
| *இல்புகுந்தீரேனும்* | - *(அடியோங்கள்) வீட்டின் கண் புகுந்து பிச்சை கேட்டாலும்* |
| *அருள் தக்கீர்* | - *(உம்மைப் பார்த்தால்) சிறந்த அருள் வாய்ந்தவராகக் காணப் பெறுகின்றீர்* |
| *யாது உம் ஊர்* | - *உங்களுடைய ஊர் எது?* |
| *என்றேன்* | - *என்று கேள்வி தொடுத்தேன்* |
| *மருள்தக்க* | - *மயக்கம் தரும் நிலையில்* |
| *மாமறையம்* | - *சிறந்த மறைக்காட்டில் உள்ளோம்* |
| *என்றார்* | - *என்று பதில் கூறினார்* |
| *வலஞ்சுழி* | - *திருவலஞ்சுழி எனும் சிறந்த தலம் தான்* |
| *நம்வாழ்வு* | - *நாம் விரும்பியுறையும் சிறந்த இடம்* |
| *என்றார்* | - *என்றும் கூறினார்* |
| *தாம் மறைந்தார்* | - *(இவ்வாறு கூறியதும்) உடனே அவர் மறைந்து விட்டார்* |
| *கைச்சங்கு* | - *(அவ்வமயம்) என் கையிலணிந்திருந்த வளையல்கள்* |
| *காணேன்* | - *(நழுவி கீழே விழுந்துவிட்டன ஆதலின் அவைகளை) காணவில்லை (ஆகவே தலைவி அப்பெருமான்பால் ஆராக் காதல் கொண்டாள்) என்றவாறு.* |

### விளக்கம்

***இறைவன் உலகின் கணுள்ள எல்லாப் பொருள்களையும் உடையவன் ஆதலின் பொருட்டக்கீர் என்றார். எல்லாமுடையவர் சிறிதுணவுக்காக இல்புகுதல் இயல்பன்று என்று குறிப்பிடுவது போல சில்பலிக்கு என்று இல்***

*புகுந்தீர் என்றார். பலி - உணவு. புகுதல் - தாமே விரும்பிச் செல்லுதல்; வந்தது பிச்சையெடுத்தற்கெனினும் முகத் தோற்றத்தைப பார்த்தால் அச்செயலுக்குரிய குறிகள் ஒன்றும் காண்டற்கில்லை. அதற்கு மாறாக அருள் வெள்ளம் ததும்பி முகத்தில் காணப்பெறுகிறது. அதனாற்றான் யார் என்று உசாவ என் உள்ளம் தூண்டிற்று. உம் + ஊர் = உம்மூர் எனவரும். ஈண்டு மகரவொற்று இரட்டாது இயல்பாகவே உமூர் எனப்புணர்ந்தது காண்க. செய்யுள் விகாரம் என்று கூறினும் அமையும். உம் ஊர் எது என்று கேட்டால் அதற்கு நேர் விடை கூறாது மயக்கந்தரத்தக்க நிலையில் விடை அமைந்திருப்பது உய்த்துணரத்தக்கது. மருள் + தக்க = மருட்டக்க என்று வந்தது. மாமறையம் - சிறந்த வேத முடிவினுள்ளோம் என்பது ஒரு பொருள். பிச்சை எடுத்து அலைபவருக்குத் தமக்கென ஒரு ஊர் கிடையாது. ஆதலின் மிகவும் மறைவாகவே சுற்றி அலைகிறோம் எனவும் பொருள் கொள்ளலாம். சிறந்த திருமறைக்காட்டிலிருக்கிறோம் என்பதுவே நேர்விடையாக அமையும். இவ்வாறு பல பொருள்கள் தந்து சிலேடை நயம் அமைய இத்தொடர் அமைந்துள்ளது. (மாமறையம்) மயக்க அணியும் அமைந்துள்ளது. திருமறைக்காடு வசிக்குமிடமாயினும் மிக விருப்பமுள்ள தலம் திருவலஞ்சுழி என்று அத்தலத்தின் சிறப்பைக் குறிப்பிட வலஞ்சுழி நம் வாழ்வு என்றார். உடனே தான் இன்னார் என்பதைக் குறிப்பிட மறைந்தார். இயல்பாகவே தன் மனத்தைத் தலைவனிடம் பறி கொடுத்த தலைவிக்கு வந்தவர் ஒப்பற்ற சிவபெருமானே என்று தெரிந்ததும் ஏற்பட்ட புளகாங்கிதத்திற்கோர் எல்லை யில்லை. அதனால் மிகவும் சோர்வு ஏற்படவே மெய் மெலியலாயிற்று. கைகளும் மெலிந்தன. அதனால் அணிந்திருந்த கை வளையல்கள் தாமே சோர்ந்து நழுவி கீழே விழுந்து விட்டன. சங்கு - வளையல். தன்னுணர்ச்சி வந்ததற்கப்புறம் தான் கையில் வளையல்கள் காணாமையைக் கண்டாள். அதனால் வியப்புற்றுக் காணேன் கைச்சங்கு என்று கூறித் தலைவனை நினைத்துத் தலைவி வருந்தி பாங்கியோடு கூறல் என்னும் துறையில் இச்செய்யுள் அமைந்துள்ளது.*

***கருத்து***

***திருமறைக் காட்டில் வீற்றிருப்பனும் திருவலஞ்சுழியைத் தன் விருப்பமான தலமாகக் கொண்டுள்ளவனுமாய சிவபெருமான் தன் உண்மைத் தொண்டர்களை ஆட்கொள்ளும் தன்மையினன் என்பதாம்.***

## கட்டளைக் கலித்துறை

**478** **சங்கம் புரளத் திரைசுமந் தேறும் கழியருகே**
**வங்கம் மலியும் துறையிடைக் காண்டிர் வலஞ்சுழியா**
**றங்கம் புலனைந்தும் ஆகிய நான்மறை முக்கண்நக்கன்**
**பங்கன் றிருவர்க் கொருவடி வாகிய பாவையையே.** **(9)**

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| வலஞ்சுழி | - | திருவலஞ்சுழியில் |
| ஆறங்கம் | - | ஆறங்கங்களுக்கும் |
| புலனைந்தும் | - | ஐம்புலன்களுக்கும் |
| ஆகிய | - | மூலமாகிய |
| நான்மறை | - | நான்கு வேதங்களே உருவாய |
| முக்கண் | - | மூன்று கண்களைத் தன்பாற் கொண்ட |
| நக்கன் | - | (திக்கையே ஆடையாகவுடைய) பெருமானின் |
| பங்கு | - | இடப்பாகத்தில் அமர்ந்துள்ளவளும் |
| அன்று | - | முன் ஒரு காலத்தில் |
| இருவர்க்கு | - | (திருமாலும் பிரமனுமாகிய) இருவர்க்கும் |
| ஒருவடிவு | - | (தேடியும் காண இயலாத நிலையில்) ஒப்பற்ற வடிவாய் |
| ஆகிய | - | விளங்கியுள்ள |
| பாவையையே | - | தலைவியை |
| சங்கம் | - | சங்குகளை |
| புரள | - | அரித்து உருட்டிக் கொண்டு |
| திரை | - | அலைகள் |
| சுமந்து | - | எடுத்துக் |
| ஏறும் | - | கரையின் கண் வீசுந்தன்மையுள்ள |
| கழியருகே | - | கடற்கரையினருகில் |
| வங்கம் மலியும் | - | கப்பல்கள் நிறைந்து காணப் பெற்று |
| துறையிடை | - | பலரும் பயிலுமிடத்தே |
| காண்டிர் | - | காண்பீராக என்றவாறு |

### விளக்கம்

*இச்செய்யுளில் ஆறு முதல் ஒன்று முடிய இறங்கு வரிசையில் முறையாய் எண்ணலங்காரம் வந்துள்ளது. ஆறங்கம் புலனைந்துமாகிய நான்மறை என வேதத்தைச் சிறப்பிப்பதைப் போன்றே ஆறங்கமும் ஐம்புலனும் நான்மறையும் முக்கண்ணும் பொருந்திய சிவபெருமான் எனப் பெருமானுக்கே ஏற்றிச் சிறப்பித்தும் பொருள் கொளலாம். ஆறங்கம் வேதத்தின் உட்பிரிவாதலினாலும் ஐம்புலனும் ஒன்றுதற்குக் கருவியாயிருத்தலானும் வேதத்தைச் சிறப்பிக்க*

*ஏதுவாயிற்று. நக்கன் - நிர்வாணமுடையோன். இறைவன் எங்கும் நிறைந்தவன். திக்குகளையே ஆடையாக உடையவன். ஆதலின் அவனுக்கு நக்கன் என்னும் பெயர் ஏற்படலாயிற்று. பங்கு என்பது இடப்பக்கத்திலுள்ள உமாதேவியைக் குறித்தது. ஒருகாலத்தில் மிகப் பெரியவர்களாலும் தேடியும் அறியமுடியாத தலைவியை இன்று பலரும் பழகும் துறையின் கண் எளிமையாய்க் காணலாம் என்னும் நயத்தினையும் தெளிக. ஒருவடிவு என்பது ஆணுமில்லாது பெண்ணு மில்லாது சோதிப்பிழம்பாய் ஒப்பற்ற காட்சி நல்கியதனைக் குறிக்கும் (திருவண்ணாமலை வரலாறு காண்க). இறைவன் மாதொரு பாகனாதலின் திருமாலும் பிரமனும் அவ்வுருவைக் கண்டாலே தலைவியின் உருவைக் கண்டதொக்கும். அதற்கு மாறாக சோதிப் பிழம்பு காணப்பட்டதாதலினாலேயே ஒருரு எனப்பட்டது. இது இவ்விடத்து இவ்வியற்றென்றல் என்னும் அகப்பொருள் துறையின் பாற்படும். ஆறங்கம் என்பது வேதத்தின் உட்பிரிவாகிய சிட்சை, வியாகரணம், சந்தம், நிருத்தம், கல்பம், சோதிடம் என்பன. புலனைந்து - சுவை ஒளி ஊறுஓசை நாற்றம் என்பன. நான்மறை இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன. முக்கண் - சூரிய சந்திர அக்கினியாகிய மூன்று கண்கள். கழி - உப்பங்கழியைக் குறிக்கினும் ஈண்டு கடற்கரையைக் குறித்தது.*

***கருத்து***

***திருவலஞ்சுழியில் சிவபெருமான் இடப்பாகத்திலிருப்பவளும் திருமால் பிரமனுக்கும் காண இயலாதவளுமான அரிய தலைவியை இன்று பலரும் பழகும் கடற்கரையில் எளிமையாய்க் காணலாம் என்பதாம்.***

## அகவல்

**479** **பாவை ஆடிய துறையும் பாவை**
**மருவொடு வளர்ந்த அன்னமும் மருவித்**
**திருவடி அடியேன் தீண்டிய திறனும்**
**கொடியேன் உள்ளம் கொண்ட சூழலும்**
**கள்ளக் கருங்கண் போன்ற காவியும் நெருங்கி**
**அவளே போன்ற தன்றே தவளச்**
**சாம்பல் அம்பொடி சாந்துஎனத் தைவந்து**
**தேம்பல் வெண்பிறை சென்னிமிசை வைத்த**
**வெள்ளேற்று உழவன் வீங்குபுனல் வலஞ்சுழி**
**வண்டினம் பாடும் சோலைக்**
**கண்ட அம்ம அக் கடிபொழில் தானே** **(10)**

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| தவளச் சாம்பல் | - | வெண்மையான திருநீறு |
| அம்பொடி | - | ஆகிய சிறந்த பொடியை |
| சாந்துஎன | - | சந்தனத்தைப் போன்று |
| தைவந்து | - | உடம்பெல்லாம் தடவிக் கொண்டும் |
| தேம்பல் | - | வாட்டத்தோடு கூடிய |
| வெண்பிறை | - | வெண்மையான பிறைச் சந்திரனை |
| சென்னிமிசை | - | (அவன் துன்பம் தீர்க்கும் பொருட்டு) தலையின் மீது |
| வைத்த | - | சூடிக்கொண்டும் |
| வெள்ளேற்று | - | வெண்மையான காளையை |
| உழவன் | - | ஊர்தியாகப் பயன்படுத்திக் கொள்பவனுமாகிய சிவபெருமான் தங்கியுள்ள |
| வீங்குபுனல் | - | நிறைந்த நீர் வளம் செறிந்துள்ள |
| வலஞ்சுழி | - | திருவலஞ்சுழி என்னும் தலத்தின்கண் |
| வண்டினம் | - | வண்டுக் கூட்டங்கள் |
| பாடும் | - | ரீங்காரம் செய்யும் |
| சோலை | - | பெரிய பூங்காவுக்குள் |
| கண்ட | - | காணப் பெற்றுள்ள |
| அக்கடிபொழில் தானே | - | அழகிய வாசனைமிக்க அம்மலர்ப் பொங்கரானது |
| பாவை | - | தலைவி |
| ஆடிய | - | (முன் ஒரு கால் சந்தித்த சமயத்து) விளையாடிய |
| துறையும் | - | நீர்த்துறையையும் |
| பாவை | - | அத்தலைவியின் |
| மருவொடு | - | சிறந்த அணைப்புடன் |
| வளர்ந்த | - | வளர்க்கப் பெற்ற |
| அன்னமும் | - | அன்னப் பறவையையும் |
| மருவி | - | அவள் பக்கல் சார்ந்து |
| திருவடி | - | அவள் அழகிய பாதங்களை |
| அடியேன் | - | நான் |
| தீண்டிய | - | தடவிக் கொடுத்த |
| திறனும் | - | சிறப்பையும் |
| கொடியேன் | - | (அவள் பாசத்துக்கு ஆட்பட்டதால்) |

| | | |
|---|---|---|
| | | வன்கண்ணனாய |
| உள்ளம் | - | என் மனத்தையும் |
| கொண்ட | - | தன் பால் ஈர்த்த |
| சூழலும் | - | (மரம் செடி கொடிகளடர்ந்த) சுற்றுச் சார்பையும் |
| கள்ள | - | வஞ்சகத்தன்மை வாய்ந்து பிறழ்ச்சியோடு |
| கருங்கண் போன்ற | - | கருமை நிறம் கொண்டு கண்ணுக்குவமை கூறத்தக்க |
| காவியும் | - | நீலோற்பல மலரையும் |
| நெருங்கி | - | நெருக்கமாக (ஒரே இடத்தில்) பார்த்து |
| அவளே போன்றதன்றே | - | அத்தலைவியைப் போன்றே எனக்குக் காட்சி தந்து (பழைய நினைவுகளையூட்டி) துன்புறுத்துகிறது என்றவாறு. |

**விளக்கம்**

*இச்செய்யுள் தலைவன் தலைவியைச் சந்தித்த பழைய இடத்தை நினைந்து இரங்கல் என்னும் துறையில் அமைந்துள்ளது. தலைவன் கூற்று. மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் சிவபெருமானாதலின் “சாம்பலம் பொடி சாந்தெனத்தை வந்து” என்றார். தைவருதல் - தடவுதல். ஈண்டு பூசுதல் என்னும் பொருளில் வந்துளது. சந்திரன் ஒரு காலத்து இறைவனிடம் அடைக்கலம் பூண்டு தன்னைக் காப்பாற்ற வேண்டினான். ஆதலின் எஞ்சியுள்ள பிறையோடு சந்திரனைச் சடையில் பெருமான் வைத்துக் கொண்டார். பிறைகள் குறைந்து கொண்டே போன நிலையில் சந்திரன் தேம்பல் வெண்பிறையாளனாயிருந்தான். தேம்பல் - வாட்டம். காளை மாட்டை உழவர்கள் உழவுக்குப் பயன்படுத்துவது மரபு. சிவபெருமான் காளை மாட்டை ஊர்தியாகப் பயன்படுத்துகின்றாராதலின் __சொல்லேருழவன் வில்லேருழவன்__ என்பன போன்று __வெள்ளேற்றுழவன்__ என்று ஆசிரியர் நக்கீர தேவர் ஓர் அருமையான பெயரைப் பெருமானுக்குச் சூட்டியுள்ளார். திருவலஞ்சுழி காவிரி பாயப் பெற்ற பெருமை மிக்கதாகலின் “வீங்குபுனல் வலஞ்சுழி” எனப்பட்டது. சோலை என்பது மரங்களும் செடி கொடிகள் முதலிய பலவும் நிறைந்த பெரும் பூங்காவாகும். அதில் ஒருசிறு பகுதியாகவும் அடர்த்தியாகவும் மணமிக்க இடமாகவும் தங்குவதற்கு ஏற்ற தகுதியுள்ள சூழலை ஆசிரியர் பொழில் எனக் குறிப்பிடுகிறார். ஆகவே அச் சோலைக்குள்ளேயே ஒரு அழகிய சூழலுடைய இடமாகும். முன்னர் தலைவியைத் தலைவன் அப்பொழிலின் வாய் சந்தித்தானாதலின் தற்போது அத்தலைவி விளையாடிய இடம், அன்னப்பறவை, சுற்றுப்புறச் சூழல், நீலோற்பல மலர் முதலியவற்றைக் கண்ணுற்ற பொழுது அத்தலைவியின் நினைவு மீதூரப் பெற்று வருந்துதல் போன்று இச்செய்யுள் அமைந்துள்ளது. துறை - ஆற்றில் பலரும் பழகும் இடம். தீண்டுதல் - தடவிக் கொடுத்தல். தான் எளிதில் பிறரால் வசமாக்க*

*முடியாத வன்மனமுடையவன் என்பதைக் குறிப்பிப்பான் வேண்டி தலைவன் தன்னைக் கொடியேன் என்று கூறிக் கொள்கிறான். தன் வசமிழக்கும் நிலையைச் சூழல் செய்துவிட்டது என்பதையே "உள்ளம் கொண்ட சூழலும்" என்னும் தொடர் குறிப்பிடுகிறது. காவி - நீலோற்பல மலர். இலக்கியங்களில் நீலோற்பல மலரைப் பெண்களின் கண்ணுக்கு உவமை கூறுவது இயல்பு. "இரு நோக்கு இவளுண்கண் உள்ளது ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து" (குறள் 1091) என்பது வள்ளுவர் வாய்மொழி. அதனாலேயே ஆசிரியர் "கள்ளக் கருங்கண்" என்று கூறியுள்ளார். மருவு - அணைப்பு. தவளம் - வெண்மை. அம்ம - முன்னிலையசை ஈண்டு வியப்புக் குறித்து வந்துள்ளது.*

***கருத்து***

***சிவபெருமானின் சிறந்த உறைவிடமாயுள்ள திருவலஞ்சுழியிலுள்ள மணமிக்க பொழிலானது துறை, அன்னப்பறவை, சுற்றுப்புறச் சார்பு, நீலோற்பல மலர் போன்றவைகளைக் கொண்டு முன்தலைவியைச் சந்தித்த இடமாதலின் அவளைக் கண்டது போன்றே தற்போதும் காட்சியளித்துத் தலைவனைத் துன்புறுத்துகிறது என்பதாம்.***

## வெண்பா

**480** **தானேறு மானேறு கைதொழேன் தண்சடைமேல்**
**தேனேறு கொன்றைத் திறம்பேசேன் – வானேறு**
**மையாருஞ் சோலை வலஞ்சுழியான் என்கொலென்**
**கையார் வளைகவர்ந்த வாறு.** **(11)**

**சொற்பொருள்**

| | | |
|---|---|---|
| *தான் ஏறும்* | - | *தலைவனாகிய பெருமான் ஊர்ந்து செல்லும்* |
| *ஆனேறு* | - | *காளையாகிய இடபத்தை* |
| *கைதொழேன்* | - | *(நான்) கையால் தொழுது வணங்கவுமில்லை* |
| *தண் சடை மேல்* | - | *குளிர்ச்சி பொருந்திய சடையின் மீது* |
| *தேன் ஏறு* | - | *வண்டுகள் மொய்க்கக் கூடிய* |
| *கொன்றை* | - | *கொன்றைப் பூமாலையின்* |
| *திறம் பேசேன்* | - | *மேன்மை பற்றியும் ஒன்றும் புகழ்வதில்லை* |
| *வான் ஏறும் மை* | - | *ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மேகம்* |
| *ஆரும்* | - | *நிறைந்து கவிந்து கொண்டிருக்கும்* |
| *சோலை* | - | *சோலைகள் நிறைந்த* |
| *வலஞ்சுழியான்* | - | *திருவலஞ்சுழியில் வீற்றிருக்கும் தலைவன்* |

| | |
|---|---|
| *என்கை* | - *என்கைகளில்* |
| *ஆர்* | - *பொருந்திய* |
| *வளை* | - *வளையல்களை* |
| *கவர்ந்தவாறு* | - *கீழே விழச் செய்து எடுத்துக் கொண்ட தன்மை* |
| *என்கொல்* | - *என்ன காரணம் கருதியோ என்றவாறு.* |

**விளக்கம்**

*இது தலைவி தலைவனை நினைத்துக் கவன்று கூறிய அகப்பொருள் துறைக்கூற்றாகும். ஆனேறு - காளைமாடு ஈண்டு இடபத்தைக் குறித்தது. சடையே பெருமான் அருளாளன் குளிர்ச்சி பொருந்தியவன் என்பதைக் குறிக்கும் சின்னமாகும். மேலும் அவ்வுண்மையின் வன்மையை வெளிப்படுத்தக் கருதிய ஆசிரியர் தண்சடைமேல் என்று மேலும் பெருமான் அருள் தன்மையைச் சிறப்பித்துக் கூறினார். தன் தடைமேல் என்றும் சில பிரதிகளில் பாட பேதம் காணப்பெறுகிறது. அதனைவிட தண்சடை என்றிருப்பதே பொருள் சிறக்கக் காரணமாதல் தெளிக. தேன் - ஈண்டுவண்டினைக் குறிக்கும். ஏறுதல் - மொய்த்தல். தேன் ஏறு - தேன் நிறைந்த என்னும் பொருள் கொள்ளலாம். தேன் நிறைந்திருத்தலாலேயே வண்டுகள் மொய்க்கின்றன. ஆதலின் வண்டு எனப் பொருள் கொள்ளலே மிகவும் சிறக்கும். கொன்றை வேய்ந்த செல்வன் சிவபெருமான் ஆதலின் அவன் கொன்றைப் பூமாலையின் பெருமையைக் கொன்றைத் திறம்பேசேன் என்று தலைவி குறிப்பிடுகிறாள். வானேறு மையாருஞ்சோலை என்பது சோலையானது ஆகாயம் வரை உயர்ந்தோங்கிய நிலையையும் அடர்த்தியையும் குறித்துள்ளது. மை - கரிய மேகம். ஒருவரைப் பற்றி ஏதாவது கூறின் அதற்கு மறுதலையாக அவர் செயலில் முற்படுதல் உலகியற்கை. அவ்வாறிருக்க தலைவி திருவலஞ்சுழியிலுள்ள பெருமானைப் பற்றி ஒன்றும் கூறாத நிலையிலும் அவன் வளையல்களைக் கவர்ந்து கொண்டானே என்று கூறும் நயம் மிகவும் சிறந்துள்ளது. வளை கவர்தல் தலைவி தலைவனை இடைவிடாது நினைத்துக் கொண்டேயிருத்தலின் உடல் மெலிந்து அதன் பயனாகக் கை நெகிழ்ச்சி எய்தி வளையல் கையினின்று சோர்ந்து கீழே வீழ்தலைக் குறிக்கும். இதனால் கையால் செயல் நிகழாவிடினும் வாயால் சொற்கள் வெளிப்படாவிடினும் மனத்தால் கொண்ட எண்ணத்தின் வலிமை மிகுதி தெற்றென விளங்கும். தலைவி தலைவனிடத்துக் கொண்ட பேரீடுபாடு இதனால் சிறந்து காணப்பெறும். அதனாலேயே அவன் ஆட்கொண்டான். என்கொல் என்பதிலுள்ள கொல் ஐயப் பொருளில் வந்துள்ளது காண்க. இச்செய்யுள் ஐய அணி.*

***கருத்து***

*திருவலஞ்சுழியிலமர்ந்துள்ள பெருமானை மெய்யால் தொழாமலும் வாக்கால் பேசாமலும் இருக்கவும் அவனை மனத்தால் உறைப்பாக நினைத்ததால் அவன் ஆட்கொண்ட தன்மை மிகப் பெருமைக்குரியது என்பதாம்.*

## கட்டளைக் கலித்துறை

**481** **ஆறுகற் றைச்சடைக் கொண்டொர்ஒற் றைப்பிறை சூடி மற்றைத்**
**கூறுபெண்ணாயவன் கண்ணார் வலஞ்சுழிக் கொங்குதங்கு**
**நாறுதண் கொம்பரன் னீர்களின் னேநடந் தேகடந்தார்**
**சீறுவென் றிச்சிலைக் கானவர் வாழ்கின்ற சேண்நெறியே.** **(12)**

**சொற்பொருள்**

*வலஞ்சுழி* - *திருவலஞ்சுழியிலுள்ள*
*கொங்குதங்கு* - *தேன் நிறைந்து*
*நாறு* - *வாசனை மிக்கதும்*
*தண்* - *குளிர்ச்சியோடும் கூடிய*
*கொம்பரன்னீர்கள்* - *பூங்கொம்பு போன்ற பெண்களே!*
*ஆறு* - *கங்கா நதியை*
*கற்றைச் சடை கொண்டு* - *அடர்த்தியான சடாபாரத்தில் தாங்கிக் கொண்டும்*
*ஓர் ஒற்றைப்பிறை* - *ஒரே ஒரு பிறையையுடைய சந்திரனை*
*சூடி* - *(ஆட் கொள்வான் வேண்டித்) தலையிலணிந்து கொண்டும்*
*மற்றைக்கூறு* - *தம் இடப்பாகத்தில்*
*பெண்ணாயவன்* - *உமாதேவியைக் கொண்டிருப்பவனுமாகிய சிவபெருமானின்*
*கண்ணார்* - *இரண்டு கண்களாகிய சூரியனையும் சந்திரனையும் போன்ற தலைவனும் தலைவியும்*
*சீறு* - *கோபத்தோடு*
*வென்றிச்சிலை* - *வெற்றியைத் தரத்தக்க வில்லைக் கையில் தாங்கிய*
*கானவர்* - *வேடர்கள்*
*வாழ்கின்ற* - *சஞ்சரிக்கின்ற*
*சேண் நெறியே* - *மிகவும் தூரமாகிய காட்டு வழியில்*

| | |
|---|---|
| *இன்னே* | *- இப்பொழுது தான்* |
| *நடந்தே* | *- நடந்து சென்று* |
| *கடந்தார்* | *- கடந்து அப்பால் சென்றார்கள் என்றவாறு.* |

**விளக்கம்**

*இது தலைவனுடன் உடன்போக்கின் கண் சென்ற தலைவியைத் தேடி வந்த செவிலித் தாயிடம் கண்டோர் கூற்றாக அமைந்த அகப்பொருள் துறையாகும். கங்கா நதியையும் சடையையும் பெருமான் கொண்டுள்ளது அவன் பேரருளாற்றலைக் குறிக்கும். அவன் ஒற்றைப் பிறையைச் சூடியுள்ளது அடைக்கலம் காத்து சந்திரனை ஆட்கொண்ட தன்மையைக் குறிக்கும். பதினாறு பிறைகளையுடையவன் சந்திரன். பதினைந்து பிறைகளும் தேய்ந்து விட்டன. எஞ்சிய ஒன்றும் தேய்ந்தால் என்செய்வது என்று அஞ்சி சந்திரன் சிவபெருமானிடம் அடைக்கலம் புகுந்தான். அவர் அவ்வொற்றைப் பிறையைத் தம் தலையில் சூடிக் கொண்டார். பின்னர் அது வளரவும் தேயவும் அருள் பாலித்தார். அவ்வொற்றைப் பிறையே சந்திரனைக் காப்பாற்ற உதவியதாகலின் ஓர் ஒற்றைப் பிறை சூடி என்றார். ஓர் - ஒப்பற்ற என்பதாம். சக்தியும் சிவமும் பிரிக்க முடியாதவை என்னும் உண்மையை உலகுக்கு அறிவுறுத்துவான் வேண்டியே சிவபெருமான் உமையம்மையை இடப்பாகத்திற் கொண்டான். அதனாலேயே கூறு பெண்ணாயவன் என்றார். சிவபெருமானுக்குரிய இருகண்கள் சூரியனும் சந்திரனுமாகும். தலைவன் சூரியன் போன்று ஆற்றல் வாய்ந்தவன். தலைவி சந்திரன் போன்று (தண்மை) அருளுள்ளம் மிக்கவள். இது காரணமாகவே தலைவன் தலைவியை இறைவன் கண்களுக்குவமையாகக் கூறிய திறம் நினைந்தின்புறத்தக்கது. கொங்கு - தேன். பெண்களைக் கொடியாகவும் ஆடவரைக் கொம்பாகவும் கூறுதல் இலக்கிய மரபு. அதற்குமாறாக ஈண்டிச் செய்யுளில் செவிலித் தாயாரை ஆசிரியர் கொம்பாகக் கூறியுள்ளார். பெண்கள் தனியாக வழி நடத்தல் தகுதியன்று. செவிலித் தாயர் வயது முதிர்ந்தோராகலானும் தலைவியின் மாட்டுக் கொண்ட பற்றுள்ளம் பிடர் பிடித்துந்த, தனிமை என்றும் நோக்காது தலைவியைக் காணத்துடித்து வருகின்றனர். ஆகவே அவர் இயற்கை மென்மைத் தன்மைக்கிழுக்கில்லை என்பதனைத் தெளிவுபடுத்து முகத்தான் ஆசிரியர் கொங்குதங்கு நாறுதண் கொம்பரன்னீர் என்று பல அடைமொழி களுடன் செவிலித் தாயரை விளிக்கின்றார். கொம்பரன்னீர்கள் என்பது அண்மை விளிகள் விகுதி மேல் விகுதியாம். இது அபூர்வப் பிரயோகம். இன்னே - இப்பொழுதே என்னும் பொருள் பயந்துள்ளது. கண்டோர் தலைவியைக் கண்டு சிறிது நேரம் கூட ஆகவில்லை என்பதை இச்சொல் குறிக்கின்றது. நடந்தே கடந்தார் என்பதால் நடந்து துன்புற்றார் என்பதனைக் குறிப்பிட்டதோடு மட்டுமல்லாது அக்காட்டு வழியைக் கடந்து பாதுகாப்பான இடத்திற்குச் சேர்ந்துள்ளார் என்ற உண்மையையும் குறிக்கும். காட்டு வழியின் கொடுமையை காட்டில் வாழ்கின்ற வேடர்களைக் கூறுமுகத்தான் சீறு வென்றிச் சிலைக்கானவர்*

*எனக் கூறிய திறம் நினைந்து இன்புறத்தக்கது. சேண் நெறி என்பது வழியின் அருமையைக் கூறுவந்த தொடராகும். ஆகவே கொடிய காட்டுவழி கடந்து பாதுகாப்பான இடத்திற்குச் சென்றுள்ளார் என்பதும் அதுவும் தற்போதுதான் அண்மையில் சென்றுள்ளனர் என்பதும் தொடர்ந்து விரைந்து சென்றால் அவர்களைப் பார்க்க இயலுமென்பதும் கண்டோர் கூற்றிலிருந்து குறிப்பாற் போந்த உண்மையாம்.*

### கருத்து

***பேரருளாளனாகிய திருவலஞ்சுழிப் பெருமானின் கண்கள் போன்ற தலைவன் தலைவியர் இருவரும் கொடிய காட்டுவழியை இப்போது கடந்து பாதுகாப்பான இடத்திற்குச் சேர்ந்தனர். முயலின் அவர்களைக் கண்டின்புறலாம் என்பதாம்.***

## அகவல்

**482** நெறிதரு குழலி விறலியொடு புணர்ந்த
செறிதரு தமிழ்நூற் சீறியாழ்ப் பாண
பொய்கை யூரன் புதுமணம் புணர்தர
மூவோம் மூன்று பயன்பெற் றனமே
நீயவன்
புனைதார் மாலை பொருந்தப் பாடி
இல்லதும் உள்ளதும் சொல்லிக்கல்லல்
வாசகம் வழாமற் பேச வண்மையில்
வானர மகளிர் வான்பொருள் பெற்றனை
அவரேல்
எங்கையர் கொங்கைக் குங்குமந்தழீஇ
விழையா இன்பம் பெற்றனர் யானேல்
அரனமர்ந் துறையும் மணிநீர் வலஞ்சுழிச்
சுரும்பிவர் நறுவயற் சூழ்ந்தெழு கரும்பில்
தீநீர் அன்ன வாய்நீர் சோரும்
சிலம்புகுரற் சிறுபறை பூண்ட
அலம்புகுரற் கிண்கிணிக் களிறுபெற் றனனே **(13)**

### சொற்பொருள்

*நெறிதரு* - *சுருண்ட*
*குழலி* - *கூந்தலையுடையவளாகிய*

| | | |
|---|---|---|
| விறலியொடு | - | திறமையாக ஆடவல்ல விறலியுடன் |
| புணர்ந்த | - | சேர்ந்து |
| செறிதரு | - | பொருள் நிறைந்த |
| தமிழ் நூல் | - | இசைத்தமிழைப் பயின்று |
| சீறியாழ் | - | சீறியாழ் என்னும் நரம்புக்கருவியை மீட்டவல்ல |
| பாண | - | பாணனே! |
| பொய்கையூரன் | - | நீர்நிலைகள் நிறைந்த மருதநிலத் தலைவனான என் தலைவன் |
| புதுமணம் உணர்தர | - | பரத்தையுடன் கலந்து புத்தின்பம் துய்த்தலால் |
| மூவோம் | - | நீயும் தலைவனும் நானும் ஆகிய நாம் மூவரும் |
| மூன்று பயன் | - | மூவகை நன்மைகளை |
| பெற்றனமே | - | அடைந்துள்ளோம் |
| நீ | - | பாணனாகிய நீ |
| அவன் | - | தலைவனுடைய |
| புனை தார் மாலை | - | அழகாக அணியப் பெற்ற மணமாலையைப் பற்றி |
| பொருந்த | - | சிறப்புகள் அமைய |
| பாடி | - | புகழ்ந்து பாட முனைந்து |
| இல்லதும் | - | நிகழாததையும் நிகழ்ந்தது போலவும் |
| உள்ளதும் | - | உண்மையான சில இயல்புகளையும் |
| சொல்லி | - | பாட்டால் புனைந்து |
| கல்லல் | - | பரத்தைக்கும் எனக்கும் சினமூட்டவல்ல |
| வாசகம் | - | உரைகளாகிய |
| வழாமல் | - | குற்றம் ஏற்படாமல் |
| பேச | - | கூறி |
| வண்மை இல் | - | கொடைப்பண்பு அற்ற |
| வானர மகளிர் | - | குரங்கு போன்ற குறுகிய அறிவுடைய பரத்தையரைப் போல் |
| வான்பொருள் | - | (தலைவனிடமிருந்து) நிறைந்த செல்வத்தை |
| பெற்றனை | - | (பரிசிலாகப்) பெற்றுக் கொண்டாய் |
| அவரேல் | - | தலைவரோ |
| எங்கையர் | - | என் தங்கையரான பரத்தையரின் |
| கொங்கை | - | முலைகளின் மீது தோய்ந்த |

| | |
|---|---|
| குங்குமம் | - குங்குமத்தைத் தானும் |
| தழீஇ | - ஏற்றுக் கொண்டு |
| விழையா இன்பம் | - சான்றோரால் வெறுத்து ஒதுக்கத்தக்க இன்பத்தை |
| பெற்றனர் | - அடைந்தார் |
| யானேல் | - நானோ |
| அரன் | - சிவபெருமான் |
| அமர்ந்துறையும் | - விருப்பமாக வீற்றிருக்கும் |
| மணி நீர் | - அழகிய நீர்வளம் மிக்க |
| வலஞ்சுழி | - திருவலஞ்சுழியில் |
| சுரும்பு | - வண்டுகள் |
| இவர் | - மொய்க்கத்தக்க |
| நறுவயல் | - வாசனைப் பூக்களோடுள்ள வயல்களில் |
| சூழ்ந்து எழு | - எல்லாப் பக்கங்களிலும் நிறைந்துள்ள |
| கரும்பில் | - கரும்பினது |
| தீநீர் அன்ன | - இனிய சாறு போன்று |
| வாய்நீர் | - வாயிலிருந்து ஊறும் நீரினை |
| சோரும் | - ஒழுகவிட்டுக் கொண்டும் |
| சிலம்பு குரல் | - ஒலிக்கின்ற சத்தத்தோடு கூடிய |
| சிறு பறை | - சிறிய பறை என்னும் வாத்தியத்தையும் |
| அலம்புகுரல் | - மெதுவாக இனிமையான குரலில் ஒலித்துக் கொண்டிருக்கும் |
| கிண்கிணி | - கிண்கிணியென்னும் காலணியையும் |
| பூண்ட | - அணிந்த |
| களிறு | - ஆண் யானைக்கன்று போன்ற |
| பெற்றனனே | - (வீரக் குழந்தையைப்) பெற்றெடுத்துச் சிறந்த மகிழ்ச்சியோடிருக்கின்றேன் என்றவாறு. |

**விளக்கம்**

***விறல் - திறமை. பாணன் மனைவி விறலி எனப் பெறுவாள். அவள் பாடுவதிலும் ஆடுவதிலும் வல்லவள் ஆகலின் விறலி என்றார். பாணர்கள் முற்காலத்து இசையில் வல்லவர்களாயிருந்தனர். பண் பாடுவதில் வல்லவர் பாணர் எனப் பெற்றனர். இது காரணப்பெயர். மேலும் யாழ் வாசிப்பதிலும் வல்லவராயிருந்தனர். அதனாலேயே "தமிழ்நூற் சீறியாழ்ப்பாண" என்று கூறப்பட்டுள்ளது. பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், சீறியாழ்***

என யாழ் பலவகைப்படும். அவற்றுள் இப்பாணன் சீறியாழைக் கொண்டிருந்தானாதலின் "சீறியாழ்ப்பாண" என்று ஆசிரியர் கூறியுள்ளார். சிறுமை + யாழ் - சீறியாழ் என்றாயிற்று. ஊரன் - மருத நிலத் தலைவனுக்குரிய பெயர். பொய்கையூரன் என்றதால் அவ்வூரின் நீர்வள மிகுதியைப் புலப்படுத்தியவாறாயிற்று. தலைவி ஈன்ற ணிமையோடுள்ளாளாதலின் தலைவன் பரத்தையை நாடிச் சென்றான். அங்கு அப்பெண்டிரளித்த இன்பத்தைப் "புதுமணம்" என்றார். மூவோம் என்பது நாம் மூவரும் என்னும் பொருளில் வந்த அரிய சொல்லாட்சியாகும். தலைவன், தலைவி, பாணன் ஆகிய மூவரையும் மூவோம் என்ற ஆட்சி குறிப்பிடுகிறது. தலைவி, தலைவனின் நடத்தை கண்டு உள்ளூர வருந்தினும் அதை வெளிக் காட்டாமல் பாணனிடம் பயன் என்று தலைவனைப் பெருமைப்படுத்திக் கூறிய அழகு உணர்ந்தின்புறத்தக்கது. பாணர்களின் இயல்பு தலைவனைப் புகழ்தல் ஆகும். அவ்வாறு புகழ்ந்து பாடுங்கால் உயர்வு நவிற்சியணி முதலியன கலக்கப் பெறுதல் மக்களியற்கை. அதனையே தலைவி "இல்லதும் உள்ளதும் சொல்லி" என்று கூறினாள். இத்தொடரில் தலைவி பாணனை வஞ்சகமாகப் புகழ்கிறாள். ஆதலின் இது வஞ்சப் புகழ்ச்சியணியின் பாற்படும். பாணர்கள் மிகவும் திறமையுள்ளவர்களா யிருக்க வேண்டும். தூது செல்லத் தகுதியுள்ளவர்கள் பலருள் பாணனும் ஒருவனாக அக்காலத்துக் கருதப் பெற்றனன். கொளைவல் பாணன் பாடினி கூத்தர் என்னும் அகப்பொருள் நூற்பாவையும் நுனித்துணர்க. ஆகவே அவன் தூதுப்பணியை ஆற்ற முயலும் போது தலைவிக்கும் தலைவனுக்கும் பரத்தைக்கும் சினம் வராத நிலையில் தக்க சொற்பிரயோகங்களைப் பயன்படுத்த வேண்டும். இல்லையேல் தூதாக வந்த செயல் வெற்றிபெறுவது அரிதாகும். இதனைக் குறிக்கவே "கல்லல் வாசகம் வழாமல் போ" என்ற தொடர் குறிக்கிறது. கல்லல் - மனத்தைத் துன்புறுத்திக் கலகம் செய்ய வல்லவை. கல்லுதல் என்ற வினையிலிருந்து இச்சொல் எழலாயிற்று. வாசகம் - உரைகள், வழாமல் - குற்றம் ஏற்படாமல், பரத்தையர் தலைவனிடமிருந்து பணம் பறிப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளவர்களாதலின் கொடுக்கும் இயல்பு அவர்கள் பாலிருக்காது, அதனை வலியுறுத்தவே "வண்மையில்" எனக் கூறினார். அதனால் பல இழப்புகள் நேரிட ஏதுவாதலின் அந்தப் பரத்தையின் பால் கொண்ட வெறுப்புணர்ச்சியைக் குறிப்பிப்பான் வேண்டியே "வானர மகளிர்" எனத் தலைவி குறிப்பிடுகிறாள். பரத்தையர் மிகுந்த பொருள்களைப் பறிப்பதைப் போன்றே நீயும் நிறைந்த பொருளைப் பறித்துக் கொள்கிறாய் என்பதை வெறுப்புணர்ச்சியுடன் கூறுவதை விடுத்துப் பயன் பெறுவாய் என்று கூறும் நயம் உணர்ந்தின்புறத் தக்கது, வானர மகளிரைப் போல் என்றவிடத்து உவமவுருபு தொக்கு நின்றுள்ளது. இதிலிருந்து பாணனும் உண்மை நலன் கருதிப் பணியிலீடுபடவில்லை, பொருள் கருதியே ஈடுபட்டுளான் என்பதும் தானேபோதரும்.

*"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்*
*திருநீக்கப் பட்டார் தொடர்பு" (திருக்குறள் 920)*

*ஆகவே பரத்தையரால் பெறும் இன்பத்தை ஆன்றோர் வெறுத்தொதுக்குவர். அதனாற்றான் "விழையாவின்பம்" எனப்பட்டது. பொய்மை முயக்கமாயினும் அக்காலத்து இன்பமுளது போலக் காட்டுமாதலின் அதனையும் தலைவனுக்குரிய பயனாகத் தலைவி கூறினாளென்க. திருவலஞ்சுழியின் நீர்வளத்தைச் சிறப்பிக்கவே "மணிநீர் வலஞ்சுழி" என்றார். வயல்களில் கரும்புகள் நன்கு வளர்ந்துள்ளன. அவை நன்கு முற்றிச்சாறு வழிந்தோடும் தன்மையுடையனவாயுள்ளன. கருப்பஞ்சாற்றினை நுகர்வான் வேண்டி வண்டுகள் மொய்த்துள்ளன என்பதைக் குறிப்பிடவே "சுரும்பு இவர் நறுவயல் சூழ்ந்து எழு கரும்பில் தீநீர்" என்று ஆசிரியர் கூறுகிறார். நறுவயல் என்பதை நறவயின் எனவும் எழு கரும்பில் என்பதை எழுது அரும்பில் எனவும் பாடம் கொண்டு வண்டுகள் ஒலிக்கப் பெற்று மொய்த்துள்ள தேனோடு கூடிய பூ மொட்டுகளில் உள்ள இனிய நீர் போன்று என்றும் பொருள் கொள்வர். குழந்தை வாயிலிருந்து ஊறும் நீர் கரும்பின் இனிய சாற்றுக்குவமையாகக் கூறப்பெற்றுள்ளது. குழந்தையின் சிறுபறை முழக்குதலும் காலிலணிந்த கிண்கிணியின் குரலும் மிகவும் மகிழ்ச்சி தரத்தக்கவையென்பதைப் புலப்படுத்தவே அவ்விரு ஓசைகளும் இங்கு கூறப்பெற்றன. தான் பெற்ற ஆண்குழந்தையின் மேம்பாட்டினைக் குறிப்பிடவே பெருமித உணர்ச்சி தோன்ற களிறு பெற்றனனே என்று கூறும் பாங்கு மிகவும் சிறந்துள்ளது.* ***இதனால் இல்லற வாழ்க்கையில் சில மேடு பள்ளங்கள் ஏற்படினும் தலைவியாயிருப்பவள் துன்பத்தையும் இன்பமாகக் காணும் பெற்றிமை யுடனிலங்க வேண்டும் என்னும் உண்மையைக் குறிப்பாயுணரலாம்.***

***கருத்து***

***பாணனே! தலைவன் பரத்தமையால் விளைந்த பயன்கள் மூன்றாம். தூதாகச் சென்று மிகப் புகழ்ந்த உனக்கு நிறையப் பொருள் கிடைக்கும். தலைவனுக்குப் புத்தின்பம் கிட்டும். எனக்கோ மழலை ததும்பும் குரலுடன் சிறுபறை முழக்கும் கிண்கிணிக் குரலும் கேட்கத்தக்க நிலையிலுள ஆண்யானைக் கன்று போன்ற வீரமகனைப் பெற்றெடுத்த மகிழ்ச்சி மீதூரும் என்பதாம்.***

## வெண்பா

**483** **தனம் ஏறிப் பீர்பொங்கித் தன்அங்கம் வேறாய்**
**மனம்வேறு பட்டொழிந்தாள் மாதோ – இனம்ஏறிப்**
**பாடாலம் வண்டலம்பும் பாய்நீர் வலஞ்சுழியான்**
**கோடாலம் கண்டணைந்த கொம்பு. (14)**

**சொற்பொருள்**

| | |
|---|---|
| *பாடாலம்* | - *பாதிரி மரத்தின் மீது* |
| *வண்டு இனம்* | - *வண்டுக் கூட்டங்கள்* |
| *ஏறி மொய்த்து* | |
| *அலம்பும்* | - *ஒலிக்கின்ற* |
| *பாய் நீர்* | - *(நிறைந்த நீர்வளம் எங்கும்) பரந்து காணப் பெறுகின்ற* |
| *வலஞ்சுழியான்* | - *திருவலஞ்சுழியிலுள்ள சிவபெருமானின்* |
| *கோடாலம்* | - *பிறைச் சந்திரனைப் போன்ற மாலையை* |
| *கண்டு* | - *பார்த்து விருப்பமிக்கு* |
| *அணைந்த* | - *அதனைப் பெற தலைவனை நெருங்கிச் சென்ற* |
| *கொம்பு* | - *இளங்கொம்பு போன்ற தலைவிக்கு* |
| *தனம் ஏறி* | - *முலைகள் பருத்து விம்மவும்* |
| *பீர் பொங்கி* | - *தேமல் நிறைந்து காணப் பெறவும்* |
| *தன் அங்கம்* | - *தன் உறுப்புகள் யாவும்* |
| *வேறு ஆய்* | - *(தலைவனை அடைய விரும்பும் பரவச மேலீட்டால்) வேறுபட்டுத் தோன்றவும்* |
| *மனம் வேறுபட்டு* | - *தலைவியின் மனமானது (தலைவனின் மீது கொண்ட காதலால்) தன் நிலையிலின்றிப் பிறழ்ந்து* |
| *ஒழிந்தாள்* | - *(செயலின்றிக்) கிடந்தாள் என்றவாறு.* |

**விளக்கம்**

*இது தலைவி தலைவன் பாற் கொண்ட பெருங் காதலை நினைத்துத் தோழி கூறிய கூற்றாகும். பாடலம் என்பது பாடாலம் என எதுகை நோக்கி நீண்டது நீட்டல் விகாரம். பாடலம் - பாதிரி மரம். அலம்புதல் - ஒலித்தல். பாய்தல் - பரத்தல். பாய்நீர் வலஞ்சுழி என்பதிலிருந்து காவிரியின் நீர்ப் பாய்ச்சலால் திருவலஞ்சுழியிலிருந்த நீர் வளத்தை உணரலாம்.*

*கோடு + ஆலம் = கோடாலம் என்றாயிற்று. கோடு - பிறைமதி. ஆலம் - மலர். ஈண்டு மாலையைக் குறித்து வந்துளது. பிறை மதி போன்ற மலர்மாலை எனப்பொருள் கோடல் ஆகும். கோடு மிலைந்தான் எனும் திருக்கோவையார் (பாடல் 149) ஆட்சியிலும் கோடு பிறைமதி என்னும் பொருளில் ஆண்டிருத்தல் காண்க. அணைதல் - மாலையைப் பெறுதல் காரணமாகத் தலைவனைத் தலைவி நெருங்குதலாம். கொம்பு - இளங்கொம்பு போன்ற தலைவியைக் குறித்துள்ளது. வலஞ்சுழிக் கொங்குதங்கு நாறுதண் கொம்பரன்னீர் என்று கொம்பு பெண்ணைக் குறிக்க வந்துள்ளமை 12 ஆம் பாடலாலும் உணரலாம். தலைவன் மேற்கொண்ட காதலால் தலைவிக்கு ஏற்பட்ட மாறுதல்கள் முலை விம்மிப் பருத்தல், தேமல்*

*நிறைதல், உறுப்புகள் விகாரமடைதல், மனம் ஒருநிலையின்றிச் சலனம் கொள்ளுதல் முதலியனவாம். இவ்விகற்பங்களையெல்லாம் ஆசிரியர் இச்செய்யுளில் நிரல் பெறப் பொதுள வைத்துள்ளார். ஏறி, பொங்கி ஆய், பட்டு ஆகிய எச்சங்களைச் செயவென்னெச்சமாக்கிப் பொருள் கோடல் சிறப்புடைத்தாம். ஒழிதல் - சுயநிலை மாறிச் செயலற்றுக் கிடத்தல். மாது, ஓ - அசைநிலைகள்.*

### கருத்து

*திருவலஞ்சுழிப் பெருமானை நினைந்து தலைவியின் பெருங்காதல் காரணமாக அவன் மாலையை விரும்பிய தலைவிக்கு ஏற்பட்ட அங்க வேறுபாடுகளையும் இறுதியில் செயலற்ற தன்மையையும் இச்செய்யுள் தெரிவிக்கின்றது என்பதாம்.*

## கட்டளைக் கலித்துறை

**484** **கொம்பார் குளிர்மறைக் காடனை வானவர் கூடிநின்று**
**நம்பா எனவணங் கப்பெறு வானை நகரெரிய**
**அம்பாய்ந் தவனை வலஞ்சுழி யானைஅண் ணாமலைமேல்**
**வம்பார் நறுங்கொன்றைத் தாருடையானை வணங்குதுமே.** **(15)**

### சொற்பொருள்

| | |
|---|---|
| *கொம்பு ஆர்* | *- மரக்கிளைகள் செறிந்துள்ளதால்* |
| *குளிர்* | *- குளிர்ச்சியோடு காணப் பெறும்* |
| *மறைக்காடனை* | *- திருமறைக் காட்டில் விருப்பமாக வீற்றிருக்கும் பெருமானை* |
| *வானவர்* | *- தேவர்கள்* |
| *கூடி நின்று* | *- வணங்குதற்குக் கூட்டமாக நெருங்கி வந்து* |
| *நம்பா என* | *- எல்லோராலும் விரும்புதற்குரிய பெருமானே என்று* |
| *வணங்கப் பெறுவானை* | *- துதிக்கப்படுபவனாகிய சிவனை* |
| *நகர்* | *- திரிபுரங்களும்* |
| *எரிய* | *- வெந்து அழியும்படி* |
| *அம்பு ஆய்ந்தவனை* | *- திருமாலாகிய அம்பினைத் தெரிந்து எய்ய விரும்பிய தலைவனை* |
| *வலஞ்சுழியானை* | *- திருவலஞ்சுழியையே தன் சிறந்த இருப்பிட மாகக் கொண்ட பரம்பொருளை* |

| | |
|---|---|
| அண்ணாமலை மேல் | - திருவண்ணாமலையினிடத்து |
| வம்பு ஆர் | - (வீற்றிருந்து) புதிதாக அன்று அலர்ந்த |
| நறுங் கொன்றை | - வாசனை பொருந்திய கொன்றைப் பூவால் கட்டப் பெற்ற |
| தாருடையானை | - மாலையை அணிந்த சிவபெருமானைப் |
| வணங்குதுமே | - போற்றி வணங்கித் துதிப்போமாக என்றவாறு. |

**விளக்கம்**

*இச்செய்யுள் "வம்பார் குன்றம் நீடுயர் சாரல்" என்னும் திருஞான சம்பந்தர் அருளிய திருக்குற்றாலத் திருப்பதிகத்தினை நினைவு படுத்துவதை உணர்தல் தகும். மரங்கள் நிறைந்திருத்தலால் மரக்கிளைகளும் நிறைந்து அடர்த்தியாயிருத்தல் இயல்பே. மரக்கிளைகளின் செறிவால் குளிர்ச்சியும் யாண்டும் நிறைந்துள்ளது என்பதைக் குறிப்பிடவே குளிர் மறைக்காடனை என ஆசிரியர் குறிப்பிடுகிறார். நம்பன் - நம்புதற்குரியவன், விரும்பப் பெறுபவன் என்னும் பொருளதாம். நகர் - முப்புரம். அம்பு ஆய்தல் எய்தற் பொருட்டாதலின் அம்பாய்ந்தவனை என்றார். வம்பு - புதுமை. நறுங்கொன்றை என்று வந்துளதால் வம்பு என்பதற்கு வாசனை எனப் பொருள் கொளாது புதுமை எனப் பொருள் கொள்ளப்பட்டது. இச்செய்யுளில் சிறந்த பாடல் பெற்ற திருத்தலங்களாய திருமறைக்காடு, திருவலஞ்சுழி, திருவண்ணாமலை என்னும் மூன்றின் சிறப்பினையும் ஆசிரியர் சிறக்கக் கூறியுள்ளார். அவனை வணங்குவது தான் நாம் செய்யத்தக்கது என்பதை இவ்விறுதிச் செய்யுள் வற்புறுத்துகிறது.*

**கருத்து**

*திருமறைக்காடு, திருவலஞ்சுழி, திருவண்ணாமலையில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் பரம்பொருளை வணங்குவதுதான் நாம் மேற்கொள்ளத்தகும் தலையாய கடமை என்பதாம்.*

## அருஞ்சொற்பொருளகராதி

| | | |
|---|---|---|
| அண்ணல் | - | பெருந்தகை (1), (4) |
| அலம்புதல் | - | ஒலித்தல் (13) |
| ஆலம் | - | மலர், மலையையும் குறிக்கும் (14) |
| ஆனேறு | - | இடபம் (11) |
| இருமை | - | கருமை (4) |
| இவர்தல் | - | மொய்த்தல் (13) |
| உடுத்தல் | - | சூழ்தல் (1) |
| உன்னுதல் | - | இடைவிடாது நினைத்தல் (2) |
| ஊரன் | - | மருத நிலத் தலைவன் (13) |
| எங்கை | - | என் தங்கை (13) |
| ஏறுதல் | - | மொய்த்தல் (11) |
| ஏறுதல் | - | விம்முதல் (14) |
| கல்லல் | - | கலகம் (13) |
| கழல் | - | திருவடி ஞானம் (2) |
| களிறு | - | ஆண் யானை (13) |
| காணுதல் | - | நுகர்தல் (2) |
| கார் | - | கருமை (6) |
| காவி | - | நீலோற்பல மலர் (10) |
| கொங்கு | - | தேன் (12) |
| கொம்பர் | - | இளம் பூங்கொம்பு போன்ற பெண் (12) |
| கொழித்தல் | - | வாரிக் கொண்டு வருதல் (1) |
| கோடு | - | பிறைமதி (14) |
| சங்கு | - | வளையல் (8) |
| சருவரி | - | இரவு (7) |
| சாந்து | - | சந்தனம் (10) |
| சாரல் | - | மலைச் சரிவு |
| சூழல் | - | சுற்றுச்சார்பு (10) |
| சேண் | - | தூரம் (12) |
| தடம் | - | குளம், நீர்நிலை (4) |
| தவளம் | - | வெண்மை (10) |

| | |
|---|---|
| தளர்தல் | - *வருந்துதல் (3)* |
| தாது | - *மகரந்தப்பொடி (5)* |
| தீண்டுதல் | - *தடவிக் கொடுத்தல் (10)* |
| துறை | - *நீர்நிலையில் பலரும் பழகுமிடம் (10)* |
| தேம்பல் | - *வாட்டம் (10)* |
| தேன் | - *வண்டு (11)* |
| தை வருதல் | - *தடவுதல் (5)* |
| நக்கன் | - *தனக்கென ஓர் ஆடையின்றித் திசையையே ஆடையாகவுடைய சிவன் (9) நிர்வாண முடையோன் (9)* |
| நம்பன் | - *விரும்புதற்குரியவன் (15)* |
| முகத்தல் | - *நீர் மொள்ளுதல் (1)* |
| முந்நீர் | - *கடல் (3)* |
| முறுவல் | - *பல் (4)*<br>*புன்னகை (4)* |
| மை | - *கரிய மேகம் (11)* |
| வங்கம் | - *கப்பல் (9)* |
| வண்ணம் | - *தன்மை (3)*<br>*நிறம் (3)*<br>*பண்பு (3)*<br>*மாட்சி (3)*<br>*சிறப்பு (3)*<br>*காட்சி (3)* |
| வம்பு | - *புதுமை (15)* |
| வாசகம் | - *உரை (13)* |
| விறலி | - *ஆடலில் வல்ல பாண் மகள் (13)* |
| வேழம் | - *ஆண் யானை (7)* |

## 14. நக்கீரதேவ நாயனார்

*அருளிச்செய்த*

## கோபப் பிரசாதம்

***ஆசிரியப்பா***

***திருச்சிற்றம்பலம்***

*கோபம் - வெகுளி. அஃது ஆகுபெயராய் அதனால் நிகழ்த்திய செயல்களைக் குறித்தது. பிரசாதம் - அருள். அதுவும் அவ்வாறு அதனால் நிகழ்த்திய செயல்களைக் குறித்தது. கோபமும் அருள் காரணமாகவே எழுந்தமையின் இங்குக் கூறப்படும் இருவகை நிகழ்ச்சிகளும் முறையே 'மறக் கருணை', 'அறக் கருணை' எனப்படும். இந்நூல் 100 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவாகும். சிவபெருமான் தீயோரைக் கோபித்தும், நல்லோரைக் காத்தும் உயிர்களின் வினைநீக்கம் கருதிச் செய்தருளிய செயல்களைக் கூறுவது. இன்னவை பிறவும் எங்களீசன் கோபப் பிரசாதம் (41-42 அடிகள்) என ஆசிரியர் கூறுவதால் இந்நூல் பெயர் "கோபப் பிரசாதம்" என்பது தெளிவாகின்றது. நூலின் தொடக்கத்தையும், நிறைவையும் ஆசிரியர் ஒரே சொற்றொடரால் அலங்கரித்திருப்பதை இரசிக்க வேண்டும். கோபம், பிரசாதம் என்பன இறைவனாரது கோபச் செயலும், அநுக்கிரகச் செயலுமாம்.*

*வேண்டுதல் வேண்டாமையிலானாகிய சிவபெருமான் தன் திருவருளாணை வழி நில்லாத தீயோரைத் தண்டித்தும் தனது அருள்வழி யொழுகும் நல்லோரைக் காத்தும் மன்னுயிர்களின் நலங்கருதிச் செய்தருளிய தெறலும் அளியுமாகிய இருவகைச் செய்திகளையும் அடுத்தடுத்து எடுத்துரைப்பது நக்கீரதேவர் பாடிய கோபப் பிரசாதம் என்னும் பிரபந்தமாகும். இது தொண்ணூற்றொன்பது அடிகளால் இயன்ற ஆசிரியப்பாவாகும். இதன் கண் இறைவன் அவ்வக்காலந்தோரும் செய்தருளிய அளியும் தெறலுமாகிய செய்திகள் பலவற்றைக் குறிப்பிட்டு நாமெல்லாம் சிவபெருமானின் கோபத்துக்கு ஆளாகாமல் வினைநீக்கத்துக்கு முயலவேண்டும் என்று கூறுகிறார். ஈண்டுக் கோபம் என்றது வெகுளியின் விளைவாகிய ஒறுத்தற்றொழிலையும் பிரசாதம் என்றது அருளின் விளைவு ஆகிய அளித்தற்றொழிலையும் உணர்த்துதல் காண்க.*

*தம்பால் அடைக்கலமெனச் சார்ந்தாரைக் காப்பது தலையாய பெருமக்களது கடமையாதலானும், தன் ஆணைவழியடங்காத கொடியோரை ஒறுத்தல் வேந்தனது முறைமையாகலானும் எவ்வுயிர்க்குந் தலைவனாகிய இறைவனும் தன்பால் அன்புடையராய் அருளாணைவழி அடங்கியொழுகும் மெய்யடியார்களைக் காத்தலும் அருள் ஆணைவழியொழுகாத தீயோரைச் சினந்து ஒறுத்தலும் ஆகிய இவ்விரு தொழில்களையும் தனக்குரிய கடமையும் முறைமையுமாக மேற்கொண்டு உள்ளான். அளியுந் தெறலுமாகிய*

இத்தொழில்களை இறைவன் மேற்கொள்ளுற்குக் காரணமாவன உயிர்கள் செய்த நன்றுந் தீதுமாகிய இருவினைகளேயாம். இருவினைப் பயன்களை உயிர்களுக்கு அருத்துதல் முதல்வனது அருளாணையாதலின் அப்பயன்களை நுகர்விக்கும் நிலையில் ஒரு திறத்தாரை விரும்புதலும் மற்றொரு திறத்தாரை வெறுத்தலும் ஆகிய மனக்கோட்டம் இறைவனுக்கு உண்டாதலில்லை. எவ்வுயிர்க்கும் இன்பந் தருதலாற் சங்கரன் என்பது இறைவனுக்குரிய காரணப் பெயராகும். எனவே அவ்விறைவனாற் செய்யப்படும் ஒறுத்தற்றொழிலும் அருளின்வழிப்பட்டதே யாகும். இறைவனது திருவருளாணைவழி அடங்கியொழுகுவோர் செய்வன வெல்லாம் அறத்தின்பாற்பட்டன. அவ்வருள் ஆணைவழி அடங்கி நில்லாதோர் தன்முனைப்பினாற் செய்யுந் தொழில்கள் தீமையுடையன என்பது திருநெறித் தமிழ்வல்ல சான்றோர்களது கொள்கையாகும். இவ்வுண்மையை உளத்துட் கொண்டு நக்கீரதேவர் பாடிய கோபப் பிரசாதம் என்னும் இத்திருப்பாடலின் பொருளை ஆராய்ந்துணர்தல் அறிஞர் கடனாகும்.

'தவறுபெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே' என இப்பாடலைத் தொடங்கிய நக்கீரதேவர், 'மூர்க்க மாக்களை இன்னே கொண்டேகாக் கூற்றம், தவறு பெரிதுடைத்தே' என முடிக்கின்றார். இறைவன் அவ்வக் காலந்தோறும் செய்தருளிய அளியுந் தெறலுமாகிய செயல்கள் இப்பாடலின் முதற்கண் முறைப்படச் சொல்லப் பெற்றுள்ளன.

இறைவன் செய்தருளும் அருட்செயல்களை நான்முகன் இந்திரன் முதலிய தேவர்கள் ஓரளவு எடுத்துரைத்தற்கு ஏற்ற அறிவுடையாரெனினும் பெருங்கடல் நீரைக் கையினால் இறைக்க முயன்ற குருடனைப் போன்று அதனை முற்றமுடித்தற்கேற்ற அறிவாற்றல் பெறாதுள்ளார்கள். ஐம்பொறி வழியாகச் செல்லும் ஐந்தவாவினையும் அடக்கும் அறிவாற்றல் பெறாத மாந்தர் தம்மை யொத்துப் புலனடக்கப் பெறாத இந்திரனைப் பரம்பொருள் எனக்கூறுவர். இன்ன தன்மையன் என அறியவொண்ணாதபடி வாக்கும் மனமுங் கடந்து விளங்கும் முழுமுதற்பொருள் ஆகிய சிவபெருமானைச் சரணெனச் சாராது ஏனைப் பிறந்திறந்துழலுந் தேவர்களைக் கடவுளாக நினைப்போர் முயலைத் தொடராது இழிந்த காக்கையைப் பிடிக்கச் செல்லும் வேடர்களாகிய மூடர்களைப் போன்றும் குளிர் நீங்கச் சுடர்வழங்க வல்ல விளக்கிருக்கவும் அதனைச் சார்ந்து பயன்பெறாது மின்மினிப் பூச்சியைத் தீயென மயங்கிக் குளிர்காய நினைக்கும் பேதையரைப் போன்றும் காலத்தை வீணே கழிக்கின்றார்கள். தன்னை வழிபடுபவரது இடர்களைக் களைய மடிதற்றுத் தான் முந்துறும் முழுமுதற் பொருளாகிய இறைவனை எண்ணாது இடர்நீக்கும் ஆற்றலற்ற ஏனைக் கொச்சைத் தேவரைக் கடவுளென்றெண்ணி பித்தேறியவர்களாய் ஆரிய மொழியில் தாம் பயின்று பெற்ற புத்தகப்படிப்பையே பேய்போன்று விடாப் பிடியாகப் பற்றிக்கொண்டு இன்னோர் திறம்பட வாதஞ்செய்வர். தாம் விரும்பியவற்றைப் பேசி வடிவால் மக்களே போன்று திரியும் இவர்கள் மிகவும் அறியாமையுடையர். இவ்வுலகில் ஒருவன் மற்றொருவனைப் பார்த்து உனது

*தலையிலுள்ள மூளைப்பகுதி மீனின் தலையை விட எட்டுப்பலம் மிகுதியுடையது எனக் கூறினால் அது சரிதானா எனத் தெரிந்து கொள்ள விரும்பி அவனாற் சுட்டப்பட்டவனது தலையையறுத்துச் சரிபார்த்தற்கு யாரும் உடன்பட மாட்டார்கள். இவ்வாறு மக்களது அநுபவ உணர்வுக்கு ஒவ்வாத வகையிற் புனைந்துரை வழக்கிற் பேசப்படும் சிறுதேவர்கள் முழுமுதற் கடவுளென்பது உண்மையானால் அத்தேவர்கள் தமது ஆற்றலால் இன்னாரை அழித்தார்களெனவும் இன்னாரைப் பாதுகாத்தார்களெனவும் அன்னோர் தம்மை வழிபட்டாரை வாழ்வித்தல் வேண்டி மேற்கொண்ட ஒறுத்தற் செயல்களையும் அளித்தற் செயல்களையும் உலக மக்களறியத் தெளிவாக எடுத்துரைத்தல் வேண்டும். இங்ஙனம் இவர்கள் தம் கொள்கையினை ஏதுவும் எடுத்துக்காட்டும் தந்துரைப்பது இல்லை. எனினும் உரனில்லாத ஆடுகளைப் போல அச்சத்தாற் கூடிக்கதறியும் நினை விலங்குகளைப் போல ஐம்புல வேட்கையிற் சிக்குண்டு வருந்தியும் இவ்வுலக வாழ்வில் தாம்பெற்ற சிற்றறிவையே பேரறிவாகக் கொண்டு மயங்கியும் உயிர்க்குயிராகிய இறைவனை இன்ன தன்மையன் என அவனருளால் உணர்ந்து கொள்ள மாட்டாத மூர்க்கர்களாக உள்ளார்கள். இத்தகைய தீயோர்களால் இவ்வுலகிலுளவாந் தொல்லைகளுக்கு எல்லையேயில்லை. ஆதலின் இத்தகையோரது உயிரை இப்பொழுதே கவர்ந்து செல்லுதல் கூற்றுவனது கடமையாகும். இக்கடமையை உரிய காலத்தில் செய்யாத கூற்றம் பெரிதும் குற்றமுடையதே' என நக்கீரதேவர் மனம் வருந்திக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.*

*'முயல்விட்டுக் காக்கைக்குப்பின் போதல்' என்பதொரு பழமொழி. வேட்டைக்குச் செல்வோன் தன்னால் தொடர்ந்து பிடித்தற்குரியதும் நிறைந்த தசையுடையதும் ஆகிய முயலைத் தொடராமல் தசைப் பற்றில்லாத பறவை யாகிய இழிந்த காக்கையை நாடித்திரிதல் பயனில்லாத முயற்சியாகும். பயனுடைய நற்செயல்களை விடுத்துப் பயனில்லாத வெறுஞ் செயல்களிற் காலத்தைக் கழிக்கும் வீணர்களின் இயல்பினை விளக்குவதற்கெழுந்த பழமொழிகளில் இதுவும் ஒன்று. 'விளக்கிருக்கமின்மினித் தீக்காய்தல்' என்ற பழமொழியும் இக்கருத்தில் வழங்குவதேயாகும். இப்பழமொழிகள் திருநாவுக்கரசர் பாடிய பழமொழித் திருப்பதிகத்தில் எடுத்தாளப் பெற்றுள்ளன. நாவுக்கரசர் பதிகத்திற் காணப்படும் இப்பழமொழிகளை நக்கீரதேவர் தாம் பாடிய கோபப் பிரசாதத்தில் எடுத்து ஆண்ட திறம் கூர்ந்துணரத் தக்கதாகும்.*

*பரம்பொருளாகிய தெய்வம், தன்னை வழிபட்டாரது குடும்பத்தை மேன்மேல் உயர்த்தும் பேராற்றலும் பெருங்கருணையுமுடையது என்னும் உண்மையினை,*

> *"குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ*
> *மடிதற்றுத் தான் முந்துறும்"*    *குறள் 1023.*

*எனவருந் திருக்குறளில் தெய்வப்புலவர் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.*

**487.** தவறுபெரி துடைத்தே! தவறுபெரி துடைத்தே!
வெண்திரைக் கருங்கடல் மேல்துயில் கொள்ளும்
அண்ட வாணனுக்(கு) ஆழிஅன் றருளியும்
உலகம் மூன்றும் ஒருங்குடன் படைத்த
**5** மலரோன் தன்னை வான்சிரம் அரிந்தும்

---

*திருவள்ளுவர் கூறிய இத்தெய்வத் தன்மை இந்திரன் முதலிய தேவர்களுக் கில்லையென்பார். 'கச்சங்கொண்டு கடுந்தொழில் முடியாக் கொச்சைத் தேவர்' என்றார் நக்கீரதேவர். கச்சம் - ஆடை, கச்சங்கொண்டு என்பதற்கு ஆடையை இறுகவுடுத்து என்பது பொருள். தான் ஐம்புலன்களை அடக்காமல் சாபமெய்தி நின்று புலன் அடக்கிய கௌதம முனிவனது ஆற்றலை விளக்கியவன் இந்திர னாதலின் 'ஒடுங்காப் பெருமை உம்பர் கோன்' என்றார். 'ஐந்தவித்தானாற்றல் அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலுங்கரி' என்றார் திருவள்ளுவரும்.*

*"உள்ள முள்கசிந் துள்க வலார்க்கலாற்*
*கள்ள முள்ளவழிக் கசிவானலன்"*

*எனத் திருநாவுக்கரசரும்,*

*"தாயேயாகி வளர்த்தனை போற்றி"*

*"மாற்றமனங்கழிய நின்ற மறையோனே"*

*எனத் திருவாதவூரடிகளும் அருளிய பொருளுரைகளை,*

*"கள்ளங் கைவிட் டுள்ளம துருகிக்*
*கலந்து கசிந்துதன் கழலிணையவையே*
*நினைத்திட வாங்கே தோன்று நிமலனை"*

*"தாயாய் மன்னுயிர் தாங்குந் தலைவனை"*

*"வாக்கு மனமும் இறந்த மைந்தனை"*

*எனவருங் கோபப் பிரசாதத் தொடர்கள் நினைவு படுத்தல் காணலாம்.*

*487. (அடி-1) ஈற்றயல் அடியில் வரும் "கூற்றம்" என்பதை முதல் அடிக்கும் கூட்டி, 'என்னை' என்னும் வினா வருவிக்க. (அடி-3) அண்ட வாணன் - தேவன். கடல் மேல் துயில் கொள்ளும் தேவன் - திருமால். ஆழி - சக்கரம். மலரோன் - பிரமன். பிரமனைச் சிரம் அரிந்த வரலாறு மேல் பெருந்தேவ பாணி உரையில் கூறப்பட்டது. (அடி-6) வேடுவன், கண்ணப்ப நாயனார். இவர் வரலாறு இத்திருமுறையில் வேறு பாடல்களிலும், பெரியபுராணத்திலும் விளங்கக் கூறப்பட்டது. பரிந்து - பெயர்த்து. மற்று, அசை (அடி-8) கடி படு - நறுமணம் பொருந்திய. காமனார் - மன்மதன். ஆர் விகுதி இழிவு குறித்தது. பொடிபட -*

கான வேடுவன் கண்பரிந் தப்ப
வான நாடு மற்றவற் கருளியும்
கடிபடு பூங்கணைக் காம னாருடல்
பொடிபட விழித்தும் பூதலத் திசைந்த
10 மானுட னாகிய சண்டியை

வானவன் ஆக்கியும்
மறிகடல் உலகின் மன்னுயிர் கவரும்
கூற்றுவன் தனக்கோர் கூற்றுவ னாகியும்
கடல்படு நஞ்சங் கண்டத் தடக்கியும்
15 பருவரை சிலையாப் பாந்தள் நாணாத்

---

*சாம்பலாகும்படி. (அடி-10) சண்டி - சண்டேசுர நாயனார். இவரது வரலாறும் பெரியபுராணத்துட் காணத்தக்கது. (அடி-12, 13) 'சிவபெருமான் கூற்றுவனுக்குக் கூற்றுவனாய் யமனை உதைத்தது மார்க்கண்டேயருக்காக' என்பது நன்கறியப்பட்டது. (அடி-14) தேவாசுரர் பாற்கடலைக் கடைந்தபொழுது அவர்கள் நினைத்தபடி அமுதம் எழாமல் ஆலகால விடம் தோன்றினமையால் அவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கிச் சிவபெருமான் தான் அதனையுண்டு கண்டத்தில் நிறுத்தினான். அதனால் கண்டம் நீலகண்டம் ஆயது. (அடி - 15, 16) ஒரு மலையை வில்லாகவும், 'வாசுகி' என்னும் பாம்பினை நாணாகவும் கொண்டு ஒரு கணையால் முப்புரத்தை அழித்தமை சங்க இலக்கியத்திற்றானே'[1] சொல்லப்பட்டது. (அடி-17, 18) சாக்கிய நாயனார் கல் எறிந்து பேறு பெற்ற வரலாறும் பெரியபுராணத்துள்ளே காணத்தக்கது. தற் கொண்டு - தனக்கு ஏற்புடைத்தாகக் கொண்டு (அடி-19, 20) கூற்றென - யமன்போல, கோளரி - சிங்கம். யானைக்குப் பகை சிங்கம். வாரணத்து ஈர் உரி - யானையினின்றும் உரித்த தோல், யானையாய் வந்து எதிர்த்தவன் கயாதரன் (அடி - 21, 22) நந்தீச்சுவரன், நந்திதேவர். இவர் செய்த தவத்திற்காக இவருக்குச் சிவபெருமான் தனது உருவைக் கொடுத்தலாகிய சாரூப பதவியைத் தந்தருளினான். நற்றா - நல்லதாக; நல்லது உண்டாக. (அடி - 23, 24) அறிவு - அறியத்தக்க பொருள். ஓரார் - ஆராய்ந்துணராத அரக்கனார், இராவணன். இங்கும் ஆர் விகுதி இழிவு குறித்து நின்றது. "நெறு நெற" என்பது ஒலிக் குறிப்பு. (அடி - 25, 26) அசுரன், வாணன். இவன் செய்த பூசைக்காக இவனுக்குச் சிவபெருமான் தனது சாரூபத்தை வழங்கித் தான் நடனம் புரியும் பொழுது குடமுழா வாசிக்கப் பணித்தருளினான். சாரூபம் பெற்றமையால் அவனுக்கு ஊர்தியும் இடபமாயிற்று. ஏறு - இடபம் (அடி-27) பல் கதிர் உரவோன், சூரியன். இவன் பல்லைத் தகர்த்தது தக்கன் வேள்வி அழிப்பில். அதனைக் கந்தபுராணத்துட் காண்க. (அடி-28) பிருங்கிருடி,*

---

*1. புறநானூறு - 55.*

திரிபுரம் எரிய ஒருகணை துரந்தும்,
கற்கொண் டெறிந்த சாக்கியன் அன்பு,
தற்கொண் டின்னருள் தான்மிக அளித்தும்,
கூற்றெனத் தோன்றியுங், கோளரி போன்றும்
20 தோற்றிய வாரணத் தீருரி போர்த்தும்.

நெற்றிக் கண்ணும் நீள்புயம் நான்கும்
நற்றா நந்தீச் சுவரற் கருளியும்,
அறிவினை ஓரா அரக்க னாருடல்
நெறுநெற இறுதர ஒருவிரல் ஊன்றியும்
25 திருவுரு வத்தொடு செங்கண் ஏறும்

அரியன திண்திறல் அசுரனுக் கருளியும்,
பல்கதிர் உரவோன் பற்கெடப் பாய்ந்து,
மல்குபிருங் கிருடிக்கு மாவரம் ஈந்தும்,
தக்கன் வேள்வி தகைகெடச் சிதைத்து
30 மிக்கவரம் நந்தி மாகாளர்க் கருளியும்.

---

*கணங்களில் ஒருவர். "தண்டி குண்டோதரன் பிருங்கிருடி"[1] என அப்பரும் அருளிச் செய்தார். (அடி - 29) தக்கன் வேள்வியை அழித்தது கந்தபுராணத்துள் விரித்துக் கூறப்பட்டது. (அடி-30) நந்திமாகாளர், திருக்கயிலைக் காவலருள் தலைவர். அத்தலைமை அளித்தது மிக்க வரம் ஆதல் அறிக. (அடி-31) தீக்கடவுள் - அக்கினி தேவன் இவனது கையை அறுத்தது தக்கன் வேள்வியில் (அடி-32) 'நெடும்படை பைந்தார்ப் பார்த்தற்கு அருளியும்' என மாற்றியுரைக்க. நெடும் படை - பெரிய அத்திரம். பார்த்தன் - அருச்சுனன். (அடி-33) "கதிர்" என்றது நிலவை. 'காலால் பயன் கெடுத்து' என்க. பயன் கெடுத்தது, கீழே தேய்த்து வலியிழக்கச் செய்தது. இதுவும் தக்கன் வேள்வியில் (அடி-34) நீள் நகர், அளகாபுரி (அடி-37) தாருகன், இவன் கந்தபுராணத்தில் சொல்லப்பட்ட தாரகன் அல்லன், அவனின் வேறானவன். "கானகம் உகந்த காளி தாருகன் - பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்"[2] எனச் சிலப்பதிகாரத்து கூறப்பட்டது காண்க. (அடி-38) சிலந்திக்கு அரசளித்ததைப் பெரியபுராணம் கோச்செங்கட் சோழர் வரலாற்றில் காண்க. (அடி-39) கார் - கருமை; அழகு. திருமாலின் ஊர்தியாகிய கருடனை இடபத்தின் மூச்சுக் காற்றில் அகப்பட்டு உழலச் செய்ததைக் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த படலத்தில் காண்க. (அடி-44) புடம் - மறைப்பு; நிழல் (அடி-46) ஆதர் - அறிவிலார். கடல்நீரை உள்ளங்கையினால் இறைக்கும் அறிவில்லாதவரும்*

---

*1. திருமுறை - 6. 93. 7*

*2. வழக்குரை காதை - அடி 39, 40*

செந்தீக் கடவுள்தன் கரதலஞ் செற்றும்,
பைந்தார் நெடும்படை பார்த்தற் கருளியும்,
கதிர்மதி தனையோர் காற்பயன் கெடுத்தும்,
நிதிபயில் குபேரற்கு நீள்நகர் ஈந்தும்,
35 சலந்தரன் உடலந் தான்மிகத் தடிந்தும்.

மறைபயில் மார்க்கண் டேயனுக் கருளியும்,
தாருகற் கொல்லமுன் காளியைப் படைத்தும்,
சீர்மலி சிலந்திக் கின்னர சளித்தும்,
கார்மலி உருவக் கருடனைக் காய்ந்தும்,
40 ஆலின் கீழிருந் தறநெறி அருளியும்.

இன்னவை பிறவும் எங்கள் ஈசன்
கோபப் பிரசாதங் கூறுங் காலைக்
கடிமலர் இருந்தோன் கார்க்கடற் கிடந்தோன்
புடமுறு சோலைப் பொன்னகர் காப்போன்
45 உரைப்போ ராகிலும் ஒண்கடல் மாநீர்.

அங்கைகொண் டிறைக்கும் ஆதர் போன்றுளர்;
ஒடுங்காப் பெருமை உம்பர் கோனை
அடங்கா ஐம்புலத் தறிவில் சிந்தைக்
கிருமி நாவாற் கிளத்தும் தரமே, அதாஅன்று
50 ஒருவகைத் தேவரும், இருவகைத் திறமும்.

---

*இருக்கின்றார்கள். 'உளர் ஆவர்' ஆக்கம் வருவித் துரைக்க. (அடி-47) ஒடுங்கா - முடிவு பெறாத. உம்பர்கோன். சிவபெருமான் (அடி-49) "கிருமி" என்றது ஆசிரியர் தம்மையே குறித்தது. பரம் - அளவு. ஏகாரம், எதிர் மறை வினா. (அடி-50) ஒருவகைத் தேவர், சுவர்க்க லோகவாசிகள் திறம் - கூறுபாடு. இருவகைக் கூறுபாடு புண்ணியம் பாவம் (அடி-52) இரதம், நாவால் நுகரப்படும் சுவை. (அடி-53) ஓசை - இசை. ஞானம், புத்திகுணபாவகங்கள் எட்டில் ஒன்று. இஃது எண் வகைப்படுதலைச் சிவஞான போதம் 2ஆம் சூத்திர பாடியத்தால் உணர்க. (அடி-54) நவரத்தினங்கள் போல ஒன்பது வகையான நிறம் உடைய மலர்கள் விரும்பப்படுகின்றன. (அடி-55) "பத்தின் வகை" என்பதனை, "பத்துக் கொலாம் அடியார் செய்கை தானே"[1] என்னும் அப்பர் திருமொழியால் உணர்க. (அடி-56) 'நினைவோர்க்கு இன்பனை' என மாற்றிக் கொள்க. (அடி-60) (அடி-70) கல் - மலை. கண்டன் - அளவுட்படுபொருள்களாய் உள்ளான். (அடி-71) தொன்மை, தொன்மைத்தான பொருள்; ஆகுபெயர். (அடி-72) நித்தன் - அழிவில்லாதவன்.*

---

*1. திருமுறை - 4. 18. 10*

மூவகைக் குணமும், நால்வகை வேதமும்,
ஐவகைப் பூதமும், அறுவகை இரதமும்,
எழுவகை ஓசையும், எண்வகை ஞானமும்,
ஒன்பதின் வகையாம் ஒண்மலர்ச் சிறப்பும்,
55 பத்தின் வகையும் ஆகிய பரமனை

இன்பனை நினைவோர்க்(கு) என்னிடை அமுதினைச்,
செம்பொனை, மணியினைத் தேனினைப்பாலினைத்,
தஞ்சமென் றொழுகுந் தன்னடி யார்தம்
நெஞ்சம் பிரியா நிமலனை, நீடுயர்
60 செந்தழற் பவளச் சேணுறு வரையனை.

முக்கட் செல்வனை, முதல்வனை, மூர்த்தியைக்,
கள்ளங் கைவிட் டுள்ளம துருகிக்
கலந்து கசிந்துதன் கழலினை யவையே
நினைந்திட ஆங்கே தோன்றும் நிமலனைத்,
65 தேவ தேவனைத் திகழ்சிவ லோகனைப்

பாவ நாசனைப் படரொளி உருவனை,
வேயார் தோளி மெல்லியல் கூறனைத்
தாயாய் மன்னுயிர் தாங்குந் தந்தையைச்
சொல்லும் பொருளும் ஆகிய சோதியைக்
70 கல்லுங் கடலும் ஆகிய கண்டனைத்

---

*முத்தன் - பாசம் இல்லாதவன். (அடி-73) மறையன் - வேதப் பொருளாய் உள்ளவன். (அடி-77, 78) 'முயல் விட்டுக் காக்கைப்பின் போவது போல' என்பது ஒரு பழமொழி, அப்பர் திருமொழியிலும் வந்துள்ளது[1]. வேட்டையாடுபவன் முயலின்பின் விடாது சென்றால் பயன் பெறுவான்; அதை இடையில் விட்டுவிட்டுக் காக்கைப்பின் போனால் யாது பெறுவான்? ஒன்றையும் பெறான். இது பயன் தருவதை விட்டுப் பயன் தராததைத் தொடர்வதற்கு உவமையாகும். கலவர் - படைக்கலம் எய்தியவர்; வேட்டையாடுபவர். (அடி-79) "விளக்கிருக்க மின்மினித் தீக் காய்தல்" என்பதும் முன் கூறியது போன்ற ஒரு பழமொழி. இதுவும் மேற்குறித்த அப்பர் திருமொழியில் வந்துள்ளது (அடி-80) அளப்பரும் சிறப்பு. அறியாமையின் மிகுதி. (அடி-81, 82) கச்சம் - அளவு; எல்லை. எல்லைக்கு உட்பட்ட ஆற்றல் உடையவர்களாய்ப் பெருஞ் செயலை முடிக்கமாட்டாத சிறிய*

---

*1. திருமுறை - 5.2*

தோற்றம் நிலைஈ றாகிய தொன்மையை,
நீற்றிடைத் திகழும் நித்தனை முத்தனை,
வாக்கும் மனமும் இறந்த மறையனைப்
பூக்கமழ் சடையனைப் புண்ணிய நாதனை,
75 இனைய தன்மையன் என்றறி வரியவன்.

தனைமுன் விட்டுத் தாம்மற்று நினைப்போர்
மாமுயல் விட்டுக்
காக்கைப் பின்போம் கலவர் போலவும்
விளக்கங் கிருக்க மின்மினி கவரும்
80 அளப்பருஞ் சிறப்பில் ஆதர் போலவும்

கச்சங் கொண்டு கடுந்தொழில் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போலஓர்
**ஆரியப் புத்தகப் பேய்**கொண்டு புலம்புற்று
85 வட்டணை பேசுவர் மானுடம் போன்று

---

*தேவர்கள். கொச்சை - நிரம்பாமை; அரை குறை. (அடி-83) பிச்சர் - பித்தர். ஓர் - சிறுமையுடைய (அடி-84) ஆரியப் புத்தகம், பல தெய்வ வழிபாட்டைக் கூறும் ஆரிய நூல், அத்தகைய நூல் தமிழில் இல்லாமையால், 'ஆரியப் புத்தகம்' என்றே கூறினார். அது வீணே அலையப் பண்ணுதலால் அதனை, "பேய்" என்றார். (அடி-85) வட்டணை - சுற்றிச் சுற்றி முடிவில்லாது வரப் பேசுதல். மானுடராயினும் மானுடப் பண்பு இல்லாமையால் "மானுடம் போன்று" என்றார். "மக்களே போல்வர் கயவர்"[1] என்னும் திருக்குறளைக் காண்க. (அடி-86) பெட்டு - பொய், (அடி-87, 88) குறும்பன் ஒருவன் வேறு ஒருவனைப் பார்த்து, "உனது தலை. மனிதர் தலையாய் இல்லை; மீன் தலையாய் உள்ளது; அதன் எடை எட்டுப் பலமே" என்று சொன்னால் உடனே தன் தலையை வெட்டி எடுத்து நிறுத்துப் பார்ப்பவர் உலகில் ஒருவரும் இல்லை. ஒருத்தர், பொதுமை பற்றி வந்த பன்மை; 'ஒருத்தரும்' என்னும் இழிவு சிறப்பும்மை விரிக்க. (அடி-89) மத்திரம் ஆகுவர் - அவ்வாறு சொன்னவர்மேல் சினங் கொள்வர். மாநெறி, எல்லா நெறிகளையும் தன்னுள் அடக்கி நிற்கும் நெறி; அது சிவ நெறி. மத்திர மாகுவர் - அதன் மேல் காழ்ப்புக் கொள்பவர். (அடி-90) சித்திரம் - சொல்லளவில் அழகாய்த் தெரியும்*

---

*1. திருக்குறள் - 1071*

பெட்டினை உரைப்போர் பேதையர் நிலத்துன்
தலைமீன் தலை;எண் பலமென்றால் அதனை
அறுத்து நிறுப்போர் ஒருத்தர் இன்மையின்
மத்திர மாகுவர்; மாநெறி கிடப்பவோர்
90 சித்திரம் பேசுவர் தேவ ராகில்

இன்னோர்க் காய்ந்தனர்; இன்னோர்க் கருளினர்;
என்றறிய உலகின்
முன்னே உரைப்ப தில்லை; ஆகிலும்
மாடு போலக் கூடிநின் றழைத்தும்,
95 மாக்கள் போல வேட்கையீ ண்டும்

இப்படி ஞானம் அப்படி அமைத்தும்
இன்ன தன்மையன் என்றிரு நிலத்து
முன்னே அறியா மூர்க்க மாக்களை
இன்னேகொண் டேகாக் கூற்றம்
100. தவறுபெரி துடைத்தே தவறுபெரி துடைத்தே.

**திருச்சிற்றம்பலம்**

---

*சொற்கள். பேசுவர் - பேசப்படுபவர். தேவராகில் அவரால் குறிக்கப்படுவோர் பெருந்தேவராயின் (அடி - 91, 92, 93) "இன்ன தீயோரைக் காய்ந்தனர்; இன்ன நல்லோர்க்கு அருள் புரிந்தனர்" என்பது எங்கேனும் சொல்லப்படுகின்றதா? இல்லையே - என்க. இங்ஙனம் கூறியது, 'புராண இதிகாசக் கதைகளாய் இல்லாமல் சண்டேசுரர், கண்ணப்பர், கோச்செங்கட்சோழர், மூர்த்தியார் முதலியோர் வரலாறுபோல வரலாற்று முறையில் சொல்லக் கேட்கின்றோமா' என்னும் கருத்தினாற் கூறியதாகும். (அடி-94) அழைத்தல் - கூப்பிடு செய்தல். (அடி-95) ஈடுண்டல் - உட்படுதல் (அடி-96) இப்படி ஞானம் - இங்கே சொல்லப்பட்ட ஞானம். அப்படி அமைத்தல் - மேல் வட்டணை பேசுவோர் கூறும் ஞானமாகத் திரித்து அமைத்தல். (அடி-97) மேற்கூறிய பூக்கமழ் சடையனும் புண்ணிய நாதனும் ஆகிய இறைவனை இன்ன தன்மையன் என்று இருநிலத்து முன்னே (இளமை யிற்றானே) அறியாமாக்களை என்க. (அடி-99) இன்னே - இப்பொழுதே. 'அவர்களைக் கூற்றம் கொளல் வேண்டும்' என்றது அவர்கள் மேல் எழுந்த சீற்றத்தால் அன்று; பயனில் உழப்புச் செய்தல் பற்றிய பரிதாபத்தினாலாம்.*

*புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்*
*அறங்கூறும் ஆக்கம் தரும்*

*துப்புரவு இல்லார் துவரத் துறவாமை*
*உப்பிற்கும் காடிக்கும் கூற்று*[1]

*என்னும் திருக்குறள் போல்பவற்றைக் காண்க. (அடி-100) தவறு - கடமையைச் செய்யாமை, "கூற்றம்" என்பது சொல்லால் அஃறிணையாதலின், "உடைத்து" என அஃறிணையாகக் கூறினார்.*

**கோபப் பிரசாதம் முற்றிற்று.**

*1. திருக்குறள் - 183. 1050*

## 15. நக்கீரதேவ நாயனார்

*அருளிச்செய்த*

## கார் எட்டு

*கார் - மேகம். மேகத்தின்மேற் செல்லும் எட்டுப் பாடல்களை யுடைமையால் இது, 'காரெட்டு' என்னும் பெயரினதாயிற்று. இதனைக் கார் நாற்பது போன்றது எனலாம். (கார்ப்பருவ வரவினைக் கூறும் எட்டுப் பாடல்களால் இயற்றப்பட்டது. கார்ப்பருவ வரவினைக்கூறும் 40 பாடல்களால் அமையப்பெற்ற பதினெண்கீழ்க்கணக்கு நூல் கார்நாற்பது எனப் பெயர் பெற்றது). எட்டுப் பாடல்களிலும் மேகம் உவமிக்கப்படும் பொருளாகவும், இறைவனது திருமேனி உறுப்புக்கள் உவமமாகவும் சொல்லப்படும். அங்ஙனம் சொல்லுதலை 'எதிர்நிலை உவமம்', அல்லது 'விபரீதோபமாலங்காரம்' என்பர். புகழப்படும் பொருளை இவ்வாறு புகழ்தல் ஒருமுறை. புகழப்படும் பொருளை உவமிக்கப்படும் பொருளாக வைத்துக் கூறுதலே முறைமையாகலின் இங்ஙனம் மாறிக் கூறுதல் எதிர்நிலை என்றும், 'விபரீதம்' என்றும் சொல்லப்படுகின்றது. "முன்னிக் கடலைச் சுருக்கி"[1] என்னும் திருவாசகத் திருப்பாடல் முதலியவற்றிலும் இவ்வாறு கூறப்படுதல் காணலாம். தொல்காப்பியத்துள் இதனை,*

> *பொருளே உவமம் செய்தனர் மொழியினும்*
> *மருளறு சிறப்பினஃ துவம மாகும்[2].*

*என்னும் நூற்பாவின் பொருளாக உரைத்தார் பேராசிரியர்.*

*மழையின் வரவினாலேயே உலகத்தில் அதற்குறுதியாகவுள்ள அறம், பொருள், இன்பங்களும் நடைபெறுகின்றன. இதனாலன்றோ வான்புகழ் வள்ளுவர் தம் நூலில் கடவுள் வாழ்த்திற்குப் பின் வான் சிறப்பை நுவன்றார். மழைக்குக் காரணமாகிய இறைவனின் திருவருள் திறனை செய்விப்பதே காரின் பெருமை.*

*தலைவனது பிரிவினால் வருத்தமுற்ற தலைமகளை நோக்கிக் 'கார்ப்பருவம் வந்தது, இனித் தலைவரும் வந்து விடுவார்' என்று கூறித் தோழி வற்புறுத்துவதாக அமைந்தது, நக்கீர தேவர் பாடிய காரெட்டு என்னும் இப் பிரபந்தமாகும். இந்நூல் கார்ப்பருவ வரவினைக்கூறும் எட்டுப் பாடல்களால் இயன்றமையாற் காரெட்டு என்னும் பெயருடையதாயிற்று. கார்ப்பருவ வரவினைக் கூறும் நாற்பது பாடல்களால் இயன்ற கீழ்க்கணக்கு நூல் கார் நாற்பது எனப் பெயர் பெற்றமை போலக் கார்கால வரவினைக் கூறும் எட்டுப் பாடல்களாலியன்ற இப்பிரபந்தமும் காரெட்டு எனப் பெயர் பெற்றதெனத் தெரிகிறது. உலகமும் அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது வரவினை எடுத்து*

---

*1. திருவெம்பாவை - 16*

*2. பொருள் - உவமவியல்*

***திருச்சிற்றம்பலம்***

***வெண்பா***

**488. அரவம் அரைக்கசைத்த அண்ணல் சடைபோல்**
**விரவி எழுந்தெங்கும் மின்னி – அரவினங்கள்**
**அச்சங்கொண் டோடி அணைய அடைவுற்றே**
**கைச்சங்கம் போல்முழங்குங் கார். 1**

---

*உரைக்கு முகத்தால் அம்மழைக்குக் காரணமாகிய இறைவனது திருவருள் வண்ணத்தை நினைப்பிப்பது இப்பிரபந்தம் ஆகும்.*

*மேகமானது சிவபெருமானது திருநீலகண்டத்தைப் போன்று கருநிறமுடையதாய், இறைவன் கையிலேந்திய வில்லினைப் போன்ற வானவில்லைத் தாங்கி, ஐந்தலையரவினை அணிகலனாகப் பூண்ட அப்பெருமானது ஒளிகிளர் சடைக்கற்றையினையொத்து மின்னி, அவன் திருவடியில் அணியப் பெற்றுள்ள வீரக் கழலினையொத்து முழங்கிய தோற்றத்தினை,*

*"மையார் மணிமிடறு போற்கருகி மற்றவன்றன்*
*கையார் சிலைவிலகிக் காட்டிற்றே - ஐவாய்*
*அழலரவம் பூண்டான் அவிர்சடைமேல் மின்னிக்*
*கழலரவம் காண்புற்ற கார்".*

*எனவரும் பாடல் சுவைபெற விரித்துரைப்பதாகும். இதுபோன்றே இந்நூலிலுள்ள ஏனைய பாடல்களும் கார்காலத்து மேகத் தோற்றத்தைப் புனைந்துரைக்கும் வாயிலாகத் 'தொண்ட ருழவர் ஆரத்தந்த அண்டத் தரும்பெறல் மேகன்' எனப் போற்றப்பெறும் சிவபெருமானது அருளின் நீர்மையைப் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளமை படித்து இன்புறத்தக்கதாகும். இந்நூலின் நான்காம் பாடலின் இறுதியடியாகிய 'காம்பினங் கடோளீயக்கார்' என்பது 'காம்பினங்கொ டோளீயக் கார்' என்றிருத்தல் வேண்டும். காம்பினங்கொள் தோளீ என விளியாக்கி, அக்கார் ஆர்த்தது என வினைமுடிபு செய்க.*

*488. பொருளுரை :- அரவினை அரையில் கட்டிய சிவனாரின் சடையைப் போல் பரவி எழுந்து எங்கும் மின்னி, பாம்புக் கூட்டங்கள் அச்சங் கொண்டு ஓடி அணைய அடைவுற்று கையினில் வைத்து ஊதப்படும் சங்கின் ஒலிபோல கார் பருவத்து மேகமும் முழங்கிடும்.*

*கைச்சங்கம் - கையில் வைத்து ஊதப்படும் சங்கு.*

*குறிப்புரை :- எல்லா வெண்பாக்களிலும் "கார்" என்பதை முதலிற் கொண்டு உரைக்க.*

**489.** மையார் மணிமிடறு போற்கருகி மற்றவன்தன்
கையார் சிலை விலகிக் காட்டிற்றே – ஐவாய்
அழலரவம் பூண்டான் அவிர்சடைபோல் மின்னிக்
கழலரவம் காண்புற்ற கார். **2**

**490.** ஆலமர் கண்டத் தரன்தன் மணிமிடறும்
கோலக் குழற்சடையும் கொல்லேறும் – போல்வ
இருண்டொன்று மின்தோன்றி அம்பொன்றவ் வானம்
கருண்டொன்று கூடுதலின் கார். **3**

---

*'எங்கும் விரவி எழுந்து சடைபோல் மின்னி அடை வுற்றே சங்கம் போல் முழங்கும்' என இயைத்து முடிக்க. 'அரவினங்கள் அணைய' என இயையும்.*

*"அரைக்கு" என்பதை 'அரைக்கண்' எனத் திரிக்க. இஃது உருபு மயக்கம். அசைத்த - கட்டிய. 'புற்றில் அணைய' எனச் சொல்லெச்சம் வருவிக்க. சங்கு திருமாலுக்குச் சிறப்பாக உரித்தாயினும், 'பிறர் அதனைக் கொள்ளலாகாது' என்பது இல்லை. வெற்றிச் சங்குத் தீயோரைக் காய்வார் பலரும் கொள்வதே. அதனால் இங்குச் சிவபெருமான் சங்கு உடைமையைக் கூறினார். 'அவன் கைச்சங்கம் போல்' எனச் சுட்டுப் பெயர் வருவிக்க.*

*489. பொருளுரை :- சிவனாரின் கருமை நிறம் கொண்ட கழுத்தினைப் போல் கறுத்து பின் அவனுடைய கையிலுள்ள வில்லைப்போல வானவில்லைத் தாங்கி ஐந்து வாயினையுடைய தீயனைய நஞ்சு கொண்ட பாம்பினை அணிந்தானின் ஒளிரும் சடையைப் போல் மின்னி கழலின் ஒலி போல் மேகம் முழங்கியது.*

*அழலரவம் - தீயைப்போலும் நஞ்சு கொண்ட பாம்பு. கழலரவம் - கழலின் ஒலி.*

*குறிப்புரை :- "ஐ வாய்" என்பது முதலாகத் தொடங்கி உரைக்க. அழல் அரவம் - அழலும் அரவம். அழலும் - சீறுகின்ற; வினைத்தொகை. கழல் அரவம் - காலில் அணிந்த 'கழல்' என்னும் அணிகலத்தின் ஒலி. காண்பு உள்ள - அவ்வொலி புலப்படுதற்கு இடமான; அஃதாவது இடி முழக்கத்தைச் செய்கின்ற. "அவன்றன்" என்பதை, "மைஆர் மணி மிடறு" என்பதற்கு முன்னே கூட்டுக. மை ஆர் - கருமைநிறம் பொருந்திய. மணி - நீல மணி, மற்று - அசை. 'சிலையைக் காட்டிற்று' என்க. சிலை - வில். விலகி - குறுக்கிட்டு.*

*490. பொருளுரை :- நீலகண்டனின் அழகான மிடறும்; அழகு பொருந்திய குழலாகிய சடையும்; கொல்லும் தன்மை கொண்ட காளையைப் போல முறையே இருண்டு, மின்னி, தோன்றி அழகிய அந்த செவ்வானத்தில் மேகம் கறுத்து. (கழுத்துப் போல் இருண்டு, சடைபோல் மின்னி ஏறுபோல் தோன்றியது).*

**491.** **இருள்கொண்ட கண்டத் திறைவன்தன் சென்னிக்**
**குருள்கொண்ட செஞ்சடைபோல் மின்னிச் – சுருள்கொண்டு**
**பாம்பினங்கள் அஞ்சிப் படம்ஒடுங்க ஆர்த்ததே**
**காம்பினங்கள் தோள்ஈயக் கார்.** **4**

**492.** **கோடரவங் கோடல் அரும்பக் குருமணிகான்(று)**
**ஆடரவம் எல்லாம் அளையடைய – நீடரவப்**
**பொற்பகலம் பூண்டான் புரிசடைபோல் மின்னிற்றே**
**கற்பகலம் காண்புற்ற கார்.** **5**

---

*குறிப்புரை :-* *'கார், அம்பு ஒன்று. அவ்வானம் இருண்டு, ஒன்று மின் தோன்றி, கருண்டு ஒன்றுதலின், மிடறும், சடையும், ஏறும் போல்வ' என இயைக்க. அம்பு ஒன்று - மழை நீர் பொருந்திய 'வானத்தில்' என ஏழாவது விரிக்க. ஒன்று மின் - பொருந்திய. மின்னல் தோன்றி - தோன்றப் பெற்று. இயம்புதல் - ஒலித்தல். கருண்டு - மயங்கி; அஃதாவது பல்வேறு வகையவாய். ஏறு - இடபம், இருளுதலால் மிடறு போல்வனவும், மின்னுதலால் சடை போல்வனவும், இடி முழக்கம் செய்தலால் இடபம் போல்வனவும் ஆயின. இவ்வெண்பாவின் பாடம் பெரிதும் பிழைபட்டுக் காணப்படுகின்றது.*

*491. பொருளுரை :-* *இருளின் வண்ணத்தைக் கொண்ட கழுத்தினுடைய ஈசன் தலையில் சுருள் கொண்ட செஞ்சடை போல் மின்னி, சுருளுதலைக் கொண்ட பாம்பினங்கள் அஞ்சிப் படம் ஒடுங்கிட, மூங்கில் தொகுதிகள் தோள் கொடுத்திட மேகம் ஆரவாரித்தது.*

*குறிப்புரை :-* *குருள் - தளிர். காம்பு - மூங்கில். மூங்கில் தோளுக்கு உவமையாகச் சொல்லப்படுதலால், அவற்றின் மேல் தங்கும் மேகங்களுக்கு அவை ஏறியிருக்கத் தோளைத் தந்ததாகக் கூறினார். 'கார், காம்பினங்கள் தோள் ஈய (அவற்றின் மேல் தங்கி) மின்னிப் பாம்பினங்கள் அஞ்சி சுருள் கொண்டு பாடம் ஒடுங்க ஆர்த்தது' என்க.*

*492. பொருளுரை :-* *காந்தள் மலர் வளைந்த பாம்புபோல் அரும்ப, நிறங் கொண்ட மணியை கக்கி, ஆடுகின்ற அரவங்கள் யாவும் வளையை அடைய, பொன்போல் மார்பினை உடையானின் சடைபோல், தலைவர் வரும்வரை ஆற்றியிருந்து, அறஞ் செய்திடும் தலைவியரது கற்பின் விரிவைக் கண்ட கார் மின்னிற்று.*

*குறிப்புரை :-* *கோடல் - காந்தள். அதன் அரும்பு பாம்பு போலும் தோற்றத்தை உடையது ஆகலின் 'கோடல் கோடு அரவம் அரும்ப' என்றார். கோடு - வளைந்த. 'அரவம் போல அரும்ப' என்க. மழைக் காலத்தில் காந்தள் அரும்பெடுத்து மலரும். குரு - நிறம். மணி, நவ மணிகள். கான்று - உமிழ்ந்து.*

**493.** பாரும், பனிவிசும்பும், பாசுபதன் பல்சடையும்
ஆரும் இருள்கீண்டு மின்விலகி – ஊரும்;
அரவம் செலஅஞ்சும்; அஞ்சொலார் காண்பார்
கரவிந்தம் என்பார்அக் கார். **6**

**494.** செழுந்தழல் வண்ணன் செஞ்சடைபோல் மின்னி
அழுந்தி அலர்போல் உயர – எழுந்தெங்கும்
ஆவிசோர் நெஞ்சினரை அன்பளக்க உற்றதே,
காவிசேர் கண்ணாய்அக் கார். **7**

---

*அணை - புற்று. பொற்பு அகலம் - அழகிய மார்பு. கல் - மலை. தலைவியரது கற்பின் விரிவைக் கண்ட கார் மின்னிற்று.*

***493. பொருளுரை :-*** *தண்மை கொண்ட மண்ணும், விண்ணும் பெருமானாரின் பல சடையும் நிறைந்துள்ள இருளைக் கிழித்து மின் விலகி ஊர்ந்து செல்லும் பாம்பும், செல்ல அஞ்சும் மேகத்தை அஞ்சொல் கொண்ட மகளிரின் கையாகிய தாமரை என்பர்.*

***குறிப்புரை :-*** *முதலிலும் 'கார்' என்பது வருவித்து, 'மின் விலகி, இருள் கீண்டு ஊரும்' என்க. பார் - நிலத்தின் கீழ் இடம். பனி விசும்பு - குளிர்ந்த ஆகாயம். பாசுபதன் சடை - சிவபெருமானது சடை. 'இம் மூன்றிடங்களும் இருள் தங்கியிருக்கும் இடம்' என்றார். ஆரும் - பொருந்தும். சிவபெருமானது சடை முடி 'அடவி' (சடாடவி) எனப்படுதலால், அதனையும் இருள் தங்கும் இடமாகக் கூறினார். விலகி - குறுக்கிட விட்டு. ஊரும் - தவழும் (அது பொழுது) 'அரவம் வெளியே செல்ல அஞ்சும்'. ஆயினும் அம் சொல்லார் (அழகிய சொற்களையுடைய பெண்கள் பிரிந்து சென்ற கணவர் மீண்டு வருவார் என மகிழ்ந்து) அக் கார் காண்பார்கள். கண்டு, கர இந்து அம் (இவற்றுள்ளே மறைந்து நிற்கின்ற நிலவு அழகிது) என்பார்கள். 'இங்ஙனமெல்லாம் மகிழ்வார்கள்' என்றபடி. கர இந்து, இறந்தகால வினைத்தொகை.*

***494. பொருளுரை :-*** *செழுமை தங்கிய தீ வண்ணக் கடவுளான சிவனாரின் செழுஞ்சடை போல் மின்னி, அழுந்தி, பழிச்சொல் போல் உயர எழுந்து எங்கும் ஆவிசோர் நெஞ்சினரை அன்பளிக்க, கருங்குவளை மலர் போன்ற கண்களையொத்த மேகம் நேரிட்டது.*

**495.** காந்தள் மலரக் கமழ்கொன்றை பொன்சொரியப்
பூந்தளவம் ஆரப் புகுந்தின்றே – ஏந்தொளிசேர்
அண்டம்போல் மீதிருண்ட ஆதியான் ஆய்மணிசேர்
கண்டம்போல் மீதிருண்ட கார். **8**

**திருச்சிற்றம்பலம்**

---

***குறிப்புரை :-*** *காவி - கருங் குவளைப் பூ 'அதன் தன்மை சேர்ந்த கண்களையுடைய தோழீ' என்க. அக்கார் - அஃதோ தோன்றுகின்ற மேகம்; 'அன்பை அளத்தற் பொருட்டு, மின்னி, அழுந்தி, உயர எழுந்து, எங்கும் உற்றது, (யான் ஆற்றுமாறு எவன்) என முடிக்க. ஈற்றில் வருவிக்கப்படுவது குறிப்பெச்சம். அழுந்துதல் - இறுகுதல். 'எனது ஆற்றாமையைப் பலரும் இகழ்கின்றார்கள் என்பதை நீ சொல்ல வேண்டாமலே யான் அறிவேன்' என்றற்கு, இடையே, "அவர்போல் உயர எழுந்து" என்றாள். ஆற்றாமையால் ஆவி சோர்தலைக் கண்டும் நீங்காமையால், 'உயிர்விடுகின்றாளா, பார்ப்போம்' என்று இருக்கின்றது என்பாள் "ஆவி சோர் நெஞ்சினரை அன்பு அளக்க உற்றது" என்றாள்; இரண்டன் உருபை ஆறன் உருபாகத் திரிக்க. இது தலைவனது பிரிவு நீட்டிக்க ஆற்றாளாய தலைமகளை, "ஆடவர் பிரிந்த செயலை முடித்து வருங்காறும் ஆற்றியிருத்தல் மகளிர் செயற்பாலது; அது நீ செய்கின்றிலை" என வற்புறுத்திய தோழிக்குத் தலைவி, 'அன்பிலார் ஆற்றியிருப்பர்; யான் ஆற்றேன்' என வன்புறை எதிரழிந்து கூறியது.*

***495. பொருளுரை :-*** *காந்தள் மலர, மணங் கொண்ட கொன்றை மணந்திருக்குங் காட்சி பொன் சொரிவதையொக்கும். பூக்களையுடைய முல்லை பொருந்தப் புகுந்து மேகம் ஏந்தொளிசேர் அண்டம் போன்று ஆதியான் ஆய்மணி சேர் கண்டம் போலவும் இருண்டது என்க.*

***குறிப்புரை :-*** *அண்டம் - ஆகாயம். அது நீல நிறத்தை உடையது ஆதலின் சிவபெருமானுடைய கண்டத்திற்கு உவமையாயிற்று. "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே"[1] என உவமைக்கு உவமை கூறலை விலக்கியது. உவமையால் பொருளைச் சிறப்பிப்பதாகிய நேர்நிலை உவமத்திற்கே யாம். அதில் உவமைக்குக் கூறும் உவமை ஆகவே அதற்கு அது விலக்கப்பட்டது. பொருளால் உவமையைச் சிறப்பிப்பதாகிய எதிர்நிலை உவமத்தில் உவமைக்கு உவமை கூறினால் இரண்டானும் பொருள் சிறப்பெய்துதலின் அதற்கு அவ்விலக்கு இன்றாம்.*

---

*1. தொல். பொருள் - உவமவியல்*

*‘அண்டம்போல் மீதிருண்ட கண்டம் போல்’ என இயைக்க. “ஆதியான்” என்பதும் “கண்டம்” என்பதனோடே முடியும். ஆதியான், சிவபெருமான். ஆய் மணி - ஆராய்ந்தெடுக்கப்பட்ட நீல மணி. ‘அதன் தன்மை சேர்ந்த கண்டம்’ என்க. தளவம் - முல்லை. ‘தளவம் பூ ஆர’ என மாற்றியுரைக்க. ஆர - நிறைய. மலரவும், ‘சொரியவும், ஆரவும் புகுந்தின்று’ என்க. புகுந்தின்று - புகுந்தது. இன், சாரியை. இச்சாரியை ஈறு திரியாது வருதல் பண்டைய வழக்கம். ‘கூயிற்று, போயிற்று’ என்றாற்போல ஈறு திரிந்தே வருதல் பிற்கால வழக்கம். அதனால் பிற்காலத்தில் இச்சாரியை ஏற்ற இடத்தே வருவதாம். “புகுந்தின்று” என்பதில் தகர ஒற்று இறந்த காலம் காட்டிற்று. ‘கூயிற்று, போயிற்று’ என்பவற்றில் யகர ஒற்றே இறந்த காலம் காட்டுதலை, ‘ஆயது, போயது’ முதலியவற்றான் அறிக.*

***கார் எட்டு முற்றிற்று.***

## 16. நக்கீரதேவ நாயனார்

*அருளிச்செய்த*

## போற்றித் திருக்கலிவெண்பா

***திருச்சிற்றம்பலம்***

*சிவபெருமானது திருப்புகழ் ஒவ்வொன்றையும் தனித்தனி எடுத்துக் கூறிப் போற்றி கூறும் கலிவெண்பா யாப்பிற்றாகிய செய்யுளாதல் பற்றி இது 'போற்றித் திருக்கலி வெண்பா' எனப் பெயர் பெற்றது. பஃறொடை வெண்பாவே பிற்காலத்தில் 'கலிவெண்பா' எனப் பெயர் பெற்றது.*

*சிவபெருமான் உலக உயிர்களுக்கு அருள்புரிதல் வேண்டி அவ்வக் காலந்தோறும் செய்தருளிய அருட்செயல்களை எடுத்துரைத்துப் போற்றுங் கருத்துடன் நக்கீர தேவர் பாடிய பிரபந்தம் போற்றித் திருக்கலி வெண்பா என்பதாகும். இறைவனது பொருள்சேர் புகழைப் போற்றிப் பரவுங் கருத்துடன் திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகம் போற்றித் திருத்தாண்டகம் எனவும், திருவாதவூரடிகள் பாடிய அகவல் போற்றித் திருவகவல் எனவும் பெயர்பெற்று வழங்குமாறு போல நக்கீரதேவர் பாடிய இக்கலிவெண்பாவும் போற்றித் திருக்கலிவெண்பா எனப் பெயர் பெற்று வழங்குவதாயிற்று.*

*இக் கலிவெண்பா நாற்பத்தைந்து கண்ணிகளை உடையது. இதன்கண் சிவபெருமான் செய்தருளிய அருட் செயல்கள் விரித்துரைத்துப் போற்றப் பெற்றுள்ளன.*

*"நேசத்தால்*
*வாயினீர் கொண்டு மகுடத் துமிந்திறைச்சி*
*ஆயசீர்ப் போனகமா அங்கமைத்துத் - தூயசீர்க்*
*கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து*
*விண்ணுலகம் ஈந்த விறல்போற்றி - மண்ணின்மேற்*
*காளத்தி போற்றி கயிலைமலை போற்றியென*
*நீளத்தினால் நினைந்து நிற்பார்கள் - தாளத்தோ*
*டெத்திசையும் பன்முரசம் ஆர்த்திமையோர் போற்றிசைப்ப*
*அத்தனடி சேர்வார்க ளாங்கு"*

*என இந்நூல் முடிவு பெறுதலை நோக்குங்கால் இந்நூலின் ஆசிரியராகிய நக்கீர தேவர் திருக்காளத்தியை அடைந்து கண்ணப்ப நாயனாரால் வழிபாடு செய்யப் பெற்ற சிவபெருமானைப் பணிந்து போற்றும் நிலையில் போற்றித் திருக்கலி வெண்பாவென்னும் இந்நூலைப் பாடியிருத்தல் வேண்டுமென்பது புலனாகும்.*

**496.**

1. திருத்தங்கு மார்பின் திருமால் வரைபோல்
எருத்தத் திலங்கியவெண் கோட்டுப்–பருத்த

2. குறுத்தாள், நெடுமூக்கிற் குன்றிக்கண் நீல
நிறத்தாற் பொலிந்து, நிலம்ஏழ்–உறத்தாழ்ந்து

3. பன்றித் திருவுருவாய்க் காணாத பாதங்கள்
நின்றவா நின்ற நிலைபோற்றி – அன்றியும்

4. புண்டரிகத் துள்ளிருந்த புத்தேள் கழுகுருவாய்
அண்டரண்டம் ஊடுருவ ஆங்கோடிப்! – பண்டொருநாள்

---

*496. பொழிப்புரை (1-5) :-* *திருமகள் தங்கி வசிக்கும் பெருமைமிகு மார்பினை யுடைய திருமால், மலைபோல் பெரிய பிடரியையும், இரண்டு வெண்மையான கொம்புகளையும், பருத்துக் குறுகிய கால்களையும் பெற்று, நீண்ட மூக்கில் குறுகிய கண் நீலவண்ணத்தில் பெயர்ந்து நிலத்தைத் தோண்டி பன்றி வடிவு கொண்டு தேடியும் காணப் பெறாது இருந்த நின் திருவடிகளுக்கு வணக்கம். அதுவன்றி தாமரையில் உறையும் நான்முகன் கழுகு உருக்கொண்டு (அன்னவடிவு என்பது பிறர் கருத்து) அனைத்து அண்டங்களையும் ஊடுருவப் பறந்து சென்று எங்கு தேடியும் காணப் பெறாதவனாய் இறங்கி வந்து பிரானுக்குப் பொன்முடி சூட்டி கோணாது நின்றனன். அத்தகு இறைவனே வணக்கம்.*

***குறிப்புரை : கண்ணி - 1, 2, 3 (1)*** *திருமால் வராக வடிவம் கொண்டு திருவடியைத் தேடிக் காணாமை இவற்றால் கூறப்பட்டது. முதற்கண் உள்ள திரு, இலக்குமி. 'எருத்தத்து இலங்கிய, வெண் கோடு முதலாக நீல நிறம் முடிவான இவற்றால் பொலிந்து வரைபோலும் பன்றி' என்க. வரை - மலை. எருத்தம் - பிடரி. 'எருத்தத்தால்' என உருபு விரிக்க. 'குறுந்தாள்' என்பது வலிந்து நின்றது. தாள் - கால். குன்றிக் கண் - குன்றி மணிபோலும் கண்கள். 'பன்றித் திருஉருவாய் நிலம் ஏழ் உறத் தாழ்ந்து காணாத பாதங்கள்' என இயைக்க. நிலம், இங்குப் பாதல உலகங்கள். நின்றவா நின்ற நிலை - என்றும் ஒரு பெற்றியனவாய்த் திரிபின்றி நிற்கும் நிலை. (இதற்குப்) போற்றி - வணக்கம்.*

***குறிப்புரை : கண்ணி - 4, 5*** *புண்டரிகம் - தாமரை மலர். அதனுள் இருந்த புத்தேள், பிரம தேவன். 'பறவை' என்னும் சாதி பற்றி அன்னத்தை, "கழுகு" என்றார். அன்றிப் புராண பேதம் பற்றிக் கூறினார் எனினும் ஆம். அண்டர் அண்டம் - தேவர் உலகம். ஊடுருவியது கழுகுருவம். "பண்டொருநாள்" என்பதை முதலிற் கூட்டுக. "காணான்" என்பது, "காணானாய்" என முற்றெச்சம். இழிய - (முன் இருந்த இடத்திற்கு) இறங்கிவிட. சிவனுக்கு முடிசடையேயாயினும் கனக (பொன்)*

5. காணான் இழியக் கனக முடிகவித்துக்
   கோணாது நின்ற குறிபோற்றி! – நாணாளும்

6. பேணிக்கா லங்கள் பிரியாமைப் பூசித்த
   மாணிக்கா அன்று மதிற்கடவூர்க்– காண

7. வரத்திற் பெரிய வலிதொலையக் காலன்
   உரத்தில் உதைத்தவுதை போற்றி! – கரத்தான்மே

8. வெற்பன் மடப்பாவை கொங்கைமேற் குங்குமத்தின்
   கற்பழியும் வண்ணங் கசிவிப்பான் – பொற்புடைய

9. வாமன் மகனாய் மலர்க்கணையொன் றோட்டியஅக்
   காமன் அழகழித்த கண்போற்றி! – தூமப்

---

*முடி விலக்கன்று. "முடி கவித்து" என்றதனால். 'காணப்படாது நின்றது முடி' என்பது போந்தது. கோணாது - வளையாமல் 'நிமிர்ந்து' என்றபடி.*

*பொழிப்புரை (6-9) :- அனைத்து நாட்களிலும் நின்னையே வழிபட்டு வந்த மார்க்கண்டேயனுக்காகப் பண்டு மதில்களையுடைய திருக்கடவூர் காண வரத்திற் பெரிய வலிதொலைத்த காலனை மார்பில் உதைத்த உதையை நினைத்து நின்னை வணங்குகின்றேன். பர்வத அரசனின் மகளாகிய பார்வதிதேவியின் தனங்கள் மேல் குங்குமத்தால் உனக்கு விருப்பம் உண்டாவதற்காகப் பொற்புடைய வாமன அவதாரம் எடுத்த திருமாலின் மகனாகிய மன்மதன் மலரம்பு ஒன்றை உன்மேல் செலுத்தியதால் அவனை எரித்தழித்த நெற்றிக் கண்ணிற்கு வணக்கம்.*

*குறிப்புரை : **கண்ணி - 5, 6, 7** பேணி - பாதுகாத்து 'காலங்கள் தோறும்' என. 'தோறும்' என்பது வருவிக்க. மாணி - பிரமசாரி. மார்க்கண்டேயர். கடவூர் - திருக்கடவூர். அட்ட வீரட்டத் தலங்களில் ஒன்று. ஊரில் உள்ளவர்களை "ஊர்" என்றார். 'வரத்தின் பெற்ற பெரிய வலி' என்க. உரம் - மார்பு.*

*குறிப்புரை : **கண்ணி - 7, 8, 9 :** "கரத்தான் மே" என்றதனை, "குங்குமத்தின்" என்பதற்கு முன்னே கூட்டுக. கற்பு - கற்றல். அஃதாவது இங்குக் கோலம் எழுதக் கற்றுக் கொள்ளுதல். அஃது ஆகுபெயராய் அக்கல்வி வன்மையால் எழுதப்படும் கோலத்தைக் குறித்தது. எனவே, 'கொங்கைமேல், கரத்தான் மேவு குங்குமத்தின் கோலம் அழியும் வண்ணம்' - அஃதாவது, 'கொங்கைமேற் சேரும் வண்ணம்' எனக் கூறியதாம். கசிவித்தல் - மனத்தை இளகச் செய்தல். 'யோகத்தில் இருந்த தன்னை (சிவனை)ப் போகத்தில் இச்சையுடையனாக்கும் பொருட்டு' என்றவாறு. அழகுடைமை பற்றித் திருமாலும் 'வாமன்' எனப்படுவான். பொற்பு - அழகு. எனவே, "வாமன்" என்பது வாளா பெயராய் நின்றது.*

**10.** படமெடுத்த வாளரவம் பார்த்தடரப் பற்றி
விடமெடுத்த வேகத்தான் மிக்குச் – சடலம்

**11.** முடங்க வலிக்கும் முயலகன்தன் மொய்ம்பை
அடங்க மிதித்தவடர் போற்றி! – நடுங்கத்

**12.** திருமால் முதலாய தேவா சுரர்கள்
கருமால் கடல்நாகம் பற்றிக் – குருமாற

**13.** நீலமுண்ட நீள்முகில்போல் நெஞ்சழல வந்தெழுந்த
ஆலமுண்ட கண்டம் அதுபோற்றி! – சாலமண்டிப்

---

*பொழிப்புரை (10-13) :- தீய படமெடுத்த வாள்போன்ற பாம்பு பார்த்து அடரப் பற்றி நஞ்சினை எடுத்த வேகத்தால் மிகுந்த சடலமானது முடங்க வலிக்கும் முயலகனுடைய வலிமை அடங்கிட, அவனை நின் காலடியில் போட்டு மிதித்த திருவடிகளுக்கு வணக்கம். திருமால் போன்ற தேவர்களும் அசுரர்களும் நடுங்க, எழுந்த கரிய பெரியகடல் நாகத்தைப் பற்றி, செந்நிறமான நீலமுண்ட நீலமேகத்தைப் போன்று மனம் கொதிக்க வந்தெழுந்த நஞ்சினை உண்ட கண்டத்திற்கு வணக்கம்.*

*கருமால் கடல் - கருமை வண்ணங் கொண்ட பெருங்கடல். சாலமண்டி - மிகுதியாய் நெருங்கி.*

*குறிப்புரை : **கண்ணி - 9, 10 :** தூமம் - தாருகாவன முனிவர் செய்த வேள்வியின் புகை நடுவிலே. படம் எடுத்து வந்த பாம்புகள் வெகுண்டு பார்த்து தீங்கு செய்யவர அவைகளைப் பற்றி அணியாக அணிந்து.*

*குறிப்புரை : **கண்ணி - 10, 11 :** இவற்றில் முயலகன் வரலாறு சொல்லப்படுகின்றது. வேறு இடங்களில் இது பெறப்படவில்லை. 'தாருகாவன இருடிகளால் அனுப்பப்பட்ட ஓர் அசுரன்' என்னும் அளவில் சொல்லப்பட்டது. உடன் தோன்றிய பாம்புகள் உமிழ்ந்த விடவேகத்தைத் தானும் உடையவனாய், அப்பாம்புகளைப் போலத் தானும் உடலை வளைத்துத் திருமேனியைச் சுற்றி வளைத்து வலித்த (இழுத்த) முயலகனுடைய மொய்ம்பை (வலிமையை) அடங்க மிதித்த திருவடிக்கு வணக்கம்.*

*குறிப்புரை : **கண்ணி - 11, 12, 13 :** "நடுங்க" என்பதை, "குருமாற" என்பதன் பின் கூட்டுக. குரு - பாரம். அஃது ஆகுபெயராய் மலையைக் குறித்தது. மலை, மந்தரமலை. மாற - மாறி. மாறிக் கடைய. 'அவர்கள் நடுங்க வந்தெழுந்த ஆலம்' என இயையும். மால் கடல் - பெரிய கடல் 'நாகத்தையும் பற்றி மாற' என்க. நாகம், 'வாசுகி' என்னும் பாம்பு. நீலம் - நீல நிறத்தையுடைய கடல் நீர். ஆகுபெயர் 'நீர் முகில்போல் வந்தெழுந்த ஆலம்' என்பதாம். அழல - துன்பத்தால் வருந்த. கண்டமாகிய அதற்கு வணக்கம்.*

**14.** போருகந்த வானவர்கள் புக்கொடுங்க மிக்கடர்க்கும்
தாருகன்தன் மார்பில் தனிச்சூலம் – வீரம்

**15.** கொடுத்தெறியும் மாகாளி கோபந் தவிர
எடுத்த நடத்தியல்பு போற்றி! – தடுத்து

**16.** வரையெடுத்த வாளரக்கன் வாயா றுதிரம்
நிரையெடுத்து நெக்குடலம் இற்றுப் – புரையெடுத்த

**17.** பத்தனைய பொன்முடியும் தோளிருப தும்நெரிய
மெத்தெனவே வைத்த விரல்போற்றி! – அத்தகைத்த

---

*பொழிப்புரை (14-17) :- மிகுதியானோர் கூடி நெருங்கி, போரை விரும்பிய தேவர்கள் ஓடி ஒளிய, நெருக்கி வருத்தும் தாருகாசுரனது மார்பில் ஒப்பற்ற சூலத்தை வீரமுடன் எறிய, மாகாளியின் சீற்றம் தணியுமாறு கொண்ட ஆடல் இயல்பிற்கு வணக்கம்; இமயமலையைத் தடுத்து எடுக்க முயன்ற இராவணனின் வாயில் குருதி ஆறாகப் பெருக, உடல் நொறுங்க, பத்துத் தலைகளின் மேலிருந்த பொன்முடிகளும் இருபது தோள்களும், நெரித்து மெத்திய நின் திருவடியிலுள்ள விரல்களுக்கு வணக்கம்.*

*புக்கொடுங்க - ஓடியயொளிய. அடர்க்கும் - நெருக்கி வருத்தும்.*

*குறிப்புரை : **கண்ணி - 13, 14, 15 :** "சால மண்டி" என்பதை "மிக்கடர்க்கும்" என்பதற்கு முன்னே கூட்டுக. உகந்த - விரும்பிய. சால மண்டி - மிகவும் நெருங்கி. அடர்க்கும் - வருந்துகின்ற. தாருகன், ஓர் அசுரன். இவன் முருகக் கடவுளால் அழிக்கப்பட்ட தாரகனின் வேறானவன். 'அதற்கு வீரம் கொடுத்து' என்க. "எறியும்" என்றது, "எறிந்து கொல்லும்" எனத் தன் காரியம் தோற்றி நின்றது. மாகாளி - வீர மாகாளி. 'அவள் தான் கொண்ட கோபம் தணியாது உலகிற்கு இடர் புரிந்தமையால், அவளை நடனப் போரினால் சிவபெருமான் நாணம் அடையச் செய்து வென்றான்' என்பது வரலாறு. இந்நடனப் போர் நிகழ்ந்த இடமாகக் கூறப்படுவது திருவாலங்காடு.*

*குறிப்புரை : **கண்ணி - 15, 16, 17 :** "வாளரக்கனைத் தடுத்து அவன் வாய் ஆறு உதிரம் நிலை எடுத்து' என உருபு விரித்தும், சுட்டுப் பெயர் வருவித்தும் உரைக்க. வரை, கைலாயமலை, அதனை எடுத்த அரக்கன் இராவணன். நிரை, தாரைகளின் வரிசை. எடுத்து - தோன்றி. இற்று - முதிர்ந்து. இரு செய்தென் எச்சங்களும் எண்ணின்கண் வந்து, "நெரிய" என்பதனோடு முடிந்தன. புரை எடுத்த - 'குற்றத்தை மேற் கொண்டு முடியும், தோளும்' என்க. பத்து அனைய - 'பத்து' என்னும் அவ் எண்ணிக்கையை உடைய முடி. ஆகுபெயராய் அதனை அணிந்த தலையை உணர்த்திற்று. வலி பொறுக்கமாட்டாது அழும் அளவிற்கு ஊன்றியதன்றி, இறந்தொழியும்படி ஊன்றாமையால் "மெத்தெனவே வைத்த விரல்" என்றார்.*

**18.** வானவர்கள் தாம்கூடி மந்திரித்த மந்திரத்தை
மேனவில ஓடி விதிர்விதிர்த்துத் – தானவருக்(கு)

**19.** கொட்டிக் குறளை உரைத்த அயன்சிரத்தை
வெட்டிச் சிரித்த விறல்போற்றி! – மட்டித்து

**20.** வாலுகத்தால் மாவிலிங்க மாவகுத்து மற்றதன்மேல்
பாலுகுப்பக் கண்டு பதைத்தோடி – மேலுதைத்தங்(கு)

**21.** ஒட்டியவன் தாதை இருதாள் எறிந்துயிரை
வீட்டிய சண்டிக்கு வேறாக – நாட்டின்கண்

**22.** பொற்கோயில் உள்ளிருத்திப் பூமாலை போனகமும்
நற்கோலம் ஈந்த நலம்போற்றி! – நிற்க

---

*பொழிப்புரை (18-22) :- பெருமைமிகு வானவர்கள் ஒன்றாக ஒருங்கி நினைந்து மந்திரிக்கும் மந்திரங்களை மென்மையாக கூறிட, ஓடி நடுநடுங்கி அரக்கர்களுக்குச் சாதகமாகப் புறங்கூறிய நான்முகனின் தலையை வெட்டி நகைத்த உன் வல்லமைக்கு வணக்கம்; வெண்மணலைக் கொண்டு நன்கு பூசி இலிங்கம் அமைத்து அதன் மேல் பாலினைத் திருமஞ்சனம் செய்வதைக் கண்டு பதை பதைத்தோடி, ஆண்டு திருமஞ்சனத்திற்காக வைக்கப்பட்டிருந்த பாற்குடத்தைத் தன் கால்களால் சிதைத்த தன் தந்தையின் இரண்டு கால்களையும் வெட்டி அவரின் உயிரைப் போக்கிய சண்டேசுவரருக்குத் தனியாக நாட்டின்கண் பொற்கோவிலை அமைத்துப் பூமாலை, பிரசாதம் போன்றவை நல்கிய நற்கோலம் கொண்ட உன் நலத்திற்கு வணக்கம்.*

*குறிப்புரை : கண்ணி - 17, 18, 19 : (இவற்றில் பிரமன் தலையை வெட்டிய வரலாறு வேறு வகையாகக் கூறப்படுகின்றது. "நாமகள் நாசி, சிரம் பிரமன் பட"[1] திருவாசகத்தில் பிரமன் சிரம் தக்கன் வேள்வியில் வெட்டப்பட்டதாகக் கூறப்பட்டது. "அரி அயன் தலை வெட்டி வட்டாடினார்"[2] என்பது அப்பர் திருமொழி). "தகைத்த" என்பது 'தகை' என்பது அடியாகப் பிறந்த தெரிநிலைப் பெயரெச்சம். மந்திரித்தல் - மந்திராலோசனை செய்தல். மந்திரம் - மந்திராலோசனை செய்து முடிக்கப்பட்ட பொருள். இஃது இரகசியமானது. விதிர் விதிர்த்தல், அஞ்சுதல் - நடுங்குதல். பிரமன் அஞ்சியது. 'இம்முடிவு தன்னால் ஏற்பட்டது எனக் கொண்டு அசுரர்கள் தனக்குக் கேடு சூழ்வர் என நினைத்தமையாலாம். மேல் - பின்பு. தானவர் - அசுரர். 'விதிர் விதிர்த்து, மேல் தானவருக்கு நவில ஓடி, ஒட்டிக் குறளை உரைத்த அயன்' என்க. குறளை உரைத்தல் - கோள் சொல்லல். ஒட்டி - அவர்களோடு பொருந்தி. 'இது பற்றித் தேவர்கள் முறையிடச் சிவபெருமான் அயனது சிரசை அறுத்தான்' என்க.*

---

*1. திருவாசகம், திருஉந்தியார் - 13*

*2. திருமுறை - 5. 85. 1*

23. வலந்தருமால் நான்முகனும் வானவரும் கூடி
அலந்தருமால் கொள்ள அடர்க்கும் – சலந்தரனைச்

24. சக்கரத்தால் ஈர்ந்(து) அரிதன் தாமரைக்கண் சாத்துதலும்
மிக்கஃதன் றீந்த விறல்போற்றி! – அக்கணமே

25. நக்கிருந்த நாமகளை மூக்கரிந்து நால்வேதம்
தொக்கிருந்த வண்ணம் துதிசெய்ய, மிக்கிருந்த

26. அங்கைத் தலத்தே அணிமாலை ஆங்களித்த
செங்கைத் திறத்த திறல்போற்றி! – திங்களைத்

---

*குறிப்புரை : **கண்ணி - 19, 20, 21, 22 :** மட்டித்தல் - பூசுதல். அது நன்கு அமையச் செய்தலைக் குறித்தது. வாலுகம் - வெண்மணல் குவை. வகுத்து - செய்து. உகைத்து - அப்புறப்படுத்தி. ஓட்டிய - தன்னையும் வெருட்டிய. வன்தாதை - கொடிய தகப்பன். 'தகப்பன்' எனக் கருதுதற்கு உரியன் அல்லாதவன்' என்றபடி. சண்டி - சண்டேசுர நாயனார். வேறாக - தனியாக. 'வேறாக இருத்தி' என்க. பூ மாலை தான் சாத்தி எடுத்த பூ மாலை. போனகம் - நிவேதனம். இதுவும் நிவேதித்தது. நற்கோலம் - சிவ வடிவு. "நற்கோலம்" என்பதிலும் உம்மை விரிக்க. இவற்றையெல்லாம் கொடுத்தது, மகன்மையுரிமை மிக்குத் தோன்றவாம்.*

*பொழிப்புரை (23-26) :- வெற்றியைத் தரும் திருமாலும், நான்முகனும் தேவர்களும் ஒன்று கூடித் துன்பத்தை அடைய மயக்கத்தைத் தந்து தாக்கிய சலந்தரனைச் சக்கரத்தால் அழித்த திருமால், தன் தாமரை மலரனைய தன் கண்ணினை இடந்து மலர் வழிபாடு ஆற்றிய அவ்வெற்றிக்கு வணக்கம். அப்போதே நகைத்திருந்த கல்விக் கடவுளை மூக்கு அரிந்து நான்மறைகளும் விரும்பி வணங்கச் செய்ய, அழகிய மானைக் கரத்தில் ஏந்திய உன் வெற்றிக்கு வணக்கம்.*

*குறிப்புரை : **கண்ணி - 23, 24, 25 :** வலம் தரும் மால் - வெற்றியைத் தருகின்ற திருமால். அலந்து அருமால் கொள்ள - அலமந்து, நீக்குதற்கரிய மயக்கத்தைக் கொள்ள. அடர்க்கும் - துன்புறுத்தும். சலந்தரன் - சலந்தராசுரன். அரி - திருமால். விறல் - வெற்றி.*

*குறிப்புரை : **கண்ணி - 24, 25, 26 :** நக்கு இருந்த - பொருட்படுத்தாது சிரித்துக் கொண்டிருந்த. 'அக்கணமே மூக்கரிந்து' என்க. தொக்கு இருந்த - தொகைமிக்கு இருந்த. வண்ணம் - வகை; புகழ் அங்கைத் தலத்தே அணி மாலை - உள்ளங்கையில் வைத்திருத்தற்குரிய செபமாலை. ஆங்கு அளித்த - அப்பொழுதே கொடுத்த. 'அணி மானை' என்பதும், 'ஆங்கணிந்த' என்பதும் பாடங்கள் அல்ல.*

27. தேய்த்ததுவே செம்பொற் செழுஞ்சடைமேற் சேர்வித்து
வாய்த்திமையோர் தம்மைஎல்லாம் வான்சிறையில் – பாய்த்திப்

28. பிரமன் குறையிரப்பப் பின்னும் அவற்கு
வரமன் றளித்தவலி போற்றி! – புரமெரித்த

29. அன்றுய்ந்த மூவர்க் கமர்ந்து வரமளித்து
நின்றுய்ந்த வண்ணம் நிகழ்வித்து – நன்று

30. நடைகாவல் மிக்க அருள்கொடுத்துக் கோயில்
கடைகாவல் கொண்டவா போற்றி! – விடைகாவல்

---

*பொழிப்புரை (27-30) :- காலால் தேய்ந்த சந்திரனைச் செம்பொன் செஞ்சடைமேல் சேர்த்து, விண்ணோரைச் சிறையில் அடைத்து, நான்முகன் வேண்டிக் கொள்ள, பிறகு அவர்களுக்கு வரமளித்து அருளிய உன் வலிமைக்கு வணக்கம்; முப்புரங்களை எரித்தபோது தப்பிய அவ்வசுரர்கள் மூவருக்கும் அருள்காட்டி வரம் நல்கி அவர்களைக் கோயில்களில் காவல் தெய்வமாக்கிய உன் அருள் தன்மைக்கு வணக்கம்.*

*குறிப்புரை : கண்ணி - 26, 27, 28 : திங்கள் - சந்திரன். தக்கன் வேள்வியில் சந்திரன் தரையில் வைத்துத் தேய்க்கப்பட்டான். "அதுவே" என்பதனை, 'அதனையே' என உருபு விரித்துரைக்க. 'வாய்த்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. வாய்த்த - தக்கன் வேள்வியில் சென்றிருந்த தேவர்களை மடிவித்துப் பின் எழுப்பியதாகக் கூறப்பட்ட செய்தி இங்குச் சிறையில் அடைத்துப் பின்பு விடுவித்ததாகச் சொல்லப்பட்டது.*

*குறிப்புரை : கண்ணி - 28, 29, 30 : திரிபுரத்தையெரித்த பொழுது அவற்றுள் இருந்த பலருள் சிவபத்தியினின்றும் மாறாது உறைத்துநின்ற, 'சுதன்மன், சுசீலன் சுபுத்தி' என்னும் மூவர் திருவருளால் உய்தி பெற்றிருந்தனர். திரிபுரத்தசுராகிய தாரகாக்கன், கமலாக்கன், வித்தியுன்மாலி - இவரும், மற்றையோரும் அழிந்தொழிந்தனர். உய்ந்த மூவரில் இருவர் கோயில் வாயில் காவலராகும் வரத்தையும், ஒருவன் முழவு வாசிக்கும் வரத்தையும் பெற்றனர்.*

*மூவார் புரங்கள் எரித்த அன்று*
*மூவர்க் கருள் செய்தார்[1];*
*மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரில்*
*இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்*
*காவ லாளரென் றேவிய பின்னை*
*ஒருவன் நீகரி காடரங் காக*

---

*1. திருமுறை - 1. 69. 1*

**31.** தானவர்கட் காற்றாது தன்னடைந்த நன்மைவிறல்
வானவர்கள் வேண்ட மயிலூரும் – கோனவனைச்

**32.** சேனா பதியாகச் செம்பொன் முடிகவித்து
வானாள வைத்த வரம்போற்றி! – மேனாள்

**33.** அதிர்த்தெழுந்த அந்தகனை அண்டரண்டம் உய்யக்
கொதித்தெழுந்த சூலத்தாற் கோத்துத் – துதித்தங்(கு)

**34.** கவனிருக்கும் வண்ணம் அருள்கொடுத்தங் கேழேழ்
பவமறுத்த பாவனைகள் போற்றி! – கவைமுகத்த

---

*மானை நோக்கிஓர் மாநடம் மகிழ*
*மணிமுழா முழக்க அருள்செய்த*
*தேவ தேவ*[2]

*உய்யவல் லார்ஒரு மூவரைக் காவல் கொண்டு*
*எய்யவல் லானுக்கே உந்தீபற*[3]

*என்னும் திருமுறைகளைக் காண்க. அமர்ந்து - விரும்பி. நிகழ்வித்து - யாவரும் அறியச் செய்து. 'நடை காவலால்' என உருபு விரிக்க. நடை - ஒழுக்கம். காவல் - அதனைக் காத்துக் கொள்ளுதல். காத்துக் கொண்டவர் அம்மூவர். கடை - வாயில்.*

*பொழிப்புரை (31-34) :- அசுரர்கள் சிறையிலிருந்த தேவர்கள் துயர மிகுதியில் உன்னிடம் முறையிட மயில்வாகனனாகிய முருகப் பிரானைச் சேனாபதியாகச் செம்பொன் முடிகவித்து வானாள வைத்த உன் வரத்திற்கு வணக்கம். முன்னர் ஆரவாரித்து எழுந்த காலனை உலகமெல்லாம் கடைத்தேற கொதித்தெழுந்து சூலத்தால் கோத்த பின் அவன் இரந்து வேண்டிய போது நாற்பத்தொன்பது பவத்தை அறுத்த உன் பாவனைகளுக்கு வணக்கம்.*

*குறிப்புரை : கண்ணி - 30, 31, 32 : 'காவல் விடை' என மாற்றி, 'வாயில் காவலர் பால் விடை பெற்று அடைந்த வானவர்கள்' என உரைக்க. தானவர்கள் - அசுரர்கள். மயில் ஊரும் கோன், முருகன். முருகனை வான் ஆள வைத்தமையால் அவன் அசுரரை அழித்து வானோரை வாழச் செய்தான் என்க.*

*குறிப்புரை : கண்ணி - 32, 33, 34 : அந்தகன் - அந்தகாசுரன். அண்டர் அண்டம் - தேவர் உலகம். 'அந்தகாசுரனை வைரவர் சூலத்தாற் குத்தி எடுத்து*

---

*2 திருமுறை - 7. 55. 8*

*3. திருவாசகம் - திருவுந்தியார் - 4*

35. பொற்பா கரைப்பிறந்து கூறிரண்டாப் போகட்டு
மெற்பா சறைப்போக மேல்விலகி – நிற்பால

36. மும்மதத்து வெண்கோட்டுக் கார்நிறத்துப் பைந்தறுகண்
வெம்மதத்த வேகத்தால் மிக்கோடி – விம்மி

37. அடர்த்திரைத்துப் பாயும் அடுகளிற்றைப் போக
எடுத்துரித்துப் போர்த்தவிசை போற்றி! – தொடுத்தமைத்த

38. நாள்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன் றால்நிழற்கீழ்
வாள்மாலை ஆகும் வகையருளித் – தோள்மாலை

39. விட்டிலங்கத் தக்கிணமே நோக்கி வியந்தகுணம்
எட்டிலங்க வைத்த இறைபோற்றி! – ஒட்டி

40. விசையன் விசையளப்பான் வேடுருவம் ஆகி
அசைய உடல்திரியா நின்று – வசையினால்

---

*உயரத் தூக்கி வைத்திருக்க, அவன் அகந்தை அடங்கிப் பல நாள் துதிசெய்தமையால் கீழே விடுத்து முத்தியடையச் செய்தார்' என்பது புராணம். பவம் - பிறப்பு. பாவனை - நினைவு; சங்கற்பம்.*

***பொழிப்புரை (35-37) :-*** ***பிளவு கொண்ட முகத்தினையுடைய பொற்பாகரைப் பிளந்து இரண்டு கூறுகளாக வீசியும், பாசறையை விட்டு வெளியே வந்து நின்ற மும்மதத்தையும் வெண்கோட்டையும் கார் நிறத்தையும் அஞ்சாமையொடு மதமும் கொண்டு விரைந்தோடி விம்மிப் பேரொலியெய்து பாய வந்த அடுகளிற்றைக் கொன்று அதன் தோலை உரித்துப் போர்த்திக் கொண்ட நின் வீரத்திற்கு வணக்கம்.***

***குறிப்புரை : கண்ணி - 34, 37 :*** *(இவற்றுள் கயாசுர வதம் கூறப்படுகின்றது. கயாசுரன் - யானை வடிவம் உடைய அசுரன். கயமுகாசுரன் இவனன் வேறாவன்). பொன் - இரும்பு. கவை முகத்த பொன் - பல கிளைகளாகிய முகத்தையுடைய. இரும்பால் ஆன கருவி. அங்குசம் முதலியன. தன்னை அடக்க வந்த பாகர்களைக் கயாசுரன் கொன்று விட்டான். 'மேல்' என்பது 'மெல்' எனக்குறுகி நின்றது. பாசறைக்குப் போவதற்குத் தடையாகத் தன்மேல் வந்தவர்களை விலகப்பண்ணி. 'விலகு வித்து' என்பது விகுதி தொக, "விலகி" என்று ஆயிற்று. நில் பால - நின்ற பான்மையையுடைய. தறுகண் - அஞ்சாமை; அதற்குப் 'பசுமை' என்னும் அடை கொடுத்தது, கெடாது நிற்றலைக் குறித்தவாறு. கண்ணி - 36இன் முதலடியில் முரண்தொடை. அல்லது விரோத அணி வந்தது. இரைத்து - இரைச்சல் இட்டு. இசை - புகழ். 'இறை' என்பது பாடமன்று.*

41. பேசுபதப் பான பிழைபொறுத்து மற்றவற்குப்
பாசுபதம் ஈந்த பதம்போற்றி! – நேசத்தால்

42. வாயில்நீர் கொண்டு மகுடத் துமிழ்ந்(து) இறைச்சி
ஆயசீர்ப் போனகமா அங்கமைத்துத் – தூயசீர்க்

43. கண்ணிடந்த கண்ணப்பர் தம்மைமிகக் காதலித்து
விண்ணுலகம் ஈந்த விறல்போற்றி! – மண்ணின்மேல்

44. காளத்தி போற்றி! கயிலைமலை போற்றி! யென
நீளத்தினால் நினைந்து நிற்பார்கள் – தாளத்தோ(டு)

45. எத்திசையும் பன்முரசம் ஆர்த்திமையோர் போற்றிசைப்ப
அத்தனடி சேர்வார்கள் ஆங்கு.

**திருச்சிற்றம்பலம்**

---

***பொழிப்புரை (38-41) :-*** *அன்றலர்ந்த மலர்களால் தொடுக்கப் பெற்ற மலர் மாலைகளை அணிந்த சனகாதி போன்ற நால்வர்க்கு, கல்லால நிழலின் கீழ் நல்லுபதேசம் செய்து, தோள் மீதிருந்த மாலை ஒளி வீச வியந்து எண்திசையும் இலங்க வைத்த இறையே வணக்கம். மேலும் அருச்சுனனது ஆற்றலில் அளவினை அறிய வேண்டி வேட்டுருக் கொண்டு தங்கிட, உடல் திரியா நின்ற வசையினால் பேசிய சொற்குற்றத்தையும் பொறுத்து அவனுக்குப் பாசுபதக் கணை நல்கிய நின் திருவடிகளுக்கு வணக்கம்.*

***குறிப்புரை : கண்ணி - 37, 38, 39 :*** *நாள் மாலை - நாள் மலர் மாலை. அஃதாவது அன்றலர்ந்த பூக்களால் தொடுக்கப்பட்ட மாலை. நால்வர் - முனிவரர் நால்வர். 'சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்' என்பர். வாள் - ஒளி; ஞானம். மாலை - தன்மை. 'ஞானத்தின் இயல்பு விளங்கும் வண்ணம் அருளிச் செய்து' என்க. விட்டு - ஒளிவீசி. தக்கிணம் - தெற்கு. குணம் எட்டு, சைவாகமங்களில் சொல்லப்பட்ட தன்வயத்தனாதல் முதலிய எண்குணங்கள். இலங்க - அம்முனிவரர்கட்கு விளங்கும்படி. இறை - இறைத்தன்மை; அது முதல் நூல் செய்தல். எனவே, இஃது அறம் முதலிய நாற்பொருள்களைக் கூறிய பழைய தமிழ் நான்மறைகளை அருளிச் செய்ததைக் குறித்ததாம்.*

***குறிப்புரை : கண்ணி - 39, 40, 41 :*** *ஒட்டி - வலிமை பேசி. 'விசயன்' என்பது, "விசையன்" எனப் போலியாயிற்று. விசயன் - அருச்சுனன். விசை - வேகம்; போராற்றல். 'வேடன்' என்பது 'வேடு' என்னும் சாதிப் பெயரால் கூறப்பட்டது. அசைய - அவன் தளர்ச்சியடையும்படி. உடல் திரியாநின்று - உடம்பைக் குப்புறக்*

*கீழ்மேலாக விழச்செய்து. வசையினால் - வசை வகையில் அமையும்படி. 'பதைப்பு' என்பது, எதுகை நோக்கி. "பதப்பு" எனத் திரிந்து நின்றது. மற்று, வினைமாற்று, பதம் - திருவடி. திருவருளை, 'திருவடி' என்றல் வழக்கு.*

***பொழிப்புரை (42-45) :-*** ***அன்பு மீதூரலால் வாயினுள் நீர் கொண்டு, உன் முடி மீது திருமஞ்சனம் செய்வதுபோல் உமிழ்ந்து, இறைச்சி உணவினை உனக்குப் படைக்க (நைவேத்தியம்) இருத்தி, தூய்மை மிகு தம் கண்ணினையே தோண்டிய கண்ணப்பரது கையை மிக விரும்பி விண்ணுலகிற்கு அனுப்பிய உன் வெற்றிக்கு வணக்கம். இப்பூவுலகில் திருக்காளத்தி பதிக்கு வணக்கம். கயிலை மலைக்கு வணக்கம் என்று நீண்ட காலமாக எண்ணி நிற்பவர்கள் தாளத்தோடு அனைத்துப் பக்கங்களிலும் பல பேரிகைகளும் ஒலித்திட இமையோர் வணங்க அத்தனாகிய நின் திருவடியை அப்போதே சேர்ந்து உய்வர்.***

***குறிப்புரை : கண்ணி - 41, 42, 43 :*** *மகுடம் - தலை; ஆகுபெயர். 'சிவபெருமானை, 'வேடர்' என்று இகழ்ந்த அருச்சுனனே பின்பு வேடர் குலத்தில் கண்ணப்ப நாயனாராக அவதரித்துக் காளத்தியில் சிவ பெருமானை வேடுவராயே இருந்து வழிபட்டு முத்தி பெற்றான்' எனச் சீகாளத்திப் புராணம் கூறும். அதற்கேற்ப இங்குக் கண்ணப்ப நாயனார் செய்தி அருச்சுனன் செய்தியை அடுத்துக் கூறப்பட்டது. வடகயிலையில் சிவபெருமானோடு போராடிய அருச்சுனன், மறுபிறப்பில் தென்கயிலாயத்தில் சிவபெருமானை வழிபட்டு ஆறே நாளில் முத்தி பெற்றான் போலும்!*

***குறிப்புரை : கண்ணி - 43, 44, 45 :*** *நீளத்தினால் - கால வரையறையின்றி. 'ஆங்குச் சேர்வார்கள்' என்க. ஆங்கு - சிவலோகத்தில். எனவே, இங்கு 'இமையோர்' எனப்பட்டவர் சிவகணங்கள் ஆவர்.* ***'இவ்வுலகத்தில் சிவபெருமானை அவனது திருப்புகழ் பலவற்றையும் எடுத்தோதிப் போற்றி செய்தவர்கள் அவ்வுலகில் இமையோர் போற்றி செய்ய விளங்குவர்' என்றபடி.***

**போற்றித் திருக்கலிவெண்பா முற்றிற்று.**

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

**எண் – பாட்டெண்**